கழக வெளியீடு: க௩அ௬

# அகநானூறு

## களிற்றியானை நிரை

பெருமழைப் புலவர்

**திரு பொ வே சோமசுந்தரனார்**

எழுதிய

பதவுரை விளக்கவுரைகளுடன்

★

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

சென்னை-1

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1

1970

# பதிப்புரை

சங்கம் மருவிய தொகை நூல்கள் எட்டு. அவை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன.

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு என்னும் ஆறு நூல்களும் அகப்பொருள் பற்றி யெழுந்த பாக்களைக் கொண்டு தொகுக்கப் பெற்றுள்ளன.

பதிற்றுப்பத்து, புறநானூறு என்னும் இரு நூல்களும் புறப்பொருள்பற்றி யெழுந்த பாக்களைக் கொண்டு தொகுக்கப் பெற்றுள்ளன.

அகப்பொருளை விளக்குவதில் அகநானூறும், புறப்பொருளை விளக்குவதில் புறநானூறும் மிகச் சிறந்துள்ளன என்பது அவற்றின் பெயராலேயே நன்கு விளங்கும்.

அகநானூற்றுப் பாக்களை வரிசைப்படுத்தி அமைத்த அமைப்பு வியத்தற்குரியதும், தனிச்சிறப்பு வாய்ந்ததுமாகும். 1, 3, 5, 7, 9 என ஒற்றைப்படை எண் பற்றிவரும் பாக்கள் அனைத்தும் பாலைக்கே உரியனவாகவும், 2, 8, 12, 18, 22, 28 என்னும் முறைபற்றி வரும் பாக்கள் அனைத்தும் குறிஞ்சிக்கே உரியனவாகவும், 4, 14, 24, 34 என்னும் முறைபற்றி வரும் பாக்கள் அனைத்தும முல்லைக்கே உரியனவாகவும், 6, 16, 26, 36 என்னும் முறைபற்றி வரும் பாக்கள் அனைத்தும் மருதத்திற்கே உரியனவாகவும், 10, 20, 30, 40 என்னும் முறைபற்றி வரும் பாக்கள் அனைத்தும் நெய்தலுக்கே உரியனவாகவும் அமைக்கப் பட்டுள்ளன.

எனவே பாலைக்கு இருநூறு பாக்களும் குறிஞ்சிக்கு எண்பது பாக்களும், முல்லைக்கு நாற்பது பாக்களும், மருதத்திற்கு நாற்பது பாக்களும், நெய்தலுக்கு நாற்பது பாக்களும் இந்நூலில் அமைந்திருத்தல் புலனும்.

முதலில் உள்ள 120 பாக்களுக்குக் களிற்றியானை நிரை எனவும், 121 முதல் 300 முடியவுள்ள 180 பாக்களுக்கு மணிமிடை பவளம் எனவும், 301 முதல் 400 முடியவுள்ள 100 பாக்களுக்கு

நித்திலக் கோவை எனவும் பெயர் கொடுத்து இந்நூலை மூன்று பகுதிகளாகப் பகுத்திருப்பதும் போற்றுதற்குரியதே. இவற்றில் 'களிற்றியானை நிரை' தற்பொழுது கழகவழி வெளியாகின்றது. தொடர்ந்து 'மணிமிடை பவளம்' 'நித்திலக் கோவை' ஆகிய இரு பகுதிகளும் தனித்தனியே வெளிவரும்.

இந்நூலுக்குப் பழையவுரை ஒன்று உண்டு. அதனை எழுதியவர் பெயர் தெரியவில்லை. பின்னர், திருவாளர்கள் நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களும், கரந்தைக் கவியரசு ஆர். வேங்கடாசலம் பிள்ளையவர்களும் சேர்ந்து பதவுரையும் விளக்கவுரையும் எழுதி உதவினார்கள். அவர்கள் உதவியைத் தமிழகம் என்றும் மறவாமல் இனிது போற்றும்.

அப்பாக்களின் பொருளையும், நயத்தையும் தமிழ் பயிலும் மாணவரும், ஏனையோரும் தெள்ளிதின் உணர்ந்து இன்புறுமாறு தமக்கெனவே வாய்த்த ஒப்புயர்வற்ற செவ்விய இனிய தமிழ் நடையில் திரு. பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனார் அவர்கள் களிற்றியானை நிரையில் உள்ள நூற்றிருபது பாட்டுக்கு விளக்கவுரையும், ஆராய்ச்சி முன்னுரையும் எழுதி உதவியுள்ளார்கள். இவர்கள் முன்னரே குறுந்தொகை, பரிபாடல், ஐங்குறுநூறு ஆகிய மூன்று தொகை நூல்கட்கும் எழுதிய விளக்கவுரை கழகவழி வெளிவந்திருப்பது தமிழுலகு நன்கு அறியும். அயராவுழைப்போடு தமிழ்ப்பணி செய்துவரும் அப் புலவர் பெருமகனாரை அனைவரும் பாராட்டி வாழ்த்துவோமாக.

இவ்விளக்கவுரை தமிழ் பயிலும் மாணவர்க்கும், ஏனையோர்க்கும் பயன்படவேண்டும் என்னும் பெருவிருப்பத்தால் இதனை நாங்கள் வெளியிடலானோம். எல்லாரும் வாங்கிப் பயின்று பயன்பெறுவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# அணிந்துரை

அகநானூறு என்னும் இவ்வினிய இலக்கியம் நமது செந் தமிழ் மொழியில் திகழும் சங்க விலக்கியங்கள் என்று பாராட்டப் பெறுகின்ற பழம் பேரிலக்கியங்களுள் ஓர் இலக்கிய நூலாகும். சங்கவிலக்கியங்களே, தொன்மைசான்ற நமது தமிழ்க் குடியின் பழங்காலத்து வாழ்க்கைப் பண்பாட்டிற்கும், அறிவுடைமையினு லாகும் பெருமைக்கும் பிற சிறப்புகட்கும் அழியாத நற்சான்று களாய் நின்று நிலவுகின்றன.

"நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல்" (குறள், ௧0௨௬)

என்று நிகழ்கின்ற ஆசிரியர் தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் அறிவுரைக் கிணங்க, இத் தமிழகத்திலே தோன்றிய தமிழ்மகன் ஒவ்வொருவனும் தான் பிறந்த தாயகத்தின் மாண்பினைப் பிற நாட்டினர் உணருமாறு இப பேரிலக்கியங்களை நன்கு பேணி உலக அரங்கிலே பெருமையுடன் வைத்து மகிழும் கடப்பா டுடையன். அங்ஙனம் வைத்துழி இவற்றை ஆராயும் வரலாற்று நூலோர், இவ்வுலகத்தில் வாழும் பல்வேறு வகைப்பட்ட குடி மக்களுள் வைத்து, பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இத்தகைய பேரிலக்கியங்களைப் படைக்கும் வியத்தகும் அறிவாற்றல் பெற் றிருந்த இத் தமிழ்க்குடியே தலைசிறந்த பண்பாடு மிக்க பழம் பெருங்குடியாகும் என்றனர். இக்குடிப பிறந்தோர்,

"பொய்யகல நாளும் புகழ்விளைத்தல் என்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர்—கையகலக்
கற்றோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி" (பு. வெ. கரந், ௧௪)

என்று பலபடப் பாராட்டித் தமது வரலாற்று நூலின்கண் பொன் னெழுத்தாற் பொறித்து வைப்பது ஒருதலை.

இனித் தமிழ்ப் பழங்குடியின் தனிப் பெருஞ்சிறப்பிற்கு எடுத்துக்காட்டாக இற்றை நாளும் நின்று திகழுகின்ற அச் சங்க விலக்கியங்கள் தாமும் பாட்டும், தொகையும், கீழ்க்கணக்கும் என மூன்று வகைப்படுவனவாம். இம்முத்திறத்து நூல்களுள் நடுநின்ற தொகை நூல்கள் எட்டனுள் இவ் வகநானூறும் ஒரு தொகை நூலாகும். அத் தொகை நூல்கள் எட்டனையும்,

கொன்றையினது நாண்மலரையே கண்ணியாகவும் தலையிற் சூடியவனாகவும்; (இவ்வாற்றால் நினைத்தற்கினியனாகவு மிருப்பன்) மை இல் நுண் ஞாண் மார்பினஃது - குற்றமற்ற நுண்ணிய பூணூலும் அவன் மார்பின்கட் கிடந்து அழகு செய்யும் கண்டீர்; இமையா நாட்டம் இகலட்டு நுதலது - இமைத்தலில்லாத நெருப்புக்கண் ஒன்று தான் தோன்றுதற்குக் காரணமான பகைவரை யழித்த பின்னரும் அவ் வந்தணனுக்கொரு சிறப் பழகிந்து அவனுடைய நுதலின்கண்ணதாகும்; மழு இகல் அட்டுக் கணிச்சியொடு கையது - மழுவானது பகைவரைத் துவா அழித்தபின்னரும் அவனுக்கோர் அணியாக் குந்தாலியோடே அவன் திருக்கையின்கண்ணதாம்; அத் தோலாதோற்கு மூவாய் வேலும் உண்டு - அந்தத் தோல்வியில்லாத வரம்பிலாற்றலுடைய அந்தணனுக்குக் கையில் மூன்றுதலையையுடைய சூலப்படை யொன்றும் சிறந்துரிமையுடையதாக உளது; ஊர்ந்தது ஏறே - அவ்வந்தணன் அன்பர்க்குக் காட்சி தர ஊர்ந்து வரும் ஊர்தி தானும் காண்டற்கினிய ஆனேறே யாகும்; சேர்ந்தோள் உமை - இவ் வந்தணனுக்கு வாழ்க்கைத்துணைவியாக இவனோடு கூடியவள் உமை என்னும் திருப் பெயரையுடைய இறைவியாரேயாவர்; என்பதாம்.

(வி – ம்.) மழையே இறைவன் உலகோம்பற்குச் சிறந்த கருவியாதல் கருதி-இவ் வந்தணனே உலகினைப் படைத்து அதன்கண் கார்ப் பருவம் முதலியவற்றைப் படைத்து உலகத்தை ஓம்புபவன் என்பதற்கு அறிகுறியாகவே பருவங்களிற் றலைசிறந்த கார்ப்பருவத்தே மலருகின்ற கொன்றையினது பொன்னேர் புதுமலரையே தாரகவும் மாலையாகவும் கண்ணியாகவும் அணிகின்றனன். இக் கொன்றை இவனே முதல்வன் என்பதற்கு அடையாளமாம் என்பது குறிப்பாகப் புலப்படுதற்குக் கார்விரி......கண்ணியன் என்றார். ஆசிரியர் திருவள்ளுவனார் கடவுள் வாழ்த்தை அடுத்து வான்சிறப்புக் கூறுதலும் உணர்க.

இனி, மாலையும் கண்ணியும் அக் கொன்றைமலர்களாலே இயன்றவை என்பதனை இவர் "கண்ணி கார்நறுங் கொன்றை, காமர் வண்ண மார்பிற் றாருங்கொன்றை" எனப் புறநானூற்றுக் கடவுள் வாழ்த்திற் கூறுவதனுற் பெற்றாம்.

இனி, மார்பினஃதே என்புழி ஆய்தம் விரிக்கும்வழி விரித்தல். ஞாண், போலி. இகல்-பகை. இகலட்டு என்பதனை இமையாநாட்டத்திற்கும் கூட்டுக கணிச்சி-குந்தாலி. மூவாய் வேலென்றது சூலப் படையை. இஃது இறைவனுக்குச் சிறந்துரிமை யுடைய படைக்கலம். தோலாதான் என்றது வரம்பிலாற்றலுடைமையாகிய அவன் முழுமுதற்றன்மையைக் கருதிக் கூறியதாம். தோலாதானாகவிருந்தும் மூவாய் மேலும் உடையான் அஃது அவனுக்கோர் அடையாளமாத் திரையே என்பது கருத்து.

உயிர்களை இடையறாது தூண்டி வருகின்ற ஆற்றலொன்று எல்லாவுயிர்களிடத்தும் அகப்பண்பாக உறைவதைக் காணலாம். இவ்வாற்றலையே 'அவா' என்கின்றோம். அவாவானது இப் பேருலகத்திலுள்ள பொருள்கள் அனைத்தையும் தன்னுடைய இன்பத்தின் பொருட்டுத் தன்னுடையனவாக ஆக்கிக் கொள்ளப் பெரிதும் முயல்கின்றது. அஃறிணை உயிர்கட்கு இன்பந்தரும் பொருள்கள் வயிறு நிரம்பத் தின்னுதற்கு வேண்டிய இரைகளும் தம்முள் ஆணும் பெண்ணும் ஒன்றனை ஒன்று அவாவிக் கூடும் கூட்டமுமேயாம். ஆகவே அவ்வவாவின் தூண்டுதலாலே இவற்றை அவை எளிதில் பெறுகின்றன. எஞ்சிய பொழுதெல் லாம் அமைதியாக உறங்குகின்றன.

இனி, உயர்திணையாகிய மக்கட்கும் இவ் வொழுக்கங்கள் இன்றியமையாதனவேயாகும். மக்கட்கும் உணவு இன்றியமையா ததே; அங்ஙனமே, இணை விழைந்து கூடும் கூட்டமும் இன்றியமை யாததே ஆகும்; ஆயினும் - உயர்திணையாகிய மக்கட்கு உணவின் பொருட்டு ஈட்டும் பொருள்செயல் வகையினுங் கூட வறிய அவ் வவாவின் தூண்டுதல் கூடாது. அவாவிற்கு மாறாக அன்பின் தூண்டுதலாலேயே அவர்பால் பொருள் செய்வினையும் இணைவிழைச் சொழுக்கமுமாகிய இருவகை யொழுக்கங்களும் நிகழ்தல் வேண்டும் என்பது இத்தமிழகத்து மெய்க்காட்சியாளர் கண்ட காட்சியாகும். அஃறிணை உயர்திணை என்னும் வேறுபாட்டிற்கும் இவ்வேற்று மையே காரணம் ஆகும்.

இனி, அகம் எனப்படும் இன்பமானது மக்கட்கு அன்பின் தூண்டுதலாலேயே எய்த வேண்டும். அதற்குக் கருவியாகிய பொருளீட்டலும் அறஞ் செய்தலும் கூட அவ்வன்பொடு புணர்ந் திருத்தல் வேண்டும் என்பதனை ஆசிரியர் தொல்காப்பியனார்,

> "இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
> அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்,
> காமக் கூட்டம்" (தொல். - களவி - க)

என்று விதந்து கூறுமாற்றாலுமுணர்க. அகப் பொருள் நூல் களிலே காமம் என்பது அன்பொடு புணர்ந்த காமத்தையே குறிப்ப தாகும்.

இனி, அவர் வழிவந்த தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் தாமும,

> "அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
> புறத்த புகழு மில" (குறள், ௩௯)

எனத் தேற்றேகாரத்தோடு கூறி,

யினோர்க்கருளும் பொருட்டு அருட்டிருமேனி கொள்ளுங்கால் தாரனாய் மாலையனாய்க் கண்ணியனாய்த் தோன்றுவன். மேலும் அவன் நுதலது இமையா நாட்டம்; கையது கணிச்சியொடு மழு. அத்தோலாதோற்கு மூவாய் வேலுமுண்டு; அவன் ஊர்ந்தது ஏறு. அவனிடப்பாகத்தே சேர்ந்தோள் உமை. இவ்வாறு அவனைக் கண்ட சிவாநுபூதிச் செல்வர் கூறுவர். யாமும் அவ்வாறே அவனை அகத்தே கண்டு வழிபடுவோமாக! என்றியைபு காண்க.

(பாடவேற்றுமை) ௨. மிலைந்த. ௯. விளங்குவால். ௧௩. தொன்முறை. ௧௪. வரியுடை.

## இந்நூலின் புறத்துறைப்பாகிய

## கடவுள் வாழ்த்து

முற்றிற்று.

வழக்கமாகும். (அஃதாவது புலவர்கள் படைத்துக் கொண்ட நூல் வழக்கு).

இனி, இவ்வகப்பொருளையும் புறப்பொருளையும் நுதலிய நூல்களும், தனிச் செய்யுள்களும் சங்கவிலக்கியங்களிலே ஆற்றவும் பலவாம். அவற்றுள் தனிச் செய்யுள்களைப் பொருள்பற்றி ஒவ்வோரளவுபடத் தொகுத்தவையே தொகை நூல்கள் என்று கூறப்படுகின்றன. மேலே தொகைநூல் கூறிய வெண்பாவினுள் முழுவதும் அன்பொடு புணர்ந்த இன்பம் நுதலிய அகப்பொருட் செய்யுள்களைத் தொகுத்த நூல்கள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு என்னும் ஐந்து நூல்களுமாம். (பதிற்றுப்பத்தும் புறநானூறும் முழுதும் புறப் பொருட்செய்யுளா லியன்ற தொகை நூல்களாகும். பரிபாடல் ஒன்றும் அகமும் புறமும் விரவித் தொகுத்ததாகும்.)

இனி, இந்நூலுக்கு அமைந்த 'அகநானூறு' என்னும் பெயர் காரணப் பெயராகலின், அக்காரணம் பற்றி நோக்குமிடத்து நானூறு நானூறாக அகப்பொருட் பனுவல்களைத் தொகுக்கப்பட்ட குறுந்தொகைக்கும், நற்றிணைக்கும் இப் பெயர் பொருந்துதல் வேண்டும். அவற்றை அகநானூறு என்று வழங்குதலில்லை; இந்நூலை மட்டுமே அகநானூறு என்று வழங்குவர். மற்றும், இந்நூலுக்கும், குறுந்தொகை என்பது போன்றும் நற்றிணை என்பது போன்றும் நெடுந்தொகை என்று மற்றொரு பெயருமுளது. ஆயினும் அப் பெயர் பண்டைக்காலந் தொட்டுப் பயில வழங்கி வந்ததாகத் தோன்றவில்லை. யாண்டேனும் அப் பெயர் பழைய நூல்களில் அருகித் தோன்றுமிடத்து நெடுந்தொகை என்பது இவ்வகநானூறல்லாத பிறிதொரு நூலின்பெயர் போலும் என்று கருதினரும் உளர். அகநானூறு என்னும் இப் பெயர் இந்நூற்கே உரியதாதற்குக் காரணம், இந்நூல் அடிநிமிர்ந்தோடி அகப்பொருட் பனுவலுக்கியன்ற முதல் கரு உரி என்னும் முப் பொருளையும் அப பொருட்கே யுரிய உள்ளுறையுவமைகளையும் இறைச்சிப் பொருளையும் விரித்தோதும் சிறப்புடைத்தாதலேயாம். குறுந்தொகையையும் நற்றிணையையும் நோக்கின் இந்நூலை நெடுந் தொகை என்பதே ஏற்புடைத்தாம். புறப்பொருட்டொகையாகிய புறநானூற்றை நோக்கின், அதற்கிணையாகிய அகப்பொருட் டொகை நூல் இதுவே ஆகும் என்று கருதி இதனை அகநானூறு என்று வழங்குவாராயினர் போலும். இவ் விரண்டு நூலையும் முற் கூறிய வெண்பாவில் 'அகம் புறம்' என ஒருங்கிணைத்துக் கூறுதலும் காண்க. நம்மனோர்க்கும் அகநானூறு என்று எண்ணும் போது, அதற்கிணையாகப் புறநானூறு என்னும் நூலே நினைவுக்கு வரும். குறுந்தொகை முதலியன அங்ஙனம் நினைவில் வாரா,

அங்காலத்துச் சான்றோர் நூல் பயில்வார்க்கு அந்நூல் கைக்கு அடக்கமாக விருத்தல் வேண்டும் என்னும் கருத்தினாலேயே, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு என்னும் இம்மூன்று தொகைநூலும் செய்யுளானும் பொருளானும் ஒரே தன்மையுடையனவாகவும் இவ்வாறு மூன்று நூல்களாக அடிகளின் சிறுமை பெருமைகளைக் காரணமாகக் கொண்டு அமைத்துள்ளனர். இவற்றிலடங்கிய செய்யுள்கள் எல்லாம் பல்வேறு காலத்தில் பல்வேறிடங்களில் வாழ்ந்துவந்த பல்வேறு புலவர்களால் தனிச் செய்யுளாகப் பாடப் பட்டனவே ஆகும். இவ் வகநானூற்றில் உள்ள செய்யுள்கள் நூற்று நாற்பத்தைந்து புலவர்களால் பாடப் பட்டன. இப புலவர் பெயர்களுள் மூவர் பெயர் காணப்படவில்லை. எஞ்சிய புலவர்களின் பெயர்களை இந்நூலிற் காணலாம். தனிச் செய்யுள்கள் இவ்வாறு நூலுருவம் பெறாமல் தனித்தே இடப்பின் அவை அக்காலத்திலேயே இறந்தொழியும் என்பது கூறாமலே அமையும். "காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்" என்று கம்ப நாடர் கூறுமாப் போலே "செவிப் பொறியாலே நுகர்தற் குரிய கற்பகக் கனிகள்" போன்ற இச் செய்யுள்கள் காலத்தை வென்று என்றென்றும் நிலைபெறுதற்கு இவ்வாறு ஒரு வழி கண்டு இவற்றை நூல்களாக்கி வைத்த அச் சங்கச் சான்றோரை யாம் வாழ்த்தி வணங்குவதன்றிக் கைம்மாறு செய்யவேண்டின், அவற்றை யாம் ஓதி அவற்றாலாய பயனை எய்துவதும், அவற்றைப் பேணி வைத்து நம் வழித் தோன்றல்களுக்கு வழங்குவதுமே யாம் செய்யற்பாலன. இவற்றை விரும்பியே அவரும் இவ் வரும் பணியைச் செய்தனர் ஆகலான், என்க.

இனி, நூல் பயில்வோர்க்குக் கையடக்கமாக இருக்க வேண்டும் என்று கருதியே தனிச் செய்யுட்களைத் தொகுக்குங்காற் பலவாகத் தொகுத்தனர் என்றும் அவற்றுள் இவ் வகநானூறு பதின்மூன்றடிச் சிறுமையும் முப்பத்தோரடிப் பெருமையுமுடைய நெடிய நானூறு செய்யுள்களின் கோவையாதலால், இதுதானும், அவர் கருத்திற்கிணங்கக் கைக்கடங்கும் நூலாகாமல் பெரியதொரு நூலாகக் காட்சி தந்தது. ஒரு சுவடி இத்துணைப் பெரிதாக விருத்தலுங் கூடாது என்று கருதியே இந்நூலையும் மூன்றாக வகுத்து நிரலே களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக்கோவை என்னும் அழகிய பெயர்களையும் சூட்டி மூன்று சுவடிகளாக்கி வைத்தனர். இந்நூற்குப் பாயிரம் வரைந்த பழங் காலத்துச் சான்றோர் ஒருவர், இவற்றிற்கு இங்ஙனம் பெயர் சூட்டுதற்குக் காரணம் என்னையோ? என்று ஆராய்ந்து, இவை இவற்றிற்குக் காரணப் பெயர்கள் என்று துணிந்துரைத்தனர். ஆயினும், அவர் கூறுகின்ற காரணங்கள் அப் பெயர்கட்குப்

பொருத்தமாகத் தோன்றவில்லை. அவர், களிற்றியானை என்பதற்குப் 'பொருள் காரணமாம்' என்றும், மணிமிடை பவளம் என்பதற்கு, 'செய்யுளும் பொருளும் ஒவ்வாமை காரணமாம்' என்றும், நித்திலக் கோவை என்பதற்கு, 'செய்யுளும் பொருளும் ஒத்தல் காரணமாம்' என்றும் கூறியுள்ளனர். இக் காரணங்கள் நமக்கு நன்கு விளங்கவில்லை. ஆய்ந்துணர்வாருணர்க.

இனி, இப் பகுதிகட்கு இந்நூலிற் போந்துள்ள அழகிய சொற்றொடர்களையே ஆராய்ந்தெடுத்துப் பெயராக அமைத்தல் வேண்டுமென்று இப் பெயர்களைச் சூட்டியவர் முயன்றுள்ளனர் என்று ஊகித்தற்கிடனுளது. "மணிமிடை பவளம்" என்னுந் தொடர் இந்நூலகத்து ஒரு செய்யுளிற் காணப்படுகின்றது. இத் தொடர் தானே ஒரு பகுதிக்குப் பெயராக அமையும் என்று கருதி இதுபோன்று பெயர்த்தன்மையுடைய வேறு இரண்டு தொடர் பெறுதற்கு முயன்றும் கிடைக்கப் பெருமையால் நிரலாகத் தொடுக்கப்பட்ட கோவையாகலின் அப் பொருளமைந்த 'களிற்றின நிரை' என இந்நூலுள் போந்த தொடரினையே 'களிற்றியானை நிரை' என்று சிறிது திருத்தி அதனை ஒரு பகுதிக்குப் பெயராயமைத்தனர் என்றும், எஞ்சிய பகுதிக்கு 'நித்திலக் கோவை' என்னும் பொருள்பட இந்நூலிற் போந்துள்ள அழகிய சொற்றொடர் பலவற்றையும் கருதி அப பொருள் பயப்ப நித்திலக் கோவை எனப் பெயரமைத்தனர் என்றும் கொள்ளலாம். இனி, இவ் வகநானூற்றின் முற்பகுதியில் சார்த்து வகையால் வருகின்ற அக்காலத்து மன்னர் போரும் புகழும் அமைந்த செய்யுள்களை ஆராய்ந்தெடுத்துக் கோத்து அவற்றினூடே களிற்றி யானையின் பெயர்களும் மறப் பண்பும் மிக்குத் தோன்றுதலால் அம் மறப் பண்பு இப் பெயரினும் தோன்றல் வேண்டும் என்று கருதி 'களிற்றியானை நிரை' என்னும் இப் பெயரை அம் முற்பகுதிக் கிட்டனர் எனலாம். இப் பெயர் மறப்பண் புணர்த்தும் தன்மை யுடைத்தாதலும் நினைக. இங்ஙனமே மணிமிடை பவளத்தில் சார்த்து வகையாற் கூறப்பட்ட புறப் பொருளும், நூல் நுவலும் அன்பறமாகிய அகப்பொருளும் விரவி வருமாறு கோவை செய்து அச் செய்கை தோன்ற மணிமிடை பவளம் எனப் பெயர் இட்டனர் எனலாம். நித்திலக் கோவையில் முழுவதும் இன்ப நுதலிய செய்யுள்களே காணப்படுகின்றன. முற்பகுதிகளிற் போலச் சார்த்து வகையால் மன்னருடைய போரும் புகழும் கூறுகின்ற செய்யுள்கள் இல்லை. ஆதலான் இஃது இன்பமாகிய ஒரு பொருளே நுதலி வருகின்ற பண்பு தோன்ற நித்திலக்கோவை என்னும் இனிய இப் பெயரை இட்டனர் எனலாம். எங்ஙனமாயினும் இவை மூன்றனையும் இடுகுறிப் பெயர் என்றே சொள்ளுதல் வேண்டும்.

இனி, குறுந்தொகை, நற்றிணை, நெடுந்தொகை என்னும் இம் மூன்று தொகை நூல்களும் ஒரு காலத்தே தொகுக்கப் படவில்லை என்பதும், முன்னர்க் குறுந் தொகையைத் தொகுத்துப் பின்னொரு காலத்தே நற்றிணையைத் தொகுத்தனர் என்பதும், நெடுந்தொகை என்னும் இத் தொகைநூல் இறுதியாகத் தொகுக்கப்பட்டது எனவும் கருதவிடனுளது. இவற்றைத் தொகுப்பித்தோர் பெயரும் தொகுத்தோர் பெயரும் வேறு வேறாகவும் அவர் வெவ்வேறு காலத்து வாழ்ந்தவராகவும் காணப் படுவதே இங்ஙனம் கருதுதற்குக் காரணமாகும் என்க.

இனி, இவ் வகநானூற்றின் பழைய பாயிரத்தில்,

"வழக்கத்தாற் பாட்டாராய்ந்து தொகுத்தான் மதுரையுப்பூரி கிழான் மகனுவான் உருத்திர சருமன்; தொகுப்பித்தான் பாண்டிய னுக்கிரப்பெருவழுதி!" என்று வரையப்பட்டிருத்தலைக் காணலாம். இவ் வுருத்திரசன்மனை முருகப் பெருமான் என்றே இறையனுர் களவியலுரை பெரிதும் பாராட்டும். மற்றுத் தொகுப்பித்தவனுகிய உக்கிரப் பெருவழுதி என்னும் மன்னவனும் சங்கப் புலவர்களுள் ஒரு புலவனுவான்.

இந் நெடுந்தொகை பேரறிஞரால் தொகுக்கப்பட்டமையின் முந்திய தொகைகளிற் காணப்படாத சீர்திருத்தமும் பெற்றிருக்கக் காண்கின்றோம். அவற்றுள் இந்நூலின்கண் திணைகளை முறைப் படுத்துக் கோத்துள்ள முறை பெரிதும் சிறப்புடையதாகும். அதனை,

> "ஒன்றுமூன் றைந்தேழொன் பான்பாலை யோதாது
> நின்றவற்றி னன்கு நெறிமுல்லை—பின்றியே
> ஆறு மருத மணிநெய்த லையிரண்டு
> கூறு தவைகுறிஞ்சிக் கூற்று"

எனவரும் (பாயிரம்) வெண்பா இனிதினுணர்த்துகின்றது.

அஃதாவது - அகநானூருகிய இந் நூலின்கண் பாலைத் திணையெல்லாம் ஒற்றை எண்களிலும், குறிஞ்சித் திணையெல்லாம் இரண்டாமெண்ணிலும் எட்டாமெண்ணிலும் முல்லைத் திணையெல்லாம் நான்காமெண்ணிலும் மருதத் திணையெல்லாம் ஆறாமெண்ணிலும் நெய்தத் திணையெல்லாம் பத்தாமெண்ணிலும் நிற்குமாறு முறைப்படுத்துக் கோவை செய்யப்பட்டன என்பதாம். இவ்வாற்றல் இந் நூலின்கட் செய்யுள்கள் நின்றநிலை பிறழாது நிற்றற்கு ஒரு காப்பமைந்துளது. யாதானும் ஒரு செய்யுளின் எண் தெரியுமளவில் அஃது இன்ன திணைச் செய்யுள் என்று எளிதில் உணரலாம்.

இன்னும், இதனால் இவ் வகைநானூற்றில் பாலைத்திணைச் செய்யுள் இருநூறும், குறிஞ்சித்திணைச் செய்யுள் எண்பதும், முல்லை மருதம் நெய்தல் என்னும் மூன்று திணைகளும் தனித் தனியே நாற்பது செய்யுள்களும் பெற்றுள்ளன என்பதும் அறியப் படும்.

இனி, அகப் பொருட் பனுவலை நாடக வழக்கத்தான் உலக வழக்கைப் பெரிதும் தழுவிப் புனைதல் வேண்டும் என்னும் விதி யொன்றுமுளது. நூல்கள் அறிவை வளர்ப்பனவும், சுவை பயப்பனவும் என இருவகைப்படும். அறிவை வளர்ப்பன பொருள் களின் இயல்பை அறிவுறுப்பன; அவை இன்பம் பயவா. (தத்துவ நூல்களும் இலக்கண நூல்களும் இன்னோரன்ன பிறவும் இவ்வகை நூல்களாம்). சுவை பயப்பன எண்வகைச் சுவையையும் பயந்து பயில்வார்க்குப் பேரின்பம் தருவன. அறிவை வளர்ப்பதில் இவற்றிற்குக் குறிக்கோள் இல்லை. (சிந்தாமணி முதலிய காப்பியங் களும் நாடக நூல்களும் பிறவும் இவ்வகை நூல்களாம்). அறிவு நூல் அறிவை வளர்க்கும். நாடகவழக்கத்தாற் செய்யப்படும் நூல் களும் விறல்பட நடிக்கின்ற நாடக அரங்கிற் சென்று காண்டற் குரிய நாடகங்களும் சுவையுடையன ஆதலை அநுபவத்தாற் காண லாம். காண்பவர் எண்வகைச் சுவைகளையும் பெற்றுப் பெரிதும் மகிழ்வதனாலேதான் கல்லூரி மாணவரும் தாம் பயிலும் நூற் பயிற்சியில் ஆர்வமின்றி நிழற்படக் காட்சிக்கு விரைகின்றனர்.

நாடகம் கண்டின்புறக் கருதுபவர் அந் நாடகத்தின் கதையை முன்னரே அறிந்தாராதல் வேண்டும். அங்ஙனமே சங்க விலக்கியங்களைப் பயின்று பயன் பெற விழைவோரும் அவ்விலக் கியங்களுக்குரிய கட்டுக் கோப்புக்களை ஓரளவேனும் அறிந்திருத்தல் வேண்டும். அஃதாவது அவ்விலக்கியங்களுக்கென நம் முன்னோர் வகுத்துள்ள பொருளிலக்கணங்களை இயலுந்துணையும் பயின் றிருத்தல் வேண்டும். பயின்றிராதோர் அவ்விலக்கியங்களைப் பயின் றின்புறுதல் இயலாது. அகப்பொருள் புறப்பொருள் என்னும் இருதிறத்து நூல்களினும் அகப்பொருள் நூல்களே மக்கட்குப் பேரின்பம் பயந்து அவர் உயிருக்கே ஆக்கந்தரும் இயல் புடையன. இக் காரணத்தால் அகப்பொருள் நூல்கள் மிகமிக நுணுக்கமான பொருள்களைத் தம்மகத்தே பொதிந்து வைத்திருக் கின்றன. இவ் வகைநானூறு முதலிய எல்லா அகப்பொருள் நூல் களுக்கும் இது பொருந்தும். அகப்பொருட் செய்யுட்கள் வெளிப் படையாக வுணர்த்தும் பொருளைவிடக் குறிப்பினாலும் உள்ளுறை யுவமத்தாலும் இறைச்சிப் பொருளாலும் உணர்த்தும் பொருள் களே சிறப்புடையன; ஆற்றவும் இன்பமுடையன; ஆதலால்

இவற்றைப் பயில்வோர் ஆழ்ந்து பயிலுதல் வேண்டும். இதற்கு எடுத்துக்காட்டாக இவ் வகநானூற்றினின்றும் சிறியதொரு செய்யுளைமட்டும் ஈண்டு எடுத்துக்காட்டி அதன்கண் கரந்துறையும் நுண்பொருள்களையும் சுருக்கமாக எடுத்துக்காட்டி இவ்வணிந் துரையை முடிப்பாம்.

"யாயே கண்ணினும் கடுங்கா தலளே
எந்தையும், நிலனுறப் பொறாஅன் சீறடிசிவப்ப
எவனில குறுமகள் இயங்குதி என்னும்
யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பின்
௫. இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே
ஏனலங் காவலர் 'ஆனு தார்த் தொறுங்'
கிளிவிளி பயிற்றும் வெளிலாடு பெருஞ்சினை
விழுக்கோட் பலவின் பழுப்பயன் கொண்மார்
குறவர் ஊன்றிய குரம்பை புதைய
௧0. வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்
புலிசெத்து வெரீஇய புகர்முக வேழம்
மழைபடு சிலம்பிற் கழைபடப் பெயரும்
நல்வரை நாட நீவரின்
மெல்லியல் ஓருந் தான்வா ழலளே"

என்பது, இந்நூலிற் போந்த கபிலர் பாடிய ௧௨ ஆஞ் செய்யுளாகும். பதின்மூன்றடிச் சிறுமையுடையது இந்நூலாகலின், ௧௪ அடிகளையுடைய இச் செய்யுள் இதன்கட் சிறியதொரு செய்யுளே யாகும்.

இனி, இந்நூலை யாராய்ந்த நம்முன்னோர் இச் செய்யுளைப் பயில்வோர்க்கு இன்றியமையாத சிறிய விளக்கமும் இதன்கீழ்த் தந்துள்ளனர். அஃதாவது - இச்செய்யுள்,

"பகற்குறி வாராநின்ற தலைமகன் தோழியாற் செறிப்பறிவுறுக்கப்பட்டு இரவுக்குறி வாரா வரைவல் என்றற்கு அதுவும் மறுத்து வரைவு கடாயது. இப் பாட்டினுள் 'நீவரின்' என்றது வரவுமறுத்தது. 'சீறடி சிவப்ப' என்றது செறிப்பறிவுறீஇயது" என்பதே அவ் விளக்கமாகும்.

இச்செய்யுளின் பொருள் உணர்தற்கு இவ் விளக்கம் பெரிதும் உதவுவதாம். இவ் விளக்கந்தானும் அரிதின் உணரப்படுமியல் பிற்றாயிருத்தலின் இவ் விளக்கத்தையே இக்காலத்தே பயில்வார்க்கு விளங்கும்படி யாமும் சிறிது விளக்கிப் பின்னர்ச் செய்யுளிற் புகுவேம்.

அஃதாவது - களவொழுக்கம் நிகழ்த்திவருகின்ற தலைவன் பகற்பொழுதிலே தோழியாற் குறிப்பிடப்பட்ட பூம்பொழிலினகத்

தேயுள்ள மறைவான ஓரிடத்திற்கு நாள்தோறும் வந்து அங்குத் தோழியால் அழைத்துக் கொணர்ந்து நிறுத்திய தலைவியோடு இனிது அளவளாவிக் கூடி மகிழ்ந்து மீள்பவனுயிருந்தான். இந்த இன்பமே எமக்கு அமையும். திருமணஞ் செய்து கோடல் இப் பொழுதைக்கு மிகை என்பது அவ்விளைஞன் கருத்து. ஆதலால் அவன் திருமணம் செய்வதற்குச் சிறிதும் முயலாமல் வழக்கம் போலப் பகற்குறியிடத்திற்கு வருவதும் போவதுமாகக் காலந் தாழ்த்தி வந்தான்.

இனி, தலைவிக்கு இவ்வொழுக்கம் பலப்பல இன்னலுக்கு இடமாயிருந்ததோடு, திருமணம் புரிந்துகொண்டு அவனோடு இல்லத்திருந்து மனையறம் நடத்துதலே நல்வாழ்க்கை என்றும் அறஞ்செய்தற்கியலாத இக்களவொழுக்கம் வாழ்க்கையாகாது என்றும் கருதுபவளாயிருந்தாள். 'என்னை மணந்துகொண்டு உன் வீட்டிற்கு அழைத்துப் போ' என்பதுவும் மாண்புடைய மகளிர்க்குப் பொருந்தாது. எனவே அவள் உபாயங்களாலேயே தலைவனை மணந்து கொளளுமாறு செய்யவேண்டும். இத்தகைய உபாயங்களுள் ஒன்றுதான் இங்கு அவட்கு உசாஅத்துணையாகிய தோழி தலைவனுக்குக் கூறுவது. இதன்கண், அவனை மணஞ் செய்து கொள்ளத் தூண்டுதற் பொருட்டே அவள் வழக்கம் போலத் தலைவியை அழைத்து வாராமல் தானே தமியளாய் வந்து தலைவனைக் கண்டு கூறுபவள், தலைவி இல்லத்தினின்றும் புறம் போகாமல் எம் சுற்றத்தாரால் காக்கப்பட்டிருக்கின்றனள்; ஆதலால் நீ இனி இவ்வாறு பகற் பொழுதிலே வருவது பயனில் முயற்சியாதலால் பகலிலே வாரற்க! என்று அறிவித்தாள். அது கேட்ட தலைவன், "அப்படியானால் யான் இன்னுஞ் சில நாட்கள் இரவிலே வந்து வந்து செல்வேன், பின்னர் மணத்தற்கு ஆவன செய்வேன்" என்றான். அதுகேட்ட தோழி "நீ இரவில் வந்தால் இன்னும் தலைவிக்குப் பெருங்கேடு விளைந்து விடும். ஆதலின் நீ இரவின் வாராதே" என இரவுவரவும் மறுத்துக் குறிப்பாக வரைந்து கொள்ளுமாறு தூண்டியது என்பது அவ் விளக்கத்திற்கு விளக்கமாகும். இனிச் செய்யுளை நோக்குவோம்.

இச் செய்யுளின் இறுதியிலமைந்த இரண்டடிகளிலேயே இதன் கருத்து அடங்கிவிட்டது. இவ்வடிகளில் 'நாட! நீவரின் தலைவி உயிர்தரியாள்!' என்பதுதான் தோழி தலைவனுக்கு வெளிப்படையாக அறிவித்த செய்தியாகும் நீ வரின் தலைவி உயிர் விடுவாள் என்பதனாலே நீ வாரற்க என்பது குறிப்பெச்சப் பொருளாய் இது வரவு விலக்கியவாறுமாயிற்று. நன்று! இச் செய்யுளில் முற்போந்த செய்திகள் எல்லாம் இங்ஙனம் வரவுவிலக்

குதற்குரிய காரணங்களாதல் வேண்டும். ஆதலின் மீண்டும் அச் செய்யுளை 'ஒருமுறை ஓதிப்பாருங்கள்; அவற்றில் ஒன்றேனும் வரவுவிலக்குதற்கியன்ற காரணமாகத் தோன்றவில்லை. மேலும் அவை அதற்கு முரணாகவும் தோன்றுகின்றன. இத் தோழி கூறுங் காரணங்கள் :

(க) எங்கள் தாய் மிகவும் தலைவியின்பால் அன்புடையவள் (உ) தந்தையோ அத் தாயினும் சிறந்த அன்புடையவர். (ங) யாமோ சிறிது பொழுதேனும் பிரிந்திருக்க வியலாத பெருங் காதலர்களாகி விட்டோம் என்னும் இம் மூன்றுமேயாம். ஆதலால் நீ வரின் தலைவி இறந்துபடுவாள், வாரற்க என்று இத் தோழி கூறுகின்றாள்.

இதன்கண் அவள் கூறும் காரணங்கள் மூன்றும் வரவு விலக்கற்கும் பொருத்தமற்றவை: இவையல்லாமல், இத் தோழி நல்வரை நாட எனபதற்கு அடைமொழியாக ஏழடிகளை வீணாக நிரப்பிவைத்தனள். இது வெற்றெனத் தொடுத்தல் என்னும் நூற்குற்றமாகவும் தோன்றுகின்றது.

இனி, தாயும் தந்தையும் தலைவியின்பால் பேரன்புடையவர் என்பது தலைவன் அறியாத செய்தியும் அன்று. காக்கைக்கும் தன்குஞ்சு பொன்குஞ்சு ஆகுமே! உயர்குடிப்பிறப்புடைய தலைவியின் தாய்தந்தையர் அவள்பால் அன்புடையராயிருப்பர் என்பதனை அறிவுசான்ற தலைவனுக்குத் தோழி சொல்லித்தான் தெரியவேண்டுமோ? இனிக் காதலர் தம்முள் உயிரொன்றிய கேண்மையுடையராயிருப்பதனை அவர் தம்முள்ளே ஒருவருக் கொருவர் கூறுவதும் குற்றமாமே? இவ்வாறு இச் செய்யுளை ஆராய்ந்து பார்க்குமிடத்து இத் தோழி பேதையருள்ளும் தலை சிறந்த பேதை போலும் என்ற துணிபே தோன்றுகின்றதன்றோ?

இன்னும், இத் தோழி "யாமே, பிரிவின்றியைந்த துவரா நட்பின் இருதலைப்புள்ளின் ஓருயி ரம்மே" என்புழி, 'யாம்' என்னும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மை ஓருயிரம் என அம் மீற்றுக் குறிப்பு வினைமுற்றான் முடிதலின், அம்மீறு முன்னிலை யாரை மட்டுமே உளப்படுத்துமாகலின் இத் தோழி நீயும் நானும் என்றாளாயிற்று. இடவழுவமைதியாய்க் கொண்டு, நீயும் யானும் அவளும் எனத் தலைவியையும் உளப்படுத்திற்றெனினும் தோழியை விலக்குமாறில்லையாகவே, இவள் முத்தலைப்புள்ளின் ஓருயிரம்மே என்று உவமை கூறியிருத்தல் வேண்டும். அவ்வாறு கூறாமையின் இவள், நீயும் நானும் இருதலைப்புள்ளின் ஓருயி ரம்மே என்று கூறிப் பெரிதும் இழுக்குடையளாயினள். இப்பொழுது இப் பேதை என்கருதி என்ன கூறினள் என அறியாது திகைக்கின்றேம்.

இங்ஙனம் வெளிப்படையாகத் தோன்றுகின்ற இம் முரண்பாடுகளும் பொருட் குற்றங்களும் சொற் குற்றங்களும் ஆகிய இவையே இச் செய்யுளை ஆழ்ந்து அவற்றின் பொருளை யுணர்வார்க்குச் சொன்னலங்கடந்த பேரழகுகளாய்ப் பேரின்பம் பயப்பனவாக மாறிவிடுகின்ற வித்தகப்புலமையை இனி ஆராய்வாம்.

முதன் முதலாக உலகியலோடொத்து இந்த அறிவு சான்ற தோழி தலைவியின் தாய் தந்தையர் எத்துணைப் பேரன்புடையராயிருக்கின்றனர் என்று தலைவனை அறிவுறுத்தற்கன்று அவரன்பினை விதந்து கூறுவது. அவ்விருவரும் இப்பொழுது அன்பு காரணமாக அவட்கும் தமக்கும் குடிப்பழி நேராவண்ணம் அவளை இற்செறித்து அவளைப் பண்டு போலாது சிறப்பாகக் காவல் செய்து வருகின்றனர், என்பதே இவளறிவுறுத்ததாகும். இதனாற் போந்த பயன் - அவர் தம் கூர்தத கண்கட்குத் தப்பி யான் வழக்கம்போன்று பகற்குறியிடத்திற்குத்தலைவியைக் கொணருதல் சாலாது; ஆதலால் இனி நீ பகற்குறியிடத்திற்கு வருதல் பயனில் செயலாம்! வாராதேகொள்! எனப் பகற்குறி மறுத்தலேயாம் என்றுணர்தல் வேண்டும். அதனாலன்றே யாய் கண்ணினும் கடுங்காதலள் என்கின்றாள். கடிசொல் ஈண்டுச் சிறப்பின் மேற்று. ஆதலால், யாய் பண்டுபோலன்றி அவளைத் தன் கண்ணைக் காப்பதினும் சிறப்பாகப் பேணுங் கடுங் காதலுடையளாய் மாறிவிட்டாள். அவள் தன் கண்களில் துகள் படராமல் பகலில் நொடிக்கு நொடி இமைத்துப் பேணுவள்; இரவில் நன்கு துயின்று அவற்றைப் பேணுவள். இப்பொழுதோ இவளையே பகலில் கண்ணிமையாமல் குறிக்கொண்டு புறம்போகாமற் பார்த்துக் காவல்பேணுகின்றனள். இரவிலும் தன் கண்கள் கெடும் என்றெண்ணாது துயிலாமலிருந்தும் தலைவியைப் பாதுகாக்கின்றனள், என்று அத் தாயைத் தலைவன் முன்னர் இகழுங் குறிப்போடுதான் அவள் கண்ணினும் கடுங்காதல் உடையளாகிவிட்டாள், என்கின்றனள். இனித் தந்தையும் அவள் இல்லினின்றும் முன்றிலிலே அடி வைத்து விட்டாலும் பொருதவராய் "ஏடி சிறுமி நீ ஏன் இவ்வாறு நின் சீறடி சிவப்ப இயங்குதி?" என்று, நனி நாகரிகமாகக் கடிந்து பேசுகின்றனர். அத்துணைக் குறிக்கொண்டு எந்தையார் அவளைப் புறம்போகவிடாமல் காக்கின்றனர் என்பதே அவள் அறிவுறுத்தியது. இவ்விரண்டு காரணங்களும் இற்செறிப்புணர்த்துதற்குரியன.

இனி, 'யாமே இருதலைப்புள்ளின் ஓருயிரம்மே!' என்பதன் பொருள் நீயும் தலைவியும இருதலைப்புட் போலப் பிரிவின்றியைந்துவராகட்புக் காரணமாக ஓருயிரே உடையீர் என்பதேயாம்." இச் செய்யுளில் படர்க்கை யிடத்தாளாகிய தலைவியையே தோழி

யான் எனத் தன்மைப் பெயரால் தானாகவே கொண்டு கூறு கின்றாள். இவ்வாறு தான் அவள் என்னும் வேற்றுமையற ஒன்றிய நட்புரிமை காரணமாகத் தோழி தலைவியை அவள் என்னாது யான் எனக் கூறுதலும், அங்ஙனமே தலைவி தோழியை அவள் என்னாது யான் எனவே கூறுதலும், வழுவாயினும், அகப் பொருட் புலனெறி வழக்கில் அவ்வாறு கூறுதலுண்டு. ஆதலால் அதனை வழுவமைதியாகக் கொள்ளுக என்று தொல்காப்பியனார் அறிவுறுத்துவர். (பொருளியல் சூ - உஎ) கலித்தொகையில் (கஅ) "என்தோள் எழுதிய தொய்யிலும் யாழநின் மைந்துடை மார்பிற் சுணங்கும் நினைத்துக் காண்" எனத் தோழி தலைவி தோளையே என் தோள் எனக் கூறுதலுமுணர்க.

இனி, யாமே இருதலைப்புள்ளின் ஓருயி ரம்மே என்பது நட்பின் சிறப்பைக் கூறியது அன்று. ஓருயிரேயாய் ஒன்றிவிட்ட நுமக்கு உடனுறையும் பொழுதினும் பிரிந்துறையும் பொழுதே நீடிய இன்னல் மிக்க இக் களவொழுக்கம் பொருந்துவதன்று, என்றறிவுறுத்தவாறும். இதனாற் போந்த பயன் - நீவிர், பிரிவின் றியைந்து வாழுதற்கு இவளை நீ இப்பொழுதே வரைந்து கொள்ளல் வேண்டும். வரையாவிடின் அவள் பிரிவாற்றாது இறந்துபடுவாள் என வரைவு முடுக்குவதாம்.

இனி, "ஏனலங்.........நல்வரை நாட" என இத் தோழி நாட்டை வருணிப்பாள் போலக் கூறிய ஏழடிகளும் பொது நோக் கிற்கு மிகையாகத் தோன்றுமாயினும் ஆழ்ந்து நோக்குவார்க்கு இவற்றினூடே இறைச்சியும் உள்ளுறையுமாய்ப் புதைந்து கிடக்கும் பொருள்கள் நிரம்பக் காணப்படும். அவை வருமாறு :—

இத் தோழி, குறவர் ஊன்றிய சிறுகுடிசையின் மேல் வேங்கை மலர் உதிர்ந்து கிடத்தலால் ஆங்கு வருகின்ற யானை அதனைப் புள்ளிகளையுடைய புலிகிடப்பதாகக் கருதி மிகவும் அஞ்சி மூங்கிற் புதருக்குள் புகுந்து மூங்கில் சடசட ஒலியுடன் முரியும்படி புறமிட்டோடுகின்ற வரை நாட! என்பதனுள்ளே 'நீயும்' அந்த யானை போலவே அஞ்சத்தகாத எஞ்சுற்றத்தார்க்கஞ்சி வந்துவந்து வாளாது ஓடிப் போகின்றனை! இதனால் இவ்வூரில் அலர் எழு கின்றது காண்! என்பது பொதிந்துவைத்த பொருளாம். இவ்வாறு கருப்பொருளினூடு புதைக்கும் பொருளை உள்ளுறை உவமம் என்று கூறுவர். இதன் பயன் அலர் அறிவுறுத்து வரை வொடு வருமாறு அறிவுறுத்துதலாம்.

இனி, இதன்கண் கழைபடுங்கால் எழும் ஒலி அலரால் எழும் ஒலிக்குவமையாகும். இனி, இத் தொடர்தானே உன்னுடைய

நாட்டின்கண் புலியும் யானையும் பிறவுமாகிய கொடிய விலங்குகள் திரியும் என்பது தோற்றுவித்தலின் இத்தகைய இன்னாமையுடைய நெறியில் நீ இரவில் வரின் நினக்கு ஏதம் நிகழ்தல் கூடும் என்னும் அச்சத்தால் தலைவியின் உயிரே போய் விடும் என்று அறிவித்து இரவினும் வாராதே கொள்! என இதனால் இரவில் வருதலையும் விலக்கி வரைவு கடாவினாளாயிற்று.

இனி, இதன்கண் உள்ளுறை உவமமாக வந்த குரம்பைக்கு அடையாக இவள் புணர்த்த 'ஏனலங் காவலர்.........குரம்பை' என்ற தொடரில் பெருஞ்சினை விழுக்கோட் பல (பலாமரம்) என்றது தலைவி பிறந்த குடிக்கு உவமையாகும். சிறந்த குடிக்குத் தன்னை நாடி வருபவர்க்கு நறுநிழல் தந்து பருத்த நறுஞ் சுவையுடைய கனிகளையும் நுகர்வித்துப் பெரிய கிளைகளோடும் மிக்க காய்ப்பினையும் உடைய இப் பலாமரத்தினும் சிறந்த உவமை காணுதல் அரிதன்றோ! இங்ஙனம் சிறந்த உவமையைக் கண்டுழி காமும் பேரின்பம் எய்துகின்றோமல்லமோ! இனி அதன்கண் பழுத்த பழம் தலைவிக்குவமை. அதன் பயன் கோடற்குக் குறவர் ஊன்றிய குரம்பை என்றது மணப்பருவ மெய்திய அத் தலைவி வயிற் பழி பிறவாமற் பேணி வைத்து அவளை மனையறம் படுத்து மகிழ்தலாகிய பயன் பெறுதற் பொருட்டே எம் சுற்றத்தார் இற்செறிப்பு முதலிய கடுங் காவலை மேற்கொண்டுள்ளனர். இயல்பாக அவர் கொடியவர் அல்லர் என்று அறிவுறுத்து மிகவும் சான்றாண்மை மிக்க எம் மிருமுதுகுரவரும் நீ வரைவொடு வரின் மகிழ்ந்து வரவேற்பர் என்றறிவுறுத்த படியாம். இனி, குரம்பை புதைய வேங்கைமலர் உதிரும் என்றான்றோ இதன் பயன், வேங்கை மலரும் காலமே கானவர் மணவிழா நிகழ்த்தும் காலம் அக் காலமும் முதிர்கின்றது என்றறிவுறுத்தபடியாம்.

இனி, வெளிலாடு பெருஞ்சினை என்றது, தலைவியின் மணப் பருவம் முதிர்தலால் மகட்பேசி எம்மில்லத்திற்கு வந்து போவாரும் சிலர் உளர் என்று அறிவித்து மகள் நலம் நாடும் எம் சுற்றத்தார் தலைவி கற்புக்கடம் பூண்டமை யறியாராதலின் அவர்களில் யாருக்கேனும் மகட்கொடை நேர்தலும் கூடும். அங்ஙனம் நிகழா முன்னர் நீ வரைவொடு வருதி என வரைவு முடுக்கிய படியாம். அப் பெருஞ்சினைக்கண்ணிருந்து ஏனல் காவலர் ஆர்த்தொறும் கிளி விளி பயிற்றும் என்றதும் வீணுக் கன்று. ஈண்டுக் கிளி என்றது கூறுவாள் குறிப்பொடு படுத்து நோக்குழிப் பெடைக்கிளி என்றாகும். ஏனல் காவலர் ஆர்த்தல் அவ்வூர்மாக்கள் அலர் கூறும் ஆரவாரம். எனவே அதுவும் அவ்வாரவாரம் கேட்டு அஞ்சி எளிய மகளிராகிய யாங்கள் எங்கள்

துணைவனுமிய நின்னை வரைவொடு வந்து அளிசெய்யுமாறு கூவியழைக்கின்றேம், என்னும் பொருளைத் தோற்றுவித்து நிற்றலும் உணர்க. இவ்வாறு இத் தோழி கூற்றில் பதர்ச் சொல் ஒன்றேனுமின்றி அனைத்தும் பொருள் பொதிந்த சொல்லாகி ஆற்றவும் இன்பம் நல்குதல் உணர்க. இவள் காதலர் உறவிற்குக் கூறிய "யாமே, பிரிவின்றியைந்த துவரா நட்பின் இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே" என்ற உவமை இத்தமிழ் மொழி நின்றுநிலவும் காலமெல்லாம் நிலைத்து நின்று காலந் தோறும் பயில்வோர்க் கெல்லாம் கழிபேரின்பம் வழங்கும் சிறப்பு உடைத்தாகும் என்பது தேற்றம்.

இனி, எடுத்துக்காட்டிற்காக ஈண்டு இச் செய்யுளை எஞ் சிற்றறிவிற்கேற்ப ஆராய்ந்து காட்டினும். இங்ஙனமே இவ் வகநானூறு என்னும் பேரிலக்கியத்தை ஆழ்ந்து பயின்று இத்தமிழ் கூறு நல்லுலகம் இன்புற வேண்டும் என்பதே எமது வேணவா.

இங்ஙனம்

மேலைப்பெருமழை 30-11-1966

போ. வே. சோமசுந்தரன்

உரையாசிரியன்.

உ

எட்டுத்தொகையுள் ஒன்றாகிய

# நெடுந்தொகை

என்னும்

# அகநானூறு

## (செய்யுளும் சொற்பொருள், விளக்கவுரைகளும்)

## கடவுள் வாழ்த்து

**திணை :** பாடாண்.

**துறை :** பாடாண் திணையினது வகை எட்டனுள் ஒன்றாகிய கடவுள் வாழ்த்து வகை என்க.

(**துறை விளக்கம்**) இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு அன்பொடு புணர்ந்த ஐந்திணையும் நுதலிய இந்நூல் உலகின்கண் அழிவின்றி நின்று நிலவுதற் பொருட்டும், இன்பமாகிய இந்நூல் நுதலிய அகப் பொருளைப் பயின்று அதனை இவ்வுலகத்தே இனிது துய்த்து வாழுகின்ற மக்கள் தமக்கு அவ்வின்பத்தைத் தமக்கியல்பாக உள்ள பேரருள் காரணமாக உணர்த்தி வருகின்ற கடவுள் உண்மையை யுணர்ந்து அவன் தமக்குச் செய்துவரும் நன்றியைப் பேணி அவன்பால் அன்பு செய்தற் பொருட்டும் இந்நூலின் முடிந்தபயனாகிய "அந்தமில் இன்பத்து அழிவில் வீடு" என்னும் பேரின்பப் பெரும்பயனை எய்தி உய்தற் பொருட்டும் இந்நூற்குப் புறத்துறுப்பாகப் பாடி நிறுத்திய கடவுள் வாழ்த்து என்க.

இனி, அகநானூறு என்னும் இந்நூல் இன்பமும் பொருளும் அறனும் என்னும் மூன்றுவகை உறுதிப் பொருள்களுள் வைத்து முன்னின்ற இன்பம் ஒன்றனையே நுதலிய பொருளாகக் கொண்டெழுந்ததாயினும், அவ்வின்பந்தானும் அன்பென்னும் பண்பும் அதன் செயலாகிய அறன் என்னும் பயனும் அப்பயனை விளைவிக்கின்ற பொருளும் உடங்கியைந்தவழியன்றி உயிர்கட்குக் கைகூடாமையால் இவற்றிற்கெல்லாம் காரணமாயிருக்கின்ற கடவுள் உணர்ச்சியும் கடவுள் வழிபாடும் ஆகிய இவை இந்நூலோதுவார்க்கும் இன்றியமையாமையால் புறத்திணைப்பாற்பட்ட இக்கடவுள் வாழ்த்து அகத்திணையாகிய இந்நூற்குப் புறவுறுப்பாக இயற்றி நூன்முகப்பில் அமைக்கப்பட்டது என்றுணர்க. இதனை,

> "இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
> அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
> காமக்கூட்டம்"

என ஆசிரியர் தொல்காப்பியனார் ஓதுமாற்றானும் (தொல்-களவி-க)

"அறத்தான் வருவதே இன்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில"

எனவரும், திருக்குறளானும் (௩௯) உணர்க.

இனி நூலோதுதலின் முடிந்த பயன் கடவுளை வழிபடுதலே என்பதனை.

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்"

எனவருந் திருக்குறளானும் உணர்க.

(இலக்கணம்) "பாடாண்பகுதி கைக்கிளைப் புறனே, நாடுங் காலை நாலிரண் டுடைத்தே" எனவரும் (தொல் புறத்திணை-௨௯) நூற்பாவில் "நாலிரண்டெனப்பட்ட வாழ்த்து வகை எட்டனுள் இது கடவுள் வாழ்த்து வகையாகும் என்க.

இனி, ஆசிரியர் நச்சினார்க்கினியர் இச் செய்யுளை "அமரர்கண் முடியும் அறுவகை" என்பதனுள் வகை என்னும் இலேசினால் அமைக்கவென் றறிவுறுப்பர்.

இனி, "வாழ்த்தியல் வகை நாற்பாவிற்கு முரித்தே" என்னும் விதிபற்றி இஃது ஆசிரியப் பாவால் இயன்ற கடவுள் வாழ்த்து என்க.

இனி, இவ் வகநானூற்றுச் செய்யுள்கள் பதின்மூன் றடிச் சிறுமையும், முப்பத்தோரடிப் பெருமையும் உடைய ஆசிரியப்பாக்களின் தொகுதியாகும். இவ் வமைப்பிற்கிணங்கவே இக் கடவுள் வாழ்த்துச் செய்யுளும் பதினாறடியளவு மிமிர்ந்தோடிய நெடுஞ் செய்யுளாயிருத்தலும் குறிக்கொண்டுணர்க. (இதனைப் பாடிய புலவர் பெருமான் குறுந்தொகை, நற்றிணை என்னும் இரண்டு நூல்களினும் அதனதன் அடியளவிற்கேற்பவே கடவுள் வாழ்த்துப் பாடியிருத்தலும் உணர்க.)

பேராசிரியர், இச்செய்யுளை, எடுத்துக்காட்டி (தொல்-செய்யு-௧0௧) வாழ்த்தியல் வகையில் இஃது "உலகிற்குப் பயன்பட வாழ்த்தியது" என்பர்.

கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்
மார்பி னஃதே மையி னுண்ஞா
ணுதல திமையா நாட்டம் இகலட்டுக்
௫. கையது கணிச்சியொடு மழுவே மூவாய்
வேலு முண்டத் தோலா தோற்கே
யூர்ந்த தேறே சேர்ந்தோ ளுமையே
செவ்வா னன்ன மேனி யவ்வா
னிலங்குபிறை யன்ன விலங்குவால் வையெயிற்
௧0. றெரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை

முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி
மூவா வமரரு முனிவரும் பிறரும்
யாவரு மறியாத் தொன்முறை மரபின்
வரிகிளர் வயமா னுரிவை தைஇய
௧௫. யாழ்கெழு மணிமிடற் றந்தணன்
றாவி றாணிழற் றவிர்ந்தன் றுலகே.

—பாரதம் பாடிய பெருந்தேவனார்.

(உரை)

௧௫ - ௧௬ : அந்தணன்.........உலகே

(இதன் பொருள்.) உலகு - உயிர்ப் பொருளும் உயிரில் பொருளுமாகிய இருவேறு வகைப்பட்ட பொருள்களின் கூட்டரவா னியன்ற உலகமானது; அந்தணன் தா இல் தாள் நிழல் தவிர்ந்தன்று - அறவாழி அந்தணனாகிய இறைவனுடைய கேடிலாத திருவடி நிழலிலே எஞ்ஞான்றும் உறையும் இயல்புடைத்து எனக.

(விளக்கம்) எனவே, ஆதலால் இவ்வுலகிற்கு இடையூறில்லை என்பது குறிப்பெச்சத்தாற் போந்த பொருள் என்க.

இனி, காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின் 'உலகு அந்தணன் தாள் நிழல் தவிர்ந்தன்று' என உலகின்மேல் வைத்துக் கூறினாரேனும் இவ்வுலகினை அந்தணன் ஆகிய இறைவன் தன் தாள் நிழலிலே வைத்துப் பேணுகின்றான் என இறைவனது இயல்புணர்த்துதலே ஆசிரியர் கருத்தாகக் கொள்க.

இனி, இறைவன் அவ்வாறு உலகினைப் பேணுதற்குக் காரணம் யாதென வினவுவார்க்கு விடையாதற்பொருட்டு அந்தணன் என்னும் பெயரால் அவ்விறைவனைச் சுட்டினார். என்னை? அந்தணன் என்போன் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுதலைத் தனக்கியல்பாகவுடைய அறவோன் என்னும் பொருளை அப் பெயர்தானே தன்னுட் கொண்டிருத்தலான் அப் பெயரே அவன் உலகினைத் தன் தா இல் தாள் நிழலில் வைத்துப் பேணுதற்குரிய காரணத்தையும் உணர்த்துதலாலென்க. இதனை ஆசிரியர் திருவள்ளுவனார்,

''அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்''

எனத் திருவாய்மலர்ந்தருளிய அருமைத் திருக்குறளானும் (௩௦) மற்று அவர் தாமே இறைவனை ''அறவாழி யந்தணன்'' என அவனியல்பு தோன்றத் திருப்பெயர் சூட்டி அழைத்தலானும் உணர்க.

௧௨ - ௧௩ : மூவா...............மரபின் (அந்தணன்)

(இ - ள்.) மூவா அமரரும் முனிவரும் பிறரும் யாவரும் - (இன்னும் அவ்வந்தணன் எத்தகையனோவெனின்) மூவாமையை

யுடைய திருமாலும் பிரமனும் முதலிய தேவர்களாலும், இவ் வுலகினைத் துவரத் துறந்த துறவோர்களாலும் பல்வேறுவகைப்பட்ட சமயக் கணக்கரும் ஏனையோருமாகிய யாவராலும அறியாத் தொல்முறைமரபின் (அந்தணன்) - அறியப்படாத பழைதாகிய முறைமையினையுடைய தன்மையுடைய (அந்தணன்) என்க.

(வி - ம்.) அமரர் என்றது, திருமால் முதலியோரை; முனிவர் என்றது உலகினைப் பற்றறத் துறந்த துறவோரை; பிறர் என்றது தத்துவ ஆராய்ச்சி வாயிலாய் இறைவனைக் காண முயலுகின்ற பல்வேறு சமயக் கணக்கர்களையும் என்றுணர்க. இனி அமரர் காண மாட்டாமையைத் திருமாலும் பிரமனும் நிலன் அகழ்ந்தும், விண்ணிற் பறந்தும் தேடியும் காணார் ஆயினர் என்னும் பௌராணிகர் கூற்றான் உணர்க.

இனி உலகினைத் துறந்து அவன்றாணிழலிற் றஞ்சம் புக்க முனிவரும் காணமாட்டாமையை,

> "கடலலைக்கே ஆடுநர்க்குக் கைவந்து நின்றும்
> கடலலைக்க வாராதாற் போலப் – படியில்
> அருந்திசைய அன்பரைவந் தாண்டதுவும் எல்லாம்
> கருத்துக்குச் சேயனாய்க் காண்"

எனவரும் திருக்களிற்றுப்படியாரான் (௧0) உணர்க.

இனிப் பிறர் என இகழ்ச்சி தோன்றக் கூறப்பட்ட சமயக் கணக்கரான் அறியப்படாமையை, "சமயவாதிகள் தத்தம் மதங்களில் அமைவதாக அரற்றி மலைந்தனர்" எனவரும் மணிவாசகத்தானும் (போற்றி இக - உ.) உணர்க.

அறியாத் தொன்முறை என்புழிப் பெயரெச்சத்தீறு கெட்டது.

இதனால் அந்தணன் என்னப்பட்ட இறைவனது தன்மை யாவரானும் அறியப்படாததொன்று என்றுணர்த்தி அங்ஙனம் ஆயினும் அவன் தன் அன்பராயினோர்க்கு அருள்கூர்ந்து அவர் மனங்கொண்ட வடிவையே தன்வடிவாகக் கொண்டருளி அவர்க்கு அணுக்கனாகி அவர்தம் மனக்கோயிலில் எழுந்தருளுவன் என்பது போதர அத்தகைய அவன் அருட்டிருவடிவம் இவ்வாறிருக்கும் என்றுணர்த்துகின்றார்.

## அ - ௧0 : சேவ்வான்.................சென்னி

(இ - ள்.) செவ்வான் அன்ன மேனி - இனி அம் முதல்வன்றான் அமரர் முதலாயினோர் அறியாத் தொன் மரபினன் ஆயினும் தன்பால் அன்புடைய அடியார்க்கு, அந்திமாலைப் பொழுதின்கண் மேற்றிசையிற் றோன்றாநின்ற செக்கர்வானம் போன்று சிவந்த காண்டற்கினிய திருமேனியையும்; அவ் வான் இலங்குபிறை அன்ன விலங்கு வால் வை எயிற்று - அச் செக்கர்வானத்தே

தோன்றி விளங்குகின்ற வெள்ளிய பிறையினது நிறம் போன்ற நிறத்தோடு விளங்குள்ள கூர்த்த பற்களையும்; எரி அகைந்தன்ன அவிர்ந்து விளங்கும் புரிசடை - தீயானது கொழுந்துவிட்டெரிவது போன்று விரிந்து விளங்கா நின்ற முறுக்கேறிய சடையானது; முதிராத் திங்களொடு சுடரும் சென்னி - இளம் பிறையாகிய திங்களோடு ஒருங்கே சுடருகின்ற முச்சியினையும் உடையவனாய் என்க.

(வி - ம்.) செவ்வான்-செக்கர்வானம். அழித்தற்றொழிலுமுடைமையின் பிறை போன்ற வளைபற்களுடைமையும் கூறப்பட்டது புரி-முறுக்கு. முதிராத்திங்கள் என்றது எப்பொழுதும் இளம்பிறையாகவே இருந்து அவன் சடைக்கு அழகு செய்யும என்பது பற்றி என்க. நாம் காணும் இளம பிறைபோல் நாளுக்கு நாள் முதிராத பிறைத்திங்கள் என்பது கருத்து.

க௪ - க௫ : வரிகிளர்..................அந்தணன்

(இ - ள்.) வரிகிளர் வயமான் உரிவை தைஇய - கோடுகள் விளங்குகின்ற புலியினது தோலை உடுத்த; யாழ் கெழு மணி மிடற்று - யாழினது நரம்பினது இசையோடு இரண்டறக் கலக்கும் குரலையும், நீலமணி போன்ற நிறத்தினையும உடைய மிடற்றினையும் உடையவோர் அந்தணனை அவர் மனக்கண் முன்னர்க் காட்சி தந்தருளவும் அருளுவன் என்க.

(வி - ம்.) அவ்விறைவன் தனக்கென ஒருவடிவும் உடையானல்லன், ஆயினும் அன்பராயினோர் தன்னை நினைந்துய்தற் பொருட்டுச் செவ்வான் அன்ன மேனி முதலியவற்றையுடையவோர் அந்தணனை அருட்டிரு மேனியும் கொண்டு அவர் அகக்கண் முன்னர்த் தானே காட்சிதந்தருளுவன் என்பது கருத்து. இங்ஙனம் கூறவே இறைவன் மனமொழிகடக்கச் சேயனே ஆயினும் இவ்வாற்றால் அவன் அன்பராயினோர் மனமொழிகட்கு மிகவும் அணியனும் ஆகும் பேரருள் உடையன். ஆதலால் இவ்வாறு அவன் திருவுருவினை நினைந்துய்க! என்றறிவுறுத்தவாறாயிற்று என்க.

க - எ : கார்......உமையே

(இ - ள்.) கார் கொன்றைப் பொன் ஏர்விரி புதுமலர்த் தாரன் - இனி, அம் மணிமிடற்று அந்தணன்றானும், கார்ப் பருவத்தே செழித்தோங்கும் கொன்றையினது பொன்போன்ற நிறமுடையவாய் அழகாக மலர்ந்த நாள்மலரானியன்ற தாரினை மார்பகத்தே தானே முதல்வன் என்பதற்கு அடையாளமாக அணிந்தவனாகவும், மாலையன் - அக் கொன்றைப் புதுமலரையே அழகின் பொருட்டுப் பல்வேறுவகை மாலைகளாகப் புனைந்து அணிந்து கொண்டவனாகவும்; மலைந்த கண்ணியன் - அக்

கொன்றையினது நாண்மலரையே கண்ணியாகவும் தலையிற் சூடியவனாகவும்; (இவ்வாற்றால் நினைத்தற்கினியனாகவு மிருப்பன்) மை இல் நுண் ஞாண் மார்பினஃது - குற்றமற்ற நுண்ணிய பூணூலும் அவன் மார்பின்கட் கிடந்து அழகு செய்யும் கண்டீர்; இமையா நாட்டம் இகலட்டு நுதலது - இமைத்தலில்லாத நெருப்புக்கண் ஒன்று தான் தோன்றுதற்குக் காரணமான பகைவரை யழித்த பின்னரும் அவ் வந்தணனுக்கொரு சிறப் பழகிந்து அவனுடைய நுதலின்கண்ணதாகும்; மழு இகல் அட்டுக் கணிச்சியொடு கையது - மழுவானது பகைவரைத் துவர அழித்தபின்னரும் அவனுக்கோர் அணியாக் குந்தாலியோடே அவன் திருக்கையின்கண்ணதாம்; அத் தோலாதோற்கு மூவாய் வேலும் உண்டு - அந்தத் தோல்வியில்லாத வரம்பிலாற்றலுடைய அந்தணனுக்குக் கையில் மூன்று தலையையுடைய சூலப்படை யொன்றும் சிறந்துரிமையுடையதாக உளது; ஊர்ந்தது ஏறே - அவ்வந்தணன் அன்பர்க்குக் காட்சி தர ஊர்ந்து வரும் ஊர்தி தானும் காண்டற்கினிய ஆனேறே யாகும்; சேர்ந்தோள் உமை - இவ் வந்தணனுக்கு வாழ்க்கைத்துணைவியாக இவனோடு கூடியவள் உமை என்னும் திருப் பெயரையுடைய இறைவியாரேயாவர்; என்பதாம்.

(வி - ம்.) மழையே இறைவன் உலகோம்பற்குச் சிறந்த கருவி யாதல் கருதி-இவ் வந்தணனே உலகினைப் படைத்து அதன்கண் கார்ப் பருவம் முதலியவற்றைப் படைத்து உலகத்தை ஓம்புபவன் என்பதற்கு அறிகுறியாகவே பருவங்களிற் றலைசிறந்த கார்ப்பருவத்தே மலருகின்ற கொன்றையினது பொன்னேர் புதுமலரையே தாராகவும் மாலை யாகவும் கண்ணியாகவும் அணிகின்றனன். இக் கொன்றை இவனே முதல்வன் என்பதற்கு அடையாளமாம் என்பது குறிப்பாகப் புலப்படு தற்குக் கார்விரி..... கண்ணியன் என்றார். ஆசிரியர் திருவள்ளுவனார் கடவுள் வாழ்த்தை அடுத்து வான்சிறப்புக் கூறுதலும் உணர்க.

இனி, மாலையும் கண்ணியும் அக் கொன்றைமலர்களாலே இயன் றவை என்பதனை இவர் "கண்ணி கார்நறுங் கொன்றை, காமர் வண்ண மார்பிற் றாருங்கொன்றை" எனப் புறநானூற்றுக் கடவுள் வாழ்த்திற் கூறுவதனால் பெற்றாம்.

இனி, மார்பினஃதே என்புழி ஆய்தம் விரிக்கும்வழி விரித்தல். ஞாண், போலி. இகல்-பகை. இகலட்டு என்பதனை இமையாநாட்டத் திற்கும் கூட்டுக கணிச்சி-குந்தாலி. மூவாய் வேலென்றது சூலப் படையை. இஃது இறைவனுக்குச் சிறந்துரிமை யுடைய படைக்கலம். தோலாதான் என்றது வரம்பிலாற்றலுடைமையாகிய அவன் முழுமுதற்றன்மையைக் கருதிக் கூறியதாம். தோலாதானாகவிருந்தும் மூவாய் மேலும் உடையான் அஃது அவனுக்கோர் அடையாளமாத் திரையே என்பது கருத்து.

இனி, கார்விரி என்பதுமுதலாக உமையே என்பதீருக அவன் அடியார்க்கருளும் அருட்டிருமேனியின் காட்சி இவ்வாறிருக்கும் என்றறிவித்தவாரும்! அவனருட் காட்சி பெற்ற மெய்யடியார் அவன் உருவத்தை இவ்வாறு கூறுவர் என்பது குறிப்பு; எனவே யாமும் அவனை அவ்வாறே நினைந்து வழிபாடு செய்வோம் என்பது இதனாற் போந்த குறிப்பெச்சமாயிற்று.

இனி, இறைவன் நினைவுமாத்திரையானே ஒன்றனைத் தெறுகின்ற பேராற்றலுடையானாய்த் தானே குறைவற்ற இன்பப் பிழம்பாகவும் இருக்கவேயும், மாந்தர்போன்று படைக்கலன் ஏந்திப் பகை தெறுதலும், பெண்ணைக் காமுற்றுப் புணர்ந்து இன்பம் எய்துதலும், தானே அழகுக்கெல்லாம் உறைவிடமாகவும் ஆடையாலும் மாலை முதலியவற்றாலும் அணிசெய்து கோடலும் அவன் தன்பொருட்டாகச் செய்வன அல்ல; தன்னால் பிறப்பிலீடுபடுத்தப்பட்ட மக்கள் படைக்கலங்கொண்டு தம்பகை வென்று மறத்திறற் சிறப்புற்றுத் திகழற் பொருட்டும், ஆடையணிகளால் அணிசெய்துகொண்டு இனிது வாழ்தற் பொருட்டும், தம்முள் ஆணும், பெண்ணுமாகி ஒருவரையொருவர் காதலுற்றுக் கூடிக்களித்து வாழ்தற் பொருட்டுமாம் என்க. மாந்தர் வீரவாழ்க்கை மேற்கொள்ளற்குத் தோலாதான் படைக்கலம் ஏந்துகின்றான் எனவும், ஆண் பெண் என்னும் வேற்றுமையில்லாத அறிவுப்பிழம்பாகிய அவன், மாந்தர் இவ்வுலகிலேயே காதற் பேரின்பம் எய்துதற் பொருட்டுத் தன்னுள்ளேயே ஆண்மைத் தன்மையையும் பெண்மைத்தன்மையையும் படைத்துக்கொண்டு அம்மையப்பனும் இருவேறுருவின் ஒருவனாய்த் திகழ்கின்றான் எனவும் கொள்க; ஆதலின் இந்நூல் நுதலிய காதல் வாழ்க்கையும் உமை அவ்விறைவனோடு சேர்ந்தமையாலேதான் மக்கட்கும் எய்திற்று. இத்தகைய இன்ப வாழ்க்கையை நமக்களித்த அவ்வந்தணனை வழிபடுதல் நமது தலையாய கடன் என்பது இவ்வாசிரியரின் கருத்தென்று நுண்ணிதின் உணர்ந்து கொள்க. இக்கருத்துக்களோடு,

> "படைப்பாதித் தொழிலும் பத்தர்க் கருளும்பா வனையும் நூலும்
> இடப்பாகம் மாத ராளோ டியைந்துயிர்க் கின்பம் என்றும்
> அடைப்பானும் அதுவும் முத்தி அளித்திடு மியோகும் பாசந்
> துடைப்பானுந் தொழிலும் மேனி தொடக்கானேற் சொல்லொ ணாதே"

எனவும், (சிவஞானசித்-சுப-எ௪)

> "சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லாம்
> ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உணர்குண குணியு மாகி
> வைத்தனன் அவளால் வந்த ஆக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்
> இத்தையும் அறியார் பீட லிங்கத்தின் இயல்பு மோரார்" (சித்-சுப-அக)

எனவும் வரும் மெய்கண்ட வித்தக நூலோர் கருத்தை ஒப்புக் கண்டுணர்க.

இனி, இச் செய்யுளை, "உலகு அந்தணன் தாள் நிழல் தவிர்ந்தன்று. அவன்றானும் அமரர் முதலியோரால் அறியப்படாத மரபினையுடைய அந்தணன் ஆவான். ஆயினும், அவன் தன் அன்பரா

யினோர்க்கருளும் பொருட்டு அருட்டிருமேனி கொள்ளுங்கால் நாரணனாய் மாலையனாய்க் கண்ணியனாய்த் தோன்றுவன். மேலும் அவன் நுதலது இமையா நாட்டம்; கையது கணிச்சியொடு மழு. அத்தோலாதோற்கு மூவாய் வேலுமுண்டு; அவன் ஊர்ந்தது ஏறு அவனிடப்பாகத்தே சேர்ந்தோள் உமை. இவ்வாறு அவனைக் கண்ட சிவானுபூதிச் செல்வர் கூறுவர். யாமும் அவ்வாறே அவனை அகத்தே கண்டு வழிபடுவோமாக! என்றியைபு காண்க.

(பாடவேற்றுமை) உ. மிலைந்த. ௬. விளங்குவால். ௧௩. தொன்முறை. ௧௪. வரியுடை.

## இந்நூலின் புறத்துறைப்பாகிய

## கடவுள் வாழ்த்து

முற்றிற்று.

முதலாவது

# களிற்றியானை நிரை

## செய்யுள் ௧

**திணை :** பாலை

**துறை :** பிரிவிடைஆற்றளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**(துறை விளக்கம்)** அஃதாவது: தலைவன் பொருள்வயிற் பிரிந்தமையால் ஆற்றளாய தலைவி தோழியை நோக்கித் தலைவன் வாய்மை பேணு வன்கண்ணன் ஆயினன் என்று கூறி வருந்தியது என்றவாறு.

**(இலக்கணம்)** இஃது "எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே" (தொல் - அகத் ௪௨.) எனவரும் நூற்பாவினால் அமையும்.

வண்டுபடத் ததைந்த கண்ணி யொண்கழ
லுருவக் குதிரை மழவ ரோட்டிய
முருக னற்போர் நெடுவே ளாவி
யறுகோட் டியானைப் பொதினி யாங்கட
௫. சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போற் பிரியல மென்ற சொற்றா
மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த
வேய்மருள் பணைத்தோ ணெகிழச் சேய்நாட்டுப்
பொலங்கல வொருக்கை தருமார் நிலம்பக
௧௦. வழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலி
னிழறேய்ந் துலறிய மரத்த வறைகாய்
பறுநீர்ப் பைஞ்சுனை யாமறப் புலர்தலி
னுகுநெற் பொரியும் வெம்மைய யாவருும்
வழங்குந ரின்மையின் வௌவுநர் மடியச்
௧௫. சுரம்புல் லென்ற வாற்ற வலங்குசினை
நாரின் முருங்கை நவிரல் வான்பூச்
சூரலங் கடுவளி யெடுப்ப வாருற்
றுடைதிரைப் பிதிர்விற் பொங்கி முன்
கடல்போற் றோன்றல காடிறந் தோரே.

—மாமூலனார்.

எ : தோழி.........

(இ - ள்.) தோழி - ஆற்றியிருந்திடுக! என்று வற்புறுத்து கின்ற தோழீ! கேள்! என்க.

(விளக்கம்) வினைவயிற் பிரிதல் ஆடவர்கடன் ஆதலின் நம்மைப் பிரிந்து போன தலைவன் வருந்துணையும் ஆற்றியிருத்தலே நின்கடன் என்று ஆற்றுவிப்பாளாகிய தோழியைத் தலைவி விளித்தபடியாம்.

எ - கக : சிறந்த.........காடிறந்தோரே

(இ - ள்.) சிறந்த வேய் மருள் பணைத்தோள் நெகிழ - அழகினாற் சிறப்புற்ற மூங்கிலோ இவை என்று கண்டோர் வியந்து பாராட்டும்படி பருத்திருந்த என்னுடைய இந்தத் தோள்கள் இவ்வாறு மெலிந்துபோம்படி; சேய் நாட்டுப் பொலங்கல வெறுக்கை தருமார் - தொலைவிலுள்ள நாட்டிற் சென்று இத் தோள்கட்குப் பொன்னாலியன்ற அணிகலன்களையும் பிற செல்வங்களையும் ஈட்டி வருதற் பொருட்டு; அழல்போல் வெம் கதிர் நிலம் பைது அற பகத் தெறுதலின் - தீயினால் சுடுவது போன்று வெவ்விய ஞாயிற்றின் கதிர்கள் நிலமானது பசுமையற்றுப் போகவும் பிளந்து போகவும் சுடுதலாலே; நிழல் தேய்ந்து உலறிய மரத்த - நிழல் குறையப்பெற்று வற்றிய மரத்தையுடையவாய்; அறைகாய்பு நீர் அறு பைஞ்சுனை ஆம் அறப் புலர்தலின் உகுநெல் பொரியும் வெம்மைய - பாறைநிலத் தின்கண் அக் கதிர்களால் காயப்பெற்று நீர் அற்றுப்போன பசிய சுனைகள்தாமும் ஈரம் சிறிதும் இல்லையாம்படி உலர்ந்து கிடத்தலாலே தம்முள்ளே உதிர்கின்ற மூங்கிலின் நெற்கள் பொரிதற்குக் காரணமாய் மிக்க வெப்பத்தை யுடையதும்; வழங்குநர் யாவரும் இன்மையின் - தன்பால் ஆறு செல்வோர் யாருமின்மையாலே; வௌவுநர் மடிய - ஆறலைபோரும் தந்தொழிலைத் துறந்து மடிந்திருத்தலாலே; சுரம் புல் என்ற ஆற்ற - தனக்கியன்ற பாலைத்தன்மையும் பொலிவழிந்து வறிதே கிடக்கின்ற வழிகளையுடையதும்; சூரலம் கடுவளி ஆர்வுற்று எடுப்ப - சுழன்றடிக்கின்ற கோடைக்காற்று ஆரவாரித்து எடுத்தலாலே, நார் இல் முருங்கை நவிரல் வான பூ - நார் இல்லாத முருங்கையின் குலைதலையுடைய வெள்ளிய மலர்கள் உதிர்ந்து; கடல் பொங்கி உடைமுன திரைப்பிதிர்வில் தோன்றலை காடு இறந்தோர் - கடலானது பெருகி உடைக்கின்ற கரையின் கண் அதன அலைகள் சிதறிப் போகட்ட நுரைகளைப் போன்று தோன்றுதலை யுடையதும் ஆகிய காட்டைக் கடந்து சென்ற நம்பெருமான்; என்க.

(வி - ம்.) அழகினூற் சிறந்த வேய் என்க. பணைத்தல்-பருத்தல். பிரியும்பொழுது நினக்குப் பொலங்கலம் கொணர்வல் என்று பிரிந்தாகலின் பொலங்கல வெறுக்கை என அவன் கூற்றைக் கொண்டு கூறுகின்றாள். தருமார்-தர. அழல் தெறுதல் போல் கதிர் தெறுதலின் என்க. தேய்தல் - நாளுக்குநாள் சுருங்குதல். அறையின்கண்ணதாய் காய்ந்து நீர் அறுசுனை என்க. பைது - பசுமை; ஈண்டு ஈரமுடைமை மேனின்றது. சுனைமருங்கு நின்ற மூங்கிலினின்றும் அச் சுனைக்குள் உகுகின்ற நெல் என்க. வழங்குநர் ஈண்டு ஆறுசெல்வோர். மடிதல் - தொழில் செய்யாமற் சோம்பியிருத்தல். பாலை நிலமக்கட்கு ஆறலைத்தலும் தொழிலாகலின் அது செய்யாது மடிந்திருப்ப என்றவாறு. சுரம்-பாலைத்தன்மை. நவிரல்-குலைதல். வான்பூ-வெள்ளிய பூ. இதற்குத் திரைப்பிதிர்வு (நுரை) உவமை. கடல்முன் என மாறுக. அஃதாவது கரை. தோள் நெகிழத் தருமார் காடு இறந்தோர் என இயையும்.

க - எ : வண்டு.........சொல்லோ

(இ - ள்.) வண்டுபடத் ததைந்த கண்ணி ஒள் கழல் உருவக் குதிரை மழவர் ஓட்டிய - வண்டுகள் மொய்க்கும்படி செறிந்த மலர்களையுடைய கண்ணியையும் ஒள்ளிய வீரக்கழலையும் பகைவர்க்கு அச்சமுண்டாக்கும் குதிரைகளையும் உடைய மழநாட்டு மறவரைப் போர்க்களத்தே வென்று புறங்கொடுத் தோடச்செய்த; நற்போர் நெடுவேள் ஆவி - சிறந்த போர்த்திறமுடைய நெடிய வேளிர்குலத் தோன்றலாகிய ஆவி என்னும் மன்னனுக்குரிய; அறுகோட்டு யானை - அறுத்துத் திருத்திய மருப்பினையுடைய யானை நிற்கின்ற; முருகன் பொதினி யாங்கண் - முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற பொதினி மலையின் சாரலாகிய அவ்விடத்தே; சிறு காரோடன் - தோல் துன்னுதலாகிய சிறு தொழிலையுடைய உறைகாரன்; பயினொடு சேர்த்திய கல்போல் பிரியலம் என்ற சொல் மறந்தனர் - அரக்கொடு சேர்த்துச்செய்த சாணைக்கல் போன்று நின்னிற் பிரியேயம் என்று மூன்பு சூளுறவோடு கூறிய சொல்லை மறந்தொழிந்தனர்காண்! யான் எங்ஙனம் ஆற்றியிருப்பேன்! என்க.

(வி - ம்.) கண்ணி-தலையிற் சூடும் மாலை. உருவக்குதிரை என்புழி, உரு - அழகு எனினுமாம். இது தமிழ்ச்சொல். உரு - உருவ என ஈறுதிரிந்தது என்பர் பழைய உரையாசிரியர். ஈண்டு 'அ' அசை எனவே பொருந்தும்; திரிந்தது எனல் பொருந்தாமை யுணர்க. மழவர்-மழநாட்டினர். இது மலைநாட்டிலுளதென்பர். முருகன் பொதினி எனக் கொண்டு கூட்டுக முருகன் எழுந்தருளியுள்ள பொதினி என்க. பொதினி-பழனி. இப் பொதினி மருங்கில் ஆவி என்பவன் நகரெடுத்தலான் இது திருவாவி நன்குடி என்று வழங்கப்படுதலுமறிக. அறுகோட்டியானை என்றது, முருகன் கோயில்யானையை. சிறுகாரோடன் - சிறுமையுடைய தோல் துன்னும் சக்கிலியன். இவன் படைக்கலங்கட்குத் தோலினால் உறை துன்னுதலின் உறைகாரன் என்றும் கூறப்படுவான். இச்செய்யுளால்

இவ்வுரைகாரரே சாணைக்கல்லும் செய்வர் என்பது பெறும். பயின்– அரக்கு. கொல், ஓ: அசைச்சொற்கள்.

காதிறந்தோர் பிரியலம் என்ற சொல் மறந்துவிட்டனர். அங்ஙனம் ஆயபின்னர் யான் ஆற்றியிருத்தல் எங்ஙனம் என்பது குறிப்பெச்சம்.

இச் செய்யுள் "பாலைக்குரிய முதலும் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது," என்பர் நச்சினார்க்கினியர். (தொல் – அகத் – க – உரை)

இனி, இதனை, தோழி, தோள்நெகிழச் சேய்நாட்டு வெறுக்கை தருமார் காதிறந்தோர் பண்டு பயின்றொடு சேர்த்திய கற்போல் பிரியலம் என்ற சொல் மறந்தார் போலும் யான் எங்ஙனம் ஆற்றுவல் என இயைக்க.

(பா – வே.) துறை: (தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழி......) (க)

## செய்யுள் உ

**திணை:** குறிஞ்சி.

**துறை:** பகற்குறிக்கட் செறிப்பறிவுறீஇத் தோழி வரைவு கடாயது.

(து – ள்.) அஃதாவது தலைவன் களவின்பமே காமுற்று வரைந்துகோடற்கண் கருத்தின்றி நாளும் பகற்குறிக்கண் வந்தொழுகாநிற்பத் தோழி அவனுக்குத் தலைவியை இற்செறித்தமை அறிவுறுத்தி, இனி நீ வரைந்துகொள்க என்று முடுக்கியது என்றவாறு.

(இ – ள்.) இதனை "நாற்றமுந் தோற்றமும்" எனவரும் நூற்பாவின்கண், "களனும் பொழுதும்............அனைநிலைவகையால் வரைதல் வேண்டினும்" என்பதனாற் கொள்க. (ஆசிரியர் நச்சினார்க்கினியரும் இதற்கு இச் செய்யுளைக் காட்டுவர்.)

கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை
ஊழுறு தீங்கனி யுண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் சுளையொ டூழ்படு
பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்
ரு. லறியா துண்ட கடுவ னயலது
கறிவளர் சாந்த மேறல்செல்லாது
நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்குங்
குறியா வின்ப மெளிதி னின்மலைப்
பல்வேறு விலங்கு மெய்து நாட
கO. குறித்த வின்ப நினக்கெவ னரிய
வெறுத்த வேஎர் வேய்புரை பணைத்தோ
ணிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்

டிவளு மிளைய ளாயிற் றந்தை
யருங்கடிக் காவலர் சோர்பத ஞேற்றிக்
கரு. கங்குல் வருதலு முரியை பைம்புதல்
வேங்கையு மொள்ளிணர் விரிந்தன
நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே.

—கபிலர்.

க - ௬: கோழிலை......நாட

(இ - ள்.) பாறை நெடுஞ்சுனை - பாறையின்கண்ணதாகிய நெடிய சுனைநீரிலே, கோழ் இலை வாழைக் கோள் மிகு பெருங்குலை ஊழ் உறு தீங்கனி - கொழுவிய இலைகளையுடைய காய்ப்பு மிகுந்த பெரிய குலையினின்றும் உதிர்ந்த இனிய பழங்களும்; உண்ணுநர்த் தடுத்த சாரல் பலவின சுளையொடு - தம்மை யுண்டவர் பிறவற்றை உண்ணுதபடி தம் சுவை மிகுதியால் தடுக்கின்ற மலைச்சாரலின் கண்ணுள்ள பலாப்பழத்தின் சுளையினின்றும் ஒழுகிய தீஞ்சாறும் கூடி; விளைந்த ஊழ்படு தேறல் - உண்டான முறைமைப்பட்ட கள்ளை; அறியாது உண்ட கடுவன் - கள் என்று அறியாமல் சுனைநீர் எனறு கருதிப பருகிய ஆண் குரங்கானது; அயலது கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது - அணித்தாக நிற்பதாகிய மிளகுக்கொடி படர்ந்த தனக்குரிய சந்தன மரத்தின்கண் அத் தேறல் மயக்கத்தாலே ஏறமாட்டாமல், நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும் - நறுமணமிக்க மலர் அடுக்குக்களாலியனற படுக்கை யின்கண் இன்புற்றுத் துயில்வதற்குக் காரணமான; குறியா இன்பம் - நினையாமல் தானே வந்தெய்து மின்பத்தை; நின்மலைப் பல்வேறு விலங்கும் எய்தும் நாட - நினக்குரிய மலையிலே வாழ் கின்ற பல வேறு வகைப்பட்ட விலஙகுகளும பெறுதற்கியன்ற சிறப்பினையுடைய நாட்டையுடைய பெருமானே! என்க.

(வி - ம்.) தலைவனுடைய திருவுடைமையைப் பாராட்டுபவள் அவன் நாட்டின் கண்ணுள்ள வாழையைக் கோழிலை வாழை என்றும் குலையைக் கோள் மிகுகுலை யென்றும் பெருங்குலை என்றும் கனியைத் தீங்கனி என்றும் விதந்து கூறுகின்றாள். ஊழுறுதீங்கனி - உதிர்ந்த இனிய பழம். இடைநின்ற உண்ணுநர்த்தடுத்த என்னும் அடைமொழி யைத் தீங்கனிக்கும் சுளைக்கும் பொதுவாகக் கொள்க.

நன்கு கனிந்த வாழைப்பழத்தின் சாறும் பலாச்சுளையின் சாறும் சுனை நீரிற் கலந்து முறைமைப்பட்ட தேறல் என்பது கருத்து. கடுவன் இயற்கையிலே விளைந்திருக்கின்ற தேறலைத் தேறலென்றறியாமல் நீர் என்றே கருதிப் பருகிப் பின் மயக்கத்தால் தான் ஏறியிருத்தற்குரிய சாந்தத்தில் ஏறமாட்டாமல் மலர் அடுக்கத்தில் கண்படுக்கும் இன்பம் என்பது கருத்து. எதிர்பாராமலிருக்கும் பொழுது தானே வந்தெய்தும்

இன்பம் ஊழ்படு தேறல் எனக் கூட்டுக. தேறல் கூட்டுமுறைப்படி கூட்டுண்ட கள் என்பது கருத்து. தேறல் சமைப்பவர் பழமுதலிய வற்றை நீரில் ஊறவைத்துப் புளிப்பேற்றுதல் மரபு. இந்தத் தேறலும் அவ்வாறு இயற்கையிலே முறைமைப்பட்டது என்றவாறு.

நாள்தோறும் மலர்கள் உதிர்ந்து அடுக்கடுக்காக அமைதலின் நறுவீ அடுக்கம் எனப்பட்டது. மலர்ப்படுக்கையிலும் இவ்வாறு பல்வேறு மணமுடைய மலர்களை அடுக்கடுக்காகப் பரப்புவர். ஆகவே இதுவும் இயற்கையிலேயே அமைந்த படுக்கையாதலறிக.

கo - கஎ : குறித்த..........ஊர்கொண்டன்றே

(இ - ள்.) குறித்த இன்பம் நினக்கு அரிய எவன் - அங்ஙன மாகவும் பெருந்தகையாகிய நீ குறிக்கொண்டெய்த நினைக்கும் இன்பங்களில் எய்தற்கரியனவும் நினக்கு உளவாமோ?; நின்மாட்டு வெறுத்த ஏஎர் வேய்புரை பணைத்தோள் இவளும் நிறுப்ப நில்லா நெஞ்சமொடு இனையள் ஆயின்-இனி நின் திறத்தில், மிக்க அழகை யுடைய மூங்கிலை ஒத்த பருத்த தோளையுடைய எம்பெருமாட்டி தானும் நிற்கும் நிலையிலே நிறுத்தி வைத்தற்குப் பெரிதும் முயன் றும நில்லாத நெஞ்சத்தையுடையளாய்க் காமம் கைம்மிக்கவளாயி னள்; இங்ஙனமிருத்தலால், அவள் நின்னை யின்றியமையாமையின்; தந்தை அருங்கடிக் காவலர் சோர்பதன் ஒற்றிக் கங்குல் வருதலும் உரிமை - எங்கள் தந்தையினது இல்லத்தில் யாவரும் எய்தற்கரிய காவற்றொழிலையுடையகாவன்மறவர் தந்தொழிலை இகழ்ந்திருக்கின்ற செவ்வியை நீ அறிந்து அவர் அறியாதபடி இரவுக் குறியிடத்தே வந்து இவளை அளி செய்தற்கும் உரியையாகுவை; பைம்புதல் வேங்கையும் ஒள் இணர் விரிந்தன - உதோ பார் பசிய புதர்களி னூடே நிற்கும்இவ் வேங்கை மரங்களும் ஒளிமிக்க தம் பூங்கொத்துக் களில் அரும்பற மலர்ந்தன; நெடு வெண் திங்களும் ஊர் கொண்டன்று - மேலும் நெடிய வெண்கதிர்களையுடைய திங்கள் மண்டிலமும் வளர்பருவத்தை எய்தியது; இவற்றையெல்லாம் ஆராய்ந்து இனி நீ செய்யக்கடவதனைச் செய்தருளுக! என்க.

(வி - ம்.) குறித்த இன்பம் என்றது, தலைவியொடு கூடிமகிழ்தற்கு நீ குறித்த இன்பம் என்றவாறு. நின்மலைப் பல்வேறு விலங்கும் குறியா இன்பம் பெறுவனவாக அந்த மலைநாட்டிற்கே தலைவனாகிய நீ நினைத்த இன்பம் மிகவும் எளிதாகவே எய்தவையல்லையோ என்பாள் இறைச் சியில் குறிப்பாக ஏதுக்காட்டினாள். இங்ஙனம் கூறவே நீ நினையின் விரைவிலேயே வரைவொடு வந்து எம்பெருமாட்டியை மணந்து பேரின்பம் எய்துதல் எளிதாமே? அங்ஙனமின்றி நீ குறித்த அவ்வின் பத்தை இடையூறுமிக்க இக் களவொழுக்கத்திலேயே நின்று இரு வகைக் குறிக்கண்ணும் இங்ஙனம் வந்து வருந்துவானேன்? என்று தலைவனுக்குப் பேதைமை யூட்டினாளாதல் நுண்ணிதின் உணர்க.

இனி வேங்கையும் இணர்விரிந்தன என்றது திணையரியப்பட்டமையால் இனித் தலைவியை நீ இப் புனத்தில் காண்பதும் கூடாது என்று குறிப்பாக வுணர்த்தியபடியாம்.

இனி, கங்குல் வருதலும் உரியை என்றது, பகற்குறியிடத்தே தலைவி வரவொண்ணாதபடி இற்செறிக்கப்பட்டனள் என்று குறிப்பால் அறிவுறுத்தியவாறும்.

இனி, தந்தையின் காவலர் சோர்பதன் பெறுதலும் நினக்கியலாதென்பாள் அக் காவலர் தாமும் அருங்கடிக்காவலர் என்றாள் எனவே அவர் காவலில் சோர்வாரல்லர் என்பது கருத்தாயிற்று. இவ்வாற்றால் இரவுக்குறியும் மறுத்தாளாயிற்று.

இனி, நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு இவளும் இனையள் என்றது நீ விரைவில் வரைவொடு வந்து மணந்து கொள்ளாயெனில் எம் பெருமாட்டி பிரிவாற்றாமையால் இறந்துபடுதலும் கூடும் என்று வரைவு முடுக்கியபடியாம்.

இனி, வெறுத்த ஏர் புரைபணைத்தோள் இவளும் இனையள் என்றதும் அத் தோள்கள் இப்பொழுது பிரிவாற்றாமையால் அழகழிந்து மெலிந்துள்ளன காண! என்று தலைவியின் ஆற்றாமை பிகுதியைக் குறிப்பா லுணர்த்தியபடியாம்.

இனி, திங்களும் ஊர்கொண்டதென்றது, மணவினைக்குரிய காலமும் வந்தெய்தியது; இக் காலத்தைக் கைகடக்க விடின் மீண்டும் திங்கள் ஊர்கொள்ளுந்துணையும் எம்பெருமாட்டி உயிர்வாழ்தலரிது ஆகலின் இப்பொழுதே வரைதற்கு ஆவன செய்தி என்று முடுக்கியவாறும். இவ்வாறு இச் செய்யுள் ஆசிரியர் கபிலருடைய புகழ்போன்று எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் பொருள் சுரந்து மிகவும் சிறப்புடையதாதலறிந்து மகிழ்க.

இனி, இச் செய்யுளின்கண் பழையவுரையாசிரியர் கூறும் உள்ளுறையும் ஓதி மகிழற் பாலதாம். அது வருமாறு: "கடுவனானது தேனை யறியாது நுகர்ந்து, பின்பு தனது தொழிலாகிய மரமேறலு மாட்டாது, வேறோரிடத்துச் செல்லவுமாட்டாது தனக்கு அயலதாகிய சந்தனத்தின் நிழலிற் பூமேலே உறங்குகின்றாற் போல, நீயும் இக் களவொழுக்கமாகிய இன்பம் நுகர்ந்து, நினது தொழிலாகிய அறநெறியையும் தப்பி இக் களவினை நீங்கி வரையவுமாட்டாது, இக் களவொழுக்கமாகிய இன்பத்திலேயே மயங்காநின்றாய் என்றவாறு" என்பதாம்.

இனி, இதனை "நாட! நினக்குக் குறித்த இன்பம் எவன் அரியவாம்; இவளும் இனையள் ஆகலின் கங்குல் வருதலும் உரியை; வேங்கையும் இணர்விரிந்தன; திங்களும் ஊர்கொண்டது; நீ செய்யக்கடவது செய்க! என இயைக்க.

(பா-வே.) ௧. கோண்முதிர், ௮. மெலிதென. ௧௧. வேய்மருள். (௨)

## செய்யுள் ௩.

**திணை:** பாலை.

**துறை:** முன்னொருகாலத்து நெஞ்சினாற் பொருள்வலிக்கப்பட்டுப் பிரிந்தான் தலைமகன்; பிரிந்து இடைச்சுரத்தினின்று அவள் நலநயந்து

மீளலுற்ற நெஞ்சினைக் கழறிப்போய்ப் பொருள் முடித்துவந்தவன் பின்னும் பொருள்வலிக்கப்பட்ட நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.

(து - வி.) அஃதாவது: தலைவன் தலைவி யிருவரும் மணந்துகொண்டு இல்லறம் நிகழ்த்திவரும் பொழுது தலைவன் நெஞ்சம் நல்வாழ்க்கைக்குப் பொருள் எத்துணை இன்றியமையாதது என்பதைப் பல்லாற்றானும் வினைவுறுத்தித் தூண்டிற்றாக, அவனும் அந் நெஞ்சோடிணங்கித் தலைவியைப் பிரிந்து பொருள் தேடப் புறப்பட்டான். போகும் வழியில் அந்த நெஞ்சமே தலைவியைப் பிரிந்தமையால் பெரிதும் வருந்தி, புல்லிய அப் பொருள் கிடக்கட்டும் அவளைப் பிரிந்து போதல் எனக்கியலாதென்று தலைவனைக் குழப்பி மீளும்படி வற்புறுத்தலாயிற்று. அந் நிலையில் தலைவன் அந் நெஞ்சினை இகழ்ந்து தான் மேற்கொண்ட பொருளீட்டுதலையே கடைப்பிடியாகக் கொண்டு சென்று வினைத்தாங்குப் பொருளீட்டியும் வந்தனன். பின்னொரு காலத்தில் அந்த நெஞ்சம் பொருளீட்டவேண்டும் என அவனை வருத்தலாயிற்று. அஃதுணர்ந்த தலைவன் அந்த நெஞ்சினைக் கடிந்து அதன் வேண்டுகோளைப் புறக்கணித்துத் தலைவியோடு தங்கியது என்றவாறு.

(இ - வி.) இதனை "ஒன்றாத் தமரினும்" எனவரும் (தொல்-அகத்திணையியல் ௪௧) நூற்பாவின்கண், "ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும்" என்பதனாற் கொள்க.

இருங்கழி முதலை மேஎந்தோ லன்ன
கருங்கா லோமைக் காண்பின் பெருஞ்சினைக்
கடியுடை நனந்தலை யீன்றிளைப் பட்ட
கொடுவாய்ப் பேடைக் கல்கிரை தரீஇய
௫. மான்றுவேட் டெழுந்த செஞ்செவி யெருவை
வான்றோய் சிமைய விறல்வரைக் கவாஅற்
றுளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி
யொண்செங் குருதி யுவறியுண் டருந்துபு
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
௧௦. கொள்ளை மாந்தரி னானாது கவரும்
புல்லிலை மராஅத்த வகன்சே ணத்தங்
கலந்தர வுள்ளமொடு கழியக் காட்டிப்
பின்னின்று துரக்கு நெஞ்ச நின்வா
வாய்ப்போற் பொய்ம்மொழி யெவ்வமென் களைமா
௧௫. கவிரித ழன்ன காண்பின் செவ்வா
யந்தீங் கிளவி யாயிழை மடந்தை
கொடுங்குழைக் கமர்த்த நோக்க
நெடுஞ்சே ணாரிடை விலங்கு ஞான்றே.

—எயினந்தை மகனார் இளங்கீரனார்.

க - ரு: இருங்கழி.........எருவை

(இ - ள்.) இருங் கழி முதலை மேஎம் தோல் அன்ன-பெரிய கழியினகண் வாழ்கின்ற முதலையினது முதுகிலே பொருந்திய தோல் போன்ற, கருங்கால் ஓமைக் காண்பு இல் பெருஞ்சினைக் கடியுடை நனந்தலை ஈன்று இளைப்பட்ட - பொருக்கமைந்த கரிய அடிப்பகுதியையுடைய ஓமை என்னும் மரத்தினது வேடரும் காணுதலில்லாத பெரிய கிளையின்கண் ஏறுதற்கருமையால் காப்புடைத்தாய் அகன்றதோரிடத்தே முட்டைகளையிட்டு வைத்து அவற்றை அடைகாத்தற் றொழிலி லீடுபட்ட; கொடுவாய்ப் பேடைக்கு அல்கு இரை தரீஇய வேட்டு - வளைந்த அலகினை யுடைய தன் பெடைக்கழுகின் உடலின்கண் உயிர் தங்குதற்குக் காரணமான இரையைத் தேடித்தருதற்கு விரும்பி; மான்று எழுந்த செஞ்செவி எருவை-அதனைப் பிரிவதன்கண் மயங்கிப் பின் ஒருவாறு தெளிந்து அச் சேக்கையினின்று மெழுந்து பறந்து போன சிவந்த செவிகளையுடைய சேவலாகிய கழுகு என்க.

(வி - ம்.) இருங்கழி - கரிய கழியுமாம். முதலைக்குப் பெருமை தோன்ற அது வாழ்கின்ற கழிக்குப் பெருமை கூறப்பட்டது. மேவும் என்னும் செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்திற்றுயிர் மெய் கெட்டு மேம் எனநின்று 'இன்னிசை நிறைப்ப மேஎம்' என அளபெடுத் தது. ஓமைமரத்தினது பொருக்கரைக்கு முதலையின் முதுகுத்தோல் உவமை. காண்பு - காண்டல். காண்பு இல் பெருஞ்சினை எனக் கண் ணழித்துக் கொள்க. பிறவுயிர்கள் காண்டல் இல்லாத எனினுமாம். காண்பு இல் நனந்தலை, கடியுடை நனந்தலை, பெருஞ்சினை நனந்தலை எனத் தனித்தனி கூட்டுக. ஈனுமிடமாகலின் பிறவுயிர் காண்டல் இல் நனந்தலை வேண்டிற்றென்க. கடி - காவல். உயரத்தால் ஏற வொண் ணாமைபற்றி என்பர் பழைய உரையாசிரியர். உயரங்காரணமாகப் பாதுகாப்பிடமாக அமைந்தது என்பது கருத்து. காண்பின்மைக்கும் இது பொருந்தும். அல்குதல் - தங்குதல். ஈண்டு அப் பெடை உயி ருடன் அல்குதற்குக் காரணமான இரை என்க. இரைதரீஇய வேட்டு எழுந்த எருவை; பெடையைப் பிரிதற்கு மான்று எழுந்த எருவை, எனத் தனித்தனி யியைக்க. கழுகினம் பல; அவற்றுள் எருவை என்னும் இனத்திற்கு அடையாளங் கூறுவார் செஞ் செவி எருவை என்றார்.

க - கக: வான்.........அத்தம்

(இ - ள்.) புலவும் புலி - புலானாற்றமுடைய புலியானது; வான் தோய் சிமைய விறல் வரைக் கவாஅன் - ஏனை மலைகளினுங் காட்டில் உயர்ந்து வானத்தைத் தீண்டுகின்ற உச்சியுடைமையால் வெற்றியையுடைய மலையினது பக்கத்திலே; துளங்கு நடைமரை ஆ வலம்படத் தொலைச்சி - அசைந்து நடக்கும் மரையாவினைத் தனது வலப்பக்கத்திலே வீழும்படி தாக்கிக் கொன்று; ஒள் செங்

குருதி உவறி உண்டு அருந்துபு துறந்த - அதன் ஒள்ளிய சிவந்த செந்நீரை ஊற்றிக்குடித்துத் தன் வயிறு நிரப்புதலாலே போகட்டுப் போன; கலவுக்கழி கடுமுடை - மூட்டினின்றும் கழிக்கப்பட்ட மிக்க ஊனை; கொள்ளைமாந்தரின் ஆனாது கவரும் - கள்வர் போன்று ஒழியாது கவர்ந்துகொண்டு போதற்கிடனான; புல் இலை மராஅத்த அகன் சேண் அத்தம் - பொலிவற்ற இலைகளையுடைய மராமரங்களையுடைய அகன்ற நீண்ட வழிகளையுடைய பாலைப்பரப் பின்கண்; என்க.

(வி - ம்.) சிமையம்-குவடு; உச்சி, வான்றோய் சிமையமுடைமை யால் விறலையுடைய வரை என்க. மரை ஒருவகைக் காட்டுக்குதிரை. ஆனென்றமையால்-பெண்மரை என்க. புலி தான் தாக்கிய விலங்கு தனக்கு இடப்பக்கமாக வீழ்ந்தால் அதனைத் தோல்வியாகக் கருதி உண்ணுதொழியும் என்பது ஒரு நூல் வழக்கு; ஆகலின் வலம்படத் தொலைச்சி எனப் புலிக்கும் விறல்படக் கூறினர். உவறுதல் பல்லாற் கடித்து உறத்தல் என்க. பழையவுரையில் ஊற்றி என்பதும் இக் கருத்துடையதேயாம். அருந்துபு என்பது ஆர்ந்து என்பதன் குறுக்கல் விகாரம் என்பது பழைய வுரையாசிரியர் கருத்து. கலவு - என்புகளின் மூட்டுவாய். முடை: ஆகுபெயர். ஊன் என்க. கொள்ளைமாந்தர் - கள்வர். அவ்வூன் எருவைக் குரித்தன்றாகலின் அதனைக் கவரும் கழுகிற்குக் கள்வர் உவமையாயினர்.

கஉ - கஅ : கலந்தரல்...........ஞான்றே

(இ - ள்.) கலந்தரல் உள்ளமொடு கழியக் காட்டிப் பின் நின்று துரக்கும் நெஞ்சம் - நங் காதலிக்கு அணிகலன் கொணர் தலைத் தலைக்கீடாகக் கொண்டு பின்னும் பொருளின் சிறப்பை மிகுதியாக எனக்கு எடுத்துக்காட்டி என் பின்னாக நின்று என்னை உந்துகின்ற என் பேதை நெஞ்சே கேள் !; நெடுஞ் சேண் ஆர் இடை - நின் தூண்டுதற் கிணங்கி யான் பொருளீட்டுதற்கு நம் மாருயிர்க் காதலியைப் பிரிந்து மிகவும் தொலைவுடைய கடத்தற் கரிய அப் பாலை வழியிலே செல்லுங்காலத்தே; கவிர் இதழ் அன்ன காண்பு இன் செவ்வாய் அம் தீம் கிளவி ஆய்இழை மடந்தை - முண்முருக்க மலர்போன்ற காண்டற்கு இனிய சிவந்த வாயினையும் அழகிய இனிய மொழியினையும் தன தியற்கை யழகிற்குப் பொருத்த மாக ஆராய்ந்தெடுத்த அணிகலன்களையும் உடைய அக் காதலி யினுடைய; கொடுங்குழைக்கு அமர்த்த நோக்கம் விலங்கும் ஞானறு - வளைந்த குழையொடு மாறுபட்ட விழிகள் நம்மகக் கண் முனனர்த்தோன்றி நமது செலவினைத் தடுக்கின்ற பொழுது; நின் வாய் வாய்போல் பொய்ம்மொழி எவ்வம் களைமா என் - நீ நின் உள்ளத்துள் சிறிதும் ஆராய்தலின்றி வறிய வாயான்மட்டும் கூறுகின்ற கேட்போர்க்கு மெய்போலத் தோன்றுமிந்தப் பொய்ம்

மொழிகள் யாமெய்தும் துன்பத்தைத் தீர்க்கும் வழியாமோ? இயம்புதி! என்பதாம்.

(வி - ம்.) தன்னெஞ்சத்தின் குறிக்கோள் பொருளீட்டுதலேயாகவும், தான் மருதுடன்படற்பொருட்டுக் காதலிக்கு அணிகலந் தேடி வருதல் வேண்டும் என்னுமொரு கொள்கையை முற்பட வைத்துப் பின்னர்ப் பொருளின் பிற சிறப்பை மிகமிக எடுத்துக்காட்டித் தன்னை அமைந்திராதபடி அந் நெஞ்சம் உந்தித் தள்ளுகின்றது என்கின்றான் தலைவன். இங்ஙனம் நுண்ணிதின் உரை காணமாட்டாது இவற்றிற்கு வேறு கூறுவாருமுளர். நெஞ்சம் - விளி. கேட்கும் பொழுது உண்மை போலத் தோன்றுகின்ற பொய்ம்மொழி என்க. நின்மொழி நீ நின் உள்ளத்தே ஆராய்ந்து துணிந்து கூறுமல் நின் வாயால் மட்டும் பேசப் படுகின்ற பொய்ம்மொழி என்பது தோன்ற நின்வாய் வாய்போற் பொய்ம்மொழி என்றான். இது, வேண்டா கூறி வேண்டியது முடித்தல் என்னும் உத்தி. களைமா - களையும் ஆறு: செய்யுள் விகாரம். இனி "தவிரிதழ்......அமர்த்த நோக்கம்" எனத் தலைவியைத் தலைவன் தன்னகக் கண் முன்னர்க் கொணர்ந்து நிறுத்திப் பேசுதலால், பேராசிரியர் "இன்பத்தை வெறுத்தல்" என்னும் (தொல். மெய்ப். உஉ.) நூற்பாவுரையில் தலைமகனுக்கு "எதிர் பெய்து பரிதல்" என்னும் மெய்ப்பாட்டிற்கு இவ்வழகிய பகுதியை எடுத்துக்காட்டினர்.

இனி, இதனை, கலங்கரல் உள்ளமொடு கழியக் காட்டித் துரக்கும் நெஞ்சமே இதழ் வாய் கிளவி இழை முதலியவற்றையுடைய மடந்தை நோக்கம் ஆரிடை விலங்கு ஞான்று எவ்வம் களையுமாறு என்? என வினைக்க.

(பா - வே.) ௬. சிமையவுயர்வரை; கக. புல்லிலையா அத்த. (௬)

## செய்யுள் ௭

திணை: முல்லை.

துறை; தோழி தலைமகளைப் பருவங்காட்டி வற்புறுத்தியது.

(து - ம்.) அஃதாவது—வினைவயிற்பிரிகின்ற தலைவன் யான் கார்ப் பருவத் தொடக்கத்தே மீண்டுவருவல் அதுகாறும் ஆற்றியிருந்திடுக என்று தேற்றுரை கூறிச் சென்றானாக; தலைவி அவனது பிரிவாற்றாது மிகவும் வருந்தினள். அதுகண்ட தோழி தலைவன் குறிப்பிட்ட கார்ப் பருவ வரவினைத் தலைவிக்குக் காட்டி நம்பெருமான் இன்னே வருவர் நீ வருந்தற்க என்று அவளை வற்புறுத்தியது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "பெறற்கரும் பெரும்பொருள்" என வரும் (தொல்-கற்பி. க) நூற்பாவின்கண் "வகைபட வந்த கிளவி" என்பதனால் அமைத்துக் கொள்க. இதனை "முல்லைக்கு முதலும் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது" என எடுத்துக் காட்டினர் நச்சினார்க்கினியர். (தொல் - அகத்-௩).

முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
விரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப
௫. மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானங்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்த் தன்ன வாங்குவள் பரியப்
௧௦. பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேர
னுவக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
௧௫. நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவி ழலரி னாறு
மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே.

—குறுங்குடி மருதனார்.

(உரை)

கச - கஎ : கறங்கிசை.........படர்ந்தே

(இ - ள்.) ஆய் தொடி அரிவை - அழகிய வளையலையுடைய எம்பெருமாட்டியே கேள் !, இசை கறங்கு விழவின் உறந்தை குணாது - இன்னிசை முழங்குதற்குக் காரணமான திருவிழாக்களையுடைய உறையூரிற்குக் கிழக்கின்கண்ணமைந்த; நெடும் பெருங் குன்றத்து அமன்ற - நெடிய பெரிய மலையிடத்தே அடர்ந்து செழித்த; காந்தள் போது அவிழ் அலரின் நாறும் - காந்தளின் நாளரும்பு விரிந்த புதுப்பூப்போன்று பெரிதும் நறுமணம் கமழ் கின்ற; நின் மாண் நலம் படர்ந்து - நின்னுடைய மாட்சிமைமிக்க பெண்மை நலந்தரும் பேரின்பத்தை நினைந்து; என்க.

(வி - ம்.) இசை கறங்கு விழவின் என மாறுக. உறந்தை - உறையூர். இது சோழமன்னர் தலைநகரமாதலின் இன்னிசை முழக்கத் தோடு விழா நாட்கள் மிக்கிருக்கும் என்க. உறந்தையின் குணாது நெடும்பெருங்குன்றம் என்றது திரிசிராமலையை என்பர் பழையவுரை யாசிரியர். இம் மலை வளமிக்கதாகலினாலும் கடவுட்டன்மையுடைய தாகலினாலும் அதன்கண் காந்தள் அடர்ந்திருக்கும் சிறப்புடையனவாக

வும் இருக்கும் ஆதலின் அதனை விதந்தெடுத்துக் கூறியபடியாம். போது – நாளரும்பு. நாறும் என்பதற்குத் தோன்றும் எனப் பொருள் கொண்டு அரிவையே நெடும் பெருங்குன்றத்துக் காந்தள் மலர்கின்ற நாள்மலர் போன்று புதிதாக மலர்ந்து தோன்றுகின்ற நின் மாண்புடைய நலம் எனினுமாம். நலம்-பெண்மைநலம். (அந் நலத்தைப் பண்டு நுகர்ந்தவனாகலின் அவன் அவ்வின்பத்தை மறந்தமைகுவானல்லன் என்பது குறிப்பு.)

**கசு : உவக்காண்............நாடன்**

(இ - ள்.) குறும்பொறைநாடன் - குறிய மலைகளையுடைய நாட்டினையுடைய நம்பெருமான்; உவக்காண் தோன்றும் - உவ்விடத்தே வந்து தோன்றுவன், நீ வருந்தற்க! என்க.

(வி - ம்.) குறும்பொறை-சிறிய மலை. உவக்காண்-உவ்விடத்தே என இடத்தின் அணிமையைச் சுட்டுமாற்றால் காலவண்மையைச் சுட்டி ஒட்டிநின்றதோர் இடைச்சொல். இதனை, 'உவக்காண் எங் காதலர்' என வருந் திருக்குறளானும் அதற்குப் பரிமேலழகர் கூறும் விளக்கவுரையானும் உணர்க.

**க - எ : முல்லை...........கானம்**

(இ - ள்.) கருவி வானம் - உதோ பார் மின்னல் இடி முதலிய தொகுதிகளையுடைய முகில்; முல்லை வை நுனைதோன்ற - முல்லைக் கொடிகளிலே கூர்த்த நுனையையுடைய அரும்புகள் தோன்றாநிற்பவும்; இல்லமொடு பைங்கால் கொன்றை மெல் பிணி அவிழ - தேற்றா மரங்களினும் பசிய அடியையுடைய கொன்றை மரங்களினும் அரும்புகள் தோன்றித் தமது மெல்லிய கட்டவிழ்ந்து மலராநிற்பவும்; இரும்பு திரித்து அன்ன மா இரு மருப்பின் இரலை பரல் அவல் அடைய தெறிப்ப - இரும்பினைக் காய்ச்சி முறுக்கி விட்டாற் போன்ற கரிய பெரிய கொம்புகளையுடைய இரலைமான்கள் நீர் வேட்கையால் பரற்கற்களையுடைய பள்ளங்களைச் சென்றடையாநிற்பவும் அங்கு அவை நீர் பருகிய மகிழ்ச்சியாலே துள்ளியாடாநிற்பவும்; மலர்ந்த ஞாலம் புலம்பு புறக்கொடுப்ப - விரிந்த இவ் வுலகத்தில் வாழுமுயிர்கள் நீர் பெருமையால் வருந்திய வருத்தம் அவற்றைவிட்டகன்றொழியாநிற்பவும்; கதழ் உறை சிதறி-விரைந்து வீழும் மழைத்துளிகளை வீழ்த்தி; கார் செய்தன்று-கார்ப் பருவத்தைத் தோற்றுவித்துவிட்டது; கானம் கவின் பெறும் - இந்த முல்லை நிலத்திலுள்ள காடுகள் அழகுற்றுத் திகழ்கின்றன; நம்பெருமான் குறித்துப்போன பருவமும் இஃதன்றோ! என்க.

(வி - ம்.) வைந்நுனை – கூர்த்த நுனியையுடைய அரும்பு. இல்லம்-தேற்றாமரம். அரும்பித்தளையவிழ்ந்து மலர என்க. இல்லம், கொன்றை இரண்டும் அவ்வவற்றின் மலர்க்கு ஆகுபெயர். மருப்பின் இரலை என

இயைத்துக் கொள்க. இரலை அவலடையவும் நீருண்டபிறகு நீர் பெற்ற மகிழ்ச்சியால் தெறிப்பவும் என்பது கருத்து. தெறித்தல் – துள்ளுதல். ஞாலம் உயிர்கட்கு ஆகுபெயர். புலம்பு–நீர் பெறுமையாலுற்ற துயர். கதழுறை: வினைத்தொகை. வானம் - முகில். கார் – கார்ப்பருவம்.

அ - கரு : குரங்குளை...........நாடன்

(இ - ள்) குரங்கு உளைப் பொலிந்த கொய்சுவல் புரவி வாங்குவள் நரம்பு ஆர்த்து அன்ன பரிய - வளைந்த தலையாட்டத் திறல் பொலிவுற்றனவும் கத்தரிகையால் கொய்து மட்டஞ் செய்யப் பட்ட பிடரிமயிரினையுடையனவும் ஆகிய குதிரைகள் விரைதற் பொருட்டு வலவன் வலித்திழுக்கின்ற வார்கள் யாழினது நரம்புகள் ஒலித்தாற்போன்று விண்ணென்று ஒலிக்கும்படியாகப் பாய்ந்து செல்லும் செலவினையுடையனவாக; பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த தாது உண் பறவை பேது உறல் அஞ்சி - அத் தேர் வருகின்ற வழியிலுள்ள மலர்ந்த சோலையின்கண் அம் மலர்களின்மேல் தத்தம் காதற்பெடைகளோடு கூடி யுறைகின்ற தேன் உண்ணும் அறுகாற் சிறு பறவைகள் தம் காதற்கூட்டம் கலைந்து வருந்து மென்பதற்கு அஞ்சி; மணிநா ஆர்த்த மாண் வினைத் தேரன் - ஒலி செய்யாவண்ணம் மணிகளின் நாக்களைக் கட்டிய மாட்சிமையுடைய கலைத்தொழிலமைந்த தேரினையுடைய னாய்; குறும்பொறை நாடன் (உவக்காண் தோன்றும் - குறிய மலைகளையுடைய நாட்டையுடைய நம்பெருமான் உந்தப்பொழுதே உங்கே வந்து தோன்றுவன்காண்;) என்பதாம்.

(வி – ம்) குரங்குதல் – வளைதல். தலைவன் அதுகாறும் வந்திலா மைக்குக் காரணம் கூறுவாள் அவன் வருகின்ற வழிமருங்கே துணை யொடு வதியும் வண்டுமுதலிய சிற்றுயிர்களும் பேதுறுவண்ணம் கூர்ந்து நோக்கிக் குதிரைகளின் செலவடக்கி மணிநாவார்த்து வரு கின்றமை கூறினாள். இதனால் அவனுடைய அன்பின் பெருக்கத்தையும் அறிவின் சிறப்பினையும் விதந்து குறிப்பாக இத்தகைய பேரன்பும் பேரறிவுமுடையவன் அவனை இன்றியமையா நின்னைப் பேதுறச் செய்குவானல்லன்; இன்னே வருகுவன் என்று தலைவியை ஆற்றுவித்தா ளாதலறிக. இனி, ஈண்டு,

> "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
> தஞ்ச லறிவார் தொழில்" (குறள்–௪௨௮)

எனவும்,

> "அறிவினா லாகுவ துண்டோ பிறிதினோய்
> தந்நோய்போற் போற்றாக் கடை" (குறள்–௩௧௫)

எனவும் வருந் திருக்குறள்களையும் நினைக.

தலைவன், வண்டுகட்குச் செவியறிவின்மையறிந்தும் அவை பேதுறும் என்று அஞ்சினன் என்றது தலைவனது அன்புமடம் தோழி கூறியவாறும். என்னை உடாஅ போராஅ தாதலறிந்தும் மயிலுக்குப் படாஅமீந்த கொடைமடம் போன்று இம் மடமும் தலைவனுடைய அன்புப்பெருக்கத்தையே உணர்த்துவதாம் என்க. இனி, இது தோழி தலைவியை ஆற்றுதற் பொருட்டுக் கூறுகின்ற படைத்து மொழிக் கிளவியாகலான் அவள் தன் பேதைமையாலிங்ஙனம் கூறினள் எனினுமாம். இந்நுணுக்க முணராது, நச்சினார்க்கினியர் சிந்தாமணி யுரையில் இச் செய்யுளில் வரும் பூத்த.........தேரன் என்பதனை எடுத்துக்காட்டி வண்டிற்குச் செவியறி வுண்டெனமயங்கிக் கூறுவாராயினர்.

இனி, இச்செய்யுள் மொழிமாற்றுப் பொருள் கோளுக்கு எடுத்துக் காட்டாகுந் தன்மைத்து ஆகலால் ஏற்ற பெற்றி மொழிகளை மாற்றி யமைத்து அழகுறப் பொருள் காண்க.

இன்னும் பேராசிரியர் தமது தொல்காப்பிய உரையில் (செய்யுளியல், சூ-௧0௪) (நோக்கு என்னும்) செய்யுளுறுப்பிற்கு இச் செய்யுளை எடுத்துக்காட்டி இதன் நுணுக்கங்களை நன்கு விரித்துக் கூறியிருத்தலையும் அவ்வுரையிற் கண்டுணர்க

இனி இதனை, அரிவை வானம் தோன்ற அவிழத் தெரிப்பப் புறக் கொடுப்ப உறை சிதறிக் கார் செய்தன்று இஃதே அவன்குறித்த பருவமாதலால் துணையொடு வதிந்த பறவை பேதுறல் அஞ்சி ஆர்த்த தேரன் நாடன் நின்நலம் படர்ந்து தோன்றும் வருந்தேல் என இயைக்க.

(பா-வே.) ௧. வைகநுதி; ௫. புறங்கொடுப்ப; ௯. நரம்பார்ப் பன்ன; ௯௨. யாத்த, தேரவன்; ௧௩. உதுக்காண். (௪)

## செய்யுள் (௫)

**திணை:** பாலை.

**துறை:** பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.

**(து - ம்.)** அஃதாவது :— வினையே ஆடவர்க் குயிர் என்பது பற்றித் தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று பொருளீட்டி வரக் கருதியவன் அவ்வாறு நாம் பிரிவோமாயின் எல்லையற்ற பேரன்புடைய நங்காதலி உயிர்வாழாள் என்றுணர்ந்து அவள் தன்மையைத் தன்னெஞ்சிற்கு எடுத்துக்கூறிச் செலவுதவிர்ந்தது என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு "ஒன்றாத்தமரினும்" எனவரும் நூற்பாவின் கண் (தொல்-அகத்-௪௧) 'அன்பின தகலமு மகற்சிய தருமையும் ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும்" எனவரும் விதிகொள்க.

இனி, செலவு அழுங்குவதும் தலைவியை ஆற்றுவித்துப் பிரிதற் பொருட்டாகலின் பிரிதனிமித்தமாய்ப் பாலைத்திணையே ஆகும். இதனை தொல்-கற்பி-௪௪ ஆம் நூற்பாவினானுணர்ந்து கொள்க.

அளிநிலை பொறாஅ தமரிய முகத்தள்
விளிநிலை கொள்ளா டமியண் மென்மேல
நலமிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக்
குறுக வந்துதன் கூரெயிறு தோன்ற
ரு. வறிதகத் தெழுந்த வாயன் முறுவலள்
கண்ணிய துணரா வளவை யொண்ணுதல்
வினைதலைப் படுதல் செல்லா நினைவுடன்
முளிந்த வோமை முதையலங் காட்டுப்
பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
க0. மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப
வுதிர்வன படூஉங் கதிர்தெறு கவாஅன்
மாய்த்த போல மழுகுநுனை தோற்றிப்
பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்
விரனுதி சிதைக்கு நிரைநிலை யதர
கரு. பரன்முரம் பாகிய பயமில் கான
மிறப்ப வெண்ணுதி ராயி னறத்தா
றன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி
யன்ன வாக வென்னுநள் போல
முன்னங் காட்டி முகத்தி னுரையா
உ0. வோவச் செய்தியி னொன்றுநினைந் தொற்றிப்
பாவை மாய்த்த பனிநீர் நோக்கமோ
டாகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர் பயந்த துணையமை பிணையன்
மோயின ளுயிர்த்த காலை மாமலர்
உரு. மணியுரு விழந்த வணியழி தோற்றங்
கண்டே கடிந்தனஞ் செலவே யொண்டொடி
யுழைய மாகவு மினைவோள்
பிழையலண் மாதோ பிரிதுநா மெனினே.

—பாலை பாடிய பெருங்கடுங் கோ

(உரை)

கூ - எ : கண்ணிய.........நினைவுடன்

*(இ - ள்.) ஒள் நுதல் கண்ணியது உணரா அளவை - நெஞ்சமே! ஒள்ளிய நெற்றியையுடைய நம்மாருயிர்க் காதலி;*

தன்னை யான் மிகுதியாகப் பாராட்டிய தனாலே யான் பொருள்வயிற் பிரியக் கருதியிருப்பதனை உணர்ந்துகொண்டவளாகிலே; வினை தலைப்படுதல் செல்லா நினைவுடன் - யான் அவ்வாறு பொருளீட்டு தலின்கண் முயல்வது நடைபெறாவண்ணம் தடுக்கும் கருத்தோடு என்க.

(வி - ம்.) யான் வழக்கம் போலன்றி மிகையாக அளிசெய்தமை யால் யான் வினைவயிற் பிரியக் கருதுவதனை அவள் அறிந்தனள் என்பது கருத்து. தலைவியைப் பிரியக் கருதுந்தலைவன் தன் ஆற்றாமை காரணமாக மிகுதியாக அவளைப் பாராட்டுதல் இயல்பு. இதனை,

> "காழ்விரி வகையார மீவரு மிளமுலை
> போழ்திடைப் படாஅமல் முயங்கியும் அமையார் என்
> தாழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர்
> சூழ்வதை யெவன்கொல்? அறியே னென்னும்"

என்றற்றொடக்கத்துத் தாழிசை மூன்றனும் அறிக. (கலித்: பாலை-௧).

யான் கண்ணிய வினையை யான் மேற்கொள்ளாவாறு செய்யும் நினைவுடன் என்க.

௧ - ௫ : அளிநிலை............முறுவலள்

(இ - ள்.) அளிநிலை பொறாஅது அமரிய முகத்தள் - யான் அவ்வாறு மிகைபடத் தன்னைப் பாராட்டுகின்ற அந்நிலையினைப் பொறுக்கமாட்டாமைக்கியன்ற மெய்ப்பாடு பொருந்திய முகத்தை யுடையளாய்; விளிநிலை கொள்ளாள் - யான் தன்னை அனபுடன் அழைத்தற்கியன்ற தொரு சூழ்நிலையைக் கொள்ளாதவளுமாய்; தமியள் - தன்னுசாஅத்துணைத்தோழியோடும் கூடிவாராமல் தமியளாக; மென் மெல நலம் மிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக் குறுக வந்து - இயல்பாக மெல்ல இயங்கும் அழகு மிக்க சிவந்த தன் அடிகளை நிலத்தில் சுவடுபடும்படி இட்டு விரைந்து வந்து என்னையணுகி; தன் கூர் எயிறு தோன்ற வறிது அகத்து எழுந்த வாய்அல் முறுவலள் - பண்டு எயிறு தோன்றாமல் முறுவலித்து நகுந் தன்னியல்புக்கு மாறாகத் தன்னுடைய கூர்த்த பற்கள் தோன்றுமாறு சிறிது தன்னிடத்தே தோன்றிய பொய் யாகிய நகைப்பினையுடையளாய் என்னைநோக்கி என்க.

(வி - ம்.) பொறுஅது-பொறுமைக்கியன்ற மெய்ப்பாடு; அஃதாவது-வெறுப்புக்குணம் முகத்திற் றோன்றுதல். அமரிய-அமர்ந்த விளிநிலை-தான் அன்புடன் அழைத்தற் கேற்ற சூழ்நிலையைத் தான் மேற்கொண் டிருத்தல். தமியள் என்பதற்கு நாண் முதலானகுணங்கள் ஒழியத் தானே யாதல் என்பர் பழையவுரையாசிரியர். இது நுண்ணுரைபோலத் தோன்றினும் பொருந்தாவுரையேயாகும்.* என்னை? பண்டு தன்பால் ஒன்றை வினவ வேண்டின் உசாஅத்துணைத்தோழியோடு வந்து அவளை

வினவிப்பவள் இப்பொழுது அத் தோழியை உடனழைத்துக்கொடு வந்திலன் தானே தமியளாய் வந்தாள் என்பதே தலைவன் கருத்தாதல் ஏனையவற்றோடு இயைய நோக்குவார்க்குப் புலனும். மென்மெல இயங்கும் நலம் என ஒரு சொல் வருவித்துக் கொள்க. நிலம் வடுக் கொள என்பதன் ஈற்றகரம் நெடிலாகிச் செய்யுளிசை நிறைப்ப அளபெடுத்துக் கொளாஅ என நின்றது. வடு — வடு. வறிது - சிறிது. வாயல் முறுவல் - பொய்யாக நகுதல்.

அ - கசு : முளிந்த...........எண்ணுதிராயின்

(இ - ள்.) முளிந்த ஓமை முதையல் (அம்) காட்டு-காய்ந்து உலறிய ஓமை மரங்களையுடைய முதிர்ந்த காட்டின்கண்; நெல்லி பளிங்கு (அத்து) அன்ன பல்காய் மோட்டு இரும் பாறை ஈட்டு வட்டு ஏய்ப்ப உதிர்வன படூஉம்-நெல்லியினது பளிங்கினை ஒத்த பலவாகிய காய்கள் உயர்ந்த பாறை நிலத்தின் மேல் ஓரிடத்தே சேர்த்துவைக்கப்பட்ட வட்டுக் காய்களைப் போல உதிர்ந்து கிடக்கின்ற; கதிர்தெறு கவாஅன்-ஞாயிற்றினது கதிராகிய வெயில் சுடுகின்ற மலைப் பக்கத்தில்; மாய்த்தபோல மழுகு நுனைதோற்றி — அராவப்பட்டவை போன்று தேய்ந்த நுனிகளை மேலே தோன்றும் படி செய்து; பாத்தி அன்ன கூர்ங் குடுமிக்கல்-பதித்துவைத்தாற் போன்ற கூர்த்த நுனியையுடைய பரற்கற்கள்; விரல் நுதி சிதைக்கும் நிரைநிலை அதர-ஆறுசெல்வோருடைய கால் விரலின் நுனியைச் சிதைக்கும்படி நிரல்பட அமைந்துள்ள நிலைமையினையுடைய வழிகளையுடைய; பரல்முரம்பு ஆகிய பயம் இல் கானம்-பரலாலியன்ற வன்னிலமாகிய பயனில்லாத காட்டினை; இறப்ப எண்ணுதிராயின் - என்னைக் கைவிட்டுக் கடந்து போகக் கருதுவீராயின், என்க.

(வி — ரை.) முளிதல்-காய்தல். முதையல்—முதுமை. அம்: சாரியை. பளிங்கத்து; அத்து: சாரியை. நெல்லி-பாலைக் கருப்பொருள். ஈட்டுதல்-ஓரிடத்தே சேர்த்துவைத்தல். உதிர்வனபடூஉம் கவாஅன், கதிர்தெறும் கவான் எனக்கூட்டுக. பாத்தியன்ன — பதித்துவைத்தாற் போன்ற.

கசு-கஎ : அறத்தாறு...........உரையா

(இ - ள்.) அறத்து ஆறு அன்று எனத் தொன்றுபடு கிளவி அன்ன ஆக என்னுநள் போல-யான் நின்னைப் பிரிகிலேன் பிரிவது அறநெறியும் அன்று எனப் பண்டொரு காலத்தே நும் வாயிற் பிறந்த மொழி அம் மொழியளவாகவே அழிந்தொழிவதாக! என்று எனக்குக் கூறுபவள் போன்று; முகத்தின் முன்னம்காட்டி உரையா - தன் முகத்தின்கண் குறிப்புக் காட்டி அறிவித்து; என்க.

(வி - ம்.) அறத்தாறு அன்று என மொழிந்த தொன்றுபடு கிளவி என்றது தலைவன் இயற்கைப் புணர்ச்சி எய்திய பொழுது இவன் நம்மைப் பிரிவனோ என்று ஐயுற்று நின்றதனை உணர்ந்த தலைவன் அவளைத் தேற்றுதற் பொருட்டு அன்புடையோய் யான் நின்னை ஒரு காலத்தும் பிரிகிலேன் காண், அன்புடையாரைப் பிரிவது அறத்தாறும் அன்று காண்! என்று கூறியதனை. முன்னம்-குறிப்பு. முகத்தின் உரையா-முகக்குறிப்பினாலறிவித்து.

உ௦ - உ௬ : ஓவச் செய்தியின்............சேலவே

(இ - ள்.) ஓவச் செய்தியின் ஒன்று நினைந்து ஒற்றி - ஓவியத்தின் முகத்திற் காணப்படும் அதன் உளக் குறிப்புப் போன்று என் முகத்திலே மெய்ப்பாடு மாத்திரையாகத் தோன்றும் என் கருத்தினைக் காணக் கருதி யான் அறியா வண்ணம் ஆராய்ந்துணர்ந்து; பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு - அதனை உணர்ந்தவளவிலே தன் கண்ணிற் பெருகிப் பாவையை மறைத்துத் ததும்புகின்ற தன் நடுக்கத்திற்குக் காரணமான துன்பக் கண்ணீரோடு பொருந்திய நோக்கத்தோடே; ஆகத்தொடுக்கிய புதல்வன் புல்தலை-தன் மார்பிலே அணைத்த தன் மகனுடைய புல்லிய தலையிற் சூடப்பட்ட; தூ நீர் பயந்த துணை அமைபிணையல் - தூய நீர் தோற்றுவித்த இரட்டையாக அமையும்படி தொடுத்த செங்கழுநீர் மலர் மாலையினை; மோயினள் உயிர்த்த காலை - மோந்து நெடுமூச் செறிந்த பொழுது; மாமலர் மணிஉரு இழந்த அணி அழிதோற்றம் - அம் மாலையின் கண்ணமைந்த பெரிய மலர் வெப்பத்தாற் கருகி மாணிக்கமணி போன்ற தன்னிறத்தை இழந்தமைக்குக் காரணமான அவளுடைய அழகெலாம் அழிந்த தோற்றத்தை யாம்; கண்டே கடிந்தனம் செலவு - கண்கூடாகக் கண்டமையாலே தான் இப்பொழுது அவளைப் பிரிந்து போதலைத் தவிர்வேமாயினேம்; என்க

(வி - ம்.) ஓவம்-ஓவியம். அதன் செய்தியாவது-அதன் முகத்திற்றோன்றும் மெய்ப்பாட்டினால் மட்டும் அதன் உள்ள நிகழ்ச்சி காண்போர்க்குப் புலனாதல். ஈண்டு அவள் என்பிரிவை என் முகத்திற்றோன்றிய மெய்ப்பாட்டினால் உணர்ந்தனள் என்பது தலைவன் கருத்து. ஒன்று என்றது பிரிவும் பிரியாமையும் ஆகிய இரண்டனுள் ஒன்றாகிய என் கருத்தினை என்றவாறு. ஒற்றி-யான் அறியாவண்ணம் என் முகக்குறிப்பினால் என் கருத்தினை அறிந்துகொண்டு. அஃதாவது யான் ஒருதலையாகப் பிரிகுவேன் என்பதைக் குறிப்பினா லறிந்துகொண்டு என்றவாறு. பாவை-கண்ணிற் பாவை. மாய்த்தல்-மறைத்தல். பனிநீர்-துன்பக் கண்ணீர். பனி:ஆகுபெயர். பிணையல்-செங்கழுநீர்மாலை. மோயினள்: முற்றெச்சம். மணி-மாணிக்கமணி. இழந்த தோற்றம்-இழப்பதற்குக் காரணமான அவள் தோற்றம், அணியழி அவள் தோற்றம் எனத் தனித்தனி இயைத்துக் கொள்க. தோற்றம்-காட்சி.

உசு - உஎ: ஒண்டொடி.............எனினே

(இ - ள்.) உழையம் ஆகவும் - ஆதலால் நெஞ்சமே யாம் அவள் பக்கத்திலே இருப்போமாகவும்; இனைவோள் - இவ்வாறு நாம் பிரிகுவம் என்று நினையுமளவிலே வருந்துமியல்புடையளாகிய; ஒள் தொடி - ஒள்ளிய வளையலையுடைய நங் காதலி; நாம் பிரிதும் எனின் - யாம் கருதியவாறே இவளைப் பிரிந்து செல்வேமாயின், பிழையலள் - உயிர் வாழ்கிலள் என்பது தேற்றங் காண்! என்பதாம்.

இதனை, அளிநிலை பொருது அமரிய முகத்தள் குறுகவந்து கானம் இறப்ப எண்ணுதிராயின் கிளவி அன்னவாக என்னுநள் போலக் காட்டி உரையா உயிர்த்தகாலை மலர் உருவிழந்த அவள் தோற்றங் கண்டு நாம் பிரிதும் எனின் பிழையலள் எனச் செலவு கடிந்தனம் என இயைத்திடுக.

(பா - வே.) உ. விளிநிலை கேளாடமி, மேன்மேனலமிகு; கக. வெண்ணினிராயி. உ0. ஏற்றி. (இ)

## செய்யுள் கூ

**திணை :** மருதம்

**துறை :** பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகற்குக் கிழத்தி கூறியது.

(து - ம்.) அஃதாவது-தலைவன் பரத்தையரோடு சென்று நீராட்டயர்ந்து மீண்டு வந்து தலைவியைப் பாராட்டுங்கால் தலைவி அவன் செயலைத் தன் பாங்காயினோர் கூறக் கேட்டறிந்திருந்தமையால் அவனோடு ஊடிக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "அவனறிவு ஆற்ற அறியு மாகலின்" என வரும் (தொல்-கற்பு-கூ) நூற்பாவின்கண் "புகன்ற வுள்ளமொடு புதுவோர் சாயற்ககன்ற கிழவனைப் புலம்புநனி காட்டி, யியன்ற நெஞ்சந் தலைப்பெயத் தருக்கி யெதிர்பெய்து மறுத்த வீரத்து மருங்கினும்" எனவரும் விதிகொள்க.

அரிபெய் சிலம்பி னாம்பலந் தொடலை
யரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை
யிழையணி பணைத்தோ ளையை தந்தை
மழைவளந் தரூஉ மாவண் டித்தன்
பிண்ட நெல்லி னுறந்தை யாங்கட்
கழைநிலை பெறூஅக் காவிரி நீத்தங்
குழைமா னொள்ளிழை நீவெய் யோளொடு
வேழ வெண்புணை தழீஇப் பூழியர்
கயனா டியானையின் முகனமர்ந் தாஅங்

௧௦. கேங்தெழி லாகத்துப் பூந்தார் குழைய
நெருந லாடினை புனலே யின்றுவந்
தாக வனமுலை யரும்பிய சுணங்கின்
மாசில் கற்பின் புதல்வன் றாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம்
௧௫. முதுமை யெள்ளலஃ தமைகுந் தில்ல
சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்
தந்தூம்பு வள்ளை யாய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்
௨௦. பல்வேன் மத்தி கழாஅ ரன்னவெம்
மிளமை சென்று தவத்தொல் லஃதே
யினிமையெவன் செய்வது பொய்ம்மொழி யெமக்கே.

—பரணர்.

(உரை)

௧ - ௫ : அரிபெய்............ஆங்கண்

(இ - ள்.) அரிபெய் சிலம்பின் ஆம்பல் அம் தொடலை அரம் போழ் அவ்வளைப்பொலிந்த முன்கை இழை அணி பணைத்தோள் ஐயை தந்தை - மணிகள் உள்ளிடப்பட்ட சிலம்பினையும் ஆம்பல் மலராற் றொடுக்கப்பட்ட மாலையினையும் அரத்தாலரிந்தியற்றப் பட்ட அழகிய வளையலோடு பொலிவு பெற்றுள்ள முன்கைகளையும் பொன்மணி முதலியவற்றாலியன்ற அணிகலன்களையுடைய மூங்கில் போன்ற தோள்களையுமுடைய கற்புடைமையாற் புகழ்பெற்ற ஐயை என்பாளின் தந்தையாகிய; மா வண் தித்தன்-சிறந்த வள்ளன்மை யுடைய தித்தன் என்னும் மன்னனுக்குரிய; மழை வளந்தரும் பிண்டநெல்லின் - மழைவளம் தோற்றுவித்த குவியலாகிய நெல் லுடைமையாற் சிறந்த; உறந்தை ஆங்கண் - உறையூர் என்னும் அவ்விடத்தே என்க.

(வி - ம்.) அரி - சிலம்பினுள் ஒலித்தற் பொருட்டிடப்படும் மணி. ஆம்பல் - ஒருவகை நீர்ப்பூ. அரம் - வாளரம். பணைத்தோள் - பருத்த தோளுமாம். ஐயை கற்புடைமையா லுலகறி புகழ்படைத்தவளாகலின் அவளுடைய தந்தை என்று தித்தனைச் சிறப்பித்தபடியாம். மழை வளந்தரும் ஐயை எனக் கூட்டினுமாம். மழைபோன்று பொருள் வழங்கும் மாவண் தித்தன் எனினுமாம். பிண்டம்-குவியல். 'சோறுடை சோறுடைத்து' என்பதற்கிணங்கச் சோழர் தலைநகராகிய உறந்தை யை நெல்லுடைமை கூறிச் சிறப்பித்திருத்தல் உணர்க.

௬ - ௧௧ : கழை..............ஆடினை புனலே

(இ - ள்.) கழை நிலை பெறாஅ காவிரி நீத்தம்-ஓடக்கோலும் நிலைபெறுமைக்குக் காரணமான காவிரிப் பேரியாற்றின் வெள்ளத்தின்கண்; நெருநல் - நேற்று; நீ மாண் குழை ஒள் இழை வெய்யோளொடு - நீ மாட்சிமைமிக்க குழை முதலிய ஒள்ளிய அணிகலன்களையுடைய நின்னால் விரும்பப்பட்ட பரத்தையோடு; வேழ வெள் புணை தழீஇ - வேழக்கரும்பாலியன்ற வெள்ளிய தெப்பத்தைத் தழுவிக்கொண்டு; பூழியர் கயன் ஆடு யானையின் - பூழி நாட்டாருடைய குளத்தின்கட் பிடியோடு சென்று நீராடுகின்ற களிற்றியானை போன்று; முகன் அமர்ந்து - முகமலர்ந்து, ஆங்கு - அவ்விடத்தே; ஏந்து எழில் ஆகத்துப் பூந்தார் குழைய - நினது உயர்ந்த அழகுடைய மார்பிலணிந்த பூமாலை குழையும்படி, புனல் ஆடினை - நீராடினை அல்லையோ?

(வி - ம்.) கழை-மூங்கிலாகிய ஓடக்கோல். அவளுடைய மாண்புக்குக் காரணம் அவளுடைய அணிகலன்களே என்பாள் மாண்குழை ஒள் இழை வெய்யோள் என்றாள். நின்னை அவள் விரும்புவாளல்லள் என்பது குறிப்பாகத் தோன்றுமாறு நீ வெய்யோள் என்றாள். வெய்யோள் - விரும்பப்பட்டவள். வேழம் - ஒருவகைக் கரும்பு. வெண்புணை என்றமையால் வேழக்கரும்பு வெண்ணிறமுடையது என்பது பெற்றாம். பூழியர் - பூழி நாட்டினர்; பாண்டியர் எனினுமாம். பூழியர் யானை; கயனாடும் யானை எனத் தனித்தனி இயையும். நீ வெய்யோளொடு ஆடினை என்றமையால் யானை களிற்றியானையின் மேற்று. பிடியோடாடும் களிற்றியானை என்பது கருத்தாயிற்று.

ஏந்தெழில் ஆகத்துப் பூந்தார் குழைய ஆடினை என்றது அப் பரத்தையினது ஆகத்து அழுந்தி நின் பூந்தார் குழைய ஆடினை என்றவாறுமாம். முகத்தான் விரும்பி அப் பரத்தையை நோக்கிப் பூந்தார் குழைய ஆடினை என்றாளுமாம். ஈண்டுத் தலைவி கூற்று நின் விருப்பமெல்லாம் பரத்தையர் பாலதாம். எம்மைச் சிறிதும் விரும்புகின்றிலை எனத் தலைவி ஊடினமை புலப்படுத்து நிற்றலுணர்க.

௧௧ - ௧௫ : இன்றுவந்து.........தில்ல

(இ - ள்.) இன்று வந்து-இவ்வாறு பெரிதும் பரத்தையர் கேண்மையுடைய நீ தூயைபோல இற்றைநாள் இங்கு வந்து; சாயினை ஆக வனமுலை அரும்பிய சுணங்கின் மாசு இல் கற்பின் புதல்வன் தாய் என மாயப் பொய்ம் மொழி பயிற்றி - எம்மைப் பணிந்து "மார்பின்கண்ணவாகிய அழகிய முலையின்மேல் அழகிய தேமலையுடைய குற்றமற்ற கற்பினையுடைய நம் மருமம் பேறல் மகனுக்குத் தாயே" என்று எம்மைப் பாராட்டுவாய்போல வஞ்சகமாகப் பொய்ம் மொழிகள் பல பலகாலுங் கூறி; எம் முதுமை எள்ளல் - எமது முதுமையைச் சுட்டி எம்மை இகழாதே கொள்;

அஃது அமைகும் - அம் முதுமைக்கு யாம் அமைவோம்; நாணுவே மல்லேம்; என்க.

(வி - ம்.) ஆகம் - மார்பு. சுணங்கின் தாய் கற்பின் தாய் புதல்வன் தாய், எனத் தனித்தனி கூட்டுக. ஆக வன முலை அரும்பிய சுணங்கின் தாய் என்றது எழில் நலம் பாராட்டியது. கற்பின் தாய் என்றது குண நலம் பாராட்டியது; புதல்வன் தாய் என்றது உரிமைச் சிறப்புப் பாராட்டியது என்க. தாய் என்றமையால் தலைவி நீ எம் முதுமையை எள்ளா நின்றனை என்கின்றான். மாயம் சூண்டு வஞ்சகம். அமைகும் : தன்மைப் பன்மை. அமைவோம் என்றது அதுபற்றி யாம் நாணுவே மல்லேம் என்றவாறு.

இல் - விழைவு குறித்து நின்றது. எனவே யாம் அத்தாய்மைத் தன்மையையே பெரிதும் விரும்புகின்றோங்காண் என்றானாயிற்று.

௧௬ - ௨௨ : சுடர்..............எமக்கே

(இ - ள்.) சுடர்ப் பூந்தாமரை நீர் முதிர் பழனத்து - நெருப்பின் பிழம்புகள் போன்ற அழகிய தாமரை மலர்களையுடைய நீர் மிக்க பொது நிலத்தின்கண் படர்ந்த; அம் தாம்பு வள்ளை ஆய் கொடிமயக்கி - அழகிய உட்டுளை பொருந்திய வள்ளையினது நுண்ணிய கொடிகளை உழக்கித் திரிந்து; வாளை மேய்ந்த வள் எயிற்று நீர் நாய் - வாளைமீனைப் பற்றித் தின்ற கூர்த்த பற்களையுடைய நீர்நாயானது; முள் அரைப் பிரம்பின் மூது அரில் செறியும் - முட்கள் பொருந்திய அடிப்பகுதியையுடைய பிரம்பினது பழைய கொடிப்பிணக்கத்திறாடு புகுந்துறைதற்கிடனான; பல் வேல் மத்தி - பலவாகிய வேற்படைகளையுடைய மத்தி என்னும் வேந்தனுடைய; கழாஅர் அன்ன - கழாஅர் என்னும் மூதூரை ஒத்த; எம் இளமை - ஐம்புலவின்பங்களும் நிரம்பத் தருகின்ற எம்முடைய இளமையானது; சென்று தவத் தொல்லஃது - எம்மைக் கைவிட்டுச் சென்று மிகவும் பழையதாயிற்று; எமக்கு பொய்ம்மொழி செய்வது இனிமை எவன் - ஆகவே எமக்கு நின் மாட்டுப் பொய்ம்மொழி செய்வதற்கியன்ற இன்பம் யாதோ? கூறுதி? என்பதாம்.

(வி - ம்.) சுடர் - நெருப்பு. நெருப்புப்பிழம்புபோன்ற தாமரை மலர். தாமரை : ஆகுபெயர். பூந்தாமரை - அழகிய தாமரைமலர். பழனம் - ஊர்ப் பொதுநிலம் - இஃதுள்ளுறைக்குப் பரத்தையர் சேரிக் குவமை என்க. வள்ளைக்கொடி பரத்தையர்க்குப் பாங்காயினோர்க் குவமை. ஆய் – நுண்ணிய. வாளை - இழிதகைமையுடைய பரத்தைக் குவமை. பிரம்பின் மூதரில் - தலைவியின் முதுமைக்குவமை. தொல் லஃதே என்புழி ஆய்தம் விரித்தல் விகாரம்.

இனி இதன்கண்டங்கிய உள்ளுறையை "நீர் நாய் வாளைக்குக் காவலாகிய வள்ளையினது நிலையை நெகிழ்த்து, இழிந்ததாகிய வாளையை நுகர்ந்து பிரம்பாகிய மூதிய தூற்றிலே தங்கினாற்போல

நீயும் பரத்தையர்க்குக் காவலாகிய தாய் முதலாயினரது நிலைமையை நெகிழ்த்துக் குலமகளிரல்லாத விலைமகளிரை நுகர்ந்து முன்பு நுமக்குண்டாகிய எங்கள் பழமையைப் பற்ற ஒருபயன் கருதாது தங்குதன் மாத்திரத்திற்கு எம்மில்லில் வந்தீர் என்றுளாம்'' எனப் பழைய வுரையாசிரியர் கூறுமாற்றால் உணர்க.

இனி இதனை, "நீ வெய்யோளொடு நெருநல் காவிரி நீத்தத்து முகன் அமர்ந்து குழையப்புனலாடினை. இன்று தூயோய் போல வந்து சாயினை! தாய் எனப் பொய்ம்மொழி பயிற்றி எம்முதுமை எள்ளல்; அஃது அமைகும்; எம்மிளமை சென்று தவத் தொல்லஃது; எமக்கு நின் பொய்ம்மொழி செய்வதாகிய இனிமை யாது? என இயைபு காண்க. (சு)

## செய்யுள் எ

**திணை :** பாலை.

**துறை :** மகட் போக்கிய செவிலித்தாய் பின் சென்று தான் கானகத்தே கண்டதோர் மகளைக் கண்டு சொல்லியது; நவ்விப் பிணைக் கண்டு சொல்லியதூஉமாம்.

(து – ம்.) அஃதாவது – தலைவன் தலைவியை உடன் கொண்டு அவள் தமரறியாமற் சென்றமையால் வழிநாள் தலைவியைக் காணாமல் வருந்திய செவிலித்தாய் அவர்தம் மடிச்சுவடுபற்றிப் பின் தொடர்ந்து செல்பவள் தன்னெதிர்ப்பட்ட குறமகளைக் கண்டு வினவியது (நவ்விப் பிணைக்கண்டு சொல்லியதெனக் கொண்டு அதற்கியையக் கூறுவாருமுளர்) என்றவாறு.

(இ ம்.) இதனை "எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே'' என வரும் (தொல். அகத்திணையியல் – சஉ) நூற்பாவின்கண் அமைத்துக் கொள்க. (ஆசிரியர் நச்சினார்க்கினியரும் இந்நூற்பாவின்கண் செவிலி கூற்றிற்கு இச் செய்யுளை எடுத்துக்காட்டினார்.)

முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின
தலைமுடி சான்ற தண்டழை யுடையை
யலமர லாயமொ டியாங்கணும் படாஅன்
மூப்புடை முதுபதி தாக்கணங் குடைய
ரு. காப்பும் பூண்டிசிற் கடையும் போகலை
பேதை யல்லை மேதையங் குறுமகள்
பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென
வொண்சுடர் நல்லி லருங்கடி நீவித்
தன்சிதை வறித லஞ்சி யின்சிலை
கo. யேறுடை யினத்த நாறுயிர் நவ்வி
வலைகாண் பிணையிற் போகி யீங்கோர்
தொலைவில் வெள்வேல் விடலையொ டென்மக

னிச்சுரம் படர்தந் தோளே யாயிடை
யத்தக் கள்வ ராதொழு வறுத்தெனப்
கரு. பிறபடு பூசலின் வழிவழி யோடி
மெய்த்தலைப் படுதல் செல்லே னித்தலை
நின்னொடு வினவல் கேளாய் பொன்னொடு
புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி
யொலிக்குழைச் செயலை யுடைமா ணல்கு
உ0. லாய்சுளைப் பலவின் மேய்கலை யுதிர்த்த
துய்த்தலை வெண்காழ் பெறூஉங்
கற்கெழு சிறுகுடிக் கானவன் மகளே.

—கயமனார்.

(உரை)

கசு - உஉ: இத்தலை.........கானவன் மகளே

(இ - ள்.) பொன்னொடு புலிப்பல் கோத்த புலம்பு மணித் தாலி - பொன்னாலியற்றி அதனொடு புலிப்பல்லையும் கோத்த தனி மணி பதித்த தாலியினையும்; ஒலிகுழைச் செயலை உடை மாண் அல்குல் - தழைத்த அசோகந் தளிராற் புனைந்த உடையினால் அழகு மாண்புறாநின்ற திகழும் அல்குலினையும் உடையையாய்; மேய்கலை பல ஆய் இன சுளை உதிர்த்த - இரை தேடுகின்ற முசுக்கலைகள் பலாக் கனியின்கண் ஆராய்ந்தெடுத்த சுளைகளினின்றும் உதிர்த்துப் போகட்ட; துய்த்தலை வெண்காழ் பெறூஉம் - ஆர்க்கென்னும் உறுப்பைத் தலையிலேயுடைய வெள்ளிய விதையை எளிதாகப் பொறுக்கி எடுக்கின்ற; கல்கெழு சிறுகுடி கானவன் மகளே - மலையிலமைந்த சிறுகுடியில் வாழ்கின்ற குறமகளே; இத்தலை நின்னொடு வினவல் கேளாய் - இவ்விடத்தே யான் நின்னை வினவி அறியற் பாலதொன்றுடையேன் அதனைக் கேட்பாயாக! என்க.

(வி - ம்.) பொன்னொடு...மகளே! என்னுந் துணையும் செவிலி தான் எதிரே கண்ட கானவன் மகளியல்பு கூறி விளித்தவாறாம். செவிலி மகளைத்தேடிச் செல்பவள் தான் வாழுகின்ற வளமிக்க குறிஞ்சி நிலத் தெல்லையிலே பலா விதை பொறுக்குகின்ற கானவன மகளைக் கண்டு வினவுகின்றாள் என்றுணர்க. அப்பாற் கிடப்பது குறிஞ்சி திரிந்த பாலையாகலின் (கட) இச்சுரம் படர்தந்தோள் என்று அண்மைச் சுட்டாற் சுட்டுதலும் உணர்க. இனிச் சுரத் தெதிர்ப்பட்ட நவ்விப் பிணையை நோக்கி கூறியது எனின் (கஉ) என் மகள் என்றும் கானவர் மகள் என்றும் தலைவியை சுரிடத்துச் சுட்டுதல் சிறவாமையுணர்க.

பொன்னாலியற்றிப் புலிப்பல் கோத்து நடுவிடத்தே தனிமணி பதித்த தாலி என்பது கருத்தாகக் கொள்க. செயலை - அசோகு. துய் - பலாவிதையினது தலையிலமைந்த ஓர் உறுப்பு, இதனை 'ஆர்க்கு' என்பர் பழைய உரையாசிரியர்.

## க - எ: முலைமுகம்.........புறத்தேன

(இ - ள்.) (அதுதான் யாதோ வெனின் யான் புறம் போந்து ஆடிவந்த மனையகளை நோக்கி) மேதையங் குறுமகள் - அறிவுமிக்க சிறுமியே கேள்! முலைமுகம் செய்தன - இப்பொழுது நின் முலைகள் பருத்துக் கண்டாரைக் காமுறுத்துவனவாக நிரம்பின; முள் எயிறு இலங்கின - நின்னுடைய பற்கள் தாமும் புத்தொளி பெற்றுத் திகழ்கின்றன. தலைமுடி சான்ற - நின் தலைமயிர் கூழையாகாமல் கூந்தலாகி ஐம்பாலாக வகுத்து முடிக்கப்படற்கேற்றனவாயினகாண்; அலமரல் ஆயமொடு யாங்கணும் படாஅல் - இனி நீ அங்குமிங்கும் அலமந்து ஓடியாடும் நின் தோழியரோடு கூடி எவ்விடத்திற்கும் போகாதே கொள்!; மூப்புடை முதுபதி தாக்கு அணங்கு உடைய - இக்குறிஞ்சியிலமைந்த மிகப்பழைய இடங்கள் தம்பால் வருவாரைத் தீண்டி வருத்தும் தெய்வங்களையும் உடையனகாண்!; காப்பும் பூண்டிசின் கடையும் போகலை - ஆதலால் இனி நீ, நின்னையே காக்கும் காவலையும் மேற்கொள்வாயாக! நம் முன்றிலிலும் போகாதே கொள்; பேதை அல்லை - கட்டுங்காவலுமின்றி மனம்போனபடி திரிதரும் பேதைப்பருவத்தினள் அல்லையே!; பெதும்பைப் பருவத்து - இல்லினுள் அடங்கியிருத்தற்குரிய நின்ற இப் பெதும்பைப் பருவத்தினும்; புறத்து ஒதுங்கலை - புறத்தே செல்லா நின்றனை, இது நங்குடிக்குப் பழியுண்டாக்குங்காண்; என்று கடிந்து கூற; என்க.

(வி - ம்.) முலைமுகஞ் செய்தலாவது-கண்டாரைக் காமுறுத்தும் பக்குவத்தனவாதல். எயிறு - வீழ்ந்து எழுந்த பற்கள். இப்பற்களும் ஒளியுடையனவாய்க் கண்டாரைக் காமுறுத்தும் என்பாள் முள்ளெயிறு இலங்கின என்றாள். பேதைப்பருவத்து மகளிர் தலைமயிர் முடியின்கண் அடங்கா, ஆதலின் கூழை எனப்படும். பெதும்பைப் பருவத்து மகளிர் தலைமயிர் கை செய்தற்கேற்ப வளர்ச்சியுறுதலின் கூந்தல் எனப் பெயர் பெறும் என்க. தழையுடை முலைமுதலியவற்றை மறையாது; தண்டழையுடைய உடையையாய் இவ்வாறு யாங்கணும் திரியற்க என்பாள் தண்டழையுடையை என வதந்தோதினள். காப்பும் பூண்டிசின் என்றது இனி நீ காவலையும் மேற்கொள்ளவேண்டும் என அறிவுறுத்தவாறு. கட்டுக்காப்பு என்றது அணங்குகள் தாக்காமைக்கு மறைமொழியோடு கையிற் கட்டுங்கயிற்றையும், நிறையினால் தன் கற்பினைக் காக்குங் காவலையும், வெளிப்படையாகவும் குறிப்பாகவும் குறித்தபடியாம். நிறைகாத்துக் கொள்ளுதி என்பது நாகரிகமன்மையின் தற்காத்துக்கோடற்கு ஓர் ஏதுக்காட்டுவாள் மூப்புடைமுதுபதி தாக்கணங்குடைய என்றாள். கடையும் போகலை என்புழி உம்மை சிறப்பு. பேதையல்லை என்றது பருவத்தையும் அறியாமையையும்

குறித்துநின்றது. பெதும்பைப் பருவத்துப் புறத்தே போதல் கூடா தென்பாள் பெதும்பைப் பருவத்துப் புறத் தொதுங்கிணை என்று கடிந்தனள்.

அ - கரு: ஒண்சுடர்.........படர்தந் தோளே

(இ - ள்.) ஒண்சுடர் நல் இல் அருங்கடி நீவி-(யானிவ்வாறு கடிந்துகூறி அவளை புறம் போகாவண்ணம் இறசெறித்தவழி) அவள் தான ஒளிரிய விளக்குகளோடு திகழுகின்ற எமது நன்மைமிக்க இல்லத்தினது கடத்தற்கரிய காவலையும் யாமறியாவாறு கடந்து; தன் சிதைவு அறிதல் அஞ்சி - தனது குற்றத்தை ஊர்மாக்கள் அறிதற்கு அஞ்சியவளாய்; வலைகாண இனத்த இனசிலை ஏறு உடை நாறு உயிர் பிணையிற் போகி - தனனை அகப்படுத்தற்கு வேட்டுவர் விரிக்கும் வலையைக கண்டஞ்சி இனிய விளியோசையை யுடைய தன்னினத்ததாகிய கலைமானையுடைய உயிர்க்கின்ற நவ்வி யாகிய பிணைமான வெருவி ஓடுதல் போன்று ஓடிப்போய்; ஈங்கு ஓர் தொலைவு இல் வெள வேல் விடலையொடு - இவ்விடத்தினின்ற பகைவர்க்குத் தோலாத வெள்ளிய வேலையுடைய நம்பி யொருவ ணோடு கூடி; இச் சுரம படர்தந்தோள்-உதோ நம் மெதிர் கிடக்கின்ற கொடிய பாலை நிலத்திலே சென்றனள்காண்! என்க.

(வி - ம்.) தலைவியின் ஒழுக்கத்தில் ஐயுற்றபின்னர் அவள் இரவின் கண் தனக்குத் தெரியாமல புறம்போகாமைப் பொருட்டு இல்லில் யாண்டும் விளக்கேற்றி வைத்ததையும் இல்லத்தின் திண்மையும் அதன்கட் காவலர் திறமும் தோன்ற ஒண்சுடர் இல் எனவும் நல்லில் எனவும் அருங்கடி எனவும் விதந்தாள். தன் சிதைவு என்றது தலைவி யின் களவொழுக்கத்தை. அதனை ஊரவர் அறிந்து பழிதூற்றுதற்கு அஞ்சி என்பது கருத்து. வலைகாண் இனத்த இன்சிலை ஏறு உடை நாறு உயிர் நவ்விப் பிணையிற் போகி என்று உவமையை அடைமொழிகளால் விதந்தது, இற்செறப்பிற்கு அஞ்சி அவளும் தன் இல்லின் பக்கலிலே வந்து அழைத்தேகிய தலைமகன் ஒருவனுடைய கேண்மையுடையாள் என்று குறிப்பாலறிவித்தற்காம். நாறுயிர் - தோன்றுகின்ற உயிர்ப்பு, (நெட்டுயிர்ப்பு).

அவ்விடத்திலேயே தலைவன் தலைவியர் இருவருடைய அடிச்சுவடும் கிடத்தல் காணலின் ஈங்கு என்று அவ்விடத்தைச் சுட்டினாள். அடுத்துக் கிடக்கும் நிலம் பாலையாகலின் இச் சுரம என்று அண்மைச் சுட்டாற் சுட்டினாள். படர்தந்தோள் : ஒருசொல்.

கரு - கசு: ஆயிடை...........செல்லேன்

(இ - ள்.) ஆயிடை - அப்பொழுது, அத்தக் கள்வர் ஆ தொழு அறுத்து என - அருஞ்சுரத்துக் களவராகிய வெட்சி மறவர் ஆக்களைத் தமது தொழுவினின்றும் தாமபறுத்துக் கைக்கொணடார் என்றறிந்துழி; பின் படு பூசலின் வழி வழி

ஓடி - கரந்தை மறவர்பால் பின்னர் உண்டாகும் பூசல் போன்ற பூசலையுடையேனாய் அவள் செல்லும் நெறியெனறு யான் கருதிய வழிகளிலெல்லாம் ஓடிஓடிப் பார்த்தும்; மெய்த்தலைப் படுதல் செல்லேன் - அவள் உருவத்தைக் காணப் பெற்றிலேன்காண். அவ்விருவரும் கூடிச்சென்றமையை நீ கண்டதுண்டோ? உண்டாயிற் கூறுதி என்பதாம்.

(வி - ரை.) யான் மெய்த்தலைப் படுதல் செல்லேன் என்றமையின் நீ கண்டதுண்டோ உண்டாயிற் கூறுதி! என்பது குறிப்பெச்சப் பொருளாயிற்று. வெள்வேல் விடலையொடு படர்ந்தாள் என்றது உசாஅத்துணைத் தோழி கூற்றால் செவிலி அறிந்து கூறியபடியாம். ஆ தொழூஉவறுத்தலாவது - வஞ்சிமறவர் கரந்தையார் ஆக்களைத் தொழுவிற் றும்பறுத்துக் கைப்பற்றிப்போதல் என்க. பிற்படு பூசல் - ஆக் கொண்டபினனர்க் கரந்தையாரிடத்துண்டாகும் பூசல். தலைவி போயினள் என்றறிந்த பின்னர்ப் பல வழிகளினும் ஓடித் தேடினேன் என்பாள் வழி வழி போயடி என்றாள். அவ்விடத்தே இருவரடியுங் காணப்படுதலானும் அவ் வடிச்சுவடுகள் தொடர்ந்து காணப் படுதலானும் ஈங்கு விடலையொடு என்மகள் இச் சுரம் படர்ந்தாள் என்று தேற்றமாகக் கூறினள்.

இனி இதனை, கானவன் மகளே! யான் என் மகட்குக் குறுமகள் நினக்குச் செய்தன; இலங்கின; சான்ற; உடையையாய் யாங்கணும் படாஅல்! பதி அணங்குடைய பூண்டிசின் போகலை, புறத்து ஒதுங்கினை என, அவள் கடிநீவி அங்குப் போகி விடலையொடு படர்ந்தாள் ஆயிடை (யான்) வழி வழி யோடித் தலைப்படுதல் செல்லேன், நீ தலைப் பட்டனையோ? பட்டாயெனிற் கூறுதி என இயைபு காண்க.

(பா - வே.) ௧௧. பிணையிடைதுஞ்சி; ௧௨. செய்யேன். (௭)

## செய்யுள் ௮

திணை: குறிஞ்சி.

துறை: தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லு வாளாய்த் தலைமகள் சொல்லியது.

(து - ரை.) அஃதாவது - தலைவன் களவொழுக்கமே காமுற்று வரைதலிற் கருத்திலனாய் ஒழுக அவன் வருகின்ற நெறியின்னாமை முதலியன நினைந்து வருந்தியிருக்கும் தலைவி, தலைவன் ஒருநாள் இரவுக் குறியிடத்தயலே வந்து நிற்றல் அறிந்து தனது வருத்தந்தோன்ற அவன் கேட்கும் பொருட்டு அவன் வரவறியாதாள் போன்று தோழிக் குக் கூறுவாளாய்க் கூறியது என்பதாம்.

(இ - ரை.) இதற்கு "உயிரினுஞ் சிறந்தன்று" எனவரும் (தொல்- களவி-உஉ) நூற்பாவின்கண் "தாவின் மொழி கிழவி கிளப்பினும்" எனவரும் விதி கொள்க.

இனி, களவொழுக்கத்தில் தலைவி தலைவனிருக்குமிடத்திற்குச் செல்லுதல் அவள் பெருமைக்கிழுக்காம்; ஆயினும், இவ்வாறு கூறுவன

பொருட்பயமுடைத்தாக வரின் அமைக என்பர் ஆசிரியர் தொல்காப்பியனார் (பொருளியல் உச.)

ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த
குரும்பி வல்சிப் பெருங்கை யேற்றை
தூங்குதோற் றுதிய வள்ளுகிர் கதுவலிற்
பாம்புமத னழியும் பானாட் கங்குலு
ரு. மரிய வல்லம னிகுளை பெரிய
கேழ லட்ட பேழ்வா யேற்றை
பலாவம லடுக்கம் புலவ வீர்க்குங்
கழைநரல் சிலம்பி னாங்கண் வழையொடு
வாழை யோங்கிய தாழ்கண் ணசும்பிற்
க०. படுகடுங் களிற்றின் வருத்தஞ் சொலியப்
பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்
விண்டோய் விடரகத் தியம்பு மவர்நாட்
டெண்ணரும் பிறங்கன் மானதர் மயங்காது
மின்னுவிடச் சிறிய வொதுங்கி மென்மெலத்
கரு. துளிதலைத் தலைஇய மணியே ரைம்பால்
சிறுபுறம் புதைய வாரிக் குரல்பிழியூஉ
நெறிகெட விலங்கிய நீயி ரிச்சுர
மறிதலு மறிதிரோ வென்னுநர்ப் பெறினே.

—பெருங்குன்றூர்கிழார்.

(உரை)

ரு - கஉ: இகுளை..............அவர்நாட்டு

இகுளை-தோழீ'; பெரிய கேழல் அட்ட பேழ் வாய் ஏற்றை - பெரிய ஆண்பன்றியினைக் கொன்ற பெரிய வாயினையுடைய ஆண் புலியானது; பலா அமல் அடுக்கம் புலவ ஈர்க்கும் - நறுமணங்கமழ் பலா மரங்கள் செறிந்துள்ள பக்கமலைகள் புலால் நாறும்படி அப்பன்றியினுடலை இழுத்துச் செல்லுதற்கிடனாய; கழை நரல் சிலம்பின் ஆங்கண் - மூங்கில்கள் ஒன்றோடொன்றுராய்ந்து ஒலிக்கின்ற மலையிலமாகிய அவ்விடத்தே; வழையொடு வாழையோங்கிய தாழ்கண் அசும்பில் படும் - சுரபுன்னையும் வாழையும் உளம் பெற்று ஓங்கி வளர்தற்குக் காரணமான தாழ்ந்த இடத்தில் நீர்க்கசிவுடைய குழியிலகப்பட்டு ஏற மாட்டாமல் வருந்துகின்ற தன் காதலனாகிய; கடுங் களிற்றின் வருத்தம் சொலிய - கடிய களிற்றியானையின் துன்பத்தைப் போக்குதற்கு; பிடி படி முறுக்கிய பெருமரப்பூசல் - அதன் காதற்றுணையாகிய பிடியானை

அக்களிறு சறுக்காமல் அடியிட்டேறும் படியாக இதன் பொருட்டு மரத்தை முரிப்பதனைக் கண்டாள பேரொலி; விண்தோய் விடரகத்து இயம்பும் அவர் நாட்டு-வானைத் தீண்டுகின்ற மலைமுழைஞ்சிற் சென்று எதிரொலி எடுத்தற்குக் காரணமான நம்பெருமானுடைய மலைநாட்டின் கண் என்க.

(வி - ம்) 'பெரிய கேழலட்ட' என்பது முதலாகப், 'புலரவீர்க்கும்,' என்பதிறுதியாக நின்ற சொற்கள் உள்ளுறை உவமம்.

கேழல் - பன்றி. பேழ்-பெரிய. ஏற்றை-ஈண்டுப் புலியேற்றின் மேற்று. பலாவால் அடுக்கம் என்றது இனியராகிய தமர்கட்குவமை. புலர என்றும் பாடம். புலவ என்பதே சிறந்த பாடமாம். அம்பல் தூற்றும் வம்பமாக்களும் தாமும் ஒருங்குவாழுந் தன் சிற்றூர்க்குவமையாக வழையொடு வாழையோங்கிய தாழ்கண் அகம்பு என்ற நுண்மை உணர்ந்து மகிழற்பாலது. சொலிய – நீக்குதற்கு. அவர் என்றது தலைவனை.

இனி வழையொடு வாழையோங்கிய என்பது முதலாக விண்டோய் விடரகத்தியம்பும் என்பதிறுதியாக நின்ற உள்ளுறை உவமத்திற்குப் பழைய வுரையாசிரியர் கூறும் விளக்கம் வருமாறு:

"வாழை நுகர வந்த யானை அதன் அயலதாகிய அகம்பின் குழியிலே விழுந்ததாகப் பின்பு, அக் குழியினின்றும் ஏறமாட்டாது வாழையாகிய உணவையும் இழந்து தமிப் பிடி அஃது ஏறுதற்குப் படியாக மரமுரிக்கின்ற வோசை விண்டோய் விடரகத்து இயம்பினாற் போல, அவரும் நமது நலம் நுகரவந்து களவொழுக்கமாகிய குழியிலே விழுந்து, இக்களவொழுக்கமாகிய விதனை விட்டு வரையவுமாட்டாது நமது காவன்மையால் இக் களவொழுக்கினை நுகரவுமாட்டாது துயரப்படுகின்றுழி அறத்தொடு நிலைமுதலாகிய இவற்றால் மகளிராகிய நாமே வரைய முயலும்வழி அம் முயற்சியானே ஊரெல்லாம் அறியும்படி பண்ணினார்," எனவரும்.

இதன்கண், வாழையும் பிடியானையும் தலைவிக்குவமை. களிறு தலைவனுக்குவமை என்க.

௧௫ - ௧௭: எண்ணரும்..............மென்மெல

(இ - ள்) எண் அரும் பிறங்கல் மான் அதர் மயங்காது மின்னுவிட - எண்ணிறந்த மலைகளினிடையே மான்கள் இயங்குதலாலியன்ற வழிகள் இருளில் மயங்காமல், இடைஇடையே முகில்கள் விடுகின்ற மின்னல்களின் ஒளி நமக்கு வழிகாட்டிச் செலுத்தாநிற்ப, சிறிய மென்மெல ஒதுங்கி - யாமும் மின்னுதொறும் மின்னுதொறும் சிறிதுசிறிதாக மெத்தென நடந்து என்க.

(வி - ம்.) பிறங்கல் ; மலை. இது பிறங்குகல் என்பதன் விகாரம் என்பர் பழைய வுரையாசிரியர். யாம் இருளில் வழிதெரியாது மயங்காது மின்னுமின்னி வழிவிட என்பது கருத்து. சிறுநெறி

யென்பான் மானதர் என்றுள். மானதர் - விலங்குகளியங்குதலானுண்டான சிறிய வழி. சிறுமை அடியீடுகளின் மேற்று. அஃதாவது, அணுக அணுக அடியிட்டென்பாள் சிறிய வொதுங்கி என்றுள். மான் ஈண்டு விலங்குப் பொதுப்பெயர். எனவே தலைவன் நாடொறும் வரும் வழி அரிமான் முதலியன திரியும் கொடுநெறியாதல் குறித்தாளாயிற்று. இத்தகைய நெறியில் அவன் வரவிற்கு யாம் அஞ்சி ஈண்டிருந்து வருந்துவதைவிட யாமே அவனிருக்குமிடத்திற்குச் செல்வதே நன்று என்றுளாயிற்று.

க - ரு: ஈயல்.............அல்லமன்

(இ - ள்.) ஈயல் புற்றத்து ஈர்ம்புறத்து இறுத்த குறும்பி வல்சிப் பெருங்கை ஏற்றை - ஈயல் உறைகின்ற புற்றினது ஈரமான மேற்பகுதியிலே தங்கியிருக்கின்ற புற்றுஞ் சோற்றை அகழ்ந்து உணவாகக் கொள்கின்ற பெரிய கைபினையுடைய ஏற்றைக் கரடியானது; தூங்குதோல் துதிய வள்ளுகிர் கதுவலின் - புற்றினை அகழும்பொழுது நீண்டு தொங்குகின்ற தோலாகிய உறையினின்றும் நீட்டிய கூரிய நகங்கள் பற்றுதலாலே; பாம்பும் மதன் அழியும் - அப் புற்றுஞ் சோற்றினூடுறையும் பாம்பும் வலியழிதற்குக் காரணமான; பால் நாள் கங்குலும் அரிய அல்லமன் - இந் நள்ளிரவிலும் யாம் செல்லுதற்கு அரியன அல்லகாண்; எளியவே;

(வி - ம்.) (கக) மானதர் செல்லுதற்கு அரிய வல்ல என ஒரு சொல் வருவித்து முடித்துக்கொள்க. இனி, பழைய வுரையாசிரியர் "இப்பாட்டினுள் ஏற்றையினது வள்ளுகிர் கதுவலின் பாம்பு மதனழியும் என்ற இறைச்சிப் பொருள்: ஏற்றையானது பாம்பை வருத்த வேண்டும்எனனும் கருத்தில்லையாயினும், அது தன் காரியம் செய்யவே வள்ளுகிர்படுதலாகிய அவ்வளவிற்குப் பாம்பு வலியழிந்தாற் போல, அவர் நம்மை வருத்தவேண்டும் என்னும் கருத்தில்லையயினக்கவே தமது காரியமாகிய களவின்பத்திலே ஒழுகவே ஆறின்னுமை ஊறின்னுமை முதலாகிய இவ் வளவிற்கே நாம் வருந்தும்படியாய் விட்டது என்றவாறு என்று இனிதிறுத்துவர். துளிதலை இய கூதிர்ப்பருவமாதலால் புற்று ஈர்ம்புறம் உடைத்தாயிற்றென்க. குறும்பி - புற்றுஞ் சோறு. வல்சி - உணவு. ஏற்றை-ஈண்டு ஆண் கரடி. துதி - உறை. பானாள், ஈண்டு நள்ளிரவு மன்: ஒழியிசை; அவ்வாறு சென்றும் பயன் பெறேம் என ஒழிந்த பொருள் குறித்து நின்றது. பயன் பெறுமைக்குக் காரணம் பின் கூறுகின்றுள்.

கரு - கஅ: துளி.........பெறினே

(இ - ள்.) துளி தலைத் தலை இப மணி ஏர்ஐம்பால் சிறுபுறம் புதைய - யாம் அங்ஙனம் செல்லுங்கால மழைத்துளி இடந்தொறும் வீழ்ந்து நனைந்த நீலமணியின் நிறமபோனற நிறமுடைய கூந்தல் படிதலாலே நம் முதுகு மறையாநிற்ப; குரல்

வாரிப் பிழியூஉ - அதுகண்டு பரிந்து அக் கூந்தலைக் கொத்துக் கொத்தாகத் தங் கையில் வாரி எடுத்து முறுக்கி நீரைப் பிழிந்து விட்டு; நீயிர் நெறிகெட விலங்கிய இச் சுரம் அறிதலும் அறிதிரோ என்னுநர்ப் பெறின் - மகளிராகிய நீயிர் இயங்குவோர் வழி தவறிப் போம்படி விலக்கி விடுகின்ற கவர்களையுடைய இவ்வரு நெறியில் வருதற்கும் அறிந்துளிரோ? என்று அன்புடன் முகமன் கூறு வாரைப் பெறுவோமாயின்; அங்ஙனம் கூறுவாரில்லையே என்பதாம்;

(வி - ம்.) மழைத்துளி வீழ்தலால் நனைந்த கூந்தல் முதுகோடு ஒட்டிக் கிடத்தல் இயல்பாகலின் துளிதலைத்தலை இப ஐம்பால் சிறுபுறம் புதைய என்றாள். புதைய - மறைய. குரல் - கொத்து. நனைந்து புறம் புதையக் கிடக்குங் கூந்தலைக் கையால் கொத்துக் கொத்தாக வாரி எடுத்துப் பிழிந்து என்பது கருத்து. விலங்கிய நெறி - கவர்த்துக் கிடக்கும் நெறி. இந்நெறி இயங்குவோர் வழிதவறிப் போதற்குக் காரணமாகலின் "நெறிகெட விலங்கிய இச் சுரம்" என்றாள். இது தன்வயினுரிமையும் அவன்வயின் பரத்தைமையும் (அயன்மையும்) தோன்றக் கூறியபடியாம்.

இனி, இதன்கண் ஆற்றின்மையும் பிரிவின்மையும் குறிப்பாகத் தலைவனுக்குணர்த்தி அவரறிவுறுத்திய நுணுக்கங்களை உள்ளுறை முதலியவற்றால் உணர்ந்து கொள்க.

இனி இதுளை "இதனை யாம் இப்பாலைச் சுரத்தும் செல்லுதற்கு அவர்நாட்டு மானதர் அரியவல்ல; செல்வேமாயின் நங்கூந்தலைக் குரலாக வாரிப் பிழிந்து நீயிர் இச் சுரம் அறிதிரோ என்று முகமன் கூறுவாரிலர்: ஆதலால் செல்லாமையே நன்று என இயைபு காண்க.

(பா - வே.) ௬. வெள்ளுகிர்க் காலின்; ௭. புலரவீர்க்கும்; ௧௦. படிகடுங்; ௧௧. பிடியடி; ௧௨. மழையேரைம்பால். (அ)

## செய்யுள் ௯

திணை: பாலை.

துறை: வினைமுற்றி மீண்ட தலைமகன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - வேந்தற் குற்றுழிப் போர்வினைமேற் சென்ற தலைவன் அவ் வினை முடிந்த பின்னர்த் தலைவியை நினைந்து விரைந்து மீண்டு வருபவன் பாகன் தேரினை விரைந்து செலுத்துதற் பொருட்டு அவன் கேட்பத் தன்னெஞ்சியல்பு கூறியது என்பதாம்.

(இ - ம்.) இதனை "ஒன்றாத் தமரினும்" என்னும் நூற்பாவின்கண் (தொல்-அகத்-௪௪) "முடிந்த காலத்துப் பாகனொடு விரும்பிய வினைத் திறவகையினும்" என்னும் விதியால் அமைத்துக் கொள்க. (இளம்பூரணர் கருத்துமிது.)

இனி, ஆசிரியர் நச்சினார்க்கினியர் இதனை "கரணத்தினமைந்த காலை" என்னும் நூற்பாவில் (தொல்-கற-௫) "மீட்டுவரவு ஆய்ந்த

*வகையின் கண்ணும்" எனவரும் விதியில் இரட்டுற மொழிதல் என்னும் உத்தியா லமைப்பர்.*

கோல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் புழுகின்
வில்லோர் தூணி வீங்கப் பெய்த
அப்புநுனை யேய்ப்ப வரும்பிய விருப்பைச்
செப்பட ரன்ன செங்குழை யகந்தோ
௫. றிழுதி னன்ன தீம்புழற் றுய்வா
யுழுதுகாண் டுளைய வாகி யார்கழல்
பால் வானிற் காலொடு பாறித்
துப்பி னன்ன செங்கோட் டியவி
னெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கும்
௧௦. அத்த நண்ணிய வங்குடிச் சீறூர்க்
கொடுநுண் ணோதி மகளி ரோக்கிய
தொடிமா ணுலக்கைத் தூண்டுரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டுங்
குன்றுபின் னொழியப் போகி யுரந்துரந்து
௧௫. ஞாயிறு படினு மூர்சேய்த் தெனாது
துனையரி துரக்குந் துஞ்சாச் செலவி
னெம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மா
ணோங்கிய நல்லி லொருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
௨௦. கன்றுபுகு மாலை நின்றோ ளெய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுத
௨௫. லந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே.

—கல்லாடனார்.

## (உரை)

**௨௪ - ௨௬ : நாணொடு..........னெஞ்சே**

**(இ - ள்)** *நாணொடு மிடைந்த கற்பின் வாள் நுதல்-நாணம் என்னும் பண்போடு கலந்தமைந்த கற்பு என்னும் திண்மையையும்,*

ஒளி மிக்க நுதலையும்; அம் தீம் கிளவிக் குறுமகள் - அழகிய இனிய மொழியையும் இளமையையும் உடைய எங் காதலி யின்; மெல் தோள் பெற நசைஇ - மெல்லிய தோளைப் பெற்று மகிழ்தற்குப் பெரிதும் விருப்பமுற்று; சென்ற என் நெஞ்சு - எம்மைக் கைவிட்டுப் போன எம்முள்ளம் என்க.

(வி - ம்.) வினை முற்றி மீளுந் தலைவன் உள்ளம் தலைவியை நினைத்தலின்றிப் பிறிதொன்றனையும் நினையா தொழிதலின் தலைவன் அதனை உறுப்புடையதுபோல் உணர்வுடையது போல் தன்னின் வேறாகக் கண்டு இங்ஙனம் கூறுகின்றான். இவ்வாறு கூறுவது புலநெறி வழக்கில் வழுவமைதியாகக் கொள்ளப்படும். இதனைத் தொல் பொரு ளியல் உ ஆம் நூற்பாவா லுணர்க.

க - கo: கோல்வினை...........சீறூர்

(இ - ள்) வில்லோர் தூணி வீங்கப் பெய்த - வில்மறவர் தங்கள அம்புக்கூடு புடைக்குமாறு செறித்த; கொல்வினைப் பொலிந்த - கொல்லுந் தொழிலாற் பொலிவு பெற்ற; கூர் குறும் புழுகின் - கூர்மையையும் அக் கூர்மை மழுங்காமைப் பொருட்டுச் செருகபபட்ட குறிய குப்பியையுமு உடைய; அப்பு நுனை ஏய்ப்ப அரும்பிய - அம்புகளின் நுனிகள் போன்று ஒருங்கே செறிந்து அரும்பியுள்ள; இருப்பை செப்பு அடர் அனை செங்குழை அகந்தோறு - இருபபை மரத்தினது செப்புத் தகடு போனற சிவந்த தளிரையுடைய குழைகளின் உள்ளிடமெல்லாம்; இழுதின் அன்ன - வெணணெய் போனற; தீம புழல் துய்வாய் - தேனுடைமையால் இனிமையுடைய துளையையும் துய்யையும் உடைய பூக்கள்; உழுதுகாண் துளையவாகி - வண்டுகள் கிண்டிக் காண்டற் கியன்ற துளையை உடையவாய் மலர்ந்து பின்னர்; காலொடு - காற்றினாலே தாக்கப்பட்டு; ஆர் கழல்பு ஆலி வானில் பாறி - காம்பினின்றும் கழன்று ஆலங்கட்டி மழை போன்று சிதறி; துப்பின் அன்ன செங்கோட்டு இயவின் - பவளம் போன்று சிவந்துயர்ந்த வழியின்கண், நெய்த்தோர் மீமிசை நிணத்தின் பரிக்கும் - குருதியின் மேற்கிடக்கும நிணங்கள் போன்று விரவிக் கிடக்கின்ற: அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர் - அருநெறியின் கண் அமைந்த சிறிய ஊரினகண் எனக.

(வி - ம்.) தலைவன் போர்மேற் சென்று மீள்பவனாகலின் அவன் அதுகாறும் டயின்ற போர்க்காட்சியே அவனுளத்திற் பதிந்திருத்தலால் மீண்டு வரும் வழியிற் காணப்படும் இருப்பை அரும்பு முதலியன வற்றிற்கு அம்பு நுனி போலும் என்பது முதலாகப் போர்க்களத்திற் காணப்படும் பொருளையே உவமங் கொள்ளுதல் உணர்க. ஈண்டு இருப்பையின் அரும்பு முதலியவற்றைக் கூர்ந்து நோக்கி அவற்றிற்குப் பெரிதும் பொருந்துமுவமைகளை எடுத்தியம்புகின்ற கல்லாடனார் புலமை நுணுக்கம் உணர்ந்து மகிழற்பாலது.

கூர்ங்குறும்புழுகு-கூர்த்த நுனியையுடைய அம்புக்குப்பி. அஃதாவது அராவிய அப்புநுனி சிதையாதிருத்தல் பொருட்டு அதன் நுனியிற் செருகும் ஓருவகையுறை - இவையிற்றை மல்லிகை மொட்டு என்றும் பெயரால் வழங்குவர் என்பது பழைய வுரையாசிரியர் குறிப்புரையால் உணரப்படும்.

இருப்பைத் தளிர்க்குச் செப்புத் தகடும் மலர்க்கு இழுதும் உவமைகள். துய் - மலரில் அமைந்த பஞ்சு போல்வதோருறுப்பு. உழுது என்பதற்கு எழுவாய் வருவித்தோதுக. ஆசிவான் -- ஆலங்கட்டி மழை, வான்: ஆகுபெயர் நெய்த்தோர் - குருதி; இது செந்நிலத்திற்கும், நிணம் அதன்கட் கிடக்கும் இருப்பை மலர்க்கும் உவமைகள்.

## கக - கஎ : கோடு...............எய்தி

(இ - ள்.) கொடு நுண் ஓதி மகளிர் ஓக்கிய தொடி மாண் உலக்கைத் தூண்டு உரல் பாணி - வளைந்த நுண்ணிய கூந்தலையுடைய மகளிர் மலை நெல் குற்றுதற்கு உயர்த்திய பூணல் மாட்சிமையுற்ற உலக்கையை விரைவுறுத்துதற்கு அவர் பாடுகின்ற வள்ளைப்பாட்டு; நெடுமால் வரைய குடிஞையோடு இரட்டும் - பக்கலிலுள்ள நெடிய பெரிய மலையிடத்தவாகிய கூகை யொலியாகிய பாட்டிற்குப் பின்பாட்டாக அமைதற்குக் காரணமான; குன்று பின்னொழிய - இம் மலைகள் பிற்பட்டுக் கிடப்ப; போகி - (குறிஞ்சி திரிந்த) இப் பாலையைக் கடந்து சென்று, உரம் துரந்து - வலிமையினாற் செலுத்தப்படுதலால்; தூனைபரி துரக்கும் - விரைந்து செல்லுகின்ற குதிரைகளை மேலும் விரையச் செலுத்தாநின்ற; ஊர்ச் சேய்த்து என்னது ஞாயிறு படினும் துஞ்சாச் செலவின் - ஊர் மிகவும் தொலைவிலுளது என்று கருதாமலும் ஞாயிறு மறைந்தாலும் ஊக்கங்குன்றாமல் செல்லுகின்ற செலவினையுடைய; எம்மினும் வல் விரைந்து எய்தி - எம்மினுங் காட்டில் மிகவும் விரைந்துபோய் என்க.

(வி - ம்.) ஓக்குதல் - உயர்த்துதல். (தொடி-உலக்கைப்) பூண். தூண்டுதல் - உலக்கையை விரைந்து குற்றச் செய்தல். உரற்பாணி - வள்ளைப்பாட்டு. இனி, குற்றுமகளிர் குக்குக்கென எழுப்பும் ஒலி எனலுமாம். இரட்டுதல் - பின்னுகப் பாடுதல். மாறி மாறி ஒலித்தலுமாம்.

## கஎ - உரு : பன்மாண்...........கோல்லோ

(இ - ள்.) பல் மாண் ஓங்கிய நல் இல் ஒரு சிறை நிலைஇ - பல்வேறுறுப்புக்களாலும் மாட்சிமையுற்று உயர்ந்துள்ள நன்மையுடைய இல்லத்தின்கண் நிமித்தங் கேட்டற்குரிய ஓரிடத்தே என் வருகையை நினைந்து நின்று; பாங்கர்ப் பல்லி படுதொறும் - நன்னிமித்தத்தைக் குறிக்கும் பக்கத்திலே பல்லி சொல்லுந்தோறும்; பரவி - அதனை வாழ்த்தி; கனறுபுகு மாலை நின்றோள்

எய்தி - ஆன்கன்றுகள் தொழுவிற் புகுதற்கியன்ற இம் மாலைப் பொழுதிலே நிற்கின்ற நங் காதலியை எய்தி; கைகவியாக் குறுகிச் சென்று - அவள் முதுகுப் புறத்தில் அவளறியாவண்ணம் தன் இரண்டு கைகளையும் கவித்த வண்ணம் அணுகி; கண் புதையா - அவள் கண்களைப் பொத்தியும், பின்னர்; பிடிக்கை அன்ன பின் அகம் தீண்டி - பிடியானையின கைபோன்று பருத்த அழகிய அவள் பின்னலைத் தன் கைகளால் தீண்டியும்; தொடிக்கை தைவரத் தோயந்தன்று கொல்லோ - பின்னரும் தன்றாமையால் வளையலணிந்த அவளுடைய கைகள் தன உடப்பிறபட்டுத் தடவும்படி அவள் அழகிய திருமேனியிற் பொருந்தியதோ? யாது செய்ததோ? யானறிகிலேன்; என்பதாம்.

(வி - ஈ.) பல கட்டுக்களுடைமையால் மாட்சிமைப் பட்ட மாளிகை. இக்காலத்திலுள்ளோர் தமிழ்லத்தில் இன்னின்ன இடத்தில் பல்லி சொன்னால் நன்னிமித்தம் என்றும் இன்னின்ன இடத்தில் சொல்லின் தீநிமித்தம் என்றும் கொள்வர். ஈண்டுத் தலைவன் பாங்கர் என்றது நன்னிமித்தங் கூறுமிடத்தை என்க. தான் அவள்பால் செல்கின்றுதலின் இப்பொழுது அவட்குப் பல்லி நல்லிடத்திலே அடிக்கடி சொல்லும் என்பது தன் கருத்தாகலின் பாங்கர்ப் பல்லி படுதொறும் என்கின்றான்.

கண் புதைத்து விளையாடுவோர் கண்புதைத்தற்கு வேண்டிய அளவு தங்கையைக் கவித்துக் கொண்டு சேறல் இயல்பாகலின் கைகவியாச் சென்று கண்புதையா என்றான். குறுகிக் கண்புதையா என மாறுக. மனம் அருவடம்புடையதாகலின் அது கண் புதைத்துழியும் தலைவி அதனை அறியாளாக; அது பின்னும் அவள் பின்னலைத் தீண்டி இழுத்துத் தன் வரவை அவட்குணர்த்த முயன்றது என்றும் பின்னகந் தீண்டியும் அவள் அறியாளாக; அம் மனம் அவள் கைகளினூடு அவை தன்னைத் தைவரும்படி புக்கு அவள் திருமேனியிற் படிந்திருக்கும் என்றும் கருதியபடியாம். இத்துணை முயன்றும் அம் மனம் அவளால் வரவேற்கப்படாமலும் அவளாற் றழுவப்படாமலும் பெரிதும் ஏக்க முற்றப் பின்னரும் அவாமிகுதியால் தானே அவள் கையிடையே புகுந்து தழுவுவித்துக் கொள்ளும் என்றும், அப்பொழுதும் அவளால் அணைக்கப் படாமல் தானே அவள் திருமேனியைத் தோய்ந்திருக்கும் என்றும் அருவமான அம் மனத்தின் செயல்களைக் கூறும் அழகுணர்க. இவ்வாறு அவன் அம் மனத்திற்கிரங்கிக் கூறுகின்றான், என்றுணர்க.

இனி, இதனை, "குறுமகள் தோள் பெற நசைஇச் சென்ற என்னெஞ்சு, எம்மினும் விரைந்து வல் எய்தி புதையாத் தீண்டி தோய்ந்தது போலும் அஃதளியது", என இயைபு காண்க. (௯)

(பா - வே.) ௧௮. ஞெங்கியர்.

## செய்யுள் ௧௦

**திணை :** நெய்தல்.

**துறை :** இரவுக் குறிவந்து தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலைமகனை எதிர்ப்பட்டு நின்று தோழி சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - களவொழுக்கத்தின்கண் அலர் எழுதலறிந்த தலைவன் ஒருவழித் தணந்துறையக் கருதினனாக; அதனைக் குறிப்பாலுணர்ந்த தோழி தலைவன் இரவுக்குறிக்கண் வந்து மீளும் பொழுது அவனெதிர் சென்று, தலைவி இனிச் சிறிதும் நின்னைப் பிரிந்துயிர் வாழாள் ஆதலால் இனி நீ அவளை அழைத்துக்கொண்டு கழிதலே நன்றென்று அறிவுறுத்தது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "நாற்றமுந் தோற்றமும்" (தொல்-கள-உ௩) எனவரும் நூற்பாவின்கண் "வேண்டாப் பிரிவினும்" எனவரும் விதி கொள்க.

வான்கடற் பரப்பில் தூவற் கெதிரிய
மீன்கண் டன்ன மெல்லரும் பூழ்த்த
முடவுமுதிர் புன்னைத் தடவுநிலை மாச்சினைப்
புள்ளிறை கூரும் மெல்லம் புலம்ப
௫. நெய்த லுண்கண் பைதல கலுழப்
பிரித லெண்ணினை யாயி னன்று
மரிதுதற் றனையாற் பெரும வுரிதினிற்
கொண்டாங்குப் பெயர்தல் வேண்டுங் கொண்டலொடு
குரூஉத் திரைப் புணரி யுடைதரு மெக்கர்ப்
௧௦. பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்
மோட்டுமண லடைகரைக் கோட்டுமீன் கொண்டி
மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்
வளங்கெழு தொண்டி யன்னவிவ ளலனே.

—அம்மூவனார்.

## (உரை)

௧ - ௪: வான்............புலம்ப

(இ - ள்.) வான் கடல் பரப்பில் - பெரிய கடற் பரப்பிலே அலைகள் சிதறுகின்ற; தூவற்கு எதிரிய - துளிகளை ஏற்றுக் கொண்ட; முடவு முதிர் புன்னை - முடம்பட்ட முதிர்ந்த புன்னையினது; மீன் கண்டு அன்ன மெல் அரும்பு ஊழ்த்த தடவு நிலை மாச்சினை - விண்மீனைக் கண்டாற் போன்று காணப்படும் மெல்லிய அரும்புகளைத் தோற்றுவித்த வளைந்த நிலைமையினையுடைய பெரிய கிளையின்கண்; புள் இறை கூரும - நெய்தனிலப் பறவைகள் மிகவும் தங்குதற்கிடனான !; மெல்லம் புலம்ப - மெல்லிய புலமாகிய நெய்தனிலத் தலைவனே, கேட்டருளுதி ! என்க.

(வி - ம்.) தூவற் கெதிரிய புன்னை எனவும், மீன் கண்டன்ன மெல்லரும் பூழ்த்த சினை என்றும் தடவு நிலை மாச்சினை என்றும்

இயைத்துப் பொருள் கொள்க. புள் – நெய்தனிலப் பறவைகள். மெல்லம் புலம்பன் - நெய்தனிலத் தலைவன்.

### ௫ - ௭ : நெய்தல்...........துற்றனையால்

(இ - ள்.) நெய்தல் உண்கண் பைதல கலுழ - நீ எம் பெருமாட்டியின் நெய்தற் பூப்போன்ற மையுண்ட கண்கள் துன்பமுடையனவாய் அழும்படி; பிரிதல் எண்ணினையாயின் - பிரிந்துறைதலைக் கருதினையாயின்; நன்றும் அரிது துற்றனையால் - மிகவும் நுகர்தலரியதொரு தீவினையைச் செய்து அதன் பயனை நுகர்ந்தாயாகின்றனை; என்க.

(வி - ரை.) பிரிதல், ஈண்டு அலரடங்கற் பொருட்டு ஒருவழித் தணத்தல். எம் பெருமாட்டி இப்பொழுது அச் சிறு பிரிவையும் ஆற்றாது உயிர்துறப்பள் ஆதலால் நீ நுகர்தற்கரிய தீவினையொன்றைச் செய்து அதன் பயனை நுகரத் துணிந்தாயாகின்றனை என்பாள் பிரிதல் எண்ணினையாயின் அரிது துற்றனை என்றாள். துற்றனை - நுகர்ந்தாய்; ஈண்டுத் துற்றுவாய் என்னும் எதிர்கால வினைச்சொல் தெளிவு பற்றி இறந்த காலத்தாற் கூறப்பட்டது. இதனை,

“வாராக்............கிளக்குங்காலை” எனவரும் தொல்காப்பியத்தால் உணர்க. (வினையியல்-௪௮)

இத் தொடர்க்குப் பிறரெல்லாம் பொருந்தாவுரை கூறினர்.

நீ பிரிந்தால் இவள் ஒருதலையாக இறந்துபடுவள். ஆகவே, நீ பெருந் தீவினை செய்தாயாக அதன் பயனாகிய துன்பத்தை நுகர்தலும் தப்பாது என்பது தோழி கருத்தென்க.

### ௭ - ௧௫ : பெரும............நலனே

(இ - ள்.) பெரும - பெருமானே; கொண்டலொடு குருஉத் திரை புணரியுடைதரும் எக்கர் பழம் திமில் கொன்ற - கீழ்காற்றினாலுந்தப்படும் நிறமிக்க பேரலைகளையுடைய கடலானது மோதியுடைக்கின்ற எக்கர் மணலானது தமது பழைய திமிலை உடைத்தமையாலே; புதுவலைப் பரதவர் - புதிய வலைகளையுடையராயிருந்தும் பரதவர் வேட்டைமேற் செல்லாமல்; மோட்டு மணல் அடைகரைக் கோட்டுமீன் கொண்டி - உயர்ந்த மணலாலியன்ற நீரடைகரைக்கண் தாமே வந்து அகப்பட்ட சுறுமீனை மிகவும் பிடித்துவந்து; மணங்கமழ் பாக்கத்து - மலர் மணங்கமழும் பாக்கத்தில்; பகுக்கும் - ஆண்டு வாழ்வார்க்குக் கூறு வைத்து வழங்குதற்குக் காரணமான; வளங்கெழு தொண்டியன்ன - வளம் பொருந்திய தொண்டிப் பட்டினம் போன்ற; இவள் நலன் உரிதினில் கொண்டு ஆங்குப் பெயர்தல் வேண்டும் - எம் பெருமாட்டியின் அழகு அவட்கே உரியதாம்படி நீ அவளையும் நின்

னுடன் அழைத்துக்கொண்டு நின்னூர்க்குப் போதல்வேண்டும்; இதுவே இப்பொழுது நீ செய்யக் கடவதுகாண்! என்பதாம்.

(வி - ம்.) பெருங்குடித் தோன்றலாகிய நீ பெண்ணாகிய இவள் இறந்துபடச் செய்தல் தகாது என்னும் குறிப்பால் மீண்டும் பெரும! என்று விளித்தபடியாம். இவள் நலன் உரித்தினிற் கொண்டு ஆங்குப் பெயர்தல் வேண்டும் என இயைத்துக் கொள்க. ஆங்கு என்றது நீ தணந்துறையக் கருதிய நின்னூர்க்கு என்றவாறு. எனவே நீ இவளை இப்பொழுது கொண்டுதலைக்கழிதலே செய்யற்பாலது என்று வற்புறுத்தினளாயிற்று.

புணரியாலுடைதரும் எக்கர் மணல் புதைத்தழிந்த பழந்திமில் என்க. திமிலனமையால் கடல் புகாமல் பதுவலையால் தாமே வந்தேறிய சுருமீனைப் பிடித்தனர் என்க. “பழந்திமில் கொன்ற என்பது முதலாகக் கெண்டி ஈறாக அமைந்த சொற்றொடர் தலைவி நலத்திற்குவமையாய் வந்த வினையுவமத்திற்கு அடையாய் வந்தமையாற் போலும் இச் சொற்குப் புறத்தே தோன்றும் பொருளை இறைச்சிப் பொருள்” என்பர் பழைய வுரையாசிரியர். இவ்விறைச்சிப் புறத்தே தோன்றும் பொருளை அவ்வாசிரியர் “பரதவர் தாம் அழிவு கோத்த (சோர்ந்த என்றும் பாடம்) திமிலானும் பண்ணின வலையானும் தமது தொழிலாகிய வேட்டைமேற் செல்லாது, தேடாமல் வந்த இழிந்த சுருமீனை அகப்படுத்து அதனை அழித்துக் கூறு வைத்து எல்லாரையும் அழைத்தாற் போல, நீயிரும் நுமக்கு உறுதியாக ஆக்கிக் கொள்ளப்பட்ட நன்மைகளான் நுமக்கு ஒழுக்கமாகிய நல்வழியின் ஒழுகாது கண்டோரிகழ்ந்த களவொழுக்கிலே ஒழுகி இக் களவினைப் பரப்பிப் பலரும் அலர் கூறும்படி பண்ணுகின்றீர் என்றார்” எனவரும்.

பழைய வுரையாசிரியர் இறைச்சிப் பொருள் என்றாரேனும் உவமையும் பொருளுமாகப் பகுத்தே பொருள் கூறுகின்றாராகலின் இதனை உள்ளுறை உவமையாகக் கோடலே சிறப்பு.

இனி, இதனை, “புலம்ப (இவள்) கண் கலுழப் பிரிதல் எண்ணினையாயின (நீ) அரிது துற்றனை ஆகுவை. ஆதலால் இவள் தொண்டியன்ன நலன் இவட்கு உரிதாகக் கொண்டு பெயர்தல் வேண்டும்” என்றியைபு காண்க.

(பா - வே) இ. பைதலுழப்ப; எ. மரிதுற்றனை; க. குருஉக் கிளை, குழூஉத்திரை, யடைதரு; ௧௦. திமில் சென்ற. (௧௦)

## செய்யுள் ௧௧

**திணை:** பாலை.

**துறை:** தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைமகள் வேறுபாடுகண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - தலைவன் பொருள்வயிற் பிரிந்தமையால் தலைவி பெரிதும் வருந்தினள்; அது கண்ட தோழியும் இவள் பிரிவாற்றாமையால் இறந்துபடுவளோ? என்று ஐயுற்று வருந்த; அது கண்ட தலைவி “யான் பிரிவினை ஒருவாறு ஆற்றுவேன் காண்! அவர்

என்னை உடனழைத்துப் போயிருப்பின் அவரும் வருந்தார். யாமும் வருந்தேம். அங்ஙனம் செய்யாமைக்கே வருந்துகின்றேன். என் பொருட்டு நீ வருந்தற்க" என்று கூறியது என்றவாறு.

(இ - ம்) இதனை "எஞ்சி யோர்க்கும் எஞ்சுத லிலவே" எனவரும் (தொல் - அகத் - சஉ) நூற்பாவின்கண் அமைத்துக்கொள்க.

வான மூர்ந்த வயங்கொளி மண்டில
நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காட்
டிலையில மலர்ந்த முகையி லிலவங்
கலிகொ ளாயம் மலிபுதொகு பெடுத்த
ரு. வஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றிக்
கயந்துக ளாகிய பயந்தபு கான
மெம்மொடு கழிந்தன ராயிற் கம்மென
வம்புவிரித் தன்ன பொங்குமணற் கான்யாற்றுப்
படுசினை தாழ்ந்த பயிலிண ரெக்கர்
கo. மெய்புகு வன்ன கைகவர் முயக்க
மவரும் பெறுகுவர் மன்னே நயவர
நீர்வார் நிகர்மலர் கடுப்ப வோமறந்
தறுகுள நிறைக்கு போல வல்கலு
மழுதன் மேவல வாகிப்
கரு. பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே.

—ஔவையார்.

## (உரை)

ரு - எ: வானம்............கானம்

(இ - ள்.) வானம் ஊர்ந்த வயங்கு ஒளி மண்டிலம் - வானத்தே இயங்குகின்ற விளக்கமிக்க ஒளியினையுடைய ஞாயிற்று மண்டிலமானது; நெருப்பு எனச் சிவந்த - தீப்போன்று சினந்து சுட்டமையாலே; உருப்பு அவிர் அம் காட்டு - வெப்பமானது கானல் நீராகத் திகழ்கின்ற காட்டின் கண்ணே; இலை இல முகை இல் மலர்ந்த இலவம் - இலைகள் இல்லாதனவாய் அரும்பற மலர்ந்த இலவமரங்கள்; கலி கொள் ஆயம் - கார்த்திகை விழவின்கண் ஆரவாரமுடைய மகளிர் கூட்டம; மலிபு தொகுபு எடுத்த அம் சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி - மிகுந்து கூடி ஏந்திய அழகிய கார்த்திகை விளக்குகளின் நெடிய ஒழுங்குபோலத்

தோன்றாநிற்ப; கயம் துகளாகிய பயம் தபு கானம் - நீர் நிலைகளும் நீர் வறந்து மணலாகிய பயன் தருதலொழிந்த காட்டின்கண்; என்க.

(வி - ம்.) ஒளி மண்டிலம்-ஞாயிற்றுமண்டிலம். சிவத்தல் ஈண்டு வெகுளிப் பொருட்டு. அவிர்தல், ஈண்டுக் கானலானது நீர்போன்று விளங்குதல். வேனிற் பருவமாதலின் இலைகளை யுதிர்த்து அரும்பற மலர்ந்த இலவமரங்கள் என்றார். இலவமரங்கள் யாண்டும் இலையின்றி, மலர்ந்திருத்தற்கு மகளிர் மிகக்குக் கூடிக் கார்த்திகை விளக்கெடுத்தல் உவமை.

கயம் - நீர் நிலை. கயமுந் துகளாகிய எனல் வேண்டிய சிறப்பும்மை தொக்கது; செய்யுள் விகாரம்.

ஏ - ௧௧ : எம்மொடு............நயவர

(இ - ள்.) எம்மொடு கழிந்தாராயின் - எம்மையும் தம்முடன் அழைத்துச் சென்றாராயின்; வம்பு விரித்தன்ன பொங்கு மணல் கான் யாற்று - வெண்கச்சு விரித்தாற்போன்று பரந்து கிடக்கின்ற மிக்க மணலையுடைய காட்டியாற்றின்கண்; கம் என பயில் இணர்படுசினை தாழ்ந்த எக்கர் - கம்மென்று நறுமணங் கமழுகின்ற மிக்க பூங்கொத்துக்களையுடைய பெரிய மரக்கிளைகள் தாழ்ந்து நிழல் தருகின்ற எக்கரிட்ட மணல் மேட்டின்கண்; மெய் புகுவு அன்ன கைகவர் முயக்கம் - ஒருவருடம்பில் ஒருவர் புகுந்தொன்றுவது போன்ற ஒருவரை ஒருவர் கைகளால் கவர்ந்து கொள்ளுகின்ற தழுவுதலை; நயவர அவரும் பெறுகுவர் - விருப்பமுண்டாக யாம் பெறுவதோடன்றி அவர் தாமும் பெற்று மகிழ்வாரல்லரோ ! என்க.

(வி - ம்.) கம்மென, நறுமணங் குறிக்கும் குறிப்புமொழி. விரைவுக் குறிப்பென்று கொண்டு கம்மெனக் கழிந்தனராயின் என இயைப்பர் பழைய உரையாசிரியர். எம்மொடு கழிபவர் விரையக் கழிதல் வேண்டும் என்று தலைவி கூறவேண்டாமையின் அதற்கு யாம் கூறுவதே பொருத்தமான பொருளாதலறிக. வம்பு-கச்சு, ஒருவகை ஆடை. கம்மெனப் பயில் இணர்படு சினை தாழ்ந்த என இயையும். எக்கர் - நீரோட்டங் கொணர்ந்து குவித்த மணல்மேடு. அவரும் பெறுகுவர் என்புழி உம்மை எச்சவும்மை. மன் கழிவுப் பொருட்டு.

௧௨ - ௧௫ : நீர்வார்............மன்னே

(இ - ள்.) பழி தீர் கண்ணும் - மேலும் குற்றந்தீர்ந்த எம்முடைய இக் கண்கள் தாமும்; நீர் வார் நிகர் மலர் கடுப்ப - நீர் துளிக்கும் ஒளி மலர்கள் போன்று; ஓமறந்து - ஒழிதலின்றி; அறுகுளம் நிறைக்குந போல-நீர் வறந்த குளத்தை நிறைக்கின்ற கால்வாய்கள் போன்று; அல்கலும் அழுதல் மேவலவாகி - நாள்

தோறும் அழுது கண்ணீர் வடித்தலைப் பொருந்தாதனவாகி; நயவர படுகுவ மன் - இன்பமுண்டாகத் துயில்வனவாகுமல்லவோ; இங்ஙனம இருவழியும் இன்பமுண்டாக்கும் அச்செயலைச் செய்திலர் எனபதற்கே வருந்துகின்றேன்; பிரிவாற்றாது வருந்துவேனல் லேன் எனபதாம.

(வி - ம்.) பிரிவாற்றாது வருந்துவேனல்லேன் அவர் செய்யக் கடவது செய்யாமைக்கே வருந்துவல் என்றமையால், பிரிவாற்றுவல் என்பது கருத்தாயிற்று; என்க. ஓ - ஓவுதல், ஒழிதல். நிகர்மலர் - ஒளிமலர். அறுகுளம்-நீர் வறந்த குளம். நிறைக்குந: பலவறிசொல்; படுதல் - துயிலல்.

இனி இதனை, (தோழீ !) மண்டிலஞ் சிவந்த காட்டுத் தோன்றி, துகள் ஆகிய கானம் எம்மொடு கழிந்தனராயின் அவரும் பெறுகுவர்; கண்ணும படுகுவ மன்; அது செய்யாமைக்கே வருந்துவல் என்று இயைபு காண்க.

(பா - வே.) ௯. வயங்கொளிர்; ௬. டிலையின்; அ. விரிந்தன்ன. ௧௬. வைகலும். (௧௧)

## செய்யுள் ௧௨

திணை : குறிஞ்சி.

துறை : பகற்குறி வாராநின்ற தலைமகன் தோழியாற் செறிப்பறி வுறுக்கப்பட்டு இரவுக்குறி வாரா வரைவல் என்றாற்கு, அதுவும் மறுத்து வரைவு கடாயது.

இப்பாட்டினுள் 'நீவரின்' என்றது வரவு மறுத்தது; சீறடி சிவப்ப என்றது செறிப்பறிவுறீஇயது.

(து - ம்.) அஃதாவது - தலைவன் வரைதற் கருத்தின்றி நாளும் பகற் குறியிடத்தே வந்து களவொழுக்கமே ஒழுகுபவனை வரைவு கடாவக் கருதிய தோழி 'பெரும! தலைவி எஞ் சுற்றத்தாரால் இற் செறிக்கப்பட்டாளாதலின் இனி நீ பகலில் வாராதே கொள்! என்று ளாக; அது கேட்ட தலைவன ஆராமையுடையனாய் "அங்ஙனமாயின் யான் இன்னுஞ் சில நாள் இரவுக்குறிக்கண் வருகுவல்; பின்னர் வரைந்து கொள்வல்" என்று இரவுக்குறி வேண்டினன். அது கேட்ட தோழி இரவுக்குறியும் மறுத்து வரைவு கடாயது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "நாற்றமுந் தோற்றமும்" எனவரும் நூற் பாவின்கண் (தொல் - கள - ௨௩) 'அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும்' என்பதனால் அமைத்துக்கொள்க.

யாயே, கண்ணினுங் கடுங்கா தலளே
யெந்தையும் நிலனுறப் பொறாஅன் சீறடி சிவப்ப
வெவனில குறமக ளியங்குதி யென்னும்

யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பி
ரு. னிருதலைப் புள்ளி னோருயி ரம்மே
யேனலங் காவல ராஞு தார்த்தோறுங்
கிளிவிளி பயிற்றும் வெளிலாடு பெருஞ்சினை
விழுக்கோட் பலவின் பழுப்பயன் கொண்மார்
குறவ ரூன்றிய குரம்பை புதைய
க0. வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்
புலிசெத்து வெரீஇய புகர்முக வேழ
மழைபடு சிலம்பிற் கழைபடப் பெயரு
நல்வரை நாட நீவரின்
மெல்லிய லோருந் தான்வா ழலளே.

—கபிலர். (தொல்கபிலர் என்றும் பாடம்)

(உரை)

ரு - கந : ஏனலங்............நாட

(இ - ள்.) ஏனல் அம் காவலர் ஆஞது ஆர்த்தொறும் - தினைப்புனங்காக்கின்ற அழகிய கொடிச்சியராகிய மகளிர் ஒழியாது ஆரவாரிக்குந்தோறும்; கிளி விளி பயிற்றும் - கிளிகள் தம்மின மென்று கருதிப் பலகாலும் அழைத்தற்கிடனாய்; குறவர் வெளில் ஆடு பெருஞ்சினை விழுக்கோள் பலஇன் பழு பயன் கொண்மார் - குறவர்கள் அணில்கள் ஆடுகின்ற பெரிய கிளையையும் சிறந்த காய் கனையுமுடைய பலாவினது இனிய பழமாகிய பயனைக் காவல் செய்து கெடாமற் கொள்ளும் பொருட்டு; ஊன்றிய குரம்பை மறைய - காட்டிய குடிசையின் கூரை மறையும்படி; தேம் பாய் வேங்கை தாஅய தோற்றம் - தேன் ஒழுகும் வேங்கைமலர்கள் உதிர்ந்து பரவிய தோற்றத்தைக் கண்டு; புலி செத்து வெரீஇய புகர்முக வேழம் - புலி என்று கருதி அஞ்சிய புள்ளிகளையுடைய முகத்தையுடைய யானையானது, மழைபடு சிலம்பில் கழைபடப் பெயரும் - முகில்கள் தங்கும் மலைச்சாரலிலே மூங்கில்கள் முரிந்து விழும்படி ஓடுதற்குக் காரணமான; நல்வரை நாட - வளமுடைய மலைநாட்டையுடைய பெருமானே! கேட்டருள்க; என்க.

(வி - ம்.) காவலர் மகளிர் என்பது தோன்ற அங்காவலர் என்ருள். தினைப்புனங் காக்கும் மகளிர் குரலைக் கிளிகளின் குரல் என்று கருதிக் கிளிவிளி பயிற்றும் என்றவாறு. காவலர் ஆரவாரங்கேட்டு ஆங்குத் தினைக் கதிருண்மை யுணர்ந்து கிளி தம்மினத்தை விளிபயிற்றும் எனினுமாம். வெளில் — அணில். கோள் - காய் பழு - பழுத்தலை யுடைய பழம். ஊன்றிய குரம்பை என்றது சிறிய குடிசை என் றுணர்த்துதற்கு. குறவர் ஊன்றிய குடிசையின் கூரையில் வேங்கைப்பூ

உதிர்ந்து கிடத்தலால் அக் குடிசையின் தோற்றம் புள்ளிகளையுடைய புலியுருவம்போற் றோன்ற அது கண்ட யானை அதனைப் புலி என்றே நினைந்து வெருவி ஓடும் என்றவாறு.

'யானையானது வெருவத்தகாத குரம்பையை வெருவத் தக்க புலி யென்று கருதித் தனக்குணவாகிய கழை முரியப் பாய்ந்தாற் போல வெருவத்தகாத எங்கள் தமரை வெருவி வரைய முயலாது திரியவே நாங்களே இறந்துபடும்படியாயிற்று'' என்பது இதன் உள்ளுறை என்பர் பழையவுரையாசிரியர்.

வரைந்து கொள்ளற்கு வேண்டிய பொருள் மிகவுமுடையை என்பாள் மழைபடு சிலம்பின் நல்வரை நாட என்று விளித்தாள்.

க - ரு : யாயே.........ஓருயிரம்மே

(இ - ள்.) யாய் கண்ணினுங் கடுங் காதலள் - எம்மன்னை தன்கண்ணினுங் காட்டில் இவள் பால் பேரன்புடையளாய் இவளைப் பாதுகாப்பவள் ஆவள்; எந்தையும் நிலன் உறப் பொறாஅன் - எமதந்தைதானும் இவள் அடிகள் நிலத்தின்கட் பொருந்து தலையும் பொறுதவனாய்; இலகுறுமகள் எவன் சீறடி சிவப்ப இயங்குதி எனனும் - ஏடி! சிறுமி நீ யாது செய்தற்கு இவ்வாறு நின சிறிய அடிகள் சிவக்கும்படி திரிகின்றனை? என்று கடிந்து கூறுவன்; யாமே பிரிவு இன்று இயைந்த துவரா நட்பின் - இனி யாங்களோ ஒருபொழுதும் பிரிதலின்றிப் பொருந்திய உவர்த்தலில் லாத கேண்மையாலே; இருதலைப் புள்ளின் ஓர் உயிரம் - இரண்டு தலைகளையுடைய தொரு பறவையின் உடலிலுறையும் ஓர் உயிரே போல்கின்றேம்; என்க.

(வி - ம்.) கண்ணை இமை காப்பது போல் அன்னை இவளை விழிப் புடன் காக்கின்றனள் எந்தை இவள் சிறிது புறம் போகவும் பொறுத வனாய் எப்பொழுதும் காக்கின்றனன் என்று இறசெறிப்பறி வுறுப்பாள்: யாயே......என்னும்' எனருள். யாமே இருதலைப்புள்ளின் ஓருயிரம் என்புழி யாம் எனபது நீயும் யானும் எனத் தலைவனை உளப்படுத்தோதிய படியாம். யானும் அவளும் எனத் தோழி தலைவியை உளப்படுத்திக் கூறியதனறு. என்னை? இது தோழி கூற்றன்றோ எனின், தோழி ஈண்டு யான் என்றது தலைவியையேயாம். இதனை,

> "தாயத்தி னடையா வீயச் செல்லா
> வினைவயிற் றங்கா வீற்றுக் கொளப்படா
> எம்மென வருஉங் கிழமைத் தோற்றம்
> அல்ல வாயினும் புல்லுவ வுளவே''

எனவரும் (தொல்) பொருளியல் (உகூ) நூற்பாவான் உணர்க.

எனவே, நீயும் தலைவியும் இருதலைப் புள்ளின் ஓருயிர் அன்னிர் என்று தோழி கூறினள் என்றுணர்ந்து கொள்க. இவ்வாறு தோழி

தலைவியைத் தானாகவே கூறுவதனை "விரும்பிநீ என்தோள் எழுதிய தொய்யிலும்" எனத் தோழி தலைவி தோளைத் தன்றோளாகக் கூறுகின்ற (கலித்தொகை—௧௮) பிற இலக்கியங்களானு முணர்க.

௧௩ - ௧௪ : நீ வரின்.........வாழலள்

(இ - ள்.) நீ வரின் - இங்ஙனம் உயிர் ஒன்றாகிய நீ இடையூறு மிக்க இரவுக்குறிக்கண் வருவாயாயின் நினக்கு ஏதம் நிகழுமே என்று கருதுகின்ற; மெல்லியல் வாழலள் - மெல்லிய தன்மையுடைய எம்பெருமாட்டி உயிர் வாழ்ந்திராள் காண்; என்பதாம்.

(வி - ம்.) அவட்கும் நினக்கும் உயிர் ஒன்றாகலின் நீ இரவுக் குறி வரின் நினக்கு ஏதம் நிகழ்தல் கூடும் என்று எண்ணுமெண்ணத்தாலேயே அவள் உயிர்வாழ்கிலள்; என்னை? அவள் மெல்லியல் ஆதலான் என அவள் உயிர் வாழாமைக்கு ஏதுவும் எடுத்தோதினள் என்க. ஆதலால் நீ இரவினும் வாரற்க என்பது குறிப்பெச்சப் பொருளாகலின் இஃது இரவுக்குறி மறுத்து வரைவு கடாவியவாறாயிற்று.

இதனை, நாட! யாய் கடுங்காதலள் எந்தையும் பொருஅன் எவன் இயங்குதி என்னும், நீயிர்; ஓருயிர் உடையீர் நீ (இரவின்) வரின் உயிர் வாழலள்; மெல்லியள் ஆதலின் என்றியைக்க.

இனி இங்ஙனம் கூறாமல் யாமே இருதலைப்புள்ளின் ஓருயிரம் என்பதற்குத் தலைவியும் யானும் ஓருயிரம் என்பதுபடப் பிறர் கூறும் உரை தலைவிஇறந்துபடின் யானும் இறந்துபடுவன் ஆதலின் வாரற்க எனப் பொருந்தா உரையாய்ச் சிறவாமை நுண்ணுணர்வாற் கண்டு கொள்க.

(பா - வே.) ௨. பெருஅச் சிறடி; ௮. பழூஉப்பயன்; ௧0. வேங்கை பாய; ௧௪. லொருநாள். (௧௨)

## செய்யுள் ௧௩

திணை : பாலை.

துறை : பொருள் வயிற் பிரியலுற்ற தலைமகனைத் தோழி செலவழுங்குவித்தது; உடம்பட்டதூஉமாம்.

(து - ம்.) அஃதாவது-பொருளில்லார்க்கு ஏனைய அறமும் இன்பமும் இல்லை என்பதுபற்றித் தலைவியைப் பிரிந்துபோய்ப் பொருளீட்ட வேண்டும் என்று தலைவன் கருதினனாக: தோழி அவன் கருத்தைக் குறிப்பாலுணர்ந்து பெருமானே நீ இப்பொழுது பொருள்வயிற் பிரியின் எம்பெருமாட்டி அப்பிரிவாற்றாது வருந்துவள் என்பது கருதி யான் நீ பிரியற்க என்று சொல்கிலேன். பிரிந்து நீ செல்லும் வினை முற்றுவதாயின் நீ செல்க. அவ்வினை முற்றுமெய்தியுமோ? என்று ஐயுற்றே யான் பிரியற்க! என்கின்றேன். முற்றுமாயிற் செல்க! என்று கூறித் தலைவனைச் செலவழுங்குவித்தது. முற்றுமாயிற் செல்க என்றலின் இச் செய்யுளைச் செலவுடம்பட்டது என்று கோடலுமாம் என்றவாறு.

(இ - ள்.) இதற்கு, "பெறற்கரும் பெரும் பொருள்" என்னும் (தொல் - கற். ௯) நூற்பாவின்கண், "பிரியுங்காலை எதிர்நின்று சாற்றிய மரபுடையெதிரும்" எனவரும் விதி கொள்க.

தன்கடற் பிறந்த முத்தி னாரமு
முனைதிறை கொடுக்குந் துப்பிற் றன்மலைத்
தெறலரு மரபிற் கடவுட் பேணிக்
குறவர் தந்த சந்தி னாரமு
௫. மிருபே ராரமு மெழில்பெற வணியுந்
திருவீழ் மார்பிற் றென்னவன் மறவன்
குழியிற் கொண்ட மராஅ யானை
மொழியி னுணர்த்துஞ் சிறுவரை யல்லது
வரைநிலை யின்றி யிரவலர்க் கீயும்
௧௦. வள்வா யம்பிற் கோடைப் பொருநன்
பண்ணி தைஇய பயங்கெழு வேள்வியின்
விழவுமீது நிகழ்வ தாயினுந் தெற்கேர்பு
கழிமழை பொழிந்த பொழுதுகொ ளமையத்துச்
சாய லின்றுணை யிவட்பிரிந் துறைதி
௧௫. ரேயின் றுக செய்பொருள் வயிற்பட
மாசி றூமடி விரிந்த சேக்கைக்
கவவின் புறுமைக் கழிக வளவய
லழனுதி யன்ன தோகை யீன்ற
கழனி நெல்லின் கவைமுத லலங்க
௨௦. னிரம்பகன் செறுவின் வரம்பணையாத் துயல்வரப்
புலம்போடு வந்த பொழுதுகோள் வாடை
யிலங்குபூங் கரும்பி னேர்கழை யிருந்த
வெண்குருகு நரல வீசு
நுண்பஃ றுவலைய தண்பனி நாளே.

—பெருந்தலைச்சாத்தனார்.

(உரை)

௧ - ௧௨ : தன்கடற்.........நிகழ்வதாயினும்

(இ - ள்.) தன்கடல் பிறந்த முத்தின் ஆரமும் - தனது தென் கடலிற் பிறந்த முத்தாகிய ஆரமும்; முனை இறைகொடுக்கும் துப்

பின் தன்மலை-பகைவர் அஞ்சிப் போர்க்களத்திலேயே தாம் செலுத்தக்கடவ இறைப்பொருளைச் செலுத்துதற்கு வலிமையை யுடைய தனது மலையாகிய பொதியிலினின்றும்; குறவர் தெறல் அரு மரபின் கடவுள் பேணி - அம் மலையில் வாழ்கின்ற குறவர் பகைவரால் வெல்லுதல் அரிதாகிய முறைமையினையுடைய அம் மலைக்குரிய கடவுளாகிய முருகனை வழிபாடு செய்து; தந்த சந்தின் ஆரமும் - அன்போடு கையுறையாகக் கொணர்ந்து கொடுத்த சந்தனமாகிய ஆரமும் என்னும்; இரு பேர் ஆரமும் எழில் பெற அணியும் - இரு வேறு வகைப்பட்ட பெருமையினையுடைய ஆரங்களும் அழகுறும்படி அணிகின்ற; திருவீழ் மார்பின் தென்னவன் மறவன் - திருமகள் விரும்பியுறைதற்கிடனான மார்பினையுடைய பாண்டியனுடைய படைத்தலைவனும்; குழியில் கொண்ட மராஅ யானை மொழியின் உணர்த்தும் சிறுவரை யல்லது - தன்னால் படுகுழியில் வீழ்த்துக் கைப்பற்றிக் கொள்ளப்பட்ட மக்களொடு பழகியறியாத காட்டியானைகளை, தொழிலில் பழக்குதற் பொருட்டு அதற்குரிய சொற்களால் பயிற்றுவித்தற்கு வேண்டிய அச்சிறிய காலத்தின் அளவிற்கு மட்டுமே அவற்றைத் தன்னுடையனவாக வரை செய்து நிறுத்திக் கொள்வதன்றி; இரவலர்க்கு ஈயும் - அவற்றின் பயிற்சி முற்றிய பின்னர்த் தன்பால் வைத்துக் கொள்ளாமல் இரவலர்களுக்கு வழங்கி விடுகின்ற சிறந்த வள்ளன்மையை யுடைய; வள் வாய் அம்பின் கோடைப் பொருநன் - கூரிய நுனியையுடைய அம்புகளாலே கோட்டூர்ப் பறந்தலையில் பகைவரோடு பொருது வாகைகொண்ட வீரனும் ஆகிய; பண்ணி தைஇய - பண்ணி என்பான் அப் போர்க்களத்திலே செய்த; பயம் கெழு வேள்வியின் - பயன் மிகுந்த களவேள்வியினுங்காட்டில்; விழுமிது நிகழ்வது ஆயினும் - சிறந்த பயன் விளைவதாயிருப்பினும்; என்க;

(வி - ரை.) தன் கடல், தன் மலை என்பவற்றில் தன் என்னும் பொதுப் பெயர்கள் தென்னவன் மேலன முனை: ஆகுபெயர்; பகைவர். துப்பு - வலிமை. துப்பினையுடைய தனது என்க. கடவுள் - முருகன். குறவர் கையுறையாகக் கொணர்ந்து தந்த சந்தின் ஆரம் என்க: முத்தின் ஆரம் சந்தின் ஆரம் என்பவற்றுள் இன்சாரியை அவ்வழிக்கண் வந்தன. பாண்டியனுடைய மார்பிலணியப்படுவதனால் இவ்வாரங்கள் அழகுறுகின்றன என்பாள் 'இருபேராரமும் எழில் பெற அணியும் தென்னவன்' என்றாள். மறவன் ஈண்டுப் படைத்தலைவனாகிய மறவன் என்றவாறு.

குழி - யானை படுக்கும் குழி. மராஅ - மருவுதலில்லாத. பழகாத என்றவாறு. மறவன் யானைகளைப் பிடித்துப் பழக்குந்துணையும் தன்னுடையனவாகக் கொள்வன்; பழக்கியவுடனே அவற்றை இரவலர்க்கீவன் என்க. இஃது அவன் வண்மைச் சிறப்புணர்த்தியபடியாம். மொழி யானைகளைப் பழக்குதற்கியன்ற வடமொழி; அவை ஆது, ஆது;

அப்புது, அப்புது: ஐ ஐ என்பன. இதனை, "கவை முட்கருவியின் வடமொழி பயிற்றி...கவளம் கைப்ப" என்னும் முல்லைப்பாட்டின் (நச்.) உரையாலுணர்க. கோடையிற் பொருத பொருநன் என்க. கோடை - கோட்டூர். விழுமிது - சிறந்த பயன்.

கஉ - கச: தேற்கேர்பு............பிரிந்து

(இ - ள்.) கழி மழை தெற்கு ஏர்பு பொழிந்த பொழுது கொள் அமையத்து - கார்ப் பருவம் கழிதற்கு அடையாளமாக முகில்கள் தென்றிசைக்கண் எழுந்துபோய் மழை பொழிந்த கூதிர்ப் பருவத்தை உலகங்கொள்ளுகின்ற பிரிந்துறைய வொண்ணாத செவ்வியிலே; இன் துணை சாயல் இவள் பிரிந்து-நினக்கு இனிய துணையாகி நன்மை செய்த மென்மையுடைய எம்பெருமாட்டியின் நிலை என்னும் என்று எண்ணிப்பாராமல் பிரிந்துபோய் என்க.

(வி - ம்.) கழிமழை - கார்ப்பருவம் கழிதற்கு அடையாளமாகிய மழை என்க. கூதிர்ப்பருவத்தே வாடை தொடங்குதலான் முகில்கள் தென்றிசையிலெழுந்துபோய்ப் பொழிந்ததென்க. பொழுது கார்ப் பருவத்திற்கு அடுத்து வரும் கூதிர் என்க. அமையம் என்றது காதலர்கள் பிரிந்துறைய வொண்ணாத செவ்வி என்றவாறு. நினக்குத் துணையாகிய இவட்கு நீ துணையாகாது பிரிந்துறையின் செய்ந்நன்றி கொன்றனையாதலை என்பது குறிப்புப் பொருள். இங்ஙனம் கூறாது பிறர் கூறும் உரை பொருந்தாமை யுணர்க. பழையவுரையாசிரியர் கருத்தும் எங் கருத்தேயாதலை (கச) "சாயலிவள்......உதவி கூறி" என வரும் அவர் குறிப்புரையாலுணர்க.

கள - உச: வளவயல்............பனிநாளே

(இ - ள்.) வளவயல் கழனி நெல் ஈன் கவை முதல் தோகை ஈன்ற அழல் நுதி அன்ன அலங்கல் - வளமிக்க வயல்களுள் வைத்து நன் செய்யில் விளையும் இயல்புடைய செந்நெல் விதை யீன்ற பயிரிற் கிளைத்த பயிர் தோகையோடு விடுத்த விளக்கின் நுனிபோன்ற கதிர்கள்; நிரம்பு அகன் செறுவின் வரம்பு அணையா துயல்வர - பயன் நிறைந்த அகன்ற அக் கழனிகளின் வரம்பே படுக்கையாகக் கிடந்து புரளா நிற்ப; புலம்பொடு வந்த பொழுதுகொள் வாடை - பிரிந்துறைவார்க்குத் தனிமைத் துன்பத்தைக் கொண்டுவந்த தனக்கியன்ற பனிப் பருவத்தைக் கொண்ட வாடையானது; இலங்கு பூங்கரும்பின் ஏர் கழை இருந்த வெள் குருகு நரல வீசும் - விளங்குகின்ற பூவையுடைய கரும்பினது எழுச்சியையுடைய கோலின்மேல் இருந்த வெள்ளிய நாரை துன்புற்று ஒலிக்கும்படி வீசா நின்ற; நுண் பல் துவலைய தண் பனி நாள் - நுண்ணிய பலவாகிய பனித்துகள்களையுடைய இந்த நாளிலே; என்க.

(வி - ரை.) வயல்கள் நன்செய் புன்செய் என இருவகைப்படும். அவற்றுள் நன்செயைக் கழனி என்றாள். இனி கழனி நெல் என்பது நெல்லினுள் ஒருவகை எனக் கோடலுமொன்று. அழனுதியன்ன நெல், கழனி நெல் தோகையின்ற அலங்கல் என்றும் கூட்டுக. நெற்பயிர் கதிரீனுங்கால் அகன்றதொரு தோகையோடு கதிரீனுதல் இயற்கை. தோகையோடீன்ற அலங்கல் என்க. கவை கிளைத்த பயிர் கவைகளையுடைய முதலுமாம். முதல் - முன்னர் நட்ட அலகு. இக்காலத்தும் இப் பெயர் வழங்கப்படுகின்றது. பயனிரம்பு அகன் செறுவிற்கதிர் வரம்பிற்படுத்துப் புரள்தலின் வரம்பணையாத் துயல்வர எனப்பட்டது. பொழுது - தனக்குரிய பனிப்பருவம். கழை - கோல். குருகு துன்புற்று நரல என்க.

கச - கஎ: உறையின் .........கழிக

(இ - ள்.) உறையின் - பொருளீட்டற் பொருட்டு அயற்புலத்திலே தங்குவாயாயின்; மாசு இல் தூமடி விரிந்த சேக்கை - எம்பெருமாட்டி குற்றமற்ற வெள்ளாடை விரிக்கப்பட்ட படுக்கையின்கண்; கவவு இன்பு உறாமைக்கழிக - நின்னொடு கவவுக் கை நெகிழாமல் முயங்குதலானே எய்தும் பேரின்பம் அவட்கு இல்லையாய்க் கழிக! அதுகருதி வருந்துவேனல்லேன். மற்று; செய் பொருள்வயிற் பட - நீ முயன்று ஈட்டுகின்ற பொருள்வயிற் பிரியுங்கால்; நோய் இன்றாக - உனக்குத் துன்பம் இல்லையாய் அப் பொருள் கையுற வேண்டுமே அதுபற்றியே கவல்கின்றேன் காண்; என்பதாம்.

நீ செய்பொருள் வயிற்பட இவள் பிரிவாற்றாமையால் இறந்துபடுவாள் ஆகலின் உனக்குத் துன்பம் வருதல் ஒருதலை என்பது குறிப்பு.

இனி இதனை "பெருமானே நீ ஈட்டும் பொருளால் பண்ணி வைதிய வேள்வியின் விழுமிது நிகழ்வதாயினும் நினக்கு இன்றுணையாகிய இவளை நீ பிரிவது அறனன்று. அது கருதாது நீ பிரிந்துறையின் இவள் இன்புறாமைக் கழிக! அது பொருட்டன்று. நீ முயலும் முயற்சியில் நினக்கு நோயின்றாக! அதுவே எம் வேண்டுகோள் என் றியைபு காண்க.

இனி. இவட்பிரிந்துறைதல் அறனன்றாயினும் ஆகுக; இவள் இன்புறாது கழியினும் கழிக; இல்லறம் இனிது நடைபெற இன்றியமையாப் பொருள்வயிற் பிரிக! அவ்வழி நோயின்றாக! என்றுடம்பட்டாள் எனினுமாம்.

(பா - வே.) க. தண்கடல்; உ. முறைதிறை; ௩. தொல்லரு; கஉ. பொழிந்த; (கஎ)

## செய்யுள் கஅ

திணை: முல்லை.

துறை: பாணன் தனக்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது பிரிவாற்றாது வருந்தும் தலைவி கேட்டுத் தன் துயர் தீர்த்தற்பொருட்டுத் தலைவன் வரவினைப் பாணன் தனக்குப் பாங்காயினர் கேட்பக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை "சிலம் பெயர்ந்துறைதல்.........பாணர்க்கும் யாத்தவை உரிய" (தொல் - கற். உஅ) என்னும் விதியினாற் கொள்க.

அரக்கத் தன்ன சேங்நிலப் பெருவழிக்
காயாஞ் செம்ம லாஅய்ப் பலவுட
னீயன் மூதாய் வரிப்பப் பவளமொடு
மணிமிடைந் தன்ன குன்றங் கவைஇய
ரு. வங்காட் டாரிடை மடப்பிணை தழீஇத்
திரிமருப் பிரலை புல்லருந் துகள
முல்லை வியன்புலம் பரப்பிக் கோவலர்
குறும்பொறை மருங்கி னறும்பூ வயரப்
பதவுமேய லருந்து மதவுநடை நல்லான்
க0. வீங்குமாண் செருத்த றீம்பால் பிலிற்றக்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு
மாலையு முள்ளா ராயிற் காலை
யாங்கா குவங்கொல் பாண வென்ற
மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன்
கரு. செவ்வழி நல்யா ழிசையினென் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்ந்நிறுத்
தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே
விடுவிசைக் குதிரை விலங்குபரி முடுகக்
கல்பொரு திரங்கும் பல்லார் நேமிக்
உ0. கார்மழை முழக்கிசை கடுக்கு
முனைநல் லூரன் புனைநெடுந் தேரே.

—ஒக்கூர் மாசாத்தனார்.

(உரை)

க - ரு: அரக்கத்தன்ன..........ஆரிடை

(இ - ள்.) நமரங்காள்:— அரக்கத்து அன்ன செந்நிலப் பெருவழி - சாதிலிங்கம் போன்ற சிவந்த நிறமமைந்த நிலத்தி

லமைந்த பெரியவழியில்; காயா செம்மல் தாஅய் - காயாவினது வாடற் பூக்கள் பரவப்பட்டு; ஈயல் மூதாய் பல வரிப்ப - அவற்றின் மேலே தம்பலப் புழுக்கள் பற்பல வரியுண்டாக ஊர்ந்து செல்லுதலாலே; பவளமொடு மணி மிடைந்தன்ன குன்றம் கவைஇய - பவளத்தோடு நீலமணி விரவிக்கிடந்தாற் போன்று தோன்றுகின்ற மலைகளை அகத்திட்ட; அங்காட்டு ஆரிடை - அழகிய காட்டினூடே செல்லுதற்கரிய இடங்களினெல்லாம் என்க.

(வி - ரை.) பாணன் தன் சுற்றத்தார்க்குச் சொல்கின்றானாதலின் கமரங்காள் எனக் கேட்போர் வருவித்துரைத்தாம். அரக்கு - சாதிலிங்கம். அத்து: சாரியை. அரக்கு நிலத்திற்குவமை. தேரியங்கும் வழியாதல் தோன்றப் பெருவழி என்றான். செம்மல் - வாடியுதிர்ந்த பூக்கள். தாஅய் - தாவப்பட்டு. ஈயல் மூதாய் - தம்பலப் புழு; இந்திரகோபப் புழு என்பதுமது. இந்திரகோபப் புழுவிற்குப் பவளமும் காயாம்பூவிற்கு நீலமணியும் உவமைகள். இடை - இடம்.

கூ - கஉ : மடப்பிணை........உள்ளாராயின்

(இ - ள்.) திரி மருப்பு இரலை மடப்பிணை தழீஇ புல் அருந்து உகள-முறுக்கேறிய கொம்புகளையுடைய ஆண்மான் இளமை கெழுமிய பிணைமானோடு புன்மேய்ந்து களிப்பினால் துள்ளா நிற்பவும்; கோவலர் முல்லை வியன் புலம் பரப்பி குறும் பொறை மருங்கின் நறும்பூ அமர - ஆயர்கள் தமது ஆனிரையை முல்லை நிலமாகிய அகன்ற நிலத்திலே பரந்துசென்று மேயவிட்டுக் குறிய காட்டின் பக்கலிலே சென்று மலர் கொய்து விளையாடவும்; பதவு மேயல் அருந்து மதவு நடைநல் ஆன்-ஆங்கு முல்லைப்பரப்பின்கண் அறுகம் புல்லை வயிறு நிரம்ப மேய்ந்த வலிய நடையையுடைய சிறந்த கற்றுக்கள்; வீங்கு மாண் செருத்தல் தீம்பால் பிலிற்ற-பால்மிகுதியாகச் சுரத்தலாலே பருத்துள்ள மாட்சிமையுடைய தம்மடி இனிய பாலைப் பிலிற்றாநிற்ப; கன்று பயிர் குரல மன்று நிறை புகுதரும் - தமது கன்றினை அழைக்குங் குரலையுடையனவாய் ஊர்மன்றம் நிரம்பும்படி வந்து புகுகின்ற; மாலையும் உள்ளாராயின் - இந்த மாலைப் பொழுதினும் எம்மை நினைந்து வாராராயின்; என்க.

(வி - ரை.) திரி - முறுக்கு. இரலை - ஆண்மான். ஆர்ந்துகள என்பது, அருந்துகள என விகாரமெய்திற்று. பரப்பி என்பதற்கு ஆனிரையை என்னும் செயப்படுபொருள் தகுதியாற் பெய்துரைக்க. குறும்பொறை - சிறிய காடு, சிறிய மலையுமாம். பதவு - அறுகம்புல். நல்லான் என்புழி நன்மை சிறந்த வகையைக் குறித்து நின்றது. செருத்தல் - மடி. மாலையும் என்புழி தனிமைத்துன்பம் மிகுதற்குரிய இந்த மாலையும் என்பதுபட நிற்றலின் உம்மை உயர்வு சிறப்பு.

### ௧௨ - ௧௪ : காலை.........செல்லேன்

(இ - ள்) பாண காலை யாங்கு ஆகுவம் என்ற - பாணனே! யாம் எதிர்வருமிரவுக்காலத்தே எந்நிலையினை எய்துவேமோ அறிகிலேங்காண் என்று கூறிய; மனையோள் சொல் எதிர் சொல்லல் செல்லேன் - எமபெருமாட்டியின் கையறவுடைய வினாவிற்கு விடை சொல்லமாட்டேனாய்: என்க.

(க) அரக்கத்தன்ன........(௧௪) பாண! என்னுமளவும் பாணன் தலைவி தன்னை நோக்கிக் கூறியவற்றைக் கொண்டு கூறியபடியாம். காலை என்றது காலம் என்னும் பெயர் மாத்திரையாய் எதிர்காலத்தைக் குறித்து நின்றது. யாங்காகுவம் என்னும் வினா அவள் கையறவினை வற்புறுத்து நின்றது. அதுகேட்டு யானும் எம்பெருமாட்டியின் துயர் தீர்க்க வழியேதுங் கண்டிலேன் எனத் தன் கையறவு கூறுவான் ''சொல்லெதிர் சொல்லல் செல்லேன்'' என்றான்.

### ௧௫ - ௨௧ : செவ்வழி.........தேரே

(இ - ள்.) பையுள் மெய்ந் நிறுத்தி - எம்பெருமாட்டியின் துயர்நிலைக்கிரங்கி எனக் கெய்திய துன்பத்தை என் மெய்யின்கண் மெய்ப்பாடாமளவில் நிறுத்தி, நல்யாழ் செவ்வழி இசையினென் பையெனக் கடவுள் வாழ்த்தி - என் கையகத்ததாகிய நல்ல யாழ் நரம்பினை வருடிச் செவ்வழிப்பண்ணை இசைத்து மெல்லக் கடவுளை வாழ்த்தி; அவர்திறம் செல்வேன் யான் - எம்பெருமான் பாற் சென்ற யான்; விடுவிசைக் குதிரை விலங்கு பரி முடுக - தூண்டி விட்ட குதிரைகள் எதிர்ப்படுந் தடைகளுக்கு விலகிச் செல்லுஞ் செலவினை மேலும் வலவன் விரையத் தூண்டுதலாலே; கல் பொருது இரங்கும் பல் ஆர் நேமி-வழியிலுள்ள கற்களிலே மோதி ஒலிக்கின்ற பலவாகிய ஆரங்களையுடைய உருளையினது ஒலியானது; கார் மழை முழக்கு இசைகடுக்கும்-கார்ப்பருவத்து முகில் முழக்குகின்ற ஒலியை ஒக்கின்ற; மூனை நல்லூரன் - போர்க்களமாகிய நல்ல மாற்றாருடைய ஊரிலே உறைந்த நம் பெருமானுடைய; புனை நெடுந்தேர் கண்டனென் - அணிசெய்யப்பட்ட நெடிய தேரினது வரவினைக் கண்கூடாகக் கண்டேன் என்பதாம்.

(வி - ம்.) இது தலைவன் வரவெதிர் நோக்கித் தலைவி வருந்துவாளைக் கண்ட பாணன் அவள் கையறவினை அவள் கூற்றாலுணர்ந்து தானும் கையறவுடையனாய் அவள் நிலையினைத் தலைவன்பாற் சொல்ல விரைபவன் எதிரே தலைவன் தேர்வரவு கண்டு விரைந்து மீண்டு வந்து தலைவி கேட்பத் தன் பாங்காயினார்க்குக் கூறியதென வறிக.

தலைவிக்கு ஆறுதல் கூறவறியாமையால் திகைத்துத் தன் யாழை வருடிப் பண்ணெழீஇ எம் பெருமாட்டியைக் கடவுள் காப்பாளாக என மெல்லத் தன்னுள் வேண்டிக் கடவுளைப் பாணன் வாழ்த்தினன்; என்க.

எம் பெருமாட்டியின் துயர் கேட்டு அழவேண்டிய யான் அது செய்யாமல் அத் துன்பத்தை என் மெய்ப்பாட்டளவிலே அமைத்துக் கொண்டேன் என்பான், பையுள் மெய்க்கிறுத்து என்றான். தலைவன்பாற் சென்று எம் பெருமாட்டியின் துயர்நிலை அறிவிக்கக் கருதி விரைந்தேன் என்பான், அவர் திறம் செல்வேன் என்றான். தலைவி தெளிதற் பொருட்டு யானே கண்கூடாகக் கண்டேன் அவன் தேர் வரவினை என்கின்றான். தலைவன் உற்றுழியுதவச் சென்று பாசறையிடத்திருந்தானாதலின் முனை நல்லூரான் எனப் பெயர் போலக் கூறினன். அவன் வாகை சூடி வருவதுணர்த்துதற்குப் புனை நெடுந்தேர் என்று விதந்தான்.

இனி, இதனை, (நமரங்காள்) மனையோள் காட்டாரிடை தழீஇ உகளப் பரப்பி அயரப் பிலிற்றப் புகுதரும் மாலையும் உள்ளாராயின் யாங்காகுவங்கொல் பாண என்ற, மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன் இசையினென் வாழ்த்தி இறுத்துச் செல்வேன் யான் கண்டேன் முடுக இரங்கும் நேமி கடுக்கும் ஊரன் தேர்'' என இயைக்க.

(பா - வே.) ௩. பரப்ப; ௬. புல்லருந்துகளு; ௮. மருங்கினிறும்பூ தயரப்; ௧௦. பிலிற்றி. (௧௪)

## செய்யுள் ௧௫

**திணை:** பாலை.

**துறை:** மகட் போக்கிய தாய் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - களவொழுக்கத்தில் இடையூறு மிக்கமையால் தலைவி தமரறியாமல் தலைவனுடன் இரவிற் சென்று விட்டாளாக, வழிநாள் அங்ஙிகழ்ச்சியறிந்த நற்றாய் வருந்திக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "தன்னும் அவனும்" எனவரும் நூற்பாவின்கண் (தொல்-அகத்-௩௬) 'தெய்வம்' என்பதன்கண் அமைத்துக் கொள்க.

எம்வெங் காம மியைவ தாயின்
மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர்
கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த
பாக லார்கைப் பறைக்கட் பீலித்
௫. தோகைக் காவிற் றுளுநாட் டன்ன
வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பிற்
செறிந்த சேரிச் செம்மன் மூதூ
ரறிந்த மாக்கட் டாகுக தில்ல
தோழி மாரும் யானும் புலம்பச்
௧௦. சூழி யானைச் சுடர்ப்பூ ணன்னன்

பாழி யன்ன கடியுடை வியனகர்ச்
செறிந்த காப்பிகந் தவனொடு போகி
யத்த விருப்பை யார்கழல் புதுப்பூத்
துய்த்த வாய துகணிலம் பரக்கக்
கரு. கொன்றை யஞ்சினைக் குழற்பழங் கொழுதி
வன்கை யெண்கின் வயநிரை பரக்கு
மின்றுணைப் படர்ந்த கொள்கையொ டோராங்குக்
குன்ற வேயிற் றிரண்டவென்
மென்றோ ளஞ்ஞை சென்ற வாறே.

—மாமூலனார்.

(உரை)

க : எம்.........ஆயின்

(இ - ள்.) எம் வெம் காமம் இயைவது ஆயின் - அளியே மாகிய எம்முடைய பெரிய விருப்பம் (தெய்வத் திருவருளாலே) கை கூடுவதாயின் என்க.

(வி - ம்.) மாந்தர் விரும்பியபடி நிகழ்தல் அருமையாதலின் இயைவது ஆயின் என்பது தெய்வத்திருவருளால் கைகூடுவதாயின் என்பதுபட நின்றது. ஆசிரியர் நச்சினார்க்கினியரும், இச் செய்யுளை நற்றாய் கூற்றிற்கு எடுத்துக்காட்டி (இது) தெய்வத்தொடு படுத்துப் புலம்பியது என்றோதுதல் அறிக. (தொல்-அகத்-கக. உரைமேற் கோள்.)

உ - கஉ : தோழி.........போகி

(இ - ள்.) தோழிமாரும் யானும் புலம்ப - தன் ஆருயிர்த் தோழிமாரும் அன்னையாகிய யானும் தனிமையுற்று ஆற்றாமை யாற் பெரிதும் வருந்தும்படி எம்மைக் கைவிட்டு; சூழி யானைச் சுடர்ப்பூண் நன்னன் பாழி அன்ன - முகபடாமணிந்த யானையினை யும் ஒளியுடைய அணிகலன்களையுமுடைய நன்னன் என்னும் குறு நிலமன்னனுடைய பாழி என்னுந் தலைநகரம் போன்ற; கடி உடை வியல் நகர் - காவலமைந்து அகன்ற எம்மில்லத்தின்கண்; செறிந்த காப்பு இகந்து - நெருங்கியிருக்கின்ற அக் காவலையும் கடந்து புறப் பட்டு; அவனொடு போகி - பிறள் ஒருத்தியின் மகனோடு யாங்கள் அறியாவண்ணம் போய்; என்க.

(வி - ம்.) தோழிமாரும் யானும் என்றது, உயிர்த் தோழிமாரும் தன்னை ஈன்று புறந்தந்த அன்னையாகிய யானும் என்பதுபட நின்றது.

புலம்புதல் - சுற்றத்தார் சூழலிலிருந்தேயும் தனித்திருப்பது போன்ற தொரு துன்பவுணர்ச்சியால் வருந்துதல்.

நன்னன்-ஒரு குறுநிலமன்னன். இவன் வரலாற்றை யாமெழுதிய மலைபடு கடாஅத் துரையில் பாட்டுடைத் தலைவன் வரலாறு என்னும் பகுதியில் விரிவாகக் காண்க. இவனுடைய பாழி என்னு நகரம் தலைவியின் இல்லத்திற்குவமை. வெறுப்பினால் தலைவனை அவன் என்று ஏதிலானைச் சுட்டுமாறு சுட்டினாள். பிறள் மகனாகிய ஒருவனோடு என்றவாறு. இது, மகள் செய்த தீமை குறித்தவாறும்.

கரு - கக: அத்த...........சென்றவாறே

(இ - ள்.) வன்கை எண்கின் வயநிரை - வலிய கைகளையுடைய கரடியின் வலிமிக்க கூட்டமானது; அத்த இருப்பை ஆர் கழல் புதுப்பூத் துய்த்த வாய - கடத்தற்கரிய வழியிலே நிற்கின்ற இருப்பை மரத்தினின்றும் காம்பு கழன்றுதிர்ந்த புதிய பூக்களை இனிதாகத் தின்ற வாயையுடையனவாய்; நிலம் துகள் பரக்க கொன்றை அம்பழம் கொழுதி - நிலத்தினின்றும் துகளெழுந்து பரவுமாறு ஓடி அயலினுள்ள கொன்றையினது அழகிய கிளைகளிலே தூங்குகின்ற உட்டுளையமைந்த பழங்களையும் முரித்துத் தின்று பின்னரும்; பரக்கும் - அவை தியின்றி யாண்டும் பரவிச் செல்லுதற்கிடனாய; குன்ற வேயில் திரண்ட என் மெல் தோள் அஞ்ஞை - மலையிடத்தே செழித்தோங்கிய மூங்கில் போன்று திரண்டுள்ள மெல்லிய தோள்களையுடைய என் அன்னை; இன்துணைப படர்ந்த கொள்கையொடு ஓர் ஆங்குச் சென்ற ஆறு - தன் மனக்கினிய துணைவன்பாற் சென்ற கற்பென்னும் இண்ணிய மேற்கோளுடைய நெஞ்சத்தோடு அவனுடன் ஒருங்கு கூடிச் சென்ற வழியானது என்க.

(வி - ம்.) அத்தம்-கடத்தற்கரிய வழி. ஆர்-காம்பு. இருப்பையின் புதுப்பூத்தேன் நிரம்பியிருத்தலின் இனிதாகத் தின்றென்பாள் தின்றென்னாது துய்த்து என்றாள். குழறபழம் - குழல் என்னும் இசைக் கருவியியற்றுதற்குரிய பழமுமாம். அவற்றை முரித்து ஒழுகுந்தேனை நக்கித் தின்றலின் கொழுதி என்றாள். கொழுதுதல் - கோதுதல்.

இதன்கண் அமைந்த உள்ளுறை வருமாறு: கரடி ஆர்கழல் புதுப்பூவை நுகர்ந்த வாயையுடையவாய், அதிலே நிறைந்து, கொன்றைப் பழத்தைக் கோதிப் போனாற்போல, அவளுந் தலைவனோடு கூடிய இன்பத்திலே நிறைந்த செருக்கினாலே கூடிவளர்ந்த தோழிமாரையும் பெற்று வளர்த்த என்னையும் புறக்கணித்துப் போனாள் என்றவாறு. இதனை, பழையவுரையாசிரியர் இறைச்சிப் பொருள் என்பர்.

இனி இதன்கண் துணைப்படர்ந்த கொள்கை என்றது, துணைவனையே நினைப்பதல்லது பிறரை நினையாத மேற்கோளாகிய கற்புடை

மையை. இஃது அவளது நன்மை கருதி உள் மகிழ்ந்துரைத்தபடியாம். அஞ்ஞை - அன்னை. அன்பு மிகுதியால் மகளை அன்னை என்கின்றான்.

உ - ஃ : மெய்ம்மலி...........தில்ல

(இ - ள்.) மெய்ம்மலி பெரும்பூண் செம்மல் கோசர் - மெய்ம்மை பேசுதலையே அழகு நிறைந்த பேரணிகலனாகக் கொள்ளுகின்ற தலைமைத் தன்மையுடைய கோசர்கட்குரிய; கொம்மை அம் பசுங்காய்க் குடுமி விளைந்த பாகல் ஆர்கை - திரண்ட அழகிய பசிய காயினது நுனியிலே முதிர்ந்து பழுத்த பாகற் கனியைக் கோதித் தின்கின்ற; பறைக்கண் பீலித் தோகைக் காவின் - பறை என்னும் தோற்கருவியினது கண்போன்ற கண்களை (புள்ளி) யுடைய தோகைகளையுடைய மயில்கள் மிக்க பொழில்களையுடைய; துளுநாட்டு அன்ன - துளுவநாடு போன்று; வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பின் - வறுங்கையோடு தன்பால் வருகின்ற பண்டறிந்திலாத புதிய விருந்தினரைப் போற்றுகின்ற பெருந் தன்மையோடு; செறிந்த சேரிச் செம்மல் மூதூர் - நெருங்கிய தெருக்களையுடைய தலைமையையும் பழைமையையும் உடைய ஊர்களையும்; அறிந்த மாக்கட்டு ஆகுக - அவற்றில் அறனறிந்த சான்றோரையும், உடையதாகுக என்பதாம்.

(வி - ம்.) தில்: விழைவுப் பொருளில் வந்தது. கோசர் வாய்மையிற் பிறழாதொழுகுபவர் என்பதனை, "ஒன்று மொழிக் கோசர்" எனவும் (கசுஉ) "வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை வளங்கெழு கோசர்" எனவும் இந்நூலில் வருவனவற்றானுமுணர்க. பாகற்காய் நுனியிலிருந்து பழுக்கும் ஆகலின் குடுமி விளைந்த பாகல் என்றான். வறுங்கை வம்பலர் - கையிற் பொருளின்றி வருகின்ற புதியவர். இல்வாழ்க்கையின் பண்புகளிற் சிறந்தமையின் விருந்தோம்பலைப் பண்பென்றே கூறினன். வம்பலர்த் தாங்கும் பண்புடைமை கூறியதனால் அறிந்த மாக்கள் என்பதற்கு முகமறிந்த மக்கள் எனல் பொருந்தாமையுணர்க.

இனி, இதனை "எம் காமம் இயைவதாயின், புலம்ப இகந்து போகித் துணைப்படர்ந்த கொள்கையொடு சென்ற அஞ்ஞை சென்ற ஆறு, துளுநாட்டன்ன பண்பின் சேரி மூதூர் அறிந்த மாக்கட்டு ஆகுக!" என்றியைத்துக் கொள்க.

(பா - வே.) கஉ. காப்பிறந்; கஎ. பரிப்ப; கக. மஞ்ஞை. (கடு)

## செய்யுள் கசு

திணை : மருதம்.

துறை : பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைமகன் யாரையும் அறியேனென்றாற்குத் தலைமகள் சொல்லியது.

(து - ம்) அஃதாவது - தலைவன் பரத்தையர் சேரியிற்றங்கி வந்தவன் ஊடியிருந்த தலைவியை நோக்கி யான் பரத்தையர் யாரையும் அறியேன்காண், நீ வாளா ஊடுகின்றனை என்றானாக; அது கேட்ட தலைவி தலைவன் கேண்மை கொண்டுள்ள பரத்தையைத் தான் கண்டமை கூறிப் பின்னும் புலந்தது என்பதாம்.

(இ - ம்.) இதற்கு, "காமக் கிழத்தி தன்மகத் தழீஇ ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும்" எனவரும் (தொல்-கற்-சு) விதி கொள்க.

காமக் கிழத்தி என்பாள் தலைவன் (பரத்தையருள் வைத்து) மனையறத்திற்குரியளாக வரைந்து கொண்டவள் (நச்சி உரை) என்ப.

நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்
தாதி னல்லி யயலிதழ் புரையு
மாசி லங்கை மணிமரு ளவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்
ரு. யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவிற் றமியோற் கண்டே
கூரெயிற் றரிவை குறுகினள் யாவருங்
காணுந ரின்மையிற் செத்தனள் பேணிப்
பொலங்கலஞ் சுமந்த பூண்டாங் கிளமுலை
க0. வருக மாளவென் னுயிரெனப் பெரிதுவந்து
கொண்டன ளின்றோட் கண்டுநிலைச் செல்லேன்
மாசில் குறுமக ளெவன்பே துற்றனை
நீயுந் தாயை யிவற்கென யான்றற்
கரைய வந்து விரைவனென் கவைஇக்
கரு. களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா
நாணி நின்றோ ணிலைகண் டியானும்
பேணினெ னல்லனோ மகிழ்ந வானத்
தணங்கருங் கடவு ளன்னோணின்
மகன்றா யாதல் புரைவதாங் கெனவே.

—சாகலாசனார்.

(உரை)

கள: மகிழ்ந............

(இ - ள்.) மகிழ்ந - எம்பெருமானே! பேதையிவள் அறியாள் எனப் பொய்கூறு தொழிக! என்க.

(வி - ம்.) பேதையிவள் அறியாள் எனப் பொய் கூறுதொழிக! என்பது குறிப்பெச்சத்தாற் போந்த பொருள்.

க - எ: நாயுடை...........குறுகினள்

(இ - ள்.) நாய் உடை முதுநீர் கலித்த தாமரைத் தாதின் அல்லி அயல் இதழ புரையும் மாசு இல் அங்கை - நீர்நாய்களை உடைய பழைய நீர்நிலையினகண் செழித்து வளர்ந்துள்ள செந்தாமரை மலரின் பொருட்டைச் சூழ்ந்துள்ள அகவிதழகளை அடுத்திருக்கின்ற மெல்லிதழை ஒக்கின்ற குற்றமற்ற உள்ளங்கையினையும; பணி மருள் அவ்வாய் - பவளம் போன்று சிவந்த அழகிய வாயினையும; நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல் - நாவினால் திருத்தமாகப் பேசப்படாத கேட்டோர்க்கு நகைச் சுவையைத் தோற்றுவிக்கின்ற இனிய சொல்லையும் உடைய; யாவரும விழையும பொலந்தொடிப புதல்வனை - கண்டோரெல் லாம் விருமபுதறகுக் காரணமான பொன்னாலியன்ற தொடியை யுடைய நம்மரும்பெறல் மகனை; தேர் வழங்கு தெருவில் தமி யோன் கண்டு - அவன சிறுதேர் உருட்டி விளையாடா நின்ற தெருவிடத்தே தனியனாய் ஆடக்கண்ட பொழுது; கூர் எயிற்று அரிவை குறுகினள் - கூர்தத பறகளையுடைய நின் காமக்கிழத்தி அவனை அணுகி நோக்கி என்க.

(வி - ம்.) தூய இல்லறம் நிகழ்தற்கியன்ற பழங்குடியாகிய இவ் வில்லததே இழிந்த பரத்தைமை ஒழுககமும் உளதாகின்றது எனக் கருப்பொருடபுறத்தே இறைச்சிப் பொருள் தோன்றுமாறு நாயுடை முதுநீர்க் கலித்த தாமரை என்றோதினள். கலித்தல் - செழித்தல். தாது: ஆகுபெயர், பொகுட்டு; தாது - பூந்துகள். அதனையுடைய பொகுட்டுக்காயிற்று. அல்லி என்றது பொகுட்டைச் சூழ்ந்துள்ள நுண்ணிய கம்பிபோன்ற இதழ்களை. அவற்றை அடுத்துள்ள இதழ் நிறமும் இளமையும் அழகும் உடைத்தாதல் கருதி, புதல்வன் மாசிலங் கைக்குவமை எடுத்தாள். மாசு சண்டு இலக்கணக் குற்றம் அ - அழ கிய நகை, பொருட் பொருத்த மின்மையானும் ஒலி நிரம்பாமையா னும் கேட்போர்க்குத் தோன்றும் நகைச்சுவை என்க. விழையும் புதல் வனை எனவும், பொலந்தொடிப் புதல்வனை எனவும் தனித்தனியியை யும். எயிறு - விழுந்தெழுந்த பல். பரத்தையின் இளமை குறிப்பாள் கூர் எயிற்றரிவை என்றாள். அரிவை, பருவங் குறியாமல் பெண் என்னு மளவிற்றாய் நின்றது. குறுகினள் என்றது அவன்பால் அவாவுடை யளாய் அவனை அணுகி என்பது பட நின்றது.

அ - கக: யாவரும்............சேல்லேன்

(இ - ள்.) காணுநர் யாவரும் இன்மையின் - அவ்விடத்தே தன்செயலைக் காண்போர் ஒருவரும் இல்லாமையாலே; செத்தனள் பேணி - நினனுருவத்திற்கும் அவனுருவததிற்கும் ஒப்புண்மை

கண்டு நின்மகன் எனவே துணிந்து அவன் தனக்கும் மகனும் முறைமையைப் பேணி, என் உயிர் வருக (மாள) என - என் ஆருயிரே வந்தருள்க! என்று கூறி எடுத்து; பொலம் கலம் சுமந்த பூண் தாங்கு இளமுலை - பொன்னாலியன்ற அணிகலன் களால் சுமக்கப்பட்ட ஏனைய மணியணிகலன்களையும் ஒரு சேரத் தாங்காநின்ற தனது இளைய முலைமேல்; கொண்டனள் பெரிது உவந்து நின்றோள் கண்டு - அணைத்துக்கொண்டு பெரிதும் மகிழ்ந்து நிறைவனை யான் வாயிற் கதவத்திலே மறைநின்று கண் கூடாகக் கண்டு; நிலைச் செல்லேன் - நின்ற நிலையினின்றும் மீண்டு செல்லாமல் என்க.

(வி - ம்.) யான் மறைந்து நின்றமையின் தன் செயலைக் காண்பவர் யாரும் இலர் என்று நினைத்தனள் என்பது கருத்து. செத்தனள் - ஒப்புமை கண்டு. பேணுதல் - தனக்கும் மகனும் முறைமையைப் பேணுதல் என்க. பொலம கலன்களின் வேறிடப்பட்ட பூண் என்பாள் பொலங்கலம் சுமந்த பூண் தாங்கு இளமுலை என்றாள். எனவே அவள் தானே அணிந்துள்ள பொலங்கலன்களின் மேல் நின்றாற் கொடுக்கப்பட்ட பூண்களையும் தாங்கும் இளமுலை என்பது சொல்லுவான் குறிப்பாயிற்று. முன்னர்ப் பொலங்கலம் கூறினமை யால் பின்னர்ப் பூண் என்றது மணியணிகலன்கள் என்க. அப் பொழுதே யான் அறிந்தமையை அவட்கறிவியாதொழியின் பின்னர் அவள் மறுத்தலும் கூடுமாதலின் யான் மறைநின்ற விடத்தினின்றும் இல்லத்துட் புகாது அவள்பால் விரைந்து சென்றேன் என்பாள் நிலைச் செல்லேன் என்றாள்.

கஉ - கக : மாசில்...........எனவே

(இ - ள்.) விரைவனென் வந்து கைவந்து-விரைந்து அவள்பால் வந்து அவளை யணைத்துக்கொண்டு; யான் தன் கரைய - யான அவளை நம்மில்லத்திற்கு வருமாறு அழையாநிற்ப (அவள் மிகவும் மயங்கினளாக); மாசு இல் குறுமகள் எவன் பேது உற்றனை - குற்றமற்ற இளமகளே நீ எற்றிற்கு மயங்கினை?; இவற்கு நீயும் தாயை என - மயங்காதே கொள்! இச் சிறுவனுக்கு நீயும தாயே ஆகுவைகாண்! என்று கூற; களவு உடம்படுநரில் நாணி கவிழ்ந்து நிலம் கிளையா நின்றோள் நிலைகண்டு - தாம செய்த களவுக் குற்றத்தைக் களவாடபபட்டாரிடத்தே உடன்படடு நிற்கும் கள்வரே போனறு பெரிதும் நாணமுற்று முகங்கவிழ்ந்து நிலத்தைக் காற் பெருவிரலாற் கீறி நின்ற அவள நிலைமையைக் கண்டு; யானும் ஆங்கு - யானும் அவள் நிலைக்கு இரக்கமுற்று அப் பொழுது; வானத்து அணங்கு அருங் கடவுள் அனையோள் - வானத்தின்கண் காண்டற்கரிய கடவுட் கற்புடைய அருந்ததியை ஒக்கும அவள் தானும்; நின் மகன் தாய் ஆதல் புரைவது என - நின் மகனுக்குத் தாய் ஆதல் நன்கு பொருந்துவதேயாகும் என்று

எண்ணி; பேணினன் அல்லனோ - அவள் வருந்தாதபடி முகமன் கூறிப் போக்கினன் அல்லனோ? இங்ஙனமாகவும் யாரையும் அறியேன் என நீ பொய் கூறுநீ கொள்; என்பதாம்.

(வி - ம்.) நிலை – தான் நின்ற இடம். மாசில் குறுமகள் என்பது இகழ்ச்சி. நீயும் தாயை என்புழி உம்மை இழிவு சிறப்பு; என்னை? நீ இழிந்த பரத்தையேயாயினும் இவன் தந்தையால் காதலிக்கப்படுதலால் அம்முறைமையால் நீயும் இவனுக்குத் தாய் ஆகுதி என்பது கருத்தாகலின். கரைய – அழைப்ப. அவள் நினக்கே உரிமை பூண்டு ஒழுகுபவள் ஆதலின் யானும் பேணினன் என்றவாறு. அவள் பரத்தையாயினும் கற்புடையளாதல் கருதி வானத் தணங்கருங்கடவுளன்னோள் என்றும் அத்தகைடளாதலின் அவள் நின் மகன்றாயாதல் புரைவது என யானும் பேணினன் என்றாள் எனினுமாம். "கடவுள் – அருந்ததி. உன்னை யொழிய அறியாதவள் என இகழ்ந்து கூறியவாறு" என்பர் பழையவுரையாசிரியர். தாயை, ஐகாரம் சாரியை.

இனி, இதனை, "மகிழ்ந அரிவை தெருவில் புதல்வனைக் கண்டு, கொண்டு நின்றோட்கண்டு, செல்லேன் வந்து கவைஇ நீயும் இவற்குத் தாய் எனக் கரைய, நாணி, நின்றோள் நிலைகண்டு, யானும் தாயாதல் புரைவதுஎன போக்கினன், ஆதலால் பொய் கூறற்க" என வியைக்க.

(பா - வே.) ௪. கிளவி. ௬. கண்ட. ௭. குறுகியாவரும். ௮. சேர்த்தனன். ௧௧. சொல்லேன். ௧௩. புரைவதாலெனவே. (௧௬)

## செய்யுள் ௧௭

**திணை:** பாலை.

**துறை:** மகட் போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது-தலைவியைத் தலைவன் அவள் தமரறியாமல் அழைத்துப் போனமை யறிந்த பின்னர்ச் செவிலித்தாய் தலைவியின் மென்மைக்கிரங்கிக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "எஞ்சி யோர்க்கும் எஞ்சுத லிலவே" (தொல்-அகத்-௪௨) எனவரும் விதி கொள்க.

வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினு
மிளந்துணை யாயமொடு கழங்காட றிடினு
முயங்கின் றன்னையென் மெய்யென் றசைஇ
மயங்குவியர் பொறித்த நுதல டண்ணென
௫. முயங்கினள் வதியு மன்னே யினியே
தொடிமாண் சுற்றமு மெம்மு முள்ளா
ணெடுமொழித் தந்தை யருங்கடி நீவி
நோதும லாள ணெஞ்சறப் பெற்றவென்

சிறுமுதுக் குறைவி சிலம்பார் சீறடி
க0. வல்லகோல் செல்லத் தாமே கல்லென
வூரெழுந் தன்ன வுருகெழு செலவி
னீரி லத்தத் தாரிடை மடுத்த
கொடுங்கோ லுமணர் பகடுதெழி தெள்விளி
நெடும்பெருங் குன்றத் திமிழ்கொள வியம்புங்
கரு. கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கற்
பெருங்களி றுரிஞ்சிய மண்ணரை யாஅத்
தருஞ்சுரக் கவலைய வதர்படு மருங்கி
னீளரை யிலவத் தூழ்கழி பன்மலர்
விழவுத்தலைக் கொண்ட பழவிறன் மூதூர்
உ0. நெய்யுமிழ் சுடரிற் கால்பொரச் சில்கி
வைகுறு மீனிற் றோன்று
மைபடு மாமலை விலங்கிய சுரனே.　　—கயமனார்.

(உரை)

சு - கூ : தொடிமாண்............சிறுமுதுக் குறைவி

(இ - ள்.) தொடி மாண் சுற்றமும் எம்மும் உள்ளாள் - தன்னுடன் ஆடும் பொன் வளையலணிந்த அன்புடைமையாற் சிறந்த தன் தோழிமாரையும் அன்புடன் வளர்த்தெடுத்த அன்னையாகிய எம்மையும் பொருளாக நினையாமல்; நெடுமொழித் தந்தை அருங்கடி நீவி - நெடிய புகழையுடைய தன் தந்தை அமைத்துள்ள கடத்தற்கரிய காவலையும் கடந்துபோய்; நொதுமலாளன் நெஞ்சு அறப்பெற்ற - ஏதிலாளன் ஒருவனுடைய உள்ளமுழுவதையும் தனதாக்கிக் கொண்ட; என் சிறுமுதுக் குறைவி - இளமையிலேயே அறிவு முதிரப்பெற்ற என் மகளானவள் என்க.

(வி - ம்.) சுற்றம் ஈண்டுத் தோழியர் என்பதுணர்த்தற்குத் தொடி மாண் சுற்றம் என்றாள். தொடிச் சுற்றம் எனவும், மாண் சுற்றமும் எனவும் தனித்தனி இயையும். மாண்பு ஈண்டு அன்பின் மாண்பு என்க. எம்மும் என்றாள் நற்றாய் முதலிய ஏனைய தாயரையும் உளப்படுத்துதற்கு. நெடுமொழி - புகழ். இடத்தானும் காலத்தானும் நீண்டு நிற்றலின் அதற்கு அது பெயராயிற்றென்க. தந்தையாலமைக்கப் பட்ட அரிய காவல் என்க. அருமை ஈண்டு கடத்தலருமை என்க. பிறந்தநாள் தொடங்கி நெருநல் காறும் உறவுடையே மாகிய எம்மை யெல்லாம் நினையாமல் ஏதிலான் ஒருவன் பின் போயினள் என்பாள், நொதுமலாளன் எனத் தலைவனைக் கூறினள். குலமகளிர்க்குக் கொண்டானிற் சிறந்த கேளிர் இலர் என்னும் அறத்தையுணர்ந்து அவனொடு

போயினமையிற் தலைவியைச் சிறு முதுக் குறைவி என்றாள். எனவே அவள் அவனொடு சென்றமைக்கு யான் வருந்துகிலேன் என்பது குறிப்பாயிற்று. இனித் தான் வருந்துதற்குரிய காரணங் கூறுகின்றனள்.

க - ரு : வளங்கெழு...........இனியே

(இ - ள்) வளம்கெழு திருநகர் இளந்துணை ஆயமொடு சிறிது பந்து எறியினும் - வளம் பொருந்திய அழகிய இல்லத்தினூடே நிலா முற்றத்தில் சிறிது பொழுது தன் தோழியரோடு பந்தினை எறிந்து ஆடினும்; இளந்துணை ஆயமொடு கழங்கு உடன் ஆடினும் - அல்லது, இளமையுடைய அத் தோழிமாரோடு சிறிது பொழுது ஒருங்குகூடி கழங்கு ஆடினும்; அன்னை என் மெய் உயங்கின்று என்று அசைஇ - 'அன்னாய என் உடம்பு நோகின்றது காண்!' என்று கூறி இளைப்புற்று; மயங்கு வியர் பொறித்த நுதலள் - பொருந்திய வியர்வை அரும்பிய நெற்றியினையுடையளாய்; தண் என முயங்கினள் வதியும் மன் - அவ் வியர்வைத் துளிகள் என் மெய்யிற்றோய்ந்து குளிரும்படி என்னைத் தழுவிக்கொண்டு என் மடியிலே தங்குவளே! அந்நிலை கழிந்து போயிற்றே!; இனி - இப்பொழுது என்க.

(வி - ம்.) நகர் - வீடு. திரு - அழகு. சிறிது - காலச்சிறுமை குறித்து நின்றது. இளந்துணையாயமொடு என்பதனை முன்னும் கூட்டுக. சிறிது என்பதனைக் கழங்கிற்கு முன்னும் கூட்டுக. உயங்கின்று-உயங்குகின்றது; நோகின்றது. மன் : கழிவுப் பொருட்டு.

கூ - உஉ : சிலம்பார்...........சுரனே

(இ - ள்.) கல் என ஊர் எழுந்து அன்ன உரு கெழு செலவின் கொடுங்கோல் உமணர் - கல்லென்றொலிக்கின்ற ஆரவாரத்தோடே ஓர் ஊரின்கண் வாழுமாந்தரனைவரும் ஒருங்கே குடிப்பெயர்ந்து போமாறு போலே காண்போர்க்கு அச்சத்தையுண்டாக்கும் போக்கினையுடைய வளைந்த கோலையுடைய உப்புவாணிகர்; நீர் இல் அத்தத்து ஆர் இடை மடுத்த பகடு தெழி தெள் விளி - நீர் இல்லாத பாலை நில நெறியினகண் செல்லுதற்கரிய மணலுடைய இடத்திலே செல்லாது நின்ற எருதுகளை உரப்புகின்ற தெளிந்த ஒலியானது; நெடும் பெருங் குன்றத்து இமிழ் கொள இயம்பும் - நெடிய பெரிய மலையிலே தாக்குண்டு எதிரொலியாக வந்தொலித்தற் கிடனாய்; கடுங்கதிர் திருகிய வேய் பயில் பிறங்கல் - கடிய வெயிலில் முறுகிய மூங்கில்கள் மிகுந்த பக்கமலையிடத்தே; பெருங்களிறு உரிஞ்சிய மண் அரை யாஅத்து அருஞ்சுரக் கவலைய அதர்படு மருங்கின் - பெரிய களிற்றியானை உரிஞ்சுதலாலே அவற்றின் உடம்பிற் படிந்த சேற்று மண்ணுடன்

அமைந்த அடிப்பகுதியையுடையனவாகிய யாஅமரங்களையுடைய கடத்தற்கரிய பாலைப பரபபினது கவர்த்த வழிகளின் பக்கத்தன வாகிய; நீள் அரை இலவத்து ஊழ்கழி பல் மலர் - நீண்ட அடியினையுடைய இலவ மரங்களில் மலர்ந்துதிர்கின்ற பலவாகிய மலர்கள்; பழவிறல் மூதூர் விழவுத் தலைகொண்ட நெய் உமிழ் சுடரின் - பழைய வெற்றியினையுடைய பழைய ஊரின்கண் திருவிழாநா ளிரவினகண் நெய் பெய்யப் பெற்றுழி விளக்குகளினின்றும் வீழுகின்ற சுடர் போன்று உதிர்ந்து; கால் பொரச் சில்கி - காற்று மோதுதலாலே சிற்சிலவாய் எஞ்சியிருப்பவை; வைகுறு மீனில் தோன்றும - விடியற்காலத்தே வானத்தே காணபபடுகினற மீன் போனறு தோன்றுதற்கிடனை; மைபடு மாமலை விளங்கிய சுரன - முகில்கள் உரிஞ்சும் பெரிய மலைகள் குறுக்கிட்டுக் கிடக்கினற கொடிய வழியின்கண்; சிலம்புஆர் சீறடி - சிலமபுகள முரலுகின்ற அவளுடைய சிறிய அடிகள்; செல்ல வல்ல கொல் - நடத்தற்குரிய வனமையுடையன வாமோ? அவை என்படுமோ? அறிகின்றிலேன் என்பதாம்.

(வி - ம்.) ஊர் : ஆகுபெயர். உப்பு வாணிகர் மனைவி மக்களுடன் ஒருங்கு கூடிச் செல்லுதல் வழக்கம் ஆதலின் அவர் செலவு ஓர் ஊரில் வாழுமக்கள் எல்லாம் குடிப்பெயர்ந்து போவது போலத் தோன்றும் என்றார். அவர் அவ்வாறு செல்வதனை,

> "நோன்பகட் டுமணர் ஒழுகையொடு வந்த
> மகாஅர் அன்ன மந்தி...............
> ..............................
> உளரியல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற
> கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி யாடும்"

எனவருஞ் சிறுபாணாற்றுப் படையானும் (டுகு - சுக) உணர்க. உரு - அச்சம், உரவெழு அத்தம் என வியைக்க. மடுத்தல் - தடையுண்டு நிற்றல். இவ்வொலி உமணர் பகடுரப்பும் ஒலியெனக் கேட்போர் ஐயமறவறியும் ஒலி என்பார் 'பகடுதெழி தெளவிளி' என்றார். இமிழ் - ஒலி; ஈண்டு எதிரொலி. சேற்றை வாரி உடம்பிலிறைத்துக் கொண்ட யானைகள் உரிஞ்சுதலாலே யாஅமரத்தரை மண்ணுடைத் தாயிற்றென்க. ஊழ்த்துக் கழியும் மலர் நெய்யுமிழ் சுடரிற்றோன்றிக் கால் பொரச் சில்கும், அச் சுடர்போற் சில்கி எனக் கூறிக் கொள்க. மீன் - நாண்மீன். மை மலைக்கியற்கையடை. முகில் தீண்ட வுயர்ந்த மலை என்றவாறு.

இனி, இதனை, சிறுமுதுக் குறைவி எறியினும் ஆடினும் அசைஇ முயங்கினள் வதியும் (அத்தகைய மெல்லியலுடைய) அடி சுரன் செல்ல வல்ல கொல்? என இயைத்திடுக,

(பா - வே., ௩. முன்னே. கஎ. கவலையதர். கஅ. தூழ்படு. (கஎ)

## செய்யுள் கஅ

**திணை :** குறிஞ்சி.

**துறை:** தோழி இரவுவருவானைப் பகல்வர வென்றது.

(து - ம்) அஃதாவது - களவின்பமே பெரிதும் விரும்பி வரைதற் கருத்தின்றி நாளும் இரவுக்குறியிடத்தே வந்துமீளும் தலைவனைத் தோழி அவ்விரவுக்குறி வருகையாலுண்டாகும் ஏதங்கூறி அதனை மறுத்து இனி நீ பகற் குறிக்கண் வருகவென்று கூறி அதற்கும் இடையூறுண் டென்பதனைக் குறிப்பாகவுணர்த்தி வரைவு கடாவியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "களனும்பொழுதும்.........அனைநிலைவகை யான் வரைதல் வேண்டினும்" எனவரும் விதி (தொல்-கள-உக) கொள்க.

நீர்நிறங் கரப்ப வூழுறு புதிர்ந்து
பூமலர் கஞலிய கடுவரற் கான்யாற்றுக்
கராஅந் துஞ்சுங் கல்லுயர் மறிசுழி
மராஅ யானை மதந்தப வொற்றி
ரு. யுராஅ வீர்க்கு முட்குவரு நீத்தங்
கடுங்கட் பன்றியி னடுங்காது துறந்து
நாம வருந்துறைப் பேர்தந் தியாமத்
தீங்கும் வருபவோ வோங்கல் வெற்ப
வொருநாள் விழும முறினும் வழிநாள்
கo. வாழ்குவ ளல்லளென் றோழி யாவது
மூறில் வழிகளும் பயில வழங்குநர்
நீடின் றுக விழுக்குவ ரதனா
லுலமால் வருத்த முறுதுமெம் படப்பைக்
கொடுந்தே னிழைத்த கோடுயர் நெடுவரைப்
கரு. பழந்தூங்கு நளிப்பிற் காந்தளம் பொதும்பிற்
பகனீ வரினும் புணர்குவை யகன்மலை
வாங்கமைக் கண்ணிடை கடுப்பயா
யோம்பின ளோடுத்த தடமென் றோளே.

—கபிலர்.

(உரை)

அ: ஓங்கல் வெற்ப..............

(இ - ள்.) ஓங்கல் வெற்ப - உயர்வினையுடைய மலைநாட்டினை யுடைய பெருமானே! ஈதொன்று கேட்டருள்க! என்க.

(வி - ம்.) ஓங்கல்: தொழிற் பெயர். தலைவனுடைய குடியுயர்வு கூறுவாள் அதனை அவன் நாட்டு மலைக்கு அடையாக்கினள். இதனால் அறமருவாத இவ்வொழுக்கம் உயர்குடித் தோன்றலாகிய நினக்குப் பொருந்தாது எனக் குறிப்பாகவுணர்த்தியவாறு. இது கருப் பொருட் புறத்தே பிறந்த இறைச்சிப் பொருள்.

க - அ: நீர்நிறங்............வருபவோ

(இ - ள்.) பூமலர் நீர் நிறம் கரப்ப ஊழ் உறுபு உதிர்ந்து - அழகிய மலர்கள் நீரினது நிறமானது மறையும்படி மலர் தலுற்று உதிர்ந்து நிறைந்த; கடுவரல் கான்யாற்று - விரைந்தொழுகு தலையுடைய காட்டியாற்றின்து; கராஅம் துஞ்சும் கல் உயர் மறிசுழி — முதலைகள் கிடந்துறங்குதற் கிடனான கற்பாறைகளிலே மோதி உயர்ந்து மடங்குதலாலுண்டாகின்ற சுழியானது: மராஅ யானை மதம் தப ஒற்றி உராஅய் ஈர்க்கும் - தன் பிடியொடு கூடாத யானையின் மதவெறி கெடுமாறு மோதித் தன் வலிமையினால் இழுத்துச் செல்லா நிற்கும்; உட்கு வரும் நீத்தம் - காண் போர்க்கு அச்சம் வருதறகுக் காரணமான வெள்ளத்தை; கடுங் கண் பன்றியின் நடுங்காது துறந்து - அஞ்சாமையுடைய பன்றி யைப் போன்று அஞ்சாமல் நீந்திக் கடந்து; நாம அருந்துறைப் பேர்தந்து - அச்சந்தரும் ஏறுதற்கரிய துறையினின்றும கரை யேறி, யாமத்து - இத்தகைய நள்ளிரவிலே; ஈங்கும் வருபவோ - காவல் மிக்க இவ்விடத்திற்கு வருவாருமுளரோ? என்க.

(வி - ம்.) நீர்நிறம் கரப்ப என்றது - நீர் தோன்றாதபடி மறைய என்றவாறு. இதனோடு, "புண்ணிய நறுமல ராடை போர்த்துக் கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கிப் புனல்யாறன்றிது பூம்புனல் யாறென" எனவரும் சிலப்பதிகாரம், (மதுரைக் - கங : கஎஉ - ச நினைவுகூரற் பாலது. ஊழ் உறுபு - ஊழ்த்து; மலர்ந்து. பூமலர் — அழகிய மலர். கடுவரல் - விரைந்தொழுகுதல். முதலைகள் கல்லின் மேலேறித்துயிலுதல் இயல்பு. கல்லில் மோதி யுயர்ந்து மறிதலால் உண்டாகின்ற சுழி என்க. மராஅ - மருவாத. மதவெறியால் இனத் தொடு கூடாத எனினுமாம். உரவு, உராஅவு என நீண்டது செய்யுள் விகாரம். பன்றி அஞ்சாமல் வெள்ளத்தை நீந்திக் கடக்குமியல்பிற்று கலின் அதனை உவமை எடுத்தோதினள். நாம் என்னும் உரிச்சொல்லீறு திரிந்து நின்றது. பேர்தந்து: ஒருசொல். ஈங்கும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு.

கூ - கஉ: ஒருநாள்.............இழுக்குவர்

(இ - ள்.) யாவதும் ஊறு இல் வழிகளும் பயில வழங்குநர் நீடு இன்று ஆக இழுக்குவர் - யாதும் இடையூறு இல்லாத நல்ல வழிகளிடத்தேயும் மிகுதியாக இயங்குபவர் காலம நீளிதாகு முன்பே தவறி விடுவாராதலுமுண்டு; ஒருநாள் விழுமம் உறினும் -

இடையூறுகள் மிக்க இத்தகைய நெறிகளிலே நாள்தோறும் நள்ளிரவில் வருகின்ற நினக்கு என்றேனும் ஒரு நாள் துன்பம் உறினும் உறுங்காண்! அங்ஙனம் உற்றக்கால்; என் தோழி வழிநாள் வாழ்தவள் அல்லள - அந் நிகழ்ச்சியை அறிதற்கியன்ற மறுநாளே எம பெருமாட்டி உயிர் வாழ்வாளல்லள்; இறந்து படுதல் ஒருதலே, என்க.

(வி - ம். ஊறு-இடையூறு; இன்னல்; உறினும் உறும் அங்ஙனம் உற்றக்கால் என விரித்தோதுக. நீடு - காலநீட்டம். நல்ல நெறி களிடத்தும் மிகுதியாக இயங்கின் அடிக்கடி இடையூறு நிகழ்தல் இயல்பு; இத்தகைய ஊறுமிக்க நெறியில் நாடோறும் இயங்கும் உனக்கு எனறேனும் இன்னுமை வருதல் ஒருதலே. அவ்வின்னுமை நின்னுடுமையாது ஒருபெண் கொலைக்குப் ஏதுவாம் என்பாள் ஒரு நாள் விழுமம் உறினும் வழிநாள் வாழ்குவள் அல்லள் என் தோழி என்றுள். எனவே நீ அஞ்சாது வருவது உனது ஆண்மைக்கு எடுத்துக்காட்டன்று; நின் அறிவின்மைக்கே எடுத்துக்காட்டாங்காண்! என்றறிவுறுத்தினு ளாயிற்று. என்னை? "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ தஞ்ச லறிவார் தொழில்" என்பது அறமாதலின் (குறள் – ௪௨௮) என்க.

கஉ - கஅ: அதனால்............தோளே

(இ - ள்.) அதனால் - இவ்வாறு நின்வரவு எமக்கு எப் பொழுதும் அச்சமே தருவதொன்றாயிருத்தலால்; உலமரல் வருத்தம உறுதும் - யாங்கள் இடையுறுது மனஞ் சுழல்வதற்குக் காரணமான பெருந்துன்பமே எய்துகினறேங்காண்! அகல்மலே வாங்கு அமைக்கண் இடை கடுப்ப - இனி எமக்குத் துன்பந்தரும் இவ் விரவுக் குறிக்கண் நீ வருதல் தவிர்ந்து அகன்ற மலையின்கண் வளமுற்று வளர்கினற வளைந்த மூங்கிலினது கணுக்களின் இடையே அமைந்த தணடினை நிகர்க்குமாறு; யாய் ஓம்பினள் எடுத்த தட மெல்தோள - எம்மனையால் விழிப்புடன பேணி வளர்க்கபபட்ட பருத்த மென்மைமிக்க தோள்களை; எம படப்பைக் கொடுந்தேன இழைத்த கோடு உயர் நெடுவரை - எமது மனைப் படபபையின் பக்கத்தேயுளள வளைந்த தேன் இருல்கள இழைக்கப் பட்டுள்ள குவடுகளோடு உயர்ந்துள்ள நெடிய மலைச் சாரலினகண் அமைந்த; பழம் தூங்கும் நளிபபின காந்தள அம பொதும்பில்- யாண்டும கனிகள் கனிந்து தொங்குதற்கிடனான பழுமரச் செறிவினுளுள்ள செங்காந்தள மலர்ந்து அழகு செய்கின்ற புதரினூடே; நீ பகல் வரினும் புணர்குவை - நீ பகற் பொழுதிலே வந்தாலும் இனிது முயங்குவைகாண்! இனி ஏதமிக்க இரவில் வருதலொழிக! எனபதாம்.

(வி - ம்.) அதனால் என்றது, ஊறுடைய வழியில் பயிலவழங்கும் நீ என்றேனும் இழுக்குதல் ஒருதலையாகலான் என்றவாறு. உலமரல்

வருத்தம் - ஆறுதல் பெறுதலின்றி மனம் இடையறாது சுழல்வதற்குக் காரணமான பெருந்துன்பம். அஃதாவது தலைவனுக்கு ஏதம் நிகழ்தல் ஒருதலை என்று எண்ணுவதனாலுண்டாகும் துன்பம் என்க. இங்ஙனம் கூறவே நீ பகல் வரின் யாங்களும் உலமரல் வருத்தமின்றி இன்புறுதும் என்றாளுமாயிற்று.

இனி, பழையவுரையாசிரியர் "தேனிமைத்த என்றதனானே, தேனழிக்க வருவாராலும், பழந்தூங்கு நளிப்பென்றதனானே பழமெடுக்க வருவாராலும், காந்தளம் பொதும்பென்றதனானே பூப்பறிக்க வருவாராலும் பகற்குறியும் அரிதென்று குறிப்பால் மறுத்தாளாம்" என விளக்குவர்.

இனி, இதனை வெற்ப! கான்யாற்று நீத்தம் நடுங்காது துறந்து அருந்துறைப் போர் தந்து ஈங்கும் வருபவோ? நீ ஒருநாள் விழுமமுறினும் என்தோழி வழிநாள் வாழ்குநள் அல்லள். பயில வழங்குநர் இழுக்குவர் அதனால் (யாம்) வருத்தம் உறுதும் நீ பகல் பொதும்பில் வரினும் தோள் புணர்குவை. (இனி இரவில் வாராதே கொள்) என இயைபு காண்க. (கரு)

## செய்யுள் கசு

**திணை :** பாலை.

**துறை :** நெஞ்சினாற் பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைமகன் தலைமகள் நலனயந்துள்ளிய நெஞ்சினைக் கழறியது.

**(து - ம்)** அஃதாவது-தலைவன் தலைவியொடு இனிதமர்ந்து வாழுங் காலத்தே அவன் நெஞ்சம் பொருளின் இன்றியமையாமையைப் பலகாலும் அவனுக்கு நினைவூட்டி அதனை ஈட்டிவருமாறு வற்புறுத்துதலாலே தலைவியைப் பிரிந்து பொருளீட்டப்போயபின் அந்த நெஞ்சமே தலைவியை நினைந்து வருந்துவதாயிற்று. இதனாற் போக்கிடையூறுபட்ட தலைவன் அந் நெஞ்சைக் கடிந்து கூறியதென்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு, "கரணத்தி னமைந்து" எனவரும் நூற்பாவின்கண் (தொல்-கற்-சு) வேற்றுநாட் டகல்வயின் விழுமத்தானும் எனவரும் விதி கொள்க.

அன்றவ ணொழிந்தன்று மிலையே வந்துநனி
வருந்தினை வாழியே னெஞ்சே பருந்திருந்
துயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை
யுருடுடி மகுளியிற் பொருடேரின் றிசைக்குங்
ரு. கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்ற
மெம்மொ டிறத்தலுஞ் செல்லாய் பின்னின்
றொழியச் சூழ்ந்தனை யாயிற் றவிராது
செல்லினிச் சிறக்கநின் னுள்ளம் வல்லே
மறவ லோம்புமதி யெம்மே நறவின்

கo. சேயித ழனைய வாகிக் குவளை
மாயிதழ் புரையு மலிர்கோ ளீரிமை
வுள்ளகங் கனல யுள்ளுதோ றுலறிப்
பழங்கண் கொண்ட கதழ்ந்துவீ ழவிரறல்
வெய்ய வுகுதர வெரீஇப் பையெனச்
கரு. சில்வளை சோரிந்த மெல்லிறை முன்கை
பூவீ கொடியிற் புல்லெனப் போகி
யடர்செ யாயகற் சுடர்துணை யாக
வியங்காது வதிந்தநங் காதலி
யுயங்குசாய் சிறுபுற முயங்கிய பின்னே.

—போருந்தில் இளங்கீரனார்.

(உரை)

க - அ : அன்றவண்............வல்லே

(இ - ள்.) என் நெஞ்சே வாழி - எனது பேதை நெஞ்சமே நீ வாழ்வாயாக! நீ அளியை காண்!; அன்று அவண் ஒழிந்தன்றும் இலை - யாம நங் காதலியைப பிரிந்து போதலரிது ஆதலால் இப் பொழுது செலவழுங்குதும் என்றுனக்குணர்த்திய அற்றைநாளே என் அறிவுரைக் கிணங்கி அவளிருக்கும் நம்மில்லத்திலேயே அவளைப பிரித லொழிந்து தங்கினையுமலலை; பருந்து இருந்து உயா விளி பயிற்றும் யாஉயர் நனந்தலை வந்து - இப்பொழுது, இரைபெரு மையான் பருந்துகள் இளைப்புற்றிருந்து பசித்துன்பங் காரணமாகப் பலகாலும் ஒலிக்கின்ற யாமரங்கள் உயர்ந்துள்ள அகன்ற இப் பாலைக் கடுஞ்சுரநகாறும் எம்மொடு வந்து; உருள் துடி மகுளியில் பொருள் தெரிந்து இசைக்குங் கடுங்குரல் குடிஞைய நெடும் பெருங் குன்றம் எம்மொடு இறத்தலுஞ் செல்லாய் - உருண்ட உடுக்கை யினதததாகிய இழுகுபறையினது ஒலியைப் போன்று கேட்போர் தத்தமக்கேற்ற பொருளைத் தெரிந்து கொள்ளுமாறு ஒலிக்கின்ற கேள்விக் கின்னுமை செய்கின்ற குரலையுடைய பேராந்தைகளையு டைய நெடிய பெரிய இம் மலைகளை எங்கருத்திற் கிணங்கிக் கடந்து பொருளவயிற் போவாயுமல்லை; நனி வருந்தினை - இங்ஙனம் இருமனப்பட்டுப் பெரிதும் வருந்துகின்றனை; பின்நின்று ஒழியச் சூழ்ந்தனை யாயின் - முன்னர் முன்னின்று எம்மைப் பொருளவயிற் கடைக் கூட்டிய நீயே, இப்பொழுது என் செலவிற்கு இடையூறுக எனக்குத் துணையாகாது பிற்பட்டு நின்று மேலும் எம்மைக் கை விட்டுப் போகவும் துணிந்தாயாயின்; இனி தவிராது வல்லே செல்-

இப்பொழுதே நின் துணிவினின்றும் தவிராமல் விரைந்து செல்லுதி; நின் உள்ளம சிறக்க - நின் பெருந்தகையுள்ளம் தன் கருத்து முற்றிச் சிறப்பதாக! என்க.

(வி - ம்.) அன்று என்று சுட்டியது பொருள் வலித்த நெஞ்சிற்கு யாம் இப்பொழுது நங்காதலியைப் பிரிந்து போதலரிது ஆதலிற் செலவழுங்குதும் எனத் தலைவன் தன்னெஞ்சிற் கறிவுறுத்த நாளை. யான் ஒழிதி என்ற பொழுது ஒழிந்திலை என்று கடிந்தபடியாம். வந்து என்பதனை நனந்தலைக்குப் பின்னே கூட்டுக. நனந்தலைகாறும் பொருளீட்டலில் ஊக்கி வந்து என்றவாறு. வாழி அசையெனினுமாம். பிரிவாற்றாது நனி வருந்தினை என்பது கருத்து. ஆதலால் நீ பெரிதும் பேதைகாண் என்பது குறிப்பு. பருந்து இரை பெறாது இளைப்புற்றிருந்து என்க. உயாவிளி - துன்பக்குரல். யா - ஒருவகை மரம். இது பாலை நிலத்தில் வளர்ந்து வற்றி நிற்கு மியல்புடையதாகலின் அதற்கு உலர்தல் ஒன்றனையே அடையாக்கினன். உருள் - உருண்ட வடிவத்தின் மேற்றாகக் கோடலே தகுதி; கடிப்பிற்கு உருளுதல் பொருந்தாமையறிக. மகுளி - இழுகுபறை என்பர் உரையாசிரியர். கடிப்பினால் உராய்தலால் உண்டாகும் மகுளியின் ஓசை ஈண்டுக் குடிஞையின் ஓசைக்குவமை யென்க. தெரிந்து என்னும் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாகத் திரித்துக் கொள்க. கேட்போர் தம்மியல்பிற்கேற்பப் பொருள் தெரியும்படி இசைக்கும் என்க. அஃதாவது ஆறலைகள்வர் கரந்துறையும் அந் நெறியில் பொருளொடும் போகும் வழிப்போக்கர்க்கு, 'குத்திப்புதை சுட்டுக்குவி' என்னும் பொருள்பட இசைத்தலும் வினைவயிற் செல்வோர்க்குத் தீநிமித்தமாக வாதல் நன்னிமித்தமாக வாதல் அவர் மேற்கொண்ட வினைமுற்றுமென்றாதல் முற்றாதென்றாதல் எதிர்காலப் பொருள் தெரிய இசைத்தலும் பிறவுமாம். ஆறலை கள்வர்க்கஞ்சிப் போவார்தம் மச்சத்தை இக்குரல் மிகுவித்துக் கேள்விக்கின்னாதாதல் பற்றிக் கடுங்குரல் என்றான். தலைவியோடுறையும் பொழுது முன்னின்று பொருள்வயினூக்கிய நீயே இப்பொழுது பின்னின்றொழியச் சூழ்ந்தனை என்பதுபடப் பின்னின்றொழியச் சூழ்ந்தனை என்று கடிகின்றான். நின் சூழ்ச்சியிற் றவிராது இனிச் செல்க என்றவாறு. இனி - இப்பொழுதே. சிறக்க என்றது நின் சூழ்ச்சியும் முற்றுறுதென்னும் குறிப்பிற்று.

கூ - கசு : நறவின்............போகி

(இ - ள்.) நறவின் சே இதழ் அனையவாகி-செவ்வரி பரந்த அழகினால் நறவமலரின் சிவந்த மலர்களைப் போல்வனவாகி; குவளை மா இதழ புரையும் மலிர்கொள் ஈர் இமை - மை யூட்டப் பெற்றமையால் குவளை மலரின் கரிய இதழ்களை ஒக்கின்ற நீர் ததும்புகின்ற ஈரிய இமைகள்; உள்ளுதொறு உள் அகம் கன்ல உலறி - நாம் செய்த கொடுமையைத் தனது நெஞ்சு கனலும்படி நினைக்குந்தொறும் வற்றி; பழங்கண் கொண்ட கதழ்ந்து வீழ் அவிர் அறல் வெய்ய உகுதர - துனபம் எய்திய தனது கண்களிற் றேங்கியவாய் விரைந்து வீழகின்ற விளங்குகின்ற துன்பக்

கண்ணீர்த்துளிகள் வெப்ப முடையனவாய்த் துளிப்பதனாலே; வெரீஇ - தன்னிலையைப் பிறர் அறிகுவர் என்று அஞ்சி; சில்வளை சொரிந்த மெல் இறை முன்கை - நாம் பிரிந்த பொழுதே கழன்று வீழ்ந்தனபோக எஞ்சிய சில வளைகளும் கழன்றொழிந்த மெல்லிய வரிகளையுடைய தன் முன்னங்கைகள்; பூ வீ கொடியின் புல்லென - பூக்கள் உதிர்ந்தொழிந்த பூங்கொடிகள் போன்று புற்கென்று தோன்றும்படி; பையெனப் போகி - தான் செயலறவு கொண்டிருந்த அவ்விடத்தினின்றும் எழுந்து வலியின்மையால் மெல்ல நடந்து சென்று; என்க.

(வி - ம்.) இனி விரைந்து செல்லும் நின் கருத்து முற்றி நின்னுள்ளம் சிறக்குமாறில்லை என்பதற்குக் காரணங் கூறுவான் நமது பிரிவாற்றாமையால் நங்காதலியின் நிலை இப்பொழுதிவ்வாறிருக்குமென்று மேலே கூறுகின்றான்.

பழைய வுரையாசிரியர் - "நறவின் சேயிதழ்............பையென" என்றது உள்ளுந்தோறும் உள்ளகங் கனலுகையாலே குவளையினது கரிய இதழை யொக்கும் நீர் மிகுதல் கொண்ட கரிய இமை பின்பு நறவின் சேயிதழனையவாகி உலறிப் பழங்கண் கொண்ட விரைந்து விழுகின்ற அவ்வறல் வெய்யவாகச் சொரிய" எனக் கொண்டு கூட்டிப் பொருள் கூறுவர்.

பழங்கண் - துன்பம்.

"சில்வளை என்றது பல்வளை யெல்லாம் முன்பே கழன்றோடின; எஞ்சிய சில்வளைகள் தாமும் போயின என்றவாறு" என்பர் உரையாசிரியர்.

வலியும் அழகுங் கெடலின் பூவீ கொடியிற் புல்லெனப் பையெனப் போகி என்றான்.

### கஎ - ககூ : அடர்செய்............பின்னே

(இ - ள்.) அடர் செய் ஆய் அகல் சுடர் துணை ஆக - பொற்றகட்டா லியற்றப்பட்ட அழகிய அகலின்கண் எரிகின்ற விளக்கே தனக்குற்ற துணையாக விருப்ப; இயங்காது வதிந்த நம் காதலி - எழுந்துலாவவும் வலியினறி ஓரிடத்திலேயே துன்புற்றிருக்கும் நம ஆருயிர்க் காதலியினது; உயங்குசாய் சிறுபுறம் முயங்கிய பினனே - வருந்தி மெலிந்த சிறிய முதுகின் புறத்தே சென்று நின் அவாத் தீரத் தழுவிய பின்னரேனும் என்க.

(வி - ம்.) நங்காதலியின் நிலை இங்ஙனமிருக்குமாதலின் அவளை நீ தழுவி மகிழ்தலும் ஒல்லுமோ? ஒல்லாதாகலின் நின் முயற்சியும் பயனில் முயற்சியேயாங்காண் என்பது குறிப்பு.

கூ : மறவல்............எம்மே

(இ - ள்.) எம் - நின் வேண்டுகோட்கிணங்காது அளியேமாகிய எம்மை; மறவாது ஓம்பு மதி - மறவாமல் நினைப்பாயாக! இஃது எம வேண்டுகோள்! என்பதாம்.

(வி - ம்.) எமக்குத் துணையாகவேண்டிய நீ எம்மையம் கைவிட்டுச் செல்லுதி. நீ வல்லே சென்றக்கால் ஆங்குச் சுடர்துணையாக வருந்தி இயங்காதுவதியும் காதலியையே காணுதி. எனவே நின் கருத்து முற்றுமாறில்லை ஈண்டும் யாமும் தனியே கிடந்து பொருவிட்டுமதுகையின்றி வருந்துவம். ஆதலால் அளியேமாகிய எம்மை மறவாது மீண்டுவந்து எமக்குத் துணை செய்வாயாக! என்பது கருத்து. மதி: முன்னிலையசை.

இனி இதனை, நெஞ்சே அன்று அவன் ஒழிந்தன்றுமிலை; யாவுயர் நனந்தலைகாறும் வந்து, மேலும் குன்றம் இறத்தலுஞ் செல்லாய், பின்னின்று ஒழியச் சூழ்ந்தனை; ஆயின் செல்! நின் உள்ளம் சிறக்க! சென்று, ஆங்கு உலறி அறல் உகுதர வெரீஇப் பையெனப் புல்லெனப் போகித் துணையாக வதிந்த நங்காதலி சிறுபுறமுயங்கிய பின்னரேனும் எம் மறவாது ஓம்புமதி! என இயைத்திடுக.

(பா - வே.) உ. நெஞ்சம்; கக. யாயிதழ், மலர்கொள்; கஉ. உள்ளம்; கங. கவிழ்ந்து; கஅ. வதிந்தவெம். (கக)

## செய்யுள் உ௦

திணை : நெய்தல்.

துறை : பகற்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது வரைதலிற் கருத்தின்றிக் களவொழுக்கமே காமுற்று வருகின்ற தலைவன் ஒருநாள் பகற்குறியிடத்தயலே வந்து நிற்பவனைக் கண்ட தோழி அவன் வரவுணராதாள் போன்று தலைவிக்குக் கூறுவாளாய் அலர் மிகுதியும் தாய் அறிந்து காவல் மேற்கொண்டமையும் தலைவனுக்குணர்த்தும் பொருட்டு அவன் கேட்பக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "நாற்றமுந் தோற்றமும்" எனவரும் நூற்பாவின்கண், (தொல்.கள-உங) காப்பின் கடுமை கையறவரினும் என வரும் விதிகொள்க.

இனி, ஆசிரியர் நச்சினார்க்கினியர் இச் செய்யுளைத் தலைவி கூற்றாகக் கொண்டு, மறைந்தவற் காண்டல் என்னும் (தொல்-கள.உ௦) நூற்பாவின்கண் "தமர்தற் காத்த காரண மருங்கினும்" எனவருந் துறைக்கு எடுத்துக் காட்டுவர்.

பெருநீ ரழுவத் தெந்தை தந்த
கொழுமீ னுணங்கற் படுபுள் ளோப்பி
யெக்கர்ப் புன்னை யின்னிழ லசைஇச்

சேக்கர் ஞெண்டின் குண்டளை கெண்டி
ரு. ஞாழ லோங்குசினைத் தொடுத்த கொடுங்கழித்
தாழை வீழ்கயிற் றூச றூங்கிக்
கொண்ட லிடுமணற் குரவை முனையின்
வெண்டலைப் புணரி யாயமோ டாடி
மணிப்பூம் பைந்தழை தைஇ யணித்தகப்
க0. பல்பூங் கான லல்கினம் வருதல்
கவ்வை நல்லணங் குற்ற விவ்வூர்க்
கொடிதறி பெண்டிர் சொற்கொண் டன்னை
கடிகொண் டனளே தோழி பெருந்துறை
எல்லையு மிரவு மென்னாது கல்லென்
கரு. வலவ னாய்ந்த வண்பரி
நிலவுமணற் கொட்குமோர் தேருண் டெனவே.

—உலோச்சனார்.[1]

(உரை)

கரு : தோழி............

(இ - ள்.) *தோழி - தோழியே! ஈதொன்று கேள்!*

(வி - ம்.) *இது தோழி தலைவியை விளித்துச் சொல்லாடத் தொடங்கியது.*

கக - கஉ : கவ்வை............பெண்டிர்

(இ - ள்.) *இவ்வூர் கவ்வை நல் அணங்கு உற்ற - இந்த ஊரில் வாழ்கின்ற அலர்தூற்றுதல் என்னும் ஒரு வன்பேய் பிடித்த; கொடிது அறி பெண்டிர் - பிறர்க்குத் தீங்கிழைத்தல் ஒன்றனையே நன்கறிந்த அறைபறையன்ன கயமகளிர் சிலர் என்க.*

(வி - ம்.) *தலைவன் கூர்ந்து கேட்டற் பொருட்டு, அலர்தூற்றும் மகளிரை இங்ஙனம் விதந்தோதினள், என்னை? அப் பெண்டிரா னிகழ்ந்த தென்னையோ? என்றறிதற்குத் தலைவன் அவாவி அவள் கூற்றைத் தொடர்ந்து கேட்டல் இயல்பாதலினென்க.*

*இவ்வூர்ப் பெண்டிர், கவ்வை நல்லணங்குற்ற பெண்டிர், கொடிதறி பெண்டிர் எனத் தனித்தனி கூட்டுக.*

---

(பா - வே.) *1. பொருந்தில் இளங்கீரனார்.*

## கரு - கசு: பெருந்துறை.........எனவே

(இ - ள்.) பெருந்துறை - நங்கடலினது பெரிய துறையின் கண்ணே; எல்லையும இரவும் என்றது - பகல் என்றும் இரவு என்றும பாராமல் எப்பொழுதும்; கல்என - கல்லென்னும ஆரவார முண்டாக; வலவன் ஆய்ந்த வண்பரி - பாகனால் ஆராய்ந்து பூட்டப் பெற்ற வளவிய குதிரைகளோடே; நிலவு மணல் கொட்கும் ஓர் தேர் உண்டு என - நிலவொளி போன்ற வெள்ளிய மணற் பரப்பிலே சுழன்று திரியுமொரு தேர் உளவாகின்றது என்று யாண்டுந் தூற்றுகிறப; என்க.

(வி - ம்.) கொடிதறி பெண்டிர் மணற் கொட்கும் ஓர் தேர் உண்டு என்று அலர் தூற்ற என்றியையும். அத் தேரில் வருபவன் நம்மூரில் களவொழுக்கம் கருதியே அவ்வாறு இடையறாது வருகின்றனன் என்பது இத்துறை போந்த குறிப்புப் பொருளாகலின் இஃது அலர் தூற்றலாயிற்றென்க. அங்ஙனம் அவன் வருவதனை இவ்வூரா ரெல்லாம் அறிகுவர் என்பது தோன்ற அத் தேர் பெருந்துறை நிலவு மணலில் கல்லெனக் கொட்கும் என்று கொடிதறி பெண்டிர் கூற என்றவாறு. கொட்கல் - சுழன்று திரிதல்.

## க - கo: பெருநீர்.............வருதல்

(இ - ள்.) எக்கர்ப் புன்னை இன் நிழல் அசைஇ-எக்கரிட்ட மணலின் மேனிற்கும புன்னையினது இனிய நிழலிலே இருந்து; பெருநீர் அழுவத்து எந்தை தந்த கொழுமீன் உணங்கல் படுபுள் ஓப்பி - யாம் பண்டுபோலவே கடற்பரப்பிற் சென்று நம்தந்தை படுத்துக் கொணர்ந்த கொழுவிய மீனவற்றலில் வந்து வீழ்கின்ற பறவைகளை வெருட்டிடபோக்கியும்; செக்கர் ஞெண்டின் குண்டு அளை கெண்டி - சிவந்த நண்டுகள் வாழ்கின்ற ஆழமான வளைகளை அகழ்ந்து ஆடியும; கொடுங்கழித் தாழை வீழ்கயிற்று - வளைந்த உப்பங்கழிக் கரையிலுள்ள தாழையினது விழுதாலியன்ற கயிற்றிலே; ஞாழல் ஓங்குசினைத் தொடுத்த ஊசல் தூங்கியும் - ஞாழல் மரத்தினது உயர்ந்த கிளையிற் கட்டிய ஊசலிலேறி ஆடியும்; கொண்டல் இடுமணல் குரவை முனையின் - கீழ்த்திசைக் காற்றுக் கொணர்ந்து குவித்த மணலிடத்தே யாம் ஆடுகின்ற குரவைக் கூத்தனை வெறுத்துழி; ஆயமொடு வெள்தலைப் புணரி ஆடி - நந் தோழிமாரோடு வெள்ளிய தலையையுடைய கடல்நீரி லாடியும்; மணிப்பூம பைந்தழை தைஇ - அழகிய மலர் விரவிய பசிய தழையாடையை உடுத்து; அணித்தக அல்கினம் வருதல் - அழகு தக்கிருப்ப நமமாடற்களத்தே தங்கியிருந்து நம்மில்லத்திற்கு வருவதனை; என்க.

(வி - ம்.) இங்ஙனம் செய்து வருதல் நமக்கு நாள்தோறும் வழக்கம் அன்றோ? அங்ஙனமே யாம் இன்றும் செய்குதும் என்பது கருத்து.

பெருநீரழுவம் - கடற்பரப்பு. எந்தை - தந்தை. இஃது ஈண்டு இடங் குறியாமல தந்தை என்னும் முறைப்பெயர் மாத்திரையாய் நின்றது. நம் தந்தை என்பதே சொல்வாள் குறிப்பு. எங்கள் தந்தை என்ப தன்று அல்கினர் வருதல் என்பது ஓப்புதல் முதலிய காரணங்களால் காலந்தாழ்ப்ப இருந்து வருதலை என்றவாறு. தலைவனோடு தங்கி வருதலை என்பது மிகை.

## கச - கரு: சொல்...........கொண்டனளே

(இ - ள்.) அன்னை - நந்தாயானவள், சொல் கொண்டு - அப் பெண்டிர் கூறும் கூற்றைக் காரணமாகக் கொண்டு நம்பால் ஐயமுற்று; கடிகொண்டனள் - இனி யாம் புறயபோகா வண்ணம் காவல் மேற்கொண்டனள்; இனி யாம நம் பெருமானை எங்ஙனம் காண்பேம் என்பதாம்.

(வி - ம்.) நாம் வழக்கம் போன்று புள்ளோப்புதல் முதலியவற்றுல் காலநீட்டிப்பத் தங்கியிருந்து வருவதனையும் ஐபுற்று அன்னை கொடி தறி பெண்டிர் கொட்கும் தேருண்டு என அது கேட்டுக் கடி கொண் டனள் என்று இயைபு காண்க. இதற்கு இவ்வாறு கூருமல் வேறு வகையாகக் கூறும் உரை சிறவாமை நுண்ணுணர்வாற் கண்டுகொள்க.

(பா - வே.) ௯. லொடுங்குசினை; ௧. அணித்தகை. (௨௦)

## செய்யுள் ௨௧

திணை : பாலை.

துறை : பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைமகன் இடைச் சுரத்து நின்று மீளலுற்ற நெஞ்சினைக் கழறியது.

(து - ம்.) அஃதாவது - தலைவன் தலைவியைப் பிரிந்து போதலரிது எனப் பலகாலும் அறிவுறுத்தவும் அவன் நெஞ்சம் அமையாது பொரு ளீட்டத் தூண்டியதாக, அதற்குடன்பட்டுத் தலைவன் தலைவியை அரிதிற் பிரிந்து போம்பொழுது இடைவழியில் தலைவியின் பிரிவாற்று மையால் அவன் நெஞ்சம் மீண்டும் தலைவிபாற் செல்ல அதுகண்ட தலைவன் அந் நெஞ்சினைக் கடிந்து கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "கரணத்தினமைந்த காலை" எனவரும் (தொல்-கற்-௫) நூற்பாவில் 'மீட்டுவரவு ஆய்ந்த வகையின் கண் ணும்' எனவரும் விதிகொள்க.

மனையிள நொச்சி மௌவல் வான்முகைத்
துணைநிரைத் தன்ன மாவீழ் வெண்ப
லவ வயிற் றகன்ற வல்குற் றைஇத்
தாழ்மென கூந்தற் றடமென் பணைத்தோண்
௫. மடந்தை மாணலம் புலம்பச் சேய்நாட்டுச்

செல்ல லென்றியான் சொல்லவு மொல்லாய்
வினைநயந் தமைந்தனை யாயின் மனைநகப்
பல்வேறு வெறுக்கை தருகம் வல்லே
யெழுவினி வாழியெ னெஞ்சே புரியிணர்
க0. மெல்லவி ழஞ்சினை புலம்ப வல்லோன்
கோடறை கொம்பின் வீயுகத் தீண்டி
மராஅ மலைத்த மணவாய்த் தென்றல்
சுரஞ்சென் மள்ளர் சுரியற் றாழ்ம
மென்றாழ் நின்ற புன்றலை வைப்பிற்
கரு. பருந்திளைப் படூஉம் பாறுதலை யோமை
யிருங்கல் விடரகத் தீன்றிளைப் பட்ட
மென்புனிற் றம்பிணவு பசித்தெனப் பைங்கட்
செந்நா யேற்றை கேழ லுருக்க
விரியற் பிணவ றீண்டலிற் பரீஇச்
உ0. செங்கா யுதிர்ந்த பைங்குலை யீந்தின்
பரன்மட் சுவல முரணில மூடைத்த
வல்வாய்க் கணிச்சிக் கூழார் கூவல
குறு திட்ட வுவலைக் கூவல்
வெண்கோடு நயந்த வன்பில் கானவ
உரு. ரிகழ்ந்தியங் கியவி னகழ்ந்த குழிசெத்
திருங்களிற் றினநிரை தூர்க்கும்
பெருங்க லத்தம் விலங்கிய காடே.

—காவன் முல்லைப் பூதனார்.

(உரை)

க. வாழியெ னெஞ்சே

(இ - ள்.) *என் நெஞ்சே - என் நெஞ்சமே! நீ அளியைகாண்!*

(வி - ம்.) *வாழி: அசைச்சொல். நீ அளியைகாண்! என்பது குறிப்பெச்சம். என்னை? அதன் அறியாமைக்கிரங்கி விளிக்கின்றான் ஆகலின்.*

க - எ. மனையிள.........யாயின்

(இ - ள்.) *மனை இள நொச்சி மௌவல் வால்முகைத் துணை நிரைத்து அன்ன மாவீழ் வெள் பல் - மனைமுன்றிலிலே இளமை*

யுடைய நொச்சியின்மேலே படர்ந்த முல்லையினது வெள்ளிய அரும்புகளை தம்மில் அளவொத்தவற்றை நிரல்பட வைத்தாற் போன்ற வண்டுகள் விரும்புதற்குக் காரணமான வெள்ளிய பற்களையும்; அ வயிற்று அகன்ற அல்குல்-அழகிய வயிற்றினையும் பரந்த அல்குற் பரப்பினையும், தைஇ தாழ்மெல் கூந்தல் - கை செய்யப்பெற்றுத் தூங்குகின்ற கூந்தலையும்; தடமெல் பணைத் தோள் - பெரிய மெல்லிய மூங்கில் போன்ற தோளையும் உடைய; மடந்தை மாண்நலம் புலம்ப - நங் காதலியினது மாட்சிமையுடைய பெணமை நலமுழுதும் துணையின்றித் தனிமையுற்றுக் கெடும்படி; சேய்நாட்டுச் செல்லல் - அவளைப் பிரிந்து தொலைக்கண்ணுள்ள நாட்டின்கண் போதலொழிக; என்று யான் சொல்லவும் ஒல் லாய்-என்று கூறி யான் தடை செய்யவும் நீ அதற்கு உடன்படா யாகி வினைநயந்து அமைந்தனை ஆயின் - நீ பொருளீட்டுந் தொழிலைப் பெரிதும் விரும்பி இதுகாறும் வந்தனையாதலின்; என்க.

(வி - ம்.) வளமுடைய முல்லைமுகைகளே அவள் பற்களுக் குவமையாம் ஏனைய,ஆகாவென்பது கருதி மனையிள நொச்சி மௌவல் வான் முகை என உவமையை விதந்துகூறினன். என்னை? மனைமுன் றிலிலே நட்டுப்பொழுதறிந்து நீர்கால்யாத்து எருப்பெய்து பனையவரால் வளர்க்கப்படும் முல்லைமுகை வளமுடையவாத லியல்பாகலின் என்க. முல்லை வான்முகை போறலின் மாவீழ் வெண்பல் என்றான். மா-வண்டு. வீழ்தல்-விரும்புதல்; மொய்த்தலுமாம். ஈண்டுத் தலைவன் தான்றுய்த்த தலைவியின் பல்லும் அல்குலும் பணைத்தோளும் ஆகிய உறுப்பு நலன் களை நினைந்து உளம் நெகிழ்ந்து கூறுகின்றான் என்றுணர்க. நலம் — பெண்மைநலம். புலப்புதல் – தனிமையுற்று மெலிதல். செல்லல்: அல்வீற்று எதிர்மறை வியங்கோள். வினையே ஆடவர்க்குயிர் என்பது பற்றி அற்றைநாள் நீ உடன்படாது வினைநயந்தனை. நயந்தவாறே அவ்வினைமேற் சேறலே நலமாம், மீளல் ஆண்மைக் கழகன்றுகாண்! என்று கழறியபடியாம்.

எ - டு: மனைநகப்..........தருகம்

(இ - ள்.) மனை நக - நீ எண்ணித் துணிந்தவாறே வினை மேற்சென்று நம்மில்லம் விளக்கமுறும்படி; பல்வேறு வெறுக்கை தருகம் - இன்னே சென்று மனையறத்திற்கின்றியமை யாத பல்வேறு வகைப்பட்ட செல்வங்களையும் முயன்று ஈட்டிவருவோம்; இளைபத்திற்றுமாறேத கொள்! என்பதாம்.

(வி - ம்.) நீ முன்பு துணிந்த வினையே ஆடவர்க்குயிர் ஆதலின் அதனை மேற்கொண்டு சேறலே நங்கடன் ஆதலின் துணிந்தவாறே சென்று பொருளீட்டிவருதும்; இடையே இன்பத்தை எண்ணிக் கடமை யைக் கைவிடுதல் ஆண்மையுமன்று, அறிவுடைமையுமன்று, ஆதலால் மயங்காது சென்று பல்வேறு வெறுக்கை தருதும் என்று மயங்கிய தன் னெஞ்சத்தைத் தேற்றுகின்றான் என்க.

### கூ - கச: புரியிணர்.........வைப்பில்

(இ - ள்.) புரி இணர் மெல் அவிழ் அம்சினை புலம்ப வல்லோன் கோடு அறை கொம்பின் வீ உகத் தீண்டி - வலப்பக்கமாக முறுக்கேறிய பூங்கொத்துக்கள் மெத்தென்று மலர்கின்ற அழகிய கிளைகள் அப் பூக்கள் உதிரப்பெற்று வறியனவாகுமபடி உடல் வன்மை யுடையோனொருவன் அக் கிளைகளைப் புடைக்கின்ற கோல் போன்று மலர்கள் உதிரும்படி புடைத்து; மரா அம் அலைத்த மணம் வாய்த்தென்றல் - மராமரத்தை அசைத்தலாலே அம் மலர் மணம் தனக்கும் வாய்க்கப்பெற்ற தென்றலானது; சுரம் செல் மள்ளர் சுரியல தூஉறும் - பாலைநிலத்து வழியிலே செல்லுகின்ற போர் மறவருடைய சுருண்ட மயிரின்மிசை அம் மலர்களைக் கொணர்ந்து சொரிதற்கிடனாகிய; என்றூழ் நின்ற புல் தலை வைப்பில் - வெயிலினது வெப்பமே நெடிது நிலைத்து நின்ற புற்கென்ற இடங்களையுடைய ஊர்களில் என்க.

(வி - ம்.) புரி இணர்: வினைத்தொகை. மராமரத்தின் மலர்கள் வலப்பக்கமாக முறுக்கேறி யிருப்பனவாதலின் உரையாசிரியர் 'வலஞ்சுரிந்த' என்றார். மரா அமரம்-ஆச்சாமரம். புரியிணர் மெல்லவிழ் அஞ்சினை புலம்ப வீயுகத்தீண்டி, வல்லோன் கோடறை கொம்பு போன்று தீண்டி, எனத் தனித்தனி கூட்டுக. மராமரத்தின் பூங்கொம்புகளைத் தீண்டி யலைத்தலால் அம் மலர் மணத்தைத் தென்றலுடைத்தாயிற்று. உதிரும் அம் மலர்களைத் தென்றல் வாரிக் கொணர்ந்து வேனிற்காலத்துப் போரில் வென்று வாகை சூடிச் செல்லும் மள்ளர் சுரியலில் அவரைப் பாராட்டுதல் போன்று சொரியும் என்பது கருத்து. என்றூழ்: ஆகுபெயர் - என்றூழ் நிற்றலால் பசும் புல்லும் தலைகாண்பரிதாய புன்றலை வைப்பென்க. வைப்பு - ஊர். வாழ்தற்குரிய பொருள்களை ஒருசேர ஈட்டிவைத்தற் கிடனாகலின் ஊர்கள் அப் பெயர் பெறுவனவாயின.

### கரு - உரு: பருந்து.........கூவல்

(இ - ள்.) பருந்து இளைப்படூஉம் பாறுதலை ஓமை இருங் கல் விடர் அகத்து - பருந்துகள் முட்டையிட்டு அடைகாத்தற் கிடனான வற்றிச் சிதரிய நுனிகளையுடைய ஓமை மரங்களையுடைய கரிய மலையினது முழைஞ்சினூடே; ஈன்று இளைப்பட்ட மெல் புனிற்று அமபிணவு பசித்தது என - குட்டிகளையீன்று அவற்றைக் காத்துக் கிடக்கின்ற மெலிய ஈன்றணிமையுடைய காதலியாகிய பெண்ணாய் பசித்துளதென்றிரங்கி; பைங்கண் செந்நாய் ஏற்றை - பசிய கண்ணையுடைய செந்நாயாகிய ஆண் நாய்; கேழல் தாக்க - அக்காதலிக்கு இரையூட்டற்பொருட்டு ஆண்பன்றியினைத் தாக்கி வீழ்த்துதலாலே; இரிபல் பிணவல் தீண்டலின் - அச்சத்தால் கெட்டோடுகின்ற பெண் பன்றி உராய்தலாலே; பரீஇ

செங்காய் உதிர்ந்த பைங்குலை ஈந்தின் பரல் மண்சுவல முரண் நிலம் - அறுபட்டுச் செங்காய்கள் உதிரப்பெற்ற பசிய குலைகளை யுடைய ஈந்தினது முதிராத விதைகள் விரவிய மணலையுடைய மேடாகிய வன்னிலத்தை; கூழ் ஆர் கூவலர் - கூழுண்ணும் இயல்புடைய கிணறகழுகின்ற தொழிலையுடையோர்; வல்வாய்க் கணிச்சி உடைத்த - தமது வலிய வாயையுடைய குந்தாலியாலே அகழப்பட்ட, ஊறுதுஇட்ட உவலைக்கூவல் - நீர் ஊறுமையாலே கைவிட்டுப் போன சருகுகள் நிரம்பிய வறிய கிணற்றினை என்க.

(வி - ம்.) இளை - காவல்; இளையினிது தந்து "என வரும் பதிற்றுப் பத்தினும் (உஅ) அஃதப்பொருட்டாதலறிக. ஈண்டுப்பருந்தினைப் படூஉம் எனறது, முட்டையிட்டு அடைகாக்கும் என்றவாறு. (கக-எ) ஈன்றிளைப்பட்ட பிணவு என்பதற்குக் குட்டிகளை ஈன்று அவற்றைப் பாதுகாத்துக் கிடக்கும் பெண்ணாய் என்க. பாறுதலை ஓமை என்றது தழைகளால் இடையீடின்றித் தோன்றாமல் இலையின்றிச் சுள்ளிகளாய்த் தனித்தனி சிதரித் தோன்றும் நுனி என்க. விடரகம் – முழைஞ்சினுள். பிணவு பிணவல் என்பன பெண் என்னும் பொருளன. புனிறு – ஈன்றணிமையுடைமை. இரியல் - அஞ்சிப் புறமிட்டோடுதல். பரல் - விதை. முரணிலம் - வன்னிலம். கணிச்சி - குந்தாலி என்னும் கருவி. கூவலர் - கிணறகழுந் தொழிலாளர். உடைத்த கூவல், நீர் ஊறுமையால் கைவிட்டுப் போன கூவல், உவலை நிரம்பிய கூவல் எனத் தனித் தனி இயைக்க. உவலை - சருகு.

உச - உஎ: வெண்கோடு..........காடே

(இ - ள்.) இருங்களிற்று இன நிரை -பெரிய களிற்றியானைகளும் அவற்றின் இனமாகிய பிடிகளும் கன்றுமாகிய கூட்டம்; வெண்கோடு நயந்த அன்பு இல் கானவர் - தமது வெள்ளிய மருப்புக்களைக் கைக்கொள்ள விரும்பிய தம்பால் அன்பில்லாத கொடியவராகிய வேட்டுவர்கள்; இகழ்ந்து இயங்கு இயவின்- தமக்குத் துன்பம் வருமென்று அஞ்சி விழிப்புடன் செல்லாமல் தம் மனம்போனவாறு தாம் இயங்குதற்குரிய இந்த வழியின்கண்; அகழ்ந்த குழிசெத்து- தம்மை வீழ்த்திப் பற்றிக்கோடற் பொருட்டு வஞ்சகமாக அகழ்ந்து சருகால் மூடிவைத்த குழி என்று கருதி; தூர்க்கும் - ஆங்குக் கூவலர் விட்டுப்போன கல முதலியவற்றால் தூர்க்கின்ற; பெருங்கல் அத்தம் விலங்கிய காடு - பெரிய கற்குவியல்கள் வழிகளைத் தடுத்தற்கியன்ற இந்தக் காட்டினூடே யாம் செல்லுதற்கு; என்க.

(வி - ம்.) தம்முடைய கோடு கொளற்பொருட்டுத் தம்மைக் கொல்லுதலின் பிறவுயிரிடத்து அன்பில்லாத வன்கண்ணராகிய கானவர் என்க. இகழ்ந்து இயங்கு இயவு - ஈண்டுச் சிறிதும் தமக்குத் துன்பம் வாராது என்னும் துணிவுண்மையால், இயங்கும்போது விழிப்புடன் கூர்ந்து நோக்குதலை விட்டியங்குமியவு என்றவாறு.

அ - கூ : வல்லே யெழுவினி

(இ - ள்.) இனி, வல்லே எழு - இப்பொழுதே விரைந்து எழுந்து என்னுடன் வருவாயாக! என்பதாம்.

(வி - ம்.) எண்ணித் துணிந்த வினையிற் காலந்தாழ்த்தலும் இழுக்கு என்பான் வல்லே எழு என்றான். இனி - இப்பொழுதே.

இனி, இதனை நெஞ்சே! யான் மடந்தை நலம் புலம்பச் செல்லல் என்று சொல்லவும் ஒல்லாய் வினை நயந்து அமைந்தனை ஆயின் நக வெறுக்கை தருகம், காடு இனி வல்லே எழு! என இயைக்க.

(பா - வே.) க - மனைவளர். ௪. நகைமென். ௬. செல்லல மென்றியான். (உக)

## செய்யுள் உஉ

திணை : குறிஞ்சி.

துறை : (க) வரைவிடை வைத்துப் பிரிந்த காலத்துத் தலைமகள் ஆற்றாளாகத் தோழி தலைமகனை இயற்பழிப்பத் தலைமகள் இயற்பட மொழிந்தது.

(உ) தலைமகன் இரவுக் குறிவந்து சிறைப்புறத்தானாகத் தோழியாற் சொல்லெடுக்கப்பட்டுத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

(து - ம்.) (க) அஃதாவது - தலைவன் வரைபொருணிமித்தம் இடையிலே பிரிந்து போனமையால் தலைவி அப்பிரிவாற்றாது அவனையே நினைந்து பெரிதும் வருந்துவாளாயினள். அவ் வருத்தத்தை ஆற்றுவிக்க வேறு வழிகாணாத தோழி தலைவனையே பழிக்க, அது கேட்ட தலைவி அது பொறாமல் தோழியைக் கடிந்து தலைவனைப் புகழ்ந்து பாராட்டியது என்பதாம்.

பிரிவுத் துன்பத்தில் ஆழ்ந்திருக்கும் தலைவி நெஞ்சத்தைத் தோழி மற்றொரு நெறியில் மாறறிவிடுதற்குச் செய்யும் ஓருபாயமே இஃதென்றுணர்க.

(உ) அஃதாவது - வரைதற் கருத்தின்றிக் களவின்பமே காமுற்றொழுகுந் தலைவன் ஒருநாள் இரவுக் குறியிடத்தயலே வந்து நிற்றலறிந்த தோழி வெறியச்சுறுத்தி வரைவுகடாவற் பொருட்டு அவன் வரவுணராதாள் போன்று தலைவிக்குக் கூறுவாளாய் அவன் கேட்பக் கூறத் தொடங்கினளாக அதுகேட்ட தலைவி இடையே தோழிக்குக் கூறுவாளாய் (அவன்கேட்ப) வெறியாட்டு நிகழ்ந்தமை தோன்றக் கூறி முடித்தது என்றவாறு.

(இ - ம்.) துறை, இரண்டனுக்கும் மறைந்தவர் காண்டல் என்னும் நூற்பாவின்கண் (தொல் - கள : உ0) 'வழுவின்றி நிலைஇய இயற்படு பொருளினும்' என வரும் விதிகொள்க.

அணங்குடை நெடுவரை யுச்சியி னிழிதருங்
கணங்கோ ளருவிக் கான்கெழு நாடன்
மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்ல
லிதுவென வறியா மறுவரற் பொழுதிற்
ரு. படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவ ளிவளென
முதுவாய்ப் பெண்டி ரதுவாய் கூறக்
களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்
கo. துருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற் றுப் படுத்த வுருகெழு நடுநா
ளார நாற வருவிடர்த் ததைந்த
சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்
களிற்றிரை தெரீஇய பார்வ லொதுக்கி
கரு. னொளித்தியங்கு மரபின் வயப்புலி போல
நன்மனை நெடுநகர்க் காவல ரறியாமைத்
தந்நசை யுள்ளத்து நந்நசை வாய்ப்ப
வின்னுயிர் குழைய முயங்குதோறு மெய்ம்மலிந்து
நக்கனெ னல்லனோ யானே யெய்த்த
உo. நோய்தணி காதலர் வரவீண்
டேதில் வேலற் குலந்தமை கண்டே.

—வெறிபாடிய காமக் கண்ணியார்.

(உரை)

க - எ: அணங்குடை.........கூற

(இ - ள்.) *அணங்குஉடை நெடுவரை உச்சியின் இழிதரும் கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன் - தோழீ! தீண்டி வருத்தும் தெய்வங்களையுடைய நெடிய மலையினுச்சியினின்றும் வீழுகின்ற கூட்டமான அருவிகளையுடைய காடு பொருந்திய மலைநாட்டையுடைய நம் பெருமானுடைய; மணம் கமழ் வியல் மார்பு அணங்கிய செல்லல் - நறுமணங்கமழுகின்ற அகன்ற மார்பு தனது பிரிவினாலே நின்னை வருத்தியதனாலே நினக்குண்டாகிய துன்பத்தை; இது வென அறியா மறுவரல் பொழுதில் - இஃது இதனால் ஆயது என்று நாமறியுமாறு போல நம்மன்னை முதலி*

யோர் அறியமாட்டாமல் நெஞ்சு சுழன்று வருந்தியபொழுது; முது வாய்ப் பெண்டிர் - அறிவு வாய்க்கப்பெற்ற பேரிளம் பெண்டிர்கள்; படியோர்த் தேய்த்த பல் புகழ்த் தடக்கை நெடுவேள் பேண - தன்னை வணங்காத சூரபதுமன் முதலிய பகைவரை யெல்லாம் கொன்றழித்த வெற்றியை யுளளிட்ட பல்வேறு புகழ்களையுடைய பெரிய கைகளையுடைய மன மொழிகட்கு எட்டாத நெடிய முருக வேளுக்கு வெறியெடுத்து வழிபாடு செய்தால்; இவள் தணிகுவள் - இவள தனக்கெய்திய துன்பந் தணியப் பெறுகுவள்காண் என்று; அது வாய் கூற - அத் தெய்வத்தாலாய துனபமே இது வென்று அதனையே வாய்மை போல நம்மன்னைக்கு அறிவுறுத்தா நிற்ப; என்க.

(வி - ம்.) அணங்கு - தீண்டி வருத்தும் தெய்வம். அவன் நாட்டு மலை தீண்டினாரை வருத்துதல் போன்று அவன் மார்புந் தன்னைத் தீண்டினாரை வருத்துகின்றது எனப் பொருட்புறத்தே இறைச்சி தோன்றிற்று. இங்ஙனம் அறக்கழிவு செய்வான்மலை அருவியுடைத் தாதல் வியப்பு எனத் தோழி தலைவனை இயற்பழித்தனள் என்க. செல்லல் இதுவென அறியா மறுவரல் என்றது நாம் அறிவதுபோன்று இச் செல்லற்குக் காரணம் இஃதென்று அறியமாட்டாமையால் உண்டான மனச்சுழற்சி என்பதுபட கின்றது. மனத்தால் துணிய மாட்டாமையின் அது சுழல்வதாயிற்று. மறுவரல் - செவிலி முதலியோர் செயல் என்க. படியார், படியோர் என ஆகாரம் ஓகாரமாய்த் திரிந்தது செய்யுளாகலின். படியார் - கீழ்ப்படியாதவர், பகைவர். அவர் சூரன் முதலியோர். பகைவரை மருங்கறக் கொன்றான் என்பது தோன்றத் தேய்த்த என்றாள். படியோர்த் தேய்த்தமை யுள்ளிட்ட பல் புகழ்த் தடக்கை என்க. நெடுவேள் என்புழி நெடுமை மாந்தர் மன மொழிகட்கு அப்பாலாதல் என்க. வேள்-முருகக்கடவுள். பேணுதல் வெறியாட்டெடுத்து வழிபாடு செய்தல் இனி நெடுவேட்குக் கைகளும் பலவாய் அவை தனித்தனி புகழுடையனவாதலை திருமுருகாற்றுப் படையில் "வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்" என்பது (௧0௬) தொடங்கி, "ஒருகை வானரமகளிர்க்கு வதுவை சூட்ட, ஆங்கப் பன்னிருகையும்பாற்படவியற்றி"(௧௧௮)எனபதிற்றுக் கிடந்த பகுதியா லறிக. முது - அறிவு. வாய்கூற - வாய்மைபோலக் கூற, இதனால் தோழி தலைவனுக்கு வெறியாட்டெடுத்தமை உணர்த்தி வெறியாட்டெடுக்குமளவும் நின்னைத் துன்பத்திலாழ்த்தினன் எனக் குறிப்பாகத் தலைவனை இயற்பழித்தாளுமாயிற்று. இனி இவ்வாறு தோழி இயற்பழித்தமை பொருளாய் மேலே தலைவி இயற்பட மொழிகின்றாள் என்று முதலில் கூறிய துறைக்குக் கொள்க. அதுகாறும் பிரிவாற்றாது வருந்திய தலைவி நெஞ்சம் அவ்வாற்றாமை விடுததுத் தலைவன் நல்லன் அருளுடையன் என்று பாராட்டெடுத்தலின் இவ்வாற்றால் தோழி தலைவியை ஆற்றுவித்தமை நுண்ணிதின் உணர்க.

இனி, இரண்டாவது கூறப்பட்ட துறைக்குச் சிறைப்புறத்தானாகிய தலைவன் கேட்ப அவனுக்குத் தாயறிந்தமையும் வெறியாட்டெடுத்தமை யும் உணர்த்தி வரைவு கடாவற்பொருட்டு இத்துணையும் இயற்பழிப் பாள் போல தோழி கூற, தலைவி அவள் கூற்றைத் தொடர்ந்து

தலைவனை இயற்பட மொழிவாள் போன்று தோழி கூற்றை வலியுறுத்தி வரைவுகடாவுகின்றனள் என்று கொள்க. இனி, வருவன தோழிக்குத் தலைவி கூறியவை என்க. துறையிரண்டற்கும் இஃதொக்கும்.

அ - கக: களநன்............நடுநாள்

(இ - ள்.) களம் நன்கு இழைத்துக் கண்ணி சூட்டி - (ஏடீ தோழி நம் பெருமானைப் பழிதூற்றுதே கொள்! முதுவாய்ப் பெண்டிர் நெடுவேள் பேணத் தணிகுவள் என்று கூறிய அற்றை நாளிரவே நம்மன்னை வேன்மகனை அழைப்ப அவன் வந்து) முருகவேளுக்கு வெறியாடற்குரிய களத்தை நன்றாக அணிசெய்தியற்றி வேல்நட்டு அதற்குக் கடப்பம பூமாலையும சூட்டி; வளநகர் சிலம்பப் பாடி-வளமுடைய நமமில்லம் எதிரொலி எடுக்குமாறு அம் முருகக் கடவுள் எழுந்தருளுமாறு அவனை வாழ்த்திப் பாடி; பலி கொடுத்து - மறிபபலி யீந்து; உருவச் செந்தினை குருதியொடு தூய் - அழகிய செந்தினையை மறிக்குருதியொடு விரவித் தூவி; முருகு ஆற்றுபபடுத்த உருகெழு நடுநாள் - முருகக்கடவுளை வரவழைத்த அச்சம் பொருந்திய அந்த நளளிரவிலே என்க.

(வி - ம்.) ஈண்டுத் தோழி கூற்றிற்கிணங்க வெறியறிவித்தற் பொருட்டுத் தலைவி அவள் கூற்றைத் தொடர்ந்து வெறியாட்டத்தை விதந்தோதுகின்றனள் என்று இரண்டாவது துறைக்குக்கொள்க. இத் துறைக்கு இருவர் கூற்றும் படைத்து மொழிக்கிளவிகளேயாகும். முதற்றுறைக்க யின் பட்டாங்குக் கூறிய கூற்றென்றே கொள்க. இவ்வாறு வெறியாடலை அழகுறப் பாடியிருத்தலால் இதனைப் பாடிய புலவர் பெருமாட்டியார் 'வெறி பாடிய காமக்கண்ணியார்' என்று வழங்கப்படுகின்றார் என்றுணர்க. வெறியாடற்களம் தலைவி இல்லத்தின் மருங்கே அமைத்தலின் ஆண்டுப் பாடும் பாட்டு அவ்வில்லத்திற்றுக்கி ஒலிக்கலாயிற்றென்றுணர்க. நகர் என்பதற்குக் கோயில் என்னும் உரை மிகை. பலி - மறிப்பலி. வேலன் களனிழைத்துப் பாடி முருகாற்றுப்படுத்துதலை "நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி, இமிழிசை அருவியொடு இன்னியங் கறங்க, உருவப் பல்பூத் தூஉய் வெருவரக் குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள், முருகியம் நிறுத்து முரணினர் உட்க, முருகாற்றுப் படுத்த உருகெழு வியனகர்" என வரும் முருகாற்றுப் படையிலும் காண்க (உ௩௬-உ௪௪.) முருகு - முருகக்கடவுள். அவனை, ஆற்றுப்படுத்தலாவது தாம் விரும்பிய வழியில் வரவழைத்தல். மனையிற் கொண்டுபுகுதல் என்பர் பழைய வுரையாசிரியர்.

கஉ - கக: ஆரம்........நக்கனெனல்லனோ யானே

(இ - ள்.) ஆரம் நாற சாரல் அருவிடர்த் ததைந்த பல்பூ வண்டுபடச் சூடி - நப்பெருமான் தம் மார்பிலணிந்த சந்தனம் நறுமணங் கமழாநிற்பத் தமது மலைச்சாரலின்கண் அணுகுதற்கரிய முழைஞ்சிடத்தே மலர்ந்து செறிந்த பல்வேறு மலர்களையும்

வண்டுகள் வந்து மொய்க்குமாறு சூடிக்கொண்டு; களிற்று இரை தெரீஇய பார்வல் ஒதுக்கின் - தனக்கியன்ற களிறாகிய இரையை அறிதற்கு அங்குமிங்கும் கூர்ந்து நோக்கும் நோக்கத்தோடு செல்லும் செலவினையுடையதாய், ஒளித்து இயங்கும் வயப்புலி போல - தன்னைப் பிறவுயிர்கள் காணாவண்ணம் மறைந்து இயங்கு கின்ற முறைமையினையுடைய வலிய ஆண்புலி போன்று; நன் மனை நெடுநகர்க் காவலர் அறியாமை - அழகிய இல்லங்களையுடைய நெடிய நம்மூர்க் காவலர் தம்மை அறிந்துகொள்ளாதவாறு; தம் நசை உள்ளத்து நம் நசை வாய்ப்ப - தம்மையே விரும்புகின்ற நமது வேட்கை நிறைவுறுமாறு நம்பால் வந்தருளி; இன் உயிர் குழைய முயங்குதொறும் - இனிய எனதுயிர் தளிர்க்கும்படி அவர் தழுவுந் தோறும் தழுவுந்தோறும், யான் மெய்ம்மலிந்து நக்கனென் அல்லனோ - யான் உடம்பு பூரித்து என்னுள்ளத்தினூடே அவர் அறியாவண்ணம் நகைத்தேன அல்லனோ ? என்க.

(வி - ம்.) ஆரம் - சந்தனம். அவன் மலைச்சந்தனமாகலின் அதன் மணமும் தனக்குப் பேரின்பம் செய்தலின் அதனை விதந்தோதினள். சாரலும் அவன் மலைச்சாரலாதலின் ஆங்கு மலர்ந்த மலர்சூடி வந்தமைக்குப் மகிழ்ந்தாள் என்க. நாள்மலராகலின் வண்டுபடச்சூடி என்றாள். தெரீஇய - தெரிந்து கோடற்கு. பார்வல் - பார்வை. ஒதுக்கு - செலவு. பின்னர்க் காதலர் என்று பன்மை வாய்பாட்டாற் கூறலின் தன்னசை என்ற பாடம் தந்நசை என்று திருத்திக் கோடற் பாலது. நசைவாய்த்தலாவது விரும்பியதனைப் பெற்று அமைதியுறுதல் என்க. விருப்பியது புணர்ச்சியாம். அது வாய்த்தது என்றவாறு. இஃது இயற்படமொழிந்தது, என்னை? அவர் மார்பு அணங்கியதேனும், "வெறியெடுத்துத் தீராத வழியில் அஃதியாராலே வந்ததென்றயிராத படி அற்றைநாளே வந்து இன்னுயிர் குழைய முயங்கி அளிசெய்த நம் பெருமானைப் பொல்லாங்கு கூறுதல் அடாது" என்பது கருத்தாகலின் என்க. இது முதற்றுறைக்கு; இனி இரண்டாந்துறைக்குத் தலைவன் இயல்பாகவே இரவுக்குறிக்கண் வந்துமீள்வானாக அற்றைநாள் வெறி யாடலும் நிகழ்ந்தது போலப் படைத்துமொழிக்கிளவியால் தோழி வெறியச்சுறுத்தியதனைத் தலைவி வலியுறுத்ததாகக் கொள்க. மேலே தான் நக்கமைக்குக் காரணங் கூறுகின்றாள்.

கக - உக: எய்த்த............கண்டே

(இ - ள்.) எய்த்த நோய்தணி காதலர் ஈண்டு வர - யான் இளைத்தமைக்குக் காரணமான பிரிவாற்றாமையாகிய பிணி துவரத் தீர்த்தற்குரிய காதலர் இரவுககுறியிடத்தே வந்து அளிசெய்வா ராகவும்; ஏதில் வேலற்கு உலந்தமை கண்டு - அன்னை முதலிய யோர் இந்நோய்க்குச் சிறிதும் காரணமாகாத நெடுவேளுக்கு வெறி யாட்டெடுத்து அழிந்த அவர்தம் பேதைமையை நினைந்து என்பதாம்.

(வி - ம்.) எய்த்தநோய்-இளைத்தற்குக் காரணமான நோய். அந் நோய்க்கு அவரே மருந்துமாவார் என்பாள் எய்த்த நோய்தணி காதலர் என்றாள். ஈண்டு என்றது இரவுக் குறியிடத்தை. ஈண்டுக் காதலர் வர அன்னை முதலியோர் ஆண்டு வேலற் குலந்தமை கண்டு என்றவாறு. காண்டல் - நினைந்து காண்டல்.

இனி இதனை(த் தோழி) "நாடன் மார்பு அணங்கிய செல்லல் அறியாப் பொழுதில் முதுவாய்ப் பெண்டிர் நெடுவேள் பேண, தணிகுவள் இவள் என்னுமாற்றால் (தலைவனுக்கு) வெறியாட்டச் சுறுத்தத் தொடங்கிக் கூறிய கூற்றைத் தொடர்ந்து (தலைவி) இழைத்து சூட்டிப் பாடிக் கொடுத்துத் தூஉய் ஆற்றுப்படுத்த நடு நாள் நாறச் சூடி, அறியாமை வாய்ப்ப (வந்து) முயங்குதொறும் நக்கனன் ஈண்டு நோய்தணி காதலர்வர (ஆண்டு அன்னை முதலியோர்) வேலற்கு உலந்தமை கண்டு" என இயைக்க.

இனி, முதற்றுறைக்குப் பட்டாங்குக் கூறியது என்றும், இரண்டாவதற்குப் படைத்து மொழிக்கிளவியாற் கூறியது என்றும் நுண்ணிதி னுணர்ந்து கொள்க.

(பா - வே.) அ - சூடி; கக - காவலறியாமை. (உஉ)

## செய்யுள் உங.

திணை : பாலை.

துறை : தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - பொருள்வயிற் பிரிந்த தலைவன் குறித்த பருவத்தே மீண்டுவராமையாற் பெரிதும் ஆற்றாமை மீக்கூர்ந்த தலைவி தோழியை நோக்கி அருளினும் பொருள் சிறந்ததோ என்று வினவுமாற்றால் தலைவனை நொந்து கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு "எஞ்சியோர்க்கு மெஞ்சுதலிலவே" (தொல் - அகத் - சஉ) எனவரும் விதிகொள்க.

மண்கண் குளிர்ப்ப வீசித் தண்பெயல்
பாடுலந் தன்றே பறைக்குர லெழிலி
புதன்மிசைத் தளவி னிதன்முட் செந்நனை
நெருங்குகுலைப் பிடவமொ டொருங்குபிணி யவிழக்
ரு. காடே கம்மென் றன்றே யவல
கோடுடைந் தன்ன கோடற் பைம்பயிர்ப்
பதவின் பாவை முனைஇ மதவுநடை
யண்ண லிரலை யமர்பிணை தழீஇத்
தண்ணறல் பருகித் தாழ்ந்துபட் டன்வே
க0. யனையகொல் வாழி தோழி மனைய

தாழ்வி ஞெச்சி சூழ்வன மலரு
மௌவன் மாச்சினை காட்டி
யவ்வள வென்று ராண்டுச்செய போருளே.
—ஓரோடோகத்துக் கந்தரத்தனார்.

(உரை)

௧௦ - ௧௩: வாழி........என்றூர்

(இ - ள்.) *தோழி மனைய தாழ்வின் நொச்சி - தோழீ! நம் பெருமான் பொருள்வயிற் பிரியுங் காலத்தே நம் மனை முன்றிலிலே குறுமையினையுடைய நொச்சியினது; மௌவல் சூழ்வன மலரும் மா சினை காட்டி - முல்லைக் கொடிகள் சுற்றிப் படர்ந்து மலர்தற் குரிய கரிய கொம்பினைச் சுட்டிகாட்டி; அ அளவு என்றூர் - அக் கொம்பின்கண் அம் முல்லைக் கொடி மலரும் கார்ப் பருவத் தொடக் கமே யாம் மீண்டு வருமகாலத்தின் எல்லையாம் என்று நமக்குக் கூறிச் சென்றனர் அல்லரோ? என்க.*

(வி - ம்.) *தாழ்வின் - தாழ்வினையுடைய; அஃதாவது குறிய என்றவாறு. மாச்சினை - கரிய கொம்பு. முல்லை மலர்தற்குரிய நொச்சிச்சினையைக் காட்டி அச் சினையில் இம் முல்லை படர்ந்து மலர் கின்ற கார்ப்பருவத் தொடக்கத்தே யான் மீண்டு வருவேன் என்று குறிப்பாக வுணர்த்துவார் 'மௌவல் மாச்சினை காட்டி அவ்வளவு என்றூர்' என்பது கருத்து.*

௧ - ௫: மண்கண்............கம்மென்றன்றே

(இ - ள்.) *பறைக்குரல் எழிலி மண்கண் குளிர்ப்பத் தண் பெயல் வீசி - இப்பொழுதோ முரசுபோன்று முழங்கும் இடிக்குரலை யுடைய முகில் இநிலத்திலுள்ள இடங்களெல்லாம் குளிரும்படி குளிர்ந்த மழையைச் சொரிந்து; பாடு உலந்தன்று - தனது இடி முழக்கமும் ஒழிந்து போயிற்று, புதல்மிசைத் தளவின் இதல் முள் செ நனை - மழைவளம் பெற்றமையாலே புதர்களின்மேற் படர்ந் துள்ள செம்முல்லையினது சிவலின் முளையொத்த சிவந்த அரும்புகள்; நெருங்குகுலைப் பிடவமொடு ஒருங்குபிணி அவிழ - செறிந்த குலைகளையுடைய பிடாவினது அரும்புகளோடே ஒருசேரத் தளையவிழ்ந்து மலராநிறறலாலே; காடே கம் என்றன்று - இம் முல்லைப் பரப்பிலமைந்த காடு முழுவதும் கமகம வென்று நறு மணங் கமழ்கின்றதுகாண்!*

(வி - ம்.) *பறை - முரசு. எழிலி - முகில். கண் - இடம். பாடு - முழக்கம். உலந்தன்று - உலந்தது. தளவு - செம்முல்லை. பிடவம் -*

பிடா. கம்மென்றன்று - மணக்குறிப்பு. அநுகரணம் என்பர் பழைய உரையாசிரியர். அஃதாவது ஒலிக்குறிப்பு என்பது அவர் கருத்து. இதனால் அக் கார்ப் பருவம் வந்து நாள்கள் பற்பல கழிந்தன என்றாளாயிற்று.

### ரு - கூ: அவல.........பட்டனவே

(இ - ள்.) அவல கோடு உடைந்தன்ன கோடல் பைம்பயிர்ப் பதவின் பாவை முனைஇ - பள்ளமான இடங்களிலே மலர்ந்துள்ள சங்கு உடைந்தாற்போன்று தோன்றுகின்ற வெண்காந்தள் மலர்களையும் பசிய வரகு முதலிய பயிர்களையும் அறுகங் கிழங்குகளையும் தின்று தெவிட்டுதலாலே அவற்றை வெறுத்து; மதவு நடை அண்ணல் இரலை அமர்பிணை தழீஇ - செருக்குடைய நடையினையும் தலைமைத் தன்மையையுமுடைய இரலைமானைகள் தம்மை விரும்புகின்ற பிணைமான்களைக் காமுற்றுத் தழுவிச் சென்று; தண் அறல் பருகித் தாழ்ந்துபட்டன - குளிர்ந்த நீரைப் பருகி ஒருங்கு குழீஇக் கிடப்பனவாயின; இன்னும் நமபெருமான் வந்திலர்! என்க.

(வி - ம்) அவல் – பள்ளமான நிலப்பகுதி. கோடு - சங்கு. வெண்காந்தள் மலர்க்கு உடைந்த சங்குவமை. கோடல்: மலர்க்கு ஆகுபெயர். கோடலையும் பைம்பயிரையும் பாவையையும் முனைஇ என்க. பயிர் வரகு முதலிய பயிர். அமர்பிணை: வினைத்தொகை. இரலை- ஆண்மான். மான்குழுவிற்குத் தலைமையுடைய இரலை என்க. தாழ்ந்து படுதல் – கவலையின்றி அமைதியுற்றுக் கிடத்தலுமாம்.

இதுவும் கார்ப்பருவம் முதிர்ந்தமை கூறியபடியாம். என்னை? பெயல்வளம் பெற்றுக் கோடல் மலர்ந்தமையும் பயிர் தழைத்தமையும் பதவு பாவை வீழ்த்தமையும் கூறப்படுதலான் என்க. இன்னும் நம் பெருமான் வந்திலர் என்பது குறிப்பெச்சம்.

### கக: ஆண்டுச் செய்பொருளே

(இ - ள்.) ஆண்டுச் செய்பொருள் - அவர் நம்மைத் துறந்துபோய் அவ்வேற்று நாடுகளிலே முயன்று ஈட்டுகின்ற பொருள் தாம் என்க.

(வி – ம்) ஆண்டுச் செய்பொருள் என்றது ஈண்டு யாம் பிரிவாற்றாமல் பெரிதும் வருந்திக்கிடப்பவும் நம்மை நினையாது ஆண்டுச் செய்பொருள் என்பதுபட நின்றது.

### கo: அனைய கோல்.........வாழி

(இ - ள்.) தமது வாய்மையறத்தைக் கைவிட்டு ஈட்டுதற்கு அத்துணைச் சிறப்புடையனவோ?; வாழி - சிறப்புடையனவாயின் அவர் நீடுவாழ்க! என்பதாம்.

(வி - ம்.) அவர் பிரிவு நம்மைக் கொன்றொழிக்கும்; அவர் தாம் மீண்டு வருவதாகக் குறித்துக் கூறிய கூற்றும் பொய்த்தனர். இவ்வாற்றால் அவர் அருளையும் வாய்மையினையும் துறந்து பொருள் செய்கின்றனர் அப்பொருள் தலைசிறந்த இவ்வறங்களினுங்காட்டிற் சிறப்புடையனவோ? என்று வினவியவாறும்.

ஈண்டு முல்லைத் திணைக்குரிய முதலும் கருவும் உரிப்பொருள் பிரிதனிமித்தமாதலின் பாலைத் திணைக்காயிற்று.

இதனை ஆசிரியர் தொல்காப்பியனார் "மரபு நிலைதிரியா மாட்சிய வாகி விரவும் பொருளும் விரவும் என்ப" என்பதனால் (தொல்-அகத். சஉ) அமைப்பர்.

இனி இதனை, 'தோழி நம்பெருமான் நம்மைப் பிரியுங்கால் நொச்சியினது மௌவல் மலரும் சினை காட்டி அவ்வளவு என்றார். இப்பொழுதோ எழிலி பெயல்வீசிப் பாடுலந்தன்று; காடு கம்மென் றன்று; அவல் கோடல் பயிர் பாவை முனைஇ இரலை தழீஇப் பருகித் தாழ்ந்து பட்டன. அவர் இன்னும் வந்திலர்; ஆண்டுச் செய்பொருள் அனைய கொல்? என இயைக்க.

(பா - வே.) ச - பிடவொடு. அ - அமர்துணை. (உக)

## செய்யுள் உரு

திணை : முல்லை.

துறை : (க) தலைமகன் பருவங்கண்டு சொல்லியது.

(உ) வினைமுற்றுந் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம்.

(து - ம்.) (க) அஃதாவது - வினைவயிற்றலைவியைப் பிரிந்து வேற்று நாட்டின்கண் பாசறைக் கண்ணிருக்கின்ற தலைவன் தான் மீண்டு வருவதாகக் கூறிய பருவ வரவு கண்டு தலைவியை நினைந்து கூறியது என்றவாறு.

(உ) வினைவயிற் சென்ற தலைவன் தான் மேற்கொண்ட வினை முற்றியபொழுது கூறியது எனினுமாம் என்றவாறு.

(இ - ம்.) இவற்றிற்கு, "கரணத்தி னமைந்து முடிந்த காலை" எனவரும் நூற்பாவின்கண் (தொல்-கற்-ரு) "மீட்டுவர வாய்ந்த வகையின் கண்ணும்" என்னும் விதி கொள்க.

வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த
வளைகளைந் தொழிந்த கொழுந்தி னன்ன
தளைபிணி யவிழாச் சுரிமுகப் பகன்றை
சிதரலந் துவலை தூவலின் மலருந்
ரு. தைஇ நின்ற தண்பெயற் கடைநாள்

வயங்குகதிர் கரந்த வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி
மங்குன் மாமழை தென்புலம் படரும்
பனியிருங் கங்குலுந் தமிய ணீந்தித்
க०. தம்மூ ரோளே நன்னுதல் யாமே
கடிமதிற் கதவம் பாய்தலிற் றொடிபிளந்து
நுதிமுக மழுகிய மண்ணைவெண் கோட்டுச்
சிறுகண் யானை நெடுநா வொண்மணி
கழிப்பிணிக் கறைத்தோற் பொழிகணை யுதைப்புத்
கரு. தழங்குகுரன் முரசமொடு முழங்கும் யாமத்துக்
கழித்துறை செறியா வாளுடை யெறுழ்த்தோ
ளிரவுத்துயின் மடிந்த தானை
யுரவுச்சின வேந்தன் பாசறை யேமே.

—ஆலூர் மூலங்கிழார்.

(உரை)

க०: நல்நுதல்

(இ - ள்.) *நல்நுதல் – அழகிய நெற்றியினையுடைய நம்மாருயிர்க் காதலியைப் பிரிந்து வந்தமையாலே அவள்தான் தனித்துறையவொண்ணாத கொடிய காலமாகிய இப்பொழுது என்க.*

(வி - ம்.) *காதற்றுணைவர் தனித்துறையவொண்ணாத பனிப்பருவம் நிகழாநிற்ப முன்பனிப்பருவத் தொடக்கத்தே மீண்டுவருகுவல் எனத் தலைவன் தலைவியின் நுதனீவித் தேற்றுரை கூறிவந்தவன் அப்பருவம் வந்து முதிர்ந்துழி, அவள் நிலை என்னுமை என்று கருதுபவன் தானீவிய அவள் நுதலின் பேரழகு உள்ளத்தே பதிந்துகிடத்தலின் அதனையே விதந்து நன்னுதல் என்று கூறுகின்றான் என்க.*

க - ரு: வேளா.........கடைநாள்

(இ - ள்.) *வேளாப்பார்ப்பான் வாளரந் துமித்த வளைகளைந்து ஒழிந்த கொழுந்தின் அனைய - மறைபயிலாமையின் ,ினகருத் தலைசிறந்த தொழிலாகிய வேள்வி செய்யாத பார்ப்பனன் வயிறோம்புதற்பொருட்டுச் சங்கறுப்பவன் தனது வாளரத்தாலே அரிந்துகொண்ட வளையல்களைக் கைக்கொண்டு எஞ்சிய சங்கினது நுனிப்பகுதிபோன்ற; தளைபிணி அவிழாச் சுரிமுகப் பகன்றை-கட்டமைந்த பிணிப்பு விடாத வலஞ்சுற்றுதலையுடைய முகத்தையுடைய*

பகன்றையின் நாளரும்புகள்; சிதரலம் துவலை தூவலின் மலரும்-முகில் மிகுதியாகப் பொழியாமல் சிதறுகின்ற அழகிய நுண்டுளிகளை மெல்லத் தூவுதலாலே மலர்கின்ற காலமாகிய; தைஇ தண்பெயல் கழிந்த கடைநாள்-தைத்திங்களினது குளிர்ந்த அம் மழையும் நின்றுபோன இறுதிப் பகுதியான இம்முன்பனி முதிர்வின்கண் என்க.

(வி - ம்.) மறைபயின்று வேள்விசெய்யும் அறிவு மதுகையில்லாத பார்ப்பனர் அக்காலத்தே சங்கறுத்து வளையல் செய்தல் முதலிய பிறதொழில் செய்தனர் என்பது இதனாற் பெற்றாம். வாளரம் துமித்த கொழுந்து, வளைகளைந்து ஒழிந்த கொழுந்து எனத் தனித்தனியியையும். இனி வளைகளைய ஒழிந்த எனக் களைந்தென்பதனைச் செயவெனெச்சமாகத் திரித்துக் கோடலுமாம். கொழுந்து என்றது நுனி என்றவாறு. ஈண்டுச் சங்கின் இருநுனிகளில் தலைப்பகுதி சங்குவளையலாக அரியவொண்ணாமையால் வாளா போகட்ட பகுதி பகன்றையின் நாளரும்பிற்கு நிறத்தானும் வடிவத்தானும் உவமையாயிற்றென்க. தண்பெயல் கழிந்த கடைநாள் என்றது மழைபெய்யாதொழிந்த தைத்திங்களின் இறுதி நாட்களை. அஃதாவது முன்பனிப்பருவம் முதிர்ந்த காலத்தை என்க. தலைவன் அப் பருவத்தொடக்கத்தே மீண்டுவருகுவல் என்று தலைவிக்குக் கூறிவந்தானாகலின் அப் பருவம் வந்து முதிர்ந்தமையைக் கருதிக் கூறியவாறாம். ஈண்டு முல்லைக்கு முன்பனி வந்தது காலமயக்கம்.

கூ - கO: வயங்கு.........தம்மூரோனே

(இ - ள்.) வைகறை வயங்கு கதிர் கரந்த மங்குல் மாமழை - விடியற்காலத்திலே சுடர்பரப்பித் திகழுதற்கியன்ற ஞாயிற்று மண்டிலத்தை மறைத்துள்ள இருண்ட பெரிய முகில்கள்; வாடை விசும்பு உரிவதுபோல் வியல் இடத்து ஒழுகித் தென்புலம் படரும்-வாடையினால் உந்தப்பட்டு வானத்தின தோல் உரிவதுபோல அகன்ற அவ் வானிடத்தே புரண்டியங்கித் தென்றிசையிலே பரவு கின்ற; பனி இருங்கங்குலும் - பனியையுடைய பெரிதாகிய வெள்ளத்தையும்; தமியள் நீந்தி - துணையாகிய புணையுமின்றித் தனியளாய் நீந்தி; தம்மூரோன் - தமது ஊரின்கண் உள்ளா னின்றான் என்க.

(வி - ம்.) கதிர்கரந்த மழை, வாடை மழை எனத் தனித்தனி கூட்டுக. வாடையால் உந்தப்பட்டு முகில் புரண்டியங்குவது வானின் தோல் உரிவதுபோல் தோன்றும் என்க. இவ்வுவமையின் அருமையையுணர்ந்த ஆசிரியர் கம்பநாடரும்,

> "மேல்விரிந் தெழுகொடிப் படலை விண்ணெலாம்
> தோலுரிந் துகுவன போன்று தோன்றுமால்" (எழுச்சிப்-கஉ)

எனத் தமது காப்பியத்தினும் அழகுற அமைப்பாராயினர். தைத் திங்களில் பகற்பொழுதினும் காட்டில் இரவுப்பொழுது நீளிதாதலின்

இருங் கங்குல் எனப்பட்டது. கங்குலும் என்றதனை நீந்து என்றமை யால் வெள்ளமாக உருவகித்துக் கூறுக. உம்மை, உயர்வுசிறப்பு.

கo - கரு: யாமே........பாசறையேமே

(இ - ள்.) யாமே - இனி அவளைப் பிரியுங்காலத்தே பனிப் பருவத்தொடக்கத்தே மீண்டு வருகுவல் வருந்தற்க! என்று தேற்றுரை கூறிவந்த யாமோ அவ்வாறே சென்று அவட்குத் துணையாகாமல்; கடிமதில் கதவம் பாய்தலின் - பகற்பொழுதிலே பகை மன்னருடைய அரணாகிய மதிலின் கதவுகளைத் தகர்த்தற்குப் பாய்ந்து குத்துதலாலே; தொடிபிளந்து நுதிமுக மழுகிய மண்ணை வெண்கோட்டுச் சிறுகண்யானை நெடுநா ஒண்மணி - பூண்பிளக்கப் பட்டு நுனியின கூர்மை மழுங்கிப்போய் மழுமட்டையான வெள்ளிய மருப்பினையும் சிறிய கண்களையுமுடைய யானைகளிற் கட்டப்பட்ட நீண்ட நாவினையுடைய ஒள்ளிய மணிகளின் ஒலியும், கலிபிணிக் கறைத்தோல் பொழிகணை உதைப்பு - கழியினோடு பிணிக்கப்பட்ட கரிய தோலாலியன்ற கிடுகினைக்கண் பகைவர் மதின்மேனின்று பொழிகின்ற அப்புகள் தாக்குகின்ற ஒலியும்; தழங்கு குரல் முரசமொடு முழங்கும் - முழங்குகின்ற ஒலியையுடைய போர் முரசின் முழக்கத்தோடு கூடி ஒலிப்பதும் போர்க்களத்தினின்றும் வந்து; இரவுத்துயில் மடிந்த தானை - இரவின்கண் அச்சமின்றித் துயிலில் ஆழுவதுமாகிய படைகளையுடையவனும், யாமத்துங் கழித்து உறை செறியா வாள் உடை எறுழ்த்தோள் - நள்ளிரவினும் களைந்து அதற்குரிய உறையிடத்தே செருகப்படாத வாட்படை கோத்த வலிமைமிக்க தோளையுடையவனும், உரவுச் சினம்-வன்மை மிக்க சினத்தையுடையவனுமாகிய; வேந்தன் பாசறையேம் - மன்னனுடைய பாசறையிடத்தேமாகின்றேம்; அவள் என்செய் தாறறுவாளோ? அறிகின்றிலேம் என்பதாம்.

(வி - ரை.) யாமே என்றது காதலிக்குப் பனிப்பருவத் தொடக் கத்தே மீண்டு வருகுவம் என்று தேற்றுரை கூறிவந்த யாம் எனத் தன்னை இகழ்ந்தமை படநின்றது. இது கூதிர்ப்பாசறை. இனி "வேந்துறு தொழிலே யாண்டினது அகமே" என்பதனால் வேனிற் பாசறை எனினுமாம். இங்ஙனங் கொள்ளின் கார்ப்பருவத்தே மீள்வல் எனக் கூறி வந்தவன் அத்தண்பெயலும் நின்று முன்பனிப் பருவமும் முதிராநிற்பவும் யாம் பாசறையேமே என்று வெறுத்துக் கூறினனாகக் கொள்க. ஆசிரியர் நச்சினார்க்கினியர் கருத்துமிதுவேயாம் (தொல்-கற்-சக. உரைவிளக்கங் காண்க.)

இனி, கடிமதிற்கதவம்.........முழங்குந்தானை எனவும் போர் முற்றியமையால் இரவுத்துயில் மடிந்த தானை எனவும் தனித்தனி முடிக்க. யாமத்துங் கழித்து உறைசெறியா வாள் உடைத்தோள் வேந்தன் என்க. வேந்தன் யாமத்தும் தன்தோளினின்றும் கழித்துறை செறியா வாளுடையவனாய்ப் பாசறையைக் காத்தல் தொல்ற

அவ்வாறு கூறினான். வேந்தன் அவ்வாறு காத்தலை நெடுநல்வாடையினும் காண்க. இனி யானை மணியோசையும் இடுகிற் கணையுதைக்குமோசையும் முழங்குகுரல் முரசமொடு முழங்குதல் பாசறையில் இரவின்கண் நிகழ்தல் கூடாமையின் இவையெல்லாம் பகற்பொழுது நிகழ்ச்சிகளாகவும் அங்ஙனம் செய்ததானை வினை முற்றிவந்து இரவுத் துயில் மடிந்த பாசறை என இயைத்துக் கொள்க. இங்ஙனமன்றிப் பிறர் கூறிய உரை பொருந்தாமையுமுணர்க.

இனி, இதனை, நன்னுதல் பகன்றை மலரும் தைஇத் தண்பெயல் கடைநாள் இருங்கங்குலும் நீந்தித் தம்மூரோள் யாமே முழங்கும் வேந்தன்றானை துயின்மடிந்த பாசறையேம் அவள் எங்ஙனமாற்றுவள் என இயைபு காண்க.

(பா - வே.) உ. தொழித்து; கஉ. மழுங்கிய. (உச)

## செய்யுள் உரு

**திணை :** பாலை.

**துறை :** பருவங்கண்டழிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

(து - ம்.) அஃதாவது — பொருளீட்டற்குத் தலைவன் பிரிந்து செல்வான் தலைவியை நோக்கி அன்புடையோய்! காதலர்க்கு நனி பேரின்பம் பயக்கும் இளவேனிற்பருவத் தொடக்கத்தே மீண்டு வருகுவல் அதுகாறும் ஆற்றியிருத்தல் நின்கடன் எனக் கூறிச் சென்றவன், அப் பருவம் வந்த பின்னரும் வாராமையால் தலைவி பிரிவாற்றாமையால் பெரிதும் வருந்தினள், அதுகண்ட தோழி குறித்த பருவம் கடந்தாலும் காதலர் இன்றுஞ் சின்னாளில் ஒருதலையாக வருகுவர். வந்து தம் பிழைக்கும் வருந்தி முகமன்கூறி அளி செய்வர்காண். அவர் வருந்துணையும் ஆற்றுக! என்று வற்புறுத்திக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "பெறற்கரும் பெரும் பொருள்" எனவரும் (தொல்·கற்·கூ) நூற்பாவின்கண் "பிறவும் வகைபட வந்த கிளவி யெல்லாந் தோழிக் குரிய" என்பதனாற் கொள்க.

நெடுங்கழைக் கண்ணாழ்நாக் கடும்புனல் சாஅ
யவிர்நறல் கொண்ட விரவுமண லகன்றுறைத்
தண்கய நண்ணிய பொழிற்றொறுங் காஞ்சிப்
பைந்தா தணிந்த போதுமலி யெக்கர்
ரு. வதுவை நாற்றம் புதுவது கஞல
மாநனை கொழுதிய மணிநிற விருங்குயில்
படுநா விளியா நடுநின் றல்கலு
முரைப்பப் போல வூழ்கொள்பு கூவ
வினச்சிதர் குருத்த விலவத் தாங்கட்
கௌ. சினைப்பூங் கோங்கி னுண்டாது பகர்நர்

பவளச் செப்பிற் பொன்சொரிந் தன்ன
விகழுந ரிகழா விளநா ளமையஞ்
செய்தோர் மன்ற குறியென நீநின்
பைத லுண்கண் பனிவார் புறைப்ப
கரு. வாரா மையிற் புலந்த நெஞ்சமொடு
நோவல் குறுமக ளுயியரேன் னுயிரென
மெல்லிய வினிய கூறி வல்லே
வருவர் வாழி தோழி பொருநர்
செல்சமங் கடந்த வில்கெழு தடக்கைப்
உ௦. பொதியிற் செல்வன் பொலந்தேர்த் திதிய
னின்னிசை யியத்திற் கறங்கும்
கன்மிசை யருவிய காடிறந் தோரே.

—ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன்.

கஅ - உஉ: வாழி......................காடிறந்தோர்

(இ - ள்.) *தோழி வாழி - தோழி நீ நீடுவாழ்க!; செல்சமம் பொருநர்க் கடந்த வில்கெழு தடக்கை பொதியில் செல்வன் - தான் மேற்கொண்டு செல்கின்ற போர்களி னெல்லாம் தன்னோடு எதிர் நின்ற பகைவரையெல்லாம் வென்ற வெற்றிச் சிறப்புடைய விற் படை பொருந்திய பெரிய கையினையுடைய பொதியமலையையுடைய மன்னனாகிய; பொலந்தேர்த் திதியன் - பொன்னாணியன்ற தேரை யுடைய திதியன் என்பானுடைய அவையின்கண் இசைக்கப்படு கின்ற; இன இசை இயத்தின் கறங்கும் - இனிய இசைக் கருவிகள் போன்று இனிமையாக ஒலிக்கின்ற, கல்மிசை அருவிய காடு இறந்தோர் - மலையுச்சியினின்றும் வீழ்கின்ற அருவிகளையுடைய காட்டைக் கடந்து பொருளீட்டச் சென்ற நம் பெருமான்; ஒன்க.*

(வி - ரை.) *யாதானும் ஒன்று பற்றி வருந்துவோரை ஆற்றுவிப் போர் அவரை வாழ்த்திச் சொல்லெடுப்பர்; அம் மரபு பற்றி வாழி தோழி! என்று தோழி சொல் எடுக்கின்றாள். தலைவரைப் பற்றிக் கவலை வேண்டா! அவர் நீரும் நிழலும் கெழுமிய காலத்திலே தான் சென்றார். பொருளீட்டிக் கொணரவும் கொணர்வர் என்பது தோன்ற "திதியன் இன்னிசை இயத்திற் கறங்கும் கன்மிசை யருவிய காடிறந் தோர்" என்றாள். தான் செல்சமந்தோறும் தன்னொடு பொருநரை வென்று கடக்கும் சிறப்புடைய வில் என்க. எனவே திதியன் விற்போ ரிற் பேராற்றலும் பெருஞ் சிறப்பும் உடையவன் என்பது பெற்றாம். இன்னிசை இயம் என்றமையால் முழவு முதலிய இசைக் கருவிகளையே கொள்க. சிறியனவும் பரியனவுமாய் அருவிகள்தாம் பற்பல*

வகையில் ஒலித்தலின் அவை இன்னிசை இயங்கள் பலவற்றின் ஒலிபோல ஒலிக்கும் என்பது கருத்து.

செல்வன் - அரசன். பொதிய மலைப் பகுதியை ஆட்சி செய்யும் சிற்றரசன் என்று கொள்க.

க - ௫ : நெடுங்கரை... .....கஞல

(இ - ள்.) நெடுகரை கான் யாற்றுக் கடும்புனல் சாஅய் அவிர் அறல் கொண்ட விரவுமணல் அகல் துறை - நெடிய கரைகளையுடைய காட்டியாற்றின்கண் விரைந்தொழுகும் வெள்ளம் வற்றி விளங்குகின்ற அறுதிகளையுடைத்தாகப் பரந்து இடக்கின்ற அகன்ற இரங்கு துறையிடத்தே; தண் கயம் நண்ணிய பொழில் தொறும் - குளிர்ந்த மடுக்கரையிலமைந்த சோலைகளினெல்லாம்; காஞ்சிப் பைந்தாது அணிந்த போது மலி எக்கர் - காஞ்சி மலரின் பசிய பூந்துகள் உதிர்ந்து அழகு செய்யப்பெற்ற மலர் மிகுந்த மணற்றிடர்கள்; வதுவை நாற்றம் புகுவது கஞல - திருமணப் பந்தர் மணக்குமாறு புதுமையுடைத்தாக மணங் கமழா நிற்பவும்; என்க.

(வி - ம்.) கடும்புனல் - விரைந்தொழுகும் வெள்ளம். சாஅய் - வற்றி. அறல் - நீர் குறைந்து அற்றற் றொழுகுவதால் வரி வரியாக அமையும் மணலறுதிகள். இனி, சாஅய் அவிர் அறல் கொண்ட என்பதற்கு வற்றிச் சிறிதே ஒழுகும் நீரைக் கொண்ட எனினுமாம். அறல்-நீர்க்கு ஆகுபெயர். விரவு மணல் - வந்து கலந்த மணலுமாம். கயம் - மடு. தாது - பூந்துகள். காஞ்சி - ஒருவகை மரம். எக்கர் - நீர் கொணர்ந்து குவித்த மணற்றிடர். வதுவை நாற்றம் - திருமணச் சடங்கில் மணமக்கள் அணிகின்ற நறுமணப் பொருள்களானுண்டாகும் மணம். ஈண்டு இத்திடர்களிலே புதுமணக் காதலர் வந்து விளையாட்டயர்தலான் அந் நறுமணம் அத்திடர்களிலே புதுமையுண்டாக மணப்பதாயிற்று என்பது கருத்தாகக் கொள்க. வதுவையிற் போலப் பல்வேறு மலர் மணமும் விரவி மணக்கும் என உவமையாகக் கோடலுமாம். கஞல - பரவ.

௬ - ௮ : மாநனை.........கூவ

(இ - ள்.) மாநனை கொழுதிய மணி நிற இருங்குயில் படுநா விளியா - மாமரத்தினது தளிரைத் தின்ற நீலமணி போன்ற நிறமுடைய கரிய குயில்கள் புத்தினிமை தோன்றப் பெற்ற நாவினாலே தம்முட் பிணங்கிய காதலர்க் கிரங்கி வலிந்து அழைத்து; அல்கலும் நடுகின்று உரைப்பபோல - நாள்தோறும் அவர்தம் பிணக்குத் தீரும் பொருட்டுத் தாம் நடுநிலைமைக்கண் நின்று அறங்கூறுமாப் போலே; ஊழ் கொள்பு கூவ - சேவலும் பெடையுமாய் முறையே மாறி மாறிக் கூவா நிற்பவும்; என்க.

(வி - ரை.) நனை-தளிர். மாந்தளிரைத் தின்ற பின்னர்க் குயிலின் குரலில் புதிய இனிமை தோன்றும் ஆதலால் நனை கொழுதிய என்பதனைக் குறிப்பேதுவாகக் கொண்டு படுநா என்பதற்குப் புத்தினிமை தோன்றப் பெற்ற நா எனப் பொருள் கூறுக. விளியா - விளித்து. பிணங்கினோர் இருவர்க்கும் பொதுவாக நின்று கூறுதலே அறங் கூறுதலாதலின் நடுநின்று என்றாள். பிணங்கிய காதலர்க்கு நடுநின்று என்க. ஊடியிருக்கும் தலைவன் தலைவியர் இருவர்க்கும் குயிலோசை கேட்டவுடன் காமக்குணம் மீக்கூர்தலின் இருவரும் ஊடல் தீர்ந்து கூடக் கருதுவர் ஆகலின் இங்ஙனம் கூறினார். இதனை,

"ஊடினீர் எல்லாம் உருவிலான் றன் ஆணை
கூடுமின் என்று குயில் சாற்ற"

எனவும்,

"மன்னன் மாரன் மகிழ்துணை யாகிய
இன்னிள வேனில் வந்தனன் இவணென
வளங்கெழு பொதியில் மாமுனி பயந்த
இளங்கால் தூதன் இசைத்தனன் ஆதலின்
மகர வெல்கொடி மைந்தன் சேனை
புகரறு கோலங் கொள்ளுமென் பதுபோல்
கொடிமிடை சோலைக் குயிலோன் என்னும்
படையுள் படுவோன் பணிமொழி கூற"

எனவும் வரும் சிலப்பதிகாரப் பகுதிகளோடு ஒப்பு நோக்குக (வேனிற் காதை).

க - கரு: இனச்சிதர்.........குறிவென

(இ - ள்.) சினைப்பூங் கோங்கின் இனச் சிதர் ஆங்கண் இலவத்து உகுத்த நுண்தாது - கிளைகள் நிரம்ப மலர்ந்துள்ள கோங்க மரத்தின் மலர்களைக் கிண்டிக் கூட்டமான வண்டுகள் உதிர்த்து விட்ட நுண்ணிய பூந்துகள்கள் அவ்விடத்ததாகிய இலவ மலரகத்தே வீழ்ந்தவை; பகர்நர் - பொற்சுண்ணம் விற்போர்; பவளச் செப்பில் பொன் சொரிந்து அன்ன - பவளத்தாலியன்ற செப்பின்கண் பொற்சுண்ணத்தைப் பெய்து வைத்தாற் போன்று தோன்றுதற்குக் காரணமான, இகழுநர் இகழா இளநாள் அமையம் - காமக் கூட்டத்தை இகழுகின்ற துறவோரும் அதனை இகழாமல் உள்ளத்தாலே விரும்புதற்குரிய இந்த இளவேனிற் பருவத்தின் தொடக்க நாளாகிய காலத்தையன்றோ; மன்ற குறி செய்தோர் என - தாம் மீண்டும் வருங்காலமாகத் தேற்றமாகக் குறிப்பிட்டுப் போயினர் என்று கூறி என்க.

(வி - ரை.) கோங்கும் இலவும் ஒருசேர இளவேனிற் பருவத்தே மலர்வன ஆதலின் கோங்கினது பொன் நிறத்தாதினை வண்டுகள்

நின்டி உகுப்ப அலை அருகிற் கிழே மலர்ந்துள்ள பவளச் செப்புப் போன்ற இலவ மலரினூடே உதிர்ந்தனவாக அத் தோற்றம் பொற் சுண்ணம் விற்போர் அவற்றைப் பவளச் செப்பிற் பெய்துவைத்தாற் போலக் காணப்படும் என்க. எனவே இத்தகைய நிகழ்ச்சிகள் நிகழு மியல்புடைய இளநாளமையம் என்க. இளநாள் - இளவேனிற் பருவத்துத் தொடக்க நாள் என்க. தலைவி இளவேனிற் பருவ நிகழ்ச்சி களைக் கண்டு இவ்விளவேனிற் பருவத்தொடக்கநாள் அன்றோ நம் பெருமான் தாம் மீண்டு வருதற்குக் குறித்த அமையம் என்று தோழியை வினவத் தோழி அவள் கூற்றைக் கொண்டு கூறியவாறாகக் கொள்க. இகழுநர் - காமக் கூட்டத்தை இகழும் துறவோர். அவர் தாமும் அதனை உள்ளத்தினூடே விரும்பும் இளநாளமையம் என்பது கருத்து.

## கங - கரு : நீநின்............நோவல்

(இ - ள்.) வாராமையின் நீ நின் பைதல் உண்கண் பனி வார்பு உறைப்ப - அவர் குறித்த காலத்திலே மீண்டு வாராமை யாலே; அவர் வரவினை எதிர்பார்த்து வழிமேல் விழி வைத்து வருந்தியிருக்கின்ற நீ நினது துன்பமிக்க மையுண்ட கண்களினின் றும் கண்ணீர் வழிந்து முத்து முத்தாய்த் துளியா நிற்ப; புலந்த நெஞ்சமொடு - அவரைச் சினந்த நெஞ்சத்தோடு; நோவல் - வருந்தாதே கொள்! அங்ஙனம் ஆற்றியிருப்பதே நின் கடமையாம் என்க.

(வி - ம்.) வினையே ஆடவர்க்குயிர் ஆகலின் வினைவயிற் சென்றவர் வினை முற்றுந்துணையுமிருந்து வினைமுற்றிய பின்னர் மீள்வதே அவர் கடமையாம். மற்றுக் குறித்த பருவத்தே வாராராயினும் அவர் வருந்துணையும் பிரிவாற்றியிருத்தலே நின்கடமை என வற்புறுத்திய படியாம். பைதல் - துன்பம். நோவல் : அல்வீற்று எதிர்மறை வியங்கோள்.

## கசு - கஅ : வாராமையின்............வருவர்

(இ - ள்.) வாராமையின் குறுமகள் - நம் பெருமான் நின்னை நோக்கி "அன்புடைய இளையோய்! யான் நினக்குக் குறித்த நாளின் வாராமையாலே; புலந்த நெஞ்சமொடு - என்னை வெறுத்த நெஞ்சத்தோடு; நோவல் - வருந்தாதே கொள்!; என் உயிர் நோயியர் - உனக்கு இத் துன்பத்தைச் செய்த என் உயிரே தன் பிழை கருதி வருந்துவதாக!" என்று; மெல்லிய இனிய கூறி வல்லே வருவர் - மென்மையுடையனவும் கேட்டற்கு இனியனவுமாகிய மொழிகளை நினக்குக் கூறிக்கொண்டு விரைந்து நின்பால் வருகுவர் என்பதாம்.

(வி - ம்.) 'வாராமையின்.........நெஞ்சமொடு நோவல்' என்னும் துணையும் தலைவன் கூற்றுதற்கும் ஏற்புடைமையின் அவற்றைத் தலைவன்

கூற்றாகவும் கொண்டு கூறிக் கொள்க. இவ்வாறு கொண்டு கூறுதலை ஏற்புழிக் கோடல் என்னும் உத்திக்கினமாகக் கொள்க.

இனி, இதனைத் தோழி காடிறந்தோர் வதுவை நாற்றம் கஞல, குயில் கூவ, தாது பொன் சொரிந்தன்னவாகத் தோன்றும் இவ்விள நாளமையம் அன்றோ குறி செய்தோர் எனக் கூறி அவர் வாராமையின் நோவல். அவர் "குறுமகள் நோவல்! என் உயிர் நோயியர்" என மெல்லிய இனிய கூறி வல்லே வருவர். அவர் வருந்துணையும் ஆற்றுக என்றியைபு காண்க.

(பா - வே) ௭. பாடுநர், வீடுநின்; ௮. நுவலல்; ௧௮. வருப; ௨௨. கன்முகை. (௨௫)

## செய்யுள் ௨௬

**திணை:** மருதம்.

**துறை:** தலைமகன் தோழியை வாயில் வேண்டி அவளால் தான் வாயில் பெறாது ஆற்றாமையே வாயிலாகப் புக்குக் கூடிய தலைமகனீக்கத்துக்கண் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது — பரத்தைமை யொழுக்க முண்மையால் தலைவன் வருந்துணையும் தலைவி ஊடியிருந்தாளாக, மீண்டுவந்த தலைவன் தலைவியை அணுக அஞ்சித் தோழியை வாயில் வேண்டினான். அதுகேட்ட தோழி நீ பெரிதும் பிழையுடையை ஆதலால் எம் பெருமாட்டி ஊடல் தவிர்த்தல் இயலாது என்று மறுத்துப் போயினாள். பின்னர்த் தலைவன் தனது ஆற்றாமை காரணமாகத் தலைவியைத் தானே அணுகி மாயப் பொய்ம்மொழி பல கூறினன். அதுகேட்ட தலைவி நெஞ்சுருகித் தனது ஆற்றாமையால் ஊடல் தீர்ந்து அவனோடு கூடிக் குலாவியிருந்தனள். மறுநாள் தோழி தலைவனில்லாத பொழுது நீ எளிதாக ஊடல் தீர்ந்தமைக்குக் காரணம் யாதென வினவத் தலைவி காரணம் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை "அவனறிவு" என வரும் (தொல்-கற்-௬) நூற்பாவின்கண் "புகன்ற வுள்ளமொடு.........எதிர் பெய்து மறுத்த ஈரத்து மருங்கின்" என்றதனால் 'எதிர் பெய்யாது மறுத்த ஈரம்' என்று கொள்க. (இங்ஙனம் கூறுவர் ஆசிரியர் நச்சினார்க்கினியர். ஷை உரை.)

கூன்முண் முள்ளிக் குவிகுலைக் கழன்ற
மீன்முள் ளன்ன வெண்கான் மாமலர்
பொய்தன் மகளிர் விழவணிக் கூட்டு
மவ்வய ணண்ணிய வளங்கே ழூரனைப்
௫. புலத்தல் கூடுமோ தோழி யல்கற்
பெருங்கதவு பொருத யானை மருப்பி
னிரும்புசெய் தொடியி னேர வாகி
மாக்க ணடைய மார்பகம் பொருந்தி

முயங்கல் விடாஅ லிவையென மயங்கி,
க0. யானோ மென்னவு மொல்லார் தாமற்
றிவைபா ராட்டிய பருவமு முளவே, இனியே
புதல்வற் றடுத்த பாலொடு தடைஇத்
திதலை யணிந்த தேங்கொண் மென்முலை
நறுஞ்சாந் தணிந்த கேழ்கிள ரகலம்
கரு. வீங்க முயங்கல் யாம்வேண் டினமே
தீம்பால் படுத ருமஞ் சினரே, ஆயிடைக்
கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி மதவுநடைச்
செவிலி கையென் புதல்வனை நோக்கி
நல்லோர்க் கொத்தனிர் நீயி ரிஃதோ
உ0. செல்வற் கொத்தனம் யாமென மெல்லவென்
மகன்வயிற் பெயர்தந் தேனே யதுகண்
டியாமுங் காதல மவற்கெனச் சாஅய்ச்
சிறுபுறங் கவையின னாக வுறபெயற்
றண்டுளிக் கேற்ற பலவுழு செஞ்செய்
உரு. மண்போ னெகிழ்ந்தவற் கலுழ்ந்தே
நெஞ்சறை போகிய யறிவி னேற்கே.

—பாண்டியன் கானப் பேரெயில் தந்த உக்கிரப்பெருவழுதி.

(உரை)

க - ரு : கூன்..........தோழி

(இ - ள்.) தோழி - நம் பெருமான்பால் பெரிதும் புலவியோடிருந்த நீ அவர் வந்துழிப் புலவாமல் இணங்கிய தெங்ஙனம் என்று வினவுகின்ற தோழியே!; கூன்முள் முள்ளிக் குவிகுலைக் கழன்ற மீன்முள் அன்ன வெள் கால் மா மலர் - வளைந்த முட்களையுடைய முள்ளிச் செடியினது குவிந்த குலையினின்றும் தாமே கழன்றுதிர்ந்த மீனினது முட்போன்ற வெள்ளிய காம்பினையுடைய கரிய மலர்களை; பொய்தல் மகளிர் விழவு அணிக் கூட்டும் - விளையாட்டயர்கின்ற பேதைமகளிர் தாம் கொண்டாடுகின்ற திருவிழாவை அழகு செய்தற் பொருட்டுப் பொறுக்கிச் சேர்த்தற்கிடனான; அவ் வயல் நண்ணிய வளம் கேழ் ஊரனை - அழகிய கழனிகள் அணிமையவாகிய வளம் பொருந்திய ஊரையுடைய நம் பெருமானோடு; புலத்தல் கூடுமோ - எம்போல்வார் ஊடியிருத்தல் கூடுமோ? ஊடாமைக்குக் காரணங்கூறுவல் கேள்! என்க.

(வி - ம்) முள்ளி - மருதநிலப்பரப்பில் வயல் வரம்புகளிற் காணப்படும் ஒருவகை முட்செடி. குவிகுலை - கூம்பிய வடிவுடைய குலை. கால் - காம்பு. முள்ளியின் மலர் காம்பில் வெண்ணிறமும் இதழ்களில் கருமைநிறமுமுடைத்தாதலின் வெண்கால் மாமலர் எனப் பட்டது. கழன்ற மலர், வெண்கால் மலர், மாமலர் எனத் தனித்தனி கூட்டுக. கழன்ற என்றது தானே பருவங்காரணமாக உதிர்ந்த என்பதுபட நின்றது.

இஃது, உள்ளுறை உவமை - அது வருமாறு: முள்ளியின் மலர் பருவத்தால் தாமே கழன்றுதிர்ந்தவற்றை விளையாட்டு மகளிர் தமது விழாவிற்கு அணியாகக் கைக்கொள்ளுமாறுபோல, என் பருவங் காரணமாக என்பாற் பற்றொழிந்துள்ள நம்பெருமானைப் பரத்தை மகளிர் கைக்கொள்வாராயினர் என்பது இதன் உள்ளுறுத்த பொருளாம்; எனவே அவர் பரத்தைமையொழுக்கத்திற்கு எனது பருவமும் ஒரு காரணம் என்றறிவுறுத்தாளாயிற்று. இங்ஙனமாதலின் யான் புலத்தல் கூடுமோ? என்றவாறு. தலைவன் பற்றின்றியொழுகுவதனை மேலே தலைவி தோழிக்குக் கூறுகின்றாள். கூடுமோ என்னும் வினா அதன் எதிர்மறைப் பொருளை வற்புறுத்து நின்றது.

இனி, பழைய உரையாசிரியர் "முள்ளியின் பக்கலிலே தோற்றி வாழும் பூ அதனை விட்டுப் பிறர்க்குப் பயன்பட்டவாறுபோல நம்முடன் பிறந்த நெஞ்சு அவருடன் ஏகுகையாயிற்று. அவருடைய வதுவை விழவிற்கும் உடலாய்த் திரியாநின்றால் புலத்தல் கூடுமோ? என இதன் உள்ளுறையை விரிப்பர். இது கழன்ற மலரைப் பொய்தல் மகளிர் விழவணிக் கூட்டும் என்பதோடு பொருந்தாமையுணர்க.

ரு - கக : அல்கல்.........உளவே

(இ - ள்.) அல்கல் - நாள்தோறும்; இவை பெருங் கதவு பொருத யானை மருப்பின் மாக்கண் இரும்பு செய் தொடியின் ஏரவாகி - இம்முலைகள் தாம் பெரிய மதிலின் கதவுகளைப் பாய்ந்து குத்திய களிற்றியானையின் மருப்புகளைப் போல்வனவாக இவற்றின் கரிய கண்களோ அக்களிற்று மருப்பின்கண் இரும்பாற் செய்து செருகிய பூண்கள் போன்று அழகுடையனவாகி, மார்பு அகம் அடைய பொருந்தி முயங்கல் விடாஅல் என-யான் எனது மார்பிடமுழுதும் அவற்றிற் பொருந்துமாறு முயங்குதலினின்றும் என்னை விடாதே கொள்க என்று கூறி; மயங்கி - இவற்றின் அழகில் பெரிதும் மயங்கி; யான் ஓம் என்னவும் - யான் அப் பாராட்டுதலை விரும்பாதேன் போன்று இனி இப் புகழுரையை ஒழியுமின் என்று தடுப்பவும்; ஒல்லார் - உடன்படாராய், மற்று இவை பாராட்டிய பருவமும் உள - பின்னரும் இவையிற்றை அவர் பலபடப் பாராட்டிய பருவங்களும் உண்டு; அவை பண்டுமன்! என்பதாம்.

(வி - ம்) முலைகட்கு யானை மருப்பும் அவற்றின் கரிய கண்களுக்கு அம் மருப்பிற் செருகிய இருப்புப் பூண்களும் உவமைகள். மருப்பின்

தொடியின் ஈரிடத்தும் இன் உறழ்பொருட்டு. ஏர - அழகுடையன. மாக்கண்—கரிய முலைக் கண்கள். மார்பகம் அடைய என மாறி-மார்பிட முழுதும் எஞ்சாமல் எனப் பொருள் கூறுக. விடால் : எதிர்மறை வியங்கோள். ஓம்-ஒவும் என்னும் முற்றின் ஈற்றுயிர் மெய் கெட்டது: விகாரம். அவை பண்டுமன் என்பது குறிப்பெச்சம். மகளிரைக் காதலர் புகழுங்கால் அவற்றிற்கு உள்ளத்திலூடே விரும்பியும் வெளிப்படையாக அவற்றை விரும்பாதார் போன்று தடுப்பதும் அம் மகளிர்க்கியல்பு. ஈண்டு ஓம் என்றதற்கு, புகழ்தலை ஒழிமின் என்று தடுத்தேன் என்பதே பொருள். இவ்வியல்புணராது "யான் வருந்தி ஒழிவிராக" எனப் பொருள் கூறுவாருமுளர்.

> "புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவின்
> அள்ளிக்கொள் வற்றே பசப்பு" (குறள் - ககஅஎ)

என்னும் இலக்கிய மரபிற்கு அவ்வுரை பொருந்தாதென்க. மகளிர் கணவன்முயக்கத்தால் வருந்தி அதனைக் கடிந்தாராகச் செய்யுள் செய்வது புலனெறி வழக்கன்று.

### கக - ககூ : இனியே.............அஞ்சினரே

(இ - ள்.) இனியே - இப்பொழுதோ; யாம் புதல்வன் தடுத்த பாலொடு தடைஇத் திதலை அணிந்த தேம் கொள் மெல் முலை - யாம் மகவைப் பிறிதொன்றனையும் விரும்பாது தடைசெய் தற்குக் காரணமான பாற்சுரப்பினாலே மிகைபடப் பருத்த தேமல் படர்ந்த இடங்களைத் தம்மிடத்தே கொண்டுள்ள மெல்லிய எம்முலைகள்; நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் அகலம் வீங்க முயங்கல் வேண்டினம் - நறிய சந்தனக் குழம்பு அணியப்பட்டநிறம் விளங்குகின்ற அவர் மார்பகத்தே அழுந்திப் புடைபருக்குமாறு முயங்குதலைப் பெரிதும் விரும்புகின்றேமாகவும்; தாம் திம்பால் படுதல் அஞ்சினர் - அவரோ அங்ஙனம் முயங்குழி இனிய பால்தம் மார்பிற் படுமென்று அஞ்சுகின்றனர் என்க.

(வி - ம்.) பண்டு இவற்றை எம்மை முயங்குதலினின்றும் விடாதே கொள்க! என்று பாராட்டிய அவரே இப்பொழுது அஞ்சுகின்றனர். புகழ்தல் ஒழிமின் என்ற யாமோ இப்பொழுது முயங்கல் வேண்டினம் இங்ஙனமாக யாம் புலத்தல் கூடுமோ? என்றவாறு. தடைஇ என்பதற்குச் சரிந்த, வளைந்த என்று பொருள் கொள்ளின், தட வென்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த எச்சமாகக் கொள்க, இனித் தடைஇ என்பதற்குப் பருத்த என்னும் பொருளுண்மையை, "அம்பணைத் தடைஇய மென்றோள்" எனவும், (நெடுநல் - கசக) "தடைஇய மென்றோளாய் கேட்டீவாயாயின்" (கலி - கூ) எனவும் வருமிடங்களிற் காண்க. யாம்: இழிவினால் ஒருமை பன்மையாயிற்று.

### ககூ - உக: ஆயிடைக்............பெயர்தந்தேனே

(இ - ள்.) ஆயிடைக் கவவுக் கை நெகிழ்ந்தமை போற்றி - அவ்விடத்தே அவர் நெஞ்சம் நம்மை அகத்திட்டு ஒழுகும்

ஒழுக்கத்தில் நழுவியிருப்பதனை அறிந்து எம்முள் அடக்கிக் கொண்டு அஃதறியாதேம் போன்று, செவிலிகை மதவு நடை என் புதல்வனை நோக்கி - செவிலியின் கையகத்திருந்த மெல்லிய நடையையுடைய என் மகனை நோக்கியவண்ணம் அவர் கேட்ப; நீயிர் நல்லோர்க்கு ஒத்தனிர் - பெரும! நீயிர் நும் பரத்தை மகளிர்க்கே மிகவும் பொருந்தியுள்ளீர்; யாம் இஃதோ செல்வற்கு ஒத்தனம் என - யாம் இதோ செவிலி கையகத் திருக்கின்ற எம் மகனுக்குத் தாயாதற்கே பொருந்தியிருக்கின்றோம் என்று கூறிய வண்ணம்; மெல்ல என் மகன் வயின் பெயர்தந்தேன் - யான் மெல்ல என்மகன் பாற் போயினேனாக; என்க.

(வி - ம்.) கவவுக்கை - அகத்திட்டொழுக்கம். கை - ஒழுக்கம். இஃதோ என்றது செவிலி நிற்குமிடத்தைச் சுட்டியவாறு.

உஉ - உ௩: அதுகண்டு.........கவையினனாக

(இ - ள்.) அதுகண்டு-அங்ஙனம் யான் புலந்து போவதனை உணர்ந்து, சாஅய் - என்பாற் பணிவுடைமை தோற்றுவித்து; அவற்கு யாழும் காதலம்-அவனுக்கு யாமும் அன்புடையேங் காண் என்று கூறி என்னைத் தொடர்ந்து; சிறுபுறம் கவையினன் - என் முதுகுப்பக்கமாக வந்து என்னைக் கட்டியணைத்துக் கொண்டான்காண்;

(வி - ம்.) சாஅய் - பணிந்து, என் புலவிகண்டஞ்சிப் பணிந்து என்றவாறு. கவையினன்: ஒருவரைக் கூறும் பன்மை இகழ்வினால் ஒருமையாயிற்று. அவற்கு - அச் செல்வனுக்கு. சிறுபுறம் - முதுகு.

உ௩ - உ௬: உறுபெயல்............அறிவினேற்கே

(இ - ள்.) உறு பெயல் தண்துளிக்கு ஏற்ற பலவுழு செய் செம்மண் போல் நெகிழ்ந்து - மிக்க மழையினது குளிர்ந்த துளிக்கு ஏக்கற்றுக்கிடந்து பின்னொருகால் அதனை ஏற்றுக் கொண்ட பலகாலும்உழப்பட்ட வயிலினது செம்மண் நெகிழுமாறு நெகிழ்ந்து; அவன் கலுழ்ந்து - அவன் பிரிவாற்றாமையாற் கலங்கி; நெஞ்சு அறை போகிய அறிவினேற்கு - என் நெஞ்சைக் கீழறுத்து அவன்பாற் சென்ற புல்லறிவுடையேனுக்கு (அவனைக் கண்டுழிப் புலத்தல் கூடுமோ?) என்பதாம்.

(வி - ம்.) இது தனதாற்றாமை கூறியவாறு. உறு: மிகுதிப் பொருட்டாயதோர் உரிச்சொல். அறைபோதல் - கீழறுத்துப் போதல், வஞ்சித்துப்போதல்.

இனி, இதனை: தோழி, ஊரனைப் புலத்தல் கூடுமோ அவர் மயங்கி இவை பாராட்டிய பருவமுமுள (அப்பொழுது புலத்தல் எளிதுமன்)

இப்பொழுது யாம் முயங்கல்வேண்டினம், தாம் பால் படுதல் அஞ்சினர். அதுகண்டு பேணிப் புதல்வனை நோக்கியவண்ணம் அவர்கேட்ப நீயிர் நல்லார்க்கு ஒத்தனிர். யாம் இதோ இச் செல்வற்கு ஒத்தனம் எனப் பெயர்தந்தேன், அதுகண்டு அவற்கு யாமும் காதலம் எனச் சாஅய் வந்து சிறுபுறம் கவையினனாக அவன் பிரிவிற்குக் கலுழ்ந்து நெஞ்சு அறை போகிய அறிவினேனுக்குப் (புலத்தல் கூடுமோ?) என இயைத்திடுக.

(பா - வே.) சஎ. நறுஞ்சாந்து புலர்ந்த; உக. இருபெயற் உஇ. கலுழ்ந்தென். (உசு)

## செய்யுள் உஎ

**திணை :** பாலை.

**துறை :** செலவுணர்ந்து வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - தலைவன் பொருளீட்டுதற் பொருட்டுத் தன்னைப் பிரிவான் என்பதனைப் பிறர்கூற்றானுணர்ந்து தலைவி பெரிதும் வருந்தினளாக; அதுகண்ட தோழி அவன் நின்னைப் பிரிவானல்லன் எனக் காரணங்காட்டிக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) அதனை, "தலைவரும் விழுமம்" எனவரும் நூற்பாவின்கண் (தொல்-அகத்-சஉ) என்றிவை யெல்லாம் இயல்புற நாடின் (ஒன்றித் தோன்றும் தோழிமேன) என்பதனால் அமைத்துக் கொள்க

கோடுவரி யிரும்புலி தயங்க நெடுவரை
யாடுகழை யிருவெதிர் கோடைக் கொல்லுங்
கானம் கடிய வென்னார் நாமழ
நின்றதில் பொருட்பிணிச் சென்றிவட் டருமார்
ரு. செல்ப வென்ப வென்போய் நல்ல
மடவை மன்ற நீயே வடவயின்
வேங்கடம் பயந்த வெண்கோட் டியானை
மறப்போர்ப் பாண்டிய ரறத்திற் காக்குங்
கொற்கையம் பெருந்துறை முத்தி னன்ன
க0. நகைப்பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வாய்
தகைப்பத் தங்கல ராயினு மிகப்ப
யாங்ஙனம் விடுமோ மற்றே தேம்படத்
தெண்ணீர்க் கேற்ற திரள்காற் குவளைப்
பெருந்தகை சிதைத்து மமையாப் பனிந்துபட
கரு. வேத்தமர்க் கடந்த வென்றி நல்வேல்

குருதியோடு துயல்வந் தன்னநின்
னரிவே யுண்க ணமர்த்த நோக்கே.

—மதுரைக் கணக்காயனார்.

(உரை)

க - கூ: கோடுவரி............நீயே

(இ - ள்.) கொடுவரி இரும்புலி தயங்க நெடுவரை ஆடு கழை இருவெதிர் - தங்கிழ்ப் பதுங்கிக் கிடக்கின்ற வளைந்த கோடுகளையுடைய பெரிய புலிகள் புறத்தார்க்கு விளங்கித் தோன்றும்படி நெடிய மலையிடத்தே தோன்றி அசைகின்ற கோல்களையுடைய திணி மூங்கில்; கோடைக்கு ஒல்கும் - மேல் காற்று மோதுதலால் வளைதற்கிடனை; கானம் கடிய என்னார் - தாம் கடத்தற்குரிய காடு வெம்மை முதலியவற்றாற் கடுமையுடையன என்று கருதாராய்; நாம் அழ - நாம் பிரிவாற்ருது வருந்தியழும்படி நம்மைப் பிரிந்து; நின்றது இல் பொருள் பிணிச் சென்று - இன்னவிடத்திலே நிலைத்துநின்றது என்று கூறுதற்கு ஒரு சான்றும் இல்லாதன பொருளின்பால் தமக்குண்டான பற்றினாலே அக் காட்டினைக் கடந்து போய்; இவண் தருமார் - அப் பொருளை நிரம்ப ஈட்டி இங்குக் கொணர்தற் பொருட்டு; செல்ப என்ப - போவார் என்று இவ்வூர் மாந்தருட் சிலர் கூறுகின்றனர்; என்போய் - என்று கூறி வருந்துகின்ற தோழீ!; நீ மன்ற நல்ல மடவை - நீ தேற்றமாகப் பெரிதும் அறிவிலியே ஆதல் வேண்டும்; என்க.

(வி - ம்.) காற்றினால் மிகவும் ஆடுகின்ற இயல்புடைய கழையாகிய பெரிய திணிமூங்கில் என்க. வெதிர் — மூங்கிலினுள் ஒருவகை. அஃதாவது கன்மூங்கில்; திணிமூங்கில் எனப் பழையவுரையாசிரியர் கூறுவது மிதுவேயாம்; உட்டுளை சிறிதாகத் திணிந்திருக்கும் மூங்கில் என்றவாறு. கோடை — மேல்காற்று. ஒல்குதல் - வளைதல். கடிய வெம்மை முதலியவற்றாற் கடுமையுடையன. "உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத் தண்ணீர் பெருஅத் தடுமாற்றருந்துயரம் கண்ணீர் நனைக்குங் கடுமைய காடு" என்பது (கலி. ௬). நாம் என்றது அவரால் அளிசெய்யத்தக்க யாம் என்பதுபட நின்றது. நின்றதுஇல்-பொருள் இவ்விடத்தே நிலைத்திருந்தது என்று எடுத்துக்காட்ட ஓரிடமும் இல்லையாகிய புன்மையுடைய பொருள் என்க. "அற்கா இயல் பிற்றுச் செல்வம்" என்பது வள்ளுவர் பொன்மொழி.

இனி, இதன்கண் தன்னுட் பதுங்கிக் கிடக்கும் அஞ்சுதகு புலி புறத்தார்க்குத் தோன்றுமாறு நெடுவரை மூங்கில் மேல் காற்றுக்கு வளைந்து கொடுப்பதுபோல் நின்னுள்ளத்தே ஆழ்ந்திருக்கும் பிரிவச்சம் வெளிப்படுமாறு நீ பிறர் கூற்றிற்கு அஞ்சுகின்றாய் என்னும் உள்ளுறை உவமையுண்மையும் உணர்க.

இனி, யார் யார் வாய் எப்பொருள் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு ஆகவும் நீ பிறர்கூறும் பொய்யையே மெய்யென்று கருதி ஆராய்ச்சி சிறிதுமின்றி வருந்துதி ஆகலின் நீ தேற்றமாகப் பெரிதும் அறிவிலியே ஆகின்றனை என்று இடித்துரைப்பாள் நல்ல மடவை மன்ற நீயே என்றாள்; நன்மை ஈண்டு அறிவின்மையின் பெருமை மேற்று. மன்ற: தேற்றப் பொருட்டு.

கூ - கக : வடவயின்............ஆயினும்

(இ - ள்.) வடவயின் வேங்கடம் பயந்த - தமிழ் கூறு நல்லுலகத்தின் வடவெல்லையாகிய திருவேங்கடமலை தோற்றுவித்த; வெண் கோட்டியானை மறப்போர் பாண்டியர் அறத்திற் காக்கும்- வெள்ளிய மருப்புக்களையுடைய சிறந்த யானைப் படைகளாலே மறப் பண்புமிக்க போர்த் தொழில் ஆற்றுகின்ற பாண்டிய மன்னர் அற நெறிநின்று காவல் செய்கின்ற; கொற்கை அம் பெருந்துறை முத்தின் அன்ன - கொற்கைப் பட்டினத்துக் கடலினது பெரியதுறையிற் குளிக்கும் உயரிய முத்துக்களைப் போன்று; நகைப் பொலிந்து இலங்கும் எயிறு கெழு துவர் வாய் தகைப்பத் தங்கலர் ஆயினும்- புன்முறுவலாலே பொலிவுற்றுத் திகழ்கின்ற நினனுடைய பற்கள் பொருந்திய பவளம் போன்ற நிறமுடைய நின் திருவாய் ஒன்றுமே அவர் நின்னைப் பிரியாமல் தடுப்பப் போதியதாகாதோ? அது தடை செய்தும் செலவழுங்குவா ரல்லராயினும் எனக.

(வி - ம்.) மதுரைக் கணக்காயனார் என்னுமிப் புலவர் பெருமான் காலத்தே பாண்டிய மன்னரின் வீறு, குமரிமுதல் வடவேங்கடம் வரையிலமைந்த தமிழகம் முழுவதும் சென்றமை தோன்ற ' வடவயின் ......... பெருந்துறை' என்பாராயினர். வேங்கடத்தையுள்ளிட்ட தமிழகத்தின் வடவெல்லைக்கண் அமைந்த நாட்டை ஆள்கின்ற குறுநில மன்னர் திறையாகச் செலுத்தும் யானைப்படைகளையுடைய பாண்டியர் என்பது கருத்து. இனி யானைகளுள் வேங்கடமலைச்சாரலிற் பிறந்து வளரும் யானை சிறந்தது என்பது பற்றிக் கூறினர் எனலுமாம். மறத்தாற் போராற்றி அறத்தால் நாடுகாக்கும் பாண்டியர் எனனும் அழகுணர்க. நகைப்பு-புன்முறுவல். முத்திற்கு நகைப்புத் தெளிவான ஒளியுடைமை என்க. எயிறு - விழுந்து முளைக்கும் பல். நினது துவர் வாயின் புன்முறுவலைச் சுவைத்த நம் பெருமான் நின்னைப் பிரியவும் துணிவரோ? துணியார் என்பது கருத்து.

கக - கஎ: இகப்ப.............நோக்கே

(இ - ள்.) மற்று தேம்படத் தெள் நீர்க்கு ஏற்ற திரள் கால் குவளைப் பெருந்தகை சிதைத்தும் அமையா - இனி, தேன் உண்டாகத் தெளிந்த மழைநீரை ஏற்றமையால் வளம் பெற்றுத் திரண்ட காம்பினையுடைய நீலமலரின் பேரழகைக் கெடுத்தும் அமையாவாய்; வேத்து அமர் பருந்துபடக் கடந்த வென்றி நல்வேல்

(அப்பாண்டியமன்னர்) தம்மோடெதிர்ந்த பகைவேந்தரைப் போர்க் களத்திலே பருந்துகள் வீழும்படி நூழிலாட்டி வென்று வாகை சூடுதற்குக் காரணமான அவர்தம் வெற்றியை யுடைய அழகிய வேலானது; குருதியொடு - பகைவர் குருதிக்கறையோடு; துயல் வந்தன்ன - அசைந்தாற் போன்று மிளிரும்; நின் அரிவேய் உண்கண் அமர்த்த நோக்கு - நின்னுடைய செவ்வரியோடிய மையுண்ட கண்கள் உவந்து நோக்கும் நோக்கம்; இகப்ப யாங்ஙனம் விடும்- அவர் நின்னை நீங்கிச் செல்வதற்கு எவ்வாறு விடும்? விடாது காண்! நீ வருந்தற்க என்பதாம்.

(வி - ம்.) மற்று : வினைமாற்றின்கண் வந்தது. தேம் - தேன். தெண்ணீர் என்றது மழை நீரை, மழைவளம் பெற்றுழித் தேன் மிகும் குவளை என்றது நம்பெருமான் அளிபெற்றுழி நின் நோக்கின்பம் மிகும் என்பதனைப் பொருட்புறத்தே தோற்றுவித்தற்கென்க. குவளை - நீல மலர் (கருங்குவளை.) கண் இயற்கையிலே குவளை மலரினும் சிறந்து தோன்றுதலோடன்றி அன்புற்று நோக்குமாற்றால் அவ்வின்பத்தை மிகுவிக்கும் என்பாள் குவளைப் பெருந்தகை சிதைத்தும் அமையாவாய்த் துயல்வந்து நோக்கும் என்றாளாயிற்று. இவ்வாசிரியர் மறப்போர்ப்பாண்டியர் முத்து என்றமையால் இதுவும் அவர் கருத்துக்கியையும் என ஆழ்ந்திருக்கும் கவியுளம் கண்டு நல்வேலும் பாண்டியருடைய வேல் என்றும். அமர்த்த நோக்கு-விரும்பிய நோக்கம். யாங்ஙனம் விடுமோ? என்னும் வினா அதன் எதிர்மறைப் பொருளை வற்புறுத்து நின்றது. தலைவனைச் செலவழுங்குவிக்கும் கருவிகள் நின்பாலுளவாதலை அறிய மாட்டாமையின் நீ மன்ற நல்லமடவை என்றிகழ்ந்தாள், ஆதலால் அவர் பிரிகுவர் அல்லர் நீ வருந்தற்க! என்பது குறிப்பெச்சப் பொருள்.

இனி இதனை, நம் பெருமான் நாமழப் பொருட்பிணிச் சென்றிவட் டருமார் என்ப என்கின்ற நீ மன்ற மடவை காண்; நின் துவர் வாய் நகையே அவரைத் தகைப்பத் (தங்குவர் அதனால்) தங்கலராயினும், நின் அரிவேய் உண்கண் அமர்த்த நோக்கு யாங்ஙனம் பிரியவிடும்? விடாதுகாண்! நீ வருந்தேல்! என இயைத்திடுக.

(பா - வே.) க. தயங்கு; கக. தாங்கல. (உஎ)

## செய்யுள் உஅ

திணை : குறிஞ்சி.

துறை: தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது. இது, பகலே சிறைப்புறம்.

(து - ம்.) அஃதாவது - களவொழுக்கத்தின்கண் தலைவன் தலைவியர் கூடியிருக்கும் பொழுதினும் கூடாமற் பிரிந்துறையும் பொழுதே நீளிதாதலின் அப் பிரிவாற்றாது வருந்துந் தலைவியை நீ வரையும் பருவம் வருங்காறும் இச் சிறுபிரிவாற்றாது வருந்துவையாயின் நின் செயலறவு கண்டு அன்னை நம்மை இத் தினை காவலுக்கு விடாள், அவ்வழி நீ தலைவனைக் காண்டலே அரிதாகிவிடும். ஆதலால் நீ காவற்றொழிலும்

செய்து ஆற்றியிருத்தல் வேண்டும் என வற்புறுத்துந் தோழி இவ்வன்புறை மொழியைத் தலைவன் பகற்குறிக்கண் சிறைப்புறத்தானாய வழி அவன் கேட்பத் தலைவிக்குக் கூறியது என்றவாறு.

இதனைத் தலைவன் கேட்பக் கூறியது, தலைவியின் பிரிவாற்றாமையை அவனுக்கறிவுறுத்தலும், அதனை வரைதற்கண் கருத்தூன்றுவித்தலும் ஆம் என நுண்ணிதின் உணர்க.

(இ-ம்.) இதற்கு, 'நாற்றமுந் தோற்றமும்' எனவரும் நூற்பாவின்கண் (தொல் - களவி - உ௩) 'செங்கடு மொழியாற் சிதைவுடைத்தாயினும், என்பு நெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ, அன்புதலையடுத்த வன்புறைக் கண்ணும்' என வரும் விதிகொள்க.

மெய்யிற் றீரா மேவரு காமமோ
டெய்யா யாயினு முரைப்ப றோழி
கொய்யா முன்னுங் குரல்வார்பு தினையே
யருவி யான்ற பைங்கா றோறு
ரு. மிருவி தோன்றின பலவே நீயே
முருகுமுரண் கொள்ளுந் தேம்பாய் கண்ணிப்
பரிய லாயோடு பன்மலைப் படரும்
வேட்டுவற் பெறலோ டமைந்தனை யாழநின்
பூக்கெழு தொடலை நுடங்க வெழுந்தெழுந்து
க0. கிள்ளைத் தெள்விளி யிடையிடை பயிற்றி
யாங்காங் கொழுகா யாயி னன்னை
சிறுகிளி கடிதல் தேற்றா ளிவளெனப்
பிறர்த்தந்து நிறுக்குவ ளாயி
னுறற்கரி தாகுமவன் மலர்ந்த மார்பே.

—பாண்டியன் அறிவுடைநம்பி

(உரை)

க - உ: மெய்யின்..........தோழி

(இ - ள்.) தோழி - தோழியே!; மெய்யின் தீரா மேவரு காமமொடு - நீதான் ஒருவருடம்பினின்றும ஒருவருடம்பு அகலாமைக்குக் காரணமாய் ஒருகாலைக் கொருகால் மேம்பட்டு வருகின்ற நின் காமப்பண்பினாலே; எய்யாய் ஆயினும் - நினக்குறுதியாவதனை அறிகின்றிலை. அங்ஙனமாயினும்; உரைப்பல்-நினக்கிப்பொழுதுறுதியாகும் காரியமிஃதென்று யான் கூறுவேன் கேட்பாயாக! என்க.

(வி - ம்.) காமநோய்ப்பட்டு வருந்துவோர் நன்மை தீமைகளைப் பகுத்தறிதலியலாமையின் அந்நோய்ப்பட்டுழலு நீ நினக் குறுதியாவ

தனை ஆராய்ந்தறியாய் ஆயினை என்பாள் காமமொடு எய்யாய்! என்றாள். எய்யாமை-அறியாமை. நீ அறியாயாயினும் நின்னுசாத் துணைத் தோழியாகிய என்கடன் அவ் வுறுதியை உனக்கு அறிவுறுத்தலே ஆதலின், கூறக்கேள் என்பாள், ஆயினும் உரைப்பல் என்றாள். என்னை?

''அழிவி னவைநீக்கி ஆறுய்த் தழிவின்கண்
அல்ல லுழப்பதா நட்பு'' (குறள் – எஅஎ)

என்பது நட்பிலக் கணமாதலின் என்க.

## உ - ரு : கோய்யா.........பலவே

(இ - ள்.) அருவி ஆன்ற பைங்கால் தோறும் - மாம் நீர் பாய்ச்சுதல் ஒழிந்தமையால் அருவி நீர் ஒழுகாது அமைந்த பசிய கால்வாயிடந்தோறும்; குரல்வார்பு தினை கொய்யாமுன் உகும் - கதிர்கள் வளமுடையனவாய் நீண்ட தினைப்பயிர்கள் கிளிகள் விழுந்து கொய்வதற்கு முன்பே உதிர்ந்தொழிந்தன ஆதலால்; பல இருவி தோன்றின-அங்கங்கே பற்பல வறுந்தட்டைகள தலைதூக்கி நன்கு தோன்றாநின்றன காண்! என்க.

(வி - ம்.) ஆன்ற - அமைந்த - இல்லையான. ஆறு என்னும் எதிர்மறைச் சொல் உடன்பாட்டில் வருங்கால் ஆன்ற எனவும் வரும். கதிர் முற்றும் பருவத்தே நீர்பாய்ச்சுதலின்மையான் அருவி நீர் இல்லையான என்றவாறு. நீர் பாய்ச்சும் கால்வாயருகிலுள்ள பயிர் வளமுடையனவாய்ப் பசுமையாய்த் தோன்றுதலின் பைங்கால் என்றாள். ஈரமுடைய கால் எனினுமாம். கொய்யாமுன் உகும் என்றது கிள்ளைகள் வீழ்ந்த மாத்திரையே நன்கு முதிர்ந்தமை காரணமாகக் கதிர்கள் உதிர்ந்து விட்டன ஆதலால் பல இருவி தோன்றின என்கின்றாள். இருவி கதிரின்றி வறிதே நிற்குந் தாள். நம்மன்னை வந்துகாணின் இவ் விருவிகள் நாம் நன்கு காவாமையைப் புலப்படுத்தும் என்பாள் இருவிபல தோன்றின என்று எடுத்துக் காட்டியவாறு. நீ கிளிகடியாமையால் அவ் விருவிகள் தோன்றுகின்றன என்பது கருத்து.

## ரு - அ: நீயே.........அமைந்தனை

(இ - ள்.) நீயே - மற்று இவற்றைக் கிளிகடிந்தோம்பற்கு ஈண்டுவந்த நீதானும் அது செய்யாமல்; பரியல் நாயொடு பல்மலைப் படரும் - விரைந்தியங்கும வேட்டை நாய்களோடு தன்காரியத்திலேயே கருத்தூன்றிப் பல்வேறு மலைகளிடத்தும் வேட்டையாடுதற் பொருட்டுச் செல்கின்ற; முருகு மூரண் கொள்ளும் தேம்பாய் கண்ணி - இவன் முருகனல்லன் என்று வேறுபாடறிதற்குக் காரணமான (கடம்பின் கண்ணியல்லாத) தேன் சொரியும் மலராணியன்ற மணமாலையைத் தலையிற் சூடுகின்ற; வேட்டுவன் பெறலொடு அமைந்தனை - வேட்டுவன் தோன்றலாகிய நின்காதலனை மீண்டும் காணவேண்டும் என்னும் ஒரே கருத்தோடு அவன் வரும்

வழிமேல் விழிவைத்து வாளாதிருக்கின்றனையல்லையோ? இது நினக்குத் தகாது காண்! என்க.

(வி - ம்.) நீயே - என்றது தினைகாவலுக்கு வந்த நீதானும் என்பதுபட நின்றது. முருகு - முருகன். முருகு முரண் கொள்ளலாவது - இவன் முருகனல்லன் என்று வேறுபாடு கொள்ளுதல். அஃதாவது முருகனாயின் கடம்பின் கண்ணி சூடியிருப்பன் இவன் கண்ணி அஃதின்மையால் இவன் வேறு என்றுணர்தல். இதனாற் போந்த பொருள் தலைவன் முருகனையே நிகர்ப்பவன் எனப் புகழ்வதாம். "காரலர் கடம்பன் அல்லன் என்பதை ஆரங்கண்ணியிற் சாற்றினன் வருவோன்" என வரும் மணிமேகலையை (ச : சக - ருo) ஈண்டு ஒப்பு நோக்குக. பரியல் - ஓட்டம். பெறலோடு - பெறுகின்ற ஒரே கருத்தோடு. அமைந்தனை என்பது - நின் கடமையைச் செய்யாது வாளாதிருந்தனை என்பது பட நின்றது.

அ - கச: யாழநின்.........மார்பே

(இ - ள்.) நின் பூக் கெழு தொடலை நுடங்க - அன்புடையோய்! இனியேனும் நீ நின் மலர்கள் பொருந்திய மாலை அசைந்தாடும்படி; எழுந்தெழுந்து - கிளிகள் தினைக்கதிரில் வந்து விழும் போதெல்லாம் மடிந்திராமல் எழுந்து எழுந்து; கிள்ளைத் தெள்விளி இடை இடைபயிற்றி - கிள்ளைகளைக் கடிந்தோட்டுதற்கியன்ற தெளிந்த ஒலியை இடையிடையே பலகாலும் எழுப்பி; ஆங்கு ஆங்கு ஒழுகாய் ஆயின் - கிளிகள் வருந் திசைதோறும் திசைதோறும் சென்று அவற்றை ஓட்டாயாயின்; அன்னை இவள் சிறுகிளி கடிதல் தேற்றாள் என - நம்மன்னை ஈங்கு வருபவள் இவ் விருவிகளைக் கண்டு இவள் சிறிய இக் கிளிகளைக் கடிந்து ஓட்டவும் அறிகிலள் போலும் என்று கருதி; பிறர்த் தந்து நிறுக்குவள் - தினையழியாமைப் பொருட்டுக் கிளிகடிவார் பிறர் யாரையேனும் அழைத்துக் கொணர்ந்து ஈண்டு நிறுத்துவள் காண்; ஆயின் - அங்ஙனம் நிகழுமானால், அவன் மலர்ந்த மார்பு உறற்கு அரிது ஆகும் - நம் பெருமானுடைய பரந்த மார்பினை நீ முயங்கி மகிழ்தற்கு நினக்குச் செவ்வி இல்லையாகும் காண்! என்பதாம்.

(வி - ம்.) யாழ: அசைச் சொல். தொடலை - ஒருவகை மாலை. அஃதாவது, மலர்களை நிரம்பவைத்துத் தொடுக்கும் தொடை மாலை. இதனால், பூக்கெழு தொடலை என்று அடை பெய்யப்பட்டது. "தொடலையும் மாலையும், படலையும், சூட்டி என்பதும் காண்க. (சிலப். அரங் - கஉரு - அ - அடியா. உரை) கிளிகள் வந்து விழுந்தோறும் மடியின்றி எழுந்து என்பாள் எழுந்தெழுந்து என அடுக்கினாள். சிறுகிளியும் எனல் வேண்டிய இழிவு சிறப்பும்மை தொக்கது. யானை முதலியனவும் தினையை அழித்தலுண்மையின் சிறுகிளியும் கடிதல் தேற்றாள் என்றவாறு. பிறர் என்றது நம்மொழுக்கத்திற்கு இடையூறுரும் பிறர் என்பது பட நின்றது. தினை காவற்குப் பிறரை நிறுத்திய வழி அன்னை

னின்னைப் புறம்போகவிடாள் ஆதலின், அவன் மார்பு உறற்குச் செவ்வி யரிதாம் என்றாள். அரிது ஈண்டு இன்மை மேற்று. இப் புலவர்பெருமான் பாடிய இச் செய்யுள் ஒன்றே அறிவுடைநம்பி என்னும் அவர் பெயர்க் கேற்பச் சிறந்து நிற்றல் உணர்க.

இனி, இதனை, தோழி! நீ காமத்தால் எய்யா யாயினும் உரைப்பல்; தினை (கிளி) கொய்யா முன்னுகும் பல இருவி தோன்றின, நீயே காவல் செய்யாது வேட்டுவற் பெறலோ டமைந்தனை. 'நீ விளிபயிற்றி ஆங்காங்கு ஒழுகாயாயின் அன்னை இவள் தேற்றாள் எனப் பிறர்த்தந்து நிறுக்குவள்; ஆயின் அவன் மார்பு உறற்கு வழியரிதாம் என இயைபு காண்க. இஃது இற் செறிப்பும் தினை முதிர்ந்தமையும் உணர்த்தி வரைவுகடாவியதாதல் நுண்ணிதின் உணர்க.

பா - வே. ௬ - அருவி யார்ந்த. பரிப்பன் றுயொடு. அ - டமர்த் தினை. ௧ - வெமூர்ந்து. (உஅ)

## செய்யுள் உகூ

**திணை:** பாலை.

**துறை:** வினைமுற்றி மீண்ட தலைமகன் எம்மையும் நினைத்தறிதிரோ? என்ற தலைமகட்குச் சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது - பொருளீட்டும் வினைவயிற் சென்ற தலைவன் தான் மேற்கொண்ட வினைமுற்றிய பின்னர் மீண்டு வந்துழி, அவன் காலந்தாழ்த்தமை கருதி நீயிர் வேற்றுநாட்டகவயின் முயன்று பொருளீட்டிய பொழுது நும்மாற் கைவிடப்பட்ட என்னை நினைத்தேனும் அறிவீரோ என்று வருந்திக் கூறிய தலைவிக்குத் தலைவன் விடையாகச் சொல்லியது என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு "கரணத்தி னமைந்து" எனவரும் நூற்பாவின் கண் (தொல் - கற் - ௫) 'காமக் கிழத்தி மனையோள் என்றிவர் ஏமுறு கிளவி சொல்லிய எதிரும்' எனவரும் விதி கொள்க. (நச்சினார்க்கினியரும் இதற்கிதனைக் காட்டினர்.)

தோடங்குவினை தவிரா வசைவி னேனென்றாட்
கிடந்துயிர் மறுகுவ தாயினு மிடம்படின்
வீழ்களிறு மிசையாப் புலியினுஞ் சிறந்த
தாழ்வி லுள்ளந் தலைத்தலைச் சிறப்பச்
௫. செய்வினைக் ககன்ற காலை யெஃகுற்
றிருவே றாகிய தெரிதகு வனப்பின்
மாவி னறுவடி போலக் காண்டொறு
மேவ றண்டா மகிழ்நோக் குண்கண்
ணினையாது கழிந்த வைக லெனையதூஉம்
௧0. வாழலென் யானெனத் தேற்றிப் பன்மாண்

டாழக் கூறிய தகைசா னன்மொழி
மறந்தனிர் போறி ரெம்மெனச் சிறந்தநின்
னெயிறுகெழு துவர்வா யின்னகை யழுங்க
வினவ லானாப் புனையிழை கேளினி
கரு. வெம்மை தண்டா வெரியுகு பறந்தலைக்
கொம்மை வாடிய வியவுள் யானை
நீர்மருங் கறியாது தேர்மருங் கோடி
யறுநீ ரம்பியி னெறிமுத லுணங்கு
முள்ளுநர்ப் பனிக்கு மூக்கருங் கடத்திடை
உ0. எள்ள னேனுப் பொருடரல் விருப்பொடு
நாணுத்தளை யாக வைகி மாண்வினைக்
குடம்பாண் டொழிந்தமை யல்லதை
மடங்கெழு நெஞ்ச நின்னுழை யதுவே.

—வெள்ளாடியனார்.[1]

(உரை)

க - ச: தொடங்கு............சிறப்ப

(இ - ள்.) தொடங்கு வினை தவிரா அசைவு இல் நோன் தாள் - பெரும! தான் மேற்கொண்ட வினையைக் கைவிடாமைக்குக் காரணமான தளர்வில்லாத வலிய முயற்சியினையும் அங்ஙனம் முயன்று தான் தாக்கிய பொழுது; வீழ்களிறு இடம்படின் - தாக்குண்டு வீழ்கின்ற களிற்றியானை தனக்கு இடப்பக்கத்தே வீழ்ந்து விட்டால்; கிடந்து உயிர் மறுகுவது ஆயினும் - பட்டினி கிடந்து தனதுயிர் பெரிதும் வருந்துவதாயவிடத்தும், மிசையாப் புலியினும் - அக் களிற்றைத் தின்னாமையும் உடைய புலியினுங் காட்டில்; சிறந்த தாழ்வு இல் உள்ளம் - சிறந்த குறையாத நுமது ஊக்கமானது, தலைத்தலை சிறப்ப - பொருளீட்டுதற்கியன்ற துறைதோறும் துறைதோறும் மேலும் சிறத்தலாலே என்க.

(வி - ம்.) க - முதலாக, கஉ - 'மறந்தனிர் போறிர் எம்' எனுங் காறும் தலைவியின் கூற்றைத் தலைவன் கொண்டு கூறுகின்றான் என்றுணர்க. தவிராமைக்குக் காரணமான அசைவில் நோன் தாள் என்க. தாள் - முயற்சி. முயற்சியால் தாக்கிய பொழுது வீழ்களிறு இடம்படின் மிசையாப் புலி என்க - புலியினது உள்ளத்தினுஞ் சிறந்த உள்ளம் என்றவாறு. உள்ளம் - ஊக்கம். தலை - இடம். பொருளீட்டுதற் கியன்ற துறைதோறும் துறைதோறும் நுமது ஊக்கம் அவ்

(பா - வே.) 1. வெண்வட்டியார். வேளாவட்டனன்.

வினையிலேயே, ஊக்குவித்தலாலே என்க. இது தலைவன் அக்காலத்தே தன்னை மறந்தமைக்குத் தலைவி குறிப்பாகக் காரணங் கூறியவாறுமாம். அஃதாவது பொருளீட்டுதற்கு நும்மை ஊக்குவிக்கும் ஊக்கம் அப் பொருளீட்டலையே நினைப்பித்து ஏனைய அருள் முதலிய அறங்களை எல்லாம் மறப்பச் செய்தது போலும் என்பது குறிப்பு என்க. புலி இடம்படின் உண்ணாது என்பதனை "கடுங்கட் கேழல் இடம்பட வீழ்ந் தென, அன்றவண் உண்ணா தாகி வழிநாள், பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்து இருங்களிற் றொருத்தல், நல் வலம்படுக்கும், புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத் துரனுடையாளர்" எனவரும் புறப்பாட்டா னும் (௧௯0) உணர்க.

### ௫ - ௧௨: செய்வினைக்.........எம்மென

(இ - ள்.) செய்வினைக்கு அகன்றகாலை - நீயிர் பொருளீட்டு தற் றொழிலை மேற்கொண்டு எம்மைப் பிரிந்து சென்ற பொழுது; எம - எம்மை நோக்கி; எஃகு உற்று இருவேறு ஆகிய தெரிதரு வனப்பின் மாவின் நறுவடிபோல - வாளினால் அரியப் பெற்று இரண்டு வேறு பிளவுகள் ஆகிய ஆராய்ந்து காண்டற்குரிய அழகுடைய நறிய மா வடுப்பிளவுகள் போன்று; காண்டொறும் மேவல் தண்டா மகிழ் நோக்கு உண்கண் - காணுந்தோறும் காணுந்தோறும் பின்னும் காண வேண்டும் அவா அமையாமைக்குக் காரணமான இன்பமுடைய நோக்கமுடைய நின்னுடைய மையுண்ட கண்களை; நினையாது கழிந்த வைகல் - நினையாமல் கழிந்த நாள் ஒன்றுண்டாயின்; எனைய தூஉம் யான் வாழலென் - அத்தகைய தீய நாளில் யான் ஒரு சிறிதும் உயிர்வாழ்கிலேன் காண்! என - என்று; தேற்றிக் கூறிய தகைசால் நல்மொழி பல் மாண்; தாழ மறந்தனிர் போல்திர் என - பிரிவு ஆற்றாது நெஞ்சு கலங்கிய எம்மைத் தெளிவித்துக் கூறிய பெருந்தகைமை பொருந்திய நன்மை தரும் மொழியை நுமது பல வேறு மாண்புகளும் குறையும்படி துவர மறந்து விட்டீரோ? என்று என்க.

(வி - ம்.) (௯) தாழ்வில் உள்ளம் சிறத்தலால் நுமது பன்மாண் தாழ மறந்தனிரோ என்று வினவுகின்றாள். பொருளீட்டற்கண் தாழ்வில்லாத நும்முள்ளம் நுமது அருள் வாய்மை அன்பு முதலிய பல்வேறு மாண்புகளும் தாழ்ந்து போம்படி வாய்மையறம் பிறழ மறப்பித்தது என நுண்ணிதிற்றலைவி கூறினமையுணர்க. ஒன்றை விட்டு ஒன்றை நினைக்க மற்றொரு மனம் இல்லை. நுமக்குப் பொருளாசை மிக்க மனம் ஒன்றேயுளது என்று இடித்துரைத்தபடியாம். பொருளீட்டுதலில் ஊக்கஞ்சிறத்தல் நன்றெனினும் அப் பொருளால் ஆக்கம்பெறும் அருள் முதலியவற்றை மறத்தல் நேரிதன்று என்பது கருத்து.

"எஃகுற்று.........வாழலன்" என்னுந் துணையும் தலைவி, பண்டு தலைவன் கூறியதனை நினைந்து கூறினள், ஈண்டுத் தலைவன் அதனை வழிமொழிகின்றான். இவ்வாறு கூறுவதனை, "நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும்" (அகத்-௪௧) என ஆசிரியர் தொல்காப்பியனார் பாலைத்

திணைக்குக் கூறிய விதியானும் உணர்க. நுமது மொழி கேள்விக்கு இனிய அழகிய மொழி என்றது இகழ்ச்சி. என்னை? அது பொய்ம்மை யாகலின் என்க. போல்திர் என்புழி போலும் ஒப்பில்போலி. மறந் தனிர் என்பது வினை. மறந்தனிரோ எனல் வேண்டிய ஓகாரம் தொக்கது. வினவல் ஆனாப் புனையிழை என முன்னரோதுதலினாலும் அது வினாவேயாதல் பெற்றாம்.

## கஉ - கச: சிறந்தநின்...........கேளினி

(இ - ள்.) நின் சிறந்த எயிறு கெழு துவர்வாய் இன்னகை அழுங்க - நின்னுடைய அழகிற்சிறந்த பற்கள் பொருந்திய பவளம் போன்று சிவந்த வாயிடத்தே தோன்றுதற்குரிய இனிய புன் முறுவல் இல்லையாம்படி; வினவல் ஆனாப் புனை இழை இனிக் கேள் - என்னை வினவுதல் அமையாத அணிந்த அணிகலன்களை யுடையோய்! இப்பொழுது நின் வினாவிற்கு விடையிறுப்பல் கேட்பாயாக! என்க.

(வி - ம்.) என்னுடைய வரவினால் நீ மகிழ்ந்துள்ளமைக்கு அறிகுறியாக யான் வந்துற்றபின்னர் நீ அணிந்துகொண்டிருக்கின்ற அணிகலன்களையே யான் காணுகின்றேன். அனைத்தினும் சிறந்த நினது எயிறுகெழு துவர்வாய் இன்னகை புறப்படக் கண்டிலேன் என்பான், சிறந்த நின்........இன்னகை அழுங்க என்று புனையிழை என்னும் பெயரால் அழைக்கின்றான். தனது வருகையால் அவள் தன் பிரிவாற்றாமைத் துன்பம் துவரக் கெட்டமையின் 'மறந்தனிர் போறிர்' என வருந்தி வினவல் ஆனாப் புனையிழை என்றது இன்னகை வெளிப் படாமை ஒன்றனையே கூறினன்.

## கரு - உரு: வெம்மை...........நின்னுழையதுவே

(இ - ள்.) வெம்மை தண்டா எரி உகு பறந்தலை இயவுள் - வெப்பம் குறையாத தீப்பொறி காலும் பாழிடத்திலே வழிகளிலே இயங்குகின்ற; கொம்மை வாடிய யானை - உணவு பெருமையாலே உடம்பின் பருமை குறைந்த யானைகள்; மருங்கு நீர் அறியாது தேர் மருங்கு ஓடி - நீர் வேட்கையுற்றுப் பக்கங்களிலே யாண்டும் நீர் காணமாட்டாவாய்ப் பேய்த் தேரினை நீர்நிலை என்று கருதி அது தோன்றுமிடமெல்லாம் ஓடிஓடி இளைப்புற்று; நெறி முதல் - வழி களிலே வீழ்ந்து; நீர் அறு அம்பியின் உணங்கும் - தான் இயங்கு தற்குரிய யாற்றின்கண் நீர் வறந்தகாலை அவ்வியாற்றுமண லிடத்தே கிடந்து உலருகின்ற தோணியைப்போன்று இயக்கமின்றி வெயிலினால் உலர்ந்து வருந்துதற்குக் காரணமான; உள்ளுநர்ப் பனிக்கும் - நினைப்பாரையும் நடுங்கச் செய்யும் கடுமையுடைய; ஊக்கு அரும் - மேலும் செல்லுதும் என்னும் ஊக்கத்தைப் பெற லரிய; கடத்திடை - காட்டினிடத்தே சென்று; எள்ளல் நோனா பொருள் தரல் விருப்பொடு-மாற்றார் இகழ்தலைப் பொறாமை காரண

மாக எழுந்த பொருளீட்டிக் கொணரும் வேட்கையுடனே; நாணுத் தளையாக - தொடங்கிய வினை முடியவேண்டும் என்னும் மானமே அத்தொழிலோடு ஆர்க்கின்ற கயிறாக மீண்டுவாராமல் பொறுமையுடன்; வைகி - வினைமுற்றுந்துணையும் அங்குத் தங்கியிருந்து யான் இயற்றிய, மாண்வினைக்கு - மாட்சிமையுடைய பொருள் ஈட்டும் தொழில் செய்தற்கு; உடம்பு ஆண்டு ஒழிந்தமை அல்லதை - இன்றியமையாத என் உடம்புமட்டும் அவ் வேற்று நாட்டின்கண் இருந்ததேயன்றி; மடங்கெழு நெஞ்சம் நின் உழையதுவே - அறியாமையுடைய என்னுள்ளமோ எப்பொழுதும் நின்பக்கத்திலேயே இருப்பதாயிற்றுக் காண்! இங்ஙனமாயின் யான் நினக்குக் கூறிய நன்மொழியை மறத்தலுங் கூடுமோ? நீ இஃதறியாது வினவினை என்பதாம்.

(வி - ம்.) தண்டா - குறையாத: பெயரெச்சத்தீறு கெட்டது. பறந்தலை - பாழிடம். கொம்மை - பருமை. உலைவு பெருமையால் கொம்மை வாடிற்றென்க. தேர்-பேய்த்தேர்; கானல்-பறந்தலையாகிய கடம்; யானை உணங்கும் கடம்; பனிக்கும் கடம்; ஊக்கரும் கடம் எனத் தனித்தனி கூட்டுக. நோனுமையா லுண்டான விருப்பம் என்க. நின்னைப் பிரிந்துபோய்ப் பொருளீட்டியது என்னுடம்பு மட்டுமே என் நெஞ்சம் நின்னை ஒருபொழுதும் பிரியாமல் நின்பாலுங்கே இருந்தது. ஆதலின் நின்னை யான் மறத்தல் யாங்ஙனம் என்பது கருத்து.

என்னெஞ்சம் நின்னுழையதாயிருந்தே என்னுற்றமையை நினக் கறிவித்திலது என்றிகழ்வான் என மடங்கெழு நெஞ்சு என்றான்.

இனி, இதனை, "பெரும, உள்ளம் தலைத்தலைச் சிறத்தலாலே நீயிர் அகன்றகாலை எம்மைத் தேற்றிக் கூறிய நன்மொழியை மறந்தனிரோ" என்று நகை அழுங்க வினவல் ஆனாப் புனை இழை இனிக் கேள்! ஊக்கருங் கடத்திடை (சென்று) எள்ளல் நோனா விருப்பொடு நாணுத்தளையாக ஆண்டு உடம்பு ஒழிந்தமை யல்லது என்னெஞ்சம் எப்பொழுதும் நின்னுழையதுவே. இங்ஙனமாகலின் யான் மறப்பது எங்ஙனம்? என இயைக்க.

பா. வே. க-வசையிரேனென்றாட்; எ. னவ்வடி. கக. இன்னகை யிலங்க. உஉ. யல்லது. (உக)

## செய்யுள் கூ௦

திணை: நெய்தல்.

துறை: பகற்குறிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—தலைவியைக் காண்டற்குத் தலைவன் பகற்பொழுதிலே வந்துமீள்வானாகவும், அவனைச் சேட்படுத்தற்பொருட்டுத் தலைவியைப் பகற்குறியிடத்தே கொணராதிருந்த தோழி ஒருநாள் அவனைப் பகற்குறியிடத்தே தலைப்பெய்து தாம் எதிர்கொள்ளாக் குறையை மறைத்து, தாம் காத்திருப்பவும் அவன் வாராதொழிந்தான்

போன்று அதனை அவன் குறையாக மாயஞ் செப்பி நீயிர் வாராமையால் தலைவியின் அழகு கெடும். ஆதலின் இன்னவிடத்தே பகலில் வம்மின் என்று அவன் வரவினை விரும்பிப் பகற்குறியிடம் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு "நாற்றமும் தோற்றமும்" எனவரும் நூற்பாவின்கண் (தொல் - களவி - உ௩) 'வந்த கிழவனை மாயஞ் செப்பிப் பொறுத்த காரணம் குறித்தகாலையும்' எனவரும் விதிகொள்க. (ஆசிரியர் நச்சினார்க்கினியரும் இச்செய்யுளை இதற்கு எடுத்துக்காட்டியுள்ளார்.)

நெடுங்கயிறு வலந்த குறுங்க ணவ்வலைக்
கடல்பா டவிய வினமீன் முகந்து
துணைபுண ருவகையர் பரத மாக்க
ளிளையரு முதியருங் கிளையுடன் துவன்றி
௫. யுப்போ யுமண ரருந்துறை போக்கு
மொழுகை நோன்பக டொப்பக் குழீஇ
யயிர்திணி யடைகரை யொலிப்ப வாங்கிப்
பெருங்களந் தொகுத்த வுழவர் போல
விரந்தோர் வருங்கல மல்க வீசிப்
௧௦. பாடுபல வமைத்துக் கொள்ளை சாற்றிக்
கோடுயர் திணிமணற் றுஞ்சுந் துறைவ
பெருமை யென்பது கெடுமோ வொருநாண்
மண்ணா முத்த மரும்பிய புன்னைத்
தண்ணருங் கானல் வந்துநும்
௧௫. வண்ண மெவனோ வென்றனிர் செலினே.

—மூடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன்.

(உரை)

க - கூ : நெடுங்கயிறு.........குழீஇ

(இ - ள்.) பரதமாக்கள் - நெய்தனிலத்தே வாழும் பரதவர்; இளைஞரும் முதியருங் கிளையுடன் துவன்றி - ஆண்டால் இளமையுடையோரும் முதுமையுடையோருமாய்த் தம் மக்களோடு வந்து நெருங்கி; துணைபுணர் உவகையர் - தத்தம் காதற்றுணையாகிய மகளிருடனே சேர்ந்த மகிழ்ச்சியை உடையவராய்; உப்பு ஒய் உமணர் அருந்துறை போக்கும் - உப்பு மூடைகளை ஏற்றி உப்பு வாணிகர் கடத்தற்கரிய துறைகளிலே செலுத்துகின்ற; ஒழுகை

(பா - வே.) 1. முடங்கிடந்த, முடங்கிடந்த.

நோன்பகடு ஒப்பக் குழீஇ - சகடங்களிற் பூட்டும் வலிய எருதுகளைப் போன்று ஒருங்குகூடி; கடல்பாடு அவிய - கடலினது ஆரவாரமும் அடங்க ஆரவாரித்து, நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலை இனமீன் முகந்து - நெடிய கயிற்றினாலே பின்னிய குறிய கண்களை யுடைய அழகிய வலைகளை வீசிப் பல்வேறு வகைப்பட்ட மீன்களை யும் வலையுள் அகப்படுத்து என்க.

(வி - ம்.) கிளை - உறவினருமாம். துவன்றுதல் - நெருங்குதல். ஓய்யுமணர் : வினைத்தொகை. துணை - காதற்றுணைவியராகிய மகளிர். கடலின் ஒலி அடங்கும்படி ஆரவாரித்து என்பார் கடல்பாடு அவிய என்றார். இனி, கடலின் செல்வமாகிய மீன்களை முகத்தலால் அதன் பெருமை குன்ற எனினுமாம். இனம் - வகை. முகத்தல் - வலையினாலே அகப்படுத்துதல்.

எ - கக: அயிர்..........துறைவ

(இ - ள்.) அயிர்திணி அடைகரை ஒலிப்ப வாங்கி - நுண் மணல் செறிந்த நீரடைகரையிடத்தே அம்மீன்களால் ஒலி உண்டாகும்படி இழுத்து; பெருங்களம் தொகுத்த உழவர்போல இரந்தோர் வறுங்கலம் மல்க வீசி - அகன்ற களத்தின்கண் தங்கழனி யின் விளைந்த நெல்லைக் கொணர்ந்து குவித்த உழவர் வழங்குமாறு போல அம்மீன்களைக் குவித்தபின்னர் ஆங்கு மீன வேண்டும் என ஏற்கின்ற வறியோருடைய வறிய பாண்டங்கள் நிரம்பும்படி அவற்றை வாரி வழங்கியபின்; பாடு பல அமைத்துக் கொளை சாற்றி - எஞ்சியவற்றைக் கூறுகள் பலவாகப் பகுத்து விலை சொல்லி விற்றபின்னர்; கோடு உயர்திணி மணல் துஞ்சும் துறைவ - கடற்கரையிடத்தே உயரமாகச் செறிந்த மணற்பரப்பிலே கவலையின்றி உறங்குதற்கு இடனான வளமிக்க கடற்றுறையை யுடைய பெருமானே! என்க.

(வி - ம்.) திணிகரை, அடைகரை எனத் தனித்தனி யியையும். ஒலித்தல் - ஈண்டுக் கரையேற்றப்பட்ட மீன்கள் செய்யும் ஒலி என்க.

ஈதற்பண்பு உழுதுண்டு வாழ்வார்க் கியற்கைப்பண்பு ஆதலின் ஈண்டுத் தாமீட்டிய பொருளாகிய மீன்களை வழங்குதற்கு உழவரை உவமை எடுத்தார். என்னை? உவமைதானும் "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை" என்பவாகலின்; (தொல் - உவம - ௨.) ஆசிரியர் திருவள்ளுவனாரும்,

"இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்" (குறள் - ௧௦௩௫)

என ஈகை அவர்க்கே சிறந்துரிய பண்பாதல் தோன்ற ஓதுவதூஉங் காண்க.

துஞ்சும் என்றது ஊதியம் கைவரப் பெற்றமையால் துஞ்சும் என்பதுபடநின்றது. இதன்கண் ணடங்கிய உள்ளுறையை, "பெருங் கடலுட் சிக்கிக் கிடக்கின்ற மீனை நுளையர் அதனினின்று நீக்கி உயிர் செகுத்துக் கண்டாரெல்லார்க்கும் கூறுவைத்துப் பரப்பிப் பின்பு உயிர் வருத்தினோமென்னுமிரக்கமின்றி மணற்குன்றிலே உறங்கினாற்போல, பெருங்குலத்துப் பிறந்த இவளை நீயிர் நும் வசமாக நீக்கி வருத்தி வேறுபாட்டான் எல்லாருமிவளைச் சூழும்படி அலராக்கிப் பின்பு நீர் துயரமின்றி உறங்குகின்றீர்; என்றவாறு" என விரிப்பர் பழையவுரை யாசிரியர்.

கஉ - கரு : பெருமை.........செலினே

(இ - ள்.) மண்ணா முத்தம் அரும்பிய புன்னைத் தண் நறுங் கானல் - கழுவாத முத்துக்களைப் போன்று அரும்பெடுத்துள்ள புன்னை மரங்கள் அடர்ந்த குளிர்ந்த நறுமணங்கமழ்கின்ற கடற் கரைச் சோலைக்கு; ஒருநாள் வந்து நும் வண்ணம் எவனோ என்றனர் செலின் - என்றேனும் ஒருநாள் நீவிர் எம்மை நினைந்து வந்து ஆண்டுவிளையாடுவோமைக் கண்டு நும் அழகு என்னாயிற்று? என்று வினவிச் செல்வீராயின்; பெருமை என்பது கெடுமோ - நீயிர் பெருமை என்று கொண்டிருக்கின்ற நுங்கருத்து அழியுமோ? இன்றேல் வாராமைக்குக் காரணம் யாது? என்பதாம்.

(வி - ம்.) மண்ணா முத்தம் அரும்பிய புன்னைத் தண் நறுங்கானல் என்றது பகற்குறியிடம் இன்னதென்று தலைவனுக்குக் குறிப்பாக வுணர்த்தியபடியாம். நீயிர் ஒருநாள் வந்து செலின் என்றது யாங்கள் நாள்தோறும் அச் சோலையிற் சென்று விளையாடுகின்றோம் என்றுணர்த் தியபடியாம். வண்ணம் - ஈண்டு அழகு; எனவே நும் பிரிவாற்றாமை யால் எம் பெருமாட்டி அழகு அழிந்து வருந்துகின்றாள். நீயிர் அன்பிலிர் போலும் என்றாளாயிற்று. தலைவன் நாள்தோறும் வந்து தலைவியைக் காணாமல் கையற்றுச் செல்வானாகவும், அவனை ஏற்றுக் கொள்ளாமல் சேட்படுத்திய தோழி அவன் வரவில்லை என்பது தங்குறை அவன்குறையாக மாயஞ்செப்பியவாறும். இது தலைவன் வரவினை விரும்பிக் கூறியவாறு.

தம்மிற்றாழ்ந்த மகளிரைச் சென்றுகாண்டல் நும் பெருமைக்கு இழுக்கென்று கருதி வாராதொழிந்தீர். இக் கருத்துப் பிழையாயது எனத் தலைவனுக்குப் பேதைமையூட்டுவாள் பெருமை கெடுமோ? என்னாது பெருமை என்பது கெடுமோ என்றாள்.

இனி இதனை, "துறைவ நீயிர் ஒருநாள் புன்னைத் தண்ணறுங் கானல் வந்து நும் வண்ணம் எவனோ என்றனிர் செலின் நீயிர் பெருமை என்பது கெடுமோ?" என்று இயைத்திடுக. (கo)

## செய்யுள் கக

திணை : பாலை.

துறை : பிரிவிடை ஆற்றாளாயினாளென்று பிறர் சொல்லக்கேட்டு வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—தலைவன் வேந்தற்குற்றுழி யுதவுதற் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து சென்றானாக, தலைவி பிரிவாற்றாமையால் பெரிதும் வருந்தியிருப்ப, அது கண்ட கொடிதறி பெண்டிர் வினையே ஆடவர்க்குயிர் அவர் வினைவயிற் பிரிந்துழி ஆற்றியிருத்தலே குலமகளிர்க்கழகு, இவள் ஆற்றாது மெலிவது காணீர்! என்று அலர் தூற்றாநிற்ப அதுகேட்ட தலைவி மேலும் வருந்தித் தோழிக்கு ஊரவர் கொடுமையைக் கூறி வருந்தியது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே" (தொல் - அகத் - சஉ) எனவரூஉம் விதியினால் அமைத்துக் கொள்க.

நெருப்பெனச் சிவந்த வுருப்பவிர் மண்டிலம்
புலங்கடை மடங்கத் தெறுதலின் ஞொள்கி
நிலம்புடை பெயர்வ தன்றுகொ லின்றென
மன்னுயிர் மடிந்த மழைமா றமையத்
ரு. இலையில வோங்கிய நிலையுயர் யாஅத்து
மேற்கவட் டிருந்த பார்ப்பினங் கட்குக்
கல்லுடைக் குறும்பின் வயவர் வில்லிட
நிணம்வரிக் குறைந்த நிறத்த வதர்தோறுங்
கணவிர மாலை யிடூஉக் கழிந்தன்ன
க0. புண்ணுமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்
கண்ணுமிழ் கழுகின் கான நீந்திச்
சென்றோ ரன்பிலர் தோழி வென்றியொடு
வில்லலைத் துண்ணும் வல்லாண் வாழ்க்கைத்
தமிழ்கெழு மூவர் காக்கு
கரு. மொழிபெயர் தேஎத்த பன்மலை யிறந்தே.

—மாமூலனார்.

(உரை)

கஉ-தோழி..........

(இ - ள்.) தோழி! - தோழி ஈதொன்றுகேள்! இவ்வூர்க் கொடிதறிபெண்டிர் என்க.

(வி - ம்.) பிரிவாற்றாமையால் மேலும் வருத்தமுடையளாய்க் காணப்பட்ட தலைவியைத் தோழியணுகியவழி, தலைவி தனது புதிய வருத்தத்திற்குக் காரணங் கூறத் தொடங்குபவள் அவளை விளித்த படியாம்.

௧ - ௧௧: நெருப்பு.............நீந்தி

(இ - ள்.) நெருப்பு எனச் சிவந்த உருப்பு அவிர் மண்டிலம் புலங்கடை மடங்கத் தெறுதலின் - நெருப்புப்போலச் சிவந்த வெப்பம் விளங்குகின்ற ஞாயிற்று மண்டிலம் நிலமானது பசும்புல்லும் தலைகாண்பரிதாய் முற்றுக அழிந்தொழியும்படி காய்தலாலே; ஞொள்கி - குறைந்து, இன்று நிலம் புடை பெயர்வது அன்று கொல் என மன்னுயிர் மடிந்த மழை மாறு அமையத்து - இவ்வாறு ஞாயிறு காயும் இற்றைநாள் இந்த நிலமானது தன்னிலையினின்றும் பிறழுகின்ற ஊழிப்பெயர்ச்சியை உடைத்தாகுமோ? அல்லவோ என்னும்படி நிலைபெறுதற்குரிய உயிர்கள் இறந்தொழிந்த மழைதுவர மாறிப் போனபொழுது; ஓங்கியநிலையா அத்து - தழைத்துப்பரவாமல் ஒடுங்கி வளர்ந்துநிற்கும் நிலையினையுடைய யாமரத்தின்; உயர் இலை இல மேல் கவட்டு இருந்த - உயர்ந்துள்ள இலைகள் இலவாய்த்தீய்ந்த உச்சியிலமைந்த கிளையில் குடம்பையில் பசித்திருந்த; பார்ப்பு இனங்கட்கு - தமது குஞ்சுகட்கு; கல் உடைக் குறும்பின் - கற்களை நிரம்ப உடைய கொல் குறும்பின்கண் வாழ்கின்ற; வயவர் வில் இட - ஆறலைகள்வராகிய மறவர் ஆறுசென்மாக்கள் மேல் வில்லில் அம்புகளையிட்டு ஏவுதலாலே; நிணம் வரிக்கு உறைந்த நிறத்த அதர் தொறும் - தங்கள் நிணம் சிந்தி வரிவரியாய்த் தோன்றுமளவிற்கு உறைந்து கிடத்தாலே வெண்ணிறமுடையனவாகிய வழிகளினெல்லாம்; கணவிரமாலை இடூஉ கழிந்தன்ன புண் உமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர் - புறங்கொடுத்து ஓடியவர், செவ்வலரி மலராற் றொடுத்த மாலையைக் கைவிட்டுப் போனாற் போன்று தோன்றுமாறு அவர் முதுகில் அம்புபட்ட புண்கள் உமிழ்ந்த குருதி உறைந்து கிடப்பனவையே தம்முடலைத் தாங்கா நிற்ப ஓடமாட்டாது இளைத்து வீழ்ந்துகிடப்பவருடைய, கண் உமிழ் கழுகின் கானம் நீந்தி - கண்களைப் பறித்துக் கொணர்ந்து இரையாக அவற்றின் திறந்த வாயினுள் உமிழுகின்ற கொடிய கழுகுகளையுடைய காட்டினைக் கடந்து; என்க.

(வி - ம்.) இது குறிஞ்சி திரிந்த பாலை ஆகலின் ஊரினைக் கல்லுடைக் குறும்பு என்றார். குறும்பு - பாலைநிலமக்கள் வாழும் ஊர். குறும்பின் வயவர் வில்லிட என்றமையால் ஈண்டு வில்லிடப்பட்டோர் ஆறுசெல் வம்பலர் என்க; வில்லிடுதல் - வில்லில் அம்பு தொடுத்து விடுதல். வில்லிடப்பட்டவருடைய நிணம் ஒழுகி வரிவரியாய் உலர்ந்து கிடத்தலின் அவ் வழிகளின் நிறம் நிண நிறமாயிற்று என்க. வரிக்கு உறைந்த - வரியாகத் தோன்றுமளவிற்கு உறைந்த என்க. உறைந்தமையாற் பெற்ற நிறத்த என்றவாறு. அவர்தம் அம்புக்காற்றாது இரிந்தோடுவோர் முதுகுப்புண் உமிழ் குருதி உறைந்துகிடப்பவை - ஓடுவோர் கணவிர மாலையைப் போகட்டுப் போக அவற்றைப் போலத்

தோன்றும் என்பது கருத்து. ஓடமாட்டாது வீழ்ந்துகிடப்போர் அக் குருதிபரிப்பக் கிடந்தார் என்க.

(கூ) கவட்டில் பசித்திருந்த பார்ப்பினங்கட்குக் குறும்பின் வயவர் வில்விடுதலாலே குருதி பரிப்பக் கிடந்தோர் கண்களைப் பறித்துக்கொடுபோய் அவைதிறந்த வாயின்கண் உமிழும் கழுகுகள் மிக்க கானம் என இயையும்.

## கஉ - கரு : சென்றோர்............இறந்தே

(இ - ள்.) வென்றியொடு வில் அலைத்து உண்ணும் வல்லாண் வாழ்க்கைத் தமிழ் கெழுமூவர் காக்கும் - புக்களந்தோறும் வாகை சூடுதற்கியன்ற போராற்றலோடு மாற்றார் படையைத் தம் விற்போராலே வருத்தி அவர் அளக்கும் திறைப் பொருளை உண்டுவாழ்கின்ற வல்லாண்மை வாழ்க்கையையுடைய தமிழ்பபண்பு பொருந்ிய சேர சோழ பாண்டியராகிய மூன்று முடிமன்னரும் செங்கோன்மையுடன் காவல் செய்கின்ற; மொழி பெயர் தேஎத்த பன்மலை இறந்து - மொழி மாறுபட்ட வேற்று நாட்டின் கண்ணுள்ளனவாகிய பலவாகிய மலைகளையும் கடந்து; சென்றோர் அனபிலர் - அப்பாலும் போயினரே, வனகண்ணர், என்று அவரைத் தூற்றுகிலர், இவள் ஆற்றாது மெலிந்தனள் என்று எனையே பழிக்கின்றனர்; அதற்கே யான் வருந்துவல் காண் என்பதாம்.

(வி - ம்.) வெற்றியொடு என்பது புக்கபோர்க்களம் தோறும் வாகைசூடும் புகழோடு என்பதுபடநின்றது. வில்லால் பகைவரை அலைத்து அவர்தரும் திறைப் பொருள் கொண்டுண்ணும் வல்லாண் வாழ்க்கை என்க. வல்லாண் முல்லை என்பது வாகைத்திணையுள் ஒருதுறை. அதனை,

> "வின்முன் கணைதெரியும் வேட்டைச் சிறுசிறார்
> முன்முன் முயலுகளு முன்றிற்றே - மன்முன்
> வரைமார்பின் வேல்மூழ்க வாளுழவந் தாங்கி
> உரைமாலை சூடினான் ஊர்"

எனவரும், வெண்பாவானுமுணர்க. (புறப் - மாலை. கஎஎ)

மூவர் - சேர சோழபாண்டியர் என்னும் மூன்றுமுடி வேந்தர். தேஎத்த - நாட்டின் கண் ணுள்ளன.

இனி, இதனோடு,

> "பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
> துறந்தா ரவரென்பா ரில்" (குறள் - ககஅஅ)

எனவருந் திருக்குறளை ஒப்பு நோக்குக.

இனி, இதனை, தோழி'' இவள் பசந்தாள் என்பதல்லால் அவர் இவளைத் துறந்து கழுகின் கானம் நீந்தி மொழிபெயர் தேஎத்த பன்மலை இறந்து சென்றார் என்பு இலர்; என்றியைத்திடுக. (௬௧)

(பா - வே.) அ - விறைத்த

## செய்யுள் ௬௨

திணை : குறிஞ்சி.

துறை: (க) பின்னின்ற தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது. (உ) தோழிக்குத் தலைமகள் சொற்றதூஉமாம்.

(து - ம்.) (க) அஃதாவது: இயற்கைப்புணர்ச்சியும் இடந்தலைப் பாடும் பாங்கற் கூட்டமும் எய்திய தலைவன் தோழியை மதியுடம் படுத்துத் தலைவிபாற் சென்று குறை நயப்பிக்க வேண்டித் தோழியை இரந்துபின்னிற்பானாக, அவற்கிரங்கிக் குறை நேர்ந்த தோழி தலைவியின்பாற் சென்று குறை நயப்பிப்பாள் வழிநிலை பிழையாமல் பொய்யினாற் கவர் பொருள் நாட்டத்தாற் கூறியது என்றவாறு.

(இ - ம்.) (க) இதற்கு, "நாற்றமுந் தோற்றமும்'' எனவரும் நூற்பாவின்கண், (தொல் - களவி - உ௩.) பொய்யினும்............ கவர் பொருள் நாட்டத்தானும் எனவரும் விதிகொள்க. (நச்சினார்க்கினியரும் இதற்கிதைக் காட்டினர்.)

(உ) இதற்கு, "மறைந்தவற் காண்டல்'' எனவரும் நூற்பாவின் கண் (தொல் - களவி - உ0) மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழித் தோழிக்கு நினைத்தல் சான்ற அருமறை "உயிர்த்தலும்'' எனவரும் விதிகொள்க.

நெருந லெல்லை யேனற் றோன்றித்
திருமணி யொளிர்வரும் பூணன் வந்து
புரவலன் போலுந் தோற்ற முறழ்கொள
விரவன் மாக்களிற் பணிமொழி பயிற்றிச்
௫. சிறுதினைப் படுகிளி கடீஇயர் பன்மாண்
குளிர்கோ டட்டை மதனில புடையாச்
சூரர மகளிரி னின்ற நீமற்
றியாரை யோவெம் மணங்கியோ யுண்கெனச்
சிறுபுறங் கவையின னாக வதற்கொண்
௧0. டிகுபெயன் மண்ணின் ஞெகிழ்பஞ குற்றவென்
னுள்ளவ னறித லஞ்சி யுள்ளில்
கடிய கூறிக் கைபிணி விடாஅ
வெரூஉமான் பிணையி னொரீஇ நின்ற

வென்னுரத் தலைக்கையிற் பெயர்த்துப்பிறி தென்வயிற்
கரு. சொல்ல வல்லிற்று மிலனே யல்லாந்
தினந்தீர் களிற்றிற் பெயர்ந்தோ னின்றுந்
தோலாவா றில்லை தோழிநாஞ் சென்மோ
சாயிறைப் பணைத்தோட் கிழமை தனக்கே
மாசின் றாதலு மறியா னேசற்
உ௦. றென் குறைப் புறனிலை முயலு
மண்க ணாளனை நகுகம் யாமே.

—நல்வெள்ளியார்.[1]

(உரை)

கஎ: தோழி - தோழீ ஈதொன்று கேள்;

(வி-ம்.) தோழி என்னும் அண்மைவிளி ஈதொன்று கேள் என்பது படவின்றது.

க - கூ: நெருநல் ...........கவைபினளாக

(இ - ள்.) நெருநல் எல்லை திருமணி ஒளிர்வரும் பூணன் ஏனல் வந்து தோன்றி - நேற்றுப் பகலிலே அழகிய மணியின் ஒளி வீசுகின்ற அணிகலன் அணிந்தவன் ஒருவன் நமது தினைப் புனத்திற்கு நேரேவென வந்து என் பக்கலிலே அணுகி வந்து; புரவலன் போலும் தோற்றம் உறழுமொள - மன்னன் மகனை போன்ற தனது தோற்றத்திற்கு முரண்படுமாறு; இரவல் மாக்களின் பணிமொழி பயிற்றி - இரந்துண்ணும் நல்குரவுடையார் போன்று பணிவுடைய சொற்களைப் பலகாலும் கூறி; சிறுதினைப் படுகிளி கடீஇயர் - சிறிய தினைக்கதிரினைக் கண்டு வந்து வீழும் கிளிகளை ஓட்டுதற் பொருட்டு; குளிர்கொள் தட்டை மதனில பன்மாண் புடையாகின்ற - கைக்கொண்ட குளிரும் தட்டையும் ஆகிய இந்த நொய்மையுடைய கருவிகளைப் புடைத்துக் கொடுகின்ற, சூர் அர மகளிரின் எம் அணங்கியோய் நீ யாரையோ - சூரரமகளிர் என்னும் தெய்வப் பெண் போன்று எம்மை நோக்கத்தாலே தீண்டி வருத்துகின்ற நீ தான் யாரோ? யான் அறிகிலேன் ஆயினும்; உண்டு என - யான் இவ் வருத்தம் தீர வினை பெண்மை நலமெனும் பேரமிழ்தினை இனிது நுகர்வேன்காண் எனறு கூறி; சிறுபுறம் கவையினன் ஆக - பிடரியினைக் கையாலணைத்துத் தழுவுவானாயினன், ஆகவே; என்க.

(பா - வே.) 1. நல்லொளியார்.

(வி - ம்.) எல்லை – பகல். ஏனல் - தினை : ஆகுபெயர், தினைப் புனத்தில் என்க. தோன்றி என்பது ஞெரேலெனத் தோன்றி என்பது பட நின்றது. மணிகள் பதிக்கப்பட்டு ஒளிர்கின்ற பூணையுடையவனாகிய ஒருவன் என்றவாறு; அவன் திருவுடையன் என்பது மட்டும் தேற்றம் என்றுணர்த்துதற்கு மணிப்பூண் குறிப்பேதுவாய்க் கூறியபடியாம். புரவலன் போலும் தோற்றம் உறழ்கொள - என்றது உருவும் திருவும் ஒருங்கே புலப்படக் கூறியவாறும். பணிமொழி - பணிவுடைமையைப் புலப்படுத்தும் மொழி. பயிற்றி - பலகாலும் கூறி. புரவலன் போன்ற தன் தோற்றம் உறழ்கொளப் பணிமொழி கூறுபவன் தெய்வப் பெண் போலும் நின் தோற்றம் உறழ்கொள நீ சிறுகிளி கடியக் குளிர் முதலிய நொய்ய கருவிகொண்டு புடைக்கின்றாய் எனினும் நீ எம் அணங்கினை என்று கூறினன், என்கின்றாள். மேலும் தன் தோற்றம் உறழ்கொளப் பேசினான் ஆயினும் அம்மொழி உறழ்கொள ஒழுகினன் என்பாள் என் சிறுபுறம் கவையினன் என்கின்றாள். உண்கு - உண்பேன். குளிர், தட்டை என்பன கிளிகடி கருவிகள். குளிர் – ஈரம் என்னும் பழையவுரை பொருந்தாது.

௯ - ௧௫: அதற்கொண்டு..........வல்லிற்றுமிலனே

(இ - ள்.) அதன் கொண்டு - அங்ஙனம் அவன் கூறிய மொழியினை உட்கொண்டமையாலே; இகு பெயல் மண்ணின் ஞெகிழ்பு அஞர் உற்ற என் உள் அவன் அறிதல் அஞ்சி - மிகுதியாக வீழ்கின்ற மழைநீரை ஏற்ற செம்புலத்து மண் போனாறு நெகிழ்ந்து யான் அவனுக்கிணங்காமைக்காக வருந்துகின்ற என்னுடைய நெஞ்சத்தின நிலைமையை அவன் அறிந்துகோடற்கு யான் அஞ்சி; உள் இல் கடிய கூறிக் கைபிணி விடாஅ - என் னெஞ்சத்தோடு பொருந்துதல் இல்லாத கடுஞ்சொற்களைக் கூறியவாறு அவனுடைய கையின் பிணிப்பினின்றும் என்னை விடுவித்துக் கொண்டு வெரூஉம் மான்பிணையின் ஒரீஇ நின்ற - அஞ்சுகின்ற பிணைமான் போன்று விலகிச் சென்று நின்ற; என் உரத்தகைமையின் – தனக்கிணங்காத என்னுடைய வன்செயலைக் கண்டமையாலே; பெயர்த்து என்வயின சொல்லவல்லிற்றும் பிறிது இலன் - மீண்டும என்பால் கூறும் வலியுடைத்தாகிய சொல் மற்றொன்றேனும் காணுதல் இலனாகி; என்க.

(வி - ம்.) அதற்கொண்டு – அதனை உள்ளத்திலேற்றுக் கொண்டமையால் என ஏதுப் பொருட்டாக்குக. அதனை என்றது அவன் கூறியதனை, அவன் சொற் கேட்டலும் என்னெஞ்சம் நெகிழ்ந்தது என்றது தான் கற்புக்கடம் பூண்டமையையும் சிறுபுறம் கவையினன் என்றது மெய்தொட்டுப் பயிறல் முதலிய இயற்கைப் புணர்ச்சியுற்றமையுமாகிய அருமறையைத் தோழிக்குக் கூறி அறத்தொடு நின்றவாறும். இனி, தோழி கூற்றாயின் "பொய்யினால் வழிநிலை பிழையாது நாடிய நாட்டம் எனக் கொள்க. உள் இல் கடிய - உள்ளத்தினோடு இல்லாத வாயளவாய்க் கூறிய கடுமையுடைய சொற்கள். என்னுரத்

தகைமையின் அன்றது, தலைவி கூற்றாயின் தலைவன் இளி வந்தன செய்யவும் யான் நாணும் மடனும் நீங்கிற்றிலேன் என்று தன் பெருமையைத் தோழிக்குக் கூறியவாறும். இதனை, “ஒருமைக் கேண்மையுறுகுறை தெளிந்தோள் அருமைசான்ற நாலிரண்டு வகையிற் பெருமைசான்ற வியல்பு’ என்பர் ஆசிரியர் தொல்காப்பியனார் (கள-உ0). என்னுரத் தகைமையின் கைபிணி விடாஅ எனவும், என்னுரத்தகைமையைக் கண்டமையால் பெயர்த்துப் பிறிது என்வயிற் சொல்லவல்லிற்றும் இலன் எனவும் ஈரிடத்திற்கும் ஏற்ற பெற்றி இயைத்துக் கூறிக்கொள்க. சொல்லவல்லிற்று-சொல்லும் வலியுடைய சொல். ’

### கரு - உக : அல்லாந்து.........யாமே

(இ - ள்.) அல்லாந்து - தான் மேற்கொண்ட கருத்து முற்றாது தோல்வியெய்தினமையால் உளம வருந்தி; இனம் தீர் களிறதின் பெயர்ந்தோன - தன்காதற் பிடியை நீங்கிச் செல்லும் களிற்றியானையே போன்று சென்ற அப் புதுவோன்; சாய் இறைப் பணைத்தோள் கிழமை மாசுஇன்று தனக்கே ஆதலும் அறியான்- நுணுகிய நல்லிலக்கண வரிகளையுடைய முனைகயினையுடைய மூங்கில் போன்ற என்னுடைய தோளின்பத்தை நுகரும் உரிமையாதொரு குற்றத்திற்குமிடனின்றி அவனுக்கே ஆவதனையும அறியானாய்; ஏசறறு - மிகவும் வருந்தி; இன்றும் என்குறைப் புறனை நிலைமுயலும் - இற்றை நாளும் நாணாது ஆங்கு வந்து என்னால் ஆகும தன்காரியத்தின் பொருட்டு என் பினனிற்றலிலே முயலாதிரான் காண்; (இன்றும்) தோலா ஆறு இல்லை - (இற்றை நாளும நேற்றுப் போலவே) அவன் தன் முயற்சியில் தோல்வி எய்தி அல்லாவாமைக்கு வழியொன்றுமில்லை ஆகலான்; (இன்றும்) நாம் சென்மோ - இற்றை நாளும் யாம் தினைப்புனத்திற்குச் செல்வேம்; யாம் அண்கணாளனை நகுகம் - சென்று அவன் தன் முயற்சியிற் றோல்வியுற்று அல்லாந்து செல்லுங்கால் நமக்கு அணுக்கமான அவ்வறிவிலியை யாம் எள்ளி நகைப்பேம் எழுக! என்பதாம்.

(வி - ம்.) அல்லாத்தல் - வருந்துதல். “ஆக்கமிழந்தேமென் றல் [illegible]” எனக் குறுந்தொகையினும் (௩௯௩) அஃதப் பொருட்டாதலறிக. இனம் ஈண்டுக் காதற் பிடியானை. தலைவி கூற்றாயின் இனந்தீர் களிறு என்றாள் - தான் அவன்பால் கற்புக்கடம் பூண்டமை தோன்ற, அவன் தோலாது வெற்றிகாண்டற்கு வழிசெய்வோர் இனி யாமேகாண் அவன் இன்றும் தோலா ஆறு இல்லை. அவ் வழிகாண்டல் நின்கடன் எனக் குறிப்பாக அறத்தொடு நிற்கின்றாள் தலைவி என்க. நேற்று அவன் என் சிறுபுறம் கவையினன் என்னெஞ்சமும் இருபெயல் மண்போன்று நெகிழ்வுற்றது ஆகவே என் பணைத் தோள் நேற்றே அவனுக்குரிமையாயின : ஆனால் என்னுரத் தகைமையின் யான் ஒரீஇ நின்றமையான் அவ்வுரிமையை அவனறிகிலான் என்பாள், “தோட்கிழமை தனக்கே ஆதலும் அறியான், அறிந்து அவன் உரிமை கொண்டாடின்

அவனுக்கு மாசு சிறிதும் இன்று அதுவும் அறியான்'' என்கின்றான். இனி யாம் அவன் புறனிலை முயலற்பாலேம் அதுவும் அறியான் என் குறைப்புறனிலை முயலும் என்கின்றாள். தோலா ஆறு இல்லை என்றது அந்த ஆறு நாம் கண்டற்குரியது ஆதலால் அவனுக்குத் தோலா ஆறு இல்லை என்றவாறு. அண்கணாளன் என்றது நாம் காவல் செய்யும் தினைப்புனத்திற்கே வந்துவிட்டவன் என்றும் அணுகிய நங்கண்ணாளன் என்றும் நம்முள்ளமாகிய நமக்கு மிக அணுகிய இடத்தைக் கைக்கொண்டு ஆளும் நம்பெருமான் என்றும் நோக்குந்தோறும் புதுப்புதுச் சுவை பயந்து நிற்கும் திறமுணர்க. இப்புலவர் பெருமானுடைய பெயர் நல்வெள்ளியார் ஆகுக அன்றி நல்லொளியாரே யாகுக. இவர் இயற்றிய இச் செய்யுள் மட்டும் செந்தமிழ்வானத்தே தோன்றிய விடிவெள்ளி போன்று இனிய தண்ணொளி பரப்புகின்றது என்பது ஒருசிறிதும் மிகையன்று.

இனி இதனை, தோழி நெருநல் எல்லை பூணன் ஒருவன் ஏனற் றோன்றி என்பால் வந்து தோற்றம் உறழ்கொள மொழிபயிற்றிப் புடையாகுர் அரமகளிரின் எம் அணங்கியோய்! நீ யார் எனக் கவையினன்; அதற்கொண்டு ஞெகிழ்பு அருர் உற்ற என் உள் அவன் அறிதல் அஞ்சிக் கூறி விடாஅ ஒரீஇ நின்ற என்தகையின் பிறிது சொல்ல வல்லிற்றும் இலன் பெயர்ந்தோன் இன்றும் தோலா ஆறு இல்லை. தோட்கிழமை தனக்கே ஆதலும் அறியான் ஏசற்று மூயலும் யாம் (இன்றும்) சென்மோ யாம் நகுகம் வருதி என்றியைபு காண்க.

(பா - வே.) கசு. வென்னூர்த். கக. சொல்லல். (கூஉ)

## செய்யுள் கூகூ.

**திணை :** பாலை.

**துறை :** தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது தலைவன் தலைவியொடின்புற் றமர்ந்து வாழுங் காலத்தே அவன் நெஞ்சம் பொருளின் சிறப்பினையும் அஃதில் வழியுண்டாகும் சிறுமையினையும் பல்லாற்றானும் எடுத்துக்காட்டித் தலைவியைப்பிரிந்துபோய்ப் பொருளீட்டிவரப் பெரிதும் தூண்டா நிற்பத் தலைவனும் அவ்வழித் தலைவியைப் பிரிந்து பொருளீட்டப் போவான் இடைச்சுரத்தே செல்லுங்கால் அந் நெஞ்சம் தலைவியை நினைந்து மறுகி மீள அஃதுணர்ந்த தலைவன் அந் நெஞ்சினைக் கடிந்து கூறியது என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு, ''கரணத்தி னமைந்து'' எனவரும் நூற்பாவின்கண் (தொல் - கற் - ரு) 'மீட்டுவரவு ஆய்ந்த வகையின் கண்ணும்' எனவரும் விதி கொள்க.

**வினைநன் றாதல் வெறுப்பக காட்டி**
**மனைமாண் கற்பின் வாணுத லொழியக்**
**கவைமுறி யிழந்த செந்நிலை யாஅத்**

றொன்றோங் குயர்சினை யிருந்த வன்பறை
ரு. விளைப் பருந்தின் கோள்வல் சேவல்
வளைவாய்ப் பேடை வருதிறம் பயிரு
மினிதேர் தீங்குர லிசைக்கு மத்தஞ்
செலவருங் குரைய வென்னாது சென்றவண்
மலர்பா டான்ற மையெழின் மழைக்கண்
கo. டெளியா நோக்க முள்ளினை யுளிவாய்
வெம்பர லதர குன்றுபல நீந்தி
யாமே யெமிய மாக நீயே
யொழியச் சூழ்ந்தனை யாயின் முனாஅது
வெல்போர் வானவன் கொல்லி மிமிசை
கரு. நுணங்கமை புரையும் வணங்கிறைப் பணைத்தோள்
வரியணி யல்குல் வாலெயிற் றோள்வயிற்
பிரியா யாயின் நன்றுமற் றில்ல
வன்றுநம் மறியா யாயினு மின்றுநஞ்
செய்வினை யாற்றுற விலங்கி
உo. னெய்துவை யல்லையோ பிறர்க்கு போகுளே.

—மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்.

(உரை)

க - அ: வினை........சென்று

(இ - ள்.) *வினை நன்று ஆதல் வெறுப்பக் காட்டி-பேதை நெஞ்சே! யாம இல்லத்துள காதலியுடன் இனி தமர்ந்திருந்த பொழுதெல்லாம், பொருளீட்டும் தொழில் நன்மையுடைத்தாத லுக்கு நீ எனக்கு அறவுரை பலவும் ஆற்றவும் எடுத்துக்கூறி வற் புறுத்தி; மனைமாண் கற்பின் வாள் நுதல் ஒழிய - மனைவாழ்க்கைக் கியன்ற மாண்புகள் பலவற்றோடும் திண்ணிய கற்பினையும் உடைய ஒளி பொருந்திய நெற்றியினையுடைய நங்காதலியைப் பிரிந்து; கவை முறி இழந்த செந்நிலை யாஅத்து - மழைவளமின்மையால் கிளைத்தலையும் தளிரினையும் இழந்த வற்றலாய்ச் செங்குத்தாக நிற்றலையுடைய யாமரத்தினது; ஒன்று ஓங்கு உயர்சினை இருந்த - தனித்து வளர்ந்துயர்ந்த கொம்பின்கண் வீற்றிருந்த; வன்பறை விளைப் பருந்தின் கோள்வல் சேவல் - வலிய இறக்கை களையும் விளையொலியையும் உடைய பருந்து என்னும் பறவை யினத்துத் தன்னிரையைத் தேர்ந்து கொள்வதில் வல்லதாகிய*

சேவற் பருந்து; வளைவாய்ப் பேடை வருதிறம் பயிரும் - வளைந்த அலகினையுடைய தன் காதலியாகிய பெடைப் பருந்து தன்பால் வருதற்குரிய குறிப்பொலியாலே அழைக்கின்ற; இளிதேர் தீம் குரல் இசைக்கும் அத்தம் - இளி என்னும் இசை குரலாகத் தேர்ந்து இசைக்கும் மேற்செம்பாலை என்னும பண்போன்ற இசை யாண்டும் ஒலித்தற கிடனை இப் பாலை நிலத்து வழிகள; செலவு அருங்குரைய என்ஞது - செல்லுதற்கரியனவாம் என்று கருதாமல்; சென்று - இத்துணைத் தொலைவும் போந்து என்க.

(வி - ம்.) வினை - ஈண்டுப் பொருள் செய்வினை; அது நன்றாதல் காட்டலாவது-"பொருளல லவரைப் பொருளாகச் செய்யும் பொரு ளல்ல தில்லை பொருள்" எனவும், அஃது "அறனீனும் இன்பமும் ஈனும்" எனவும் அஃது எண்ணிய தேயத்துச் சென்று பகைவரை அழிக்கும் என்றும், 'பொருளில்லார்க் கிவ்வுலகமில்லை' என்றும், 'இல்லாரை எல்லாரும் எள்ளுவர்' என்றும், 'செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு' என்றும் இன்னோரன்ன ஆன்றோர் அறிவுரைகளை நினைவூட்டி அதனை ஈட்டுக என்று வற்புறுத்துதல். வெறுப்ப - மிகுதி யாக. வாணுதலை ஒழிய யாம் பிரிந்து அத்தம் செலவருங்குரைய என்ஞது சென்று என இயையும். என்ஞது-என்று ஆராய்ந்து துணி யாமல் என்று நெஞ்சிற்குப் பேதைமையூட்டியவாறு.

மனை-மனையறம். அதற்குரிய மாண்புகளோடு கூடிய கற்பென்று கற்பின் சிறப்புக் கருதி அதனைத் தனித்து வாங்கிக் கூறினான். அம் மாண்புகளாவன "கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும் மெல்லியற் பொறையும் விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்" பிறவுமாம் என்க. எண்ணித் துணிக கருமம் என்னும் ஆன்றோர் அறிவுரை கொள்ளாது துணிந்தபின் எண்ணுவது இழுக்கு என்பான் வாணுதல் ஒழியச் செலவு அருங்குரைய என்ஞது சென்று என்றான். சென்று என்றது ஈண்டு வந்து என்றவாறு. இடவழுவமைதியாகக் கொள்க. கவையும் முறியும் இழந்த என உம்மை விரித்தோதுக. கவை - கிளை. முறி - தளிர். வன்பாலையாதலின் இவற்றை இழந்த என்றவாறு. வன்பால் வற்றல் மரம்போன்று யாமும் அவள்பால் அன்பும் அருளும் இன்றி வருகின்றேம் என்று இறைச்சி தோன்றிற்று. இஃதும் வன்பறைக் கோள்வல் பருந்தும் அன்புடைமையாய் தன் வளைவாய்ப் பெடையைப் பயிரும் யாம் காதலியைக் கைவிட்டுச் செல்கின்றேம் எனப் பொருட்டிறத்தே இறைச்சி தோன்ற வன்பறை இசைக்கும் என்றான். காதலால் மெத் தென்றழைத்தலின் இளிதேர் தீங்குரல் என்று அடை தொகுத்தான். இளி - பண்களுக்கெல்லாம் (சுதியாக) அடிமணையாக அமைந்த இசை. இளியென்று தெளியும் தீங்குரல் எனினுமாம். இளிகுரலாகத் தேர்ந்து இசைக்கும் மேற் செம்பாலைப் பண் போன்றிசைக்கும் அத்தம் எனினு மாம்.

அ - ௧௦: அவண்............உள்ளினை

(இ - ள்.) அவண் மலர்பாடு ஆன்றமை எழில் மழைக்கண்- எண்ணித் துணிந்து யாம் இத்துணைத் தொலைவு வந்த பின்னர்

சேய்மையிலுள்ள நம்மில்லத்திருக்கின்ற நங்காதலியின், நீலமலரின் அழகுப் பெருமை குறைதற்குக் காரணமான மையெழுதப் பெற்ற பேரெழில் வாய்ந்த குளிர்ந்த கண்களின; தெளியா நோக்கம் உள்ளினை - அவளை பிரியுமிடத்தே யாம் கூறிய தேற்றுரைகளைத் தெளியாது மயங்கி நம்மைப் பார்த்த அப் பார்வையினை ஊன்றி நினைக்கின்றனை இது பேதைமைகாண்! என்க.

(வி - ம்.) அவண் என்றது சேய்மையிலுள்ள நம்மில்லத்தே என்பது படநின்றது. அருளுடைய கண்ணெழிலே நம்மைச் செலவழுங்குவிக்கப் போதியதாம் என்பான், மலர் பாடமைந்த மையெழிலுண்கண் என விதந்தான். நாம் அவட்குத் தேற்றுரை கூறுங்கால் நம்முரையை அவள் தெளியாமை அவள் நோக்கு நமக்குணர்த்திற்றே அப்பொழுதே செலவழுங்கியிருக்கலாமே அதுவும் செய்யாது இப்பொழுது நீ உள்ளுவது பெரும்பேதைமைத்து என்பான் மழைக்கண் தெளியா நோக்கம் உள்ளினை என்று இடித்துரைக்கின்றான்.

கo - கஎ : உளிவாய்...........தில்ல

(இ - ள்.) உளிவாய் வெம்பரல் அதர குன்றுபல நீந்தி யாமே எமியம் ஆக-உளியின் வாய்போன்ற கூர்மையுடைய வாயையுடைய வெவ்விய பருக்கைக் கற்கள் மிக்க கடிய நெறிகளையுடைய மலைகள் பலவற்றைக் கடந்து வந்தபின்னர், யாம் தனிமையுடையேமாகும்படி, நீயே ஒழியச் சூழ்ந்தனை ஆயின் - நீ மட்டும் எம்மைக் கைவிட்டு மீண்டுபோக எண்ணுவாயாயின்; முனாஅது வெல் போர் வானவன் கொல்லி மீமிசை நுணங்கு அமை புரையும் வணங்கு இறைப் பணைத்தோள் - அதோ நம்மெதிர்த் திசையிடத்தே தோன்றுகின்ற வெல்லும் போர்த் தொழிலையுடைய சேர மன்னனுக்குரிய கொல்லிமலையினது உயர்ந்த உச்சியிலே உள்ள சிறிய மூங்கிலைப் போலும் வளைந்த முன்கையினையும் பருத்த தோள்களையும்; வரி அணி அல்குல் வால் எயிற்றோள் வயின் - தேமல் அழகுசெய்யும் அல்குலையும் வெள்ளிய பல் லொழுங்கினையுமுடைய நம்மருமைக் காதலியினிடத்தினின்றும்; பிரியாய் ஆயின் நன்றுமன் - இத்தகைய நீ பிரியாது செலவழுங்கியிருப்பாயாயின் மிகவும் நன்றாகுமே அதுவும் செய்தாயிலை நீ அளியை காண்! என்க.

(வி - ம்.) வினைமேற் கொண்டுசெல்லும் வருத்தம் தோன்ற, உளிவாய்.........நீந்தி என்றான். யாமே என்றது தலைவன் தன்னையே கூறிக் கொண்ட ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவி. நீயே என்புழி ஏகாரம் பிரிநிலை. எமியம்-தமியம்; தனிமையையுடையேம். நீ என்னை நட்டாற்றிற் கைவிட்டுப் போகக் கருதுகின்றனை என இதனானும் இரிழுக்குரைப்பான் யாமேஎமியமாக நீயே ஒழியச் சூழ்ந்தனை என்றான். இதனால் யாமிதற்குடம்படேம் என்றானுமாம். ஈண்டுத் தலைவன் தலைவியை நுகர்ந்த இன்பத்தை நினைவுகூர்ந்து அல்குலும் எயிறும் கூறுகின்றான். வரி - தேமல். நீ பிரியாயாயின் அஃதெனக்கும் உடன்

பாடே என்பான், நன்றுமன் என்றான். மன் அதுவும் செய்திலை என்பதுபட ஒழியிசைப் பொருட்டு. தில்: அசை.

கசு - உ0: அன்று...........பொருளே

(இ - ள்.) அன்று நம் அறியாய் ஆயினும்-யாம் நங் காதலியைப் பிரியும் அற்றைநாள் நம்முடைய வலியினமைமையை ஆராய்ந்து துணியாமல் ஊக்கத்தின் ஊக்கி இத்துணைத் தொலைவும் வந்து இடைக்கண் முறிந்தனை அங்ஙனமாயினும் அதுகிடக்க; இன்றும் நம் செய்வினை ஆற்று உற விலங்கின்- இற்றைநாளும் நாம்செய்யக் கடவதாகிய பொருளீட்டற்றொழிலின் வழி எனனுடன் பொருந்தி வருதலின் தவிர்நதாயானல்; பிறர் நகு பொருள் எய்துவை அல்லையோ-நீ நின்னை ஏதிலார் எளளி நகைத்தற்கியன்ற இளிவரவினை எய்துவது தேற்றங்காண்! ஆகவே, வினைவயிற் போதுதும் என்னுடன் வருதி! எனபதாம்.

(வி - ம்.) அன்று என்றது காதலியைப் பிரிந்த அற்றைநாள் என்றவாறு. முன் ஒரு பிழை செய்தனை மீண்டும் மற்றொரு பிழை செய்யக் கருதுகின்றாய் என்பான் 'இன்றும்.........விலங்கின்' என்றான். நம்மறியாய் என்றது, மனைமாண் கற்பின் காதலியொழியச் செல்லும் வலி நமக்கில்லை என்னும் நம்நிலையை ஆராய்ந்தறிந்திலை என்றவாறு. இக் கருத்தோடு,

"உடைத்தம் வலியறியா ருக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்" (குறள் - சஎஙு)

எனவரும் திருவள்ளுவர் பொன்மொழியை நினைவு கூர்க.

இனி, எற்றென் றிரங்குவ செய்து இரங்கிய பின்னரும் மற்று அன்ன செய்ய முயலுதி நீ பெரும்பேதைகாண், என்று கழறுகின்றான் மீண்டும் வினை வயின் வரின் அறமும் இன்பமும் ஈனும்பொருள் பெறுதி. வாராதொழியின் நீ முயலாமலே பழிப்பொருள் எய்துவை காண்! என்று எள்ளி நகுவான் இன்றும் செய்வினை ஆற்றுற விலங்கின் பொருள் எய்துவை என்று அசதியாடியவாறு காண்க. ஆதலின் நாம் மேற்கொண்டுள்ள வினைவயிற் போதுதும் வருதி! என்பது குறிப்பெச்சம்.

இனி - இதனை, நெஞ்சே நீ காட்டி, வாணுதல் ஒழியச் செலவு அருங்குரைய என்றது இத்துணையும் போந்து, (வாணுதலின்) நோக்கம் உள்ளினையாய் யாம் எமியம் ஆக ஒழியச் சூழ்ந்தனை, இத்தகை நீ பிரியாய் ஆயின் நன்று மன், அன்று நம்மறியாய் ஆயினும் இன்று விலங்கின் பிறர் நகு பொருள் எய்துவை ஆதலால் என்னுடன் வினைவயிற் செல்லவருதி! என்றியைக்க,

பா - வே. ௬. வீழ்ந்த. ௨. வண்பறை. ௭. மிளியேய். ௮. செல்வருங். கக. வெம்பராஅய. கஉ. தமியமாக. கஉ. வெவ்வேல்.

## செய்யுள் ௩௬

**திணை :** முல்லை.

**துறை :** வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

*(து - ள்.) அஃதாவது: வினைவயிற் பிரிந்த தலைவன் செய்வினை முடித்த செம்மலுள்ளமொடு மீண்டுவருபவன் தலைவியைக் கண்டு தண்ணளி செய்தின்புற விதுப்புறு நெஞ்சமொடு தேர்ப்பாகனுக்குத் தன் வேணவாத் தோன்றத் தேரினை விரைந்து செலுத்துமாறு கூறியது என்றவாறு.*

*(இ-ள்.) இதற்கு, ''கரணத்தினமைந்த காலை'' எனவரும் (தொல்-கற்-௫) நூற்பாவின்கண், ''பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும்'' எனவரும் விதிகொள்க. (ஆசிரியர்-நச் இதற்கிதுகாட்டினர்).*

சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல்
கண்ணகன் வியன் மலைக்குந் தண்ணறும் புறவிற்
செருடுதோற் காணவன் கவைபோழுத் தன்ன
விருதிரி மருப்பி னண்ணல் லிரலை
௫. செறியிலைப் பதவின் செங்கோன் மென்குரன்
மறியாடு மருங்கின் மடப்பிணை யருத்தித்
தெள்ளற நழீஇய வார்மணலடைகரை
மெல்கிடு கவுள துஞ்சுபுறங் காக்கும்
பெருந்தகைக் குடைந்த நெஞ்ச மேமுறச்
௧௦. செல்க தேரே நல்வலம் பெறுந
பசைகொல் மெல்விரற் பெருந்தோட் புலைத்தி
துறைவிட் டன்ன தூமயி ரெகினந்
துணையொடு திளைக்குங் காப்புடை வரைப்பிற்
செந்தார்ப் பைங்கிளி முன்கை யேந்தி
௧௫. யின்றுவர லுரைமோ சென்றிசினோர் திறத்தென
வில்லவ ரறித லஞ்சி மெல்லென
மழலை யின்சொற் பயிற்று
நாணுடை யரிவை மாணலம் பெறவே.

—மதுரை மருதன் இளநாகனார்.

(உரை)

௧௦ - செல்க............பெறுந

**(இ - ள்.)** *நல்வலம் பெறுந - தேர்செலுத்தும் தொழிலில் யாவரினும் சிறந்த வெற்றியைப் பெற்றுள்ள அன்புடைய தேர்*

வல்லவ; தேர் செல்க - நந்தேர் இன்னும் விரைந்து செல்லுமாறு செலுத்துவாயாக! ஏற்றுக்கெனின்? என்க

(வி - ம்.) தலைவன் நெஞ்சம் தலைவியைக் காணும் அவாவினைப் பெரிதும் விதுப்புறுதலின் இயல்பாகவே விரையும தேரின் செலவு அவன் நெஞ்சிற்கியைய வில்லை. ஆதலால் பின்னும் விரைந்து செல்லுமாறு கட்டளையிடுகின்றான். இவ்வாறு விதுப்புறுதல் நெஞ்சிற்கியல்பாதலைப் பட்டறிவினோர் அறிகுவர்.

இனி, இத்தலைவன் அரசன் ஆகலின் தனது வெற்றிக்கு அப் பாகனை காரணமாவன் என்று அவனை நல்வலம் பெறுக என்று பாராட்டும் அழகு அவனுடைய பண்பாட்டை விளக்குதல் காண்க. தேரின் சிறப்புரைத்தலைப் புறத்தில் தேர்மறம் என்னும் ஒரு துறையாக அமைப்பர். ஈண்டுத் தலைவன் தன் வெற்றியையே அவ் வலவன் வெற்றியாக்கிக் கூறுகின்றான். ஆகலின இதுவும் அத் துறையின்பாற் படும் என்க. அது வருமாறு:

"செருமலி வெங்களத்துச் செங்குருதி வெள்ளம்
அருமுரண் ஆழி தொடர—வருமரோ
கட்டரர் கமழ்தெரியற் காவலன் காமர்தேர்
ஓட்டரர் புறத்தின்மேல் ஊர்ந்து"                    (புற-மாலை-௧௩௬)

என்னும் இத் தேர்மறத்தையே இத்தலைவன் ஈண்டு நல்வலம் பெறுக என்று பாராட்டுகின்றான் என்றுணர்க. அவன் இயல்பாகவே விரைந்து செலுத்தலின் கட்டளையாகவன்றி வேண்டுகோள் போல, "பாக தேர் செல்க!" என்னும் இம் மன்னனுடைய நாகரிகம் எண்ணி மகிழற்பாலதாம். இனி, பின்னும் விரைதல் வேண்டும் என்பதற்குக் காரணம் கூறுகின்றான்.

க - கூ: சிறு............ஏமுற

(இ - ள்.) சிறு கரும் பிடவின் வெள் தலைக் குறும்புதல் கண்ணியின் மலரும் தண் நறும் புறவின்-சிறிய கரிய கொம்புகளையுடைய பிடவஞ் செடியாகிய வெளளிய வுச்சியினையுடைய குறிய புதர்; கண்ணியின் மலரும் - தலையிற் சூட்டிக் கொள்ளும் மாலையாகிய கண்ணியாகவே மலர்கின்ற; தண் நறும் புறவில்-குளிர்ந்த நறுமணங்கமழுகின்ற முல்லை நிலபபரப்பிலே; தொடுதோல் கானவன் - செருபபணிந்த காலையுடைய வேட்டுவன்; கவை பொறுத்தன்ன-கவைக்கோலைத் தலையிற் சுமப்பதுபோன்று, இரு திரி மருப்பின் - தன் தலையிடத்தே கரிய முறுக்கேறிய கவைத்த கொம்புகளையுடையனவாகிய, அண்ணல் இரலை-தலைமைத்தன்மை பொருந்திய கலைமான்கள், மறி ஆடு மருங்கின் மடப்பிணை - கருப்பையினுள் உருக்கொண்ட குட்டி இயங்குகின்ற விலாப்புறத்தையும் மடப்பத்தையும் உடைய தம் காதற்பிணைமான்களை; பதவின் இலை செறி செங்கோல் மெல்குரல் அருத்தி - அறுகம் புல்லினது

இலைகள் செறிந்த சிவந்த தண்டினையுடைய மெல்லிய கொத்தினை ஊட்டி; தெள அறல் தழீஇய வார் மணல் அடை கரை-தெளிந்த நீர் தழுவிய நீண்ட மணலாலியன்ற நீரடை கரையிடத்தே படுத்து, மெல்கிடு கவுள - அசைவிடுகின்ற கவுளகளையுடையவாய்; துஞ்சு புறங்காக்கும்-அப் பிணைமான்கள் பின்னர்த் துயிலுமவ்விடத்தைக் காவல் செய்கின்ற; பெருந்தகைக்கு உடைந்த நெஞ்சம் - பெருந் தன்மை கண்டு "எற்றே? இவற்றின் அன்பிற்கு நம் மன்பு என்னு" வருந்திய என்னெஞ்சம; ஏம உற - விரைவில் அவ்வருத்தந் தீர்ந்து இன்புறுதற்கும், என்க.

(வி - ம்.) சிறிய கரிய கொம்புகளையுடைய என்க. பிடவு - ஒரு வகைச் செடி. பிடா என்னும் மரமும் உளதாகலின் அதன் இனமாகிய இதனைக் குட்டிப்பிடவு என்றும் கூறுப. இதனை, "பிடவமு மயிலையும்" எனவரும் (சிலப்பதிகாரம்) அடியில் அடியார்க்கு நல்லார் "குட்டிப் பிடவமும்" என, உரைவகுக்குமாற்றானும் (புறஞ்சேரி.........கசு-அ) உணர்க. 'கரும்பிடவின் வெண்டலைக் குறும்புதல்' என்புழி முரணணி தோன்றி இன்பஞ் செய்தலுணர்க. வெண்டலை என்றது அதன் மலர் வெண்ணிறமுடைமையால், கண்ணி-மாலை. மாலையாகவே மலரும் என்றது முல்லை முதலியன போலாது கொன்றைமலர் போன்று நெடிய துணராக மலரும என்றவாறு. புறவு- முல்லைநிலம். ஈண்டுக் கானவன் என்றது திணைமயக்கம். கவை-கவைக்கோல். இது கலை மானின் கவைத்த கொம்புக்குவமை. மறி-குட்டி. மருங்கு-விலாப்புறம். பிணைமானின் கருப்பையினுட் குட்டியியங்குதலின் விலாப்புடைத்த லின் மறியாடு மருங்கு மடப்பிணை என்றான். ஈண்டு இரலைமான் பிணை மானின்பால் பேரன்புடையனவாய் அருத்திப் புறங்காத்துக் கிடத் தற்கு அப் பிணைமான் கருப்பமுற் றிருத்தல் ஏதுவாதலின் அது குறிப் பாகத் தோன்றுமாறு அங்ஙனம் கூறினன். பழையவுரையாசிரியரும் "மறிவயிற்றிலே முழுகி விளையாடும் பக்கத்தையுடைய பிணை" என்று பொருள் கூறுவதும் இக் கருத்தினை நிலையாம் என்க. துஞ்சு புறம் - துஞ்சுமிடம். அப் பிணைமான்கள் துஞ்சுமிடம் என்க. பெருந்தகை - அன்புடைய உயிர்க்குத் தொண்டு செய்யும் பெருந்தன்மை. நான்க னுருபு: பகைப்பொருட்டு. அஃறிணையுயிராகிய இவற்றின்பாலுள்ள அன்புதானும் உயர்திணையாகிய நம்பாலிலதே என்னும் ஏக்கறவினால் உடைந்த நெஞ்சு என்பது கருத்து. ஏமுற என்றது, நங்காதலிக்கு அளிசெய்து தன் குறைதீரப் பெறறு இன்பமெய்தவும் என்றவாறு.

கக - கஅ: பசை............பெறவே

(இ - ள்.) பசைகொல் மெல்விரல் பெருந்தோள் புலைத்தி- ஆடையில் ஊட்டிய கஞ்சிப்பசையினை நன்கு கசக்கும் மெல்லிய விரலையும் பெரிய தோளையும உடைய புலைத் தொழில் செய்யும் பெண், துறைவிட்டன்ன - நீர்த்துறையிலே பிழிந்துவிட்ட அப் பசையின் நிறமபோன்ற; தூமயிர் எகினம் - வெண்ணிறமுடைய மயிரையுடைய அன்னச்சேவல்; துணையொடு திளைக்கும் காப்புடை வரைப்பின் - பெடையன்னத்தோடு காதல் விளையாட்டயர் தற்கிட

மான காவலமைந்த நமது மனையகத்தே; செந்தார் பைங்கிளி முன்கை ஏந்தி - தன் வளர்ப்புப் பிள்ளையாகிய கழுத்தின்கண் சிவந்த மாலைபோன்ற கோடமைந்த பசிய கிளிப்பிள்ளையைத் தனது முன்கையிலேந்தி; இல்லவர் அறிதல் அஞ்சி - இல்லத்தில் உள்ள மற்றையோர் அறிதற்கு அஞ்சி, யாருமில் ஒருசிறைத் தமியளாய் நின்று; சென்றிசினோர் திறத்து-கிள்ளாயே! நீ நம்மைப் பிரிந்து சென்ற நம்பெருமான் திறத்திலே யாதேனும் கூறுவா யாயின்; இன்று வரல் உரைமோ என - அவர் இற்றை நாளிலேயே நம்பால் வருவாராக! என்னும் இச் சொற்றொடரையே கூறுதி! என்று; மெல்என - மெத்தென; மழலை இன் சொல் பயிற்றும் - எழுத்துருவம் பெறாத இனிய சொல்லால் ('அவர் இன்று வருவா ராக' என்னும் அச் சொற்றொடரையே பன்முறையும் சொல்லிப் பழக்கும்); நாண் உடை அரிவை மாண் நலம் பெற - நாணம் என்னும் பெண்மைப் பண்பு மிக்க என் காதலி மாட்சிமை மிக்க பேரழகினை மீண்டும் எய்தி மகிழ்வுமேயாம்! என்பதாம்.

(வி - ம்.) கொல்லுதல் நன்கு பிசைந்து துவரக் கழுவிவிடுதல். கஞ்சிப் பசை அன்னத்தின் மயிர்க்கு வண்ணம்பற்றி வந்தவுவமை. துறையிற் கழுவிவிட்ட பசைபோன்ற தூமயிர் என்பது கருத்தாகக் கொள்க.

காவலமைந்த மனைப்படப்பையில் அவளால் வளர்க்கப்படுகின்ற அன்னச் சேவல் தன் பெடையன்னத்தோடு கூடிக் குலாவுதலை அவள் காணுந்தோறும் நம்பெருமான் இங்ஙனம் நம்மை அளி செய்திலரே என்று ஏக்கற்று அவள் நெஞ்சமும் உடைந்திருக்குமன்றே? அந் நெஞ்சம் ஏமுறவும் என்பது கருத்து. நாணமிகுதியால் இல்லவர் அறிதல் அஞ்சி மெல்லெனப் பயிற்றி என்பதற்கிணங்க யாருமிலொரு சிறைத் தமியளாய்ச் சென்று நின்று எனவும் வருவித்தோதுக. இன்று வரல் என்புழி வரல் என்பது அல்லீற்று உடன்பாட்டு வியங்கோள் "பதடி எனல்" என்புழிப்போல. கிளிக்கு மொழி பயிற்றுபவள் கிள்ளாயே நீ "அவர் இன்று வருவாராக" என்னுமிச்சொற்றொடரையே மீண்டும் மீண்டும் கூறிப் பயில்வாயாக! என்று பயிற்றினள் என்பது கருத்தாகக் கொள்க. மகளிர்க்கு நாணுடைமை உயிரினும் சிறந்த தாகலின் அவள் அப் பண்பு மிக்குள்ளமையை நினைந்திது கூறுகின்றான் என்க.

இனி, இதனை, நல்வலம்பெறுக! நந்தேர் இன்னும் விரைந்து செல்க! அஃதற்றுக் கெனின், புறவில் இரலை பிணை அருத்தி அடை கரைக்கண் துஞ்சுபுறங்காக்கும் பெருந்தகைக்கு உடைந்த என்னெஞ் சம் ஏமுறவும், காப்புடை வரைப்பில் மழலை இன்சொற் பயிற்றும் அரிவை மாணலம் பெறவுமேயாம் என இயைபு காண்க. இவ் வேண்டுகோள் கேட்ட வலவன் தலைவன் அறிதல் அஞ்சித் தன்னுள்ளத் தூடே மெல்லப் புன்முறுவல் பூத்திருப்பன்.

(பா - வே.) இ. புதவின்.　　　(௩௪)

## செய்யுள் கடு

**திணை :** பாலை.

**துறை :** மகட்போக்கிய நற்றாய் தெய்வத்திற்குப் பராஅயது.

**(து - ம்.)** அஃதாவது—தலைவியைத் தலைவன் அவள் தமர் அறியாத படி கொண்டுதலைக்கழிந்தமை யறிந்த நற்றாய் அவளை அழைத்துச் செல்லும் அவள்காதலன் கடத்தற்கரிய பாலைக் கொடுநெறியில் அவள் வருந்தாவண்ணம் அளிசெய்து அழைத்துப் போதல் வேண்டும் என வரையுறை முருகப் பெருமானை மனத்தினூடே வணங்கிப் பராவுக் கடன் நேர்பவள் கூறியது என்பதாம்.

**(இ - ம்.)** இதனை, "தன்னும் அவனும் சுட்டி" எனவரும் (தொல்-அகத்-கூ௬) நூற்பாவின்கண் தெய்வம் என்பதனால் அமைத்துக் கொள்க. தெய்வத்தொடு கூட்டி நற்றாய் புலம்பியது. இதனை நச், நற்றாய் கூற்றாகவும், இளம்பூ, செவிலி கூற்றாகவும் எடுத்துக் காட்டினர்.

ஈன்று புறந்தந்த வெம்மு முள்ளாள்
வான்றோ யிஞ்சி நன்னகர் புலம்பத்
தனியணி யிரட்டுந் தாளுடைக் கடிகை
நுழைநுதி நெடுவேற் குறும்படை மழவர்
டு. முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்
க0. போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரந்
துணிந்துபிற ளாயின ளாயினு மணிந்தணிந்
தார்வ நெஞ்சமொ டாய்நல னளைஇத்தன்
மார்புதுணை யாகத் துயிற்றுக தில்ல
துஞ்சா முழவிற் கோவற் கோமா
கடு. னெடுந்தேர்க் காரி கொடுங்கான் முன்றுறைப்
பெண்ணையம் பேரியாற்று நுண்ணறல் கடுக்கு
நெறியிருங் கதுப்பினென் பேதைக்
கறியாத் தேஎத் தாற்றிய துணையே.

—குடவாயிற் கீரத்தனார்[1].

(பா - வே.) 1. அம்மூவனார்.

## (உரை)

### ௧ - ௨ : ஈன்று.........புலம்ப

(இ - ள்.) மலைமிசையுறையும் எங்கடவுளே! ஈன்று புறந் தந்த எம்மும் உள்ளாள் - என் அரும்பெறற் செல்வி தன்னைப் பெற்றெடுத்துப் பேணிவளர்த்த அன்னையாகிய என்னிலை என்னும் என்றும் கருதிப்பாராதவளாய்; வான்தோய் இஞ்சி நல் நகர் புலம்ப - விண்ணைத் தீண்டவுயர்ந்த மதில் சூழ்ந்த அழகிய இவ்வில்லம் குடியோடிப் போனாற் போன்று வெச்சென்று தனிமை யுற்றுக் கிடக்கும்படி என்க.

(வி - ம்.) நம் மகள் பிறள் மகனோடு வன்பாலையிற் சென்றாள் எனச் செவிலியால் அறிவுறுத்தப்பட்டுத் தலைவியை நினைந்து கையறவு கொண்ட நற்றாய் கடவுளை நினைந்து கூறும் கூற்றாகலின் அந்நிலத் தெய்வமாகிய முருகவேளை உள்ளத்துள் நினைந்து கூறுகின்றாள். ஆகலின் முருகவேளை முன்னிலைப் படுத்தாளாக வருவித்து ஓதிக் கொள்க. எம்மும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. எம்மையும் என்பது மறக்க வொண்ணாத அன்னையாகிய எம்மையும் என்பதுபட நின்றது.

நகர் - இல்லம். இல்லம்புலம்புதலாவது - குடியோடிப்போன இல்லம் போன்று பொலிவிழந்து கிடத்தல். இனி இவ்வில்லத்துள்ளார் எல்லோரும் வருந்தியழ என்றுமாம். இத்தகைய இனிய சூழலில் இனி திருந்தவள் வன்பாலையில் போயினளே! என்று கருதி இல்லத்தை விதந்தெடுத்தோதினள்.

### ௫ - ௧௧ : தனிமணி.........ஆயினும்

(இ - ள்.) தனிமணி இரட்டும் தாள் உடைக் கடிகை நுழை நுதி நெடுவேல் குறும்படை மழவர் முனை ஆத்தந்து-ஒற்றைமணி ஒலிக்கின்ற கடையாணியையுடைய காம்பினையும் கூரிய நுனியை யும் உடைய நெடிய வேற்படைகளை ஏந்தியவராய்த் தமது ஆனிரை நின்ற காவற்காட்டினுட் புகுந்து அவற்றைக் கவர்ந்து செல்லும் வெட்சிமறவரைத் தொடர்ந்து போய் வளைத்துக் கொண்டு போர் செய்து அவர் கைப்பற்றிய ஆனிரையை மீட்டுக் கொடுத்த பின்னர்; முரம்பின் வீழத்த வில் ஏர் வாழ்க்கை விழுத் தொடை மறவர்-அவ் வெட்சி மறவராலே போரின்கண் கொன்று வீழ்த்தப்பட்ட வில்லாகிய ஏரினால் உழுதுண்ணும் மறவாழ்க்கை யையுடைய குறிதவறுது அம்பு தொடுக்கும் கரந்தைமறவர் உடம் பினையிட்டு மடிய; வல்லாண் பதுக்கைக் கடவுள் பேண்மார்-வலிய ஆண்மைத் தன்மைக்கு அறிகுறியாகிய கற்குவியலின்மேல் நின்ற கடவுட்டன்மையுடைய அக் கரந்தை மறவர் ஆவியை வழிபடுதற்கு; நடுகல் பீலி சூட்டி-அவர் தம் பெயரும் பீடும் பொறித்து நடப்பட்ட மறக்கல்லை மயிற்பீலி சூட்டி அணிசெய்து; துடிப் படுத்துத்

தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும் - துடியென்னும் தோற் கருவியை முழக்கி நெல்லினறு சமைத்த கள்ளோடு செம்மறி யாட்டுக் குட்டியையும் பலி கொடுத்தற்கிடனான; போக்கு அருங் கவலைய புலவு நாறு அருஞ்சுரம் - துணிந்து போதலரிய கிளை வழி களையுடைய புலால் நாறுகின்ற கடத்தற்கரிய பாலை நிலத்து வழியிலே போதற்கு; துணிந்து பிறள் ஆயினள் - துணிந்து போய் எமக்கு ஏதிலாள் ஒருத்தியே ஆயினள்; ஆயினும் - அங்ஙனம் அவள் ஆனாலும் என்க.

(வி - ம்.) வேலின் இலையையும் காம்பையும் மூட்டும் வாயிற் செருகிய கடையாணி ஈண்டுத் தாள் என்று கூறப்பட்டது; அக் கடை யாணியின் ஒரு முனையில் ஒரு மணி கட்டப்பட்டிருக்கும் ஆதலால் தனி மணியிரட்டுந்தாள் என மணியைத் தாளுக்கு அடையாக்கினார். கடிகை-காம்பு; பிடி. நுழை-கூரிய. குறும்பு-காவற்காடு; ஈண்டுக் கரந்தையார் ஆனிரை நிற்குங் காடு. குறும்படை என்னும் சொற்குக் கோட்டை என்று பொருள் கூறப்பட்டிருத்தல் ஆராய்ச்சிக் குரியது (பழைய வுரையாசிரியர் குறிப்புரை)

மழவர்-ஈண்டு வெட்சிமறவர். மழவர் கொண்டுபோன ஆனிரையைப் போர் முனையில் மீட்டுவந்து பின் வெட்சியாரால் வீழ்த்தப்பட்ட மறவர் என்பது கருத்து. மறவர் ஈண்டுக் கரந்தைமறவர் என்க. வீழ்ந்த மறவர், வில்லேர்வாழ்க்கை மறவர் விழுத்தொடைமறவர் எனத் தனித்தனி கூட்டுக வல்லாண்மைக்கு அறிகுறியாகிய பதுக்கை என்க. வல்லாண் மறவர் உடம்பிட்டு மூடிய பதுக்கையுமாம். பதுக்கை - கற் குவியல். பதுக்கையினின்ற கடவுட்டன்மையுடைய மறவர் ஆவியைப் பேண்மார் என்க. பேணுதல்-வழிபடுதல். நடுகல் - மறவர்பெயரும் பீடுமெழுதி நட்ட மறக்கல். தோப்பிக்கள் - நெல்லாற் சமைத்த கள். துரூஉ - செம்மறி. சுரத்திற் போதலைத் துணிந்து. பிறள் - நொதுமலள்.

## கச - கரு : துஞ்சா.........துணையே

(இ - ள்.) துஞ்சா முழவின் கோவல் கோமான் நெடுந்தேர்க் காரி - ஒழியாத முழவின் இன்னிசை முழங்குதலையுடைய திருக் கோவலூரையுடைய மன்னர் பெருமானாகிய நெடிய தேரையுடைய மலையமான் திருமுடிக்காரி எனனும் வள்ளற் பெருமானுடைய; கொடுங்கால் - கொடுங்கால் எனனும் ஊரின்கண்ணதாகிய; பெண்ணை அம்பேர் யாற்று முன்துறை - பெண்ணை என்னும் அழகிய பெரிய யாற்றினது இறங்குதுறையிடத்து; நுண் அறல் கடுக்கும் நெறி இருங்கதுப்பின் என் பேதைக்கு - நுண்ணிய கருமணலை ஒக்கின்ற நெறிப்பினையுடைய கரிய கூந்தலையுடைய என மகளை; அறியாத் தேஎத்து ஆற்றிய துணை - அவள் பண்டு சென்றறியாத பாலை நிலத்திலே செலுத்திய அவள் துணைவன் என்க.

(வி - ம்.) பாணர் முதலிய இரவலர் இடையறாது வருதலின் முழவின் ஒலியும் இடையறாது என்பாள் துஞ்சாமுழவு என்றார். கோவல் திருக்கோவலூர். இது காரியின் தலைநகரம் என்ப. கொடுங்கால்-காரி மன்னனுக்குரியதாய்ப் பெண்ணையாற்றங்கரையிலமைந்த ஒரு மூதூர். துறைமுன் - முன்துறை என மாறி நின்றது. அறல் - கருமணல் வரி. நெறி - நெறிப்பு. அஃதாவது நெளிவுடைமை. கருமணலின் அறல் போன்று வரிவரியாக நெளிந்துள்ள கூந்தல் என்றவாறு. தேஎம் - இடம். ஈண்டுப் பாலை நிலப்பரப்பு. பண்டு சென்றறியாத இடம் என்க. ஆற்றிய-செலுத்திய. துணை-காதற்றுணைவன். அவள் ஈன்று புறந்தந்த எம்மையும் உள்ளாது அன்பின்றி எனக்குப் பிறள் ஆயினள் ஆயினும் என்னெஞ்சம் அவள்பால் மகவன்பு மிக்கு வருந்தும் என்பது தோன்ற என்பேதை என்று உரிமை தோன்ற உரைத்தனள். "பெற்ற மனம் பித்துப் பிள்ளை மனங் கல்லு" என்னும் உலகுரை ஈண்டு நினைக.

கக - கந : அணிந்தணிந்து............தில்ல

(இ - ள்.) ஆர்வநெஞ்சமொடு-அவளைப் பெரிதும் விரும்பும் உள்ளமுடையவனாய்; அணிந்து அணிந்து - மலர் முதலியவற்றால் பன்முறையும் அழகுபடுத்தி அழகுபடுத்தி நோக்கி; ஆய்நலன் அளைஇ - பலரும் ஆராய்ந்துகண்டு நன்றென்னும் அவளது பெண்மை நலன்களை நுகர்ந்து; தன் மார்புதுணை ஆகத் துயிற்றுக தில்ல - தன் மார்பே அவள இனிது துயிலும் இடமாக வுதவித் துயிற்றிப் பேணுவானாக!; இதுவே என் விருப்பம், இதனை நிறை வேற்றித் தருக என்பதாம்.

(வி - ம்.) ஆர்வம் - விருப்பம். அணிந்தணிந்து என்பதற்கு நலம் பாராட்டி நலம் பாராட்டி மகிழ்வித்து எனினுமாம். நலன் - பெண்மை நலம். அளைதல் - நுகர்தல். மார்பு துணையாக என்றது மார்பைத் துயிலுமிடமாக உதவி என்றவாறு. தில்: விழைவுப் பொருட்டு.

இனி, இறைவனே! என் வேண்டுகோட்கிணங்கி அருள் செய்க. அஃதியாதெனின், என் மகள் எம்முள் உள்ளாள், நகர் புலம்பச் சுரம் போகத் துணிந்து பிறள் ஆயினள். அவள் அங்ஙனமாயினும் அவளை ஆற்றிய துணை அணிந்தணிந்து நலன் அளைஇத் தன் மார்பு துணையாகத் துயிற்றுக! இங்ஙனம் நிகழுமாறு அருள் செய்க! இதுவே யான் விரும்புவது என இயைபு காண்க. (கரு)

(பா - வே) அ. துடிபடத்.

## செய்யுள் கசா

திணை : மருதம்.

துறை : தலைமகள் பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனோடு புலந்து சொல்லியது.

(பா. வே ) தலைமகன் பரத்தையிற் பிரிந்து வரத் தலைமகள் புலந்து சொலலியது.)

(வி - ம்.) அஃதாவது - தலைவன் பரத்தையர் சேரியிற் றங்கி யிருந்து ஒருநாள் இல்லத்திற்கு வந்தானாக, தலைவி அவனோடு ஊடிக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு "அவனறி வாற்ற வறியு மாகலின்" எனவரும் நூற்பாவின்கண் (தொல் - கற் - சு) "புகன்ற வுள்ளமொடு புது வோர் சாயற்கு, அகன்ற கிழவனைப் புலம்பு நனிகாட்டி, இயன்ற நெஞ்சந் தலைப்பெயத் தருக்கி, எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கி னும்" எனவரும் விதிகொள்க.

பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்துக்
கொடுவா யிரும்பின் கோளிரை துற்றி
யாம்பன் மெல்லடை கிழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்தெழுந்
ரு. தரில்படு வள்ளை யாய்கொடி மயக்கித்
தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது
கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு
நாட்கய முழக்கும் பூக்கே ழூர
வருபுனல் வையை வார்மண லடைகரை
கம. திருமரு தோங்கிய விரிமலர்க் காவி
னறும்பல் கூந்தற் குறுந்தொடி மடந்தையொடு
வதுவை யயர்ந்தனை யென்ப வலரே
கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழிய
னாலங் கானத் தகன்றலை சிவப்பச்
கரு. சேரல் செம்பியன் சினங்கெழு திதியன்
போர்வல் யானைப் பொலம்பூ ணெழினி
நாரரி நறவி னெருமை யூரன்
றேங்கம ழகலத்துப் புலர்ந்த சாந்தி
னிருங்கோ வேண்மா னியறேர்ப் பொருநனென்
உ0. றெழுவர் நல்வல மடங்க வொருபகன்
முரசொடு வெண்குடை யகப்படுத் துரைசெலக்
கொன்றுகளம் வேட்ட ஞான்றை
வென்றிகொள் வீர ரார்ப்பினும் பெரிதே.

—மதுரை நக்கீரர்.

(உரை)

க - அ: பகுவாய்... .........ஊர

**(இ - ள்.)** பகுவாய் வராஅல் - பிளந்த வாயையுடைய வராஅல் என்னும் மீனகளுள வைத்து; பல்வரி இரும போத்து- பலவாகிய வரிகளையுடைய கரிய ஆண் மீனனது; கொடுவாய் இரும்பின கோள இரை துறறி - வளைந்த வாயையுடைய தூண்டிற் பொனைனிற் கோத்த தன்னைக் கொல்வதாகிய இரையை விழுங்கி; ஆமபல் மெல் அடை கிழிய கூம்புவிடு பல குவளை மலர் சிதையப் பாய்ந்து - அல்லியினது மெல்லிய இலைகள கிழியவும் குவிந்தநிலை தவிர்ந்து மலர்நத பலவாகிய குவளை மலர்கள் சிதைந்தழியும்படியும் பாய்ந்து; எழுந்து அரில்படுவள்ளை ஆய் கொடி மயக்கி - பின்னர்ப பிணக்கமுடைய வள்ளையினது நுண்ணிய கொடிகளைக் குலைத்து, தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது - அத் தூண்டிலையுடைய மீன்படுப்போன் இழுக்கவும் இழுபடாமல்; கயிறு இடுகதச் சேடபோல மதம் மிக்கு - மூக்கிற் கயிறிட்டிழுக்கப்படுகின்ற சினமுடைய எருது போன்று செருக்குமிகுநது; நாளகயம உழக்கும் - நாட்காலையிலே தெளிந்த நீரைக கலக்குதற் கிடனுன; பூககேழ் ஊர - மலாகள் பொருந்திய ஊரனே! ஈதொன்று கேள! எனக.

(வி - ம்.) வராஅல் - ஒருவகை மீன். "பெற்ற மெருமை புலிமரை புல்வாய்மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே;' (தொல்-மரபி-சக) 'நீர் வாழ் சாதியு ளறுபிறப் புரிய'' (சஉ) எனவரும் விதிபற்றி ஈண்டு வராஅல் மீனின ஆண்பால் போத்தெனப்பட்டது. பேராசிரியரும் நீர் வாழ் சாதி ஆறனுள் இவ் வராஅல் மீனையும் ஒன்ருகக் கூறி அதற்கு இந்த அடியையே எடுத்துக் காட்டினார். கொடுவாய் இரும்பு என்றது தூண்டில் முள்ளினை.

இனி இவ்வுள்ளுறையைப் பழையவுரையாசிரியர்—"வேட்டுவன் தூண்டிலிற கோதத இரையை இலையிலெகிழ்க் கிடந்த (வாளை ?) வராஅல் நுகர்ந்து தூண்டிற றுவககு விடாது இலைகிழிய எழுந்து குவளைப்பூ முரியப் பாய்ந்து அக் குவளையைச் சூழ்ந்த வள்ளையை மயக்கி நாட் காலகதே எல்லாரும் காணக் கயத்தை உழக்குகின்றுற் போல, நின் பாணனுடைய நெஞ்சுவலிதாய்ப் புறம்பு மெல்லியதாயிருக்கின்ற இன்சொல்லாலே அப் பரத்தையர் நலத்தை நுகர்ந்த, அப் பரத்தையர் தாய்மார் நெஞ்சு வருந்த அவ்விடத்தை விடாத அன்புடனே போந்து, நாங்கள் நினது நிறங்கண்டு வருந்த இங்கே வந்து குவளைமலர் சூழ்ந்த வள்ளைபோலும எங்கள் சுற்றத்தார் மயங்க அவர்களை வருத்தி ஊரையெல்லாம் இப்படி எல்லாருமறியக் கலக்குவா ெனுருவனல்லையோ? என்றவாறு'' என இனிதின் விரித்தோதுவர்.

கொடுவாய் இரும்பு என்றது இதன்கணமைந்த உள்ளுறைப்பொருளில் பாணன் வஞ்சக மொழிக்கு உவமை. கோள் இரை துற்றி என்றது பரத்தையர் நலனைத்தலைவன் நுகர்ந்ததற்குவமை. ஆம்பல் அடைகிழிய

என்றது பரத்தையர் தாயர் நெஞ்சு வருந்தியதற்குவமை. குவளை தலைவிக்கும் அரில்படுவள்ளை சுற்றத்தார்க்கும் உவமை. கயம் உழக்குதல் - தலைவன் ஊராரைக் கலக்கமுறச் செய்தற்குவமை.

கூ - கஉ: வருபுனல்..............அலரே

(இ - ள்.) வருபுனல் வையை வார் மணல் அகன்துறைத் திருமருது ஓங்கிய விரிமலர்க் காவின் - புதிதாக வெள்ளம் வருகின்ற வையைப் பேரியாற்றினது நெடிய மணற்பரப்பமைந்த அகன்ற நீராடு துறை மருங்கே அழகிய மருத மரங்கள் உயர்ந்து நிற்கின்ற மலர்ந்த பூம்பொழிலினூடே; நறும்பல் கூந்தல் குறுந்தொடி மடந்தையொடு - நீதான நறிய பலவாகிய கூந்தலையும் குறிய வளையலையும் உடையாளொரு பரத்தை மகளோடு, வதுவை அயர்ந்தனை என்ப அலரே - மணவிழாச் செய்தாய் என்று ஊர் மாக்கள் கூறுவர்; அப் பழிச் சொல் தானும்; என்க.

(வி - ம்.) வருபுனல் என்பது புதிதாக வருகின்ற வெள்ளம் என்பதுபட நின்றது. அகன்றுறைத் திருமருதோங்கிய விரி மலர்க்கா என சண்டு நக்கீரர் கூறுகின்ற துறை. வையையாற்றின்கண் மதுரை நகரத்தை அண்மியுள்ள துறைகளுள் வைத்துத் தலைசிறந்த துறை என்பது பரிபாடலாலும் சிலப்பதிகாரத்தாலும் உணரப்படும். என்ப - என்று கண்டுவந்தோர் கூறுப. அலர் - பழிச்சொல்.

கங - உங: கோய்சுவல்...........பேரிதே

(இ - ள்.) கொய்சுவல் புரவிக் கொடித்தேர்ச் செழியன் - கத்தரிகையால் கொய்து மட்டஞ் செய்யப்பட்ட பிடரிமயிரையுடைய சிறந்த குதிரைப்படைகளையும கயல் பொறித்த கொடியுயர்த்தப் பட்ட தேர்ப்படைகளையும் உடைய பாண்டியன நெடுஞ்செழியன் என்பான்; ஆலங்கானத்து அகன் தலை சிவப்ப - தலையாலங்கானம் என்னுமிடத்தே அகன்ற போர்க்களம் முழுதும் குருதியாற் சிவக்கும்படி; சேரல் செம்பியன் சினங்கெழு திதியன போர்வல் யானைப் பொலம்பூண் எழினி நார் அரி நறவின எருமை ஊரன் தேம கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின் இருங்கோ வேள்மான் இயல் தேர்ப்பொருநன் என்று எழுவர் நல்வலம் அடங்க-சேரனும் சோழனும் வெகுளிமிக்க திதியனும் போர்த்தொழில் வன்மையுடைய யானைப படையையுடைய பொன்னணிகலன் அணிந்த எழினியும் பனநாரால் அரித்துத் தூய்மை செய்யப்பட்ட கள்ளை மிகுதியாக உண்ணும் எருமையூரனும தேன் மணக்கும் மார்பிடத்தே பூசிப் புலர்ந்த சந்தனத்தையுடைய இருங்கோவேண்மானும் விரைந்தியங்கும தேரினின்று செய்யும் போர் வன்மையுடைய பொருநனும் என்று கூறப்பட்ட ஏழு மன்னர்களும் அதுகாறும் எய்தியிருந்த அழகிய வெற்றிப்புகழ் அனைத்தும் ஒருங்கே

அழியும்படி; ஒருபகல் முரசொடு வெள்குடை அகப்படுத்து - ஒரு நாளினும் வைத்து ஒரு முழுத்தப் பொழுதைக்குள் அவர்தம் முரசங்களையும் வெள்ளிய குடைகளையும் வென்று கைபபற்றி; உரைசெல - தான் கூறிய வஞ்சினமொழி தப்பாது நடந்தேற; கொன்று - அவ்வெழுவரையும் ஒருங்கே கொனறு குவித்து; உரை செல - தனது வெற்றிப்புகழ் உலகனைத்தும் பரவ; களம் வேட்டஞான்று - மறக்கள வேள்வி செய்த பொழுது; வீரர் ஆர்ப்பினும் பெரிதே - அவ் வெற்றிக்குக் காரணமான பாண்டியன் போர் மறவர் எடுத்த மகிழ்ச்சியாரவாரத்தினுங் காட்டில் சாலப் பெரிதுகாண்! இங்ஙனமாகவும நீ யாதும் தவறிலேன் என்கின்றனை; இங்ஙனம் பொய் கூறாதே கொள்! என்பதாம்.

(வி - ரை.) செழியன் – தலையாலங்கானத்துப் போர் வென்ற நெடுஞ்செழியன். அகன்றலை குருதியாற் சிவப்ப என்க. சேரனும் செம்பியனும் முடிகெழுவேந்தர்; திதியன் முதலிய ஐவரும் வேளிர் குலத்துக் குறு மன்னர்கள் என்ப வரலாற்று நாலோர். ஒருபகல் என்றது ஒரு நாளில் ஓரே முழுத்தத்தில் என்றவாறு. நெடுஞ் செழியனை இப்பகைமன்னர் இகழ்ந்தனர் என்று ஓர்றதால் உணர்ந்துழி தான் இளையனுதலையும் எண்ணாது கூறிய வஞ்சினம் புறநானூற்றில் ௭௨-ஆஞ் செய்யுளாக இன்றும் நின்று நிலவுகின்றது. வீரச்சுவை கெழுமிய இச் செய்யுளில் அவன்,

"உறுதுப் பஞ்சாது உடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ(டு)
ஒருங்ககப் படேஎ னாயின் பொருந்திய
என்னிழல் வாழ்நர் செல்நிழற் காணது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக!"

என்று முழங்கிய மறவுரைகளை அவ்வவையிலே உடனிருந்து செவி மடுத்தமையின் ஆசிரியர் நக்கீரர் அவன் கூற்றையும் "பொன் போற் போற்றி" "முரசொடு வெண்குடை அகப்படுத்து உரை செல" என்றமைப் பாராயினர். ஈண்டு 'உரை' என்பது தான் கூறிய சூளுரை எனவும் புகழ் எனவும் இருபொருளும் கொண்டு நிற்றலின், அகப்படுத்து உரை செல என்புழித் தன் சூளுரைதப்பாது நடைபெற எனக் கூறிப் பின்னும் களம் வேட்டஞான்றை என்புழியும் கூட்டிப் புகழ்பரவ எனவும் கூறிக்கொள்க.

" இங்ஙனமாகவும்...............பொய்கூறாதேகொள் " என்பது குறிப்பெச்சப் பொருள்.

இனி இதனை, ஊர நீ காவில் வதுவையயர்ந்தனை என்ப அவ்வலர் வீரர் ஆர்ப்பினும் பெரிதுகாண்! இங்ஙனமாகவும் நீ பொய் கூறாதே கொள்! எனவியைத்துக் கொள்க.

பா - வே. ௪0. வரிமலர். ௧௧. மகளிரொடு.                    (௩௭)

## செய்யுள் ௯௭

**திணை :** பாலை.

**துறை :** (௧) தலைமகள் வன்புறை யெதிரழிந்து சொல்லியது.

(௨) பிரிவுணர்த்திய தோழி சொல்லியதூஉமாம்.

(து - ம்.) (௧) அஃதாவது: தலைவன் வினைவயிற் பிரிந்து போயவன் குறித்த பருவத்தே மீண்டுவாராமையால் தலைவி பெரிதும் பிரிவாற்றாது வருந்தினள். அது கண்ட தோழி அவர் வருந்துணையும் ஆற்றியிருத்தலே நினக்கறம் என்று வற்புறுத்திய பொழுது தலைவி தோழிக்கு நெஞ்சழிந்து கூறியது என்றவாறு.

(௨) அஃதாவது-தலைவன் வினைவயிற் பிரிவான் என்பதனைக் குறிப்பாலுணர்ந்த தோழி அதனைத் தலைவிக்கறிவுறுக்குங்கால் அவள் குறிப்புணருமாற்றாற் கூறியது என்றவாறு.

(இ - ம்.) (௧) இதனை "எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இலவே" (தொல்-அகத்-௪௫) எனவரும் விதியினால் அமைத்துக்கொள்க.

(இ - ம்.) (௨) இதனை, "தலைவரும் விழுமம்" எனவரும் நூற்பாவின்கண், (தொல்-அகத்-௪௨) இவையெல்லாம் இயல்புற நாடின் ஒன்றித் தோன்றுந் தோழி மேன என்பதனால் அமைத்துக்கொள்க.

மறந்தவ ணமையா ராயினுங் கறங்கிசைக்
கங்கு லோதைக் கலிமகி ழுழவர்
பொங்கழி முகந்த தாலி னுண்டுகண்
மங்குல் வானின் மாதிர மறைப்ப
௫. வைகுபுலர் விடியல் வைபெயர்த் தாட்டித்
தொழிற்செருக் கனந்தர் வீட வெழிற்றகை
வளியொடு சினைஇய வண்டளிர் மாஅத்துக்
கிளிபோற் காய கிளைத்துணர் வடித்துப்
புளிப்பத னமைத்த புதுக்குட மலிர்நிறை
௧௦. வெயிலவேரி நிறுத்த பயிலிதழ்ப் பசுங்குடைக்
கயமண்டு பகட்டிற் பருகிக் காண்வரக்
கொள்ளொடு பயறு பால்விரைஇ வெள்ளிக்
கோல்வரைந் தன்ன வாலவிழ் மிதவை
வாங்குகை தடுத்த பின்றை யோங்கிய
௧௫. பருதியங் குப்பை சுற்றிப் பகல்செல
மருத மரநிழ லெருதொடு வதியுங்
காமர் வேனின் மன்னிது
மாணல நுகருந் துணையுடை யோர்க்கே.

—விற்றூற்று மூதெயினனார்.

(உரை)

க : மறந்தவண......... ஆயினும்

(இ - ள்.) மறந்து அவண் அமையார் ஆயினும் - ஏடீ! தோழி நம் பெருமான் நம்மை மறந்து அவ் வேற்று நாட்டிலேயே தங்கிவிடார் என்பதனை யானும் அறிகுவல் காண்! அங்ஙனமாயினும் என்க.

(வி - ம்.) வேனிற் பருவத் தொடக்கத்திலேயே யான் மீண்டு வருகுவல் அதுகாறும் ஆற்றியிருந்திடுக! என்று பருவம் குறித்துப் போன தலைவன் அப் பருவ நிகழ்வினும் மீண்டு வாராமையால் தலைவி ஆற்றாமை மீதூர்ந்து வருந்துவாளை, தோழி பருவம் கடப்பினும் நம் பெருமான் வினைமுற்றியவுடன் விரைந்து வருவர். வாராமல் அங்கேயே தங்கிவிடமாட்டார் காண்! வருந்துணையும் நீ ஆற்றியிருக்க வேண்டாவோ? என்று கழறிக் கூறியவழி, தலைவி அவ்வுண்மையை நீ கூறித்தான் யான் தெரிந்துகொள்ள வேண்டுமோ! அதனை யானும் அறிவேன் காண்! நீ வாளாவிரு என்பாள், 'மறந்தவண் அமையார்' என்ற தோழி கூற்றையே அவளை இகழ்தற் பொருட்டு வழிமொழிந்தவாறும்.

ஆயினும் என்றது அவர் வினைமுற்றியவுடன் வருவாராயினும் என்பதுபட நின்றது. இனி, தன் ஆற்றாமைக்குக் காரணம் கூறுகின்றாள் தலைவி.

௧௭ - ௧௪ : இது......... உடையோர்க்கே

(இ - ள்.) இது - இப்பொழுது நிகழுமிப்பருவம் யாதென்று நினைதி?, மாண் நலம் நுகரும் துணை உடையோர்க்கு - மாண்புடைய தமது பெண்மை நலத்தைச் செவ்வி தேர்ந்து நுகரும் தமது துணைவர் உடன் உறைதலையுடைய திருவுடைய மடந்தையர்க்கு மட்டுமே ஆற்றியிருத்தற்குரிய, என்க.

(வி - ம்.) நலம்-பெண்மை நலம். அது கண்டு கேட்டுண்டுயிர்த்து உற்றறிதற் கியன்ற ஐம்புலப் பேரின்பப் பிழம்பாகிய காமவின்பம் என்க.

க - ௧௭ : கறங்கிசை......... வேனின்மன்

(இ - ள்.) இசை கறங்கு கங்குல் - ஊர்தோறும் ஆடலரங்கினும் பாடலரங்கினும் இன்னிசை முழங்குகின்ற இரவின்கண்; கலி மகிழ உழவர் - களனுண்டமையாலே மிக்க களிப்பினையுடைய உழுதொழிலாளர்; ஓதை-ஆரவாரத்தோடு, வைகு புலர் விடியல் வை பெயர்த்து ஆட்டி - இரவெல்லாம் தங்கிய இருள் புலருகின்ற விடியற் காலத்திலே வைக்கோல் போர்வினைப் பிரித்துக் கடாவிட்டுக் குவித்த; பொங்கழி முகந்த - தூற்றுப்

பொலியினின்றும் கூடைகளால் முகக்கப்பட்ட நெல்லோடு விரவிய; தாஇல் நுண்துகள் - வலியற்ற நுண்ணிய கூளங்கள் எழுந்து; மங்குல் வானின் மாதிர மறைப்ப - இருண்ட முகில்கள் போன்று திசைகளை மறைக்கும்படி தூற்றி நெல்லைக் குவித்தபின்னர்; தொழில் செருக்கு அனந்தர் வீட - தொழிலால் வந்த இளைப்பும் கள்ளுண்டமையால் வந்த மயக்கமும் துயில் மயக்கமும் ஒருங்கே தீரும்படி; வளியொடு சினைஇய எழில்தகை வண் தளிர் மாஅத்துக் கிளி போல் காய கிளைத் துணர் வடித்து - இனிய தென்றற் காற்றினால் தோற்றுவிக்கப்பட்ட பேரழகுடைய வளவிய தளிர் களையுடைய மாமரத்தினது கிளியின் உருவம் போன்ற உருவ முடைய காய்களையுடைய கிளையிடத்தே அக்காய்களைக் கொத்தாகப் பெயர்த்தெடுத்து; புதுக்குடம் - புதிய மட்குடத்திலிட்டு; புளிப் பதன் அமைத்த - இனிய புளிப்புச் சுவையுண்டாகும்படி பதப் படுத்திய; மலிர் நிறை - அப் புதுக்குடத்தினூடே அக் காய்களி னின்றும் பெருகி நிரம்பிய சாற்றினை; வெயில் வெரிந் நிறுத்த பயில் இதழ்ப் பசுங்குடை - வெயிலின்கண் முதுகுப்புறம் வதங்கு மாறு வைத்தமையால் தாம் வேண்டியவாறே வளையும பனையோலை யாற் கோலிய பசிய குடையாகிய உண்கலத்திற் பெய்து; கயம் மண்டு பகட்டில் பருகி - குளத்தின்கண் நீரின்கண் வாய்வைத்து மிகுதியாகப் பருகுகின்ற எருமைக்கடாக்களைப் போன்று வாயால் வேண்டுமளவு பருகிய பின்னர்; காணவரக் கொள்ளொடு பயறு பால் விரைஇ - போதுமெனத் தோன்றுமளவு கொள்ளும் பயறும் பாலோடு விரவிச் சமைத்த; வெள்ளிக்கோல் வரைந்தன்ன வால் அவிழ் மிதவை - வெள்ளிக்கம்பியை ஓரளவாகத் துணித்துப் போகட்டாற் போன்ற வெள்ளிய பருக்கைகளையுடைய கூழையும் வயிறாரப் பருகி; வாங்குகை தடுத்த பின்றை - இனி வேண்டா என்று வளைந்த கையாற் றடுத்தபின்னர்; மருதமர நிழல் ஓங்கிய பருதி அம்குப்பை - மருதமரத்து நிழலிலே உயர்ந்த வட்டவடிவிற்றாகக் குவித்துவைத்த அழகிய நெற்குவியலைச் சூழ்ந்து; எருதொடு வதியும - தம் எருதுகளோடே தங்குதற்குக் காரணமான; காமர் வேனில் மன் - அழகிய இளவேனிற் பருவங்காண்' இப் பருவத்தே பிரிந்துறைவோர் ஆற்றியிருத்தலும் கூடுமோ? என்பதாம்.

(வி - ம்.) இப்புலவர் பெருமான் இளவேனிற் பருவத்திலே உழவர் தொழிலைப் பட்டாங்குப் பாடியிருத்தல் மிகவும் இன்பந்தருவதுணர்க. தமிழகத்தில் ஊர்கடோறும் இரவிலே கூத்தாட்டரங்கும் இசை யரங்கும் நிகழ்வனவாம். இவற்றின் இன்னிசை முழங்குதல் கருதி 'கறங்கிசைக் கங்குல்' என்றான். இவ்விசையும் பிரிந்துறைவார்க்குப் பெருந்துன்பம் ஆம். ஆகவே இவ் வடைமொழியானும் தனித்துறை வோர் ஆற்றியிருத்தல் கூடாமைக்குக் குறிப்பாக ஓரேதுக் கூறினமை யுணர்க. கலிமகிழ் என்றது மிகையான களிப்புடைய என்றவாறு

எனவே அது கள்ளுண்டு களித்தலைக் குறித்துநின்றது. பொங்கழி என்பது தூற்றாப் பொலிக்குப் பெயர் என்பர் பழையவுரையாசிரியர். பொங்கு அழி எனக் கூறிப் பெரிய வைக்கோல் போர் எனக் கொண்டு அதற்கியையப் பொருள் கூறலுமமையும். வை-வைக்கோல். பெயர்த்து ஆட்டி என்றது - முன்னிட்ட போர்வைப் பிரித்துக் கடா வடித்துக் கையால் அலைத்து என்றவாறு. தொழிலும் செருக்கும் அனந்தரும் வீட எனா உம்மை விரித்துத் தொழிலால் உண்டான இளைப்பும் கள்மயக்கமும் துயில் மயக்கமும் ஒருங்கே தீர என்க. 'தொழிற் செருக்கால் வந்த மயக்கம்' என்னும் பழைய உரை பொருந்தாது. தென்றல் தோன்றும் பருவத்தே புதிதாகத் தளிர்த்தலின் தென்றலொடு என உடனிகழ்ச்சிக்குரிய உருபு கூறினார் எனினுமாம். அல்லது ஏதுப் பொருட்டாகக் கொண்டு ஆல் உருபாகத் திரித்துக் கோடலுமாம்.

துணர்வடித்து - கொத்தாகப் புய்த்து எடுத்து. புதுக்குடத்திட்டுப் புளிப்பதன் வர அமைத்து அப் புதுக்குடத்துள் ஊறிப் பெருகி நிறைந்த சாறு என்க. வெரிந் இறுத்த எனக் கண்ணழிக்க. இறுத்த இதழ் பயில் இதழ் எனத் தனித்தனி யியைக்க. இதழ் ஈண்டு ஓலை மூரியாமல் பதப்படுதற்கு வெயிலிற் போகட்டு வதங்கவைத்தமையால் வேண்டியாங்கு வளையும் ஏடு என்பார், பயில் இதழ் என்றார். மண்டுதல் - ஈண்டு ஆர்வத்தோடு மிகுதியாகப் பருகுதலைக் குறித்து நின்றது. இந்நாளினும் இவ் வழக்குண்டு. காண்வர - என்றது போதிய அளவுண்டாக எனாஉம் பொருட்டு. இதற்கிது போதுமென்று தோன்றுமளவு விரவி எனபது கருத்து. அவனுக்குப் போதியது என்பதை அவனுக்குக் காணும் என்னும் வழக்குண்மையுமுணர்க. இஃது உணராதார் அழகு பொருந்த என்றார். மிதவை - கூழ் கொள் பயறுபால் இவற்றை உலையில் அரிசியொடு விரவி அட்ட கூழ் என்பது கருத்து. அவிழ் - சோறு. அரிசி வெந்து விரிதலால் அப் பெயர் பெற்றது. இதற்கு 'வெள்ளிக் கம்பியின் துணுக்குகள் உவமை. குடையில் வாய்வைத்துக் கூழுண்ணுதலால் இனி வேண்டா என்று வாயாற் கூறலாகாமையின் வாங்கு கையாற்றடுத்தல் வேண்டிற்று. இஃதியற்கை நவிற்சி. பருதி - வட்டம். ஞாயிறு போன்ற அழகிய குவியல் என்னல் மிகை. தூற்றிய நெல்லை மருதநிழலிற் குவித்து அக் குவியலைச் சூழ வதிவார் என்க. இஃதுணராதார் நெற் கூடாகச் சுற்றி என்றார். கடாவிட்ட நெல்லைக் களத்திலேயே நெற் கூடாகச் சுற்றிவைப்பது வழக்கமில்லை. நெற்குவியலை எருது முதலியன தின்னாமைக்குக் காவலாகச் சூழ வதிவர் என்க. உழவர் தாமும் இப் பருவத்தில் தனித்துறையார் எருதொடு வதிவர் எனவும் ஒருபொருள் தோன்றுதல் உணர்க. இக் கருத்தையே பழையவுரையாசிரியர் எருதொடு வதிதல் அசதி கூறியது என்று குறித்தனர். அக் குறிப்புரையில் அசதி என்பதன்கண் அகரவுயிர் ஏட்டுப்படியில் இறந்துபட, சாதி கூறியது என்றும் எருதொடு வதியும் என்றது அவர்கள் இயல்பு கூறியபடி என்றும் தத்தமக்குத் தோன்றியவாறு வரைந்தாரும் உளர்.

இனி, காமர் வேனில் என்பதற்கு - துணையுடையோர்க்கும் காமம் வருதற்குரிய வேனில் எனினுமாம். இதற்கு - காமர் என்பது காமம் வரும் என்னும் தொடரின் விகாரம் என்று கொள்ளல் வேண்டும். அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்து (அந்திமாலை......காதை ௨௦-ல்)

காமரு குவளை என்பதற்கு விளக்கமாக: காமம் வருமென்பது விகாரத்தாற் காமரு என நின்றதென்பதூஉம், இக் கருத்தை வலியுறுத்தும். இதனால், ''அரிதாற்றி அல்லல் நோய் நீக்கிப் பிரிவாற்றிப் பின்னிருந்து வாழ்வார் பலர்'' யாம் அத்தனை வன்கண்மையுடையேம் அல்லேம். ஆதலின் ஆற்றுகிலேம் என்று வன்புறை எதிரழிந்து கூறினளாயிற்று.

இனி, இதனை, (துறை - க) காதலர் மறந்து அவணமையார் ஆயினும், இது மாணலம நுகருந் துணையுடையோர்க்கு இசை கறங்குங் கங்குலும் உழவர் மறைப்ப ஆட்டி விடப் பருகித் தடுத்த பின்றை மருதமரநிழல் எருதொடு வதியும காமர் வேனின் மன். இப் பருவத்து யாம் ஆற்றியிருக்கும் வன்கண்மையுடையேம் அல்லேம் என்றியைபு.

இனி, (துறை. உ) தோழிகூற்றாயின் காதலர் பிரிவார்போலும் துணையுடையோர்க்கு இது காமர் வேனில் ஆதலால் காதலர் பிரிந்து போயினார் நம்மை மறந்து அவண் அமையார் என இயைத்துத் தோழி தலைவன் பிரிவுணர்த்தி வேனிலை ஏதுவாக்கி அவர் விரைந்து மீள்வர் என்று அறிவித்தாள் என்று கொள்க.

(பா - வே.) க. ணமைகுவ. கக. கோலறை. (கஎ)

## செய்யுள் கஅ

திணை: குறிஞ்சி.

துறை: (க) தோழி தலைமகன் குறைகூறியது. (உ) பகலே சிறைபுறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியதூஉமாம். (ங) தோழி குறிபெயர்த்திட்டுச் சொல்லியதூஉமாம்.

(து - ம்.) (க) அஃதாவது: தலைவன் வரைதற் கருத்தின்றிக் களவொழுக்கமே காமுற்றொழுகா நிற்பத் தினைமுற்றியதனால் கொய்யப்பட்டுத் தலைவியும் தோழியும் காவல் ஒழிந்து இல்லம் புக்கனர். தலைவன் தினைப்புனத்தே அவரைக் காணாமையால் இரவில் மனைப் படைப்பை மருங்கு பிறர் அறியாவண்ணம் சென்று நின்றான். அது கண்ட தோழி அதுகாறும் வரைந்து கொள்ளாமையாகிய அவன் பிழையை அவன் உணர்ந்து கொள்ளும் பொருட்டுத் தானொரு பிழை செய்தாள் போன்று தன் நெஞ்சிற்குக் கூறுவாளாய் அவன் கேட்பக் கூறியது என்றவாறு. (துறை. உ) பகற்குறியிடத்தின் மருங்கு அவ்வாறு தலைவன் வந்துழித் தலைவிக்குக் கூறுவாள் போன்று அவன் கேட்பக் கூறியது என்றவாறு (துறை. ங) தினைகாவலொழிந்தமையால் அதுகாறும் பகற்குறியிடத்தே வந்தானை, இனி யாம் இல்லம் புகுதும்; இரவுக் குறிக்கண் வருக! என்று கூறுவாள் அவன் ஒருநாள் பகற்குறி மருங்கு வந்துழித் தோழி தன் னெஞ்சிற்குக் கூறுவாள் போன்று, அலலது தலைவிக்குக் கூறுவாள் போன்று அவன் கேட்பக் கூறியது என்றவாறு.

இவற்றிற்கு எல்லாம், 'நாற்றமுந் தோற்றமும்' எனவரும் நூற்பாவின்கண் (தொல்-கள-உங) ''களனும் பொழுதும்............ அனைநிலைவகையான் வரைதல் வேண்டினும்'' என்னும் விதியே அமையும்.

இனி, ஆசிரியர் நச்சினார்க்கினியர் இதனைத் தலைவி கூற்றாகக் கொண்டு (தொல் - கள - ௨௦) "மறைந்தவற் காண்டல்" என வரும் நூற்பாவின்கண் "தன்குறி தள்ளிய தெருளாக் காலை வந்தவன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித் தன்பிழைப்பாகத் தழீஇத் தேறலும்" எனவருந் துறைக்கு எடுத்துக்காட்டி "இதனுள் ஊசன மாறுதலும் புனமும் தன் குறிதள்ளிய இடன்; 'மறந்திசின்' என்றது தெருளாக் காலை; கூடுங்கண்ணது ஊறேன உணர்ந்ததாமையின் இடையீடு படுவதன்றி அவன்கண் தவறுண்டோவெனத் தன் பிழைப்பாகத் தழீஇயினாள். இது சிறைப்புறமாக வரைவுகடாயது" என விளக்கியும் கூறியுள்ளார்.

விரியிணர் வேங்கை வண்டுபடு கண்ணியன்
றெரியிதழ்க் குவளைத் தேம்பாய தாரன்
னஞ்சிலை யிடவ தாக வெஞ்செலற்
கணைவலந் தெரிந்து துணைபடர்ந் துள்ளி
௫. வருதல் வாய்வது வான்றோய் வெற்பன்
வந்தன னாயி னந்தளிர்ச் செயலைத்
தாழ்வீ லோங்குசினைத் தொடுத்த வீழ்கயிற்
றூசன் மாறிய மருங்கும் பாய்புட
னாடா மையிற் கலுழ்பில தேறி
௧௦. நீடிதழ் தலைஇய கலுழ்கண் பெயனீலங்
கணையெனன மலர்ந்த சுனையும் வண்பறை
மடக்கிளி யெடுத்தல் செல்லாத் தடக்குரற்
குலவுப்பொறை யிறுத்த கோலிலை யிருவி
தொய்யதோழி புனமு நோக்கி நெடிதுநினைந்து
௧௫. பைதலஞ ரெயரலன் கொலலோ வவதேய்
கயவெள் ளருவி சூடிய வுயர்வரைக்
கூஉங்க ணஃதெம் மூரென
வாங்கதை யறிவுறன் மறந்திசின் யானே.

—வடம வண்ணக்கன் பேரிசாத்தனார்.

(உரை)

க - ௫ : விரியிணர்............வெற்பன்

(இ - ள்.) வான் தோய் வெற்பன் - அந்தோ! வானைத் தீண்டுகின்ற மலைகளையுடைய நடபெருமான்; விரி இணர் வேங்கை வண்டுபடு கண்ணியன் - இதழ்கள் விரிந்த வேங்கையினது நாண்

மலராற் புனைந்த வண்டுகள் வந்து வீழ்கின்ற தலைமாலை அணிந்த வனாய்; தெரி இதழ்க் குவளைத் தேம்பாய் தாரன் - ஆராய்ந்து எடுத்துத் தொடுத்த அழகிய இதழ்களையுடைய குவளை மலரா னியன்ற தேனை துளிக்கும் தாரணிந்த மார்பினனாய்; அம்சிலை இடவது ஆக - அழகிய விற்படை இடது தோளின் கண்ணதாய்த் திகழ; வெம் செலல் கணை வலம் தெரிந்து - விரைந்து பாயும் அம்பினை ஆராய்ந்து வலக்கையிற் பற்றிக் கொண்டு வேட்டமேற் கொண்டு வருவானைப் போன்று; துணை படர்ந்து உள்ளி - தன் காதற்றுணைவியாகிய எம் பெருமாட்டியைக் காண்டல் கூடுமோ? கூடாதோ? என்னும் ஐயத்தால் வருந்தி அவளையே நினைந்து; வருதல் வாய்வது - இற்றை நாளும் வருதல் தப்பாது;

(வி - ம்.) உயர்குடித் தோன்றலாகிய தலைவன் களவின்பமே காமுறுகின்றான் அல்லது அக்குடிப் பண்புக்கேற்ப வரைந்து கொண்டு அறத்தாற்றின் வாழ எண்ணுகிலன் என்பது தோன்ற அவன் குடிச் சிறப்பினை அவன் மலைக்கேற்றி வான்றோய் வெற்பன் என்றாள். இனி, தலைவன் தன்னை மதியுடம்படுத்த வந்தநாள் உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவானாய் மடந்தை நல்லீர் கண்டேன் கையம்பு பட்ட புண்ணொடு யான் ஒன்று போந்ததோ? களிறு ஒன்று போதக் கண்டீரோ? என்று வேட்டைமேல் விரைவான் போன்று வில்லொடுங் கணையொடுங் கண்ணியும் சூடித் தாரும் அணிந்து வந்தவாறே இற்றை நாளும் வருவான் என அசதியாடுவாள் கண்ணியன் தாரன் சிலை இடவதாகப் படர்ந்து உள்ளி வருதல் தப்பாது என்கின்றாள். அவ்வாறு வருதல் மிகை. வரைந்து கோடலே இற்றை நாள் செயற்பாலது என்பது இக்கருப்பொருட்புறத்தே தோன்றிய இறைச்சிப் பொருளாம் என்று நுண்ணிதின் உணர்க. இங்ஙனமின்றேல் அவன் வரவினை இங்ஙனம் விதந்தோதுதல் வீண் ஆமென்க. படர்ந்துள்ளி என்றது காணுவங் கொல்லோ? காணேங் கொல்லோ? என்றெழும் ஐயவுணர்வால் பலபடநினைந்து வருந்தித் தலைவியின் நலனுகரக் கருதி என்பது பட நின்றது. வாய்வது - தப்பாது.

கூ - அ : வந்தனனாயின்...........மருங்கும்

(இ - ள்) வந்தனன் ஆயின் - அவ்வாறு வாராமை நன்று மன்! வந்தால்; அம் தளிர்ச் செயலைத் தாழ்வு இல் ஓங்குசினைத் தொடுத்த வீழ்கயிற்று ஊசல் - அழகிய தளிரையுடைய அசோக மரத்தினது தாழ்தல் இன்றி உயர்ந்துள்ள கிளையின்கண் யாம் கட்டிய வாளா தாழ்ந்து தூங்குகின்ற கயிற்றையுடைய ஊசலும், பாய்பு உடன் ஆடாமையின் மாறிய மருங்கும் - யாம் விரைந்து அஃது ஆடுந்தோறும் அதனோடு ஒருங்கு ஆடாமையினால் அந் நிகழ்ச்சி மாறிய அம் மரத்தின் பக்கங்களையும் பார்த்துப் பின்னர் என்க.

(வி - ம்.) செயலை - அசோக மரம். தாழ்வு இல் ஓங்குசினை என்றான் ஊசல் ஆடுங்கால் வளைந்து தாழ்தலில்லாத வன்கிளை என்றற்கு-

இதன்கண்ணும் தலைவன் போன்று களவொழுக்கத்திலேயே தாழ்த்தலில்லாத வன்மையுடைத்தெனப் பொருட்புறத்தே இறைச்சி தோன்றுதலறிக.

௮ - ௧௪ : பாய்புடன்............நினைந்து

(இ - ள்.) உடன் பாய்பு ஆடாமையின் கலுழ்புஇல தேறி - யானும் தலைவியும் (யாமிருவரும்) ஒருங்கே நீரினுட் பாய்ந்து விளையாட்டயர்தலொழிந்தமையால் கலங்காதனவாய்த் தெளிந்து, நீடு இதழ தலைஇய கவின்பெறும் நீலம் கண் என மலர்ந்த சுனையும் - நீண்ட இதழ்களை பொருந்திய தனால் அழகு பெற்றுள்ள நீல மலர்கள் இளமகளிர் கண்கள் போன்று மலர்ந்துள்ள சுனைகளையும், வல்பறை மடக்கிளி எடுத்தல் செல்லாத் தடம் குரல் குலவுப பொறை இறுத்த கோல்தலை - வலிய சிறகுகளையுடைய இளங் கிளிகள் தாமும் கொய்து சுமந்து செல்ல வியலாத பெரிய கதிர்களாகிய வளைந்த சுமையைத் தம்மையுடையாருக்குக் கைமாறாகக் கொடுத்து விட்டமையாலே நிமிர்ந்து வறுங்கோல் மாத்திரையான நுனியையுடைய; கொய்து ஒழி இருவிய புனமும் நோக்கி - எமரால் கதிர் கொய்யப்பட்ட இருவியையுடைய தினைப்புனமும் ஆகிய இடங்களைக் கூர்ந்து நோக்கி; நெடிது நினைந்து - அவ்விடங்களிலே எம் பெருமாட்டியைக் (நின்னைக்) காணமாட்டாமையாலே ஏக்கறவு கொண்டு நீள நினைந்து பார்த்தும்; பைதலன் பெயரலன் கொல்லோ - யாம் அங்கில்லாமைக்குக் காரணமும், மீண்டும் எம்மைக் காண்டற்கு வழியும் புலப்படாது துன்பமுடையோனாய் வாளா மீண்டு போகானோ? போவானாயின் அவன நிலை என்னாம்! ஆ! கெடுவேன்! எனக.

(வி - ம்.) ஊசலாடுமிடமும் நீராடும் சுனையும் கிளிகடியும் தினைப் புனமும் தலைவியைத் தலைவன் காண்டற்குரிய இடங்களாதலின் இவற்றை ஒவ்வொன்றாக நோக்கி யாண்டும் காணமாட்டானாய்க் கலக்கமுறுவன். காரணம் யாது? எங்குச் சென்று காண்பது? எவ்வாறு முயல்வது? என்று பற்பல நினைவன் என்றும் இவற்றிற்கெல்லாம் காரணமும் வழியும் காணாமையால் கையறவுடன் மீள்வன் மீண்டாலும் எங்ஙனம் ஆற்றுவன்? என்று இரங்கியபடியாம். இம்மொழிகள்: தலைவன் தன் குறையால் வந்தன என்று தன்னுட் கழிவிரக்கங் கொண்டு உரைதற்கண் கருத்தான்றாதற் பொருட்டு ஈண்டுத் தோழி அவன் வரவுணராள் போன்று பேசும் படைத்துக்கோட் கிளவிகளேயாம் என்றுணர்க. கலுழ்பில என்ற பன்மை சுனைக்காயின் சுனைகள் பலவாதலின் அங்ஙனம் கூறினள் என்க. நீலமலர்க் கேற்றினுமாம். வன்பறையும் இளமையும் உடைய கிளியும் எனல் வேண்டிய உயர்வு சிறப்புபமை செய்யுள் விகாரத்தால் தொக்கது. தினைப்பயிர் தம்மையுடைய கானவர்க்கு அவர்தம் தாளில் எருப்பெய்து நீர்கால் யாத்து வளர்த்தமைக்குக் கைம்மாறாகப் பெரிய சுமையைத் தலையாலே

சுமந்து நின்று கொடுத்தது என்பது தோன்ற, குரல் கொய்தொழி புனமும் என்றது, கிளி எடுத்தல் செல்லாத் தடக் குரல் குலவுப் பொறை இறுத்த கோற்றலை இருவிப் புனம் என்றுள்; இதன்கண் யாங்கள் வளர்த்த ஒன்றறிவுயிராகிய தினைப்பயிர் தாமுட எமக்குச் செய்யக் கடவ கடமையைச் செய்தொழிந்தது, மற்று எம் பெண்மை நல னுகர்ந்த தலைவன தான் செய்யக் கடவ செய்திலன் எனப் பொருட் புறத்தே இறைச்சி தோன்றுதல் உணர்க. பெயரலன் கொல்லோ என்னும் எதிர்மறை வினை அதன் உடன்பாட்டுப் பொருளை வற்புறுத்தி நின்றது. அஃதாவது அவன் வந்தனனுயின் நோக்கி நெடிது நினைந்து பைதலனுய்ப் பெயர்வது ஒருதலை என்றவாறும்.

கரு - கவு : ஐதேய்...........யானே

(இ - ள்.) யான் ஐது ஏய் வெள் அருவி சூடிய உயர் வரைக் கூஉங் கண்ணது எம ஊர் என ஆங்கு அதை அறிவு உறல் மறந்திசின - அடிச்சியாகிய யான் எமபெருமானுக்குச் செய்யக் கடவதொன்றனைச் செய்யாதொழிந்தேன் அஃதியாதெனின் அழகிதாக வமைந்த சுனையினின்றும் வீழ்கின்ற வெள்ளிய அருவி களைச் சூடிய உயர்ந்த இம் மலையின்கண்ணே கூப்பிடு தொலைவில் உளது யாங்கள் வாழும் குறிச்சி என்று அத் தினைப்புனத்திலேயே இனறியமையா அச் செய்தியை அறிவுறுத்தலை மறந்தொழிந் தேன். இனி வருந்தின் என்னும்! என்பதாம்.

(வி - ம்.) பழைய வுரையாசிரியர் (கக) ஐதேய்கு என்று கலை ணழித்துப் பொருள் கூறினர் என்று தெரிகிறது. அங்ஙனமாயின் தேய்கு என்பதன் ஈற்றுயிர்மெய் செய்யுள் விகாரத்தாற் கெட்டதாகக் கொள்க. ஐது ஏய் வெள்ளருவி, கய வெள்ளருவி என அருவிக்கே தனித்தனி அடையாக்குக. கயம் - ஈண்டுச் சுனை. தினைக் கதிர் முற்றிக் கொய்யுமளவும் அவனும் வரைந்து கொள்ள முயன்றிலன் எனபது குறிப்பெச்சம். இது கேட்ட தலைவன் வரைதலிற் கருத் தான்றுதல் பயன் என்க.

தலைவி கூற்றுயினும் வரைவு கடாதலே கருத்தாமென்க.

இனி மூன்றுவதாகக் கூறிய துறைக்கு, இனி இரவின்கண் மனைப் படபடைக்கு வருதி எனப் பகறகுறியிடத்தை மாற்றி இரவுக்குறி கூறியதாகக் கொள்க.

(பா - வே.) எ. காவிலோங்கு; க. பாய்புடை; கங. போகுவன்; (கஅ)

## செய்யுள் நக

திணை : பாலை.

துறை: பொருண் முற்றிய தலைமகன் தலைமகளைக் கண்டு சொல்லி யது. இப் பாட்டு நிலத்தால் பாலை.

(து - ம்.) அஃதாவது தலைவன் தலைவியைப் பிரிந்துபோய் நிரம்பப் பொருளீட்டிக் கொண்டு மீண்டு வந்து தலைவியைக் கண்டபொழுது அவள் நீயிர் எம்மைத் துவரமறந்தனிர் போலும் என்று கூறி வருந்துதல் கண்டு தலைவன் தன் அன்புடைமை தோன்றக் கூறி மகிழ்வித்தது என்றவாறு. இச் செய்யுள் உரிப் பொருளால் முல்லைத் திணையாயினும் முதற் பொருள் பற்றிப் பாலைத்திணை ஆயிற்று என்றவாறு.

(இ - ம்) இதற்கு 'கரணத்தி னமைந்த காலை' எனவரும் (தொல். கற் - ரு) நூற்பாவின்கண் 'சென்ற தேஎத் துழப்பநனி விளக்கி யின்றிச் சென்ற தங்கிலை விளக்கினும்' எனவரும் விதிகொள்க. (ஆசிரியர் இளம்பூரண வடிகளாரும், நச்சினார்க்கினியரும் தத்தம் உரையில் இச் செய்யுளை இத் துறைக்கே எடுத்துக் காட்டினர்).

ஒழித்தது பழித்த நெஞ்சமொடு வழிப்படர்ந்
துள்ளியு மறிதிரோ வெம்மென யாழநின்
முள்ளெயிற்றுத் துவர்வாய் முறுவ லழுங்க
நோய்முந் துறுத்து நொதுமன் மொழியனின்
௫. ஆய்நல மறப்பனோ மற்றே சேணிகந்
தொலிகழை பிசைந்த ஞெலிசொரி யொண்பொறி
படுஞெமல் புதையப் பொத்தி நெடுநிலை
முளிபுன் மீமிசை வளிசுழற் றுறாஅக்
காடுகவர் பெருந்தீ யோடுவயி னோடலி
௧௦. னதர்கெடுத் தலறிய சாத்தொ டோராங்கு
மதர்புலி வெரீஇய மையல் வேழத்
தினந்தலை மயங்கிய நனந்தலைப் பெருங்காட்
டுஞான்றுதோன் றவிர்சுடர் மான்றுற் பட்டெனக்
கட்பட ரோதி நிற்படர்ந் துள்ளி
௧௫. யருஞ்செல வாற்று வாரிடை ஞெரேரெனப்
பரந்துபடு பாய னவ்வி பட்டென
விலங்குவளை செறியா விகுத்த நோக்கமொடு
நிலங்கிளை நினைவினை நின்ற நிற்கண்
டின்னகை யினைய மாகவு மெம்வயி
௨௦. னூடல் யாங்குவந் தன்றென யாழநின்
கோடேந்து புருவமொடு குவவுநுத னீவி
நறுங்கதுப் புளரிய நன்ன ரமையத்து
வறுங்கை காட்டிய வாயல் கனவி
னேற்றேக் கற்ற வுலமரல்
௨௫. போற்றா யாகலிற் புலத்தியா லெம்மே.

—மதுரைச் செங்கண்ணனார்.

## (உரை)

### கச : கட்படரோதி............

(இ - ள்.) கள படர் ஓதி - வண்டுகள் மொய்க்கின்ற மலர் மணங் கமழுகின்ற கூந்தலையுடைய நல்லாய்! என்க.

(வி - ம்.) கள்-வண்டு, வண்டுக்குத் தேன் என்னும் பெயருண்மையும் நினைக. ஓதி : ஆகுபெயர்.

### க - ரு : ஒழித்தது............மறப்பனோ

(இ - ள்.) ஒழித்தது பழித்த நெஞ்சமொடு - "வினையே ஆடவர்க்கு உயிர்" என்னும் ஆன்றோர் அறவுரைக்கிணங்கி முயலாமல் தவிர்ந்திருந்தமையை இகழ்ந்து பொருள்செய்க என ஊக்கிய நெஞ்சத்தோடே; வழிப்படர்ந்து - பொருளீட்டும் நெறியிலே சென்று; எம் உள்ளியும் அறிதிரோ என யாழ - பின்னர் எம்மை என்றேனும் நினைத்துப் பார்த்தீரோ? என்று வினவி; நின் முள் எயிற்றுத் துவர்வாய் முறுவல் அழுங்க - நின்னுடைய முட்போன்று கூர்த்த பற்களையுடைய பவளம் போன்ற அழகிய வாயினகண் யான் எதிர்பார்க்கின்ற புன்முறுவல் இல்லையாக, நோய் முந்துறுத்து - அதற்கு மாறாகத் துன்பத்தை நின் கண்ணினும் முகத்தினும் முற்படக் காட்டி; நொதுமல் மொழியல் - எனக்குப் பொருந்தாதவற்றைக் கூறி என்னையும் வருத்தாதே கொள்!; நின் ஆய் நலம் மறப்பனோ - நின்பால் யான் பலகாலும் ஆராய்ந்து மகிழ்தற்குக் காரணமான நினது பேரழகினை யான் மறந்தொழிவேனோ? மறந்தால் உயிர் தரியேன காண்! என்க

(வி - ம்.) ஒழித்தது - சான்றோர் கூறிய அறிவுரைப்படி ஒழுகாதொழித்தது என்க. அஃதாவது ஆடவர்க்கு வினையே உயிர் ஆதலின் அவர் மடிந்திராத வினைசெய்தல் வேண்டும் என்பது. இனி, பழைய வுரையாசிரியர் "'ஸ்திரீ விஸநப்பண்ணலாகாது'' என்றும் "பழித்தல்-அதனை இகழ்தல்" என்றும் 'இரவலர்க்கு இட இல்லாமல் அவரை ஒழித்ததனைப் பழித்தல் என்றுமாம்;" என்பர். "ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள் ஏனை இரண்டும் ஒருங்கு"(குறள்)எனப் பொருளீட்டுமாறு தூண்டும் அறிவுரைகளை ஒழித்தது எனக் கோடலே சண்டைக்குப் பொருந்தும் என்க. அதனைப் பழித்தலாவது "மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த, குடிமடியுந் தன்னினும் முந்து" (குறள்) எனப் பழித்தல் என்க.

இனி, பொருளீட்டுதல் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட நெஞ்சோடு அந்நெறியிற் சென்றீராதலின் ஒன்றை விட்டு ஒன்றை உள்ள மற்றொரு நெஞ்சமின்மையின் நீயிர் எம்மை மறந்திருப்பீர் என்பாள், உள்ளியும் அறிதிரோ? என்றாள். உள்ளியும் என்புழி உம்மை இழிவு சிறப்பு. தலைவன் குறித்த பருவத்தே வாராமையால்

தலைவி புலந்து கூறியது. ஈண்டுத் தலைவன் அதனைக் கொண்டு கூறியவாறு.

தன்னைப் புன்முறுவலுடன் மகிழ்ந்து இன்மொழி கூறி வரவேற்பாள் என்று கருதி வந்தானாகலின் அங்ஙனம் அவள் வரவேலாது நோய் முந்துறுத்து நொதுமல் மொழிவது கேட்டுத் தலைவன் "நின் முள்ளெயிற்று........மொழியல்" என்று வருந்திக் கூறுகின்றான். மறப்பலோ என்னும் வினா அதன் எதிர்மறைப் பொருளை வற்புறுத்துகின்றது.

ரு - கஉ : மற்றோ............பெருங்காட்டு

(இ - ள்.) சேண் இகந்து - அன்புடையோய்! நின்னை மறந்தறியேன் என்பதற்குச் சான்று ஒன்று கூறுவல் கேள் நினைப் பிரிந்து பொருளீட்டுதற்கு யான் நெடுந் தொலை சென்று; ஒலிகழை பிசைந்த ஞெலிசொரி ஒண் பொறி - அசையுந்தோறும் ஒலிக்கின்ற உலர்ந்த மூங்கிற் கோல்கள் தம்மில் உராய்தலாலே உராயப்பட்ட கோல் சொரிந்த ஒள்ளிய தீப் பொறிகள்; படுஞெமல் புதையப் பொத்தி - ஆங்குதிர்ந்து கிடக்கும் மூங்கிற் சருகுகள் மறையும்படி மூண்டெழுந்து; வளி சுழற்றுறு - காற்றினாலே சுழற்றப்பட்டு; நெடுநிலை முளிபுல் மீமிசை - செங்குத்தாக நிற்கின்ற உலர்ந்த ஊகம்புல்லின் மேனமேலும் மூண்டெழுந்து; காடு கவர் பெருந்தீ - அக் காட்டையே தன்னுளகப்படுத் தெரிகின்ற பெரிய தீயானது, ஓடு வயின் ஓடலின் - அக் காற்றியங்கு மிடமெல்லாம் பரவிச் சென்று எரித்தலாலே; அதர் கெடுத்து - தாம் சென்ற வழியை விட்டோடி; அலறிய சாத்தொடு - அத் தீத் தம்மையும் வளைத்துக்கொள்ளுமென்று அஞ்சி அலறி அழுகின்ற வணிக மாக்கள் குழுவினோடு; ஓர் ஆங்கு - மற்றோரிடத்தே; மதர்புலி வெரீஇய மையல் வேழத்து இனம் தலைமயங்கிய - செருக்குற்ற புலியைக் கண்டு அஞ்சிய மயக்கமுடைய யானைக்கூட்டம் ஓடிவந்து விரவுதற்குக் காரணமான; நனந்தலைப் பெருங்காட்டு - அகன்ற இடமுடைய பெரிய காட்டினூடே செல்லும் பொழுது என்க.

(வி - ம்.) இகந்து-கடந்து. நின்னைப் பிரிந்து நெடுந் தொலைவைக் கடந்துபோய்ப் பெரிய காட்டினூடே செல்லுங்கால் என இயைக்க. ஒலிகழை என்புழி காற்றாலசைந்து ஒலிக்கின்ற மூங்கில் என்க. ஒலிகழை – தழைந்த மூங்கில் என்றல் ஈண்டைக்குப் பொருத்தமின்றென்க. முளிபுல்: வினைத்தொகை; ஈண்டு ஊகம்புல். முளிதல் - உலர்தல். உலர்ந்தமையின் நெடுநிலைப் புல்லாயிற்று. காற்றோடுவயின் பரவலின் என்றவாறு. சாத்து - வாணிகச்சாத்து; வாணிகர் கூட்டம். ஆறலைப்போர்க் கஞ்சி இவர் கூட்டமாய்ப் போதல் மரபு. சாத்தொடு பரந்து கண்படு பாயல் என்று இயைப்பர் பழைய வுரையாசிரியர் இது நூலாசிரியர் கருத்தன்று. சாத்தொடு வேழத்தினந்தலை மயங்கிய பெருங்காடு என அக் காட்டின் கடுமை கூறலே

ஆசிரியர் கருத்து. இக் கருத்தே சிறப்புடைத்து. என்னை? ஒருபால் காடுகவர் பெருந்தீயால் அதர்கெடுத்து அஞ்சி அலரும் சாத்தொடு மற்றொருசார் புலிவெரீஇய மையல் வேழம் வந்து தலைமயங்கும் அஞ்சுதகு பெருங்காடெனவே அச்சச்சுவை பயந்தின்பமாதலை நுண்ணுணர்வாற் கண்டு கொள்க. தலைமயங்குதல்-ஓரிடத்தே கூடுதல். இத்தகைய இன்னாமை மிக்க காட்டினூடே யான் செல்லுங்கால் செலவாற்றா ஆரிடை யான் நிற்படர்ந்துள்ளி பாயல் கொண்டேன் என மேலே சென்றியையும்.

௧௫ - ௧௮ : ஞான்ற...........நிற்கண்டு

(இ - ள்.) ஞான்று தோன்று அவிர்சுடர் மான்று (ஆல்) பட்டென - அந்திமாலையில் மேற்றிசையிலே மிகவும் தாழ்ந்து தோன்றுகின்ற ஞாயிற்று மண்டிலமும் ஒளி மயங்கி மறைந்ததாக அப்பொழுது யான்; நின்படர்ந்து உள்ளி - நின்னையே நினைந்து நினைந்து; அருஞ்செலவு ஆற்றா ஆர் இடை - மேலே அரிதிற் செல்லும் செலவுதானும இயலாதாகிவிட்ட அரிய அந் நெறியிடமாகிய, ஞெரேரெனப பரந்து படுபாயல் - யான் பொள்ளெனப் படுத்துறங்கும் அப் பரந்துபட்ட பாயலிடத்தே; நவ்வி பட்டென - ஒரு பிணைமான் தோன்றினாற் போலே தோனறி; இருந்த நோக்கமொடு - என்னை நோக்காமல் நிலத்தில் வீழ்ந்த நோக்கத்தோடு; இலங்குவளை செறியா - உடமபு மெலிந்தமையால் கழன்று விழுகின்ற விளங்குகினற பொன்வளையலை வீழாதபடி ஏறச் செறித்து; நிலங்கிளை நினைவினை நின்ற - நிலத்தைக் காலாற் கீறுதற்குக் காரணமான வருத்தமுடையையாய் நின்ற; நின்கண்டு - நின்னைக் கண்கூடாகக் கண்டு என்க.

(வி - ம்.) ஆரிடையாகிய பரந்துபட்ட பாயல் என்க. அஃதாவது வழியாகிய பெரிதும்விரிந்து கிடக்கும் பாயல் என்றவாறு. ஞெரேரென: விரைவுக்குறிப்பு. ஞெரேரென யான் படுத்த பாயல் எனச் சிலசொற் பெய்து கூறுக. ஞான்று- நகரத்திற்கு ஞகரம் போலி; நாலுதல்-ஈண்டுத் தூங்குதல் என்னும் தன்பொருள் குறியாது தாழ்தல் என்னும் பொருட்டாய் நின்றது. மான்றால் என்புழி – ஆல்: அசைச் சொல். ஆற்றாத என்பதன் ஈறுதொக்கது. நவ்வி-மான். படுசொல் தோன்றுதல் மேற்று. உடம்பு மெலிந்தமையால் கழன்ற வளையைச் செறித்து என்றவாறு. நினைவு – வருத்தம்.

௧௯ - ௨௫ : இன்னகை...........எம்மே

(இ - ள்.) இன் நகை - இனிய நகையினையுடையோய்!; இனையம் ஆகவும் - யாம் இந்நிலையினேம் ஆகவும்; எம்வயின் யாங்கு ஊடல் வந்தன்று - எமக்கிரங்குதலின்றி உனக்கு எம்மிடத்து எவ்வாறு ஊடல் வருவதாயிற்று; என (யாழ) நின் கோடு ஏந்து புருவமொடு குவவு நுதல் நீவி - யாம் நின்னுடைய

கடை நிமிர்ந்த அழகிய புருவங்களையும் திரண்டு இறுத்த நெற்றியையும் கையாற்றடவி; நறுங்கதுப்பு உளரிய நன்னர் அமையத்து-நறிய கூந்தலையும் கோதி நின்னைத் தழுவ முயலுகின்ற இனியதொரு செவ்வியிலே; ஏற்று - துயிலுணர்ந்து; இது கனவு என்றறிந்துழி; வறுங்கை காட்டிய வாய் அல் கனவின் - நின்னைத் தழுவுதல் போன்ற என் கைகளைப் பின்னர் வறுங்கையாக்கிப் பொய்மையான அக் கனவினை நினைவு கூர்ந்து; ஏக்கற்ற வுலமரல்-ஏங்கிய எமது மனச் சுழற்சியை; போற்றாய் ஆகலின் - அறிந்து கொள்கிலை ஆதலான்; எம் புலத்தி - நீ "எம்மை உள்ளியும் அறிதிரோ?" என்று ஊடுகின்றனை காண்! என்பதாம்.

(வி - ம்.) எனவே யாம் நின்னைக் கனவினும் மறந்திலேம் காண்! என்று தெளித்துரைத்தானாயிற்று.

இன்னகை: விளி. இனையம் என்றது, இத்தகைய பேரன்புடையேமாயிருப்பவும் என்றவாறு. இதற்குப் பழைய வுரையாசிரியர் "இனையமாகவும் - நாங்கள் இப்படிப் போந்து தனித்து வருந்தவும்" என்று கூறிய குறிப்புரை பொருந்துமாறில்லை. என்னை? கனவு காண்பவன் தனது நனவுநிகழ்ச்சியைக் கூறினன் என்பது இயல்பன்மையான் என்க. ஆகவே, யாம் நின்பால் பேரன்புடையேமாகப் பரத்தமை முதலிய தவறுகள் செய்யாமல் இருக்கவும் என்பதே கனவினும் ஊடல் பேர்ப்பான் கூற்றாதல் வேண்டும் என்க. துயிலுணர்ந்துழியன்றித் தலைவன் பெருங் காட்டினுள் ஆரிடையே பாயலாகத் துயில நேர்ந்தமை உணரான் என்க. துயிலுணர்ந்துழி வறுங்கை காட்டிய வாய்மையல் கனா பின்னும் நினைவின் நிற்றலின் தலைவன் ஏக்கற்று உலமரல் எய்தினன் என்க.

இனி - இதனை, கட்படர் ஓதி நீ உள்ளியும் அறிதிரோ, எம் என, அழுங்க முந்துறுத்து நொதுமல் மொழியல் - நின் நலம் மறப்பனோ? யான் (நின்னைப் பிரிந்து) சேணிகந்து பெருங்காட்டுள் சுடர் பட்டெனச் செலவு ஆற்றா ஆரிடை பாயல் கொண்டுழி நவ்வி பட்டெனத் தோன்றி நீ செறியா நோக்கமொடு நினைவினை நின்ற நிற்கண்டு இன்னகாய்! இனையம் ஆகவும் ஊடல் பாங்கு வந்தது? என நீவி உளரிய அமையத்து ஏற்று அவ்வாயல் கனவினால் ஏக்கற்ற உலமரல் நீ போற்றாயாகலின் எம்புலத்தி என்றியைக்க.

(பா - வே.) ௬ - மிசைந்த. ௮ - நாறுவி. ௧௬ - மான்றாழ்பட் (௧௧)

## செய்யுள் ௬௦

திணை: நெய்தல்.

துறை: தலைமகன் பொருள்வயிற் பிரிந்துழிக் கிழத்தி தோழிக்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - பொருளீட்டற்குத் தலைவன் தலைவியைப் பிரிந்தானாகத் தலைவி பிரிவாற்றாது அவனையே நினைந்து நினைந்து பெரிதும் வருந்துபவள் நீ ஆற்றியிருத்தலே சால்பாம் என் [illegible] ாழிக்குத்

தலைவி என்னெஞ்சம் என்வரைத்தன்றி இடைபுறுது அவனையே நினைந்து மறுகுகின்றது; யான் ஆற்றியிருத்தல் எங்ஙனம் என்பது படச்சொல்லியது என்பதாம்.

(இ - ம்.) இதற்கு "அவனறிவு ஆற்ற அறியுமாகலின்" எனவரும் நூற்பாவின்கண் (தொல்-கற்-கூ) "கிழவனை மகடூஉப் புலம்பு பெரிதாகலின், அலமரல் பெருகிய காமத்து மிகுதியும்" எனவரும் விதி கொள்க.

காணன் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீன்றப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப
மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர
ரு. வசைவண் டார்க்கு மலருறு காலைத்
தாழை தளரத் தூங்கி மாலை
யழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சங் கையறு பினையத்
துயரஞ் செய்துநம் மருளா ராயினு
கo. மறுஅ லியரோ வவருடைக் கேண்மை
யளியின் மையி னவணுறை முனை இ
வாரற்க தில்ல தோழி கழனி
வெண்ணெ லரிநர் பின்மறைத் ததும்புந்
தண்ணுமை வெரீஇய தடந்தா ணாரை
கரு. செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை
யகமடற் சேக்குந் துறைவ
னின்றுயின் மார்பிற் சென்றவென் னெஞ்சே.

—குன்றியனார்.

(உரை)

கஉ - கஎ : தோழி............நெஞ்சே

(இ - ள்.) தோழி-அவர் வருந்துணையும் ஆற்றியிருந்திடுக என்று வற்புறுத்துந் தோழியே! யான் ஆற்றியிருத்தற்குத் துணையாய என நெஞ்சம் செய்தது கேள்!; கழனி வெள் நெல் அரிநர்பின்றைத் ததும்பும் தண்ணுமை வெரீஇய தடம் தாள் நாரை-மருதபபரப்பின்கண் வயலில் விளைந்துள்ள வெளளிய நெற் கதிரை அரிகினற உழ்வர்க்குப் பின்பக்கத்தே முழங்குகின்ற தண்ணு[illegible] முழக்கத்திற்கு அஞ்சிய பெரிய கால்களை

யுடைய நாரையானது; செறி மடைவயிரில் பிளிற்றி - அணைசு செறித்த மூட்டுவாயையுடைய வயிர் (கொம்பு) ஊதும் ஒலி போன்று ஒலித்து அம் மருதநிலத்தினின்றும் பறந்து போய்; பெண்ணை மடல் அகம் சேக்கும்-நெய்தனிலத்தின் கண்ணதாகிய பனையினது மடலினூடே தங்குதற்கிடனான; துறைவன் - கடற்றுறையையுடைய நம் பெருமான் நம்மைக் கைவிட்டுப்போனவனுடைய; இன்துயில் மார்பின் சென்ற என் நெஞ்சு - யாம் இனிதே துயிலுதற்கிடனான அழகிய மார்பை விரும்பி அவனிடம் சென்ற என்னுடைய மடநெஞ்சம் என்க.

(வி - ம்.) கழனி ஈண்டு மருதப்பரப்பிலுள்ள வயல். வெண்ணெலரிநர் என்றது உழவரை. நெல்லரியும் உழவர் நெற்கதிர்களுள் குடம்பை கட்டி வாழும் சிறுபறவைகளும் பிறவுயிர்களும் ஓடி யுய்தற் பொருட்டு அரிவார் பின் பறைமுழக்கும்படி செய்து அரிவர். இதனை, "விளைந்த கழனி வன்கை வினைஞர் அரி பறையின் குரல்" எனவும், (மதுரைக்-௨௬௬-௬) "வெண்ணெலரிநர் தண்ணுமை வெரீஇ கண்மடற் கொண்ட தீந்தேன் இரிய" எனவும் (புறம்-௩௪௮), "வெண்ணெல் அரிநர் மடிவாய்த் தண்ணுமை.........படுபுள் ளோப்பும்" எனவும் (அகம்-௨0௪) வருவனவற்றானும் உணர்க. தண்ணுமை என்றது ஈண்டு உடுக்கையை. கிசாளம் என்னும் பறையுமாம் (இது பிங்கலத்திற் கண்டது) (முழவம் அன்றென்க.)

வயிர்-ஒரு துளைக்கருவி. 'கொம்பு' என்பது மிது. பெருங்காரை என்பது ஒருவகை நாரையின் பெயர். அதனையே ஈண்டுத் தடந்தாரை என்றார்.

இனி, இதன்கண் அமைந்த உள்ளுறையைப் பழைய வுரையாசிரியர்—"வெண்ணெல் அரிநர் தங்காரியஞ் செய்யப் பறைகொட்டுவிக்க, நாரை வேறுநிலத்ததாகிய பெண்ணையிலே சென்று தங்கித் தான் வாழுமிடமாகிய மருதநிலத்தை மறந்தாற்போலத் தங்காரியஞ் செய்ய நம்மைப் பிரிவார் இல்லைப் (வீட்டைப்) பிரிந்தவழி நம்முடைய நெஞ்சு நம்மை விட்டுத் தனக்கு அந்நியமாகிய மார்பிலே சென்றது என்றவாறு" என விரிப்பர்.

௧ - ௫ : கானல்.............சேர

(இ - ள்.) கானல் மாலைக் கழி பூ கூம்ப - கடற்கரையை அடுத்துள்ள கழிகளிடத்தே மலர்ந்துள்ள ஒழுங்குபட்ட மலர்கள் குவியா நிற்பவும்; நீல் நிறப் பெருங் கடல் பாடு எழுந்து ஒலிப்ப - நீலநிறமாகத் தோன்றுகின்ற பெரிய கடலின் முழக்கம் மிக்கு முழங்கவும், மீன் ஆர் மெல்பறைத் தொழுதி குவை இரும் புன்னைக் குடம்பை சேர - மீன்களைத் தின்னுகின்ற மெல்லிய சிறகுகளையுடைய கூட்டமான கடற்பறவைகள் குவித்துவைத்தாற் போன்று தழைத்தடர்ந்த பெரிய புன்னைமரங்களிலே அமைந்த தத்தம் கூடுகளிற் புக்கடங்கவும் என்க.

(வி - ம்.) மாலை-ஒழுங்கு. கழிப்பூ - நெய்தல் முதலியன. நீலம்-கடை குறைந்து நீல் என நின்றது. பாடு-முழக்கம். எழுந்தொலித்தல்-மிக்கொலித்தல். குருகு-ஈண்டுப் பறவைப் பொதுப் பெயர். பறை-சிறகு; பறத்தலுமாம். தொழுதி-கூட்டம். மீன் தேர்ந்துண்ணற்கு மெத்தெனப் பறத்தலுடைய குருகுமாம்: குடம்பை-கூடு. புன்னை-நிலத்திலிருந்தே குவிந்துவைத்தாற் போன்று தழைக்கும் இயல்புடைய தாதல் கருதிக் 'குவை இரும்புன்னை' என்றார். இவை மாலைக்கால நிகழ்ச்சிகள்.

ரு - கூ: அசைவண்............இனைய

(இ - ள்.) அசை வண்டு ஆர்க்கும் - மலர்கள் குவிந்தமையால் குவியாமலர் நாடி அங்கும் இங்கும் அலமருகின்ற திரிகின்ற வண்டுகள் முரலுகின்ற, அல்குறு காலை-உயிரினங்கள் வினையொழிந்து தத்தம காதற்றுணையுடன் தங்குதற்குக் காரணமான காலமாகிய; தாழை தளர - தாழைகள் தங்கிலையினின்று குலைந்து தளராநிற்பவும், அழிதக - பிரிந்துறைவோர் பெரிதும் வருந்தவும்; கொண்டலொடு தூங்கிவந்த - கீழகாற்றுடிய தன் துணையினோடு அசைந்தசைந்து வந்த; மாலை-ஒவ்வோர் அந்திமாலைப் பொழுதும்; கழிபடர்க் காமர் நெஞ்சம் - மலருகின்ற காம நோயால் மிகவும் வருத்தமெய்திய அவா மிக்க என்னுடைய புல்லிய நெஞ்சம்; கையறுபு இனைய - செயலறவினால் பின்னும் வருந்தவும் என்க.

(வி - ம்.) மலர்கள் குவிதலால் குவியாத மலர் நாடி அங்குமிங்கும் அசைந்துதிரியும் வண்டுகள் என்க. விரைந்து திரிதலால் அவற்றின் ஒலியும மிக்கொலித்தல் கருதி அசைவண்டு ஆர்க்கும் காலை என்றார். ஆர்க்கும் காலை, அல்குறு காலை எனத் தனித்தனி இயைக்க. அல்குறுகாலை என்புழிக் காலை என்பது சிறுபொழுது குறியாமல், காலம் என்னும் பொருட்டாய் நின்றது. கொண்டலொடு வருதலால்-தாழைகள் தளர வந்த மாலை என மாலையின் வரவினை ஏதுவாக்கினர். அழிதக-அழிய. கூறுவாள் குறிப்பொடுடுத்துப் பிரிந்துறைவோர் அழிதக என்று கூறிக் கொள்க. ''காதலர் இல்வழி மாலை கொலைக்களத் தேதிலர் போல வரும்'' என வரும் திருக்குறளையும் நினைக (கஉஉச). இனி அல்குறுகாலை என்புழியும் உயிரினங்கள் தத்தம் காதற்றுணையுடன் உறையும் காலம் என்க. காமர் - அவா. அழகெனின் இகழ்ச்சிக் குறிப்பாகக் கொள்க.

கூ - கஉ: துயரம்............வாரற்கதில்ல

(இ - ள்.) துயரம் செய்து - துன்பத்தையுண்டாக்கியும்; நம் அருளார் ஆயினும் - அவரையன்றிப் பிறிதோருயிரிலாத நமக்கும அளிசெய்யாதொழியினும் ஒழிக; அவருடைக் கேண்மை அறு அலியர் - அவருடைய நட்பு அந் நெஞ்சிற்கு அற்றொழியாமல்

நிலைப்பதாக!; அளியின்மையின் - அவர்பால் அருள் இல்லாமை காரணமாக; அவண் உறை முனைஇ - அவ்வேற்றுநாட்டின்கண் அவரிருக்குமவ்விடத்தே தங்குதலை வெறுத்து; வாரற்க தில்ல - மீண்டும என்பால் வாராதொழிவதாக; இதுவேகாண் என் விருப்பம் என்பதாம்.

(வி - ம்.) என்னெஞ்சம் எனக்குத் துணையாகாது என் வரைத் தாகாது அவர் மார்பை நச்சி என்னைக் கைவிட்டுச் சென்றது. ஆதலின் யான் ஆற்றியிருத்தற்கியன்ற துணையுமிழந்தேன் காண். ஆகவே யான் ஆற்றியிருத்தல் எங்ஙனம் என்பது கருத்து. நெஞ்சம் தன்னைப் பிரிந்து போனமையால் அதனைப் பிரித்துக் கழிபடர்க் காமர் நெஞ்சம் என இகழ்ந்தாள். தனக்கும் துயரம் செய்வார்பாற் சென்ற நெஞ்சம் அதன் பயனை நுகர்ந்து ஆண்டே கிடந்து வருந்துக; ஈண்டு வாராதொழிக என்கின்றாள். ஈண்டு வரின் எம்மைப் பெரிதும் வருத்து தல் ஒருதலை என்பாள் அவர் அருளாராயினும் அவர் கேண்மை அரு தாகுக என்றாள். அதற்கும் அவர் அருளார் என்பாள் அவர்பால் அளியின்மையின் என்றாள். அருஅலியர்: எதிர்மறை வியங்கோள். தில்: விழைவின்வந்தது.

இனி இதனை, தோழி இன்றுயின் யார்பிற் செல்ற என் நெஞ்சுக்கு அவர் கைபறு துயரம் செய்தும் (நாணமின்றிச் சென்றமையின்) அவர் கேண்மை அருதொழிக! அவர்பால் அளியின்மையின் அஃது அவர் மார்பின் இன்றுயிலும் பெருது) அங்ஙனமாயினும் அஃது அவண் உறை முனைஇ வாரற்க! இதுவே என் விருப்பம் என இயைபு காண்க.

(பா - வே.) ௬. தூக்கி; ௧௧ னவணுறைவு.　　　　(௪௦)

## செய்யுள் ௪௧

திணை: பாலை

துறை: தலைமகன் பொருள்வயிற் பிரிந்த விடத்துக் கிழத்தியை நினைந்து சொல்லியது.

(து - ம்) அஃதாவது: தலைவன் மனையறம் பேணற்குப் பொருள் இன்றியமையாமையின் தலைவியைப் பிரிந்து போய் வேற்றுநாட் டகவயின் ஈட்டுபவன் தான்குறித்த பருவங்கண்டுழித் தலைவியை நினைந்து இரங்கித் தன் னெஞ்சிற்குக் கூறியது என்றவாறு.

இதனை, வேந்தற் குற்றுழிச் சென்றோன் கூற்றாகக் கொள்வர் இளம்பூரணர்.

(இ - ம்.) இதற்கு, "கரணத்தின் முடிந்தமைந்தகாலை" எனவரும் நூற்பாவின்கண் (தொல்-கற்-௫) மீட்டுவரவு ஆய்ந்தவகையின் கண்ணும்" எனவரும் விதிகொள்க.

இளம்பூரணர், "ஒன்றுத் தமரினும்" எனவரும் (தொல்-அகத் ௪௪) நூற்பாவின்கண், "பாசறை புலம்பலும்," என்னுந் துறைக்கு இதனை எடுத்துக்காட்டினார்.

வைகுபுலர் விடியன் மைபுலம் பரப்பக்
கருங்கனை யவிழ்ந்த வூழுறு முருக்கி
னெரிமருள் பூஞ்சினை யினச்சித ரார்ப்ப
நெடுநெ லடைச்சிய கழனியேர் புகுத்துக்
ரு. குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர
வரிகால் போழ்ந்த தெரிபகட் டுழவ
ரோதைத் தெள்விளி புலந்தொறும் பரப்பக்
கோழிண ரெதிரிய மரத்த கவினிக்
காடணி கொண்ட காண்டகு பொழுதி
க0. ணம்பிரி புலம்பி னலஞ்செலச் சாஅய்
நம்பிரி பறியா நலனொடு சிறந்த
நற்றோ ணெகிழ வருந்தினள் கொல்லோ
மென்சிறை வண்டின் தண்கமழ் பூந்துணர்
தாதின் றுவலை தளிர்வார்ந் தன்ன
கரு. வங்கலுழ் மாமை கிளைஇய
நுண்பஃ றித்தி மாஅ யோளே.

—குன்றியனார்.

(உரை)

கரு - கசு: மென்சிறை..........மாஅயோளே

(இ - ள்.) மெல்சிறை வண்டின் - மெல்லிய சிறகுகளை யுடைய வண்டுகள் கிண்டுதலாலே; தண் கமழ் பூந்துணர் - மா மரத்தினது குளிர்ச்சியுடைய நறுமணங் கமழுகின்ற மலர்க் கொத் தினின்றும், தாதின் துவலை - பூந்துகளோடு விரவிய தேன்றுளி கள்; தளிர் வார்ந்தன்ன - அம் மாவினது தளிரின்மேல் ஒழுகினாற் போன்று; அம் கலுழ் மாமை - அழகு வழிகின்ற தனது இயற்கை நிறமாகிய மாமை நிறத்தினிடையே; கிளைஇய - தோன்றிய; நுண் பல் தித்தி மாயோள் - நுண்ணிய பலவாகிய சுணங்குகளையுடைய நங்காதலி என்க.

(வி - ம்.) பொருளீட்டுதற்கண் பெரிதும் ஈடுபட்டிருந்த தலைவன் அயலிலே நிகழும் நிகழ்ச்சிகளைக் கண்டு தான் குறித்த பருவம் அஃதென் றறிந்துழித் தலைவியை நினைபவன் அவள் திருமேனியின் எழிலை இவ் வாறு நினைந்து கூறுகின்றான். அவளுடைய இயற்கை நிறம் மாமைநிறம். அஃதாவது மாந்தளிர் போன்ற நிறம். அந்நிறத்திடையே பொற்றேமல்

(பா - வே.) 1. சேரமானந்தையார்.

புள்ளிபுள்ளியாய்த் தோன்றி மின்னும். ஆகலின் இங்ஙனம் உவமை தேர்ந்து கூறுகின்றான் என்க. வண்டுகள் கிண்டுதலாலே மாம்பூங்கொத்தினின்றும் பொன்னிறத்தாதோடு விரவி ஒழுகும் தேன்றுளி தளிரின் மேற் றுளித்தனவாக அவ்வழகிய பொன்னிறப் புள்ளிகளோடு திகழும் மாந்தளிர் அவளது நுண்பல் தித்தியையுடைய மாமைக்குவமையாகக் காண்கின்றான் என்க. மாயோள் என்பது - மாமை நிறமுடையோள் என்னும் தன்பொருள் குறியாது காதலி என்னும் பெயரளவினின்றது.

க - கூ: வைகுபுலர்..........பொழுதின்

(இ - ள்.) வைகு புலர் விடியல் - இரவெல்லாம் வைகிய இருள் புலருகின்ற விடியற் காலத்திலே; மைபுலம் பரப்ப - கா ரெருமைகள் புன் மேய்தற்குக் கொல்லைகளிலே பரவிச் செல்லா நிற்பவும்; கரு நனை அவிழ்ந்த ஊழ் உறு முருக்கின் எரிமருள் பூஞ்சினை இனச்சிதர் ஆர்ப்ப - கருவைத் தன்னகத்தே கொண்ட அரும்புகளின் இதழ்கள் விரியப்பெற்று மலர்ந்துள்ள முள் முருக்க மரத்தினது தீப் பிழம்பு போன்ற மலர்களையுடைய கிளை களினெல்லாம் கூட்டம் கூட்டமாக வண்டுகள் முரலா நிற்பவும்; அடைச்சிய நெடுநெல் படப்பையொடு மிளிர - கழனிகளினின்றும் அரிந்து கொடுபோய்க் குவித்த நெடிய நெற்போர்வுகள் தோட்டங் களிலே திகழா நிற்பவும்; ஏர்புகுத்து கழனி குடுமிக்கட்டிய அரிகால் மிளிரப் போழ்ந்த தெரிபகட்டுழவர் ஓதைத் தெள்விளி புலந் தொறும் பரப்ப - நெல்லரிந்து கொண்ட பின்னர் மீண்டும் ஏர் களைப் புகுவித்து நெல்விளைந்த அப் புன்செய்கள் நெற்றாளாகிய குடுமிகளையுடைய கட்டிகளையுடையவாய்த் திகழும்படி அரிந்த தாள் களொடு புரளும்படி நிலம்பிளப்ப உழுத வலியனவாக ஆராய்ந்து பூட்டிய எருதுகளையுடைய உழுதொழின் மாக்கள் ஏர்மங்கலம் பாடும் ஆரவாரத்தோடு எருதுகளை ஓட்டுகின்ற தெளிந்த ஒலிகள் புன்செய் தோறும் பரவி ஒலியா நிற்பவும்; கோழ் இணர் கவினி எதிரிய - கொழுவிய புதுப் பூங்கொத்துக்களை ஈன்று இன்னிள வேனிலை எதிர் கொண்ட மரங்களையுடையவாம்; காடு அணி கொண்ட காண் தகு பொழுதின் - முல்லை நிலப்பரப்பிலுள்ள காடு அழகு கொண்டு திகழ்தற்குக் காரணமான காட்சியின் பந் தக்கிருக்கின்ற இவ்விளவேனிற் பருவத்தின்கண் என்க.

(வி - ம்.) தலைவன் தலைவியைப் பிரியுங்கால் யான் இளவேனிற் பருவத் தொடக்கத்தே மீண்டு வருகுவல், அதுகாறும் ஆற்றியிருத்தி எனத் தேற்றுரை கூறி வந்தவன் வினை முற்றுமுன்னரே அப் பருவம் வந்துற்றமை கண்டு தலைவியை நினைந்து இரங்குபவன் அப் பருவ நிகழ்ச்சிகளைத் தான் கண்டாங்குக் கூறியவாறும்.

எருமைகள் நண்பகலில் வெப்பம் பொறாவாகலின் வைகுபுலர் விடியலிலேயே ஆயர்கள் அவற்றைக் கட்டவிழ்த்து விட்டமையின்

மேய்தற்கு யாண்டும் பரவிச் செல்வனவாயின என்க. ஈண்டு, "கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு மேய்வான் பரந்தன காண்" எனவரும் ஆண்டாள் திருப்பாவை நினையத்தகும்.

இனி, மை - எருமை, என்பது பழையவுரை. இதனை ஆகு பெயராகக் கொள்க. மை - செம்மறியாடுமாம். கரு - விதை. ஊழ்த்தல் உற்ற முருக்கென்க. ஊழ்த்தல் - மலர்தல். "இணரூழ்த்தும் நாறுமலர்" என வள்ளுவரும் ஓதுதலுணர்க. மருள்: உவமவுருபு. சிதர் - வண்டுகள். நெடுநெல் அடைச்சிய போர்வுகள் என்க. நெடுநெல் அடைச்சியவை படப்பையொடு மிளிர எனவும் கழனி அரிகால் போழ்ந்த குடுமிக்கட்டிய வாய் மிளிர எனவும் மாறியும் கழனியை நெடுநெல் என்பதன்முன்னும் மிளிர என்பதனைக் கட்டிய மிளிர என ஈரிடத்தும் எடுத்துக் கூட்டியும் பொருளியையு மாற்றாற் கூறுக. இது, கொண்டு கூட்டுப் பொருள்கோள். உழவர் ஓதையும் தெள்விளியும் புலந்தொறும் பரப்ப என்க. ஓதை என்றது உழவர் பாடும் ஏர்மங்கலப் பாட்டினை என்றும் தெள்விளி என்றது பகடுரப்பும் ஒலியை என்றும் நுண்ணிதின் உணர்ந்துரைக்க. கோழிணராற் கவினி வேனிலெதிரிய மரத்த என்க. காண் தகு பொழுது - கண்டின்புறத்தகுந்த பருவம்.

### க0 - கஉ: நாம்பிரி.........கொல்லோ

(இ - ள்.) நாம்பிரிபு அறியா நலனொடு சிறந்த நல்தோள் - தமக்கியல்பான ('பூந்துணர்த்தாதின் துவலை தளிர்வார்ந்தன்ன அங்கலுழ் மாமை கிளை இய நுண்பல் தித்தியையுடைய அழகுடனே') யாம் இடையறாது உடனுறைதலால் நமது பிரிவைப் பண்டு அறியாமையால் எய்திய புத்தழகோடு கூடிப் பெரிதும் சிறப்புற்றுத் திகழ்ந்த ஊற்றினிமையாகிய நன்மையையுடைய நங்காதலியின் தோள்கள்; நாம் பிரி புலம்பின் நலம் செலச் சாஅய் - யாம் புல்லியவிப் பொருளீட்டற் பொருட்டுப் பிரிந்தமையால் எய்திய தனிமைத்துயரம் மிக்கமையாலே அந்த இருவகைப் பட்ட பேரழகும் அழிந்து போக மெலிந்து; நெகிழ வருந்தினள் கொல்லோ - நெஞ்சம் நெகிழ்ந்து வருந்தினளோ? ஆற்றியிருப்பளோ? அறிகின்றிலேம் என்செய்தும்! என்பதாம்.

(வி - ம்.) நம்பிரிபு அறியா நலனொடு என்றது பண்டு தனக்கியல்பான அழகு நம்பிரிபறியாப் புத்தழகோடு என்பதுபட நின்றது. அவளியற்கையழகு முன் கூறப்பட்டது. "நம்பிரிபு அறியாநலனொடு சிறந்த நற்றோள் நாம்பிரிபுலம்பின் நலஞ் செலச்சாஅய்" எனமாறிக் கூட்டுக. நெகிழ்தலை நெஞ்சிற்குக் கூறுக. இன்னும், "வினைமுற்றிற் றில்லையே! வினைமுற்றுமுன் மீள்தலும் ஆடவர்க்கழகன்று ஆகலின் என் செய்தும்?" என்றபடியாம். வினையிடத்தே தலைவன் ஒரோவழித் தலைவியை நினைந்து கையற்றுக் கூறினும், அக் கையறவு மீண்டும் வினைபுரியும் உள்ளத்தாற் கதுமென மாயும் என்றுணர்க. இதனை "கிழவிநிலையே" எனவரும் நூற்பாவிற்கு (தொல்-கற்-சஅ) ஆசிரியர் நச்சினார்க்கினியர் வகுத்த விளக்கவுரையானும் உணர்க.

இனி இதனை, நெஞ்சமே! மாயோள் மை புலம்பரப்ப, பூஞ்சினை சிதர் ஆர்ப்ப அடைச்சிய (போர்வு) படப்பையொடு மிளிரக் கழனி கட்டிய மிளிர ஒதையும் விளியும் புலந்தொறும் பரப்பக் கவினி எதிரிய காடு அணி கொண்ட காண்டகு (இவ்விளவேனிற்) பொழுதில் சாஅய் ஒசிழ வருந்தினள் கொல்லோ? என இயைத்திடுக.

(பா - வே.) ௨. கருநனை; ௬. அடக்கிய. (௬௧)

## செய்யுள் ௬௨

திணை: குறிஞ்சி.

துறை: தலைமகன் வரைவு மலிந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது: களவொழுக்கத்தே நின்ற தலைவன் தோழியால் வரைவு முடுக்கப்பட்டுத் தலைவியை வரைந்து கோடற்கு ஆவன செய்து கொண்டு வரைந்து கோடற்குச் சான்றோரை முன்னிட்டுப் பல்லிய முழங்க வருகின்றமை முற்பட அறிந்த தோழி அவ் வின்பங் கெழுமிய செய்தியைத் தலைவிக்குணர்த்துபவள் தன் மகிழ்ச்சி தோன்றக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "நாற்றமுந் தோற்றமும்" எனவரும் நூற்பாவின்கண் (தொல் - கள - ௨௩) "ஆங்கதன் றன்மையின் வன்புறை" என்பதனால் அமைத்துக் கொள்க.

மலிபெயற் கலித்த மாரிப் பித்திகத்துக்
கோயலகு நிலைஇய பெயலேர் மணமுகைச்
செவ்வெரி நறமுங் கொழுங்கடை மழைக்கட்
டளிரேர் மேனி மாஅ யோயே
௫. நாடுவறங் கூர நாஞ்சி றுஞ்சக்
கோடை நீடிய பைதறு காலைக்
குன்றுகண் டன்ன கோட்ட யாவையுஞ்
சென்றுசேக் கல்லாப் புள்ள வுள்ளி
லென்றூழ் வியன்குள நிறைய வீசிப்
௧௦. பெரும்பெயல் பொழிந்த வேம வைகறைப்
பல்லோ ருவந்த வுவகை யெல்லா
மென்னுட் பெய்தந் தற்றே சேணிடை
யோங்கித் தோன்று முயர்வரை
வான்றோய் வெற்பன் வந்த மாறே.

—கபிலர்.

(உரை)

க - ச : மலிபெயற்.................மாஅயோயே

(இ - ள்.) மாரி மலிபெயல் கலித்த பீத்திகத்து - கார்ப் பருவத்தே மிகுதியாகப் பெய்த மழையினால் நன்கு தழைத்துள்ள பிச்சியினது; நிலைஇய பெயல் ஏர் கொயல் அருமண முகைச் செவ்வெரிந் உறழும் - நிலைபெற்ற மழையினால் எழுச்சியுற்று மிகுதியால் கொய்தற்கியலாத நறுமணமுடைய அரும்பினது சிவந்த புறத்தைப் போன்று சிவந்த வரிகள் படர்ந்த; கொழுங் கடை மழைக்கண் - கொழுவிய கடைப் பகுதியையுடைய குளிர்ந்த கண்களையும்; தளிர் ஏர் மேனி மாயோயே - தளிர் போன்ற நிறத் தினையும் உடைய மாமையுடைய எம் பெருமாட்டியே! என்க.

(வி - ம்.) கலித்தல் - தழைத்தல். பீத்திகம் - பிச்சிச்செடி. மிகுதி யாக மலர்வதனால் கொய்தலரிதாகிய என்பது கருத்து. ஏர் - எழுச்சி. செவ்வெரிந் - சிவந்த புறப்பகுதி; பிச்சியின் வளமான நாளரும்பின் புறம் கடைக்கண்ணிற் செவ்வரி அடர்ந்திருத்தற்கு உவமை. மழைக் கண் - குளிர்ந்த கண். தளிரேர் என்புழி, ஏர்: உவமவுருபு. மாயோய் - மாமை நிறமுடையோய். ஏகாரம்: விளி. மகிழ்ச்சியான செய்தி கூறுதற்குத் தொடங்குதலின் விரையாது தலைவியின் அழகைப் பாராட்டுகின்றாள். அந்தக் கண்களும் மேனியும் இனி வாடவேண்டா; மேலும் அழகுறும் என்னுங் கருத்தால் அவையிற்றை விதந்து பாராட்டுகின்றாள்.

ரு - கஉ : நாடுவறங்..............பெய்தந்தற்றே

(இ - ள்.) நாடு வறங்கூர நாஞ்சில் துஞ்ச கோடை நீடிய பைது அறுகாலை - (நான் இப்பொழுது எய்தியுள்ள உவகைக்கு எல்லையே இல்லை; அஃதெத்தகையது எனின் கூறுவல் கேள்) நாட்டின்கண் மழை பொய்த்தமையால் வறுமைத்துன்பம் மிகா நிற்பவும் கலப்பை முதலிய கருவிகள் பயன்படாமல் வாளா கிடப்பவும் வெயிற்காலம் நீண்டமையால் நிலத்தில் பசுமை சிறிதுமின்றி அற்றுவிட்ட காலத்தே; குன்று கண்டன்ன கோட்ட சென்று சேக்கல்லாப் புள்ள - மலைகளைப் போன்ற குவைகளையுடையனவும், நீர்ப்பறவைகள் சென்று தங்குதலில்லா தனவும். உள் இல் என்றாழ்-உள்ளிடத்தே வெயிலெறிக்கப்பட்டன வும் ஆகிய; வியன் குளம் யாவையும் - அகன்ற குளங்கள் அனைத் தும்; நிறைய வீசி - நிறையுமாறு உதவி; பெரும்பெயல் பொழிந்த ஏம வைகறை - பெரிய மழை பெய்துவிட்ட இன்பந் தருகின்ற வைகறைப் பொழுதின்கண்; பல்லோர் உவந்த உவகை எல்லாம் என்உள் பெய்தந்தற்று - அந்த நாட்டில் வாழ்கின்ற பல்வேறு மக்களும் மகிழ்ந்த மகிழ்ச்சியை எல்லாம் ஒரு சேரத்

தொகுத்துக் கொணர்ந்து என் நெஞ்சினுள் பெய்து வைத்தாற் போன்ற மகிழ்ச்சிகாண்! என்க.

(வி - ம்.) உவகைச் செய்தி கூறுவோர் நேரேயெனஅச் செய்தியைக் கூறாமல் அதற்கு முன்னுரையாகப் பலபல பேசிப் பின்னரே கூறுவது ஓரியல்பு. இங்ஙனம் பிற பேச்சுக்களால் காலத்தை நீடிக்குமாற்றால் கேட்போருடைய நெஞ்சமும் அதனை விரைந்து கேட்க வேண்டும் என்னும் ஆர்வத்தால் கோடுகோடேறி விதுப்புறுவதாம். அங்ஙனம் விதுப்புற்றுழிக் கூறின் அவர் மகிழ்ச்சியும் மிகப் பெரிதாம். இவை மாந்தர்தம் மனவியல்பாகும். இவ்வியல்புணர்ந்து ஈண்டுத் தோழி கூறும் முன்னுரைகள் ஆற்றவும் இனியன. இத்தகைய இயல்பு மாந்தர் மனத்திற்குண்மையை யுணர்ந்த கம்பநாடர் தம் இராம காதையில், கார்முகப் படலத்தில் இராமன் வில்லிறுத்த உவகைச் செய்தியை உணர்ந்த 'நீலமாலை' என்னும் தோழி அச் செய்தியைச் சீதைக்கு அறிவித்தற்கு, "கலைகளும் குழலும் சோர" ஓடிவந்தவள்,

"வந்தடி வணங்கிலள் வழங்கும் ஓதையள்
அந்தமில் உவகையள் ஆடிப் பாடினள்"

ஆகிச் செய்தி யொன்றுஞ் சொல்லாளாக, அவள் சிந்தையுள் மகிழ்ச்சியும் புகுந்த செய்கையும் கண்ட சீதை இவள் உவகைச் செய்தி கொணர்ந்துளாள் ஆதல் வேண்டும் என்று ஊகித்துணர்ந்து "சுந்தரி சொல்" என விதுப்புற்று வேண்டிய பின்னரும் செய்தி இஃதென்று கூறாமலே இராமனைப் பலபட வருணிப்பதனையும் பின்னரும் சீதையின் ஆர்வம் பெருகிக் கரை புரள்கின்ற எல்லையில் அச் செய்தியைக் கூறினளாகக் காட்டியிருத்தலானும் உணர்க. (கம்ப-கார்முகப்-இக-கக) ஈண்டும் இத் தோழி தன் மகிழ்ச்சிக்குவமை தேர்ந்துரைத்து முடிப்பதற்குள் அத்தகைய உவகைக்குக் காரணமான செய்தி அறிந்து கோடற்குத் தலைவியின் ஆர்வமும் கடலளவு பெருகியிருத்தல் வேண்டுமன்றோ? இனித் தோழியும் செவ்வியறிந்து அச் செய்தி இஃதென்றறிவிக்கின்றாள் என்க.

கஉ - கச : சே.- டை...............வந்தமாறே

(இ - ள்.) ஓங்கி சேண் இடை தோன்றும் உயர்வரை வான் தோய் வெற்பன் - ஏனைய மலைகளினுங் காட்டில் சிறப்பாக உயர்ந்து சேய்மையில் உள்ள ஊர்களிலுள்ளவர்க்குந் தோன்றுகின்ற உயர்ந்த மூங்கில்களையுடைய வானைத் தீண்டுகின்ற மலையினையுடைய நம்பெருமான்; வந்தமாறு - நாம விரும்பிய வண்ணம் வரைவொடு வந்தமையால்; என்க.

(வி - ம்.) அங்ஙனம் மகிழ்தற்குக் காரணம் நம்பெருமான் வரைவொடு வந்ததேயாகும் என்பது கருத்து.

அவனுடைய வெற்புப் போன்று இனி நுங்கள் வாழ்வும் உயர்ந்து புகழினால் சேணிடை வாழ்வோர்க்கும் தோன்றுமாறு சிறப்புற்றுத் திகழும் எனப் பொருட்புறத்தே இறைச்சி தோன்றிற்று. புலவர்

பெருமான் கபிலருடைய புகழ் போன்று இச் செய்யுளும் இன்பம் பெரிதுடைத்தாதலுணர்க.

இனி, இதனை 'மாஅயோயே நாடு கூரத் துஞ்ச நீடிய காலை குளம் நிறைய வீசிப் பொழிந்த வைகறையில் பல்லோர் உவந்த உவகை எல்லாம் என்னுட் பெய்தந்தற்று எற்றுலெனின் வெற்பன் வந்ததனால்' என இயைக்க.

(பா - வே.) க. மழைபெயக்; உ. முன்முகை; அ. சேர்கல்லா. (௬௨)

## செய்யுள் ௬௩.

**திணை :** பாலை.

**துறை :** தலைமகன் பொருள் கடைக் கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

(து - ம்) அஃதாவது: தலைவனுடைய நெஞ்சம் பொருட்சிறப்பைப் பலபட எடுத்துக் காட்டி யாம் தலைவியைப் பிரிந்து சென்று பொருளீட்டிவர வேண்டும் என்று இடையறாது வற்புறுத்தியதாக, அப்பொழுது கார்ப்பருவம் வந்துற்றமையால் இப் பருவம் பிரிதற்கியலாதது என்றுட்கொண்டு தான் செலவழுங்கியதனை உலகியல் மேலிட்டுக் கூறுவானாய் அந்நெஞ்சிற்குக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, ''கரணத்தி னமைந்து முடிந்த காலை'' என வரும் நூற்பாவின்கண் (தொல்-கற்-ரு) 'வேற்றுநாட் டகல்வயின் விழுமத்தானும்,' எனவரும் விதிகொள்க.

இனி,

> ''செல்லிடை யழுங்கல் செல்லாமை யன்றே
> வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்''

என்பதனால், (தொல்-கற்-௪௪) இதுவும் பிரிதனிமித்தமாய்ப் பாலைத் திணையாயிற்றென்று கொள்க.

> கடன் முகந்து கொண்ட கமஞ்சூன் மாமழை
> சுடர்நிமிர் மின்னொடு வலனேர் பிரங்கி
> யென்றூழ் உழந்த புன்றலை மடப்பிடி
> கைமாய் நீத்தங் களிற்றொடு படீஇய
> ரு. நிலனும் விசும்பு நீரியைந் தோன்றிக்
> குறநீர்க் கன்ன லெண்ணுந ரல்லது
> கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாஅய்த்
> தளிமயங் கின்றே தண்குர லெழிலி, யாமே
> கொய்யகை முல்லை காலொடு மயங்கி

க0. மையிருங் கான நாறு நறுநுதற்
பல்லிருங் கூந்தன் மெல்லியன் மடந்தை
நல்லெழி லாகஞ் சேர்ந்தன மென்று
மளியரோ வளியர் தாமே யளியின்
றேதில் பொருட்பிணிப் போகித்த
கரு. மின்றுணைப் பிரியு மடமை யோரே

—மதுரையாசிரியர் நல்லந்துவனார்.

(உரை)

க - அ: கடல்முகந்து.........எழிலி

(இ - ள்.) தண் குரல் எழிலி - நெஞ்சமே! இப்பொழுது தண்மையையும் இடி முழக்கத்தையுமுடைய முகில்களையுடைய கார்ப்பருவம் வந்துற்றதுகாண்!; ஆதலால் கடல் முகந்து கொண்ட கமம் சூல் மாமழை - கடலின்கண் நீரை நிரம்பப் பருகிய நிறைந்த சூலையுடைய கரிய முகில்கள்; சுடர்நிமிர் மின்னொடு வலன் ஏர்பு இரங்கி - ஒளி மிக்க மின்னல்களுடனே வலப்பக்கமாக எழுச்சியுற்று முழங்கி; என்றூழ் உழந்த புல்தலை மடப்பிடி களிற்றொடு கைமாய் நீத்தம் படீஇய - முதுவேனிலின் வெயில் வெப்பத்தால் வருந்திய இளமையுடைய பிடியானைகள் தத்தம் களிற்றியானைகளோடு நீர் நிலைகளில் தமதுயர்த்திய கையை மறைக்குமளவு பெருகிய வெள்ளத்திலே முழுகியின்புறவும்; நில னும் விசும்பும் நீர் இயைந்து ஒன்றி - நிலத்தையும் வானத்தையும் நீர் பொருந்தி ஒன்றுதலாலே; குறுநீர்க் கன்னல் எண்ணுநர் அல்லது - குறிய நீர் நிரப்பிய நாழிகை வட்டிலில் ஒழுகிய நீரொழிய நின்ற நீர் நிற்கும் கோடுகளை எண்ணிப் பொழுதறிவா ரன்றி; கதிர் மருங்கு அறியாது அஞ்சுவரப் பாஅய் - யாவர்க்கும் ஞாயிறு இயங்கும் இடம் அறியாமல் இஃது ஊழி பெயருங் காலமோ? என்று அச்சம் வருதற்குக் காரணமாகவும் திசையெல் லாம் எஞ்சாது பரவி; தளி மயங்கின்று - மழைத் துளியாலே செறிவுற்றது என்க.

(வி - ம்.) எழிலி: ஆகுபெயர், கார்ப்பருவம். எழிலி வந்துற்றது; ஆதலால் மாமழை ஏர்பு இரங்கிப் படீஇயவும், ஒன்றவும், அஞ்சு வரவும் தளி மயங்கின்று என இயையும். ஒன்றி என்னும் எச்சத்தை ஒன்ற எனத் திரித்து அச்சம் உண்டாதற்கு ஏதுவாக்குக. குறுநீர் - நாழிகை வட்டில். சிறிய கலத்தின்கண் அடிப்பகுதியில் நுண்ணிய துளையுண்டாக்கி அக் கலத்தின்கண் நீர் பெய்து நிரப்பி அந் நீர் துளை வழியாக ஒழுகுங்கால் நாழிகைக் கொன்றாக வரையப்பட்ட கோடுகளை எண்ணிப் பார்த்து நாழிகை அறிவது அக்காலத்து வழக்கம்.

இனி, குறுநீர் கன்னல் எண்ணுநர் என்றது நாழிகைக் கணக்கரை எனலுமாம். அஞ்சுவர - அச்சமுண்டாக. இஃது ஊழி பெயருங் காலமோ என்று யாவர்க்கும் அச்சமுண்டாக என்க.

### அ - கஉ : யாமே.........சேர்ந்தனம்

(இ - ள்.) யாமே - இத்தகைய கார்ப்பருவத்தே யாம் பொருளவயிற் பிரிவேமானால் யாமும் ஆற்றாமையால் பொருள் செய்வினையை முற்றுவியேம்; நங்காதலியும் பிரிவாற்றாதிறந்து படுவாள் என்றுணர்ந்துள்ள யாம்; கொய் அகை முல்லை காலொடு மயங்கி - மலர் கொய்யுந்தோறும் கொய்துழியெல்லாம் தழைக்கின்ற வளமிக்க முல்லையினது மலர் மணம் வாடைக் காற்றோடு விரவிக் கமழப் பெற்ற; கானம் நாறும் பல் இருங்கூந்தல் நறுநுதல் மெல் இயல் மடந்தை - காடு மணக்குமாறு போல மணக்கின்ற பலவாகிய கூந்தலையும் நறிய நுதலையும் மெல்லிய சாயலையும் உடைய நங்காதலியினது; நல் எழில் ஆகம் சேர்ந்தனம் - நல்ல அழகுடைய மெய்யினைச் சேர்ந்திருப்பேமாயினேம்; என்க.

(வி - ம்.) யாமே என்றது இப் பருவம் பிரிந்துறைவார் ஆற்றாமையால் பெரும்பேதுறுவர் என்பதனை யுணர்ந்துள்ள யாம் என்பது படநின்றது. கொய்துழி யெல்லாம் அகைக்கின்ற வளமுடைய முல்லை என்க. அகைத்தல் - தழைத்தல். கால் ஈண்டு வாடைக்காற்று. முல்லை மணம் காற்றோடு விரவிமணக்கும் கானம்போல மணக்கும் கூந்தல் எனக் கூந்தலுக்கு அடையாக்குக. கானம், கூந்தலுக்குவமை. ஆகம் - உடம்பு; மார்புமாம். இனி, தன்னைப் பொருளீட்டத் தூண்டுகின்ற நெஞ்சிற்குப் பேதைமையூட்டுகின்றான்.

### கஉ - கடு : என்றும்............மடமையோரே

(இ - ள்.) அளியின்று ஏதில் பொருள்பிணிப் போகி - இப்பருவத்தின்கண் அருள் சிறிதுமின்றித் தம்மோடியைபில்லாத பொருட்பற்றுடைய உள்ளத்தைத் தொடர்ந்து சென்று; தம் இன் துணைப் பிரியும் மடமையோர் - அப்பொருளீட்டுதற் பொருட்டுத் தமக்கு இனிய வாழ்க்கைத் துணைவியைப் பிரிகின்ற அறிவிலிகள்; என்றும் அளியர் அளியர் - எப்பொழுதும் எம்மால் இரக்கப்படத் தகுந்தவரே ஐயமில்லை! என்பதாம்.

(வி - ம்.) ஈண்டுத் தன்னைப் பொருள்வயிற்றூண்டுகின்ற நெஞ்சிற்குக் கூறவேண்டியவற்றையே பிறர்பால் வைத்துக் கூறுதலின் இது முன்னிலைப் புறமொழியாம். இப்பருவத்தே யாம் பிரிந்துறையின் நங்காதலி ஆற்றாதிறந்துபடுதல் ஒருதலை. ஆதலின் யாம் செலவழுங்குகின்றோம். மேலும் யாம் மேற்கொண்ட பொருள் செய்வினையும் முற்றுறுதலரிதாம் என்பது கருத்து.

இனி, இதனை, எழிலி மாமழை ஏர்பு இரங்கி பிடி களிற்றொடு படீஇய ஒன்றி அறியாது அஞ்சுவர மயங்கின்று, ஆதலால் யாம்

மடந்தை ஆகம் சேர்ந்தனம். இப் பருவத்தே பொருட்பிணிப் போகித் துணைப்பிரியும் மடமையோர் என்றும் அளியர் என இயைக்க.

பா - வே. ௪. கழைமாய்; ௮. மின்குர. (சங)

## செய்யுள் ௪௪

திணை: பாலை.

துறை: வினைமுற்றி மீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது – வேந்தற் குற்றுழித் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் போரின்கண் வென்று மீள்பவன் தலைவியைக் காணப் பெரிதும் விதுப்புற்றுத் தன் தேர்ப்பாகனுக்குக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்குக் "காணத்தினமைந்து" எனவரும் நூற்பாவின் கண், (தொல் - கற். ๑) 'பேரிசை யூர்திப் பாகர் பாங்கினும்' என வரும் விதி கொள்க.

வந்துவினை முடித்தனன் வேந்தனும் பகைவரும்
தந்திறை கொடுத்துத் தமரா யினரே
முரண்செறிந் திருந்த தானை யிரண்டு
மொன்றென வறைந்தன பணையே நின்றோர்
௫. முன்னியங் கூர்திப் பின்னிலை யீயா
தூர்க பாக வொருவினை கழிய
நன்ன னேற்றை நறும்பூ ணத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி
பொன்னணி வல்விற் புன்றுறை யென்றாங்
௧௦. கன்றவர் குழீஇய வளப்பதுங் கட்டூர்ப்
பருந்துபடப் பண்ணிப் பழையன் பட்டெனக்
கண்டது நோனா னாகித் திண்டேர்க்
கணைய னகப்படக் கழுமலந் தந்த
பிணையலங் கண்ணிப் பெரும்பூட் சென்னி
௧௫. யழும்பி லன்ன வறுஅ யாணர்ப்
பழம்பன் னெல்லின் பல்குடிப் பரவைப்
பொங்கடி படிகய மண்டிய பசுமிளைத்
தண்குட வாயி லன்னோட்
பண்புடை யாகத் தின்றுயில் பெறவே.

—குடவாயிற் கீரத்தனார்.

(பா - வே.) உறையூர்ச் சல்லியங்குமரனார்.

## (உரை)

### க - எ: வந்துவினை..........கழிய

(இ - ள்.) பாக - தேர்ப்பாகனே!; வேந்தனும் வந்து வினை முடித்தனன் - நம் முடிவேந்தன்றானும் போர்த்தொழிலின்மேல் வந்து பகைவருடன் போர்புரிந்து வென்று வாகைசூடினன்; பகைவரும் தம் திறை கொடுத்துத் தமராயினர் - அஞ்சிய பகை மன்னர்கள் தாமும் அஞ்சித் தாம் அளக்கவேண்டிய திறைப்பொருளை அளந்து நம்மரசனுக்குச் சுற்றத்தாராயினர்; மூரண் செறிந்திருந்த தானை இரண்டும் ஒன்று என பணை அறைந்தன - ஆகவே நம் மன்னன் கட்டளைப்படி ஈண்டுத் தம்முள் மாறுபாடு மிக்கிருந்த நம் படையும் பகைவர் படையுமாகிய இரண்டு படைகளும் அம் மாறுபாடு தீர்ந்து கேண்மை கொண்டு ஒரே படையாகும் என்று அறிவித்து முரசங்கள் முழங்கப்பட்டன; நின் தேர் முன் இயங்கு ஊர்திப் பின் நிலை ஈயாது-ஆதலால் நீ இனி நினது தேரினை நினக்கு முன்னே செல்லுகின்ற நம் படைக்குரிய தேர் முதலிய ஊர்திகட்குப் பின் செல்லுதற்கு இடங் கொடாமல்; ஒருவினை கழிய ஊர்க - அவற்றிற்கெல்லாம் விலகி அவை பிற்பட்டொழியுமாறு முற்படச் செலுத்துவாயாக! அஃதெற்றுக்கெனின்; என்க.

(வி - ம்.) வினை - ஈண்டுப் போர்த்தொழில். அதனை முடித்தலாவது - போர்புரிந்து பகைவரை வென்று வாகை சூடுதல். பகைவர் - தோல்வியுற்ற பகைமன்னர். தந்திறை - தாம் அளக்கக் கடவளவாக வரையறுக்கப்பட்ட திறைப்பொருள். தமராதல் - சுற்றத்தார்போன்று கேண்மையுடையராதல். முரண் - மாறுபாடு. இரண்டும், முற்றும்மை. பகைமன்னர் தோல்வியுற்றுக் கீழ்ப்படிந்த பின்னர் அவர் படையும் வென்ற மன்னனுக்குரிய படையாகி விடுதலின் இரண்டும் ஒரேபடையாயின என்பது கருத்து. இவ்வாறு வினை முற்றியபின்னர் படைமறவர் இச் செய்தியை அறிந்து கோடற்பொருட்டு முரசறைந்து அறிவித்தல் மரபு.

இனி, வினைமுற்றியபின் ஊர்நோக்கி மீளலுறும் முடிமன்னன் ஊர்திகள் தன் தேர்க்கு முன்னரும் செல்லுதலால் அவற்றிற்கெல்லாம் முற்பட நம் தேர் செல்லும்படி அவற்றை விலகி அவை பிற்பட விரைந்து செலுத்துதி என்று கூறியபடியாம். முன்னியங்கூர்தி என்றது முடிவேந்தன் ஊர்திகளை. நின்றேராகிய ஊர்தி என்பாருமுளர். அங்ஙனம் கூறின் ஒருவினை கழிய என்பது பொருந்தாமையறிக. முன்னியங்கூர்திப் பின்னிலை எனப் பகரவொற்றுப் பெய்து கூறுக. பின்னிலையீயாது - பின்செல்லற்கிடங்கொடாமல் என்க.

### எ - கச: நன்னன்.........சென்னி

(இ - ள்.) பழையன் - பழையன் என்னும் சோழமன்னனுடைய படைத்தலைவன்; நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி

துன் அருங் கடுந்திறல் கங்கன் கட்டி - நன்னனும், ஏற்றையும் நல்ல அணிகலனணிந்த அத்தியும், பகைவர் கிட்டுதற்கரிய போராற்றலையுடைய கங்கனும், கட்டியும், பொன் அணி வல்வில் புன்றுறை என்று அவர் குழீஇய - பொன்னணிகலன் அணிந்த வலிய விற்படையையுடைய புன்றுறையும் என்று எண்ணப்பட்ட சேரனுடைய படைத்தலைவர் அறுவரும் தத்தம் படைகளோடு ஒருங்கு கூடிய; அளப்பருங்கட்டூர் - அளவிடுதற்கரிய பாசறையிடத்தே சென்று போர்புரிந்து; பருந்துபடப்பண்ணி - பருந்துகள் வீழ்ந்து ஊன் உணணுமபடி நூழிலாட்டியபின்னர்; பட்டென - விழுப்புண்பட்டு இறந்தானாக; அதுகண்டு நோனான் ஆகி - அந்நிகழ்ச்சியைக் கண்டு எழுந்த வெகுளியைப் பொறாதவனாகி; கழுமலம் திண்டேர் கணையன அகப்படத் தந்த - சேரனுக்குரிய கழுமலம் என்னும் ஊரை முற்றி அதன்கண்ணிருந்த திண்ணிய தேர்ப்படையையுடைய கணையன் என்னும் தலைமைப் படைத்தலைவனுட்பட அவ்வூரைக் கைப்பற்றித் தனதாட்டோடு கூட்டிய; பிணையல் அமகணணி - கட்டிய மலர்மாலையைத் தலையிற்சூடிய; பெரும்பூண் சென்னி - பெரும்பூட்சென்னி என்னும் பெயரையுடைய சோழமனனனுடைய எனக;

(வி - ம்.) பழையன் - சோழமன்னனுடைய படைத்தலைவன். இவன் நன்னன் முதலிய ஆறுபடைத்தலைவர்களும் தத்தம் படையோடு கூடியிருந்த பாசறையைப் படைகொண்டு தாக்கிப் பெரும் பாலோரைக் கொன்று வீழ்த்திப் பின்னர் அப் பகைவர் படைக்கலனால் விழுப்புண்பட்டு மாய்ந்தனன். இக் களம் கண்டு பெரும்பூட் சென்னி என்னும் சோழமன்னன் வெகுண்டு எழுந்து கழுமலம் என்னும் ஊரைத்தாக்கி ஆங்கிருந்த கணையன் என்னும் சேரமன்னனுடைய படைத்தலைவர்க்குந் தலைவனாகிய மறவனையும் அக்கழுமலம் என்னும் ஊரையும் கைப்பற்றினன் என்பது இதன்கண் கண்ட வரலாறாகும். பெரும்பூட் சென்னி என்பது பெயர்.

௧௫ - ௧௯ : அழும்பில்.............பெறவே

(இ - ள்.) அழும்பில் அன்ன அறாஅ யாணர் - அழும்பில் என்னும் மூதூர் போன்ற ஒழியாத புது வருவாயையும்; பல் பழ நெல்லின் பல்குடிப் பரவை - பல்வேறுபட்ட பழைய நெல் நிரப்பப் பட்ட கூடுகளையுடைய பலவாகிய குடிகளையுடைய நிலப்பரப்பினையும்; பொங்கடி படிகயம் - யானைகள் நீராடுதற்கிடன்ற பெரிய குளங்களையும்; மண்டிய பசுமிளை - அடர்ந்த பசிய காவற்காட்டையும் உடைய தண் குடவாயில் அன்னோள் - குளிர்ந்த குடவாயில் என்னும் மூதூர்போல ஐம்புலவின்பங்களையும் ஒருங்கே தருகின்ற நங்காதலியின; பண்புடை ஆகத்து இன் துயில் பெறவே - பெண்மைப் பண்புமிக்குடைய மார்பின்கண் யாம் இனிய துயிலை இற்றை நாளிரவிலேயே பெறுதற்கேயாம் என்பதாம்.

(வி - ம்.) அழும்பில்—பாண்டிய நாட்டின்கண் உள்ள ஓர் ஊர். அது இற்றைநாள் 'அமபுக்கோயில்' என வழங்கப்படுகின்றது என்பர். இவ்வழும்பில் வேளிர் மரபுக்குறுநிலமன்னன் ஆட்சியிலிருந்தது என்பதும் அவ்வூர் வளமிக்க ஊர்கட்கெல்லாம் எடுத்துக்காட்டாகத் தகுந்த பெருவளஞ் சான்றதென்பதும் மதுரைக் காஞ்சியில் ஆசிரியர் மாங்குடி மருதனார்,

> "நிலனும் வளனும் கண்டமை கல்லா
> விளங்குபெருந் திருவின் மான விறல்வேள்
> அழும்பில் அன்ன நாடிழந் தனரும்" (௩௪௪ - ௫)

என்றோதுதலானும் உணரலாம்.

வளமிக்க அழும்பில் ஈண்டுக் குடவாயிலுக் குவமையாக வந்தது. குடவாயில் தலைவிக்குவமையாக வந்தது. அங்ஙனமாயின் இஃதுவமைக்கு உவமையாய் "அடுக்கிய தோற்றம்" என்னும் குற்றமன்றோ வெனின் அற்றன்று, என்னை? அழும்பில் யாணர்க்குவமையாய் அத்தகைய யாணரையுடைய குடவாயில் எனக் குடவாயிலுக்கு அடைமாத்திரையாய் நிற்றலின் என்க.

குடவாயில் சோழநாட்டின்கண்ணுள்ள ஒரு திருமூதூர். இச்செய்யுளைப் பாடியபுலவர் பெருமான் ஊராகலின் தலைவிக்குவமையாக எடுத்தனாபோலும். இவ்வூர் வளஞ்சிறந்தவூர் என்பதனை, "குழையாரும் பைம்பொழிலும் வயலும் சூழ்ந்த குடவாயில்" எனத் திருஞான சம்பந்தரும் நெஞ்சம் பளிக்கத் துதினமூர் (சம்பந்தர் தேவாரம். திருமுறை. ௨) இச்செய்யுளினும் தண்குடவாயில் என்பதும் அது பைம்பொழிலும் வயலும் கயமும் பசுமிளையும் சூழவிருத்தலையே குறித்தவாறும் ! பொங்கடி: அன்மொழி - யானை. பெரும்பூட் சென்னி என்னும் சோழன் விரும்பி உறையும் ஊர்களில் இதுவுமொன்றுபோலும்.

பண்பு—பெண்மைப்பண்பு. "நாம் செல்லுமளவும் இறந்துபடாதாற்றியிருந்த" பண்பு என்பர் பழையவுரையாசிரியர். இனி, செறிவு நிறையுஞ் செம்மையும் செப்பும் அறிவும் அருமையுமாகிய தலைவிக்குரிய சிறப்பியல்புகளுமாம்.

இனி, இதனை, பாக! வேந்தனும் வினைமுடித்தனன். பகைவருந் தமராயினர். தானை இரண்டும் ஒன்றெனப் பணை அறைந்தன, ஆதலால் நின் தேரினை, முன்னிடங்கு ஊர்திக்குப் பின்னிலையியாது ஒருவிக் கழிய ஊர்க. அஃதெதற்கெனின் குடவாயிலன்னோள் பண்புடை ஆகத்துத் துயிலை யாம் பெறுதற்கு என இயைக்க.

(பா - வே.) ௪. வோர்ந்தன படையே; ௯. கழிஇய; ௧௦. கடமூர். (௪௪)

## செய்யுள் ௪௫

திணை: பாலை.

துறை: வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—தலைவன் வினைவயிற் பிரிந்தானாகப்பெரிதும் ஆற்றுமை யுடையளாய் வருந்துந் தலைவியைத் தோழி, அவர் வருந்

துணையும் ஆற்றியிருப்பதுவே நின்கடன் ஆதலால் ஆற்றியிருந்திடுக! என்று வற்புறுத்தினள். அதுகேட்டு அவ்வாறு ஆற்றியிருத்தல் என்னாலியலாதுபோலும் என்பதுபடத் தலைவி வன்புறை எதிரழிந்து கூறியது என்றவாறு.

(இ - ம்) இதனை, "அவனறி வாற்ற வறியுமாகலின்" எனவரும் நூற்பாவின்கண் (தொல் - கற் - ௬.) ஆவயின் வரும் பல்வேறு நிலையினும் வாயிலின் வருஉம் வகை என்பதனாலமைத்திடுக.

வாட லுழிஞ்சில் விளைநெற் றந்துணர்
ஆடுகளப் பறையி னரிப்பன வொலிப்பக்
கோடை நீடிய வகன்பெருங் குன்றத்து
நீரிலா ராற்று நிவப்பன களிறட்
௫. டாளி லத்தத் தழுவை யுகளுங்
காடிறந் தனரே காதலர் மாமை
யரிநுண் பசலை பாஅய்ப் பீரத்
தெழின்மலர் புரைதல் வேண்டு மலரே
யன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
௧௦. றொன்னிலை முழுமுத றுமியப் பண்ணிப்
புன்னை குறைத்த ஞான்றை வயிரிய
ரின்னிசை யார்ப்பினும் பெரிதே யானே
காதலர்க் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்
தாதி மந்தி போலப் பேதுற்
௧௫. றலந்தனெ னுழல்வென் கொல்லோ பொலந்தார்க்
கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்
வான வரம்ப னடன்முனைக் கலங்கிய
வுடைமதி லோரரண் போல
வஞ்சுவரு நோயொடு துஞ்சா தேனே.

—வெள்ளிவீதியார்.

## (உரை)

### க - ௬ : வாடல்............காதலர்

(இ - ள்.) காதலர்-என்னால் காதலிக்கப்பட்டவர் என்னைக் கைவிட்டுப் பொருளைக் காதலித்து; வாடல் உழுஞ்சில் விளை நெற்று அந்துணர் ஆடுகளப் பறையின் அரிப்பன வொலிப்ப - மழை வறந்தமையால் வற்றிய வாகையின்கண் விளைந்து முதிர்ந்தவி

நெற்றின் கொத்துக்கள் ஆரியக் கூத்தர் கயிற்றிலேறி ஆடுங் காலத்தே கொட்டும் பறை யொலிபோன்று இடையே விட்டுவிட்டு ஒலியாநிற்ப; கோடை நீடிய அகன்ற பெருங்குன்றத்து உழுவை - முதிர்வேனிற் பருவம் தனக்குரிய எல்லையைக் கடந்து நீளப்பெற்ற அகன்ற பெரிய மலை முழைஞ்சிலுறைகின்ற புலிகள்; நீர் இல் ஆர் ஆற்று நிவப்பன களிறு அட்டு - நீர் இல்லாமல் வறிதே கிடக்கும் கடத்தற்கரிய காட்டியாற்றினூடே அவற்றின் கரைகட்கு மேலே உயர்ந்து தோன்றுவனவாய் நீர் நாடிச் செல்லுகின்ற களிற்றி யானைகளைக் கொன்று தின்று; ஆள் இல் அத்தத்து உகளும் - ஆள் வழக்கற்று வறியவாய்க் கிடக்கின்ற பாலை நிலத்து அருவழிகளிலே பின்னும் இரை தேர்ந்து திரிதற்கிடனான; காடு இறந்தனர் - காட்டைக் கடந்து போயினர்; என்க.

(வி - ம்.) வாடலுழிஞ்சில்-வற்றிய வாகைமரம். நெற்றந்துணர் என்புழி அம் சாரியை, வாகைமரம் கொத்துக் கொத்தாகக் காய்க்கு மியல்பிற்று. ஆதலின் நெற்றந்துணர் என்றார். ஆடுகளம் ஈண்டு கழைக்கூத்தாடும் ஆரியக்கூத்தர் ஆடுமிடம். அவர்கள் ஆடும்போது - பறைமுழக்குவர். இடையிடையே தங்கள் வித்தைச் சிறப்பைக் கூறுங்கால் பறைமுழக்காமல் விட்டு மீண்டும் முழக்குவர். ஆகலின் ஆடுகளப்பறையின் அரிப்பன ஒலிப்ப என்றார். அரிப்பன ஒலிப்ப - விட்டு விட்டு ஒலிக்க. இனி அரித்தெழும் ஓசை உடையவாய் ஒலிப்ப எனினுமாம். அஃதாவது சலசலவொலி என்க. கோடைநீடுதலாவது - கார் முதலிய பருவங்கள் நிகழாமல் எப்பொழுதும் வேனிற்பருவமாகவே நீளுதல். இங்ஙனம் கோடைநீடின் முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் பாலை நிலமாகிவிடும், ஈண்டுக் குன்றமும் யாறும் கூறப்படுதலின் இது குறிஞ்சி திரிந்த பாலை என்க.

கோடை நீடியது நீர் இல்லாமைக்குக் குறிப்பேதுவாய் நின்றது. குன்றத்து உழுவை நீர்வறந்து கிடக்கும் கானாற்றினூடே நீர் நாடி வருவனவும் அந்த யாற்றின் கரைக்குமேலே உயர்ந்து தோன்றுவனவுமாகிய களிறுகளை அட்டுத் தின்று, அவ்விரை பெறுதபொழுது ஆளில் அத்தத்து இரைதேடித் திரியும் என்க. இங்ஙனம் உய்த்துணர்ந்து பொருள் கூறமாட்டாதார் தத்தமக்குத் தோன்றியவாறு பொருந்தாவுரை கூறுவாராயினர். இனி 'நீரிலாரஎற்று நிவப்பன களிறட்டு' என்னும் அடி செவிக்கின்பம் பயவாமலும் பொருட் பொருத்தமுறாமலும் இடத்தலைக் கூர்ந்து நோக்கின் இவ்வடி ''நீரிலாயற்று ணிவப்பன களிறட்டு'' என்றிருந்த அடியின் சிதைவாயிருத்தல் கூடும் என்று கருதுதல் கூடும். அங்ஙனமாயின் அச்சிதைவு பழைய வுரையாசிரியர் காலத்திற்கு முன்பு நிகழ்ந்ததாதல் வேண்டும் என்க.

காதலர் என்றது இகழ்ச்சி. என்னை? நம்மாற் காதலிக்கப்படுபவர், நம்மைக் கைவிட்டுப் பொருளையே காதலிப்பவர் என்பது தோன்ற நிற்றலின்.

''வாடல்.........உகளும் காடு'' என்னுமிதன்கண் அமைந்த உள்ளுறை வருமாறு:—அவர் கடந்த காட்டில் உழிஞ்சில் நெற்று ஒலிப்பதுபோன்று ஈண்டு அவர் போனபின் அலர் ஒலிப்பதாயிற்று.

கோடை நீடிய குன்றம் போல யான் ஆற்றாமைத் துயரம் நீள வருந்துகின்றேன். நீர் இல்லாத ஆற்றுள் வரும் களிறு அட்டுத்தின்று பின்னும் இரைதேர்ந்து திரியும் உழுவைபோன்று அவரது துணையிழந்த என்பால் பசலைபூத்து என் எழிலெலாம் தின்று பின்னும் என் உயிரையும் பருக முயல்கின்றது என்பதாம். இனி யான் இறந்துபடுதல் தேற்றம் என்று தோழிக்குத் தலைவி தன்னுட்கையாறெய்திய துணர்த்தல் இதன் பயன் என்றுணர்க.

ஈ - கஉ: மாமை.........பேரிதே

(இ - ள்.) மாமை - என்னுடைய மாமை நிறமோ அவர் இளமைபால் அரிநுண் பசலை பாஅய்ப பீரத்து எழில்மலர் புரைதல் வேண்டும - ஐதாய நுண்ணிய பசப்பூரப் பெற்றுப பீர்க்கினது அழகிய மலர் போறற்றென்றுதலை அவாவுகின்றது; அலர் - மற்றுக் கணவனை வினைவயிற பிரியுங்கால் ஆற்றியிருக்கும் திண்மை மகளிர்க்கு வேண்டாவோ இவளைக் காண்மின பசப்பூர்ந்து அழிகின்றாள் என்று என்னிலை கண்டு அயலார் தூற்றும பழிச்சொல்லோ; அனனி குறுக்கைப் பறந்தலை - அன்னி என்பான் குறுக்கை என்னும் ஊரின்கட் போர்க்களத்துத் தன்னை எதிர்த்த பகைவனாகிய; திதியன் தொல்நிலைப்புன்னை முழுமுதல் துமியப் பண்ணிக் குறைத்த ஞான்றை - திதியன என்பவனுக்குரிய தாய்ப் பழங்காலந் தொட்டு நிற்கின்ற நிலையினையுடைய புன்னை மரமானது முழுவதும் வேரோடு அற்றுப் போம்படி வெட்டி வீழ்த்தி அதனைத் துண்டுகளாகத் துணித்துப் போகட்ட பொழுது; வயிரியர் இன இசை ஆர்ப்பினும் பெரிது - அவனுடைய வெற்றிப் புகழைப் பாடிப் பரவிய பாணர்களின் இனிய இசையாலுண்டான ஆரவாரத்தினுங்காட்டிற் பெரிதாயிற்று என்பதாம்.

(வி - ம்.) மாமை - மாந்தளிர் நிறம். இந்த நிறம் காதலரால் விரும்பிக் காணப்பட்டது. இப்பொழுது அவர் விரும்பாமையால் தன்னுருக்கரந்து மற்றொன்றனுடைய நிறம்போலத் தோன்ற விரும்புகிறது என்று பொருள் தோன்றுதலுணர்க காதலர் என்னைக் கைவிட்டு மற்றொன்றைக் காதலித்துப் போயினர் அவர்க்கின்பமாயிருந்த என் மாமை நிறமும் என்னை வெறுத்து மற்றொரு நிறமாக மாறிற்று என்றவாறு இங்ஙனம் பொருள் தோன்றுதற்குக் காரணம் மாமைதான் பீர்க்கம்பூப் போலத் தோன்றுதற்கு அவாவும் என்பதுபட 'வேண்டும்' என ஒரு சொற்பெய்து வைத்தமையே. இது "செய்யா மரபினவாகியவற்றைத் தொழிற்படுத்தடக்கியவாறு".

குறுக்கை - ஓரூர். பறந்தலை - போர்க்களம். புன்னை – திதியன் என்பவனுடைய காவன்மரம். தொன்னிலைப்புன்னை முழுமுதல் எனக் கூட்டுக. முழுமுதல் துமியப்பண்ணி - என்றது புன்னைமரம் வெட்டிய பின்னர் வேரினின்றும் கிளைக்குமியல்புடையதாதலின், அங்ஙனம் கிளையாமைக்கு முழுவதும் வேரோடு வெட்டி வீழ்த்தி

என்றவாறு. தொன்னிலைப்புன்னை என்றமையால் அம்மரம் திதிய னுடைய முன்னோர் காலத்திலிருந்து பகைவரால் வீழ்த்தப்படாது நின்றமை கூறித் திதியனுடைய மறக்குடிச் சிறப்புணர்த்தியபடியாம். அத்தகைய மறக்குடி மன்னனாகிய திதியனையும் வென்றமையால் அன்னியின் மறப்புகழ் பாணரால் இசையினைத்தந்தபாலதாயிற்று என்க. வயிரியர் - கூத்தர் என்பாருமுளர். அவர்க்கும் அது பெயராயினும் இன்னிசை என்றமையால் பாணர் என்றலே சிறப்பாம். பாணர்க்கும் அப்பெயர் உண்டு என்பதைப் பிங்கலந்தையிற் காண்க. வயிரியர் அன்னி யின் இசையை நாடெங்கும் பரப்பினாற் போன்று என்னை ஏதின்மகளிர் ஊரெங்கும் வசை தூற்றுகின்றனர் என்றவாறு. ஆடவர் தங் கடமை மேற்செல்லும் பொழுது கரபுடையாகளிர் ஆற்றியிருத்தலே அறமாம். ஆற்றாமை பழியாம். ஈண்டு என்னாற்றாமையையே வசையாகத் தூற்று கின்றனர் என்கின்றாள். எனவே என்னை இவ்வாறு வருந்தக்கைவிட்டுச் சென்ற காதலரைப் பழிகூறுவார் இலர் என்பது குறிப்பு. இதனை,

> "பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
> துறந்தா ரவரென்பா ரில்"

எனவருந் திருக்குறளோடு ஒப்பு நோக்குக.

கரு - கக: போலந்தார்............துஞ்சாதேனே

(இ - ள்.) பொலம் தார் கடல் கால்கிளர்ந்த வென்றி நல் வேல் அரண் - பொன்னாலியன்ற மாலையினையும், கடலின்கண் வந்த மாற்றார் படை அஞ்சிப் புடைபெயர்ந்தோடி யடங்குதற்குக்காரண மான நன்மையையுடைய வேற் படையினையும் உடைய; வான வரம்பன் அடல்முனைக் கலங்கிய - வானவரம்பன் என்னும் அரச னுடைய கொலைத் தொழிலையுடைய போர்முனைக்கண் அவன் மறவராற் கலக்க முற்றோடிய; உடைமதில் ஓர் அரண் போல - அம் மன்னன் படையால் தகர்க்கப்பட்ட மதிலாகிய ஓரோவொரு அரணையுடைய அரணகத்துட் புகுந்து ஒளித்தவர் போன்று, அஞ்சுவரும் நோயொடு துஞ்சாதேன - அச்சம் வருகின்ற பிரிவாற் றாமைத் துன்பத்தோடே விழிதுயிலாதேனாகிய என்க.

பொலம் — பொன். கிளர்தல் புடைபெயர்தல். வானவரம்பன்— சேரன். சேரமன்னன் வேலாற் கடல் கால் கிளர்ந்த வென்றி என்றது, கடலின்கண் வந்த யவனப் படையைக் கால் கிளர்ந்து ஓடச்செய்த வென்றி என்றவாறு.

முனை - போர்முனைக்கட் படைமறவர். வானவரம்பன் ஏனைய அரண்களைக் கடந்து மதிலையும் உடைப்பானாக அவன் முனையாற் கலங்கி அம் மதிலாகிய ஓரேயரணை நம்பி அதனகத்துட் புக்கவர் துயிலாது வருந்தினாற் போன்று துயிலாது வருந்துவேன் என்றவாறு.

உடைமதிலோர் அரண்போலத் துஞ்சாதேன் - என்றுமோளனும் உடைமதிலாகிய ஓர் அரணகத்துள்ளோர் போலத் துஞ்சாதேன் என்பது கருத்தாகக் கொள்க. காட்டரண் முதலிய ஏனைய

அரணெலாம் கடந்து எஞ்சிய ஒரே அரணாகிய மதிலையும் உடைக்குங்கால் அதனகத்தோர் அஞ்சாதாராதல் இயல்பாதலும் உணர்க.

கஉ - கரு : யானே............கோல்லோ

(இ - ள்.) (கசு விழிதுயிலாதேனாகிய) யான் - யான்; ஆதிமந்திபோல-திருமாவளவன மகள் ஆதிமந்தி என்பாள் போன்று; காதலன் கெடுத்த சிறுமையொடு - கடல் கொண்டு போனமையாற் றன் காதலனைக் காணாத அலமரலோடு; நோய் கூர்ந்து - பிரிவாற்றாமைத்துயர் மிகப் பெற்று; பேதுற்று அலந்தனென் உழல்வென் கொல - வருந்தி நெஞ்சு சுழன்று இவ்வுலகில் திரியவல்லேனோ? இனி யான் இறந்து படுதல் தேற்றங்காண்! என்பதாம்.

(வி - ம்.) துஞ்சாதேனாகிய யான் எனக் கூட்டுக. ஆதிமந்தி - கரிகாற்சோழன் மகள். இவள் கணவற்கெடுத்த சிறுமையொடு நோய் கூர்ந்து அமைந்தமையை "உரைசான்ற மன்னன் கரிகால் வளவன் மகள் வஞ்சிக்கோன் தன்னைப் புனல்கொள்ளத் தான் புனலின் பின் சென்று கன்னவில் தோளாயோ, என்னக் கடல்வந்து முன்னிறுத்திக் காட்ட அவனைத் தழீஇக் கொண்டு பொன்னங் கொடிபோலப் போதந்தாள்," என வரும் கண்ணகியார் மொழியானு முணர்க. (சிலப் - உக : க0 - கரு.)

இனி இச்செய்யுள் நல்லிசைப்புலமையாட்டியார் வெள்ளிவீதியார், தம் கணவனைப் பிரிந்துழி ஆற்றாமையால் வருந்திப் பாடியது என்றும் அறிகின்றோம். இதனை இந்நூல சஎ - ஆஞ் செய்யுளில் ஔவையார் "வெள்ளி வீதியைப் போல நன்றுஞ் செலவயர்ந்திசினால்" என்று ஓதுதலான் உணரலாம். இச்செய்யுளை வெள்ளிவீதியார் தம் பெயரையாதல் கணவன் பெயரையாதல் குறித்துப் பாடாமையால் அகனைந்திணைப் பாடலாகிப் பன்னீரடியின் மிக்கிருத்தலான் இந்நெடுந்தொகையிற் கோக்கப்பட்டது. இங்ஙனமே இவர் இயற்றிய செய்யுள் ஒன்று அடிகள் குறைந்துள்ளமையின் குறுந்தொகையி விடம் பெற்றுளது. அது,

"கன்று முண்ணாது" எனத் தொடங்கும் செய்யுளாம் (குறுந்தொகை - உஎ.) அலந்தனென் உழல்வென் கொல்லோ என்றது இறந்துபடுவது தேற்றம் என்னும் குறிப்புடையது என்பர் பழைய வுரையாசிரியர்.

இனி இதனை, 'காதலர் காடிறந்தனர்; மாமை பசலைபாஅய்ப்பீரத் துய்மலர் புரைதல் வேண்டும்; அலர் பெரிது ; துஞ்சாதேனாகிய யான் ஆதிமந்திபோல உழல்வென் கொல்லோ' என்றியைக்க.

(பா - வே.) க. வியன்பெருங். (சரு)

## செய்யுள் சசு

திணை : மருதம்.

துறை : வாயில் வேண்டிச் சென்ற தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது.

(து - ம்.) அஃதாவது-தலைவி தலைவன் பரத்தைமை யொழுக்கங் காரணமாகப் பெரிதும் ஊடியிருப்பப் பரத்தையர் சேரியினின்றும் வந்து தலைவன் தோழியை வாயில் வேண்டியபொழுது அவள் அவனது கூடாவொழுக்கத்தை எடுத்துக் காட்டி வாயின் மறுப்பாள் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு "பெறற்கரும் பெரும்பொருள்" எனவரும் நூற்பாவின்கண் (தொல் - கற் - கூ.) 'நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக் காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்ப்பினும்' என வரும் விதி கொள்க.

இனி இதனை, ஆசிரியர் நச்சினார்க்கினியர் தலைவி கூற்றாகக் கருதி "அவனறிவு" என்னும் நூற்பாவில் (தொல் - கற் - சு) 'செல்லாக் காலைச் செல்கென விடுத்தலும்' எனவரும் துறைக்கு எடுத்துக் காட்டினர்.

இனி அவரே (தொல்: பொருளியலில்) 'உறுகண் ஓம்பல்' என்னும் நூற்பாவின்கண் இதனைத் தோழி கூற்றாகவே கொண்டு அவள் அறிவுடைமைக்குச் சான்றாகவும் எடுத்துக் காட்டினர்.

சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா
னூர்மடி கங்குலி னோன்றளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டி னீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுடன் னிரிய
ரு. வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமல ராரு மூர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்
றுறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தற்
பிறரு மொருத்தியை எம்மனைத் தந்து
கo. வதுவை யயர்ந்தனை யென்ப வஃதியாங்
கூறேம் வாழிய ரெந்தை செறுநர்
களிறுடை யருஞ்சமந் ததைய நூறு
மொளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்
பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவென்
கரு. னொண்டொடி நெகிழினு நெகிழ்க
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ.

—அள்ளூர் நன்முல்லையார்.

(உரை)

க - சு: சேற்று............ஊர

(இ - ள்.) சேற்று நிலை முனைஇய செங்கண் காரான் - கட்டுத் துறையின்கண் தானே ஆக்கிக் கொண்ட சேற்றில்

நிற்கும் நிலைமையினை வெறுத்த சிவந்த கண்களையுடைய எருமையானது; ஊர்மடி கங்குலின் நோன்தளை பரிந்து - ஊரிலுள்ள மக்கள் அனைவரும் துயிலுகின்ற நள்ளிரவிலே வலிய கயிற்றை அறுத்துக் கொண்டு புறப்பட்டுப் போய்; கூர்முள்வேலி கோட்டின் நீக்கி - கூர்த்த முள்ளையுடைய வேலியைத் தனது மருப்பினால் அகற்றி; நீர்முதிர் பழனத்து மீன் உடன் இரிய - நீர் மிக்குள்ள பொது நிலத்திலே; ஆங்குள்ள மீன்கள் ஒருங்கே அஞ்சி ஓடுமாறு நீரிலிறங்கி; அம் தூம்பு வள்ளை மயக்கி - அந்நீரின் மேற் படர்ந்துள்ள அழகிய உட்டுளையமைந்த வள்ளைக் கொடிகளை நிலைகுலையச் செய்து; வண்டு ஊது தாமரைப் பனிமலர் ஆரும் ஊர - தம்முள்ளே வண்டுகள் தாதூதுகின்ற குவிந்த குளிர்ந்த தாமரை மலர்களைத் தின்னுதற்கிடனான வளமிக்க ஊரனே! என்க.

**(வி - ம்.)** தலைவியோடு இன்புறறமர்ந்து வாழும் நிலையைத் தானே கலக்கிக் கொண்டமை தோன்ற தானே ஆக்கிக்கொண்ட சேற்றின் நிற்றலை வெறுத்த காரான்—என்றாள். ஈண்டுதன்கண் அமைந்த உள்ளுறைக்குக் காரான் தலைவனுக் குவமையாதற்கு இங்ஙனம் கூறினாள். காரான்-எருமை ஆ என்பது பெற்றம் எருமை மரை என்னும் மூன்று விலங்குகட்கும் பெண்பாற் பெயர். எருமை என்பது தோன்றக் காரான் என்றாள். செங்கட்காரான் என்புழிச் செய்யுளின்பம் உணர்க. தளை - கயிறு. தலைவியின் பேரன்பினை உள்ளுறைக்கண் உவமையாதற்கு நோன்கயிறு என்கின்றாள்; எனவே, தலைவனைக் கண்ணோட்டமிலி என்பது குறிப்பாயிற்று. அறவொழுக்கம் பேணுதலைக் கூர்முள் வேலியாக உள்ளுறுத்தாள். அதனையும் கைவிட்டுப் போனான் என்பாள் கோட்டின் நீக்கி என்றாள். பழனம் - ஊர்ப்பொதுநிலம்; இது பரத்தையர் சேரிக்கு உள்ளுறைக்கண் உவமை.

தாமரை இரவிற் குவிதலின் வண்டுகள் உள்ளே ஊதும் என்றார் பழைய உரையாசிரியர். இனி, இதன்கண் அமைந்த உள்ளுறையைப் பழைய உரையாசிரியர்,

"காரான் தனக்கு நிலையென்று புகுத்தப்பட்ட கொட்டிலை நீராலும் சாணகத்தாலும் தானே சேறாக்கிக்கொண்டு தளையையும் அறுத்துக் கொண்டு பழனத்துக்குக் காவலாகிய வேலியையுங் கோட்டாலெடுத்து, மீன்களிரியத் தாமரையைச் சூழ்ந்த வள்ளையை மயக்கி, மலர்ச்சியின்றி வண்டொடு குவிந்த தாமரையை ஆர்ந்தாற்போல, நீயே ஆதரித்துக் கொள்ளப்பட்ட இவளை நீதானே வேறுபடுத்தி நாணமாகிய தளையையு மறுத்துக்கொண்டு பரத்தையர்க்குக் காவலாகிய விறலியையும் பாணனாகிய கோட்டாலே நீக்கி, அப் பரத்தையருடனுறையும் தோழிமார் இரிய அப் பரத்தையருடைய தாய்மாரையும் மயக்கி அகமலர்ந்துன்னை எதிரேற்றுக் கொள்ளாத மகளிரை நுகர்வானொருத்தனல்லையோ என்றவாறு" என விரித்துரைப்பர்.

### எ - கக : யாரையோ............எந்தை

(இ - ள்.) நீ யாரையோ - நீ எமக்கு எவ்வுறவுடையை? நின்னொடு யாம் புலத்தற்கு; நின் புலக்கேம் - ஏதிலாளனாகிய

நின்னை யாம் புலவேங் காண்! எந்தை எந்தையே! பிறரும் எம் மனைத் தந்து - யாங்கள் வாளாதிருக்கவேயும் இவ்வூர் ஏதின் மாக்கள் எங்கள் இல்லத்திற்கு வந்து யாங்கள் விரும்பாத செய்தியைக் கூறுபவர்; "வார் உற்று உறையிறந்து ஒளிரும் தாழ் இருங்கூந்தல் ஒருத்தியை - நீ நீண்டு மழைக்காலின் அழகினை யும் கடந்து திகழுகின்ற தாழ்ந்த கரிய கூந்தலையுடைய ஒரு பரத்தை மகளை; வதுவை அயர்ந்தனை என்ப - வதுவை செய்து கொண்டாய,' என்று கூறுகின்றனர்; அஃது யாம் கூறேம் - அப் பழியை யாங்கள் நினக்குக் கூறுவே மல்லேம்; வாழியர் - அச் செய்தி வாய்மையாயின் நீ அந்த மணமகளோடு நீடூழி வாழ்க! என்று வாழ்த்தவும் வாழ்த்துகின்றேம் என்க.

(வி - ம்.) புலத்தலும் அன்புடையார்மாட்டே பயன்தருவதாம், நீயோ அன்பு சிறிதுமில்லாத ஏதிலன் ஆகினை என்பாள். நீ யாரையோ யாங்கள் புலத்தற்கு, அதற்குந் தகுதியில்லாயாதலின் யாம் புலக் கின்றிலேம் என்பாள், நிற்புலக்கேம் என்றுள். இதனை,

"நோதல் எவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி" (குறள் - ௧௩௦௮)

எனவரும் திருக்குறட் கருத்தோடு ஒப்புநோக்குக!

உறை - மழைக்கால். மழைக்காலின் அழகையும் கடந்த என்க. ஒருத்தி என்றது பரத்தை யொருத்தியை என்றவாறு; உன்னை யாங் கிருக்கின்றாய் என்று காடி உன் செய்தியை யாங்கள் வினவுவதுமில்லை; அங்ஙனமிருந்தும் ஏதிலர் எம் மனைக்கே வலிய அச் செய்தியைக் கொணர்ந்து கூறுகின்றனர் என்பாள் 'எம்மனைத் தந்து' என்றனள். அவரெல்லாம் நின் பழி கூறி எடமல்லல் கண்டு களிக்கவே கூறுகின்றன ராயினும் யாங்கள் அதுபற்றிக் கவலைகொள்வதுகிலே. ஆதலின அஃதி யாங் கூறேம் என்கின்றாள் என்க. வாழிய என்றது மணந்தாரை வாழ்த்தும் மரபுண்மையால் வாழ்க! என்று அசதியாடியபடியாம். எந்தை என்றது தலைவனைத் தொன்னெறி முறைமையாய் வரும் புலனெறி வழக்கில் வந்த ஓர் விளி. முறைப்பெயர் அன்று இதனை, "அன்னை என்னை" எனவரும் (தொல் - பொருளியல் ௫௨) நூற்பாவால் வழு வமைதிச் சொல்லாகக் கொள்க.

### ௧௧ - ௧௬ : செறுநர்..............யாரோ

(இ - ள்.) பெரும - பெருமானே!; செறுநர் களிறு உடை அருஞ் சமம் ததைய நூறும் ஒளிறு வாள் தானை - பகை மன்னர் யானைப் படைமுதலிய நால்வகைப் படையோடும் வந்து எதிர்கின்ற போர்களிலெல்லாம் அவருடைய வெல்லுதற்கரிய போர்கள் தோறும் அவர்தம் ஆற்றல் சிதையும்படி நூறுக்குகின்ற ஒளிமிக்க வாட்படையேந்திய படையினையும், கொற்றம்-வெற்றியினையும் உடை யவனாகிய; செழியன்-பாண்டியனுடைய; பிண்டநெல்லின் அள்ளூர்

அன்ன என் - நெற்குவியலையுடைய அள்ளூர் போன்ற நலமுடைய எனது; ஒள் தொடி நெகிழினும் நெகிழ்க - ஒள்ளிய குறுந்தொடி நெகிழ்வதாயினும் நெகிழ்ந்து ஒழிக; சென்றீ - நீ நின் புதுமணப் பரத்தையின்பாலே செல்லுக; யாரே நின் தகைக்குநர் - யார்தாம் நின்னைச் செல்லாது தடுக்க வல்லுநர்? என்பதாம.

(வி - ம்.) நாறும் கொற்றத்தையுடைய செழியன் என்க. நாறுதல் – நுறுக்குதல் – கொன்று குவித்தல்; இதனை நாழிலாட்டல், என்பர். அள்ளூர்–அள்ளியூர் என்பர் பழைய வுரையாசிரியர். அள்ளூர் ஐம்புலவின்பமும் ஆசத்தருதல்பற்றி வந்த பயனுவமை. இதனைப் பாடிய புலவர் தாமும இவ்வூரினர் என்பது அவர் பெயரால் அறியப் படும். தோழி கூற்றாயின் என ஒண்டொடி என்றது தலைவிக்கும் தனக் கும் வேறுபாடு நோக்காமற் கூறியபடியாம். இவ்வாறு கூறுதல் புல னெறி வழக்கம். இதனை, "தாயத்தி னடையா வீயச் செல்லா வினை வயிற்றங்கா வெம்மென வருஉம் கிழமைத் தோற்றம் அல்லவாயினும் புல்லுவ வுளவே" என்னும் நூற்பாவால் ஆசிரியர் தொல்காப்பியனார் (பொருளியல் - உஎ) வழுவமைதி கூறினர். "என்தோள் எழுதிய தொய்யிலும்" எனக் கலியின்கண் (கஅ) தோழி தலைவியின் தோளைத் தன்றோளாகக் கூறுதலறிக. ஈண்டும் தோழி தலைவியின் தொடி என்கின்றாள் என்க. தலைவி கூற்றாயின் இவ்வாராய்ச்சியின்று. இனி, பழைய வுரையாசிரியர் "ஒண்டொடி என்று ஆகுபெயரால் தலைவியை ஆக்கி அவள் மெலியினும் மெலிக வென்பாருமுளர்," என்று குறிப்பிட் டுள்ளனர்.

இனி இதனை, ஊர! பிறரும் நீ ஒருத்தியை வதுவை யயர்ந்தனை என்ப, யாம அது கூறேம்! என் ஒண்டொடி நெகிழினும் நெகிழ்க! பெரும! சென்றீ யார் நின்றகைக்குநர்? என இயைத்திடுக.

பா - வே : க. நம்மனை : கங. கொற்கைச்; கரு. ரன்னவெம்மொ; (நீ யாரையோ? என்று வினவியவள் யெம்மனை என்பதே பொருந்தும். நம்மனை என்னும் பாடம் சிறப்பின்று. ஏனையோர் இப் பாடத்தையே கொண்டனர்.) (சசு)

## செய்யுள் சஎ

திணை : பாலை.

துறை : தலைமகன் இடைச்சுரத்து அழிந்த நெஞ்சிற்குச் சொல் லியது.

(து - ம்.) அஃதாவது - தலைவன் தலைவியைப் பிரிந்து பொரு ளீட்டப் போவானுக இடைவழியிலே தலைவியின் பிரிவாற்றாது அவன் நெஞ்சு அழிந்தது. அந் நெஞ்சினை வற்புறுத்தி மீண்டும் மேற்கொண்ட பொருள்செய்வினைக்கண் ஊக்குபவன் அந் நெஞ்சிற்குக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "கரணத்தி னமைந்து முடிந்த காலை" என வரும் (தொல் - கற் - ரு) நூற்பாவின்கண் "மீட்டுவரவு ஆய்ந்த வகையின் கண்ணும்" எனவரும் விதிகொள்க.

அழிவி லுள்ளம் வழிவழிச் சிறப்ப
வினையிவண் முடித்தன மாயின் வல்விரைந்
தெழுவினி வாழிய நெஞ்சே யொலிதலை
யலங்குகழை நரலத் தாக்கி விலங்கெழுந்து
௫. கடுவளி யுருத்திய கொடிவிடு கூரெரி
விடாமுகை யடுக்கம் பாய்தலி னுடனியைந்
தலைக்கண் விடுநொடி கணக்கலை யகற்றும்
வெம்முனை யருஞ்சுர நீந்திக் கைம்மிக்
கான்சுடர் கல்சேர்பு மறைய மனைவயி
௧0 னொண்டொடி மகளிர் வெண்டிரிக் கொளாஅலிற்
குடக்கூடப் புறவின் சேங்காற் சேவல்
நெடுநிலை வியனகர் வீழ்துணைப் பயிரும்
புலம்பொடு வந்த புன்கண் மாலை
யாண்டுளர் கொல்லெனக் கலிழ்வோ ளெய்தி
௧௫. யிழையணி நெடுந்தேர்க் கைவண் செழியன்
மழைவிளை யாடும் வளங்கெழு சிறுமலைச்
சிலம்பிற் கூதளங் கமழும் வெற்பின்
வேய்புரை பணைத்தோட் பாயு
நோய்சா வீட முயங்குகம் பலவே.

— ஆலம்பேரிச் சாத்தனார்.

(உரை)

௩. வாழிய நெஞ்சே

(இ - ள்.) *நெஞ்சமே!—என் நெஞ்சமே! யாம் எண்ணித் துணிந்த வினை கெட அழுங்காதே கொள்!; வாழிய—நீ நீடுவாழ்வாயாக! என்க.*

(வி - ம்.) *இஃது இடைச் சுரத்திலே தலைவியை நினைந்து செல வழுங்கும் நெஞ்சை விளிக்கின்றானாகலின் அவன் குறிப்பு யாம் எண்ணித் துணிந்த வினைகெட அழுங்காதேகொள் என்பதாயிற்று. அதன் போக்கினைத் தடுக்கின்றானாகலின் அதற்கிரங்கி வாழ்த்தினன் என்க*

க - உ அழிவில் ...... .......ஆயின்

(இ - ள்.) *அழிவு இல் உள்ளம் வழி வழிச் சிறப்ப—நமக்கு இயல்பாக அமைந்துள்ளதாகிய இடுக்கண் கண்டு அழிதலில்லாத*

சிறந்த ஊக்கமானது மேலும் மேலும் சிறந்தோங்கும்படி; இவண் வினை முடித்தனம் ஆயின் - இவ்விடத்தே யாம மேற்கொண்டிருக்கின்ற பொருளை செய்யும் வினையை நனகு செய்துமுடித்தோமாகுல்; என்க.

(வி - ம்.) பண்டு அந்நெஞ்சமே பலகாலும் ஊக்குவித்தமையின் அதனைப் பாராட்டும் வாயிலாய் ஊக்கமழிந்தக்கால் உண்டாகும் இன்னலையும் இழிவையும் கூறுமற் கூறுகின்றான் தலைவன். இவ்வினை முடியாம லழுங்கினையாயின் நீ விழையும் அவ்வின்பமும் பின்னர் அரிதாம் என்பது குறிப்பு. இக் குறிப்புப் பொருள் "அடைமொழி இனமல்லதுந் தரும் ஆண்டுறின்" என்னும் உத்திபற்றி அழிவில் உள்ளம் என்புழிவந்த அடைமொழியால் சொல்லுவான் குறிப்புக்கிணங்க உய்த்துணர்ந்து கொள்ளுமாற்றாற் கொண்டாம். மேலும் இவ்வாறு கொள்ளும் குறிப்புப் பொருள்கட்கும் இஃதொக்கும்.

கூ - அு: ஒலிதலை.........நீந்தி

(இ - ள்.) கடுவளி ஒலிதலை அலங்கு கழை நரலத்தாக்கி சூறைக்காற்றானது தழைத்த நுனியையுடைய அசைகின்ற மூங்கிற்கோல்கள் ஒன்றோடொன்று உராஅயந்து ஒலிக்குமபடி மோதி; உருத்திய கொடிவிடு கூர் எரி - வெப்பமுறச் செய்தமையாற் றோன்றிக் கொழுந்துவிட்டு மிகுகின்ற காட்டுத் தீயானது; (கடுவளி) உடன் இயைந்து விலங்கு எழுந்து விடர்முகை அடுக்கம் பாய்தலின் - அச் சூறைக்காற்றோடு சேர்ந்து அவவிடத்தினின்று விலகி உயரவெழுந்து பிளவபுண்ட முழைஞ்சுகளையுடைய பக்கமலையிலே பரவி எரிதலாலே; அமைக்கண் விடுநொடி கலைக்கணம் அகற்றும் - அம மலையிலுள்ள மூங்கில்களின் கணுக்கள் வெடித்தலால் எழுகின்ற ஒலி அங்கு வாழகின்ற முசுக்கலை எனனும குரங்குக் கூட்டங்களை ஓட்டுதற்கிடனாய்; வெமபுனை அருஞ்சுரம் நீந்தி - வெட்சி மறவரும கரந்தை மறவரும் போர் செய்தற்குரிய கடத்தற்கரிய பாலை நிலத்து வழியைக் கடந்து போய் என்க.

(வி - ம்.) ஒலித்தல்-தழைத்தல். அலங்குதல்-அசைதல். கடுவளி தாக்கி வெப்பமுறச் செய்தலால் பிறந்த எரி என்றவாறு. மூங்கில் ஒன்றனோடு ஒன்று உராய்தலால் தீத்தோன்றுதல் இயல்பு. உருத்திய எரி, கொடிவிடு எரி, கூர் எரி எனத் தனித்தனி கூட்டுக. கூர்: மிகுதிப் பொருட்டு. எரி, கடுவளி யுடனியைந்து விலங்கி எழுந்து பாய்தலின் என்க. பாய்தல் - பரவுதல். விடர் - வெடிப்பு; பிளவு. முகை - முழை. அடுக்கம் - பக்கமலைகள். அமைக்கண் - மூங்கிலின் கணு. தீப்பற்றி எரியும்பொழுது கணுக்கள் ஒலியோடு பிளத்தலியல்பு. இவ் வோசைக்கு அஞ்சி கலைக்கணங்கள் ஓடின என்பது கருத்து. கலை-முசுக்கலை - குரங்கு. மான்கலை என்பாருமுளர். வளி தாக்குதலால் மூங்கிலிற் பிறந்த தீ தன்னினமாகிய மூங்கிலை அழிக்க அங்கு வாழும் கலைக்கணங்கள் அஞ்சி ஓடும் என்றான். நின்னைத் தாக்கிய காமத்தால் யாம் வினைதவிர்ந்துழிப் பிறக்கும் நல்குரவினால் நம்மினமும் கெடும்,

நம்மை நம்பி வாழுஞ் சுற்றத்தாரும் ஆதரவின்றி அலமந்தோடுவர் எனப் பொருட்புறத்தே இறைச்சி தோன்றுதற்கு.

ஆக்கொள்ளும் வெட்சியாரும் அவரைப் பின்தொடர்ந்து வளைக்கும் கரந்தையாரும் போரிடும் இடம் பாலையாகலின் வெம்முனை அருஞ்சுரம் என்றான். இத்தகைய இடமாதலின் நம்முள்ளமும் நீயும் நானும் போரிடும் வெம்முனையாயிற்றுப் போலும் என்பது குறிப்பு.

அ - கச: கைம்மிக்...........எய்தி

(இ - ள்.) அகன் சுடர் கல் சேர்பு மறைய - விரிந்த சுடரையுடைய ஞாயிற்றுமண்டிலம் மேற்றிசைக்கண் மலையினை அடைந்து மறையாநிற்ப - மனைவயின் ஒளதொடிமகளிர் வெள் திரிக் கொளாலின் - நமமில்லத்துள்ள ஏவற்சிலதியராகிய ஒள்ளிய வளையலையுடைய மகளிர் தாம தகளியின்கண் இட்ட வெள்ளிய திரியிடத்தே விளக்கை ஏற்றுதலாலே, நெடுவியல்நகர் குறு நடைப்புறவின் செங்கால் சேவல் வீழ்துணை பயிரும் - நெடிய மேனிலை மாடங்களையுடைய அகன்ற நமதில்லததின்கண் அம் மாடத்தே உறைகின்ற குறுகுறு நடக்கும் நடையையுடைய புற வினத்துச் சிவந்த கால்களையுடைய சேவலானது தான் விரும்பிய பெடையினை அழைத்தற்குக் காரணமாய்; புலமபொடு வந்த - பிரிந் துறைவோர் திறத்தே தனிமைத் தன்மையை; செய்தலொடு வந்த; புன்கண் மாலை - துன்பத்தையுடைய அநதியாலைப் பொழுதிலே; கைம்மிக்கு - பிரிவாற்றுமைத் துயர் மிகுவதனாலே, யாண்டு உளர் கொல்லோ எனக் கலிழுவோள் எய்தி - நம்மை நினைந்து நம்பெருமான் இபபொழுது எவ்விடத்துளரோ என்று கூறி அழு கின்ற நங்காதலியை யாம் சென்றெய்தி என்க.

(வி - ம்.) கைமிக்கு என்பதனை (கக) புன்கண்மாலை என்பதன் பின் கூட்டுக. கைம்மிகுதல் - எல்லை கடத்தல். அகன்சுடர் - ஞாயிறு. திரிக்கொள்ளுதல் - விளக்கேற்றுதல். திரிக்கொளலும் புறவுச்சேவல் வீழ்துணைப் பயிர்தற்குக் குறிப்பேதுவாய் நின்றது. சேவல் திரிக் கொளுவுதல் கண்டு இரவு வருதல் அறிந்து துணையை அழைக்கும் என்றவாறு. சேவல் பெடையை அழைத்தலும் மாலைவரவும் தலைவியின் துயர் கைம்மிகுவதற்கு ஏதுக்கள். புலம்பு - சுற்றத்தார் சூழலினிருந் தேயும் தனித்துறைவது போல்வதொரு துன்பவுணர்ச்சி. இத் துயர் மாலையில் மிகுதலின் அதனோடு மாலைவரும் என்றான். இதனை,

> ''காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
> மாலை மலருமிந் நோய்'' (குறள் - ககஉஎ)

எனவும்,

> ''பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
> துன்பம் வளர வரும்'' (குறள் - ககஉக)

எனவும் வருந் திருக்குறள்களானு முணர்க.

(அ) நீந்தி (கச) எய்தி என இயையும்.

கரு - கக: இழை........பலவே

(இ - ள்.) நெடுந்தேர் கைவண் இழை அணி செழியன் - நெடிய தேரையும் இரவலர்க்கு வழங்கும் வள்ளன்மையையும் உடைய அணிகலனணிந்த பாண்டியனுடைய; மழை விளையாடும் வளம் கெழு சிறுமலைச் சிலம்பில - முகில்கள் தவழுகின்ற வளம் பொருந்திய சிறுமலை என்னும் பெயருடைய மலையினது; கூதளம் கமழும் வெற்பின - கூதாள மலர் மணங்கமழுகின்ற பக்கமலையிலே வளம் பெற வளருகின்ற; வேய்புரை பணைத் தோள் பாயும் நோய் அசா வீட - மூங்கிலை ஒத்த பருத்த தோள்களிலே பரவும் பசப்புறு பருவரல் தீருமாறு; பல முயங்குகம் - யாம் இனிதே பல படியாகத் தழுவுவேம் என்க.

(வி - ம்.) சிறுமலையாகிய சிலம்பு என்க. கூதளம் - ஒருவகை நறுமண மலருடைய செடி. இதனைக் கூதாளம், எனவும் கூதாளி எனவும் வழங்குப. வெற்பு என்றது, ஈண்டுப் பக்கமலையை. சிறுமலையின் பக்கமலைகளிலே வளரும் மூங்கில் பெரிதும் வளமுடையதாதல் பற்றி அதனை விதந்தெடுத்துக் கூறினன். பல - ஈண்டுப் பலவகையான முயக்கத்தைக் குறித்தது. பிரிந்து பின்னர்க் கூடுவார் கூட்டம் பேரின்பம் பயப்பதாகலின் இப் பிரிவும் இன்பத்திற்கோர் ஏதுவென்றுணுமாம்.

பிரிந்துறைதலாலே ஏக்கறவுடையராகிய காதலர் மீண்டுங் கூடுங்கால் இன்பம் பெருகும் என்பதனை,

> "அறனு மீகையும் அன்பும் கிளையும்
> புகழு மின்புந் தருதலிற் புறம் பெயர்ந்து
> தருவது துணிந்தமை பெரிதே
> விரிபூங் கோதை விளங்கிழை பொருளே"

எனவரும் பழம்பாடலானும் உணர்க.

(தொல் - அகத். சச. இளம்பூ - மேற்கோள்)

இனி இதனான் அழிவில் உள்ளம் வழி வழிச் சிறப்ப இவண் வினை முடித்தனமாயின், நீ விரும்புகின்ற இன்பமும் இற்றையின்பத்தினும் பலபடி சிறந்த புத்தின்பமும் பெறுவேம்காண் என்றுணர்த்துவான் பல படியானும் முயங்குகம் என்றான்.

உ - ங: வல்விரைந்து..........எழு

(இ - ள்.) இனி வல்விரைந்து எழு - இப்பொழுது இவ்வாறு செலவழுங்காமல் எண்ணித் துணிந்த வினைமேற் செல்லுதற்கு மிகவும் விரைந்து எழுந்து என்னுடன் வருவாயாக! என்பதாம்.

(வி - ம்.) இனி - இப்பொழுது. எழுந்து என்னுடன் இயைந்து வருதி என்றவாறு.

இனி இதனை, நெஞ்சே யாம் உள்ளம் சிறப்ப முடித்தனமாயின் அப்பொழுதே சுரம் நீந்திப் போய் நகரில் மாலையில் யாண்டுளர் கொல்லோ? எனக் கலிழ்வோள் எய்திப் பணைத்தோள் பாயு நோய் அசா விடப் பலமுயங்குகம், இப்பொழுது என்னுடனியைந்து வினை செய விரைந்து எழு! வாழிய; என இயைக்க.

பா - வே : ௬. அருத்திய; ௭. கலைக்கணம்; ௧௨ நிளந்துணை. (௬௭)

## செய்யுள் ௬௮

**திணை :** குறிஞ்சி.

**துறை :** செவிலித்தாய்க்குத் தோழி அறத்தொடு நின்றது.

(து - ம்.) அஃதாவது களவொழுக்கம் நிகழ்வுழிப் பல்வேறு இடையூறுகளாலே தலைவி தலைவனைச காணாமல் பெரிதும் ஆற்றாமை யுடையளாய் மெய்வேறுபட்டு ஊணும் உறக்கமுமின்றி வருந்த அந்நிலை கண்ட செவிலித்தாய் பெரிதும் வருந்தி அவள் மெலிவிற்குக் காரணம் யாதென ஆராய்வாள் தோழியை நோக்கி நீ அறிதியோ இவள் இந்நிலையள் ஆதற்குக் காரணம என்று வினவ, அது கேட்ட தோழி தலைவி கற்புக் கடம் பூண்ட செய்தியைச் செவிலிக்குக் குறிப் பாக அறிவுறுத்துவாள் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "நாற்றமுந் தோற்றமும்" எனவரும் (தொல்-கள- ௨௪) நூற்பாவின்கண், 'முன்னிலை அறன் எனப்படுதல் என்றிரு வகைப் புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்' எனவரும் விதி கொள்க.

அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்
பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி யதன்றிறம்
யானுந் தெற்றென வுணரேன் மேனாள்
௫. மலிபூஞ் சாரலென் றோழி மாரோ
டொலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப்
புலிபுலி யென்னும் பூசறோன் ற
வொண்செங் கழுநீர்க் கண்போ லாயிதழ்
ஊசி போகிய சூழ்செய் மாலையன்
௧௦ பக்கஞ் சேர்த்திய செச்சைக் கண்ணியன்
குயமண் டாகஞ் செஞ்சாந்து நீவி
வரிபுனை வில்ல னொருகணை தெரிந்துகொண்
டியாதோ மற்றம் மாதிறம் படரென

வினவி நிற்றந் தோனே யவற்கண்
கடு. டெம்முள் ளெம்முண் மெய்ம மறை பொடுங்கி
நாணி நின்றனெ னாகப் பேணி
யைவகை வகுத்த கூந்த லாய்நுதன்
மையீ ரோதி மடவீர் நும்வாய்ப்
பொய்யு முளவோ வென்றனன் பையெனப்
உ0. பரி முடுகு தவிர்த்த தேர னெதிர்மறுத்து
நின்மக ளுண்கண் பன்மா ணோக்கிச்
சென்றோன் மன்ற வக் குன்றுகிழ வோனே
பகன்மா யந்திப் படுசுட ரமையத்
தவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்
உடு. மகனே தோழி யென்றனள்
ளதனள வுண்டுகோண் மதிவல் லோர்க்கே.

—தங்கால் முடக்கோற்றனார்.

(உரை)

க - எ : அன்னாய்............தோன்ற

(இ - ள்.) *அன்னை - தாயே!; நின்மகள் பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு நனி பசந்தனள் என - உன் மகள் ஆன்பாலும் பருகிலளாய்த் துயரங்கொண்டு மிகவும் பசப்பூரப் பெற்றனள் என்று சொல்லி, வினவுதி - அதற்குக் காரணம் அறிகின்றிலேன் நீ அறிதியோ? என்று என்னை வினவுகின்றனையல்லையோ!; அதன் திறம் யானும் தெற்றென உணரேன் - அதற்குரிய காரணம் இஃதென்று யானும் தெளிவாக அறிகிலேன், அறியேன் ஆயினும்; அன்னாய் வாழி வேண்டு - தாயே யான இப்பொழுது நினக்குக் கூறுவதொன்றனைக் கூர்ந்து கேட்டருளவாயாக! அஃதென்னையோவெனின்; மேல் நாள் என் தோழிமாரோடு ஒலி சினை வேங்கை மலி பூஞ்சாரல் கொய்குவம் சென்றுழி - முன்னர் ஒரு நாள் யான என தோழியரோடு புதிதாகத் தழைத்துள்ள கிளைகளையுடைய வேங்கை மரங்கள் மிகுந்த மலர்களையுடைய மலைச் சாரலின்கண் வேங்கை மலர் கொய்வதற்குச் சென்ற பொழுது; புலி புலி என்னும் பூசல் தோன்ற - மலர் கொய்யும் என் தோழியர் புலி புலி, புலி புலி, புலி புலி என்று கூவும் ஆரவாரம் எழுந்ததாக; என்க.*

(வி - ம்.) ஈண்டு அன்னாய் என்று விளிப்பவள் விளிக்கப்படும் செவிலியின் மகளாகவும் தலைவியைப் பேணுவதில் அவளுக்கிருக்கும் விழிப்பு மிகுதிதோன்ற நின்மகள் என்கின்றாள் தோழி; அவள் அங்ஙனம் கூறியது தலைவியை என்க. பாலும் உண்ணாள் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. பாலும் உண்ணாள் எனவே ஏதும் உண்டிலள் என்றாளாயிற்று. ஈண்டுச் செவிலி கூற்றைத் தோழி கொண்டு கூறிய **'பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு நனி பசந்தனள்'** என்பது புணர்ச்சிக்கு நிமித்தமாகாதனபோன்று காட்டி ஆராய்வார்க்குப் புணர்ச்சி நிமித்தமாகத் தோன்றுகின்ற மெய்ப்பாடுகளாம். இங்ஙனமாதலைத் - துன்பத்துப் புலப்பல், பசியட நிற்றல், பசலைபாய்தல், என்றோதுவர் ஆசிரியர் தொல்காப்பியனார். இவையிற்றுள் பசியட நிற்றல் என்னும் ஒரு மெய்ப்பாட்டிற்கே பேராசிரியர் 'அன்னாய்.........வினவுதி' என்னும் இவ்வடிகளை எடுத்துக் காட்டினர் (தொல்-மெய்ப்பா-உஉ).

அதன் திறம் - அங்ஙனமாதற்குரிய காரணம். தெற்றென உணரேன் எனவே யான் உனக்குக் கூறுமிந் நிகழ்ச்சி காரணமாக விருக்குமோ? என்று ஐயவுணர்வுடையேன் என்றாளாயிற்று. ஆகவே நீ என் கூற்றை விரும்பிக் கூர்ந்துகேள் என்பது பட அன்னாய் வாழி வேண்டு என்று தொடங்குகின்றாள்.

புலி புலி என்று கூவி அச்சுறுத்தினால் "வேங்கை மலர்கொய்யத் தாழ்ந்து கொடுக்கும் என்னும் ஒரு பேதைத்தன்மை, அதுவும் மலையில் வாழ்வார்க்கு உள்ளதோர் பண்பு," என்று விளக்கினர் பழையவுரையாசிரியர்.

மலர் கொய்குவம் சென்றுழிப் புலி புலி யென்னும் பூசல் தோன்ற எனத் தோழி எண்மையாக இயம்புகின்றாள். அங்ஙனம் பூசலிடும் வழக்கம் செவிலி அறிவள் ஆதலால் என்க. இங்ஙனம் நம்புதல் மலைநாட்டினர்க்குள்ள ஒரு பேதைத் தன்மை என்று விளக்குகின்ற பழையவுரையாசிரியர் ஆய்வுரை பாராட்டற் பாலது.

### ௯ - ௧௪ : ஒண்செங்............நிற்றந்தோனே

(இ - ள்.) ஒள் செங்கழுநீர்க் கண்போல் ஆய் இதழ் சூழ் செய் ஊசிபோகிய மாலையன் - அப்பொழுது ஒரு நம்பி ஒள்ளிய செங்கழுநீர் என்னும் நீர்ப் பூவினுள் வைத்து மகளிர் கண்போன்று அழகாக மலர்ந்துள்ளனவாக ஆராய்ந்து எடுத்த மலர்களைச் சூழவைத்து ஊசியைச் செலுத்தித் தைத்த தொடை மாலையை மார்பிலணிந்தவனாய்; செச்சைக் கண்ணியன் - சிவந்த மலராற் புனைந்த கண்ணியைத் தலையிற் பிதகையில் ஒருபுறமாகக் கட்டியவனாய்; குயம் மண்டு ஆகம் செஞ்சாந்து நீவி - மகளிர் முலைகள் அழுந்துதற்கேற்ற விரிந்த மார்பிலே செஞ்சந்தனம் பூசி; வரிபுனை வில்லன் - வரிந்து புனைந்த வில்லையுடையவனாய்; ஒரு கணை தெரிந்து கொண்டு - அம்புக்கூட்டினுள் ஒப்பற்ற சிறந்த அம்பொன்றனை ஆராய்ந்து வலக்கையி லெடுத்துக்கொண்டு விரைந்து எம்மெதிரோடி வந்து; 'அம் மா படர் இறம யாதோ என வினவி

நிற்றந்தோன் - அக் கொடிய விலங்கு செல்கின்ற வழி யாது? என்று எமமை நோக்கி வினவி நின்றனன் என்க.

(வி - ம்.) கழுநீர் இதழ், கண்போலிதழ், ஆயிதழ் எனத் தனித்தனி கூட்டுக. ஊசி போகிய மாலையன், சூழ் செய் மாலையன் எனக்கூட்டுக. சூழ் செய் மாலை - மலரை நாரினைச் சூழவைத்து ஊசியாற் றைத்துச் செய்த மாலை இதனைத் தொடைமாலை எனவும் தார் எனவுங் கூறுப. செச்சைக்கண்ணி - சிவந்த மலராணி பன்ற தலைமாலை. தலைமயிரைத் தலையின் ஒரு புறத்தே கொண்டையாகக் கட்டி அதனைச் சுற்றிக் கட்டிய கண்ணி என்க. குயம் - முலை. மண்டுதல் - மிக்கமுழ்ந்துதல். எனவே அவன் மார்பு மகளிர் மனங்கவரும் பேரழகுடையது என்றுளாம். புலி புலி என்னும் பூசல் கேட்டு அதனை எய்து தொலைத்தற்கு அமைவாக இடக்கையில் வில்லைப் பற்றிச் சிறந்த அம்பையும் தேர்ந்து வலக்கையிற் கொண்டு விதுப்புற்று அம்மா படர்திறம் யாது என்று வினவியவாறே ஓடி வந்து எம் முன்னின்றான் என்றவாறு. மா என்றது புலியை. திறம்-வழி. நிற்றந்தோன் என்புழி தருதல் பகுதிப் பொருள் விகுதி. நின்றான் என்க.

கச-௨௨: அவற்கண்டு.........கிழவோனே

(இ - ள்.) மன்ற அக் குன்று கிழவோனே - தேற்றமாக அவன அந்தோ தோன்றும் மலைகட்குத் தலைவனே ஆதல் வேண்டும, அவன் கண்டு - அப பெருந்தகையோனைக் கண்டு யாங்கள், எம்முள் எபமுள் மெய்ம்மறைபு ஒடுங்கி நாணி நின்றனெம் ஆக - ஒருவருக்குள் ஒருவராய் எங்கள் உடம்பு மறையுமாறு உளளம் ஒடுங்கி, நாணி நின்றேமாக; பேணி ஐவகை வகுத்த கூந்தல் ஆய் நுதல் மைசர் ஓதி மடவீர் நுமவாயப் பொய்யும உளவோ என்றனன் - நன்கு எண்ணெய் முதலியன பெய்து ஐந்துவகையாக வகுத்துக் கைசெய்து வளர்க்கப்பட்ட கூந்தலையும் அழகிய நுதலையும் உடைய இளமையுடைய நங்கையீர்! நுமமுடைய வாயின் கண் பொய்யும உண்டுபோலும என்று நாகரிகமாக எம்மைக் கழறியவனாய்; பை எனப பரி புடுத்தவிர்த்த தேரன் - பாய்தற்கு விதுப்புறுகின்ற தன் குதிரைகளை நோக்கிப் 'பை' என்றுரப்பி அக் குதிரையின் துடிப்பைத் தவிர்த்து நிறுத்திய தேரிலேறியமர்ந்து; நின மகள உண்கண் எதிர் மறுத்துப் பல் மாண் நோக்கிச் சென்றோன் - அப்பொழுது அவன் எழிலை உண்ணுகின்ற நின்மகள்கண் நோக்குங்கால் தான நோக்காது விடுத்தும் அவள் நோக்காது நிலநோக்குங்கால் தான் நோக்கியும் இவ்வாறு ஒருவரை ஒருவர் மாறிப பன்முறையும் நோக்கிப் பின்னர்ச் செல்லாநின்றான்; என்க.

(வி - ம்) அவன் தோற்றங்காணின் இக் குறிஞ்சி நிலத்துக் கோமகன் என்றே உறுதியாக நினைக்கின்றேன் என்பது குறிப்பாகப் புலப்படும்படி மன்ற அக் குன்று கிழவோன் சென்றான் என்றான்.

யானும் நின்மகளும் மட்டும் அல்லேம் ஆயமகளிர் பலரும் ஒருங்கே குழீஇ நின்றேம் என்பது தோன்ற எம்முள் எம்முள் என்று அடுக்கினள். மடவீர் நீங்கள் நுங்கள் கூந்தலை மட்டுமே நன்கு பேணுவீர் போலும் வாய்மையைப் பேணீர் போலும் என்று எம்மைக் குறிப்பாக இடித்துரைத்தான் என்பாள் பேணி ......பொய்யு முளவோ என்றனன் என்றாள். இஃது அவன் நனி நாகரிகன் என்பதுணர்த்திய படியாம். இதனைக்கண் முன்னர் ஐவகை வகுத்த கூந்தல் கூறப்பட்டமையின் பையீரோதி மடவீர் என்பது வாளா மகளிர் என்னும் பெயர் மாத்திரையாய் நின்றது. பாய்தற்குத் துடிக்கின்ற குதிரைகளை நோக்கிப் 'பை, பை' என்று கூறி அவற்றின் துடிப்படக்கி நிறுத்தினன் என்பது கருத்து. ஈண்டு 'பை' என்பது குதிரைக்குக் கூறிய குறிப்பு மொழி என்க. இனி, பை என என்பது மெல்ல என்னும் பொருட்டெனினுமாம். தேரன் - தேரிடத்தான். எதிர்மறுத்து நோக்குதல்-மாறி மாறிப் பார்த்தல். ஈண்டு, "யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற் றானோக்கி மெல்ல நகும்" (கககூச) எனவரும் திருக்குறளையும் நினைக. எதிர்மறுத்துப் பன்மாண் நோக்கினன் என்றாள் நின்மகளும் அங்ஙனமே அவனை நோக்கினள் என்று குறிப்பாக வுணர்த்தற்கு. நின்மகளுடைய மையுண்டகண் எனவும், அவன் அழகைப் பருகுகின்ற கண் எனவும் இரு பொருளும் தோன்ற 'உண்கண்' என்றாள்.

உரு-உசு: பகல்மாய்............வல்லோர்க்கே

(இ - ள்.) பகல் மாய் அந்தி சுடர் படு அமையத்து அவன் மறை தேஎம் நோக்கி மற்று தோழி இவன மகனே என்றனள் - பகற்பொழுது தீர்கின்ற அந்திமாலையாகிய ஞாயிறு மறையும் அந்தப் பொழுதில் அவன் தேரிற் சென்று மறையும் அளவும் அத் திசையையே நோக்கி அவன் மறைந்த பின்னர் என்முகம் நோக்கித் தோழீ! இவனும் மக்களினத்தவனோ? என்று வியந்து வினவினள் காண்! மதிவல்லோர்க்கு அதன் அளவுகோள் உண்டு-கொல் என்று ஆய்ந்துணரும் அறிவு வன்மையுடையோர்க்கு அந்நிகழ்ச்சியின அளவு கருதிப் பார்த்தறகும் ஒரு கொள்கை உண்டாகலாம; இந்நிகழ்ச்சியை யன்றி யான் ஏதும் காரணம் அறிகின்றிலேன் என்பதாம்.

(வி - ம்.) பகலை மாய்க்கின்ற அந்தியாகிய சுடர்படு மமையம் என்க. தேஎம் - திசை. அவன் மறைந்த பின்னர் என்னை நோக்கி வினவினள். மகனே! என்றது மக்களுள்ளும் இத்துணை மாண்புடையோரும் உளரேயோ! என்ற வியந்தபடியாம். மகனோ தேவனோ என்று ஐயுற்று வினவிய தன்றென்க.

இனி அறத்தொடு நிற்குந்தோழி யளித்தல் முதலிய ஏழு வகையில் ஏற்பன கொண்டு நிற்றல் வேண்டும் என்ப. இதனை,

"எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுதல் உசாதல் ஏதீடு தலைப்பா

டுண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ
அவ்வெழு வகைய வென்மனர் புலவர்''

என வரும் நூற்பாவான் (தொல் - பொருளியல், கூ) உணர்க.

இவற்றுள் - புலி புலி என்ற பூசல் தோன்றியவுடன் தானே வந்து நின்றனன் என்பது காட்சிக் கெளியனாதும் தன்மை கூறலின், எளித்தலும், புலி காக்க வந்தான் என ஏதிடுமாயிற்று. குன்று கிழவோன் என்றது மகனே! என்று வியந்ததை கூறிபதும் திருவும் உருவும் கூறி ஏத்தல் ஆயின. நின் மகள் உண்கண் பன்மாண் நோக்கிச் சென்றான் என்றது வேட்கை யுரைத்தல். புலி என்ற பூசல் தோன்றிய வழி அவன்றானே வந்து தலைப்பட்டான் என்றது தலைப்பாடு அவன் மறை தேஎம் நோக்கி மகனே என்றது-உருவு நிறுத்த காமவாயிலாய், அவன் பால் இவள் காதல் கொண்டனள் எனக் குறிப்பாகக் கூறலின் உண்மை செப்பலும் ஆயிற்று என்க.

இச் செய்யுள் பழைய வுரையாசிரியர் பலரானும் மேற்கோளாக எடுத்தாளப்பட்டதொரு சிறந்த செய்யுளாம்.

இனி, இதனை "அன்னாய் நின்மகள் பசந்தனள் என வினவுதி யானும் உணரேன். மேனாள் யானும் தோழிமாரும் கொய்குவம் சென்றனம். அப்பொழுது புலி புலி என்னும் பூசல் தோன்ற ஒருவன் மாலையனாய், கண்ணியனாய் வில்லனாய்க் கணை கொண்டு வினவி நின்றான். நாணி நின்றனமாக மடவீர் பொய்யுமுளவோ என்றனனாய்த் தேரனாய்ப் பன்மாணோக்கிச் சென்றனன் அக் குன்று கிழவோன். நின்மகள் நோக்கி மகனே என்றனள் அதனளவு வல்லோர்க்குக் கோள் உண்டு என இயைத்திடுக.

(பா - வே.) கூ. மூசுபோகிய; கஅ. மகளிர், உசு. இதனளவுண்டு கொல். (சுஅ)

## செய்யுள் சுசுக

திணை: பாலை.

துறை: உடன் போயின தலைமகளை நினைந்து செவிலித்தாய் மனையின் கண் வருந்தியது.

(து - ம்.) அஃதாவது - தோழி அறத்தொடு நின்ற பின்னும் தம ருடம்படாமையும் பிறவுமாகிய இடையூறுகள் நிகழ்ந்துழித் தலைவன் இரவின்கண் தலைவியைத் தமரறியா வண்ணம் தோழியின் உடன் பாட்டோடு தன்னுடன் அழைத்துச் சென்றானாக; வழிநாள் தலைவி தலைவனுடன் போனமை உணர்ந்த செவிலி தலைவியை நினைந்து அன்பால் அகமுருகி மனையிற் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே" என்னும் (தொல் - அகத்-சுஉ) விதி கொள்க, (ஆசிரியர் நச்சினார்க் கினியரும் இதற்கிதனைக் காட்டினர்.)

கிளியும் பந்துங் கழங்கும் வெய்யோ
ளளியு மன்புஞ் சாயலு மியல்பு
முன்னாட் போலா ளிறீஇயரென் னுயிரெனக்
கொடுந் தொடைக் குழவியொடு வயின்மரத் தியாத்த
ரு. கடுங்கட் கறவையிற சிறுபுற நோக்கிக்
குறுக வந்து குவவுமந் தளிவி
மெலலெனத் தழீஇயினே னாக வென்மக
ணன்ன ராகத் திடைமுலை வியர்ப்பப்
பலகான் முயங்கின ளென் மன்னே யன்றே
க0. விறன்மிகு நெடுந்தகை பலபா ராட்டி
வறனிழ லசைஇ வான்புலந்து வருந்திய
மடமா னசாவினந் திரங்குமரல சுவைக்குங்
காடுடன் கழிந்த வறியிற் றந்தை
யல்குபத மிகுத்த கலியுடை வியனகர்ச்
கரு. செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழற் போலக்
கோதை யாயமொ டோரை தழீஇத்
தோடமை யரிச்சிலம் பொலிப்பவவ
ளாடுவழி யாடுவழி யகலேன் மன்னே.

—வண்ணப் புறக் கந்தரத்தனார்.[1]

(உரை)

க - எ: கிளியும்............தழீஇயினேனாக

(இ - ள்.) கிளியும் பந்தும் கழங்கும் வெய்யோள் - கிளிக்கு மழலை மிழற்று தலையும் பந்தெறிதலையும கழங்காடுதலையும் மிகுதியாக விருமபுபவள் இப்பொழுது அவற்றை விரும்புகின்றிலள்; அளியும் அன்பும் சாயலும் இயல்பும் முன் நாள் போலாள்-இவள் பிறவுயிர்கள்பாற் காளளும் அருளானும் எம்மனோர் பாற் செலுத்தும் அன்பினானும தன் மெய்யின்கண்ணதாகிய மென்மையாலும் செயல்களானும முந்தை நாட்களில் இருந்தாற் போன்றிலள்; மாறுபட்டிருக்கின்றனள். இம் மாறுபாட்டிற்குக் காரணம் காணமாட்டாது வருந்தி; என் உயிர் இறீஇயர் என - என் உயிர் கெடுவதாக என்று என்னையே யான் நோவேனாகி, கொடுந்தொடைக் குழவியொடு வயின் மரத்து யாத்த கடுங்கண் கறவை

(பா - வே.) 1. வண்ணப்புறக் கல்லாடனார்

யின் - வளைந்த தொடைகளையுடைய தனது இளங்கன்றினோடே ஓரிடத்தே கட்டப்பட்ட விரைந்து விரைந்து கன்றை நோக்கும் ஆவைப்போன்று; சிறுபுறம் நோக்கி - அவளுடைய முதுகை அடிக்கடி பரிந்து பார்த்து; குறுகவந்து குவவுநுதல் நீவி - ஆராமையால் அவளை அணுகிச் சென்று குவிந்து திரண்ட அவளுடைய அழகிய நெற்றியை விரலாற் றடவி; மெல்எனத் தழீஇயினேன் ஆக - பரிவுடன் மெத்தெனவு அவளைத் தழுவினேன் அவ்வளவில்; எனமகள - என அருமை மகள்; நனைர் ஆகத்து இடைமுலை வியர்பப - தனது நல்ல மார்பகத்து முலைகள் பொள்ளென வியர்ப்ப (முன்னுள போலாது) பல்கால் முயங்கினள் மன - பனமுறையும எனனை ஆர்வத்துடன் தழுவுவாளாயினள்; அது கழிந்தது! என்க.

(வி - ம்.) கள்ளமறியாத வெள்ளையுள்ளத்தோடிருந்த போதெல்லாம் கிளி முதலியவற்றையே மிகவும் விருப்புவாள் என்றது இப்பொழுது அவற்றை வி பபுகிலள் என்பதுபட நின்றது. அளி - கீழ் மக்களும் அஃறிணையுயிருமாகிய பிறவுயிர்பாற் செலுத்தும் அருள். அன்பு தொடர்புடைய சுற்றத்தார்பாற் காட்டும் அன்பு. சாயல்-ஐம்பொறியானும் நுகர்தற்கியன்ற பெண்மைக்குரிய மென்மை. இயல்பு என்றது அடக்கியற்கையாகிய செயன்முறைகள். இவையெல்லாம் தன் நெஞ்சத்தே வஞ்சம் புக்கபின் மாறுபட்டமையின் இவற்றால் எல்லாம் அவள் பண்டு போன்றிலள் என்றவாறு. அவள் நெஞ்சமெல்லாம் காதலன் கவர்ந்தமையால் மாறுபட்டிருந்தாள் போலும் இதனை யான் அறிகிலேன் என்பது கருத்து.

குழவி - ஆன்கன்றுக்குங் கூறுப; இதனை, "குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை, ஆவும் எருமையும் அவை சொலப்படுமே" எனவரும் தொல்காப்பியத்த ஆலுணர்க (மரபி சக - உ0). கடுங்கண்—விரைந்து விரைந்து நோக்கும் கண். அங்ஙனம் நோக்குதலை கன்றணிமையுடைய ஆன்களிடத்தே கண்டுணர்க. அவள் முகங் கொடாமையால் சிறுபுறமே நோக்கினேன் என்பது கருத்து. நெஞ்சத்துள் வஞ்சம் நின்று வெதுப்புதலான் முயங்குங்கால் முலைவியர்த்தது என்பது கருத்து. மன் கழிவுப் பொருட்டு.

கூ - கரு : அன்னை............அறியின்

(இ - ள்.) அன்னை - ஐயமீர!; விறல் மிகு நெடுந்தகை பல பாராட்டி - அவளை உள்ளங் கவர்ந்த வெற்றி மிக்க நெடுந்தகைமையையுடைய காளை பல படியாகவும் நலம் பாராட்டி மனமகிழ்வித்து; வறன் நிழல் அசைஇ - உலறிய அரு நிழலினகண் இருந்து இளைபபாறி வான் புலந்து வருந்திய மடமான் அசா இனம் - மழை வறநததமையாலே உணவு பெறாமல் பசிப்பிணியால் வருத்தமுற்ற மடபபமுடைய மானினது இளைப்புற்ற கூட்டமானது; திரங்கும் மரல் சுவைக்குங் காடு - நீர் வற்றிய மரற்

புல்லினைக் கறித்துப் பார்த்தற்குக் காரணமான வறிய பாலையின் கண்; உடன் கழிதல் அறியின் - தன்னுடன் கொண்டு தலைக் கழிதலை யான் முன்னால் அறிந்தேனாயின என்க.

(வி - ம்.) அன்னோ: இரக்கக் குறிப்பு. என் செல்வியின் நிறை யழித்து வென்று அவளைக் கைப்பற்றின விறல் என்றவாறு. அங்ஙனம் அவளை வென்று கொண்டமைக்குக் காரணம் அவனது நெடுந் தகைமையை அன்றிப் பிறிதில்லை ஆகலின் அதனையே அவனுக்குப் பெயராக்கி நெடுந்தகை என்றாள். நெடுந்தகையாதலின் அவளை நலம் பாராட்டுமாற்றால், வழி வருத்தம் தோன்றாமற் செய்து இனிதே அழைத்தேகுவன் என்று தன் நெஞ்சினைச் சிறிது தேற்றிக் கொள்வாள், நெடுந்தகை பல பாராட்டி வறன் நிகழ் அசைஇக் கழிவன் என்றாள்.

மரல்-கற்றாழை மடல் போன்று கார்ப் பருவத்தே நீரை வேண்டு மளவு தன் மடலிலே நிரப்பிக் கொண்டு நீர் வறந்த காலத்தும் ஏனைப் பசும்புற்கள் தலை காண்பரியவாயழியுங் காலத்தும் அழியாதிருக்கும் ஒரு தடித்த மடலையுடைய புல். இப் புற்களின் நீர் நிரம்பிய மடல் கள் திரங்கியிருந்தன என்பது அக்காட்டின் வெம்மை மிகுதியை உணர்த்தியபடியாம். வன்புலந்தமையால் பட்டினியால் வருந்திய மான் இனம், அசா மான் இனம் எனத் தனித்தனி கூட்டுக. அசா - இளைத்த. உடம்பு உணவின்மையால் இளைத்த மானினம்; மரலை மான்கள் விரும்பித் தின்னா. வேறுணவு இன்மையால் தாம் தின்னாத வற்றையும் தின்னும் என்பது தோன்ற மரல் சுவைக்கும் என்றாள். உடன் கழிதல் தலைவன் தலைவியைத் தன்னுடன் கொண்டு தலைக் கழிதல் இவ்வொழுக்கத்தை ஆசிரியர் தொல்காப்பியனாரும் "கொண்டுதலைக்கழிதல்" என்றே குறியிட்டாளுவர். அவள் நம்மைப் பிரிந்து போவாள் என்று அறிதற்கு வேண்டிய குறிகள் அவள்பால் இருக்கவேயும் அக்குறிகளைக் கொண்டு யான் அறிந்திருக்க வேண்டும். ஆனால் அறியா தொழிந்தேன் என்று கழிவிரக்கங் கொள்வாள் உடன் கழிதல் அறியின் என்கின்றாள்.

கரு - கசு: தந்தை.............மனனே

(இ - ள்.) தந்தை அல்குபதம் மிகுத்த கடியுடை வியல் நகர் - அவளுடைய தந்தையினது உண்டு உண்டு குறையாது எஞ்சிக் கிடக்கின்ற உணவுப் பொருள்கள் மிக்க காவலுடைய பெரிய மாளிகையிடத்தே; செல்வுழி செல்வுழி மெய்ந்நிழல் போல - அவள் செல்லுமிடந்தோறும் செல்லுமிடந்தோறும் அவளுடைய உடம்பினது நிழல் போன்று யானும் தொடர்ந்து சென்றும் அவள் கோதை ஆயமொடு ஓரை தழீஇ - அவள் மலர் மாலையணிந்த தன் தோழிமாரோடு பந்தும் கழங்கும் முதலிய ஆடற் கருவிகளைக் கைக்கொண்டு; தோடு அமை அரிச் சிலம்பு ஒலிப்ப - பூத்தொழில் அமைந்த பரலையுடைய தனது சிலம்புகள் ஒலிக்கும்படி; ஆடுவழி ஆடுவழி அகலேன் மன - விளையாடு மிடந்தோறும் விளையாடுமிடந்தோறும் சென்றும் ஒரு நொடிப்

பொழுதும் அவளைப் பிரியா திருப்பேனே! அதுவும் கழிந்ததே இனி என் செய்கோ? என்பதாம்.

(வி - ம்.) தந்தையின் அல்குபத மிகுத்த கடியுடை வியனகரில் இனிதே வாழ்ந்தவள் நீரும் நிழலும் உணவுமில்லாத வறிய பாலை வழியிலே எங்ஙனம் செல்வாளோ? என்னும் பரிவினால் தந்தையின் கடிநகரை விதந்தோதினள். ஓரை - விளையாட்டுக் கருவிகள். தோடமை சிலம்பு, அரிச்சிலம்பு எனத் தனித்தனி கூட்டுக. தோடு - பூ. பூத்தொழில் உடைய சிலம்பு என்க அரி - சிலம்பினுட் பெய்யும் பரல்கள். செல்வுழிச் சென்றும் ஆடுவழிச் சென்றும் அகலேன் என்க. அகலேன் என்றது ஒரு நொடியும் அகலேன் என்பதுபட நின்றது. மன்: கழிவுப் பொருட்டு.

இனி இதனை, வெய்யோள் அளி முதலியவற்றால் முன்னாள் போலாள். அவள் மாறுபாடு கண்டு என் உயிர் இறீஇயர் என நொந்து பரிவினால் சிறுபுறம் நோக்கியும் அமையாது ஆராமையால் அவளைக் குறுகவந்து நீவித் தழீஇயினேன் ஆக; அவ்வழி அவள் வியர்ப்ப மயங்கினள் மன். நெடுந்தகை பாராட்டி அசைஇ காட்டில் உடன் கொண்டு கழிதல் (அறியேன்) அறியின் அவள் தந்தை நகரில் அவள் செல்வுழி நிழல்போலச் சென்றும் ஆயமொடு தழீஇ ஆடுவழிச் சென்றும் அகலேன் மன்! இனிஎன் செய்கோ? என இயைக்க.

(பா - வே.) ௧. குறுகச் சென்று. (௪௯)

## செய்யுள் ௫௦

**திணை:** நெய்தல்.

**துறை:** தோழி பாணனுக்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - தலைவன் பரத்தையர் சேரியிடத்தானாகத் தலைவி பிரிவாற்றாமையாற் பெரிதும் வருந்துபவள் அவ் வருத்தத்தைப் பொறுத்துப் பிறர் அறியாமல் மறைத்தொழுகுவாளாக, அது கண்ட தோழி தலைவியின் நிலையைத் தலைவனுக்குக் கூறும் பொருட்டுப் பாணனுக்குக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "கற்புங் காமமும்.........கிழவோள் மாண்பு கள் முகம்புகன் முறைமையிற் கிழவோற் குரைத்தல் அகம்புகன் மரபில் வாயில்கட்கு உரிய" எனவரும் விதி கொள்க. (தொல்-கற்-௧௧) ஆசிரியர் நச்சினார்க்கினியர் இதற்கிதனையே எடுத்துக் காட்டினர்.

கடல்பா டவிந்து தோணி நீங்கி
நெடுநீ ரிருங்கழிக் கடுமீன் கலிப்பினும்
வெவ்வாய்ப் பெண்டிர் கெளவை தூற்றினு
மாணிழை நெடுந்தேர் பாணி நிற்பப்
௫. பகலு நம்வயி னகலா னாகிப்
பயின்றுவகு மன்னே பனிநீர்ச் சேர்ப்ப

னினியே மணப்பருங் காமந் தணப்ப நீந்தி
வாரா தோர்நமக் கியா அ ரென்னாது
மல்லன் மூதூர் மறையினை சென்று
க0. சொல்லி னெவனோ பாண வெல்லி
மனைசேர் பெண்ணை மடிவா யன்றி
றுணையொன்று பிரியினுந் துஞ்சா காணெனக்
கண்ணிறை நீர்கொடு கரக்கு
மொண்ணுத லரிவையா னென்செய்கோ வெனவே.

—கருவூர்ப் பூதஞ் சாத்தனார்.

(உரை)

க0: பாண............

(இ - ள்.) பாண - பாண்மகனே! ஈதொன்று கேள்! என்க.

(வி - ம்.) இது, பிரிவாற்றாது வருந்தும் தலைவி நிலையினைப் பரத்தையர் சேரியிடத்தே தங்கியிருக்கின்ற தலைவனுக்குக் கூறுதற் பொருட்டுத் தோழி பாணனை விளித்துத் தோற்றுவாய் செய்தவாறு.

க - கூ: கடல்பா............சேர்ப்பன்

(இ - ள்.) பனி நீர்ச் சேர்ப்பன் - குளிர்ந்த நீரையுடைய கடற்கரைத் தலைவனாகிய நமபெருமான் களவுக் காலத்தே; கடல் பாடு அவிந்து தோணி நீங்கி - கடலானது காற்றொடுங்குதலால் முழக்கமின்றி அமைதியுறுதலானே, நுளையர் கடலிற செலுத்தும் தோணிகளும் இயக்கமின்றிக் கடலினின்று நீங்கவும்; நெடுநீர் இருங்கழிக் கருமீன கவிபபினும - நெடிய நெய்தனிலத்துக் கரிய நீரோடைகளில் கொடிய சுறவு முதலிய மீன்கள் அஞ்சா தேறிச் செருக்கித் திரியா நிற்பவும; வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றினும் - சுடு சொற்களே பேசுமியல்புடைய பெண்டிர் தனனுடைய பழியை ஊரறியத் தூற்றினும் இவற்றிற்கெல்லாம் அஞ்சாமல; மாண் இழை நெடுந்தேர் பாணி நிற்ப - தான் ஊர்ந்துவந்த மாட்சிமையுடைய இழைப்புத் தொழிலாற் சிறந்த தனது தேரானது தான மீண்டு வருதலை எதிர்பார்த்து நெடும் பொழுது நிறபினும்; பகலும நபவயின் அகலானாகி - பகற் பொழுதினும் நமமிடததினறும் பிரியாதவனாகி; பயின்று வரும் மன் - அடுத்தடுத்து வருதவன். அது கழிந்தது என்க.

---

(பா - வே.) 1. கருவூர்ப் பூதனார் மகனார் கொற்றனார்.

(வி - ம்.) பாடு - முழக்கம், காற்றொடுங்குதலால் கடல் முழக்கமின்றிக் கிடப்பவும் பாய்விரித் தியங்க வியலாமையால் தோணிகள் கடலிற் புகுதாது நீங்கின என்றவாறு. எனவே நுளையர் மீன் படுப்பச்செல்லாமல் சேரியிலே வதியும்பொழுதும் அவர் காண்பதற்கு அஞ்சாது வருவன் என்றாளாயிற்று. இனி நுளையர் பாக்கத்து மருங்கேயுள்ள நெடுநீர்க் கழிகளில் சுறுமீன் திரிதற்தும் அஞ்சாது நீந்தி வருவான் என்பாள் நெடுநீர் இருங்கழிக் கடுமீன் கலிப்பினும் வரும் என்றாள். வரும் வழியில் கொடிதறி பெண்டிர் தன் பழிதூற்றினும் நாணாது வருவான் என்பாள் வெவ்வாய்.........தூற்றினும் வரும் என்றாள். இமை - இமைப்புத் தொழில். பரதவா பலரும் காண்பார் என்றஞ்சாது பகலும் நம் வயின் அகலானாகிப் பயின்று வரும் என்றாள். பயின்று வருதல் - அடுத்தடுத்து வருதல். மன் : கழிவுப் பொருட்டு.

இனி, ஈண்டுக் கூறுவன வெல்லாம் தாம் காண்டற்கரியராயிருந்த களவுக்காலத்தே தமக்கிருந்த பெருமையைத் தாம் எளியராயிருக்கும் இக்கற்புக் காலத்தே நினைவுகூர்ந்து தோழி வருந்திப் பாணனுக்குக் கூறியபடியாம். என்னை? **"அருமைக் காலத்துப் பெருமை காட்டிய எண்மைக் காலத்து இரக்கத் தானும்"** தோழிக்குக் கூற்று நிகழும் என்ப தோத்தாகலான் (தொல் - கற் - ௯).

இனி, இங்ஙனம் கூறுவது தலைவன் கேட்பானுமிடத்தேயே ஆயினும் ஈண்டுப் பாணன் தான் சொல்லியவாறே தலைவன்பாற் சென்று செல்லுக! என்னுங் கருத்தாற் றலைவன் கேட்பவே கூறுகின்றாள் என்க.

இதுகாறும் தோழி தலைவன் களவுக்காலத்து நிலையைப் பாணனுக்குத் தன் கூற்றாகவே கூறி இனித் தலைவியின் நிலையை அறிவிக்கின்றாள்.

எ - டு: இனியே......................என்னாது

(இ - ள்.) இனி - யாம் எளியேமாயிருக்கின்ற கற்புக் காலமாகிய இப்பொழுது; மணப்பு அரும் காமந் தணப்ப நீந்தி - பண்டு எம்மைக் கூடுதல் அரியதாகியிருந்த விருப்பமானது நீங்கி விட்டமையாலே அப் பரத்தையர் சூழலைக் கடந்து, வாராதோர் நமக்கு யார் என்னாது - நம்பா லன்புகொண்டு அளி செய்யத் தாமே வாராதவர் நமக்கு என்ன உறவுடையோர் ஆவர் என்று கருதிப் பாராமல், என்க.

(வி - ம்.) இனி என்றது-கற்பொழுக்கம் நிகழ்கின்ற இப்பொழுது என்றவாறு. பண்டு மணப்பருங் காமமாயிருந்தது, இப்பொழுது யாம் எளியம் ஆகிவிட்டமையால் அவரை விட்டுத் தணப்பப் பரத்தையர் சூழலை நீந்தி வாரார் ஆயினர். ஆதலால் அவர் நமக்கு யார் என்று தன் தகுதியால் தலைவி வருந்தாதிருக்க வேண்டும். ஆனால் அவள் அங்ஙனம் கருதிப் பார்த்து அமைகிலள் என்று தோழி தலைவியைக் குறை கூறுகின்றாள் என்றுணர்க.

## குo - கச. எல்லி............எனவே

(இ - ள்.) ஒண்ணுதல் அரிவை-ஒள்ளிய நெற்றியையுடைய நந்தலைவி; கண் நிறை நீர்கொடு - பிரிவாற்றாது பெரிதும் வருந்தித் தன கண்கள் நிறைந்து ததும்பும் கண்ணீரைக் கொண்டிருந்தும்; எல்லி மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில் துணை ஒன்று பிரியினும் துஞ்சாகாண் - என்னைக் கண்டுழி என்னை நோக்கித் தோழீ! இரவின்கண் நமது மனைப்படப்பையில் நிற்கின்ற பனையிலுறைகின்ற வளைந்த அலகையுடைய அன்றில்கள் தம்முள் இணைந்து ஒன்றுதலை ஒரு சிறிது பிரிந்தாலும் துயிலமாட்டாகாண்!; என - என்று பிறிதொன்றனைச் சொல்லி; என செய்கோ எனக் கரக்கும்- அவற்றின் வருத்தத்திற்கு யான் என் செய்வேன என்று கூறித் தன் பிரிவாற்றாமையை யானும் அறியாவண்ணம மறைக்கின்றாள்; என்க.

(வி - ம்.) தலைவன் பிரிவாற்றாது தனியிடத்தே கண்கலுழ்ந்து வருந்துவாள் யான் சென்றால் தன் கண்ணில் நீர் நிறைதற்குப் பிறிதொரு காரணம் சொல்லி அதன் பொருட்டுத்தான் வருந்துவதாகச் சொல்லித் தன் பிரிவாற்றுத்துயரத்தை எனக்கும் மறைப்பாள். இவ்வாறு தலைவியிருக்கின்றாள் எனத் தோழி பாணனுக்கு அவள் நிலையை எடுத்துக் கூறினாளாகவுணர்க.

பிரிவாற்றாமையால் கலங்கி அரிவை கண்ணிறைகொடு அதற்கு என் அன்றில்கள் துஞ்சா யான் என செய்கோ என்று கலங்கியதற்குக் காரணம் அன்றில் வருந்துதற்குத் தான் வருந்துவதாகக் கூறிக் கரக்கும் என்றியைக்க.

## கூ - கo : மல்லல்...............எவனோ

(இ - ள்.) மல்லல் மூதூர் மறையினை சென்று - நீ வளமிக்க பழைய ஊராகிய அப பரத்தையர் வாழும ஊருக்கு அப்பரத்தையர் அறியாவண்ணம மறைந்து சென்று; சொல்லின் எவன் - நம் பெருமாட்டியின் இந்நிலைமையை நம பெருமானிடம் சொன்னால் என்னும்? என்பதாம.

(வி - ம்.) எவனோ என்னும் வினா சொல்லுக என்று வற்புறுத்து நின்றது. பிறர் பொருள் கவர்வாராகிய பரத்தையர் வாழும ஊர் ஆதலின் மல்லல் மூதூர் என்று அதன் இகழ்ச்சி தோன்றவுரைத்தாள். பரத்தையர் அறியின நம் பெருமான் வாராவண்ணம் செய்வர்; நினக்கும் தீங்கு செய்வர் எனபது தோன்ற மறைந்து சென்று சொல் என்றாள்.

இனி இதனைப், பாண, நீ மூதூர் சென்று அரிவை கண்ணிறை நீர்கொடு துஞ்சாகாண் எனக் கரக்கும் எனச் சொல்லின் எவன் என இயைக்க (௫o)

## செய்யுள் ருக

**திணை :** பாலை.

**துறை :** பொருள்வயிற் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

**(துறை விளக்கம்)** அஃதாவது பொருளீட்டி வருதல் வேண்டும் எனத் தன்னை இடையறாது தூண்டுகின்ற தன்னெஞ்சை நோக்கித் தலைவன், யாம் இப்பொழுது பிரிந்துபோனால் தலைவி ஆற்றாமையா லிறந்துபடுவள், ஆதலின் அந்தவினை இப்பொழுது தவிர்க! எனக் கூறிச் செலவழுங்கியது என்றவாறு.

**(இலக்கணம்)** இதற்கு "கரணத்தின்" எனவரும் (தொல். கற்பி.ரு) நூற்பாவின்கண் "வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானும்" எனவரும் விதி கொள்க. (இதனை இந்நூற்பாவின்கண் "கின்று நனிபிரிவின் அஞ்சிய பையுளும்" என்பதற்கு எடுத்துக்காட்டினர் இளம்பூரணர். இதற்கு இஃது அத்துணைப் பொருத்தமாகத் தோன்றவில்லை.)

ஆள்வழக் கற்ற சுரத்திடைக் கதிர்தெற
நீளெரி பரந்த நெடுந்தா ளியாத்துப்
போழ்வளி முழங்கும் புல்லென் உயர்சினை
முடைநசை இருக்கைப் பெடைமுகம் நோக்கி
ரு ஊன்பதித் தன்ன வெருவரு செஞ்செவி
எருவைச் சேவல் கரிபுசிறை தீய
வேனில் நீடிய வேயுயர் நனந்தலை
நீயுழந் தெய்துஞ் செய்வினைப் பொருட்பிணி
பல்லிதழ் மழைக்கண் மாஅ யோள்வயிற்
கஂ பிரியிற் புணர்வ தாயிற் பிரியாது
ஏந்துமுலை முற்றம் வீங்கப் பல்லூழ்
சேயிழை தெளிர்ப்பக் கவைஇ நாளும்
மனைமுதல் வினையொடும் உவப்ப
நினைமாண் நெஞ்சம் நீங்குதல் மறந்தே.

—பெருந்தேவனார்

(கடுகு பெருந்தேவனார் என்றும் பாடம்)

### (உரை)

(இதன் பொருள்.) கச : மாண் நெஞ்சம் - மாட்சியுடைய என் நெஞ்சமே கேள் :

(விளக்கம்.) வினையே ஆடவர்க்குயிர் என்பதுபற்றி இன்பம் காமுறுது வினையே காமுற்றுத் தன்னைப் பொருள்வயின் ஊக்குதலால் அதனைப் பாராட்டுவான் மாண் நெஞ்சம் என்றான். நெஞ்சம் : அண்மைவிளி.

க - கo: ஆள்..........புணர்வதாயின்

(இ - ள்) ஆள் வழக்கு அற்ற சுரத்து இடை - மாந்தர் இயங்குதல் இல்லையான கடிய பாலைநிலத்து வழியிலே; கதிர் தெற நீள் எரி பரந்த நெடுந்தாள் யாத்து - ஞாயிறு மிகவும் காய்தலானே நெடிய வெப்பம் பரவப்பெற்ற நெடிய அடிப பகுதியினையுடைய யாமரத்தினது; போழ்வளி முழங்கும் புல் என் உயர்சினை - விரைந்து இயங்கும்பொழுது இடைநின்று கிழிக்கபபடுகின்ற கோடைக்காற்று முழங்குதற்குக் காரணமான புற்கென்று தோன்றும் உயர்ந்த கிளையிடத்தே; முடை நசை இருக்கைப் பெடை முகம் நோக்கி - அடைகாத்துக் கிடத்தலாலே பசிமிக்கு ஊனாகிய இரையைப் பெரிதும் விரும்பியிருக்கின்ற தனது பெடைக்கழுகின் முகவாட்டத்தினைப் பார்த்து; ஊன் பதித்து அன்ன வெருவரு செஞ்செவி எருவைச் சேவல் - ஊனை நறுக்கிப் பதித்துவைத்தாற் போன்று கண்டார்க்கு அச்சம் வருதற்குக் காரணமான சிவந்த செவிகளையுடைய சேவலாகிய கழுகு; சிறை கரிபு தீய வேனில் நீடிய - அப் பெடைக்கு இரை நாடிப பறக்கின்றபொழுது அதன சிறகுகள் கரிந்து தீய்ந்து போம்படி வேனிலினது வெப்பம் மிகுந்த; வேய் உயர் நனந்தலை - உலர்ந்த மூங்கில்கள் உயர்ந்து நிற்றற்கிடனான அகன்ற அப் பாலைப் பரப்பிலே சென்று; நீ உழந்து செய்வினை எய்தும் பிணி பொருள் - நீ மிகவும் வருந்திச் செய்கின்ற தொழிலாலே நினக்கு வருகின்ற பிணியாகிய அப்பொருள தானும், பல் இதழ மழைக்கண் மாயோளவயின பிரியின் புணாவது ஆயின் - பலவாகிய இதழ் களையுடைய மலர்போலும் குளிர்ந்த கண்களையும் மாந்தளிர் போன்ற நிறத்தினையும் உடைய நம்மாருயிர்க் காதலியிடத்தி னின்றும் யாம் பிரிந்து போவதனாலே எய்துவதொன்றாயிருக்கு மாயின் என்க.

(வி - ர்.) ஆள் என்றது மாந்தர் என்னும் பொருட்டாய் நின்றது. வெப்பமிகுதியும் ஆறலைக்கப்படுதலும் ஆள்வழக்கு அற்றமைக்குக் காரணங்கள் என்க. நீள் எரி என்றது, மிக்க வெப்பம் என்பதுபட நின்றது. இலைகள் உதிர்ந்து வற்றிக் கொம்பு மாத்திரையாய் நிற்றலின் யாமரத்தினது அக்கொம்புகள் காற்றை எதிர்த்து ஊடறுத்தலின் போழ் வளிமுழங்கும் சினை என்றவாறு. போழப்பட்ட வளி என்க. முடை - இரையாகிய ஊன். முடைநசை இருக்கைப்பெடை எனவே கூட்டின் கண் அடைகாத்திருக்கும் பெடைக்கழுகு என்பது பெற்றாம். ஊன்

பதித்தன்ன செஞ்செவி எருவை என்புழி உவமை நயமுணர்க. அப் பொருளே பிணிபோல் வருத்துதலின் பொருட்பிணி என்றான்.

கய — கச: பிரியாது..........மறந்தே

(இ - ள்.) நீங்குதல் மறந்து — நீ இப்பொழுதைக்கு நங் காதலியைக் கைவிட்டுப் போவதனை மறந்து, பிரியாது - அவளைப் பிரியாமலே; நாளும் - யாம நாள்தோறும்; மனைமுதல் — நம் மனைத் தலைவியை அவளது; ஏந்து முலைமுற்றம் வீங்கப் பல் ஊழ் சேஇழை தெளிர்ப்பக் கவைஇ - உயர்ந்த முலைகள் மார்பிடத்தே பரந்து விம்முமாறு பல்முறையும் முயங்கி; வினையொடும் உவப்ப வினை - அவள் மனைக்கணிருந்து செய்யும் விருந்தோம்பன முதலிய அறச் செயல்களிலே அவளோடு நாமும் மகிழ்ந்திருப்பவே நினை வாயாக! பொருள்வயிற் பிரிவை நினையாதொழிக! என்பதாம்.

(வி - ம்.) பிரியாது ஏந்துமுலை என முலைக்கு அடையாக்கலுமாம். முலைமுற்றம் - மார்பு. மனைமுதல் - மனைவி. வினை - விருந்தோம்பன் முதலிய அறங்கள். நீங்குதல் மறந்து என்பது, நீங்கின் அவள் இறந்து படுவாள் ஆதலின் என்னும் ஏதுவினைக் குறிப்பாகத் தோற்றுவித்து நின்றது. இது தகுதியது அமைதியும் அகற்சியது அருமையும் குறிப்பா லுணர்த்திச் செலவழுங்கிய படியாம்.

இனி, இதனை, நெஞ்சமே! வேனில் நீடிய நனந்தலை நீ உழந்து எய்தும் பொருள் மாயோள்வயின் பிரியிற் புணர்வது ஆயின், அதனை நீ மறந்து யாம் அவளைப் பிரியாது நாளும் பலஊழ் கவைஇ மனைமுதலாகிய அவள் செய்யும் அறவினையோடு உவக்குமாறே நினை! பிரிவை நினை யாதே கொள்! என வினை இயைபு செய்க.

(பாட வேற்றுமை.) கO. பிரியப் புணர்வ.

## செய்யுள் ருஉ

**திணை :** குறிஞ்சி.

**துறை :** தலைமகள் வேறுபட்டமையறிந்த செவிலித்தாய்க்குத் தோழி அறத்தொடு நிற்குமெனத் தலைமகள் சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது களவொழுக்கத்தே தலைவன் சிறைப்புறமாக வந்து நிற்றலறிந்த தலைவி, தோழி அறத்தொடு நிற்க முயல்வாளை நீ இப்பொழுது அறத்தொடு நிற்றல் வேண்டா என்று தடுப்பாள்போலத் தாயறிந்தமை அத்தலைவனுக் குணர்த்தும் பொருட்டு அவன் கேட்பத் தோழிக்குக் கூறியது என்றவாறு. இது வரைவு கடாவற் பொருட்டாம். பழையவுரையாசிரியர் தலைவி தோழியை அறத்தொடு நிற்பிப்பவள் கூட்டமில் நாட்டத்தாற் கூறுக என்று கூறியதென்பர். பேராசிரியர், "இது வாழ்க்கை முனிந்து தலைமகள் சொல்லிய" தென்பர். (தொல். மெய்ப்பாடு-உக.)

(இ - ம்.) இதற்கு, "மறைந்தவற் காண்டல்" என்னும் நூற்பாவின்கண் (தொல் களவி-உ0) "விட்டுயிர்த்து அழுங்கினும்" என வரும் விதி கொள்க. (ஆசிரியர் நச். இதற்கிதனைக்காட்டி இது சிறைப்புறம் என்றும் ஓதினர்.)

வலந்த வள்ளி மரனோங்கு சாரற்
கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப்
பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள்
இன்னா விசைய பூசல் பயிற்றலின்
ரு ஏகல் அடுக்கத் திருளளைச் சிலம்பின்
ஆகோள் வயப்புலி யாகுமஃ தெனத்தம்
மலைகெழு சீறூர் புலம்பக் கல்லெனச்
சிலையுடை யிடத்தர் போதரு நாடன்
நெஞ்சமர் வியன்மார் புடைத்தென அன்னைக்கு
க0 அறிவிப் பேங்கொல் அறிவியேங் கொல்லென
இருபாற் பட்ட சூழ்ச்சி ஒருபாற்
சேர்ந்தன்று வாழி தோழி யாக்கை
இன்னுயிர் கழிவ தாயினும் நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
கரு காம நோயெனச் செப்பா தீமே.

—நொச்சி நியமங்கிழார்

(மாற்றூர்கிழார் மகனார் கொற்றங் கொற்றனார் என்றும் பாடம்.)

## (உரை)

### க - கஉ: வலந்த.........தோழி

(இ - ள்.) தோழி வாழி - என் தோழியே ஈதொன்று கேள்!; வள்ளி வலந்த மரன் ஓங்கு சாரல் - வள்ளிக்கொடி படர்ந்து பின்னிக் கிடத்தற்கிடனாகிய மரங்கள் பலவும் உயர்ந்துள்ள மலைச்சாரலின்கண்; கிளர்ந்த வேங்கைச் சேண் நெடும் பொங்கர்ப் பொன் நேர் புதுமலர் வேண்டிய குறமகள் - செழிப்புற்ற வேங்கை மரத்தினது மிகவும் உயர்ந்திருக்கின்ற கிளைகளிலே அரியனவாக மலர்ந்திருக்கின்ற பொன்போன்ற நிறத்தையுடைய புதிய மலரைக் கொய்துகொள்ள நினைத்த குறத்தி; இன்னா இசைய பூசல் பயிற்றலின் - கேட்டோர்க்குத் துன்பந் தருகின்ற ஒலியையுடைய புலி! புலி! என்னும் ஆரவாரத்தை

இடையறு துண்டாக்குதலாலே; சிலையுடை இடத்தர் - வில்லைப் பற்றிய இடக்கையினை யுடையராகிய குறவர்கள்; அஃது - அந்தப் புலியானது; ஏ கல் அடுக்கத்து இருள் அளைச் சிலம்பின் ஆ கொள் வயப்புலி ஆகும் என - நம்மலையினது பக்கமலைத் தொடரின்கண் வைத்து இருண்ட முழைஞ்சினையுடைய மலையிடத்தே நாடோறும் நம் ஆக்களைக் கொன்று தின்னும் ஆற்றல் மிக்க புலியே ஆதல்வேண்டும் என்று துணிந்தவராய்; மலைகெழு சீறூர் புலம்ப - தாம் வாழுகின்ற மலையிடத்ததாகிய தம்மூர் தனித்துக் கிடக்கும்படி; கல்லெனப் போதரும் - அவ்வாரவாரம் எழுந்த திசைநோக்கிக் 'கல்' என்னும் பேராரவார முண்டாகும்படி அப்புலியைக் கொல்லுதற்பொருட்டு விரைந்து வருதற்குக் காரணமான; நாடன் - மலைநாட்டையுடைய; நெஞ்சு அமர் வியன் மார்பு என - நமது நெஞ்சம் பெரிதும் விரும்புகின்ற நம் பெருமானுடைய அகன்ற மார்புதானே (என் பசலை நோய்க்கு) காரணமாகும் என்று மறைவெளிப்படுத்து; அன்னைக்கு அறிவிப்பேம் கொல் அறிவியேம் கொல் என இருபால் பட்ட சூழ்ச்சி - நம் தாய்க்கு அறிவிப்பேமா? அறிவியாது விடுவேமா? என இதுகாறும் என்னெஞ்சினுள்ளே இருதலைப்பட்டுக் கிடந்த என்னுடைய ஆராய்ச்சியானது; ஒரு பால் சேர்ந்தன்று - இப்பொழுது அறிவிப்பேம் என்னும் ஒருமுடிவுக்கு வந்துவிட்டது காண்! என்க.

(வி - ம்.) வலந்த - பின்னிய. சாரல் - மலைசார்ந்த இடம்; கிளர்ந்த - செழித்த. சேண் - உயரம். பொங்கர் - கிளை. வேங்கை மலர்கொய்யும் மகளிர் புலிபுலி என்று கூவி அம்மரத்தை அச்சுறுத்தினால் அது வளைந்து கொடுக்கும் என்பது ஒரு நம்பிக்கை. இக்காரணம் பற்றியே உயர்ந்த கிளையிலுள்ள புதிய வேங்கை மலரைப் பறிக்கக் கருதிய குறத்தி புலிபுலி என்றாரவாரித்தனள் என்க. இன்னா இசைய பூசல் என்றது புலிபுலி என்றாரவாரித்தலை. ஏ - கல் - அடுக்கம் எனக் கண்ணழித்திடுக. ஏகல் - தொடர் என ஒரு சொல்லாகக் கோடலுமாம். ஏ - பெற்று: பெருக்கம். கல் - மலை. கல்லடுக்கம் - பக்கமலைத் தொடர். அச்சீறூரின்கண் ஒரு புலி நாடோறும் ஆக்களைக் கொல்வதற்கு வருந்தியிருந்த குறவர், புலிபுலி என்ற ஆரவாரங் கேட்டு அந்தப் புலியைக் கண்டே யாரோ ஒருத்தி ஆரவாரிக்கின்றாள் என்று கருதிக் குறவரெல்லாம் திரண்டு ஓடி வருவாராயினர் என்றவாறு. ஈண்டுப் பழைய வுரையாசிரியர் கூறும் உள்ளுறை வருமாறு :—

"வேங்கையைக் கொடிசூழ அவ்வேங்கையிலே அலர் உண்டான அளவில் ஆண்டுவாழு மறவர் 'புலிபுலி' என்று பூப்பறித்தற்குச் சொன்ன, அரவத்தாலே ஊரெல்லாம் ஆரவாரித்தாற்போல அவரை நாம் தலைப்பெய்த வளவிலே அலர்பிறந்ததாக அவ்வலர் முதற்சீராலே முகிழ் முகிழ்த்துப் பின்னை எல்லாரும் அறிந்தது" என்றவாறு எனவரும். (எல்லாரானும் அறியப்பட்டது என்பது கருத்து.)

கஉ - கரு : யாக்கை.........செப்பாதீமே

(இ - ள்.) யாக்கை இன் உயிர் கழிவது ஆயினும் - ஆதலால், நீ அறத்தொடு நின்று மறைவெளிப்படுத்தும் பொழுது என் இனிய உயிர்தான் என் உடம்பைவிட்டுப் போவதானாலும் போயொழிக!; ஆய்மலர் உண்கண் பசலை - அழகிய நெய்தன் மலர்போன்ற நின் மகளுடைய மையுண்ட கண்ணிடத்தே பூத்துள்ள பசலைக்குக் காரணம்; காமநோய் எனச் செப்பாதிமே - அவள் நாடன்பாற் கொண்டுள்ள காமநோயே ஆகும் என்று கூறாதே கொள்! என்பதாம்.

(வி - ம்.) "செறிவும் நிறையும் செம்மையும் செப்பும் அறிவும் அருமையும் பெண்பாலன" என்பதனால் தலைவி உயிர் கழிவதாயினும் கழிக, நீ காமநோயெனச் சொல்லற்க என்கின்றாள். என்னை? உயிர் கழிய வருங்காலத்தே தன்னைக் காப்பாற்றற் பொருட்டுத் தோழி அறத்தொடு நின்று மறைபுலப்படுத்துவள் என்பது கருதி அக்காலத்தும் நீ காமநோயெனக் கூறுதொழி என்று ஆணையிட்டபடியாம்.

(பா. வே.) கO. அறியலம் கொல் எனவும் பாடம். இதற்கும் அறிவியேம் கொல் என்னும் பொருளே கொள்க.

இனி, இதனைத் தோழி ஆய்மலர் உண்கட் பசலைக்குக் காரணம் அறிவிப்பேமோ? அறிவியாதொழிவேமோ? என்று இருதலைப்பட்ட எனது ஆராய்ச்சி அறிவிப்பேம் என ஒரு முடிவுக்கு வந்துளது. ஆதலால் நீ அறிவிக்குங்கால் இதற்குக் காரணம் காமநோய் எனச் செப்பாதொழி. அங்ஙனம் ஒழியின் என உயிர் போவதாயிற் போயொழிக! என இயைபு காண்க. என் உயிர் போம்பொழுது யான் நினக்கிது கூறவல்லுநள் ஆகேன் ஆகலின் அப்போதைக் கிப்போது சொல்லி வைத்தேன் என்பது கருத்து. இதனால் தலைவி சிறைப்புறத்தே நின்ற தலைவனுக்குத் தாயறிவுற்றமையும் தன்னிலை உணர்த்தினமையும் உணர்க.

## செய்யுள் ருரு

**திணை :** பாலை.

**துறை :** வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—பொருள்வயிற் பிரிந்த தலைவன் குறித்த பருவத்தே வாராது நீட்டித்தமையால் தலைவி ஆற்றாமைமிக்கு நெஞ்சழிவாளைத் தோழி நம்பெருமான் நல்லர் அருள் உடையர் அணித்தாகவே வருவர். அதுகாறும் நீ ஆற்றுக என்று வற்புறுத்தினளாக; அதுகண்ட தலைவி வன்புறை எதிரழிந்து தோழியைச் சினந்து கூறிய தென்றவாறு.

(இ - ம்) இதனை "அவனறி வாற்ற" எனவரும் நூற்பாவின்கண் (தொல். கற்பி - சு) "கொடுமை யொழுக்கம் தோழிக் குரியவை...... ஆவயின் வரும் பல்வேறு, நிலையினும்" என்பதன்கண் அமைத்துக் கொள்க.

அறியாய் வாழி தோழி யிருளற
விசும்புடன் விளங்கும் விரைசெலல் திகிரிக்
கடுங்கதிர் எறித்த விடுவாய் நிறைய
நெடுங்கால் முருங்கை வெண்பூத் தாஅய்
ரு நீரற வறந்த நிரம்பா நீளிடை
வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்துபசிப் பிணவோடு
கள்ளியங் காட்ட கடத்திடை உழிஞ்சில்
உள்ளூன் வாடிய சுரிமுக்கு நொளளை
பொரியரை புதைத்த புலம்புகொள் இயவின்
கO விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோர்
எழுத்துடை நடுகல் லின்னிழல் வதியும்
அருஞ்சுரக் கவலை நீந்தி யென்றும்
இல்லோர்க் கில்லென் றியைவது கரத்தல்
வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்
கரு பொருளே காதலர் காதல்
அருளே காதலர் என்றி நீயே.

—சீத்தலைச் சாத்தனார்.

## (உரை)

### க. அறியாய்..........தோழி

**(இ - ள்.)** *வாழி - என்னை ஆற்றுவிக்க முயல்கின்ற நீ நீடூழி வாழ்க!; தோழி - தோழிகேள்; அறியாய் - நீ நம்பெருமானுடைய பண்புடைமையை நன்கு அறியாய்காண்! எற்றாலெனின்;* என்க.

**(வி - ம்.)** *தோழி தனக்கு நலஞ்செய்யவே முயல்வதுபற்றி தன்னன்றியறிவு தோன்ற வாழ்த்திப் பின்னர் இடித்துரைப்பவள் நீ அறியாய் காண் என்கின்றாள்.*

### கரு - கசு : காதல்..........நீயே

**(இ - ள்.)** *நீயே - என்னை ஆற்றுவிக்கும் அன்புடைய நீதானும்; காதலர் காதல் அருளே என்றி - நம்பெருமான் காதலிக்கும் பொருள் அருளே என்று கூறுதியல்லையோ ஆதலால்;* என்க.

**(வி - ம்.)** *நீ நம்பெருமானுடைய இயல்பறியாது அவர் நல்லர் அருளுடையர் என்கின்றனை ஆதலால் நீ மடவை என்றிகழ்ந்த படியாம்.*

## க - கரு : அறியாய்.........காதலர்

(இ - ள்.) என்றும் இல்லோர்க்கு இல் என்று இயைவது கரத்தல் வல்லா நெஞ்சம் வலிப்ப - எப்பொழுதும் தன்பால் வந்த வறியோர்க்கு எம்பால் நுமக்கு வழங்குதற்குரிய பொருள் யாதும் இல்லை என்று சொல்லித் தம்மால் ஈட்டிக் கொடுத்தற் கியன்ற பொருளை மறைக்கும் வலிமையில்லாத தமது நெஞ்சம் இடையறாது தூண்டுதலாலே, இப்பொழுது இருள் அற விசும்புடன் விளங்கும் விரை செலல் திகிரி கடுங்கதிர் எறித்த விடுவாய் நிறைய - இருள் அற்றொழியும்படி தன்னால் விளக்கஞ் செய்யப் பட்ட வானத்தோடே தானும் ஒருசேர விளங்காநின்ற விரைந்து செல்லும் செலவினையுடைய ஞாயிற்று மண்டிலத்தின்; கடுங்கதிர் - கடிய வெப்பமுடைய வெயில் எறித்தமையால் நிலம் பிளப்புண்ட இடைவெளி நிறைந்து மறையும்படி; நெடுங்கால் முருங்கை வெள் பூத் தாஅய் - நெடிய அடிப்பகுதியையுடைய முருங்கை மரத்தினது வெள்ளிய மலர்கள் பரக்கப்பட்டு; நீர் அற வறந்த நிரம்பா நீள் இடை - நீர் கூவல்களிடத்தும் அற்றுப் போம்படி வறட்சியுற்ற நடக்கத் தொலையாத நெடிய பாலைப் பரப்பினூடே; கள்ளி அம் காட்ட கடத்திடை - கள்ளிக்காடுகள் மட்டுமே அடர்ந்துள்ள கன்னிலத்தின்மேல் நிற்கின்ற; உழிஞ்சில் - அரிதாகக் காணப்படுகின்ற வாகை மரத்தினது கோழரையினை; உள் ஊன் வாடிய சுரிமூக்கு நொள்ளை - உள்ளே தசை வற்றிய சுரிந்த மூக்கினையுடைய நொள்ளை என்னும் பெயருடைய நத்தைகள் ஊர்ந்து போய் இடையீடின்றிப் பற்றிக் கிடந்து; பொரியரை புதைத்த - பொருக்குடைய அடிப் பகுதியையுடைய மரம் போன்று தோன்றுமாறு மறைத்து விடுதற்கிடனான : புலம்பு கொள இயவின்-வழங்குவா ரில்லாமையாலே தனிமையுற் றுக் கிடக்கின்ற வழியின மருங்கிலே நடப்பட்ட; விழுத்தொடை மறவர் வில்இட வீழ்ந்தோர் எழுத்து உடை நடுகல்லின் நிழல் - குறிதப்பாது அம்பு தொடுக்கும் சிறந்த தொடுத்தற் றொழிலை யுடைய பகைமறவர் வில்லிலிட்டு எய்த அம்பினை மார்பிலேற்றுப் போர்க்களத்தே மடிந்த மறவர்க்கு நினைவுச் சின்னமாக நட்ட அவர்தம் பெயரும் பீடுமெழுதப்பட்ட எழுத்துக்களையுடைய நடு கல்லினது புல்லிய நிழலிலே; வள் எயிற்றுச் செந்நாய் வருந்து பசிப் பிணவொடு வதியும் - கூரிய பற்களையுடைய செந்நாய் இரை பெறுமையாலே வருந்துகின்ற தனது பிணவினோடு தங்கு தற்கிடனான; அருஞ்சுரக் கவலை நீந்தி - கடத்தற்கரிய கவர்த்த வழிகளைக் கடந்து சென்று ஈட்டும்; பொருளே - பொருள் தான்; காதலர் நம்மினும் காதல் - நம்பெருமானால் நம்மைவிடச் சிறப்

பாகக் காதலிக்கப்படுவது, ஆதலால் அவர் அணித்தாக வருகுவர் என்பது எங்ஙனம்? என்பதாம்.

(வி - ம்.) ஈண்டுத் தலைவி பாலை நிலத்தின் இயல்பு கூறியது-பண்டு தலைவன் கூறியதனைக் கொண்டு கூறியபடியாம். இங்ஙனம் கூறுதலுண்டென்பதனை "நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும்" எனவரும் (தொல். அகத் - சஅ) நூற்பாவாலறிக. திகிரி - வட்டம்; ஆகுபெயர்; ஞாயிற்று மண்டிலம். கடுங்கதிர் - வெயில். எறித்தமையால் நிலத்தில் உண்டான விடுவாய் என்க. விடுவாய் - வெடிப்பின் இடைவெளி. நீர் அற என்றது கூவல் முதலியவற்றினும் நீர் அற்றுப்போம்படி என்பதுபட நின்றது. நடுகல்லின் நிழல் - நடுகல்லினது புல்லிய நிழல் எனவே அமையும். கல்லினது இனிய நிழல் எனக்கொண்டு வேறு நிழலில்லாமையால் இனிய நிழலாயிற்று என்பர் பழையவுரையாசிரியர். காதல்-காதலிக்கப் படுவது. ஆதலால் அவர் வருவர் என்பது பேதைமை என்பது குறிப்பெச்சம்.

இனி இதனை: தோழி நீ காதலராற் காதலிக்கப்படுவது அருளே என்றி ஆதலால் நீ அறியாய் அவரால் காதலிக்கப்படுவது "நீரற வறந்த நீள் இடை புலம்புகொள் இயவின் நடுகல்லின் நிழலில் செந்நாய் பசியையுடைய பிணவொடு வதிதற் கிடனான அருஞ்சுரக் கவலை நீந்திப் போய் ஈட்டும் பொருளே ஆகும் ஆதலால் விரைந்து வருவர் என்கின்ற நீ அறியாய்காண்! என இயைத்திடுக.

## செய்யுள் ருச

**திணை :** முல்லை.

**துறை :** வினைமுடித்து மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—வினைவயிற் பிரிந்த தலைவன் தான் மேற்கொண்ட வினைமுடிந்தவுடன் தலைவியை நினைந்தவனாய் விரைந்துசென்று அவளைக் காண விதுப்புறும் நெஞ்சினனாய்த் தேர்ப்பாகனை விளித்துத் தேரினை விரைந்து செலுத்துமாறு கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "கரணத்தின்" எனவரும் (தொல். கற்பி - ரு) நூற்பாவின்கண் "அவ்வழிப் பெருகிய சிறப்பின் கண்ணும்" எனவரும் விதி கொள்க.

> விருந்தின் மன்னர் அருங்கலந் தெறுப்ப
> வேந்தனும் வெம்பகை தணிந்தனன் தீம்பெயற்
> காரும் ஆர்கலி தலையின்று தேரும்
> ஓவத் தன்ன கோபச் செந்நிலம்
> ரு வள்வாய் ஆழி உள்ளுறு புருளக்

கடவுக காண்குவம் பாக மதவுநடைத்
தாம்பசை குழவி வீங்குசுரை மடியக்
கனையலங் குரல காற்பரி பயிற்றிப்
படுமணி மிடற்ற பயநிரை யாயம்
கo கொடுமடி யுடையர் கோற்கைக் கோவலர்
கொன்றையங் குழலர் பின்றைத் தூங்க
மனைமனைப் படரும் நனைநகு மாலைத்
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
கரு புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்
நீர்குடி சுவையில் தீவிய மிழற்றி
முகிழ்நிலாத் திகழ்தரும் மூவாத் திங்கள்
பொன்னுடைத் தாலி யென்மகன் ஒற்றி
வருகுவை யாயின் தருகுவென் பாலென
உ0 விலங்கமர்க் கண்ணள் விரல்விளி பயிற்றித்
திதலை யல்குலெங் காதலி
புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலையே.

—மாற்றூர் கிழார் மகனார் கொற்றங் கொற்றனார்.

(சோச்சி நியமங்கிழார் மகனார்......என்றும் பாடம்)

(உரை)

க - சு : விருந்தின்.........பாக

**(இ - ள்.)** *பாக - தேர்ப்பாகனே!; விருந்தின் மன்னர் அருங்கலம் தெறுப்ப - நம்மால் அறிவுறுத்தப்பட்டபடியே புதிய பகைமன்னர் தாமும் நம்மரசனுக்கடங்கிப் பெறற்கரிய பேரணி கலங்களைக் கொணர்ந்து திறையாகக் குவியா நிற்றலாலே; வேந்தனும் வெம்பகை தணிந்தனன் - அவர்பால் போர் மேற் கொண்டுவந்த நமமரசன்றானும் நம்மறிவுரைக் கிணங்கி அவர் பாற் பகை தீர்ந்து அமைதி எய்துவானாயினன்; ஆகவே நாம் மேற்கொண்டு வந்த வினையும் ஒரு முடிவுக்கு வந்துவிட்டது; தீம் பெயல் காரும் தலையின்று - இனிய தலைப்பெயலையுடைய முகில் தாமும் ஆரவாரத்தோடே மழை பொழிந்தது; ஓவத்து அன்ன கோபச் செந்நிலம் - ஓவியம் வரைந்து வண்ணந் தீட்டினாற் போன்று இந்திர கோபப்புழுக்கள் ஊர்ந்து செல்கின்ற சிவந்த*

இந்த நிலத்தின்கண்; வள் வாய் ஆழி உள் உறுபு உருள-வலிமை யுடைய விளிம்பினையுடைய தேரினது உருள் நிலத்தினூடே அழுந்துமாயினும் விரைந்துருளும்படி; கடவுக - நினது கல்வி மாட்சிமையாலே செலுத்தக்கடவை அஃதெற்றுக்கெனின் என்க.

(வி - ம்.) விருந்தின்மன்னர் என்றது நம்மன்னனுடைய போராற்றல் அறியாத புதியராகிய பகைமன்னர் என்பதுபட நின்றது. வேந்தனும் என்புழி எச்சவும்மை சிறப்பும்மைப் பொருள்படவும் நின்றது. தெறுப்ப - குவிப்ப. விருந்தின்மன்னர் அருங்கலங்களைத் திறையாகக் கொணர்ந்து குவிப்ப என்றவாறு. விருந்தின்மன்னர் தன்னறிவுரைக் கிணங்கி அருங்கலம் குவிப்ப வேந்தனும் நம்மறிவுரைக்குச் செவிசாய்த்துப் பகை தணிந்தனன். ஆகவே யாம் மேற்கொண்டு போந்த சந்து செய்வித்தலாகிய வினைமுடிந்தது என்றானுமாயிற்று. முதுவேனில் கழிந்து கார்ப்பருவத் தொடக்கத்தே பெய்யும் மழையாகலின் தீம்பெயல் என்றான். காரும் தலையிற்று எனற்பாலது தலையின்று என மெலிந்து நின்றது. கார்ப்பருவமும் வந்துற்றது எனினுமாம். ஓவம் - ஓவியம். கோபம் - இந்திரகோபம். வள் - வலிமை; பெருமையுமாம். உள் உறுமாயினும் விரைந்துருள எனச் சிலசொற் பெய்துரைக்க. மழை பொழிந்தமையான் தேராழி நிலத்தில் அழுந்தும். ஆயினும் விரைந் துருளுமாறு கடவுக என்பது கருத்தாகக் கொள்க. காண்குவம் என்பது இறுதியிற் கூட்டப்படும்.

சூ - கஉ : மதவு நடை..........மாலை

(இ - ள்.) பய நிரை ஆயம் - பாலாகிய பயனையுடைய கூட்டமாகிய ஆக்கள்; தாம்பு அசை மதவு நடைக்குழவி - மனையிடத்தே தாம்புகளாலே கட்டப்பட்டிருக்கின்ற செருக்கிய நடையையுடைய தம் கன்றுகளை நினைந்து; வீங்கு சுரை மடிய - பால் சுரந்து பருத்த காம்புகளையுடைய மடியை யுடையனவாய்; கனையல் அம்குரல - கனைக்கின்ற அழகிய குரலையுடையனவாய்; கால் பரி பயிற்றி - காலின் செலவினை விரைவுபடுத்தலாலே; படுமணி மிடற்ற - விரைந்தொலிக்கும் மணிகளையுடைய கழுத்தினையுடையவாய்; கொடு மடி உடையர் - கீரை பறித்திடுதற்குக் குழியக் கோலிய மடியையுடைய ஆடையினை யுடையராய், கோல்கைக் கோவலர் - கோல்பற்றிய கையினையுடைய ஆயர்; கொன்றை அம்குழலர் பின்றைத் தூங்க - கொன்றைப் பழத்தாலியற்றிய அழகிய குழலை இசைப்பாராய்த் தம் பின்னர் மெத்தென வாராநிற்ப; மனை மனைப்படரும் - ஆக்கள் தத்தம் மனைதொறும் மனைதொறும் விரைந்து புகுதற்குக் காரணமான; நனை நகு மாலை - முல்லை மல்லிகை முதலியவற்றின் மொட்டுகள அலர்தலையுடைய இற்றைநாள் மாலைப் பொழுதிலேயே யாம் சென்று; என்க.

(வி - ர.) பயம் - பால். பாற்பயனையுடைய நிரை என்க. அசை குழவி - கட்டப்பட்ட கன்று. மடிய - மடியையுடையனவாய்; மடி - ஆவின் முலைக்குப் பெயர். இப்பொருள் காணமாட்டாது மடிய வேண்டி எனப் பழையவுரைகாரர் வினையெச்சமாகக் கொண்டனர். ஆகலின் மடியக் கனைகுரல எனப் புணர்த்தனர். யாம் கூறும் பொருட்கு ஒற்று நீக்கி இயல்பு புணர்ச்சியாகக் கொள்க. சுரை என்றது முலைக்காம்புகளை. ஆவின் குரல் கேட்டற் கினிதாகலின் அம்குரல என்றார். காற்பரி பயிற்றுதலாவது விரைய விரைய அடிபெயர்த்திடுதல். இங்ஙனம் விரைந்து போதல் கன்றை நினைந்து விரையும் ஆவிற்கியல்பு. பயிற்றி - பயிற்ற எனத் திரித்து மணியில் ஒலி விரைந்துபடுதற்கு ஏதுவாக்குக.

ஆக்கள் இங்ஙனம் விரைந்து படரினும் கோவலர் மெத்தென இயங்கி இசையூதி வருவர் என்பது தோன்றக் கோவலர் குழலர் பின்றைத் தூங்க என்றார். மனைமனை எனும் அடுக்குப் பன்மைமேற்று.

## கரு - கசு: தனக்கென..........மிழற்றி

(இ - ள்.) தனக்கு என வாழாப் பிறர்க்குரியாளன் பண்ணன் சிறுகுடிப் படப்பை - எல்லாம் தனக்கே வேண்டும என்னும் மேற்கோளுடன் வாழுதலின்றித் தான் முயலும் முயற்சியால் வரும் பயனெல்லாம் பிறர்க்குப் பயன்படவேண்டும் என்னும மேற்கோளுடனே முயலுதலானே பிறர்க்கே உரிமையுடையனாய்த் திகழுகின்ற பண்ணன் என்பானது சிறுகுடி என்னும ஊரின்கண் அவனது தோட்டத்திலுள்ள; நுண் இலை புன் காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர் - நுண்ணிய இலைகளையும் புல்லிய காழினையும் உடைய நெல்லிமரத்திற் காய்த்த பசிய காயைத் தின்றவர் பின்னர்; நீர் குடி சுவையில் தீவிய மிழற்றி - நீரைப் பருகுங்கால் உண்டாகும் சுவையைப்போன்று இனிமையுடைய தனது மழலை மொழியாலே பேசி; என்க.

(வி - ம்.) "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்" என்னுமிதனோடு, "உண்டா லம்ம......தமக்கென முயலா நோன்றாள் பிறர்க்கென முயலுநர் உண்மையானே" எனவரும் புறப்பாட்டு (கஅஉ) ஒப்புக் காணற்பாலதாம். சிறுகுடி - பண்ணனது ஊர். இப்பெயருடைய ஊர் தமிழ்நாட்டிற் பலவுள்ளன. படப்பை - பண்ணனுடைய படப்பை என்க. புன்காழ் - நொய்தான அகக்காழ். இதனை விதை என்பாரும் உளர். அவன் படப்பைக் கண்ணவாகிய நெல்லிக்காயாதலின் வேண்டியவர் பறித்துத் தின்பார் என்பதும் தோன்றிற்று. நெல்லிக்காயைத் தின்றº பின்னர் நீர் பருகின் மிகவும் தித்திப்புச்சுவை தோன்றும். இச்சுவை ஈண்டுத் தலைவியின் மொழியினிமைக்குவமை. அவள் சொல்லும் மழலைச் சொல்லெலன்பான் மிழற்றி என்றான்.

## கஎ - உஉ: முகிழ்நிலா...........நிலையே

(இ - ள்.) முகிழ்க்கின்ற நிலவொளியாலே விளங்குகின்ற திங்கட்குழவியே!; பொன் உடைத்தாலி என்மகன் ஒற்றி

வருகுவையாயின் பால் தருகுவன் என - பொன்னுலியன்ற தாலியை அணிந்துள்ள என் மகனோடு விளையாட நினைந்து நீயும் இங்கு வருவாயானால் நினக்கும் யான் பால் பருகத் தருகுவன் காண்! என்று கூறி; விலங்கு அமர்க் கண்ணள் - அவ்விளந் திங்களை ஒருக்கணித்து நோக்குகின்ற அமர்த்த கண்ணையுடைய ளாய்; விரல் விளி பயிற்றி - அத்திங்களை வருக! வருக! என்று தன் விரல்களை யசைத்து அடுத்தடுத்து அழைத்து! புதல்வன் பொய்க்கும் - தன் இடையிலிருக்கின்ற மகன்பொருட்டுப் பொய்யை மெய்போலக் கூறிநிற்கும், திதலை அல்குல் எம் காதலி பூங்கொடி நிலை (சு) காண்கம் - தேமல் படர்ந்த அல்குலையுடைய எம் காதலியாகிய பூங்கொடி போல்வாளது நிலையினை யாமும் காண்பேம் என்று அவாவுகின்றேம் மாதலான்; என்க.

(வி - ம்.) மூவாத்திங்கள் - பிறைத்திங்கள், அதுவும் குழவியே ஆதலின் நீயும் வருதியாயின் பால் தருகுவன் என்று அழைத்தபடியாம். விரல் விளி பயிற்றல் - நான்கு விரல்களைச் சேரக்கூட்டி அசைத்துக் கொண்டு வருக! வருக! எனக் கூறுதல். திதலை - தேமல். புதல்வன் மெய்யென்று நினைத்து எதிர்பார்க்கும்படி பொய் கூறுவள் என்க.

இதன்கட் டலைவன் சந்து செய்வித்தற்குப் பிரிந்தவன் ஆகலின் அந்தணத் தலைவன் என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

இனி இதனை, பாக விருந்தின் மன்னர் அருங்கலம் இறுப்ப வேந்த னும் பகை தணிந்தனன் ஆதலின் நம் வினைமுற்றியது. இனி நீ தேரினை விரைந்து கடவுக! எற்றுக் கெனின் யாம் இற்றைநாள் மாலையிலேயே எம் காதலி புதல்வற் பொய்த்து நிற்பாள்நிலை காண்குதும் என அவாவு கின்றேம் ஆகலின் என்றியைபு காண்க.

(பா. வே.) சு. கடவிக் காண்குவம். கக. பயனிரையாயம். கரு. புன் கானெல்லி.

## செய்யுள் ருரு

**திணை :** பாலை.

**துறை :** புணர்ந்துடன் போன தலைமகட்கு இரங்கிய தாய் தெருட் டும் அயலிலாட்டியர்க்கு உரைத்தது.

**(து - ம்)** அஃதாவது-களவொழுக்கத்தினின்ற தலைவி இற்செறித்த லும் பிறவுமாகிய இடையூறு காரணமாகத் தமரறியாமல் தலைவனுடன் சென்று விட்டவழி அஃதறிந்த தாய் பெரிதும் வருந்துவாளாக, அது கண்டு அவளை ஆற்றுவிக்கும் அயல் வீட்டினராகிய மகளிர்க்கு அத்தாய் கூறியது என்றவாறு.

**(இ - ம்.)** இதனை, " தன்னும் அவனும் அவளுஞ் சுட்டி " எனவரும் (தொல். அகத் - ருசு) நூற்பாவின்கண் "அவ்வழி ஆகிய கிளவியு முரிய" என்பதனால் அமைத்துக் கொள்க.

காய்ந்து செலற் கனலி கல்பகத் தெறுதலின்
நீந்து குருகுருகும் என்றூழ் நீளிடை
உளிமுக வெம்பரல் அடிவருத் துறுலின்
விளிமுறை அறியா வேய்கரி கானம்
௫ வயக்களிற் றன்ன காளையொ டென்மகள்
கழிந்ததற் கழிந்தன்றோ இலனே யொழிந்தியான்
ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த் தசைஇ
வேவது போலும் வெய்ய நெஞ்சமொடு
கண்படை பெறேஎன் கனவ ஒண்படைக்
௧௦ கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்
பொருதுபுண் ணாணிய சேர லாதன்
அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென
இன்னா இன்னுரை கேட்ட சான்றோர்
அரும்பெறல் உலகத் தவனொடு செலீஇயர்
௧௫ பெரும்பிறி தாகி யாங்குப் பிறிந்திவண்
காதல் வேண்டியென் துறந்து
போதல்செல் லாவென் உயிரோடு புலந்தே.

—மாமூலனார்.

(உரை)

க — ரு : காய்ந்து...........அழிந்தன்றோவிலனே

(இ - ள்.) *காய்ந்து செலல் கனலி கல் பகத் தெறுதலின் - அன்புடையீரே! கேண்மின்! நிலவுலகத்தை வெம்மை செய்து விசும்பிடத்தே இயங்குதலையுடைய ஞாயிற்றுமண்டிலம் மிகவும் சுடுதலாலே; நீந்து குருகு உருகும் என்றூழ் நீள் இடை - பிற நிலத்தினின்றும தனக்கு மேலே பறந்து கடந்து செல்லாநின்ற பறவைகளின் நிணமும் உருகுதற்குக் காரணமான வெப்ப முடைத்தான நெடிய பாலைப் பரப்பினகண் பரவிக் கிடக்கின்ற; உளிமுக வெம்பரல் அடி வருத்துறுலின் - உலையிலிட்டுக் காய்ச்சப் பட்ட உளியினது வாய்போன்ற கூர்மையுடைய வெப்பமேறிய பருக்கைக் கற்கள் தன்மிசை நடப்போருடைய அடிகளைப் போதக் குத்தித் தீய்த்துப் பெரிதும் வருத்தம் செய்தலாலே; விளிமுறை அறியா - அவர் தாம் வீழ்ந்து சாகும் இடம் யாது என்று அறியாமைக்குக் காரணமாய்; வேய் கரி கானம் - தனது*

கருப்பொருளாகிய மூங்கில்கள் தாமும் கரிந்துபோதற்கிடனுன வெவ்விய பாலைக் காட்டினூடே; என் மகள் - யானீன்று வளர்த்த என்னுடைய அருமை மகள்; வயக்களிற்று அன்ன காளையொடு - பிறள் மகன் ஆகிய வலிய களிற்றியானை போல்வானொரு கட்டிளங் காளையோடு; கழிந்ததற்கு அழிந்தன்று இலன் - எம்மைத் துறந்து போயதனை நினைந்து யானிப்பொழுது வருந்துகின்றிலேன்காண் அவள் போய் ஒழிக !; என்க.

(வி - ம்.) இதன் ஆசிரியராகிய மாமூலனார் பாலைநிலத்தின் கொடுமையைக் கற்போருள்ளமும் வெதும்புமாறு ஓதியிருத்தலுணர்க. கனலி, ஞாயிறு, பறந்து கடத்தலின் அருமை தோன்ற நீந்து குருகு என்றார். உருகும் என்றமையாலே நிணம் உருகும் என்பதே சிறப்பாதலறிக. தன்மிசை நடப்பவர் என வருவித்தோதிக் கொள்க. வெப்பத்தில் வீழ்ந்து துடிப்பவர் வீழ்ந்து சாதற்கு ஓரிடம் வேண்டுவரன்றே அத்தகைய இடத்தைக் காணவொண்ணாத வெம்பாலை என்க. முறை - இடம் என்னும் பொருட்டு; இனி, தாம் எவ்வகையாற் சாவேமோ என்று அறியவொண்ணாத எனினுமாம். வேய் அந்நிலத்துக் கருப் பொருளாதலால் அதுதானும் கரியும் கானம் என்க. என்மகள், என்றதனால் பிறள் மகன் என்றுங் கூறிக்கொள்க. இனி, தான் வருந்துதற்குரிய காரணம் இஃதென்கின்றாள்.

## கூ - கூ: ஒழிந்தியான்..........கனவ

(இ - ள்.) யான் ஒழிந்து - அளியேனாகிய யான் அவனைப பிரிந்து; ஊது உலைக்குருகின உயிர்த்து உள் அசைஇ - கொல்லுலைக்கண் ஊதுகின்ற துருத்தி போன்று உள ளிருந்து வெய்தாக உயிர்த்து மெலிந்து; வேவது போலும நெஞசமொடு - பிரிவாற்றுமை யென்னும பெருந்தியினாலே வேகினறது போன்ற நெஞ்சத்தினோடு; கணபடைபெறேன் கனவ-உறக்கமும் எய்தப் பெருதேனாகி வெம்பாலையில் அவள் இயஙகுதலை என மனக்கண் முன்னே கனவுபோலக் கண்டிருக்குமாறு; என்க.

(வி - ம்.) ஊதுலைக்குருகு - வெளிப்படை. அசைஇ - மெலிந்து கண்படை பெறேன கனவ என்றது, அவள் பாலையிற் செல்லுங்கால் படுகின்ற துன்பத்தைத் தன் மனக்கண்முன்னே கற்பனையிற் கண்டு வருந்துவதனை. தன்னை நீங்கிச் சென்ற அன்புடையாரைப்பற்றி வருந்துபவர் யான் இங்குக் கனவு கண்டுகொண்டிருக்கினறேன் எனனும் வழக்கத்தை உலகியலினும் காணலாம். கண்படை பெறேன் கனவ என்றமையே அது கனவன்றென்பதை அறிவுறுத்துதலறிக.

## கூ - கஎ: ஒண்படை..........புலந்தே

(இ - ள்.) ஒள் படைக் கரிகால் வளவனொடு - ஒள்ளிய படைகளையுடைய கரிகாற் சோழனோடு; வெண்ணிப் பறந்தலைப்

பொருது புண் நாணிய சேரலாதன் - வெண்ணியென்னும் ஊரின் மருங்கே யமைந்த போர்க்களத்திலே போரிட்ட காலத்தே பட்ட புறப் புண்ணிற்குப் பெரிதும் நாணமுற்ற சேரலாதன் என்னும் சேர மன்னன்; அழிகள மருங்கின் வாள் வடக்கிருந்தென - தான் தோற்ற அப்போர்க்களத்திலேயே வாளேந்திய கையோடு வடக்கு நோக்கி உண்ணா நோன்போடிருந்து உயிர் நீப்பானாக; இன்னா இன் உரை கேட்ட சான்றோர் - அவ்வின்னாமையும் இனிமையும் ஆகிய இரண்டனையும் தன்பாற் கொண்ட செய்தியைக் கேட்ட சான்றோர் பலருடைய; அரும்பெறல் உலகத்து அவனொடு செலீஇயர் - அரிதிற் பெறுதற்குரிய மறவர்க்கியன்ற மேனிலையுலகத்தே அம்மற மன்னனோடு ஒருங்கே செல்லுதற் பொருட்டு; பெரும்பிறிதாகி ஆங்கு - உயிரும் அவர்தம் உடலினின்றும் நீங்கிப் போனாற் போல; இவண் காதல் வேண்டி - இப்புல்லிய வுலகத்தே பின்னும் சிலரை அன்பு செய்து வாழ்தலை விரும்பி; பிறிந்து துறந்து போதல் செல்லா என் உயிரொடு புலந்தே - என் உடலினின்றும் பிரிந்து இவ்வுலகத்தையே துறந்து போதலைச் செய்யாதிருக்கின்ற என் புல்லிய உயிரொடு பிணங்கியே யான் இங்ஙனம் வருந்துகின்றேன் கண்டீர்! என்பதாம்.

(வி - ம்.) ஒண்படை என்புழி ஒண்மை - புகழ்மேனின்றது. வெண்ணி: ஓரூர்; இஃது ஆரூரின் அணித்தே கோயில்வெண்ணி என்னும் பெயரோடுளது. பறந்தலை - போர்க்களம். புண் - புறப்புண். நாணி என்றதனால் அப்புண் அவன் எதிர்பாராமற் பட்டபுண் என்பது பெற்றாம். சான்றோர் என்றது அவன் சான்றாண்மையை அறிந்த பிற சான்றோர், "இன்னா இன்னுரையாவது - மரிக்கின்றான் என்ற இன்னாமையும் புறப்புண்பட்ட பழிதீர இருந்து உயிர் விடுகின்றானென்கிற இனிமையுமுடைய உரை" என்பது பழையவுரை. அரும்பெறல் உலகம் என்றது விழுப்புண் பட்டுயிர் நீத்த மறவர் எய்தும் மேனிலையுலகம். பெரும்பிறிது - சாவு, காதல் - அன்பு. ஒருத்தியின் அன்பு இங்ஙனம் ஆயிற்று; இவ்வுயிர் இன்னும் சிலர்பால் அன்பு செய்ய விரும்பியிருக்கின்றது என்றிகழ்ந்தபடியாம்.

இனி இதனை, யான் என்மகள் கானம் கழிந்ததற்கு வருந்தி ஆற்றாதாகின்றேன் அலேன். யான் இதுகேட்டு உயிர்த்து மெலிந்து வேவது போலும் நெஞ்சோடிருந்து கனவும்படி என் உயிர் பின்னும் இவ்வுலகில் அன்பு வேண்டி என் யாக்கையினின்றும் ஒழிந்து போகாமைக்கே ஆற்றிலேன் என இயைத்திடுக.

(பா. வே.) அ. போலுமயல நெஞ்சமொடு.

## செய்யுள் ருரு

**திணை :** மருதம்.

**துறை :** பரத்தைமனைக்குச் செல்கின்ற பாணன் தன் மனைக்கு வந்தானாகத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது தலைவன் பரத்தையரோடு கேண்மை கோடற்குத் துணைசெய்கின்றவனாகிய பாணன் தலைவி மனைக்கெதிர் செல்பவன் வழியிலிடையூறுபட்டுத் தன் மனைமுன்றிலின் வந்தவனைத் தலைவி இகழ்ந்து நகைத்தமையைத் தோழிக்குக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை "அவனறிவு" எனவரும் (தொல். கற்பி - சு) நூற்பாவின்கண் "வாயிலின் வரும் வகை" என்பதனாலமைக்க.

நகையா கின்றே தோழி நெருநல்
மணிகண் டன்ன துணிகயந் துளங்க
இரும்பியன் றன்ன கருங்கோட் டெருமை
ஆம்பல் மெல்லடை கிழியக் குவளைக்
ரு கூம்புவிடு பன்மலர் மாந்திக் கரைய
காஞ்சி நுண்டா தீர்ம்புறத் துறைப்ப
மெல்கிடு கவுள அல்குநிலை புகுதரும்
தண்டுறை யூரன் திண்டார் அகலம்
வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய
க0 பரிவொடு வரூஉம் பாணன் தெருவில்
புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி யாழிட்
டெம்மனைப் புகுதந் தோனே அதுகண்டு
மெய்ம்மலி உவகை மறையினென் எதிர்சென்
றிம்மனை அன்றஃ தும்மனை என்ற
கரு என்னுந் தன்னும் நோக்கி
மம்மர் நெஞ்சினோன் தொழுதுநின் றதுவே.

—மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.

(அறுவை வாணிக னிள வேட்டனார் என்றும் பாடம்.)

(உரை)

க - க0 : நகையாகின்றே.........பாணன்

(இ - ள்.) தோழி - தோழிகேள்!; நெருநல் - நேற்று, இரும்பு இயன்று அன்ன கருங் கோட்டு எருமை - இரும்பினால் செய்தவை போன்று காணப்படுகின்ற கரிய மருப்புகளையுடைய எருமையினம் விடியற் காலத்தே; மணி கண்டு அன்ன துணி கயம் துளங்கவும் - பளிக்குமணியைக் கண்டாற் போன்ற தெளிந்த நீரையுடைய குளம் கலங்கும்படி, ஆம்பல் மெல் அடை கிழிய - அதன்கட் படர்ந்துள்ள ஆம்பலினது மெல்லிய

இலைகள் கிழிந்தொழியவும் நீரிற்பாய்ந்து ; கூம்புவிடு பல் குவளை மலர் மாந்தி - அங்கு அப்பொழுது அலர்ந்திருக்கின்ற பலவாகிய குவளை மலர்களையும் வயிறு நிரம்பத்தின்று ; கரைய காஞ்சி நுண் தாது ஈர்ம் புறத்து உறைப்ப - பின்னர்க் கரையிலேறி மெல்ல மெல்ல நடந்து அக்கரையின் கண்ணவாகிய காஞ்சி மரங்களில் அப்பொழுது அலருகின்ற புதிய மலர்களினின்றும் பூந்துகள் ஈர மான தம் முதுகின் மேலே உதிரும்படி; மெல்கு இடு கவுள - அசைவிடுகின்ற தாழ்வாயை யுடையவாய் வந்து; அல்கு நிலை புகுதரும் - தாம் தங்குமிடமாகிய கொட்டிலினூடே புகுதற்குக் காரணமான; தண் துறை ஊரன் - குளிர்ந்த நீர்த்துறைகளை பலவற்றையுமுடைய ஊர்த்தலைவனாகிய நம்பெருமானுடைய ; தார் திண் அகலம் - மாலையணிந்த திண்ணிய மார்பினோடு ; வதுவை நாள் அணிப் புதுவோர்ப் புணரிய - திருமணக் கோலம் பூண்ட புதிய பரத்தை மகளிரைக் கூட்டும் பொருட்டு ; பரிவொடு வரூஉம் பாணன் - பெரிதும் ஆர்வத்தோடு வழிமேல் வருகின்ற பாணனை என்க.

(வி - ம்.) மருதத்திற்குச் சிறுபொழுது வைகறையும் விடியலும் ஆகலின் அப்பொழுது மேய்தற்கு விடப்பட்ட கற்றெருமைகள் குளத்தில் வீழ்ந்து புதிய குவளைமலர்களை மேய்ந்தன என்பது கருத்து. மணி - பளிங்குமணி; இது நீரின் தெளிவுக்குவமை. குவளை - செங்கழுநீரும் நீலமும் என இருவகைய. இவை, இரவின் மலர்வன ஆதலின் கூம்பு விடுமலர் என்றார். கூம்பு விடுமலர் என்றது மலர்ந்த பூ என்னுந்துணை. ஈர்ம்புறம் - நனைந்த முதுகு.

இனி இதன்கண் "மணிகண்டன்ன......ஊரன்" என்றது உள்ளுறை யுவமம். அதனைப் பழையவுரையாசிரியர் "இரும்பியன் றன்ன கருங்கோட்டெருமை கயங் கலங்க ஆம்பல் மெல் அடை கிழியக் குவளைக் கூம்புவிடு பன் மலரை மாந்திக் காஞ்சி நுண்டாது புறத் துறைப்ப மெல்கிடு கவுளவாய்த் தங்குநிலை புகுதரும் என்றது, இரும்பு போன்ற நெஞ்சினையுடையராகிய பரத்தையர் ஊர்முழுதும் கலங்கத் தான் முன்பு கூடின பரத்தையர் தாய்மார் கலங்க, அப்பரத்தையர் 'அவ்வாம்பாபூப் போலக்குவிய குவிதல் விட்ட குவளைமலர் போலும் பூப் பெய்து கொள்ளப்பட்ட பரத்தையரை நுகர்ந்து வருகின்ற காலத்து வழியிலகப்பட்ட சேடியர் முதலாயினரை(யும்,) நுகர்ந்து பின்னும் சிலரைக் கூடக் கொடுநாக்கெறிந்து கொண்டு நம்மனையிலே தங்குதற் பொருட்டு வருகின்றான் என்று தோழிக்கு வாயின் மறுத்தது" என நுண்ணிதின் விளக்கினர். இங்ஙனம் கூறவே இது தலைவனுக்கு வாயில் வேண்டிவந்த தோழிக்கு வாயில் மறுப்பவள் அதற்குரிய காரணத்தைத் தலைவி இதன்கண் உள்ளுறுத்துக் கூறி மறுக்கின்றாள் என்றவாறாயிற்று.

(இதற்கு அப்பரத்தையர் தாய்மார்க்குவமையாக வேண்டிய ஆம்பற்பூச் செய்யுளிற் கூறப்படாமையால்) "கூம்புவிடுபன் மலர் என்றதனானே ஆம்பற்பூக் குவிதல் கொள்க. பூ ஆண்டுக் கூறிற்றிலதேனும்

குறிப்பிற் கொள்க'' எனவும் அப்பழையவுரையாசிரியர் அறிவுறுத்தினார். 'இவர் கூறும் இந்நுணுக்கங்கள் ஆற்றவும் இன்பந்தருவன வாதலுணர்க.

### கo - கக: தெருவில்...........நின்றதுவே

**(இ - ள்.)** தெருவில் புனிற்று ஆப் பாய்ந்து என - தெருவிடத்தே நின்றதொரு ஈன்றணிமையுடைய ஆவானது சினந்து பாய்ந்ததாக; கலங்கி யாழிட்டு எம்மனைப் புகுதந்தோன் - அப்பாணன் நெஞ்சு கலங்கித் தன் கையிலிருந்த யாழ்க்கருவியை நிலத்தில் எறிந்துவிட்டு அஞ்சி ஓடிவந்து எமது மனையின்கண் புகுந்தான்; அதுகண்டு மெய்ம்மலி உவகை மறையினன் - அந்நிகழ்ச்சியைக் கண்டு எனக்குண்டான உடல் புளகித்தற்குக் காரணமான மகிழ்ச்சியை அவன் அறியாதவண்ணம் வலிந்து என்னுள் மறைத்துக்கொண்டு; எதிர் சென்று - அவன் எதிரே சென்று; இம் மனை உம் மனை அன்று அஃது என்ற - ஏடா! இந்த வீடு நீ புகுதற்குரிய உங்கள் வீடன்றுகாண், அம்மனை அதோ சேய்மையிற் காணப்படுகின்ற வீடாயிருக்கும் என்று அறிவுறுத்திய; என்னும் தன்னும் நோக்கி - என்னிலையையும் தன்னிலையையும் தன்னெஞ்சாலே நினைத்துப் பார்த்து; மம்மர் நெஞ்சினோன் - மயங்கிய நெஞ்சத்தோடு; தொழுது நின்றது - பொள்ளெனக் கைகூப்பி என்னைத் தொழுது அவன் நின்ற நிலையினை; நகை ஆகின்று - இப்பொழுது நினைப்பினும் எமக்கு நகைப்பே உண்டாகின்றதுகாண்; என்பதாம்.

**(வி - ம்.)** கட்டுண்ணாது நின்ற ஆ வென்பது தோன்ற தெருவில் என்றாள் புனிற்று - ஈன்றணிமையுடைய ஆ. இது சினந்து பாய்கின்ற தன்மையுடைத்தாம். யாழிட்டது அச்சத்தால் நெஞ்சு கலங்கியதன் விளைவு. கலக்கமிகுதி தோன்ற எறியப்படாத யாழையும் எறிந்து என்றாள். ஈண்டு யாழும் எனல்வேண்டிய உயர்வு சிறப்பும்மைசெய்யுள் விகாரத்தால் தொக்கது. அது - அவ்வவலநிலைமை. தனக்குக் கேடுசூழ்பவனுக்குக் கேடுதானே வந்தமை கண்டு யான் மகிழ்ந்தேன் ஆயினும் அங்ஙனம் மகிழ்தல் நாகரிகமன்மையின் அதனை மறையினேன் என்றாள். மறையினென் மறைத்தேன். இம்மனை உம்மனை அன்று எனமாறுக. தலைவனை அகப்படுத்து உம்மனை என்றாள் அஃது - என்றது தூரத்தே தோன்றும் பரத்தைமனை யொன்றனை விரலாற் சுட்டிக் காட்டி அதோ தோன்றுகிற அம்மனை என்றவாறும். என்னும் தன்னும் என்றது அவனாற் கேடு சூழப்பட்ட என்னிலையும் பிறர்க்குக் கேடு சூழ்ந்து கேட்டிற்கு ஆளாகிய தன்னிலையும் என்பதுபட நிற்றலின் நோக்கி என்றது நோக்கல் நோக்கம்.

உன்னால் பாராட்டப்படுகின்ற தலைவன் நிலைமை ஈதாகலின் அவன் பொருட்டு நீ வாயில் வேண்டாதொழி என்பது குறிப்பு.

இனி இதனை, தோழி ஊரன் அகலம் புதுவோர்ப் புணரிய வரூஉம் பாணன் தெருவில் ஆப் பாய்ந்தெனப் புகுதந்தோன் அதுகண்டு உவகை மறையினென் எதிர் சென்று இம்மனை உம் மனை அன்று (உம் மனை) அஃது என்ற என்னையும் தன்னையும் நோக்கி மம்மர் நெஞ்சினனாய் அவன் தொழுது நின்றது (நினையின்) நகையாகின்று என இயைத்திடுக.

## செய்யுள் ருள

**திணை :** பாலை.

**துறை :** பொருள் வயிற் பிரிந்த தலைமகன் கிழத்தியை நினைந்து சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது - பொருளீட்டற்குத் தலைவியைப் பிரிந்து செல்கின்றவன் இடைச்சுரத்தில் தன் பிரிவாற்றுமல் தலைவி என்னுவளோ என்று தலைவன் தன்னெஞ்சொடு கூறியது என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு "கரணத்தின்" எனவரும் (தொல் - கற்பி-கு) நூற்பாவின்கண், 'வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானும்' எனவரும் விதிகொள்க.

சிறுபைந் தூவிச் செங்காற் பேடை
நெடுநீர் வானத்து வாவுப்பறை நீந்தி
வெயிலவிர் உருப்பொடு வந்துகனி பெறுஅது
பெறுநாள் யாணர் உள்ளிப் பையாந்து
ரு புகலேக் கற்ற புல்லென் உலவைக்
குறுங்கால் இற்றிப் புன்தலை நெடுவீழ்
இரும்பிணர்த் துறுகல் தீண்டி வளிபோரப்
பெருங்கை யானை நிவப்பில் தூங்கும்
குன்ற வைப்பின் என்றூழ் நீளிடை
கல யாமே எமியம் ஆகத் தானே
பசுநிலா விரிந்த பல்கதிர் மதியில்
பெருநல் ஆய்கவின் ஒரீஇச் சிறுபீர்
வீயேர் வண்ணங் கொண்டன்று கொல்லோ
கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
கரு முதுநீர் முன்றுறை முசிறி முற்றிக்
களிறுபட எருக்கிய கல்லென் ஞாட்பின்
அரும்புண் உறுநரின் வருந்தினள் பெரிதழிந்து
பாணுட் கங்குலும் பகலும்
ஆனு தழுவோள் ஆய்சிறு நுதலே.

—நக்கீரர்.

(உ ரை)

க - கo: சிறுபைந்..........எமியம் ஆக

(இ - ள்.) யாமே சிறு பைந் தூவிச் செங்காற் பேடை - நெஞ்சமே யாம் இப்போது சிறிய தண்ணிய சிறகுகளையும் சிவந்த காலையும் உடைய வாவற்பெடை; நெடு நீர் வானத்து வாவுப் பறை நீந்தி - நெடிய தன்மையையுடைய வானத்தின்கண் தாவித் தாவிப் பறக்கும் பறத்தற்றொழிலாலே மிகத் தொலையைக் கடந்து சென்று; வெயில் அவிர் உருப்பொடு - வெயிலின்கண் மிக்கு விளங்காநின்ற வெப்பத்தையுடைய நண்பகலிலேயே வந்து ஆராய்ந்து பார்த்தும்; கனி பெறுஅது - தனக்கிரையாகிய கனி ஒன்றேனும் காணப்பெறுமல்; பெறுநாள் யாணர் உள்ளிப் பையாந்து - தான் அங்கு நிரம்பக் கனி பெறுதற்குக் காரணமான பண்டை நாளின்கண் அவ்விடத்தினது வளத்தை நினைந்து வருந்தி; புகல் ஏக்கற்ற - தனக்கு வேறு புகலிடங் காணுமல் ஏங்குதற் கிடனுயதும்; புல் என் உலவைக் குறுங்கால் இற்றி நெடுவீழ் இரும் பிணர்த் துறுகல் தீண்டி - இலைதீய்ந்து புற்கென் றிருக்கும் கொம்புகளையும் குறிய அடியையுமுடைய இற்றிமரத்தினது நெடிய விழுதானது கரிய பொருக்குடைய பொற்றைக் கல்லினைத் தொட்டுக் காற்றுத் தாக்குதலாலே; யானை பெருங்கை நிவப்பில் தூங்கும் - யானையினது பெரிய கையை உயர்த்தினுற் போன்று அசைதற் கிடனுனதும் ஆகிய; குன்ற வைப்பின் - மலையிடத்தமைந்த ஊர்களையுடைய; என்றாழ் நீள் இடை - வெப்பமுடைய நீண்ட இச் சுரநெறியிடத்தே; எமியம் ஆக - தமியேமாய்க் கிடந்துழன்று வருந்தாநிற்ப; என்க.

(வி - ம்.) தூவி - இறகு. வாவலின் இறகு - தண்ணென்றிருக்கும் ஆதலின் பைந்தூவி என்புழி, பசுமை ஈண்டுத் தண்மைப் பண்புணர்த்தி நின்றது. தலைவியை நினைத்தலின் வாவலினும் பேடையின் வருத்தத்தையே நினைந்தனன்போலும். வாவுப் பறை - ஒரு கொம்பினின்றும் மற்றொரு கொம்பிற்குத் தாவித் தாவிப் பறந்து சேறலின் வாவுப் பறை என்றான். வாவல் - தாவுதல். இதனல் வாவல் என்பது அதற்குக் காரணப்பெயர் என்பது பெற்றும். வெயிலவிர் உருப்பு என்றது. நண்பகலை. நண்பகற் பொழுதிலேயே வந்து என்றான். கனி அரிதிற் கிடைக்குமிடமாகலின் தன்னியல்பிற்கு மாருகப் பகற் பொழுதிலே வந்து என்றவாறு. வாவல் இரவிலேயே இரைதேர்தல் இயல்பு. பெறு நாள் என்றது பண்டு நிரம்பப் பழம் பெறுதற்கியன்ற நாள் என்பது பட நின்றது. புகல் - புகலிடம். உலவை - கொம்பு. தழையின்மையின் புல்லென் உலவை என்றான். இற்றியின் விழுது துறுகல்லின் மேற்பட்டு அசைதலின் அத்தோற்றம் யானை இருங்கையை உயர்த்தி அசைத்தல் போலும் என்றவாறு. பேடை......ஏக்கற்ற நீளிடை என

வும், இற்றிவீழ்......தூங்கும் நீளிடை எனவும் குன்றவைப்பின்...... நீளிடை எனவும் தனித் தனி இயையும். யாமே என்றது தன்னெஞ் சத்தை அகப்படுத்தபடியாம், எனவே இது நெஞ்சிற்குக் கூறியவாறு யிற்று. யாமே என்புழி ஏகாரம் தலைவியைப் பிரித்தலின் பிரிநிலை என்க.

### கச - கக: கோய்சுவல்...........நுதலே

(இ - ள்.) கொய் சுவல் புரவிக் கொடித்தேர்ச் செழியன் - கத்தரிகையால் கொய்து மட்டஞ் செய்யப்பட்ட பிடரிமயிரை யுடைய குதிரைகளையும் மீனக்கொடியையும் உடைய தேரினை யுடைய பாண்டியன்; முதுநீர் முன் துறை முசிறி முற்றி - கடலின்கட் சிறந்த துறைமுகத்தையுடைய முசிறி என்னும் பட்டினத்தை முற்றுகையிட்டு; களிறுபட எருக்கிய கல் என் ஞாட்பின் - யானைப்படையை அழித்த கல் என்னும் ஆரவாரத்தை யுடைய போரிடத்தே, அரும்புண் உறுநரின் - பெறற்கரிய விழுப்புண்பட்ட மறவர் போன்று; பெரிது அழிந்து வருந்தினள் - பிரிவாற்றாமையாலே மிகவும் நெஞ்சம் அழிந்து வருந்தினள்; பகலும் பால் நாள் கங்குலும் - பகலினும் நள்ளிரவினும்; ஆனாது அழுவோள் ஆய் சிறுநுதல் - ஒழியாது அழுகின்ற நங்காதலி யினது அழகிய சிறிய நுதல் என்க.

(வி - ம்.) முதுநீர் - கடல். எருக்கிய - கெடுத்த; அழித்த. ''அரும் புண் - தீர்தற்கரிய மருமத்திற் புண்'' என்பது பழையவுரை. மருமம் - மார்பு. பால்நாட்கங்குல் - நள்ளிரவு.

### கo - கரு: தானே..........கோல்லோ

(இ - ள்.) தானே பசு நிலா விரிந்த பல்கதிர் மதியின் - தண்ணிய நிலவொளி பரவிய பலவாகிய கதிர்களையுடைய திங்களை ஒத்த; பெருநல் ஆய் கவின் ஒரீஇ - பெரிய நன்மையையுடைய பலரும் ஆராய்தற்குரிய அழகு நீங்கப்பெற்று; சிறு பீர் வீ ஏர் வண்ணம் கொண்டன்று கொல்லோ - சிறிய பீர்க்கம் பூவினது நிறத்தை ஒத்த நிறத்தைக் கொண்டதோ; கொள்ளாதாயிற்றோ? என்பதாம்.

(வி - ம்.) கo - தானே, தானும் ஏயும், அசைச் சொற்கள். பசு நிலா - தண்ணிய நிலவொளி. மதி - ஈண்டுப் பிறைத்திங்கள். பெரு நற்கவின், ஆய்கவின் எனத் தனித் தனி இயையும். கொல்: ஐயம்.

இனி இதனை, பேடை நீந்திப் பெறுது ஏக்கற்றதும்; இற்றி வீழ் கல் தீண்டி வளி பொர யானைக்கை நிவப்பில் தூங்குவதும்; ஆகிய நீளிடை யாம் எமியம், அழுவோள் நுதல் தனது கவின் ஒரீஇ பீர் வீ வண்ணம் கொண்டன்று கொல்லோ என இயைத்திடுக.

(பா - வே.) ச - பெயர்ந்து. அ - தோன்றும். கசு - களிறுபட வருந்திய என்றும் பாடங்கள்.

## செய்யுள் ருஅ

**திணை:** குறிஞ்சி

**துறை:** சேட்படுத்து வந்த தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—வரைதலிற் கருத்தின்றி அதனை நீட்டிப்பச் செய்து இரவுக் குறிக்கண் வந்த தலைவனுக்குத் தலைவி களவொழுக்கத்தே புணர்ச்சிக் காலத்தினும் நீளிதாய பிரிவுக் காலத்துத் தானுறுந் துன்பத்தைத் தலைவன் குறிப்பாலுணரும்படி கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "மறைந்தவர்க் காண்டல்" (தொல் - களவு - உ0) எனவரும் நூற்பாவின்கண் "வந்தவழி எள்ளினும்" எனவரும் விதியாலமைக்க. இதனை (நச்சினார்க்) "பெற்றவழி மலியினும்" என்பதற்கு எடுத்துக் காட்டுவர்.

இன்னிசை உருமொடு கனைதுளி தலைஇ
மன்னுயிர் மடிந்த பானாட் கங்குல்
காடுதேர் வேட்டத்து விளிவிடம் பெறாஅது
வரியதள் படுத்த சேக்கைத் தெரியிழைத்
ரு　தேனாறு கதுப்பிற் கொடிச்சியர் தந்தை
கூதிரிற் செறியுங் குன்ற நாட
வனைந்துவரல் இளமுலை ஞெமுங்கப் பல்லூழ்
விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார் படைதலின் இனிதா கின்றே
க0　நும்மில் புலம்பினும் உள்ளுதொறு நலியும்
தண்வரல் அசைஇய பண்பில் வாடை
பதம்பெறு கல்லா திடம்பார்த்து நீடி
மனைமரம் ஒசிய ஒற்றிப்
பலர்மடி கங்குல் நெடும்புற நிலையே.

—மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார்.

### (உரை)

க - சு: இன்னிசை.........நாட

(இ - ள்.) தெரி இழை தேன் நாறு கதுப்பின் கொடிச்சியர் தந்தை - ஆராய்ந்தெடுத்த அணிகலன்களையும் தேன்மணக்கும்

கூந்தலையும் உடைய கொடிச்சியரின் தந்தைமார்; இன் இசை உருமொடு கனை துளி தலைஇ - கேட்டற்கினிய ஒலியையுடைய இடிமுழக்கத்தோடே மிக்க மழை பொழியப்பட்டு; மன் உயிர் மடிந்த கூதிரில் பால் நாள் கங்குல் - உலகத்தே உடலொடு நிலைபெற்ற உயிரினமெல்லாம் உறங்கிய கூதிர்ப்பருவத்து நள்ளிரவிலே; காடு தேர் வேட்டத்து விளிவு இடம் பெறாஅது - தாம் காட்டினூடே ஆராய்தற்குக் காரணமான வேட்டைத் தொழிலிடத்தே அக்காட்டின்கண் உறங்குமிடம் பெறமாட்டாமையாலே தம்மில்லத்தை நாடி வந்து; வரி அதள்படுத்த சேக்கை செறியும் குன்ற நாட - அங்கு வரிகளையுடைய புலித்தோலைப் பாயலாக விரித்துத் தங்குதற்கிடனான மலைநாட்டையுடைய பெருமானே! என்க.

(வி - ம்.) தெரியிழை : வினைத்தொகை. கதுப்பு-கூந்தல். கொடிச்சியர் - குறக்குடியி லுயர்குடிப் பிறப்புடைய மகளிர். இரவின்கண் முழங்கிப் பெய்யும் மழையொலி உறங்குவார்க்குப் பெரிதும் இன்பஞ் செய்தலின் இன்னிசை உரும் என்றாள். தலைஇ - பெய்து; பெய்யப் பட்டு; விளிவு இடம் - உறங்குமிடம் - இனி அவ்வேட்டத்தைச் செய்து முடிக்கும் செவ்வியுமாம்.

உள்ளுறை - கொடிச்சியர் தந்தைமார் தந்தொழிலிற் கிடையூறுற்ற பொழுது மட்டுமே இல்லத்தை நினைந்து வந்து தங்குமாறு போலே நீயும் நின் காரியத்திலேயே கண்ணுயிருந்து அதனையே செய்குதி. மற்று அதற்கு இடையூறு தோன்றிய பொழுதின் மட்டுமே என்னை நினைந்து வருதி. இங்ஙனம் வருதலினும் வாராமையே இனிது என அவனை எள்ளிய கருத்து இதன்கண் உள்ளுறுத்தப் பட்டமை யுணர்க.

கo - கச : நும்மில்..........நெடும்புறநிலையே

(இ - ள்.) நும் இல் புலம்பினும் - நும்மை எய்துதல் இல்லாத தனிமைப் பொழுதிலே; உள்ளுதொறும் நலியும் - நும்மை நினையுந்தோறும் பெரிதும் யான் வருந்துதற்கிடனான; தண் வரல் அசைஇய பண்பு இல் வாடை - குளிர்ந்த தனது வருகையாலேயே உயிர்களை நடுக்கஞ் செய்கின்ற நற்பண்பு சிறிதுமில்லாத வாடைக்கு அஞ்சி; பதம் பெறு கல்லாது - அதற்குத் தப்பியுய்தற்குச் செவ்வி பெறாமல்; இடம் பார்த்து - நீ வருகின்ற காலத்தை எதிர்பார்த்து; நீடி - நீண்டபொழுது தாழ்த்து; மனைமரம் ஒசிய ஒற்றி - மனையினயலில் நிற்கின்ற மரம் முறியுமாறு வளைத்துப் பிடித்தவாறே; பலர் மடி கங்குல் - ஊரிலுள்ளார் பலரும் நன்கு துயிலுகின்ற நள்ளிரவிலே; நெடும் புறநிலை - யான் நெடிது நிற்கின்ற புறநிலை; என்க.

(வி - ம்.) புலம்பு - தனிமைத்துன்பம். வாடைக்கு அஞ்சி, அதற்குத் தப்புஞ் செவ்வி பெறுமல் என்க. வரலாலேயே அசைஇய வாடை என்க. பண்பு - நற்பண்பு. மனைமரம் - மனையருகே நின்று தலைவன் வரும் வழியை மறைக்கும் மரம். மறையாமைப் பொருட்டு அதன் கிளையை முறியுமளவு கையால் வளைத்துப் பிடித்து நிற்கும் நிலை என்றவாறு.

எ - கூ: வளைந்து............ஆகின்றே

(இ - ள்.) வளைந்து வரல் இளமுலை ஞெமுங்கப் பல்ஊழ் விளங்குதொடி முன்கை வளைந்து புறம் சுற்ற நின்மார்பு அடைதலின் - யான் இப்பொழுது வளைவதுபோலே வளர்ந்து வருகின்ற என்னுடைய இளைய முலைகள் நன்கு அமுங்கும்படி பலமுறை விளங்குகின்ற பொன்வளையலையுடைய என் முன் கைகள் இருமருங்கும் வளைந்து நின் முதுகினைச் சூழும்படி நினது மார்பின்கண் முயக்கம் பெறுதலினுங் காட்டில்; இனிதாகின்று - இன்ப மிக்கதாகின்றதுகாண்; என்றவாறு.

(வி - ம்.) வளைதல் - செய்தல். வரல் - வளர்தல். யான் நின்னைத் தழுவுமிப்பொழுதே நீ பிரிந்துபோய் மறந்தும் விடுவை என்னும் நினைவு துன்புறுத்துதலாலே மனவமைதியோடு இன்புறுகின்றேனில்லை. ஆதலின், நின்னை எதிர்பார்த்து நிற்கின்ற நெடும்புற நிலையில் நீ வந்தால் பேரின்பமெய்துவேன் என்னும் இன்ப நினைவே மிக்கு அப்பொழுதைத் துன்பத்தை மறப்பிக்கின்றதாதலின் நின் மார்படைதலின் நெடும்புற நிலையே இனிதாகின்றது என்றாள் என்க.

இனி, இதனை, குன்றநாட, வாடைக்குப் பதம் பெறுகல்லா திடம் பார்த்து நீடி மரம் ஒற்றிக் கங்குலில் நிற்கும் நெடும் புறநிலையே நின் மார்பு அடைதலினும் இனிதாகின்றது என இயைக்க.

## செய்யுள் ருக

திணை: பாலை.

துறை: தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட கிழத்திக்குத் தோழி சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—தலைவன் பொருளீட்டப் பிரிந்தவன் வரவு நீட்டித்தலாலே தலைவி பிரிவாற்றுமல் பெரிதும் வருந்தி உடல் மெலிந்தமை கண்ட தோழி தலைவனை இயற்பழிப்பாள் போல, அன்புறு தகுந இறைச்சியிற் சுட்டி அவர் விரைந்து மீண்டுவருகுவர், நீ அதுகாறும் ஆற்றியிருத்தல் வேண்டும் என்பதுபடக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை—"பெறற்கரும் பெரும் பொருளை" எனவரும் (தொல் - கற்பி - கூ) நூற்பாவின் கண் "வகை படவந்த கிளவியெல்லாம்" என்பதனுலமைத்திடுக.

தண்கயத் தமன்ற வண்டுபடு துணைமலர்ப்
பெருந்தகை இழந்த கண்ணினை பெரிதும்
வருந்தினை வாழியர் நீயே வடாஅது
வண்புனல் தொழுநை வார்மணல் அகன்றுறை
ரு அண்டர் மகளிர் தண்டழை உடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போலப்
புன்றலை மடப்பிடி உணீஇயர் அங்குழை
நெடுநிலை யாஅம் ஒற்றி நனைகவுள்
படிஞிமிறு கடியும் களிறே தோழி
க0 சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்
சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து
அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை
இன்றீம் பைஞ்சுனை ஈரணிப் பொலிந்த
தண்ணறுங் கழுநீர்ச் செண்ணியற் சிறுபுறம்
கரு தாம்பா ராட்டிய காலையும் உள்ளார்
வீங்கிறைப் பணைத்தோள் நெகிழச் சேய்நாட்
டருஞ்செயற் பொருட்பிணி முன்னிநப்
பிரிந்துசேண் உறைநர் சென்ற ஆறே.

—மதுரை மருதனிளநாகன்.

(உரை)

க - ரு : தண்கய..........நீயே

**(இ - ள்.)** (கூ) *தோழி - எம்பெருமாட்டியே கேள்! நீயே - நீ தான் இப்பொழுது; தண் கயத்து அமன்ற வண்டுபடு துணை மலர்ப் பெருந்தகை இழந்த கண்ணினை - தண்ணிய குளத்திலே செறிந்த வண்டுகள் வந்து மொய்க்கின்ற இரட்டையாக இணைந்து மலர்ந்த செந்தாமரை மலர்கள் போன்று தமக்கியல்பாக வமைந்த பேரழகினை இழந்து பசலைபாய்ந்த கண்களையுடையை யாய்; பெரிதும் வருந்தினை - மிகவும் பிரிவாற்றாமையாலே வருந்தாநின்றனை; இங்ஙனம் வருந்துதல் நின் பெருந்தகைமைக்குப் பொருந்தாதுகாண்! வாழியர் - நீ வாழ்வாயாக; என்க.*

**(வி - ம்.)** *அமலுதல் - செறிதல். துணைமலர்-ஓரிடத்தே இணைந்து மலர்ந்துள்ள தாமரை மலர். பெருந்தகை - பேரழகு. ஆடவர் பொருளீட்டி வருந்துணையும் ஆற்றியிருத்தலே குலமகளிர் கடமையாகலின் நீ இங்ஙனம் வருந்துதல் தகாது என்பது குறிப்பு.*

௧௦ - ௧௨ : சூர்மருங்கு..........ஆறே

(இ - ள்.) சூர் மருங்கு அறுத்த சுடர் இலை நெடுவேல் சினம் மிகுமுருகன் தண் பரங் குன்றத்து - சூரபன்மா என்னும் அவுணனைச் சுற்றத்தோடு அழித்தொழித்ததாகிய ஒளியுடைய இலையையுடைய நெடிய வேற்படையினையுடைய வெகுளி மிக்க முருகவேளாகிய கடவுள் உறைகின்ற தண்ணிய திருப்பரங்குன்ற மாகிய; அந்துவன் பாடிய சந்து கெழு நெடுவரை - நல்வந்து வனார் என்னும் புலவர் பெருமானார் பாராட்டிப் பாடிய சிறப்பமைந்த சந்தனமரங்கள் பொருந்திய நெடிய மலையின் கண்ணதாகிய; இன் தீம் பைஞ் சுனை ஈரணிப் பொலிந்த தண் நறுங் கழுநீர்ச் செண் இயல் சிறுபுறம் - இனிய தீவிய பசிய சுனையிற் பூத்த பேரழகாலே மிகவும் பொலிவுடைய தண்ணிய நறிய கழுநீர் மலரால் அணிசெய்யப்பட்ட கொண்டை கிடந் தசைந்த நினது சிறிய முதுகினது நலத்தை; தாம் பாராட்டிய காலையும் உள்ளார் - தாமே பாராட்டிப் புகழ்ந்த அந்தக் காலத்தே தாம் கூறிய சூண்மொழியையும் எண்ணிப்பாராராய்; வீங்கு இறைப் பணைத்தோள் நெகிழ - பருத்த இறையினையுடைய மூங்கில் ஒத்த நின்தோள்கள் மெலியும்படி; சேய் நாட்டு அருஞ் செயல் பொருள் பிணி முன்னி - தூரிய நாட்டிலே சென்று செயற்கரிய செய்து ஈட்டும் பொருட்பற்றை முன்னிட்டு; நம் பிரிந்து சேண் உறைநர் சென்ற ஆறு - அன்புமிக்க நம்மையும் பிரிந்துபோய் மிகத் தொலைவின்கண்ணுள்ள நாட்டின்கண் காலம் நீட்டிப்ப உறைபவராகிய நம்பெருமான் ஆண்டுச் சென்ற நெறி யின்கண்; எனக.

(வி - ம்.) சூர் - சூரபன்மன் என்னும் அவுணன். மருங்கு-சுற்றம். குன்றத்து என்புழி அத்துச்சாரியை. குன்றமாகிய நெடுவரை என்க. ஈரணி பேரழகு கழுநீர் மலரால் செண்ணித்த செண் என்க. செண் : ஆகுபெயர்; கொண்டை. சிறுபுறம் - முதுகு. நம்பாராட்டிய காலை என்றது இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த காலத்தை. உள்ளார் என்றது அக்காலத்தே நின்னிற் பிரியேன் என்ற சூண் மொழியை. அதனை உள்ளார் எனவே அதனினும் வினையே ஆடவர்க்குயிர் என்பது பற்றி அச்சூளுறவு பொய்யாது நின்னை மனத்தகத்தே அவர் பிரியார். பொரு ளீட்டி அறஞ்செய்தலே நல்வாழ்க்கை ஆதலின் அவர் இன்பந் துறந் தும் அதற்கின்றியமையாத பொருளீட்டற்குப் போயினர் ஆதலின் நீ எவ்வாற்றாலும் ஆற்றியிருத்தலே செயற்பாலது என்று குறிப்பால் வற்புறுத்தினளாயிற்று. இதனைப் பின்னும் வலியுறுத்தற்குப் பின்னர் இறைச்சிப் பொருளும் தோற்றுவிப்பள்.

அந்துவன் - நல்வந்துவன் என்னும் புலவர் பெருமான். இவர் பரிபாடல் அ - ஆம் பாடலில் சினமிகு முருகன் தண்பரங்குன்றத்தை இமயக்குன்றத்தோடும் அதன்கட்சுனையை முருகன் தோன்றிய சரவணப்

பொய்கையோடும் ஒப்பித்துப் பாடிய அருமையை ஈண்டு இப் புலவர் பெருமான் நினைவுகூர்ந்து பாடுகின்றனர்.

**௫ - ௯ : வடாஅது..........களிறே**

(இ - ள்.) வடாஅது வண்புனல் தொழுநை வார் மணல் அகன் துறை - வடதிசைக் கண்ணதாகிய வளவிய நீர்ப்பெருக் கினையுடைய யமுனைப் பேரியாற்றினது நெடிய மணற்பரப்பினை யுடைய அகன்ற துறையின்கண்ணே இறங்கி; அண்டர் மகளிர் தண் தழை உடீஇயர் - நீராடித் தன்னால் ஆடை கவரப்பட்ட ஆயர் மகளிர் தண்ணிய தழையை ஆடையாக உடுத்துக் கோடற் பொருட்டு; மரம் செல மிதித்த மாஅல் போல - கரைக்கண் நின்ற குருந்த மரக்கிளை நீர்மருங்கே வளைந்து செல்லுமாறு திருவடியாலே மிதித்தருளிய மாயோனைப் போன்று; களிறு புன் தலை மடப்பிடி உணீஇயர் - களிற்றியானையானது புற்கென்ற தலையையுடைய இளமையுடைய பிடியானை உண்ணும்பொருட்டு; அங்குழை நெடுநிலை யாஅம் ஒற்றி - அழகிய தழையையுடைய செவ்வன் நிற்கும் நிலையினையுடைய யாமரத்தினைக் காலான் மிதித்து வளைத்திட்டுக் கொடுத்து; நனை கவுள்படு ஞிமிறு கடியும் - அதன் தழையாலேயே தனது மதநீரான் நனைந்த கவுளிடத்தே வந்து மொய்க்கின்ற வண்டுகளை ஓச்சும் என்று நம்பெருமானே கூறினர் அல்லரோ. அத்தகைய காதற் காட்சி யைக் காணுமவர் அண்மையிலேயே மீண்டு வருவர், ஆற்றுதி! ஆற்றுதி!; எனறவாறு.

(வி - ம்.) யமுனையாற்றின்கண் மால் மரத்தை மிதித்தமை பற்றிப் பழையவுரையாசிரியர்.

"ஆயர் பெண்கள் குளியா நின்றார்களாக, அவர் இட்டுவைத்த துகிலெல்லாம் பின்னை எடுத்துக் கொண்டு குருந்த மரத்தேறினாராக, அவ்வளவில் நம்பி மூத்தபிரான் வந்தாராக, அவர்க்கு ஒரு காலத்தே கூட மறைதற்கு மற்றொரு வழியின்மையின் ஏறிநின்ற குருந்த மரத் தின் கொம்பைத் தாழ்த்துக் கொடுத்தார், அதற்குள்ளே அடங்கி மறைவாராக. அவர் போமளவுந் தானையாக வுடுக்கத் தாழ்த்தாரென் பாருமுளர்" என்பர்.

இனி இதனை—

"நீனிற வண்ணன்" என்று தொடங்கும் சிந்தாமணிச் செய்யுளி னும் காணலாம். களிறு பிடியின்பாற் செய்யும் காதலன்பினை வழி யிற் காண்பவர் நின்னை நினைந்து மீள்வர் என வற்புறுத்தபடியாம்; இஃதிறைச்சி.

"அன்புறு தகுவன இறைச்சியிற் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே"

என்பது தொல்காப்பியம். (பொருளியல்-௩௫)

இனி இதனை; தோழி நீ பெரிதும் வருந்தினை வருந்தாதேகொள் - அவர் நம் பாராட்டிய காலையும் உள்ளாராய்ப் பொருட்பிணி முன்னி நப்பிரிந்து சேண் உறைநர் சென்ற ஆறு, களிறு பிடி உணீஇயர் யாம் ஓற்றி கவுள்படி ஞிமிறு கடியும் என்றுரைல்லரோ அத்தகைய காட்சி கண்டு விரைவின் மீள்வர் வருந்தற்க! என்றியைக்க.

(பா - பே.) எ - வங்குழை. கூ - படுஞிமிறு. ௧௧ - சீர் மிகுமுருகன். ௧௬ - சுண்டிப் பொலிந்த.

## செய்யுள் ௬௦

**திணை :** நெய்தல்.

**துறை :** தலைமகற்குத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது.

**(து - ம்.)** அஃதாவது - வரைந்து கோடலிற் கருத்தின்றிக் களவொழுக்கமே காமுற்றுப் பகற்குறியிடத்தே அடுத்தடுத்து வந்து தலைவியை எதிர்பார்ப்பவனாகிய தலைவனைத் தோழி பகற் குறியிடத்தே தமியளாய்ச் சென்று கண்டு இவ்வொழுக்கத்தை அன்னை அறிந்து கொள்ளக் கூடும். அறிந்தவழித் தலைவியை அவள் புறம்போகாதபடி சிக்கென இற்செறித்து விடுவள் ஆதலின் நீ இவ்வாறு பகற்குறியிடத்தே வாராதே கொள்! எனப் பகற்குறி மறுத்து இற்செறிப்பும் அறிவுறுத்துக் குறிப்பாக வரைவுகடாஅயது என்றவாறு.

**(இ - ம்.)** இதனை - 'நாற்றமும் தோற்றமும்' எனவரும் நூற்பாவின் கண் (தொல் - களவி - ௨௩) "களனும்......அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும்" என்பதனாலமைத்திடுக.

பெருங்கடற் பரப்பில் சேயிருல் நடுங்கக்
கொடுந்தொழில் முகந்த செங்கோல் அவ்வலை
நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு
உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு
௫ அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்
திண்டேர்ப் பொறையன் தொண்டி அன்னஎம்
ஒண்டொடி ஞெமுக்கா தீமோ தெய்ய
ஊதை ஈட்டிய உயர்மணல் அடைகரைக்
௧௦ கோதை ஆயமொடு வண்டல் தைஇ
ஓரை ஆடினும் உயங்குநின் ஒளியெனக்
கொன்னுஞ் சிவப்போள் காணின் வென்வேல்
கொற்றச் சோழர் குடந்தை வைத்த

நாடுதரு நிதியினும் செறிய
கரு அருங்கடிப் படுக்குவள் அறனில் யாயே.

—குடவாயிற் கீரத்தனார்.

(உரை)

க - அ: பெருங்கடல்..........தெய்ய

(இ - ள்.) பெருங் கடல் பரப்பில் சேஇரு நடுங்கக் கொடுந் தொழில் முகந்த செங்கோல் அவலை - பெருமானே! ஈதொன்று கேள்! பெரிய கடற்பரப்பினூடே சென்று ஆங்கு வாழ்கின்ற சிவந்த இருமீன்கள் துடிக்கும்படி கொடிய தொழில் செய்து அகப்படுத்துக் கொள்ளற்குக் கருவியாகிய செவ்விய கோல்களை யுடைய அழகிய வலைகளோடு; நெடுந் திமில் தொழிலொடு வைகிய - நெடிய திமிலின்கண் அத்தொழிலில் கருத்தூன்றித் தங்கிய; தந்தைக்கு குறுமகள் - பரதவனாகிய தன் தந்தைக்கு அவன் மகளாகிய சிறுமி; உப்பு நொடை நெல்லின் மூரல் வெள சோறு அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து கொழுமீன் தடியொடு கொடுக்கும் - உப்புக்கு விலையாகப் பெற்ற நெல்லினது அரிசியாற் சமைத்த மூரலாகிய வெள்ளிய சோற்றின்மேலே அயிலைமீன் இட்டுத் துடுப்பாலே துழந்து சமைத்த காட்சிக்கினிதாகிய புளிக் கறியைச் சொரிந்து கொழுவிய மீன்கருவாட்டுப் பொரிக் கறியோடு உண்ணக் கொடுத்தற் கிடனான; திண் தேர்ப் பொறையன் தொண்டி அன்ன - திண்ணிய தேரினையுடைய சேரமன்னனுடைய தொண்டிப்பட்டினம் போன்ற; எம் ஒள்தொடி ஞெமுக்காதீம் - எம்பெருமாட்டியாகிய ஒள்ளிய வளையலையுடையாளை நீ இவ்வாறு பகற்குறி யிடத்தே அடுத்தடுத்து வந்து வருத்தாதே கொள்; அஃதெற்றுக்கெனின் என்க.

(வி - ம்.) இரு - அயிலை என்பன மீன்வகை. முகத்தல்-அகப்படுத்தல். கோல் - வளையிற் கட்டிய கோல். திமில் - தோணி, திமிலின் கண்தொழிலின் மேற் கருத்தூன்றி வைகிய தந்தை என்க. நொடை - விலை. மூரல் - நெற்சோறு - மூரலாகிய சோறு என்க. புளி: ஆகு பெயர் - புளிக்கறி. பார்வைக்கினிய கறி என்பதுதோன்ற அம்புளி எனப்பட்டது. கொழுமீன் - ஒருவகை மீனுமாம். தடி - கருவாடு; ஆகுபெயராய் அதனாலியன்ற பொரிக்கறிக் காயிற்று. இவ்வாற்றால் தொண்டியின் வளம் தெரிந்தோதப்பட்டமை யுணர்க. தொண்டிப் பட்டினம் போன்று ஐம்புலவின்பங்களும் வளமும் உடையாள் என் பாள் அதனை உவமை எடுத்தாள். ஞெமுக்குதல் அடுத்தடுத்து வந்து வருத்துதல். அங்ஙனம் வருதல் தலைவியின் தமர் அறிவுறுதற்கு ஏது வாதல் பற்றித் தலைவி வருந்துதலைக் கருதிற்று.

இனி "திமிற்செருமிலொடு வைகிய தந்தைக்கு இளமகளானவள் மீன் கொண்டு வருதற்கு முன்னே தான் உப்புவிற்ற நெல்லாலே ஆக்கப்பட்ட மூரல் வெண் சோற்றையும் புளிக்கறியையும் சொரிந்து கொழுமீன் தடியொடு கொடுத்தாற் போலத் தாம் வரைதற்குத் தாமும் புறம்பே முயல, நாங்களும் அறத்தொடு நிலைவகையால் ஈங்கே முயல்வேம் எனச் சொல்லியவாறுக்குக என இதன்கண் உள்ளுறை உவமம் கொள்வர் பழையவுரையாசிரியர். மோ, தெய்ய, அசைச் சொற்கள்.

கூ-கரு: ஊதை.........யாயே

**(இ-ள்.)** ஊதை ஈட்டிய உயர்மணல் அடைகரைக் கோதை ஆயமொடு - வாடைக் காற்று வாரிக் கொணர்ந்து குவித்த உயர்ந்த மணற் குன்றங்களையுடைய நீரடைகரைக் கண்ணே; கோதை ஆயமொடு - மலர்மாலை யணிந்த தோழிமார் கூட்டத்தோடே; வண்டல் தைஇ - சிற்றில் கோலி, ஓரையாடினும் - விளையாட்டயர்ந்தாலும்; அறன் இல் யாய் நின்ஒளி உயங்கும் எனக் கொன்னும் சிவப்போள் - அறப்பண்பில்லாத எம் அன்னை ஏடி உன் உடம்பினது ஒளி மழுங்கும் அங்குப் போகாதே கொள்! என்று கடிந்து வாளாதேயும் வெகுள்பவள்; காணின் - நின் வரவினை ஒருமுறை கண்டால்; வென் வேல் கொற்றச் சோழர் குடந்தை வைத்த நாடு தரு நிதியினும் செறிய - வெற்றி வேலையும் கொற்றத்தினையும் உடைய சோழமன்னர் குடவாயில் என்னும் நகர்க்கண் கருவூலத்தே வைத்த பிறநாட்டு வேந்தர் திறையாகத் தந்த அரும்பொருளைக் காப்பதனைக் காட்டினும் செறிவாக; அருங்கடிப் படுக்குவள் - அரிய காவலின்கண் வைத்துப் போற்றுநிற்பள். ஆதலால் இனி நீ இங்ஙனம் வாராதேகொள்; என்பதாம்.

**(வி-ம்.)** ஊதை - வாடைக் காற்று. கோதை போல்வாராகிய ஆயமகளிர் எனினுமாம். வண்டல் ஓரை - மகளிர் விளையாட்டு வகை. உயங்குதல் - மழுங்குதல். கொன்னும் - வாளாதும். சிவப்பு - வெகுளி. நின் வருகையைக் காணின் என்க. ஆதலால் வாராதே கொள் என்பது குறிப்பெச்சப் பொருள்.

இனி இதனை, பெரும இனி நீ எம் ஒண்டொடியை வருத்தாதொழி. ஆடினும் சிவப்பவளாகிய யாய் காணின் செறிய அருங்கடிப் படுக்குவள் ஆதலின் வாராதே கொள் என இயைக்க.

**(பா-வே.)** ௫. அயிரை. ௮. ஞெமுங்கா.

## செய்யுள் கூக

**திணை:** பாலை.

**துறை:** தலைமகன் பொருள்வயிற்பிரிய வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - தலைவன் பொருளீட்டற்குத் தலைவியைப் பிரிந்து சென்ற பின்னர்த் தலைவி ஆற்றுமைமிக்குப் பெரிதும் வருந்தினளாக அது கண்ட தோழி வினையே ஆடவர்க்குயிர் என்பது பற்றி இல்லின்கண்ணிருந்து செய்யும் அறத்திற்கு இன்றியமையாப் பொருட் பிரிவினை நீ ஆற்றியிருத்தலே நின் கடமை என்பதுபடக்கூறித் தலைவியை ஆற்றுவித்தது என்றவாறு.

(இ - ம்.) இதனை "பெறற்கரும் பெரும் பொருள்" எனவரும் (தொல். கற்பி. ௯.) நூற்பாவின்கண் பிறவும் வகைபட வந்த கிளவி என்பதன்கண் அமைத்திடுக.

இதனை, "நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே" என்னும் (தொல். அகத் - ௫௪) நூற்பாவிற்கு எடுத்துக் காட்டி, "இவ்வகப் பாட்டின் மூப்பினும் பிணியினும் இறவாது அமர்க்களத்து வீழ்ந்தாரே துறக்கம் பெறுவரெனத் தன் சாதிக்கேற்பத் தலைவன் புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலைத் தோழி கூறினாள்" என்பர். எனவே, இதனை அவர் வேந்தற்குற்றுழிப் பிரிந்த பிரிவெனக் கருதினர் என்றறிகின்றோம்.

கோற்றோர் மன்ற தாமே கூற்றம்
கோளுற விளியார்பிறர் கொளவிளிந் தோரெனத்
தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்
நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந்து
௫ ஆழல் வாழி தோழி தாழாஅது
உருமெனச் சிலைக்கும் ஊக்கமொடு பைங்கால்
வரிமாண் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ
அருநிறத் தழுத்திய அம்பினர் பலருடன்
அண்ணல் யானை வெண்கோடு கொண்டு
௧௦ நறவுநொடை நெல்லின் நாண்மகிழ் அயருங்
கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்
பழகுவ ராதலோ அரிதே முனாஅது
௧௫ முழவுறழ் திணிதோள் நெடுவே ளாவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி அன்னநின்
ஒண்கேழ் வனமுலைப் பொலிந்த
நுண்பூண் ஆகம் பொருந்துதல் மறந்தே.

—மாமூலனார்.

## (உரை)

### க - ரு: நோற்றோர்..........தோழி

(இ - ள்) தோழி - பெருமாட்டியே கேள் !; கூற்றம் கோள் உற விளியார் - கூற்றத்தாலே உயிர் கொல்லப்பட்டு இறவாமல்; பிறர் கொள விளிந்தோர் - பிறர் தம் கைப் பொருளைக் கொள்ளும் படியாக நன்முயற்சி தலைப்பட்டு அது காரணமாக உயிர் நீத்தவர் இவ்வுலகின்கண்; மன்ற நோற்றோர் - தேற்றமாகத் தவந்தலைப் பட்டோரே யாவர் என்னும் மேற்கோளுடனே; தாள் வலமபடுப்ப- தமது முயற்சியை வெற்றி யுடைத்தாக்கறகுச் சேட்புலம் படர்ந் தோர் நம்மைப் பிரிந்து தொலைவிலுள்ள நாட்டிற்குச் சென்ற நம்பெருமான்; நாள் இழை நெடுஞ்சுவர் நோக்கி ஆழல்-நாளகளின் கணக்கறிதற்குக் கோடிட்ட நெடிய சுவரின்கண் அவற்றை எண்ணி எண்ணித் துயருற்று அதனுள் அழுந்தாதே கொள்; என்க.

(வி - ம்.) ஈண்டுத் தோழி தலைவன் பிரிவிற்குக் கூறும் காரணம் அவன் வேந்தற் குற்றுழிப் பிரிந்துளான் எனற்கே பெரிதும் பொருந்துவ தாகவுளது. பழைய வுரையாசிரியர் பொருள் வயிற்பிரிவு என்று கொண்டமையால், பிறர் தம் கைப்பொருள் கொள்ளும்படி மரித்தல் என்றுரை கூறுவாராயினர். நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி ஆழல் என்பதனோடு - "வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற, நாளொற்றித் தேய்ந்த விரல்" (குறள் - கஉசுக) எனவருந் திருக்குறள் நினையற்பாலதாம். ஆழல் - அழாதே கொள் எனினுமாம்.

### ரு - கரு: தாழாஅது..........பெறினும்

(இ - ள்.) தாழாஅது உரும் எனச் சிலைக்கும் ஊக்கமொடு- மின்னியபொழுதே சிறிதும் காலந்தாழ்க்காமல் இடி இடித்தாற் போல ஆரவாரித் தெழுதற்குக் காரணமான மனவெழுச்சி யுடனே; பைங்கால் மாண்வரி வன்சிலை நோன் ஞாண் கொளீஇ - புதிய காலும் மாட்சிமைப்பட்ட வரியும் உடைய வலிய வில்லின்கண் வலிய நாணைக் கொளுவி; அருநிறத்து அழுத்திய அம்பினர் பலருடன் - பகை மறவருடைய அரிய மார்பிடத்தே பாய்ச்சிய அம்பினையுடைய தொடைமாண் மறவருடனே; அண்ணல் யானை வெண் கோடு கொண்டு - தலைமைத் தன்மை யுடைய களிற்றியானையின் வெள்ளிய மருப்புக்களையும் கைப் பற்றிக் கொணர்ந்து; நறவு நொடை நெல்லின் - தேறல் விற்றுப் பெற்ற நெல்லினாலே நாட்காலத்தே களியாட்டயருகின்ற; கழல் புனை திருந்து அடிக் கள்வர் கோமான் - வீரக்கழல் கட்டிய பிறக் கிடாத அடியினையுடைய கள்வர் கோமானாகிய; மழபுலம்

வணக்கிய மாவண் புல்லி - மழநாட்டை வென்றடிப்படுத்த பெரிய வள்ளன்மையுடைய புல்லி என்பானுடைய; விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும் - திருவிழா அறாத பெரிய சிறப்பையுடைய திருவேங்கடம் என்னும் திருமலையையே பெறுவதாயினும்; என்க.

(வி - ம்.) செய்யக் கடவ போர்த் தொழிலைக் காலந் தாழ்த்திராமல் இடி இடித்தால் போல ஞெரேலென ஆரவாரித்துச் சென்று செய்வதற்குக் காரணமான ஊக்கம் என்க. ஊக்கம் - மனவெழுச்சி. பகைமறவர் பலரையும் அவர்தம் யானைக் கோடுகளையும் கைப்பற்றி என்க. திருந்தடி - போரிற் பிறக்கிடாத அடி. நாண்மகிழ் - வெற்றி நாள் முதலாய சிறப்பு நாள் பற்றிக் கொண்டாடும் களியாட்டம். திருவேங்கடம் ஒரு காலத்தே புல்லி என்னும் தமிழ் மன்னன் ஆட்சியிலிருந்தமை இதனாற் புலப்படும். வேங்கடம் இக்காலத்திற் போலவே அக்காலத்தும் விழவுடை விழுச்சீர் வேங்கடமாகவே இருந்தமையும் இதனாற் பெற்றாம்.

## கச - கஅ: பழகுவர்...........மறந்தே

(இ - ள்.) முழவு உறழ திணிதோள் நெடுவேள் ஆவி பொன் உடை நெடுநகர்ப் பொதினி அன்ன - மத்தளம் போன்ற திண்ணிய தோளையுடைய நெடிய வேளிர் குலத்தவனாகிய ஆவி என்பவனுடைய பொன்வளம் மிக்குடைய நெடிய நகரமாகிய பொதினி போன்ற சிறப்புமிக்க; நின் ஒள் கேழ் வனமுலைப் பொலிந்த நுண் பூண் ஆகம் பொருந்துதல் முனைஅது - உன்னுடைய ஒளிபடைத்த நிறமுடைய அழகிய முலைகளாலே பொலிவுபெற்ற நுண்ணிய தொழிற்றிறம் அமைந்த அணிகலன் கலையுடைய மெய்யினை முயங்கும் முயக்கத்தை நினையாமல்; மறந்து பழகுவர் ஆதல் அரிது - மறந்து அச்சேட் புலத்திலே காலந் தாழ்த்திருந்து பழகுவாரல்லர் நம்பெருமான் வினைமுற்றிய அப்பொழுதே வருகுவர் ஆற்றுக என்பதாம்.

(வி - ம்.) முனைஅது - நினையாமல். இதற்கு இப்பொருள் காணாமல் பழையதான என்னும் உரை சிறவாமையறிக. முனைஅது மறந்து பழகுவர் ஆதல் அரிது என இயைக்க. பொதினி - பழனி.

இனி இதனை, "தோழி படர்ந்தோர் நாள் இழை சுவர் நோக்கி ஆழல், நம்பெருமான் வேங்கடம் பெறினும் நின் ஆகம் பொருந்துதல் முனைஅது மறந்து பழகுவர் ஆதல் அரிது" என இயைத்திடுக.

(பா - வே.) எ. வரிமரனோன் ஞாண் வார்சிலை.

## செய்யுள் சுஉ

திணை: குறிஞ்சி.

துறை: அல்லகுறிப்பட்டுழித் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—இரவுக்குறிக்கண் தலைவன் செல்லு முன்னரே தலைவி அல்ல குறிப்பட்டுக் குறியிடத்தே வந்து தலைவனைக் காணப்பெறாமல் இல்லம் புக்காளாகப் பின்னர்த் தலைவன் குறியிடத்தே வந்து புள்ளெழுப்பல் முதலிய குறி செய்யவும் இதுவும் பண்டுபோல இயற்கையில் நிகழ்வனவேயாம் என எண்ணித் தலைவி வாராதொழியத் தலைவன் ஏக்கற்று நின்று தன்னெஞ்சிற்குக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை "மெய்தொட்டுப் பயிறல்" எனவரும் நூற்பாவின் கண் (தொல். களவி. கக.) சொல்லவட் சார்த்தலிற் புல்லிய வகையினும் என்பதன்கண் அமைத்திடுக.

அயத்துவளர் பைஞ்சாய் முருந்தின் அன்ன
நகைப்பொலிந் திலங்கும் எயிறுகெழு துவர்வாய்
ஆகத் தரும்பிய முலையள் பணைத்தோள்
மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன
ரு　மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு
பேயும் அறியா மறையமை புணர்ச்சி
பூசல் துடியில் புணர்புபிரிந் திசைப்பக்
கரந்த கரப்பொடு நாஞ்சேலற் கருமையின்
கடும்புனல் மலிந்த காவிரிப் பேரியாற்று
கo　நெடுஞ்சுழி நீத்தம் மண்ணுநள் போல
நடுங்களுர் தீர முயங்கி நெருநல்
ஆகம் அடைதந் தோளே வென்வேல்
களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி
ஒளிறுநீர் அடுக்கத்து வியலகம் பொற்பக்
கரு　கடவுள் எழுதிய பாவையின்
மடவது மாண்ட மாஅ யோளே.

—பரணர்.

(உரை)

கஉ - கசு : வென்வேல்.........மாயோளே

(இ - ள்.) வென் வேல் களிறு கெழு தானைப் பொறையன் - சென்ற போர் தொறும் வெல்லும் சிறப்புடைய வேலாட் படையினையும் களிற்றுயானை மிக்க படையினையும் உடைய சேரமன்ன னுடைய; கொல்லி ஒளிறுநீர் அடுக்கத்து வியல் அகம் பொற்ப - கொல்லி மலையின்கண்ணே விளங்கா நின்ற அருவி நீரினையுடைய பக்கமலையிடத்தே அகன்றிருக்கின்ற இடமானது பொலிவுறு

**மாறு;** கடவுள் எழுதிய பாவையின் - கடவுட்டன்மை பெறுமாறு வரைந்துள்ள பாவைபோன்ற; மடவது மாண்ட மாயோள் - மடப்பத்தாலே மாட்சிமையுடைய மாமை நிறமுடைய நங்காதலி; **என்க.**

**(வி - ம்.)** பொறையன் - சேரன். சேர நாட்டகத்துக் கொல்லி மலையகத்தே பக்கமலையின்கண் அகன்றதோரிடத்தே எழுதப்பட்ட பாவை என்க. இது தெய்வத் தன்மையுடைத்தாகலின் கடவுள் எழுதிய பாவை எனப்பட்டது. இனி, கடவுளரால் எழுதப்பட்ட பாவை எனினுமாம். இது தலைவிக்குவமை. மாயோள் - மாமை நிறமுடையோள்; கரியள் என்பாருமுளர்.

## க - கஉ: அயத்து..........அடைதந்தோளே

**(இ - ள்.)** அயத்து வளர் பைஞ்சாய் முருந்தின் அன்ன நகைப் பொலிந்து இலங்கும் எயிறுகெழு துவர்வாய் - குளத்தின் கண் வளருகின்ற பைஞ்சாய்க் கோரையின் அடிக்குருத்தினை ஒத்த புன்முறுவலாலே பொலிவுற்றுத் திகழாநின்ற பற்கள் பொருந்திய சிவந்த வாயையுடைய; ஆகத்து அரும்பிய முலையள்-மார்பிடத்தே முகிழ்த்துள்ள அழகிய முலைகளையுடையாளும்; பணைத்தோள் - மூங்கில்போன்ற தோளையும்; மாதாள் குவளை மலர் பிணைத்தன்ன- கரிய தண்டினையுடைய குவளையின் மலர்கள் இரண்டனை ஒருசேரப் பிணைத்து வைத்தாற்போன்ற; மா இதழ் மழைக்கண் மாஅயோளொடு - பெரிய இமைகள் பொருந்திய குளிர்ந்த கண்களையும் உடைய அம் மாமை நிறத்தையுமுடையாளோடே; பேயும் அறியா மறை அமை புணர்ச்சி - யாம் இதுகாறும் நிகழ்த்திய பேயும் அறிதற்கியலாத மறைப்பினை யுடைய இக்களவுப் புணர்ச்சியானது இற்றைநாள்; புணர்வு பிரிந்து பூசல் துடியில் இசைப்ப - இவ்வூர் கொடிதறி பெண்டிர் தம்முட் கூடியிருந்தும் ஆங்காங்குப் பிரிந்து சென்றும் போர்க்களத்திலே முழக்கும் துடியொலி போலே அலர் தூற்றப் பெறுதலாலே; நாம் கரந்த கரப்பொடு செலற் கருமையின் - யாமும் பண்டுபோலப் பிறர் அறியாவண்ணம் மறைந்த மறைபபோடு குறிப்பிட்ட செவ்வியில் இரவுக் குறியிடத்தே செல்லுதற்கு அருமை யுடைத்தாயினமையாலே அஞ்சி அஞ்சிக் காலந்தாழ்த்து வந்து அல்லகுறிப்பட் டொழிந்தோம்; நெருநல் - மற்று நேற்றிரவு யாம குறிப்பிட்ட பொழுதில் வந்தமையாலே அவள்தானும்; கடும்புனல் மலிந்த காவிரிப் பேரியாற்று நெடுஞ்சுழி நீத்தம மண்ணுநள் போல - கடிது செல்லும் நீர்மிக்க காவிரிப் பேரியாற்றின்கண் நெடிய சுழிகளோடே ஒழுகும் வெள்ளத்தே திளைத்தாடுபவள் போன்று ஆர்வததோடு நம்பால் வந்து;

நடுங்கு அஞர் தீர - யாம் நடுங்குதற்குக் காரணமான நமது காமநோய் தீரும்படி; முயங்கி - நம்மைத் தழுவிக் கொண்டு; ஆகம் அடை தந்தோள் - நம்முடைய மார்பிலே பொருந்திக் கிடந்தாள். அத்தகையவள் இன்று வந்திலள் யாம் என்செய்கு தும்; என்பதாம்.

(வி - ம்.) அயம் - குளம். பைஞ்சாய் - ஒருவகைக் கோரைப் புல். நகை - புன்முறுவல். எயிறு - விழுந்து முளைத்த பல். அணித்தே முகிழ்த்திருக்கின்ற முலை என்றான் அவளது இளமை கருதி. பேயும் அறியா என்புழி உம்மை சிறப்பு. மறைத்தல் அமைந்த புணர்ச்சி.

இப்பொழுது சிலரும் பலரும் அறியக் கரவாக்கரவு ஆயிற்று என்பது கரந்த கரப்பொடு நாம் செலற் கருமையின் என்பதனாற் பெற்றாம். நெருநல் ஆகம் அடைந்தோள் என்றமையால் இன்று வந்திலள் என்பது பெற்றாம். அவள் வாராமைக்குக் காரணம் நாம் காலந்தாழ்த்து வந்தமையால் அவள் அல்ல குறிப்பட்டு மீண்டதே என்பது குறிப்பு.

இனி இதனை மாயோள் யாம் அவளொடு பண்டு போலச் செலற் கருமை ஆயினமையின் நெருநல் ஆகம் அடைதந்தோள் இன்று வந்திலள் என இயைத்திடுக..

(பா. - வே.) ௯. வாயிதழ். ௧௦ மண்ணுநள்.

## செய்யுள் சுரு

திணை : பாலை

துறை : தலைமகள் புணர்ந்துடன் செல்லச் செவிலி தன் மகளுக்குச் சொல்லியது.

(து - ர.) அஃதாவது—தலைவி தலைவனோடு நிகழ்த்திய களவொழுக்கத்திற்கு இடையூறு பலப்பல உண்டாக; அவனைப் பிரியலாற்றாது தலைவி தமர் அறியாமல் தலைவனோடு சென்று விட்டாளாக, அவள் பாலைப் பரப்பில் அவனோடு சென்றாள் என்பதும் அறிந்து பெரிதும் வருந்துபவள் நீ எற்றுக்கு இத்துணை வருந்துகின்றாய் வருந்தற்க என்று ஆற்றுவிக்கின்ற தன்மகட்கு, (தலைவியின் தோழிக்கு) கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை—'தன்னும் அவளும்' எனவரும் நூற்பாவின் (தொல். அகத் - ௩௬) கண் "அச்சம்" என்பதன்பாலடக்குக. (நச் - இதற்கிதனையே காட்டினர்.)

கேளாய் வாழியோ மகளைநின் தோழி
திருநகர் வரைப்பகம் புலம்ப அவனொடு
பெருமலை இறந்தது நோவேன் நோவல்
கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி
௫ முடங்குதாள் உதைத்த பொலங்கெழு பூழி

பெரும்புலர் விடியல் விரிந்துவெயில் எறிப்பக்
கருந்தார் மிடற்ற செம்பூழ்ச் சேவல்
சிறுபுன் பெடையோடு குடையும் ஆங்கண்
அஞ்சுவரத் தகுந கானம் நீந்திக்
கo கன்றுகா ணாதுபுன் கண்ண செவிசாய்த்து
மன்றுநிறை பைதல் கூரப் பலவுடன்
கறவை தந்த கடுங்கால் மறவர்
கல்லென் சீறூர் எல்லியின் அசைஇ
முதுவாய்ப் பெண்டின் செதுகால் குரம்பை
கரு மடமயில் அன்னஎன் நடைமெலி பேதை
தோள்துணை யாகத் துயிற்றத் துஞ்சாள்
வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கண்
சேக்கோள் அறையுந் தண்ணுமை
கேட்குநள் கொல்லெனக் கலுழுமென் நெஞ்சே.

—கருவூர்க் கண்ணம் புல்லனார்.

## (உரை)

க - ரு: கேளாய்..........நோவேன்

**(இ - ள்.)** *மகளை வாழியோ - என் தோழி அவள் காதலனோடு சென்றமைக்கு நீ இத்துணை வருந்துவானேன்! ஆற்றுக! என்கின்ற அன்புடைய என்மகளே! நீ நீடுவாழ்வாயாக; நின் தோழி - உன் ஆருயிர்த் தோழியானவள்; திருநகர் வரைப்பு அகம் புலம்ப - அழகிய நமதில்லப் பரப்பெல்லாம் அணைவரும் குடியோடிப் போனாற் போன்று தனிமையுற்று வெச்சென்று கிடக்கும்படி; அவனொடு பெருமலை இறந்தது நோவேன் - நின்னாற் கூறப்படுகின்ற அவனோடு பெரிய மலைநெறியிலே சென்றதற்காக யான் வருந்துகின்றிலேன்காண்; கேளாய் - நான் எதற்கு வருந்துகின்றேன் என்பதனைக் கூறுவல் கேட்பாயாக!; என்க.*

**(வி - ம்.)** *தலைவி அவளாற் காதலிக்கப் பட்டான் ஒருவனோடு சென்றுவிட்டாள் போலும் என்று மெல்ல இச் செய்தியைச் செவிலி யறியக் கூறியவள் தோழியே ஆவள். பினனர்த் தலைவியின் பிரிவு பற்றிப் பெரும் பேதுறுகின்ற செவிலியை ஆற்றுபவள் - அவளாற் காதலிக்கப் பட்டவனோடு அவள் சென்றது நீ இத்துணை வருந்துதற்குரிய செயலோ? அது முறைதானே! எனக் கூறித் தேற்றினாள் என்பது செவிலி "அவனொடு பெருமலை இறந்தது நோவேன்" என்று அவட்கு*

இறுக்கும் விடையாலே பெற்றும். தலைவியைப் பிரிந்து தன்னினும் வருந்தியிருக்கின்றுள் ஆதலின் தோழியை நீ வாழி ! என்று வாழ்த்து கின்றுள். மகளே என்புழி ஐ: சாரியை.

## ச - கூ: கடுங்கண்..........நீந்தி

**(இ - ள்.)** கடுங்கண் யானை-தறுகண்மையுடைய யானைகள் ; நெடுங்கை சேர்த்தி - நெடிய கையை நிலத்திலே ஊன்றி நின்று ; முடங்கு தாள் உதைத்த - வளைந்த காலாலே நிலத்திலே உதைத்தலாலே உண்டான ; பொலம் கெழு பூழி - பொற்றுகள் கலந்த புழுதியின் கண்ணே ; பெரும்புலர் விடியல் விரிந்து வெயி லெறிப்ப - இருள் நன்கு புலர்ந்தொழிந்த விடியற் காலத்திலே கதிரவன் வெயில் யாண்டும் பரவி எறிக்கும்பொழுது ; கருந்தார் மிடற்ற செம்பூழ்ச் சேவல் சிறுபுன் பெடையொடு குடையும ஆங்கண் - கரிய மாலைபோன்ற கோடமைந்த கழுத்தினையுடைய சிவந்த குறும்பூழ்ச் சேவல் சிறிய புல்லிய தன் பெடையோடே குளித்தற்கியன்ற அத்தகைய இடங்களையுடைய; அஞ்சு வரத்தகுந கானம் நீந்தி - ஆறு செல்வோர்க்கு அச்சம் வருதற்குக் காரணமான காட்டைக் கடந்து அப்பால் என்க ;

**(வி - ம்.)** யானை கையை நிலத்திலூன்றி நிலத்தைக் காலால் உதைத்துப் பூழியாக்கும் இயல்புடையது என்பது இதனுற் பெற்றும். குறிஞ்சி நிலந்திரிந்த பாலையாதலின் அப்பூழியில் பொறறுகள் கலந் திருத்தல் கூறப்பட்டது. குறும்பூழ் முதலிய சிறுபறவைகள் புழுதியிற் குளிக்கும் இயல்புடையன. சேவல் போன்று பெடை காட்சிக் கினிய அழகுடையன அல்ல என்பது தோன்ற 'சிறுபுன்பெடை' எனப்பட்டது. யானை முதலிய வல்விலங்குகளும் ஆறலைப்போரும் உண்மையின் அஞ்சு வரத்தகுந கானம் என்றுள். கடத்தலரிதாதல் தோன்ற நீந்தி என்றுள்.

## க௦ - க௩: கன்று.........அசைஇ

**(இ - ள்.)** கன்று காணது புன் கண்ண - தத்தம் கன்று களைக் காணப் பெருமையாலே துன்பமுடையனவாய்; செவி சாய்த்து மன்று நிறை பைதல்கூர - தங்கன்றுகளின் குரல் ஓர்த்துத் தஞ்செவிகளைச் சாய்த்து மன்றிலே செறிந்து நிறைத லாலே உண்டாகின்ற துன்பமும் மிகாநிற்ப ; கறவை பலவுடன் தந்த - கரந்தையாருடைய கறவை யான்கள் பலவற்றையும் ஒருங்கே கவர்ந்து கொணர்ந்த; கடுங்கால் மறவர் - விரைந்து நடக்கும் வலிய காலையுடைய வெட்சி மறவர்க்குரிய; கல் என் சீறூர் - கல்லென்னும் ஆரவாரத்தையுடைய சிறிய ஊரின் கண்ணே ; எல்லியின் அசைஇ - இரவிலே தங்கி என்க.

**(வி - ம்.)** மாற்றார் ஊராகலின் ஆக்கள் தங்கன்றுகளைக் காணாது துன்ப முறுகின்றன என்க. புன்கண் - துன்பம். தமது கன்றின் குரல் கேட்டற் பொருட்டு நாற்றிசையினும் ஆக்கள் தஞ்செவிசாய்த்து ஓர்கின்றன என்பது கருத்து. மன்று நிறையச் செறிந்து நிற்றலாலுண்டாகும் பைதல் என்க. பைதல் - துன்பம். ஆக்களை விரைந்து கவர்ந்து வருதலின் கடுங்கால் மறவர் என்றாள். எல்லி - இரவு.

### கசு - கக: முதுவாய்.........நெஞ்சே

**(இ - ள்.)** முதுவாய்ப் பெண்டின் செதுகால் குரம்பை - முதுமையுற்ற பெண்டு தனித்துறைகின்ற சோர்ந்த கால்களையுடைய சிறிய குடிலின்கண்; மடமயில் அன்ன என் நடைமெலி பேதை - மடப்பமுடைய மயில் போலும் சாயலையுடைய என் மகளாகிய நடையால் வருந்தி மெலிந்த பேதையானவள்; தோள துணையாகத் துயிற்ற - அவன் தனது தோளிற் கிடத்தி இனியனகூறித் துயில்விக்கவும்; துஞ்சாள் - துயிலாதவள்; வேட்டக் களவர் - வேட்டைத் தொழிலோடு பிறர்நாட்டு ஆக்களையும கவரும் களவுத் தொழிலையும் உடைய எயின மறவர்; சேக்கோள் - அவ்வாக்களினூடே நிற்கும் ஏறுகளைப் பற்றிக் கட்டுதற் பொருட்டு; விசி உறு கடுங்கண் அறையும் - வாராலே நன்கிழுத்துக் கட்டிய கடிய ஒலியினையுடைய கண்ணிடத்தே அறைதலாலே எழுகின்ற; தண்ணுமை கேட்குநள் கொல் - தண்ணுமை முழக்கத்தைக் கேட்டுப் பொறுப்பாளோ? பொறுது துயிர் நீப்பளோ? என்னும் ஐயத்தாலே; கலுழும் என் நெஞ்சு - கலங்குகின்றது என்னுடைய நெஞ்சம்; என்க.

டு. நோவல் - அந் நெஞ்சிற்கே யாணிப்பொழுது வருந்துகின்றேன்; என்பதாம்.

**(வி - ம்.)** ஆங்கு மனைவி மக்களோடு வாழ்கின்றவர் மனையிலே தங்குமிடம் பெறுதல் அரிதாகலின் இவர் முதுவாய்ப் பெண்டின் சிறுபுன் குடிலிலேயே தங்குதல் கூடும் என்பது தோன்ற முதுவாய்ப் பெண்டின் குரம்பை என்றாள். மீண்டும் இவள் தங்குதற்கு அக் குரம்பை சிறிதும் தகுதியுடையதாகாது என்பாள் செதுகால் குரம்பை என்றும் மடமயில் அன்ன என்பேதை என்றும் விதந்தாள். விசியுறு கடுங்தண் தண்ணுமை எனக் கூட்டுக. ஏற்றினை அச்சுறுத்திப் பற்றுதற் பொருட்டு அறையும் தண்ணுமை என்க. அதன் ஒலி கேட்டற் கின்னாதாகும் என்பது தோன்ற விசியுறும் கடுங்கண் தண்ணுமை என்றாள். கேட்குநள் கொல்லோ என்புழி கொல் - ஐயப் பொருட்டு. கேட்குநள்கொல்லோ என்றது கேட்டுப் பொறுப்பளோ பொறாது இறந்து படுவளோ என்றவாறு. இங்ஙனம் ஐயுற்றுக் கலங்கும் என்னெஞ்சையே யான் நோகின்றேன் என்றிறுத்தபடியாம்.

இனி இதனை—மகளே வாழி நின் தோழி அவனொடு இறந்தது நோவேன். அவள் கானநீந்தி மறவர் சீறூர் எல்லியின் அசைஇ

குரம்பையில் (அவன்) துயிற்றத் துஞ்சாள் சேக்கோள் கடுங்கண் தண்ணுமை கேட்குநள்கொல் எனக் கலுழும் நெஞ்சையே நோவல் என இயைத்திடுக.

**(பா - வே.)** ரு. புலங்கெழு. கக. கூடி. கஉ. கடுங்கண் சச. முதுகாற்.

## செய்யுள் கூச

**திணை:** முல்லை.

**துறை:** வினைமுற்றி மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது—வினைவயிற் சென்ற தலைவன் வினைமுற்றிய வழித் தலைவியை நினைந்து அவள் அல்லல் களைதற்கு விரைந்து செல்லக் கருதியவன் தேர்ப்பாகனுக்குக் கூறியது என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு, "கரணத்தின் அமைந்து முடிந்த காலை" என வரும் நூற்பாவின்கண் (தொல். கற்பி-ரு) "பேரிசை யூர்திப் பாகர் பாங்கினும்" எனவரும் விதிகொள்க.

களையும் இடனல் பாக உளைஅணி
உலகுகடப் பன்ன புள்ளியற் கலிமா
வகையமை வனப்பின் வள்புநீ தெரியத்
தளவுப்பிணி அவிழ்ந்த தண்பதப் பெருவழி
ரு ஐதிலங் ககலிலை நெய்கனி நோன்காழ்
வென்வேல் இளையர் வீங்குபரி முடுகச்
செலவுநாம் அயர்ந்தன மாயின் பெயல
கடுநீர் வரித்த செந்நில மருங்கின்
விடுநெறி ஈர்மணல் வாரணஞ் சிதரப்
கம பாம்புறை புற்றத் தீர்ம்புறங் குத்தி
மண்ணுடைக் கோட்ட அண்ணல் ஏஎறு
உடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ
ஊர்வயிற் பெயரும் பொழுதில் சேர்புடன்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரும்
கரு ஆபூண் தெண்மணி ஐதியம் பின்னிசை
புலம்புகோள் மாலை கேட்டொறுங்
கலங்கினள் உறைவோள் கையறு நிலையே.

—ஆர்க்காடு கிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார்.

## (உரை)

### க - எ : பாக..........அயர்ந்தனமாயின்

**(இ - ள்.)** பாக - தேர்ப்பாகனே !; நீ உலகு கடப்பு அன்ன புள் இயல் உளை அணி கலிமா - இப்பொழுது நீ இந்நிலவுலகத்தையே கடந்து மேனிலையுலகிற்குச் செல்லுதற்கு நினைவனபோலப் பறவைபோன்று விரைந்து இயங்குகின்ற பிடரி மயிராலே அழகுற்ற கனைக்கின்ற நம் குதிரைகளைச் செலுத்துகின்ற; வகை அமை வனப்பின் வள்பு தெரிய - கூறுபாடமைந்த அழகு மிக்க வார்களை ஆராய்ந்துகொள்க; யாம் தளவுப்பிணி அவிழ்ந்த தண்பதப் பெருவழி - அங்ஙனம் கொண்டக்கால், யாம் செம்முல்லை கட்டவிழ்ந்து மணக்கின்ற குளிர்ந்த செவ்விபெற்றுள்ள பெரிய வழியிலே; ஐது இலங்கு அகல் இலை நெய்கனி நோன்காழ் வெண் வேல் இளையர் வீங்கு பரிமுடுக - அழகிதாகத் திகழாநின்ற அகன்ற இலையினையும் எண்ணெய் வழிகின்ற வலிய தண்டினையும் உடைய வெற்றிவேற்படை ஏந்திய நந்தம் ஏவல் இளைஞர் செல்லும் விரைந்த செலவினுங் காட்டில் முடுகிச் செல்லுமாறு; நம் செலவை மேற்கொள்வேமாயின் என்க.

**(வி - ம்.)** கார்ப்பருவம் வந்துற்றமையாலே மழைவளம் பெற்று தளவம் மலர்ந்து வழியும் செலற்கினிதாகத் தண்பதமுடையதாயிருக்கும் என ஆற்றினது இனிமை புலப்படுத்தோதியவாறும்.

மற்று நங்குதிரைகளும் நாம் எண்ணியாங்குச் செல்வனவேயாம் என்பான் உலகு கடப்பன்ன புள்ளியல் கலிமா என்றான். மற்று நம் ஏவலிளைஞரும் நம்மை விடாது தொடர்ந்துவர வல்லுநர் என்பான் வெண்வேல் இளையர் வீங்கு பரிமுடுக என்றான். செலவயர்தல் - செலவு மேற்கொள்ளுதல்.

### எ - கஎ : பெயல..........கையறுநிலை

**(இ - ள்.)** பெயல கடு நீர் வரித்த செந்நிலமருங்கின் - இக் கார்ப்பருவத்துத் தலைப்பெயலாகிய மிக்க மழையாற் பெருகி விரைந்து ஒழுகிய நீராலே அறலிடப்பட்ட சிவந்த இந்நிலத்தின் பால்; விடுநெறி ஈர்மணல் வாரணம் சிதர - விளிம்பாக விடு பட்ட நெறியிடத்தே ஈரிய மணலைக் காட்டுக்கோழிச் சேவல்கள் காலாற் சீய்த்து இரையாராயா நிற்ப; பாம்பு உறை புற்றத்து ஈர்ம்புறம் குத்தி மண் உடைக் கோட்ட - பாம்புகள் உறைதற் கிடனான புற்றுகளின் நனைந்த புறப்பகுதியிலே குத்திப் பெயர்த்தமையாலே மண் கொண்ட மருப்புக்களை உடையனவாகிய; அண்ணல் நல் ஏஎறு உடன்நிலை வேட்கையின் - தலைமைத்

தன்மையுடைய அழகிய ஆனேறுகள் தம்முடனே நிற்றலை விரும்பிய; மடநாகு தழீஇ - இளைய ஆன்களைத் தழுவினவாய்; ஊர்வயின் பெயரும் பொழுதின் - மேய்புலத்தினின்றும் ஊரிடத்தே புகப்போகின்ற இற்றை நாளந்திப் பொழுதிலே; உடன் சேர்பு கன்று பயிர் குரல மன்று நிறை புகுதரும் ஆ பூண் தெள்மணி - அவற்றோடே சேர்ந்து தத்தம் கன்றை அழைக்கின்ற குரலையுடையவாய் ஊர்மன்றம் நிறையும்படி புகுகின்ற ஆக்கள் கழுத்திற் பூண்டுள்ள தெளிந்த ஓசையையுடைய மணிகள்; ஐது இயம்பு இன் இசை - கேட்டற்கு இனிதாக விட்டுவிட்டொலிக்கின்ற ஓசையை; புலம்பு கொள் மாலை - தனதிறததிலே தனிமைத் துயரத்தைக் கொண்டிருக்கின்ற மாலைப்பொழுதிலே; கேட்டொறும் - கேட்குந்தோறும் கேட்குந்தோறும அத்துயரம் மிகுதலாலே; கலங்கினள் உறைவோள் கையறுநிலை - தனது நெஞ்சு கலங்கியிருப்பவளாகிய எங்காதலியினுடைய செயலறுதற்குக் காரணமான பெரிய துயரநிலையினை;

க. களையும் இடன் - இச்செலவு யாம் களைதற்கு இடனாகும் காண்!; என்பதாம்.

**(வி - ம்.)** பெயல - பெயலால் பெருகிய என்க. கடுநீர் - விரைந்தியங்கும் நீர். விடு நெறி - நெறியின்கண் ஒதுங்கிய விளிம்பு. ஈர் மணலில் நாங்கூழ்ப்புழு முதலிய இரையை ஆராய்தற்கு வாரணம் கிளரும் என்க. சிதர - சீய்க்க. புற்றத்து அத்துச்சாரியை. புற்று முதலியவை நனைந்துழி ஏறுகள் கோட்டாற் குத்திக் கோட்டுமண் கோடல் அவற்றிற்கு இயல்பு. ஏறு மடநாகு தழீஇ ஊர்வயிற்புகுங் காட்சியும் தலைவியின் புலம்புகொள் வருத்தத்தை மிகுவிப்பதாம். ஆகவே காண்டொறும் கேட்டொறும் கலங்கினள் என்பது கருத்தாயிற்று.

கையறுநிலை - துன்ப மிகுதியாலே செய்வதின்னதென் றுணரமாட்டாமல் திகைத்திருத்தல். அவலம் கவலை கையாறு அழுங்கல் என்னும் துன்பநிலை நான்கனுள் இது மூன்று நிலையாகும்.

இது விற்பூட்டுப் பொருள்கோள். கையறுநிலை களையும் இடன் என இறுதியும் முதலும் இணைந்து முடிந்தது.

இனி இதனை, பாக நீ வள்பு தெரிய(க்கடவாய்) யாம் இப்பொழுது இளையர் பரிமுடுகச் செலவு அயர்ந்தனமாயின் அச்செலவு ஏறு மடநாகு தழீஇ ஊர்வயிற் பெயரும் பொழுதில் (அவற்றைக் காண்டொறும்) அவற்றுடன் குரல் மன்று நிறை புகுதரும் ஆ பூண் மணி இசை கேட்டொறும் கலங்கியுறைவோளுடைய கையறுநிலை களையும்இடனும் என்றியைபு காண்க.

**(பா - வே.)** ௩. தெரிந்த. ௬. பெருவளி. ௧௩. சோர்வு. கடு ஐதியங்கின்.

## செய்யுள் 65

**திணை :** பாலை.

**துறை :** வேறுபட்ட தலைமகட்குத் தலைமகன் உடன்போக்கு வலித்தமை தோழி சொல்லியது.

**(து - ம்.)** களவொழுக்கத்தே இற்செறிப்பு முதலிய இடையூறு காரணமாகத் தலைவி தலைவனைக் காணப்பெறாது பெரிதும் வருந்தி மெய் வேறுபட்டாளாக அவட்குத் தோழி தலைவன் அவளை உடன்கொண்டு சேறற்குத் துணிந்தமையைக் கூறி ஆற்றுவித்தது என்பதாம்.

**(இ - ம்.)** இதற்கு "தலைவரும் விழுமம்" எனவரும் (தொல். அகத் 41) நூற்பாவின்கண் "தலைவரும் விழுமநிலை எடுத்துரைப்பினும்" எனவரும் விதிகொள்க.

உன்னங் கொள்கையொ டுளங்கரந் துறையும்
அன்னை சொல்லும் உய்கம் என்னதூஉம்
ஈரஞ் சேரா இயல்பின் பொய்ம்மொழிச்
சேரியம் பெண்டிர் கௌவையும் ஒழிகம்
5 நாடுகண் அகற்றிய உதியஞ் சேரற்
பாடிச் சென்ற பரிசிலர் போல
உவவினி வாழி தோழி அவரே
பொம்மல் ஓதி நம்மொ டொராங்குச்
செலவயர்ந் தனரால் இன்றே மலைதொறும்
10 மால்கழை பிசைந்த கால்வாய் கூரெரி
மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளிசுடர்
வான்தோய் புணரி மிசைக்கண் டாங்கு
மேவரத் தோன்றும் யாஅஉயர் நனந்தலை
உயவல் யானை வெரிநுச்சென் றன்ன
15 கல்லூர் பிழிதரும் புல்சாய் சிறுநெறிக்
காடுமீக் கூறுங் கோடேந் தொருத்தல்
ஆறுகடி கொள்ளும் அருஞ்சுரம் பணைத்தோள்
நாறைங் கூந்தற் கொம்மை வரிமுலை
நிரையிதழ் உண்கண் மகளிர்க்கு
20 அரிய வாலென அழுங்கிய செலவே.

—மாமூலனார்.

## (உரை)

### க - எ : உன்னம்..........தோழி

**(இ - ள்.)** *தோழி வாழி - தோழி நீ வாழ்வாயாக ஒரு நற்செய்தி கேள் !; இனி உன்னம் கொள்கையொடு உளம் கரந்துறையும் அன்னை சொல்லும் உய்கம் - இனி யாம் குறிப்பினாலே நமது கருத்தை அறிந்துகொண்டுள்ள கோட்பாட்டோடு அதனைத் தன்னுள்ளத்தே மறைத்துக் கொண்டிருக்கின்ற நம் அன்னை அக்கோட்பாட்டிற்கியையக் கூறுகின்ற இன்னாச் சொற் கேட்டு வருந்தும் வருத்தத்தினின்றும் தப்புவோம்; அதுவுமன்றி; என்னதூஉம் ஈரம் சேரா இயல்பின் பொய்ம்மொழிச் சேரியம் பெண்டிர் கௌவையும் ஒழிகம் - சிறிதேனும் அன்பு சேர்ந்திலாத இயல்பினையும் பொய்ம்மொழியே பேசுதலையும் உடைய இவ்வூர்க் கொடிதறி பெண்டிர் கூறும் அலருக்கும் ஆளாகாமல் தப்பி யுய்வேம் ஆதலாலே; இனி, நாடு கண் அகற்றிய உதியஞ் சேரல் பாடிச் சென்ற பரிசிலர் போல - இனி நீ இத்துன்பத்தைத் துவர விடுத்து, தன் பகைவர் நாட்டினை வென்று கைப்பற்றிக் கொள்ளு மாற்றாலே தனது நாட்டின் எல்லையை விரிவுபடுத்திய பெருஞ் சோற்றுதியஞ் சேரலாதன் என்னும் மன்னனைப் பாடி அவன் திருமுன்னர்ச் சென்ற பரிசிலர் மகிழுமாறுபோல; உவ - மகிழக் கடவை எற்றாலெனின்; என்க.*

**(வி - ம்.)** *தலைவன் உடன்கொண்டு கழிதற்குடன்பட்ட உவகைச் செய்தியைத் தலைவிக்குக் கூறுபவள் அதனை முற்படவோதாது அதனாலாய பயன்களை முற்படக் கூறுகின்றாள். இங்ஙனம் கூறுவது உவகைச் செய்தி கூறுவார்க்கியல்பு. இதன் பயன் கேட்போர்க்கு அவாவுண்டாக் கிச் செய்தியின் சுவையை மிகுதியாக்கலாம். இங்ஙனமாதலை இராமன் வில்லொடித்த செய்தியைச் சீதைக்குக் கூறவந்த நீலமாலை என்னும் தோழி செயலாலுணர்க; (கம்பராமாயணம்).*

*உன்னம் கொள்கை-பிறர் கூறாமலே குறிப்பினாலே யாதானுமொன் றைத் தானே உணர்ந்து கொள்கை. ஈண்டு அன்னை நம் களவொழுக் கத்தை அங்ஙனம் உணர்ந்து கொண்டமையாலே அவள் சொல் சுடு சொல்லாயிருக்கின்றன; அதை இனிக் கேட்டு யாம் வருந்த வேண்டா என்கின்றாள். என்னதூஉம் - சிறிதும். ஈரம் - அன்பு. கௌவை - அலர். உதியஞ்சேரலாதனைப் பாடிச்சென்ற பரிசிலர்க்கு அவன் வேண்டுவன வழங்குதலின் அவர் பெரிதும் மகிழ்வர் ஆதலின் அவரை உவமை எடுத்தாள்.*

### கூ - உ0 : மலைதோறும்.........செலவே

**(இ - ள்.)** *மலைதொறும் மால் கழை பிசைந்த கால் வாய் கூர் எரி - மலையுச்சிதோறும் உலர்ந்த பெரிய மூங்கில்கள்*

றன்றனோடொன்று உராய்தலாலே பிறந்த தீ காற்றும் கூடப் பெறுதலாலே மிக்கு எரிகின்றவை; மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளிசுடர் புணரி மிசைக் கண்டாங்கு மேவரத் தோன்றும் - மீன் படுக்கும் பரதவருடைய வளைந்த தோணிகளிலே செறிந்த விளக்குகளைக் கடலின்கண் கண்டாற் போன்று காண்டற்கு விருப்பமுண்டாகக் காணப்படுகின்ற; யாஅ உயர் நனந்தலை - யாஅ மரங்கள் தழையும் கோடுமின்றி வற்றி உயர்ந்து நிற்கின்ற அகன்ற பாலைப்பரப்பிலே அமைந்த; உயவல் யானை வெரிநுச் சென்றன்ன கல் ஊர்பு இழிதரும் புல்சாய் - தசை வற்றிப் போய்ப பசியால் வருந்தும் யானையினது என்பெழுந்துலறிய முதுகின்மேலே நடப்பது போன்று நடத்தற்கிடமாய் மலைமிசை ஏறியும் இறங்கியும் மூங்கில்கள் கரிந்து சாய்ந்துள்ள சிறிய வழியிடத்தே; காடு மீக்கூறும் கோடு ஏந்து ஒருத்தல் ஆறுகடி கொள்ளும் - காடு உயர்த்துக் கூறப்படுதற்குக் காரணமான கோடுகள் நிமிர்ந்துள்ள களிற்றுயானை காவல் கொண்டிருக்கின்ற; அருஞ்சுரம் - கடத்தற்கரிய பாலை வழிகள் தாம; நாறு ஐங்கூந்தல் கொம்மை வரிமுலை நிரை இதழ் உண்கண் மகளிர்க்கு அரிய என அழுங்கிய செலவு - மணங்கமழ்கின்ற கூந்தலையும் திரண்ட தொய்யில் எழுதப்பட்ட முலையினையும் நிரல்பட்ட இதழ்களையுடைய நீல மலர்போன்ற மையுண்ட கண்களையும் உடைய மெல்லியன் மகளிர் நடத்தற் கரியனவாகும் என்று இதுகாறும கூறித்தடுத்த உடன் போக்கினை; என்க.

(வி - ம்.) தலைவன் இதுகாறும் இங்ஙனம் கூறி உடன்போக்கினைத் தடைசெய்து வந்தானாக; அத்தலைவன் பாலைவனத்து நெறியின் றன்மையே அவன் கூறியாங்கே ஈண்டுக் கொண்டு கூறுகின்றாள் என்றுணர்க. காடுபடு பொருள்களிலே யானை மருப்பே தலைசிறந்ததாகலின் காடு மீக்கூறும் கோடு என்றவாறு. இனி காடுமீக்கூறற்கு ஒருத்தலே காரணம் எனக் கொள்ளலுமாம். வரி - தொய்யிற்கோலம். தேமல் என்பாருமுளர்.

## எ - கூ : அவரே..........இன்றே

(இ - ள்.) பொம்மல் ஓதி - அடர்ந்த கூந்தலையுடையோய்; இன்று - இற்றைநாள்; அவரே - மற்று அங்ஙனம் தடுத்த அவர் தாமே; நம்மோடு ஓராங்கு - நங்கருத்தோடு ஒருபடித்தாய் ஒன்றிய கருத்துடையராய்; செலவு அயர்ந்தனர் - உடன்போக்கினை மேற்கொண்டருளினர் ஆதலால் என்பதாம்.

(வி - ம்.) பண்டெல்லாம் உடன்போக்கிற்கு உடம் படாது செலவு அழுங்கிய அவர்தாமே நினக்கு அளிசெய்தற்கு இன்று உடம் பட்டார்காண் ! என்றவாறு.

இனி இதனை, தோழி இனி யாம் சொல்லும் உய்கம்; கௌவையும் ஒழிகம்; இனி நீ உவந்திடுக! ஏற்றால் எனின் அருஞ்சுரம் மகளிர்க்கு அரிய எனக் கூறிச் செலவழுங்கிய அவரே இன்று நம்மோடோராங்குச் செலவயர்ந்தனர் ஆதலால் என்றியைத்திடுக.

(பா - வே.) கச. உறுவல் யானை, வெருவச்செ்ன்.

## செய்யுள் சுசு

**திணை :** மருதம்.

**துறை :** பரத்தையிற் பிரிந்த தலைமகற்கு வாயிலாய்ப்புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—பரத்தையிற் பிரிந்த தலைமகனை ஏற்றுக் கோடல் வேண்டும் என்று அவன் பொருட்டு வாயிலாக வந்த தோழிக்குத் தலைவி வாயில் நேர்ந்த கருத்துடன் அவன் பண்டுசெய்த தொன்றனைக்கூறி நகையாடியது என்றவாறு.

(இ - ம்.) இதனை "அவனறிவு ஆற்ற அறியுமாகலின்" என வரும் (தொல். கற்பி-சு) நூற்பாவிள்கண் 'கொடுமை யொழுக்கம்... ......வாயிலின் வருஉம்வகை" என்பதன்கண் 'பெட்டலும்' என்பதனு லமைத்திடுக.

இம்மை யுலகத் திசையோடும் விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துப
செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்
ரு பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்
வாயே யாகுதல் வாய்த்தனம் தோழி
நிரைதார் மார்பன் நேருல் ஒருத்தியொடு
வதுவை அயர்தல் வேண்டிப் புதுவதின்
இயன்ற அணியன் இத்தெரு இறப்போன்
க0 மாண்டொழின் மாமணி கறங்கக் கடைகழிந்து
காண்டல் விருப்பொடு தளர்புதளர் போடும்
பூங்கட் புதல்வனை நோக்கி நெடுந்தேர்
தாங்குமதி வலவஎன் றிழிந்தனன் தாங்காது
மணிபுரை செவ்வாய் மார்பகஞ் சிவணப்
கரு புல்லிப் பெரும் செல்லினி அகத்தெனக்
கொடுப்போற் கொல்லான் கலுழ்தலின் தடுத்த
மாநிதிக் கிழவனும் போன்மென மகனொடு

தானே புகுதந் தோனே யானது
படுத்தனென் ஆகுதல் நாணி இடித்திவன்
௨௦ கலக்கினன் போலுமிக் கொடியோன் எனச்சென்
றலைக்குங் கோலொடு குறுகத் தலைக்கொண்
டிமிழ்கண் முழவின் இன்சீர் அவர்மனைப்
பயிர்வன போலவந் திசைப்பவும் தவிரான்
கழங்கா டாயத் தன்றுநம் அருளிய
௨௫ பழங்கண் ணோட்டமும் நலிய
அழுங்கினன் அல்லனோ அயர்ந்ததன் மணனே.

—செல்லூர்க் கோசிகன் கண்ணனார்.

(செயலூர்க் கோசங் கண்ணனார் என்றும் பாடம்)

## (உரை)

### க - சு : இம்மை..........தோழி

**(இ - ள்.)** *தோழி - தோழியே கேள் !; செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சி - பகைவரும விரும்புதற்குக் காரணமான குற்றந்தீர்ந்த நற்காட்சியையுடைய; சிறுவர்ப் பயந்த செம்மலோர் - மக்களைப்பெற்ற திருவுடையோர்; இம்மை உலகத்து இசையொடும் விளங்கி - இப்பிறப்பிற்கு நிலைக்களனாகிய இந் நிலவுலகத்துப் புகழோடு விளங்கி; மறுமை யுலகமும் மறுவின்று எய்துப - மறுபிறப்புறுதற் கிடனான மேனிலையுலகத்தையும் தடையின்றி எய்துவர்; எனப் பல்லோர் கூறிய பழமொழி எல்லாம் - என்று சான்றோர் பலரும் கூறிய முதுமொழிப் பொருள் எல்லாம்; வாயே ஆகுதல் வாய்த்தனம் - வாய்மையாகவே இருத்தலை அறிந்துகொள்ளும் செவ்வி ஒன்று கிடைக்கப் பெற்றேம்காண் ; எங்ஙனமெனின் ; என்க.*

**(வி - ம்.)** இதன்கட் போந்த பழமொழிப் பொருளை,

> "எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
> பண்புடை மக்கட் பெறின்"

எனவருந் திருக்குறளினுங் காண்க. செம்மல் - தலைமைத் தன்மை முதலிய சிறப்புக்கள். ஆகலின் திருவுடையார் என்றும். செறுநர் - பகைவர். வாய் - வாய்மை. ஆகுதலை அறியும் வாய்ப்புப் பெற்றேம் என்றவாறு.

எ - கஅ: நிரைதார்..........புகுதந்தோனே

(இ - ள்.) நிரைதார் மார்பன் - நிரல்பட அணிந்த மலர்மாலை யணிந்த மார்பையுடையனாய் நம்பெருமான்; நெருநல் - நேற்று; ஒருத்தியொடு - ஒருத்தியை; வதுவை அயர்தல் வேண்டி - மணந்து கோடற்பொருட்டு; புதுவதின் இயன்ற அணியன் - புதிதாக இயற்றப்பட்ட மணக்கோலத்தை யுடையனாக; இத்தெரு இறப்போன் - தேரூர்ந்து இந்தத் தெருவைக் கடந்து செல்பவனுடைய தேரிற்பூட்டிய; மாண் தொழில் மாமணி கறங்க - மாட்சிமையுடைய தொழிற் சிறப்பமைந்த குதிரைகள் பூண்ட மணிகள் ஒலிப்பக்கேட்டு; காண்டல் விருப்பொடு - அக்காட்சியைக் காண்பதற் கெழுந்த விருப்பத்தோடே; கடை கழிந்து தளர்பு தளர்பு ஓடும் பூங்கண் புதல்வனை நோக்கி - நம் முன்றிலையுங் கடந்து அத்தேர்ப் பின்னர்த் தளர்ந்து தளர்ந்து ஓடிவருகின்ற மலர்போன்ற கண்களையுடைய தன் மகனைக் கண்டு; வலவ நெடுந்தேர் தாங்குமதி என்று இழிந்தனன் - பாகனே நெடிய தேரினைச் சிறிதுபொழுது நிறுத்துதி என்று பணித்து அத்தேரினின்றும் இறங்கிவந்து; தாங்காது - சிறிதும் காலந்தாழ்த்தலின்றி விரைந்து மகனை எடுத்து; மணி புரை செவ்வாய் மார்பகம் சிவண - அவனுடைய பவளம் போன்ற சிவந்த அழகிய வாய் தன் மார்பகத்தே பொருந்தும்படி; புல்லி - ஆர்வத்தோடு தழுவியணைத்து; பெரும இனி அகத்துச் செல் எனக் கொடுப்போற்கு - பெருமானே இனி நீ நம்மில்லத்திற்குச் செல்வாயாக என்று கூறிக் கைவிடுகின்றவன் கருத்திற்கு; ஒல்லான் - உடம்படானாய்; கலுழ்தலின் - அழுதலாலே; தடுத்த மாநிதிக் கிழவனும் போன்ம் என - தன்னைத் தடுத்த மகனையும் அவனை ஏந்திவருகின்ற அளகேசனையும் ஒக்கும் என்று கண்டோர் கூறும்படி; மகனொடு தானே புகுதந்தோன் - தழுவப்பட்ட மகனோடு தானே வந்து இல்லத்திற் புகுந்தான்; என்க.

(வி - ம்.) ஒருத்தி - பரத்தை மகள் ஒருத்தி. புதுவ தியன்ற அணி என்றது, மணக்கோலத்தை. தாங்காது-தாழ்க்காமல். மகனாற்றடுக்கப்பட்டு அம்மகனைத் தழுவிக்கொண்டு அவனோடு வருகின்ற மாநிதிக் கிழவன் எனப் பொருட்கியன்றவற்றை உவமைக்கும் கூறிக் கொள்க. மாநிலக்கிழவன் - அளகேசன் - குபேரன். புகுதந்தோன் என்புழி ஆ ஓவாயிற்றுச் செய்யுளாகலின்.

கஅ - உசு: யானது.........மணனே

(இ - ள்.) யான் அது படுத்தனன் ஆகுதல் நாணி - இச்செய்கைதான் யானே மகவினைக் கொண்டு அச்செயலைச் செய்

வித்தேன் என்று ஏனையோரும் எம்பெருமானும் கருதுதற்கு இடனுயிருத்தலை உணர்ந்து அப்பழிக்கு நாணி; இக்கொடியோன் - இந்தக் கொடுஞ் செயலையுடையோன்; இவன் இடித்து கலக்கினன் போலும் - இப் புதுமணமகன் காரியத்தை இடையூறு செய்து பெரிதும் கலக்கிவிட்டான் போலும் என்று கடிந்துரை கூறி; அலைக்குங் கோலொடு; - அம்மகனைப் புடைத்தற்குரிய கோலோடு அவனை அணுகாநிற்ப; அவர்மனை தலைக்கொண்டு இமிழ் முழவின் இன்சீர் - அப்பரத்தையர் மனைக்கண்ணே இவ் வதுவை கருதி முழங்குகின்ற முழவினது இனிய இசைகள்; பயிர்வன போல வந்து இசைப்பவும் - நம்பெருமானை அழைப்பன போன்று எம்மில்லத்தினும் வந்து முழங்குதல் கேட்டு வைத்தும்; தவிரான் - நம்மில்லத்தினின்றும் நீங்காதவனாய்; அன்று கழங்கு ஆடு ஆயத்து நம் அருளிய பழங்கண்ணோட்டமும் நலிய - அன்றொருநாள யாம் கழங்கு ஆடுகின்ற தோழியர் கூட்டத்தினின்றும் பிரிந்து அவனை முதன்முதலாகக் கண்டபொழுது, நம்மைத் தேற்றி அளிசெய்தற் பொருட்டுக் கூறியருளிய பழைய கண்ணோட்டமமைந்த சூளுரைதானும் தன்னெஞ்சத்தே தோன்றிச் சுடுதலாலே; அயர்ந்த தன் மணன் அழுங்கினன் அல்லனோ - தான் பெரிதும் விரும்பிய தனது வதுவையையும் தவிர்ந்தனன் அல்லனோ அவ்வாற்றுற்காண்; என்பதாம்.

(வி - ம்.) மணம் தவிர்ந்தனன் அல்லனோ! அவ்வாற்றான் அப் பழமொழி வாயே ஆகுதல் அறியும் செவ்வி வாய்க்கப் பெற்றேம் என்றியையும். மணந்தவிர்ந்தமையால் சூண்மொழியும் பொய்யாது பழியும் உய்ந்து நன்னெறியில் ஒழுகினன். ஆதலால் இம்மை யுலகத்திசையொடும் விளங்குவானுயினன். இம்மை யுலகத்து இசையொடு புணர்ந்தோர் மறுமையுலகமும் மறுவின்றி எய்துவனுதல் ஒருதலை. ஆகவே சிறுவர்ப்பயந்த செம்மலோர் கூறிய பழமொழி வாய்மையே யாதலறிந்தனம் என்பது கருத்து.

யானது படுத்தனன் ஆகுதல் நாணி - இவளே தலைவன் வதுவையயரப்போவது பொருளாகி அவன் ஊர்கின்ற தேரின் பின்னர் மகனைப் போக்குவித்து அவனுக்கு இடையூறு செய்தாள் எனத் தலைவனும் பிறரும் கூறுதற்கு இந்நிகழ்ச்சி இடந்தருதலின் அப்பழிக்கு நாணினேன், என ஈண்டுத் தலைவி கூறியது மிகவும் பொருத்தமாயிருத்தல் உணர்க.

இடித்தல் - ஊறு செய்தல். இவன் என்றது தலைவனை. மணத்தைத் தடுத்தலின் அச்செயல் செய்தல் கொடுமையாகலின் மகனைக் கொடியோன் என்றாள்.

கழங்காடாயத்து அன்று நம்மருளிய என்றது இயற்கைப் புணர்ச்சிக்குப் பினனர் நின்னிற் பிரியேன் என்று தலைவன் சூள் மொழிந்ததனைக் குறித்தபடியாம்.

இனி இதனை, தோழி பழமொழி வாயே ஆகுதல் வாய்த்தனம் எங்ஙனம் எனின், மார்பன் நெருநல் ஒருத்தியொடு வதுவை அயர்தல் வேண்டி இத்தெரு இறப்போன் மணிகறங்கக் காண்டல் விருப்பொடு ஓடும் புதல்வனை நோக்கி, தாங்குமதி என்று இழிந்தனன் புல்லி, பெரும இனிச்செல் என ஒல்லான் கலுழ்தலின் தானே புகுதந்தோன்; யான் நாணி அலைக்குங் கோலொடு குறுகத் தலைக்கொண்டு தவிரான் கண்ணேட்டமும் நலிய அயர்ந்ததன் மணன் அழுங்கினன் இவ்வாற்றான் என இயைபு காண்க.

(பா - வே.) க. யுலகமுது. ரு. பயமொ.

## செய்யுள் கூஎ

**திணை :** பாலை.

**துறை :** பொருள்வயிற் பிரிந்தவழி வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது—தலைவன் பொருளீட்டற் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து சென்ற பின்னர் ஆற்றியிருத்தற்குரிய தலைவி ஆற்றாது வருந்தினளாக, அதுகண்ட தோழி நீ ஆற்றியிருத்தல் வேண்டும் என வற்புறுத்தினள். அதுகேட்ட தலைவி யான் வருந்துவது அவன் பிரிவாற்றாமையாலன்று அவன் சென்ற வழியினது இன்னாமையை எண்ணி எண்ணியே ஏங்குகின்றேன் என்று கூறியது என்றவாறு.

**(இ - ம்.)** இதனை "எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே" என வரும் (தொல். அகத் - சஉ) நூற்பாவான் அமைத்திடுக.

இனி இதனை நச்சினார்க்கினியர் தோழி கூற்றாகக் கருதுவர். அவர் (தொல். அகத். சச) உரையை நோக்குக.

யானெவன் செய்கோ தோழி பொறிவரி
வானம் வாழ்த்தி பாடவும் அருளாது
உறைதுறந் தெழிலி நீங்கலிற் பறைபுடன்
மரம்புல் லென்ற முரம்புயர் நனந்தலை
ரு அரம்போழ் நுதிய வாளி அம்பின்
நிரம்பா நோக்கின் நிரையங் கொண்மார்
நெல்லி நீளிடை எல்லி மண்டி
நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
க0 பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்
மொழிபெயர் தேஎந் தருமார் மன்னர்
கழிப்பிணிக் கறைத்தோல் நிரைகண் டன்ன

உவலிடு பதுக்கை ஆளுகு பறந்தலை
கடு உருவில் பேஎய் ஊராத் தேரொடு
நிலம்படு மின்மினி போலப் பலவுடன்
இலங்குபரல் இமைக்கும் என்பநம்
நலந்துறந் துறைநர் சென்ற ஆறே.

—நோய்பாடியார்.

(நோய்ப்பாடியார் என்றும் பாடம்.)

(உரை)

க : தோழி...........

(இ - ள்.) தோழி - நீ ஆற்றியிருத்தல் வேண்டும் என்று என்னை வற்புறுக்கின்ற தோழியே கேள் ! நான் ஆற்றியிருப்பேன் மன்! என்க.

(வி - ம்.) ஆற்றியிருத்தலே குலமகளிர் கடமை ஆதலின் நீ ஆற்றுக என்னும் தோழிக்குக் கூறுகின்றாளாகலின், இசை யெச்சமாக ஈண்டைக்கு வேண்டுவன பெய்துரைத்தாம். இனி ஆற்றமாட்டாமைக் குத் தலைவி காரணம் கூறுகின்றாள்.

கஎ - கஅ : நம்.........ஆறே

(இ - ள்.) நம் நலம் துறந்து உறைநர் சென்ற ஆறு - அறஞ் செய்தற்கு இன்றியமையாத பொருளீட்டுதலைக் குறிக் கோளாகக் கொண்டு தமக்கின்பமாகிய நமது பெண்மை நலத்தையும் துறந்து வேற்று நாட்டகத்தே உறைகின்ற நம் பெருமான் பொருளீட்டற்குச் சென்ற வழிகளிலே என்க.

(வி - ர.) ஈண்டுத் தலைவி தலைவன் இன்பந்துறந்து அறத்திற்காம் பொருளீட்டற்கட் சென்றமையைப் பாராட்டுகின்றாள். பாராட்டவே அவர் வருந்துணையும் ஆற்றியிருத்தலே என்கடமை என்பதூஉம் அறிவேன் என்பதுபட இவ்வாறு கூறினள் என்றுணர்க. எனவே அவர் பிரிவாற்றாது வருந்துகிலேன் என்பது குறிப்பெச்சப் பொருளாயிற்று.

க - கஎ : பொறிவரி...........என்ப

(இ - ள்.) பொறிவரி வானம் வாழ்த்தி பாடவும் அருளாது - புள்ளிகளையும் வரிகளையும் உடைய வானம்பாடிப் புள் மழைத்துளியை வேண்டிப் பாடா நிற்பவும் சிறிதும் இரக்க மின்றி அவற்றிற்கு இரங்கியேனும் மழைதுளித்தலின்றி வானத்தி

னின்றும் முகிலானது நீங்கி மறைந்து போனமையாலே; பறைபுடன் - இலைகள் கரிந்து தேய்ந்து போன நிலைமையோடு; மரம் புல் என்ற முரம்பு உயர் நனந்தலை - மரங்கள் வற்றிப் பொலிவிழந்த பருக்கைக் கற்களையுடைய பகுதியுயர்ந்துள்ள அகன்ற பாலை நிலப் பரப்பிடத்தே; அரம்போழ் வாளி அம்பின் நிரம்பா நோக்கின் நிரையம் கொண்மார் நெல்லி நீள் இடை - அரத்தாலராவிப் பிளந்த பிறைவா யம்பினையும் இடுங்கிய நோக்கும் உடையராய் வந்து ஆனிரைகளைக் கவர்வோராகிய வெட்சி மறவரை நெல்லி மரங்களையுடைய நெடிய வழியிடத்தே; எல்லிமண்டி - இரவிலேயே மிக்குச் சென்று வளைத்து; நல் அமர்க் கடந்த நாண் உடை மறவர் - அறப்போர் ஆற்றி வென்று மீட்ட கரந்தை மறவர்களுள் வைத்து; விழுபபுண்பட்டு வீழ்ந்த - மானப்பண்புமிக்க மறவருடைய, பெயரும் பீடும் எழுதி - பெயரும் மறச் சிறப்பும் பொறித்து; அதர்தொறும் பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல் - மக்கள் வழங்குதற்குரிய வழிகள் தோறும் புகழ் விளங்குதற்குக் காரணமான நடுகல்லாகிய மறக்கற்கள்; வேல் ஊன்று பலகை முன்னர் - அவ்வம் மறவர்கள் கைக் கொண்டிருந்த வேற்படையினை நட்டுக் கிடுகுப்படையும் சார்த்தப்பட்டிருப்பவை; வேற்றுமுனை கடுக்கும் - பகைவருடைய போர்க்களம் போன்று தோன்றுதலையுடைய; மொழி பெயர் தேஎம் தருமார் - தம் மொழி மாறுபட்ட வேற்று நாட்டைக் கைக் கொள்ள வேண்டி! மன்னர் கழிப்பிணிக் கறைத்தோல் நிரை கண்டன்ன - தம்முடைய கழியிலே பிணித்தலையுடைய கரிய கேடய மேந்திய காலாட் படையை அணி வகுத்துப் பார்த்தாற் போன்ற தோற்ற முடைய; உவல் இடு பதுக்கை ஆள் உகு பறந்தலை - போரிற்பட்ட மறவருடம்பைத் தழை கொண்டு மூடிக் கற்களைக் குவித்துவைத்த பதுக்கைகளையுடைய பாலைப் பரப்பிலே; உரு இல் பேய் ஊராத் தேரொடு - வடிவ மில்லாத பேயின் பெயரை அடைமொழியாகக் கொண்ட ஏறி ஊர்தற் கியலாத தேர் பரத்தலாலே; இலங்குபரல் பலவுடன் நிலம்படு மின்மினிபோல இமைக்கும் என்ப - விளங்குகின்ற பருக்கைக் கற்கள் பற்பல ஒருசேர நிலத்திலே வீழ்ந்த மின்மினி போன்று ஒளிரும் என்று அறிந்தோர் கூறுவர்; என்க.

(வி - ம்.) வானம் வாழ்த்தி - ஒரு பறவையின் பெயர். இதனை இக்காலத்தார் வானம்பாடி என்பர். இப்பறவை நிலத்திற்பட்ட நீருண்ணுதென்றும் முகில் துளிக்கும் துளியை வானிடை நின்று வாயிலேற்றுண்டு உயிர் வாழும் என்பர். இதனை, **"தற்பாடிய தளியுணவிற் புட்டேம்பப் புயன்மாறி வான் பொய்ப்பினும்"** எனவரும் பட்டினப்பாலையானும் (௩ - ௫) உணர்க. "துளிநசை வேட்கையின் மிசை பாடும் புள்" எனக் கலியினும் (சகூ) காணலாம். ஈண்டு மழை பெரிதும் வறங்கூர்ந்

தமை யுணர்த்தற்கு, வானம் வாழ்த்தி பாடவும் அருளாது உறை துறந்து எழிலி நீங்கலின் என்றோதப்பட்டது. பறைபு-தேய்வு. இதனைப் பறத்தல் என்பாருமுளர். இலைகரிந்து தீய்தலின் மரம் வளர்தற்கு மாறாகத் தேய்ந்து புற்கெனத் தோன்றும் என்றலே நல்லுரையாம் என்க.

அரம்போழ் வாளி யம்பு, என்றது நுனிகவர்த்த பிறைவாயம்பினை. நிரம்பா நோக்கு - கண்ணை இடுகவைத்து நோக்குதல். நிரையம் என்புழி அம் சாரியை. நிரயம் என்ற பாடமும் உண்டு. இதற்குக் களவுசெய்து நரகம் புகுவாராகிய வெட்சியார் என்று பொருள் கொள்க. தம்மூரையும் ஆக்களையும் பாதுகாத்தற்குச் செய்யும் அறப்போர் ஆதல்பற்றி நல்லமர் கடந்த என்றார். கடந்த மறவருள் வைத்து விழுப்புண்பட்டு மாண்ட மறவர் என்க. இனி வென்றாருள் இவரே தலைசிறந்தாராதல் பற்றிக் கடந்த மறவர் என்பதே விழுப்புண்பட்டு மாண்ட மறவரைக் குறித்ததெனினுமாம். நாண் ஈண்டு மானம். போரின்கண் விழுப் புண்பட்டு வீழ்ந்த மறவர்க்குக் கல்நட்டு வணங்குதலும் அக்கல்லின்கண் அவர்தம் பெயரும் பீடும் பொறித்து வைத்தலும் பண்டைத் தமிழர் வழக்கம். கறைத்தோல் - கிடுகு. பேய்த்தேர் என்பது கானலுக்குப் பெயர். அப்பெயரின்கட் காணப்படும் இரண்டு சொற்கும் பொருளில்லை. இரண்டு சொற்போற் காணப்படினும் அஃது ஒரு பெயர்ச் சொல் மாத்திரையே என்பது தோன்ற இப்புலவர் பெருமான் உருவில் பேய் ஊராத் தேர் எனப் பிரித்து அவற்றிற்கு இருபொருளின்மையை அழகுற விளக்கினர். பேய்த்தேரால் பருக்கைக் கற்கள் நிலத்தில் ஒளிர் வதைப் பலவுடன் நிலம்படு மின்மினி என அழகிய உவமையால் விளக்கினர்.

## க: யானெவன் செய்கோ

(இ - ள்.) (இங்ஙனம் கூறக் கேட்ட) யான் எவன் செய்கு - யான் ஆற்றியிருத்தற்கு என் செய்யமாட்டுவேன். இத்தகைய கொடு நெறிக் கண் நம் பெருமான் என்னாயினரோ? என்று என்னுள்ளம் ஆற்றாதழிகின்றது. அதனை ஆற்றுவிக்க யானும் ஏதும் செய்யவல்லுநன் அல்லேன் என்பதாம்.

(வி - ம்.) "இத்தகைய.........அல்லேன்" என்பது குறிப்பு.

இனி, இதனைத் தோழி நம் நலந்துறந்து உறைநர் சென்ற ஆறு பரல் இமைக்கும் என்ப, யானெவன் செய்கு என இயைக்க.

(பா. - வே.) ௩. உறையிறந். பறையுடன். ௧௧. கடந்து. ௧௨. மள்ளர். ௧௪. அழிருபதுக்கை.

## செய்யுள் ௬௮

**திணை :** குறிஞ்சி.

**துறை :** தலைமகன் இரவுக்குறி வந்தமையறிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—தலைவன் இரவுக் குறியிடத்தே வந்து நிற்றலைத் தோழி அறிந்தனள். அறிந்தவழி அன்னை துயில்கின்றாளா? துயிலாதிருக்கின்றாளா? என்பதையும் ஆராய்ந்து கொண்டபின்னர் அவன் வரவினைத் தலைவிக்குக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "நாற்றமும் தோற்றமும்" எனவரும் நூற்பாவின்கண் (தொல். களவி - உங) புணர்ச்சி வேண்டினும் எனவரும் விதி கொள்க. இதற்கே இது (நச்) காட்டப்பட்டது.

அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தண்ணயத் தமன்ற கூதளங் குழைய
இன்னிசை அருவிப் பாடும் என்னதூஉங்
கேட்டியோ வாழிவேண் டன்னைநம் படப்பை
ரு ஊட்டி அன்ன ஒண்தளிர்ச் செயலை
ஓங்குசினைத் தொடுத்த ஊசல் பாம்பென
முழுமுதல் துமிய உருமெறிந் தன்றே
பின்னுங் கேட்டியோ எனவுமஃ தறியாள்
அன்னையும் கனைதுயில் மடிந்தனள் அதன்றலை
க0 மன்னுயிர் மடிந்தன்றால் பொழுதே காதலர்
வருவ ராயின் பருவம் இதுவெனச்
சுடர்ந்திலங் கெல்வளை நெகிழ்ந்த நம்வயின்
படர்ந்த உள்ளம் பழுதன் றாக
வந்தனர் வாழி தோழி அந்தரத்து
கரு இமிழ்பெயல் தலைஇய இனப்பல கொண்மூத்
தவிர்வில் வெள்ளம் தலைத்தலை சிறப்பக்
கன்றுகால் ஒய்யும் கடுஞ்சுழி நீத்தம்
புன்றலை மடப்பிடிப் பூசல் பலவுடன்
வெண்கோட் டியானை விளிபடத் துழவும்
உ0 அகல்வாய்ப் பாந்தட் படாஅர்ப்
பகலும் அஞ்சும் பனிக்கடுஞ் சுரனே.

—ஊட்டியார்.

(உரை)

கச: வாழி தோழி......

(இ - ள்.) தோழி - தோழி துயி லெழுவாயாக!

(வி - ம்.) தோழி என்னும் விளி துயிலெழுவாயாக! என்பதுபட நின்றது. வாழி: அசைச்சொல்,

க - கo: அன்னாய்..........பொழுதே

(இ - ள்.) அன்னையும் கனை துயில் மடிந்தனள் - நம் தாயும் பேருறக்கத்தே அழுந்திக்கிடக்கின்றாள்காண்! அஃதெங்ஙனம் அறிந்தாய் என்பாயேல் யான் அவள் மருங்கு சென்று; அன்னாய் வாழி வேண்டு அன்னை - தாயே நீ வாழ்வாயாக! யான் கூறு மிதனை விரும்பிக் கேள்; நம் படப்பைத் தண் அயத்து அமன்ற கூதளம் குழைய - நம் புழைக்கடைத் தோட்டத்திற் குளத்திற் செறிந்து வளர்ந்த கூதளஞ் செடி குழைந்து போமாறு; அருவி இன் இசை பாடும் - அருவிநீர் வீழ்ந்து இனிய இசை பாடு கின்றது; என்னதூஉம் - அவ்வோசையைச் சிறிதேனும்; கேட்டியோ - கேட்டாயா?; அன்னை வாழி வேண்டு - தாயே நீ வாழ்க! நான் கூறுவதனை விரும்பிக் கேள்!; நம் படப்பை - நமது புழைக்கடைத் தோட்டத்தின்கண்; ஊட்டி அன்ன ஒண் தளிர்ச் செயலை ஓங்கு சினைத் தொடுத்த ஊசல் பாம்பு என முழு முதல் துமிய உரும் எறிந்தன்றே - சாதிலிங்கம் ஊட்டப்பட்டது போன்று சிவந்த ஒள்ளிய தளிரையுடைய அசோக மரத்தினது உயர்ந்த கிளையிலே கட்டப்பட்டிருந்த ஊசற் கயிற்றைப் பாம்பு என்று நினைத்து அவ் வசோகமரம் முழுதும் வேரோடு அழிந்து போம்படி முகில் இடியினை வீழ்த்தியதே! என்று கூறி; பின்னும் கேட்டியோ எனவும் - நான் மீண்டும் அவ்வொலியைக் கேட் டனையோ? என்று வினவாநிற்பவும்; அஃதறியாள் - அதனைச் சிறிதும் அறியாது கிடக்கின்றாள், இவ்வாற்றால் ஆராய்ந்து அறிந்து கொண்டேன்!; அதன் தலை - அதன் மேலும்; பொழுது மன்னுயிர் மடிந்தன்று - பொழுது தானும் உலகில் வாழ்கின்ற உயிரினமடங்கலும் உறங்கும் நள்ளிரவா யிருந்ததுகாண்!

(வி - ம்.) தலைவன் வருகையை அவன் குறிசெய்தலால் அறிந்த தோழி முன்னம் அன்னையின் துயில்ஆராய்ந்தறிந்து பின்னர்த் தலைவியை எழுப்பித் தான் துயிலாராய்ந்த முறையை அவட்கு இவ்வாறு கூறி விளக்குகின்றாள். முன்னர் அருவியோசையைக் கேட்டாயோ! என்று வினவியவள் ஒரோவழி அன்னை அதனைப் பொருட்டாகக் கொள்ளாமல் விடை கூறாதிருத்தலும் கூடும் என்று ஐயுற்றவள் பின்னர் அவள் துணுக் குற்று விடையிறுத்தற் கியன்றதொரு வினாவை வினவிய நுணுக்கம் அறிக. வீட்டுத் தோட்டத்தில் அருவி வீழ்கிறது என்புழி வீழ்ந்தால் வீழட்டும் என்று துயில்மயக்குடையோர் வாய்வாளாதிருத்தலும் இயல்பே; வீட்டின் பின்புறத்தே பேரிடி வீழ்ந்ததென்று கூறக்கேட்டால் யார்தாம் வாய்வாளாதிருப்பர்? விழித்திருப்பின் ஒருதலையாக அதனை ஆராய்ந்தறியவே முயல்வரல்லரோ? இதற்கும் விடை கூறாமையின் அன்னை நன்றாக உறங்கிக் கிடக்கின்றாள் என்று ஐயமின்றி அறிந்து கொண்டேன் என்பது கருத்து.

இனி ஊர் துஞ்சாமையும், நாய் துஞ்சாமையும் முதலிய பிற இடை யூறுகளும் இல்லை என்பாள் பொழுது மன்னுயிர் மடிந்தது என்றாள், எனவே பேயுந் துஞ்சும் நள்ளிரவு என்றாளாம்.

### கo - கஉ: காதலர்..........பழுதன்றாக

**(இ - ள்.)** *காதலர் வருவாராயின் - நம்பாற் காதலையுடைய நம்பெருமான் நமக்கு அளிசெய்ய வருவாரானுல்; பருவம் இது என - இதுவே அவர் வரவு இன்றியமையாத பருவம் ஆம் என யாம் கருதும்படி; சுடர்ந்து இலங்கு எல்வளை நெகிழ்ந்த - விட்டு விளங்கும் ஒளியையுடைய நமது வளையல் எல்லாம் கழன்று வீழும்படி மெலிந்திருக்கின்ற; நம் வயின் படர்ந்த உள்ளம் பழுது இனறு ஆக - நம்மிடத்தே அன்பிஞலே படர்ந்திருக்கின்ற தமது நெஞ்சம் சிறிதும் குற்றமில்லையாம்படி; என்க.*

**(வி - ம்.)** வருவராயின் என்றது வருதலின் அருமை புலப்படுத்து நின்றது. பிரிவாற்றுமையாலே மெலிவுற்று வளைநெகிழ்ந்தனவாதலின் வந்து நம்மை அளித்தற்குப் பருவம் இஃது என்ருள். பிரிவாற்ருது இறந்துபாடு எய்தலுறின் நம்பால் படர்ந்த அவருள்ளம் பழிபூணும் ஆதலால் அவ்வாறு பழிபூண்டு அவர் உள்ளம் பழுதுபடாமலே (வந்தனர்) என்றவாறு.

### கச - உக: வந்தனர்.........சுரனே

**(இ - ள்.)** *அந்தரத்து இமிழ் பெயல் தலைஇய பல இனக் கொண்மூ தவிர் இல் வெள்ளம் தலைத்தலை சிறப்ப - வானத்தினின்றும் முழங்குதலோடு மழைபொழிதலுற்ற பலவாகிய கூட்டமாகிய முகில்கள் ஓயாது பெய்தலாலே உண்டாகிய வெள்ளம் இடந்தோறும் இடந்தோறும் பெருகுதலாலே; மடப்பிடி கடுஞ்சுழிநீத்தம் கன்றுகால் ஒய்யும்பூசல் பலவுடன் - பெண்யானைகள் கடிதாக இயங்கும் அவ்வெள்ளம் தம்முடைய கன்றுகளின் காலைப் பறித்திழுத்தலாலே எடுக்கும் ஆரவாரங்கள் பலவற்ருேடே; வெண்கோட்டியானை விளிபடத் துழவும் - வெள்ளிய மருப்பையுடைய களிற்றியானைகளும் ஆரவாரமுண்டாகக் கன்றுகளைப் பற்றுதற்கு நீரைத் துழாவுதற்கிடனுனதும்; வாய் அகல் பாந்தட் படாஅர் - இடமகன்று அடர்ந்த பாம்புச் செடிகளையுடையதுமாகிய; பகலும் அஞ்சும் பனிக் கடுஞ்சுரம் - பகற்பொழுதிலே இயங்குதற்கும் மாந்தர் அஞ்சுகின்ற நடுக்கந் தருகின்ற கடிய அருநெறியினூடே; வந்தனர் - நம்பெருமான் நம்மை அளிசெய்தற்கு நம்மிரவுக் குறியிடத்தே வந்துள்ளனர்காண் விரைந்தெழுதி! அவரை எதிர்கொள்ளுதும் என்பதாம்.*

**(வி - ம்.)** இமிழ் பெயல் - முகில் வீசுகின்ற மழையுமாம். இனம் - கூட்டம். தவிர்வு இல்லாது பெய்தலால் உண்டாகிய வெள்ளம் என்க. வெள்ளநீர் கன்றுகளின் கால்களைப் பறித்து இழுத்தலாலே பிடிகள் செய்யும் பூசல் என்க. இப்பூசல் பல வேறிடங்களினும் உண்டாதல் தோன்றப் பூசல் பலவுடன் என்ருள். வெண்கோட்டியானை ஆரவார

முண்டாக வெள்ளம் இழுக்கும் கன்றினைப் பற்றுதற்குக் கையால் நீரைத் துழாவும் என்க. வாய் அகல் என மாறுக. அகன்ற இடத்தே அடர்ந்த படாஅர், படாஅர் - பாம்புச் செடி என்பர் பழையவுரையாசிரியர். படாஅர் தூறு எனவே கொண்டு அங்காந்த வாயையுடைய பாம்புகள் உறையும் தூறு எனலுமாம். இவற்றால் தோழி வழியின்னாமையைக் கற்போரும் அஞ்சுமாறு கட்டுரைத்தலுணர்க. இதனால் நம்பெருமான் தம்முயிரினும் காதலைப் பெரிதாக நினைப்பவர் ஆதலின் இத்தகைய இன்னாமிக்க நெறியினும் நம்பொருட்டு வந்தனர் என்றாளாயிற்று.

இனி இதன் பழைய வுரையாசிரியர்,

"யானைகளுங் கன்று காரணமாகப் பிடிவருந்தியபின்பு, எடுக்க முயன்றாற்போல அவரும் அலரானும் வழியதருமையானும் நாம் நலனழிந்தபின்பு வரைய முயலுமதல்லது முன்பு முயலா ரென்பது கருத்து" என உள்ளுறை காண்பர்.

இனி இதனை, தோழி அன்னையும் கனை துயில் மடிந்தனள் பொழுதும் ஊர் துயின் மடிந்த நள்ளியாமம். காதலர் உள்ளம் பழுதன்றாக பகலும் அஞ்சும் சுரம் வந்தனர் என இயைத்திடுக.

(பா - வே.) ௨. தண்கயத்.

## செய்யுள் ௬௯

**திணை :** பாலை.

**துறை :** பொருள்வயிற் பிரிந்து நீட்டித்தான் தலைமகன் எனக் கவன்ற தலைமகட்கு வருவரென்பதுபடச் சொல்லித் தோழி ஆற்றுவித்தது.

**(து - ம்.)** அஃதாவது - தலைவன் பொருளீட்டற் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து சென்றவன் குறித்த காலத்தே மீண்டுவாராமல் காலம் தாழ்த்திருந்தமையாலே தலைவி பிரிவாற்றாது மெலிந்து பெரிதும் துன்புறுவாளாக அதுகண்ட தோழி தலைவனுடைய பேரன்புடைமையை எடுத்துக்காட்டிச் சிறிது காலந்தாழ்த்தாராயினும் அவர் நின்னை மறந்துறைவாரல்லர் அணித்தாக வருவர் வருந்துணையும் ஆற்றுக என்று வற்புறுத்தியது என்றவாறு.

**(இ - ம்.)** இதனை, "பெறற் கரும் பெரும் பொருள்" எனவரும் (தொல். கற்பி - ௯) நூற்பாவின்கண் "பிறவும் வகைபட வந்த கிளவி" என்பதனாலமைத்திடுக.

**ஆய்நலந் தொலைந்த மேனியும் மாமலர்த்**
**தகைவனப் பிழந்த கண்ணும் வகையில**
**வண்ணம் வாடிய வரியும் நோக்கி**
**ஆழல் ஆன்றிசின் நீயே உரிதினின்**
**௫ ஈதல் இன்பம் வெஃகி மேவரச்**

செய்பொருட் டிறவ ராகிப் புல்லிலைப்
பராரை நெல்லி அம்புளித் திரள்காய்
கான மடமரைக் கணநிரை கவரும்
வேனில் அத்தம் என்னு தேமுற்று
க0 விண்பொரு நெடுவரை இயல்தேர் மோரியர்
பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த
அறையிறந் தகன்றனர் ஆயினும் எனையதூஉம்
நீடலர் வாழி தோழி ஆடியல்
மடமயில் ஒழித்த பீலி வார்ந்துதம்
கரு சிலைமாண் வல்விற் சுற்றிப் பலமாண்
அம்புடைக் கையர் அரண்பல நூறி
நன்கலந் தரூஉம் வயவர் பெருமகன்
சுடர்மணிப் பெரும்பூண் ஆஅய் கானத்துத்
தலைநாள் அலரி நாறுநின்
உ0 அலர்முலை ஆகத் தின்றுயில் மறந்தே.

—உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனார்.

(உரை)

கரு: வாழி தோழி..........

**(இ - ள்.)** *தோழி வாழி - தோழி நீ நீடுவாழ்வாயாக ! நான் கூறுவதனைக் கூர்ந்து கேள்.*

**(வி - ம்.)** *ஆற்றுவிக்கத் தொடங்குதலின் வாழ்த்துகின்றாள். இவ் விளி யான் ஒன்று கூறுவல் அதற்குச் செவிசாய்த்தருள்க என்னும் குறிப் புடைத்து.*

க - ச: ஆய்நலம்...........நீயே

**(இ - ள்.)** *நீ ஆய்நலம் தொலைந்த மேனியும் மாமலர்த் தகை வனப்பு இழந்த கண்ணும் - நீதானும் நம்பெருமானுடைய பிரிவாற்றாமையாலே மகளிர் பலவும் ஆராய்ந்து காண்டற்குக் காரணமான பெண்மை நலம் பொதுளிய மழுங்கிய நினது மேனியையும் பெரிய செந்தாமரை மலர்போன்ற தமது பேரழகினை இழந்து புற்கென்றிருக்கின்ற நின் கண்களையும்; வகை இல வண்ணம் வாடிய வரியும் நோக்கி - இத்தகைய என்று கூற உவமை வகை இல்லாத தனித்தன்மையுடைய தமது நிறம்*

மழுங்கிப் போன சுணங்குகளையும் அடிக்கடி நோக்கி நம்பெருமானைக் காணப்பெறுமலே இறந்துபடுவோமோ! என்னும் பெருந்துன்பத்தி னூடே; ஆழல் - மூழ்கிவிடாதே! ஆன்றிசின் - அமைதியுறுதி; என்க.

(வி - ம்.) தலைவி ஆற்றுமையாலே நாளுக்குநாள் நலிந்து வருகின்ற தன் மேனி முதலியவற்றை அடிக்கடி நோக்கி இந்நிலை நீடிக்குமாயின் இறந்துபடுவேம் எம்பெருமானைக் காணுமலேயே இறப்பேமோ? என்று கையாறு கொள்ளுவாளைத் தேற்றுதலின் நீ இங்ஙனம் நோக்கி ஆழல் என்கின்றுள். அமைதியோடிருத்தலே நின் போன்ற "செறிவும் நிறை யும் செம்மையும் செப்பும் அறிவும் அருமையுமுடைய பெருந்தகைப் பெண்டிர்க்கியல்பு என்பாள்" ஆன்றிசின் என்றுள்.

## ச - கஉ: உரிதினின்..........ஆயினும்

(இ - ள்.) ஈதல் இன்பம் உரிதினின் வெஃகி - நங்காய்; நம்போலப் பொங்கி முற்றிய காதலாற் பிணைப்புண்டு இல்லத் திருந்து வாழ்வாங்கு வாழும் திருவுடையார்க்கு வறியார்க்கு ஈத்துவக்கும் பேரின்பமே சிறப்புரிமை யுடைத்தாதலாலே பிறவின்ப மெலாம் துறந்து அவ்வின்பத்தையே பெரிதும் விரும்பி; மேவரப் பொருள்செய் திறவாராகி - அவ்வின்பம் நும் வாழ்க்கையினூடே வந்து பொருந்துதற்கு இன்றியமையாத பொருளீட்டிக் கொள்ளுந் திறத்திலே முயல்வாராகி; பரரை புல் இலை நெல்லி அம் புளித் திரள் காய் கானம் மடமரைக் கணம் நிரை கவரும் வேனில் அத்தம் என்னது - பரிய அரையினையும் புல்லிய இலையினையும் உடைய நெல்லியினது அழகிய புளிப்பினையும் திரட்சியையும் உடைய காய்களைக் காட்டகத்தே மடப்பமுடைய மரைமானின மாகிய கூட்டம் கவர்ந்து தின்னுதற்கியன்ற வேனிற் பருவத்து வெவ்விய வழி என்றும் பாராமல்; எம் உற்று விண்பொரு நெடு வரை இயல் தேர் மோரியர் பொன் புனை திகிரி திரிதரக் குறைத்த - துன்பத்தையே இன்பமாக மேற்கொண்டு, வானத்தைத் தீண்டு கின்ற நெடிய மலையிடத்தும் இயங்குகின்ற தேரையுடைய மோரிய மன்னர்கள் தங்கள் தேரினது பொன்னுலியன்ற உருள்கள் முட்டின்றி இயங்குதற் பொருட்டுச் செதுக்கிய; அறை இறந்து அகன்றனர் ஆயினும் - பாறைக் கற்களையுடைய மலைநெறியைக் கடந்து அப்பாற்பட்ட நாட்டிற்கே சென்றிருந்தாரேனும்! என்க.

(வி - ம்.) இதன்கண் தலைவன் தனது இன்பங்களைத் துறந்து பொருளீட்டலாலே வருகின்ற துன்பங்களையே இன்பமாகக் கொண்டு பாலைக் கொடுநெறி கடந்தும் போயதற்குக் காரணம் ஈதலின்பத்தை ஏனைய இன்பங்களிலும் சிறந்த இன்பமாகக் கருதி அவ்வின்பந் துய்த் தற்கு இன்றியமையாத பொருளீட்டலே ஆம் ஆகவே தாம் மேற்

கொண்ட இல்வாழ்க்கைக்குரிய பண்பும் பயனும் உண்டாக வாழ வேண்டியே பிரிந்தார். வினையே ஆடவர்க்குயிர் என்பதுபற்றி அவர் பெருந்தகைமைக்கு ஏற்பவே அவர் பிரிந்தார் என அறிவுறுத்து அது நோன்றலே நினக்குச் சிறப்பாம் என்பதுபட ஆற்றுவித்தல் நினைந்து மகிழற்பாற்று.

பரு அரை - பராரை எனப் புணர்ந்தது. அரை-மரத்தின் நடுப் பகுதி. நெல்லிமரத்தின் நடுப்பகுதி பரியதாயிருத்தல் பற்றிப் பராரை நெல்லி என்றாள். புல்லிலை என்புழிப் புன்மை சிறுமைமேற்று. மரை மான்கள் ஆணும் பெண்ணும் அஞ்சுமியல்புடையன ஆதல் கருதி மடமரை எனப் பொதுவின் ஓதினள். வேனிற் பருவத்தே நெல்லி காய்க்கும் ஆதலின் வேனிலுக்கு இங்ஙனம் அடைதொடுத்தபடியாம். வேனில் அத்தம் என்னாது ஏமுற்று அறையிறந்தனர் என்னும் இக் கருத்து,

> "அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
> பெருமை முயற்சி தரும்" (கூகக)

எனவும்,

> "இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
> துன்பம் துடைத்தூன்றுந் தூண்" (கூகரு)

எனவும் வரும் திருக்குறள்களை நினைவுறுத்துகின்றது.

"மோரியர் ஆவார் சக்கரவாள சக்கரவர்த்திகள் விச்சாதரரும் நாகரும் என்ப" என்பது புறநானூற்றின் (கஎரு) பழையவுரை. ஈண்டும் பொன்புனைதிகிரி என்பதனால் இவ்வாசிரியர் கருத்தும் அதுவே போலும். இனி மோரியர் வடநாட்டு மன்னரில் ஒரு குடிமன்னர் எனக் கருதுவாரும் உளர்.

## கஉ - உ0 : எனையதூஉம்............மறந்தே

(இ - ள்.) ஆடு இயல் மடமயில் ஒழித்த பீலி வார்ந்து தம் சிலைமாண் வல்வில் சுற்றி - கூத்தாடுகின்ற இயல்புடைய இளைய மயில் தன் தோகையினின்றும் உதிர்த்துவிட்ட பீலியை இரண்டாகக் கிழித்துத் தம்முடைய ஒலிமாட்சிமையுடைய வலிய வில்லிலே சுற்றி அணிசெய்த; பலமாண் அம்பு உடைக்கையர் - பலவேறு வகைபபட்ட தொடைமாட்சிமைப்பட்ட அம்புகளைப் பற்றிய கையையுடையாராய்ச் சென்று; அரண் பல நூறி நன் கலம்தரூஉம் வயவர் பெருமகன் - பகைமன்னர் அரண்கள் பல வற்றையும் நொறுக்கி வென்றடிப்படுத்து அம்மன்னர் திறை யாகத் தருகின்ற அழகிய பேரணிகலங்களையும் கொணர்ந்து தருகின்ற வலிமைமிக்க மறவர்களுடைய தலைவனாகிய; சுடர் மணிப் பெரும்பூண் ஆ அய் கானத்து - ஒளியுடைய மணிகளா லியன்ற பெரிய அணிகலனை அணிந்த ஆஅய் என்னும் வள்ளற் பெருமானுடைய காட்டகத்தே மலருகின்ற; நாள்தலை அலரி

நாறும் - நாட்காலத்தே மலருகின்ற மலர்போல நறுமணங் கமழாநின்ற; நின் அலர்முலை ஆகத்து இன் துயில் மறந்து - நினது அடிப்பகுதி பரந்த முலையினையுடைய மார்பகத்தே கிடந்து துயிலுகின்ற இனிய துயிலை மறந்து; எனைய தூஉம் நீடலர்-சிறிது காலமுந் தாழ்த்திரார்! இன்னே வருவர்காண்! என்பதாம்.

(வி - ம்.) மயில்கள் ஆட்டைக் கொருமுறை இறகு உதிர்க்கும் என்ப. அங்ஙனம் உதிர்த்த பீலியை இரண்டாகக் கிழித்து வில்விற் சுற்றி அணி செய்வர் என்பது கருத்து. ஆஅய் கடையெழுவள்ளலுள் ஒரு வள்ளல். நாள்தலை - தலைநாள் என மாறி நின்றது. இனி, கார்ப் பருவத்துத் தலைப்பெயல் நாளிலே மலர்ந்த முல்லைமலர் எனினுமாம். என்னை? ஈண்டு ஆஅயின் நாடு கானம் என்றுராகலின். கானம் - முல்லை நிலம். அறத்தின்கட் கருத்தூன்றிச் சென்ற நம்பெருமான் அன்பைப் புறக்கணிப்பாரல்லர். எனவே அன்பின் உறையுளாய் இன்பத்தின் கருவூலமாயிருக்கின்ற நின்னையும் அவர் மறப்பரோ? இன்னே வருவர் ஆற்றுக என்பது குறிப்பு என்க.

இனி இதனை தோழி! நீ நோக்கி ஆழல்! ஆன்றிசின் நம்பெருமான் ஈதல் இன்பம் வெஃகித் திறவர் ஆகி அகன்றனர் ஆயினும் நின் ஆகத்து இன்துயில் மறந்து நீடலர் என இயைக்க

(பா. வே. கo நெடுங்குடை. கஅ. சுடர்மலி.

## செய்யுள் எo

திணை : நெய்தல்.

துறை : தலைமகன் வரைவு மலிந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—களவொழுக்கமே காமுற்று வரைதலிற் கருத்தின்றி ஒழுகிய தலைவன் அலர் மிகுதியானும் தோழி வரைவு கடாஅயதாலும் வரைவுடம்பட்டு வரைதற்கு வருகின்றமை அறிந்த தோழி தலைமகட்கு அவ்வுவகைச் செய்தியை அறிவுறுத்து மகிழ்வித்தது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "நாற்றமும் தோற்றமும்" எனவரும் (தொல். கள - உ௩) நூற்பாவின்கண் "ஆங்கதன் றன்மையின் வன்முறை யுளப்பட" என்பதன்கண் அமைத்திடுக.

கோடுந்திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தெனை
இரும்புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்
குறுங்கண் அவ்வலைப் பயம்பா ராட்டிக்
கொழுங்கண் அயிலை பகுக்குந் துறைவன்
௫ நம்மொடு புணர்ந்த கேண்மை முன்னே
அலர்வாய்ப் பெண்டிர் அம்பல் தூற்றப்

பலருமாங் கறிந்தனர் மன்னே இனியே
வதுவை கூடிய பின்றைப் புதுவது
பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்கும்
௧௦　கானலம் பெருந்துறைக் கழனி மாநீர்ப்
பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்
விழவணி மகளிர் தழையணிக் கூட்டும்
வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்றுறை
௧௫　வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீழ் ஆலம் போல
ஒலியவிந் தன்றிவ் அழுங்கல் ஊரே.

—மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனார்.

(உரை)

க - ரு : கோடுந்திமில்........கேண்மை

(இ - ள்.) *கொடுந்திமில் பரதவர் - வளைந்த படகுகளை யுடைய நெய்தனில மாக்கள்; வேட்டம் வாய்த்தென - கடலிற் சென்று ஆடிய மீன் வேட்டை நன்கு கைகூடிற்றாக ; இரும்புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்து - பெரிய புலால் நாற்றமே கமழா நின்ற சிறிய குடிகளையுடைய தம்மூரினிற் புகுந்து; குறுங்கண் அவ்வலைப் பயம் பாராட்டி - முற்படக் குறிய கண்களையுடைய அழகிய தமது வலையினை அவற்றின் பயன் கருதி நறும்புகை காட்டிக் கொண்டாடிப் பின்னர்; கொழுங்கண் அயிலை பகுக்குந் துறைவன் - தாம் கொணர்ந்த கொழுவிய கண்ணையுடைய அயிலை மீன்களைத் தஞ்சுற்றத்தார்க் கெல்லாம் பகுத்துக் கொடுத்து மகிழ்வித்தற் கிடனான ; துறைவன் நம்மொடு புணர்ந்த கேண்மை - கடற்றுறையினையுடைய நம்பெருமான் நம்பாற் கொண்ட காதலுறவு என்க.*

(வி - ம்.) *வேட்டம் - மீன்வேட்டை. அது வாய்த்தலாவது நிரம்ப மீன் அகப்படுதல். அவ்வலை - அழகிய வலை. வலைப்பயம் - வலையினாற் கிடைக்கும் ஊதியம் : அஃதாவது மீன் - வலையைப் பயம் கருதிப் பாராட்டி, வலையைப் பாராட்டுதலாவது : நறும்புகை காட்டுதல் ; கண்ணேறு கழித்தலுமாம். முன்னர் வலைப்பயம் பாராட்டிப் பின்னர்ப் பகுக்கும் துறை. சுற்றத்தார்க்கெல்லாம் பகுக்கும் துறை என்க. அயிலை - மீனின் ஒருவகை.*

*இனி இப்பகுதியில் பழையவுரையாசிரியர் காட்டும் உள்ளுறை* **யுவமம் வருமாறு :**

"பரதவர் தம் முயற்சியாலே வேட்டை வாய்த்ததாகிலும் குறுங்கண் வலையைப் பாராட்டி, அம்முயற்சியாலுண்டான அயிலையைக் கடலினின்றும் நீக்கி எல்லார்க்கும் பகுத்துக் கொடுத்து மகிழ்வித்தாற் போல, அவரும் (தலைவரும்) தம்முடைய முயற்சியானே வதுவை கூடிற் றுயினும் அதற்குத் துணையாக நின்ற என்னைக் கொண்டாடி, நின்னைப் பெரிய இச்சுற்றத்தினின்றும் கொண்டுபோய்த் தம்மூரின்கண்ணே நின்னைக் கொண்டு விருந்து புறந்தந்து தம்மூரையெல்லாம் மகிழ்விப்பர் என்றவாறு" எனவரும்.

## ரு - எ: முன்னே.........மன்னே

**(இ - ள்.)** முன்னே - யாம் அறத்தொடு நின்றமையாலே நம் சுற்றத்தார் மகட்கொடை நேர்வதற்கு முன்பெல்லாம்; அலர் வாய்ப் பெண்டிர் அம்பல் தூற்ற - பிறர்பழியை யாவரும் அறியத் தூற்றுதலே தம் வாய்க்கியல்பாகிய கொடிதறி மகளிர் முன்னர் நம் மறையினை அம்பலாக்கிப் பின்னர் யாவரும் அறிய அலர் தூற்றுதலானே; ஆங்குப் பலரும் அறிந்தனர் மன்னே - அவ்வழி நஞ்சுற்றத்தார் பலரும் அறிவாராயினர். அத்துன்பநிலை ஒழிந்தது என்க.

**(வி - ம்.)** முன்னே என்றது மறைவெளிப்பட்டு நமர் மகட் கொடை நேர்தற்கு முன்பு என்பதுபட நின்றது. அலர் வாய் - அலர் கூறுதலையே இயல்பாகவுடைய வாய். பலரும் அறிந்தனர் என்றது நஞ்சுற்றத்தார் பலரும் அறிந்து இற்செறித்தல் முதலிய இன்னல் பல செய்தனர் என்பதுபட நின்றது. மன் - அவ்வின்னலும் அதற்குக் காரணமான அலரும் ஒழிந்தன என ஒழிந்த பொருண் மேனிற்றலின் ஒழியிசை.

## எ - கஎ: இனியே.........ஊரே

**(இ - ள்.)** இனி, வதுவை கூடிய பின்றை - இப்பொழுது நம்பெருமான் வரைவு மலிந்த பின்னரோ; இவ் அழுங்கல் ஊர் - இந்த ஆரவாரமுடைய ஊர் முழுதும்; புதுவது பொன்வீ ஞாழலொடு புன்னைவரிக்கும் கானல் அம்பெருந்துறை - புதிதாக மலர்ந்த பொன்னிறமுடைய மலர்களையுடைய ஞாழன் மரமும் புன்னை மரங்களும் தம் பூக்களாலும் தாதுக்களாலும் ஒவியந் தீட்டுகின்ற கடற்கரைச் சோலை மருங்கேயமைந்த; கழனி மாநீர்ப் பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல் விழவு அணி மகளிர் தழையணிக் கூட்டும் வென் வேல் கவுரியர் தொல் முதுகோடி - கழனிகளில் கரிய நீரிடத்தே தழைத்துள்ள திரண்ட தண்டுகளையுடைய நெய்தற் பூக்களை விழாவிற்குத் தம்மைக் கோலம் செய்துகொள்கின்ற பரதவர் மகளிர்கள் தாமுடுத்துள்ள தழையாடைக்கு அழகுசெய்யும் பொருட்டுப் பறித்துச் சேர்த் தற்கிடனான வெற்றிவேலேந்தும் பாண்டிய மன்னருடைய மிகப்

பழைய கோடிக்கரையின்கண் அமைந்த; முழங்கு இரும் பௌவம் முன்றுறை - ஆரவாரிக்கின்ற கடற்றுறை மருங்கே; இரங்கும் - பறவைகள் ஆரவாரிக்கும் ஆரவாரத்தை; இராமன் வெல்போர் அருமறைக்கு அவித்த - இராமன் அரக்கரை வெல்லுதற்குச் செய்யும் போர் பற்றிய அரிய மறைச்செய்தியை வானர வீரர்களோடு ஆராய்தற் பொருட்டுக் கைகவித்து அவிக்கப்பட்ட; பல்வீழ் ஆலம் போல - பலவாகிய விழுதுகளையுடைய ஆலமரம் போல; ஒலி அவிந்தன்று - ஆரவாரம் அடங்கிக் கிடக்கின்றது என்பதாம்.

**(வி - ம்.)** கானலம் பெருந்துறைக்கு அணித்தாகிய கழனிகளில் என்க. விழவணி - திருவிழாக் காண்டற்குச் செய்யும் ஒப்பனை. முழங்கும் முன்றுறைக்கண் இரங்கும் ஆலம் அருமறைக்கு அவித்த ஆலம் எனத் தனித்தனி கூட்டுக.

இதன்கண் வருகின்ற இராமகாதைக் குறிப்புமறிக.

இனி இப்பகுதிக்கு—"நெய்தற் பூவானது, ஞாழலும் புன்னையும் கரையிலே நின்று தாதையுதிர்த்துப் புறஞ்சூழ நீரிடத்துத் தன்னை விடாதே அலைகள் சூழ நடுவே நின்று நெருங்கி வளர்ந்து பின்னை விழவணி மகளிர் அல்குலுக்குத் தழையாய்ப் பயன்பட்டாற்போல இருமுது குரவர் புறங்காப்ப ஆயவெள்ளத்தார் மெய்யைவிடாதே சூழ்ந்து புறங்காப்ப இப்படிச் செல்வத்தால் வளர்ந்த நீயும் எம்பெருமானுடைய இல்லறமாகிய பிரிவிற்குத் துணையாகப் போகா நின்றாயன்றோ வென்று வியந்து கூறியவாறு கண்டுகொள்க" என உள்ளுறையுவமம் கொண்டனர் பழைய வுரையாசிரியர்.

இனி இதனை, "துறைவன் நம்மொடு புணர்ந்த கேண்மை முன்னே அலர் தூற்றப் பலரும் அறிந்தனர். இனி வதுவைகூடிய பின்றை இவ் வழுங்கல் ஊர் ஒலி அவிந்தன்று" என இயைக்க.

**(பா. வே.)** கஅ. கவிரியர்.

## செய்யுள் எக

**திணை:** பாலை.

**துறை:** பொருள்வயிற் பிரிந்த விடத்து ஆற்றாளாய தலைமகட்குத் தோழி சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது—தலைவன் பொருள்வயிற் பிரியாநிற்ப அப் பிரிவாற்றி யிருத்தற்குரிய தலைவி ஆற்றாது பெரும்பேதுறுவாளை ஆற்றுவிக்கும் தோழி நீ இங்ஙனம் ஆற்றாயாயினமையின் ஆற்றுவித்தற்குரிய யான் என் கடமையை ஆற்றவியலாமையால் நீ உயிர் விடுமுன்னர் என் உயிர் தானே என்னுடம்பைத் துறந்து போதற்குரிய காலம் வந்துற்றதென்றே கருதுகின்றேன் எனத் தன் ஊழை நொந்துரைக்குமாற்றால் ஆற்றுவித்தது என்று கொள்க.

(இங்ஙனமன்றி இதனைத் தலைவி கூற்றாகவே கொள்வர் ஆசிரியர் நச்சினார்க்கினியர் ஈண்டு யாம் பழையவுரையாசிரியர் கருதியதற்கிணங்கத் தோழி கூற்றாகவே கொண்டு உரை கூறுவாம்.

(இ - ம்.) இதனை, "பெறற் கரும் பெரும் பொருள்" எனவரும் நூற்பாவின்கண் (தொல். கற்பி - கூ) 'பிறவும் வகைபட வந்த கிளவி எல்லாம் தோழிக் குரிய' என்பதனாலமைக்க.

[இனி, தலைவி கூற்றெனக் கொள்ளின் " அவனறிவு" எனவரும் நூற்பாவின்கண், (தொல். கற்பி - சு) 'ஆவயின் வரும் பல்வேறு நிலையினும்' என்பதனு லமைத்திடுக.]

நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்
பயனின் மையிற் பற்றுவிட் டோரூஉம்
நயனின் மாக்கள் போல வண்டினம்
சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர
ரு மையின் மானினம் மருளப் பையென
வெந்தாறு பொன்னின் அந்தி பூப்ப
ஐயறி வகற்றுங் கையறு படரோ
டகலிரு வானம் அம்மஞ் சீனப்
பகலாற்றுப் படுத்த பழங்கண் மாலை
க0 காதலர்ப் பிரிந்த புலம்பின் நோதக
ஆரஞர் உறுநர் அருநிறஞ் சுட்டிக்
கூரெஃ கெறிஞரின் அலைத்தல் ஆனது
எள்ளற இயற்றிய நிழல்காண் மண்டிலத்
துள்ளூ தாவியிற் பைப்பய நுணுகி
கரு மதுகை மாய்தல் வேண்டும் பெரிதழிந்
திதுகொல் வாழி தோழி என்னுயிர்
விலங்குவெங் கடுவளி எடுப்பத்
துளங்குமரப் புள்ளில் துறக்கும் பொழுதே.

—அந்தி யிளங்கீரனார்

(பா. வே.) அந்திலிளங்கீரனார், குறிப்பு: இச்செய்யுளின்கண் "வெந்தாறு பொன்னின் அந்தி பூப்ப" என்னும் இனியதோருவமை கூறிய அருமைகருதி இவர் அந்தி இளங்கீரனார் என்று கூறப்பட்டார் என்றுணரலாம்.

(உரை)

கக: தோழி: தோழி கேள்!

## க – கூ : நிறைந்தோர்...........பழங்கண்மாலை

(இ - ள்.) வண்டு இனம் – வண்டின் கூட்டம்; குறைந் தோர் பயன் இன்மையின் – தாம் பண்டு நண்பு செய்தவர் செல்வம் குறைந்து வறியவர் ஆயவிடத்து அவரால் தமக்குப் பயன் இல்லாமை கண்டு ; பற்றுவிட்டு – அவர்பாற் றும் கொண்டுள்ள அன்பைத் துறந்து; நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு – தமக்குப் பயன்படத்தருந்த செல்வரை ஆராய்ந்து கண்டு நட்புக் கொள்கின்ற நெஞ்சத்தோடு கைவிட்டுப் போகின்ற; நயன் இல் மாக்கள் போல் – மக்கட்பண்பு என்னும் நன்மையில்லாத கயமாக்கள் போன்று ; சுனைப்பூ நீத்து – சுனைக்கண் மலர்ந்துள்ள நீர்ப்பூக்களைத் துறந்து; சினைப்பூப் படர – கோட்டுப் பூக்களை விரும்பிச் செல்லா நிற்பவும்; மையின் மான் இனம் மருள – குற்றம் இல்லாத மான் கூட்டம் மயங்கா நிற்பவும்; வெந்து ஆறு பொன்னின் அந்திபூப்ப – உலையின்கண் தீயில் வெந்து ஆறிய பொன்போன்ற நிறமுடைய வாய்ச் செவ்வந்தியரும்புகள் மலரா நிற்பவும் ; ஐயறிவு அகற்றும் கையறு படரோடு அகல் இரு வானம் அம் மஞ்சு ஈன – வியக்கத் தக்க நல்லறிவினையும் போக்கி விடுதற்குக் காரணமான செயலறவைத்தரும் துன்பத்தோடே அகன்ற பெரிய வானமானது அழகிய வண்ணங்களையுடைய முகில்களைத் தோற்றுவியா நிற்பவும்; பகல் ஆற்றுப் படுத்த – ஞாயிற்று மண்டிலத்தைப் போக்கிய ; பழங்கண் மாலை – துயரமே தருகின்ற இந்த மாலைக் காலந்தானும் என்க.

(வி - ம்.) நிறைந்தோர் – செல்வம் நிறைந்தவர். குறைந்தோர் – செல்வம் குறைந்து வறியராயினோர். ஈண்டுக் கூறப்படும் இவ்வுவமை யொடு "நறுந்தா துண்டு நயனில் காலை வறும்பூத் துறக்கும் வண்டும் போல்குவம்" எனவரும் சித்திராபதி கூற்று (மணிமே - கஅ : கக - உ0) நினையற்பாலதாம். அந்தி – செவ்வந்திப்பூ. இப்பூ வெந்தாறு பொன் போலும் நிறமுடைத்தாதலறிக. இனி அந்தி – செக்கர்வானம் எனக் கொள்ளினுமாம். இதற்கு அந்தி ஆகுபெயராம். வையறிவு எனக் கண்ணழித்துக் கூர்த்த அறிவினையும் எனினுமாம். கையறுதற்குக் காரணமான படர் என்க. படர் – துன்பம். மாலைக்காலத்து முகில்கள் பொன்மை முதலிய பல்வேறு வண்ணமும் உடையவாய் அழகுடைய வாதல் பற்றி அம்மஞ்சு என்றார். பகல் – ஞாயிறு. பகற்பொழுதுமாம். ஆற்றுப்படுத்தல் – போக்குதல். பழங்கண் – காமத்துன்பம். இது மாலையில் மலர்தலின் இங்ஙனம் கூறினள்.

## க0 – கஅ : காதலர்.........பொழுதே

(இ - ள்.) காதலர்ப் பிரிந்த • புலம்பின் – முன்னரே தங் காதலரைப் பிரிந்த தனிமையினாலே ; நோதக – காண்

போரும் நோகத்தகுமாறு; ஆரஞர் உறுநர் - ஆற்றியிருக்கும் மதுகையின்மையாலே அருந்துயரை எய்துவோருடைய; அருநிறம் சுட்டி - காண்டற்கரிய மார்பினைக் குறிக்கொண்டு; கூர் எஃகு எறிஞரின் - கூரிய வேற்படையை எறிகின்ற வன்கண்ணர் போன்று; அலைத்தல் ஆனாது - வருந்துதலையும் ஒழியாதாயிற்று; எள் அற இயற்றிய நிழல்காண் மண்டிலத்து உள் ஊது ஆவியில் பைப்பய நுணுகி மதுகை மாய்தல் வேண்டும் - குற்றந்தீர இயற்றப்பட்ட நிழல் காண்டற்குரிய கண்ணாடி மண்டிலத்தின் அகத்தே வாயினால் ஊதப்பட்ட ஆவியைப்போல மெல்லமெல்லக் குறைந்து அவருடைய ஆற்றல் அழிதல் தேற்றம்; என் உயிர் விலங்கு வெங்கடு வளி எடுப்பத் துளங்கு மரப்புள்ளில் பெரிது அழிந்து துறக்கும்பொழுது இது கொல் - அங்ஙனம் மதுகை மாய்வார்திறத்திலே மிகவும் நெஞ்சம் அழிவுற்று அளியேனுடைய உயிர் சூறைக்காற்று மோதித் தாக்குதலாலே அசைகின்ற மரத்தைத் துறந்து போகின்ற பறவை போன்று நடுங்கும் என்னுடம்பைத் துறந்து போகும் காலம் இதுவே போலும் யான் என் செய்கேன் என்பதாம்.

(வி - ம்.) தலைவன் பிரிவைத் தனது அறிவு மதுகையாலே ஆற்றி யிருக்கும் கடமையுடைய தலைவி அங்ஙனம் ஆற்றியிராமல் மிகவும் வருந்தி யிருக்கும்பொழுது மாலைக்காலமும் வந்துற்றதாக அதுகண்டு தலைவி பின்னும் ஆற்றாது பேதுறுவாளாயினள். அவளை ஆற்றுவிக்கும் கடமையுடைய தோழி இனி நீ சாதற்குமுன்னரே என்னுயிர் போய் விடும் என்று தோழிக்குக் கூறுபவள், தலைவியின் பிரிவாற்றாமையை உலகின்மேலிட்டு, "காதலர் பிரிந்த புலம்பின் ஆரஞர் உறுநரை இந்த மாலையும் அலைத்தலொழியாது; இனி அவர் மதுகையும் துவரக்கெடும். அது கண்டு நெஞ்சழியும் என் உயிர் போங்காலம் இந்த மாலைக்காலமே காண் என்கின்றாள். இதனாற் போந்த பயன் யான் உயிர் வாழவேண்டுதி யாயின் நீ ஆற்றியிருத்தல் வேண்டும் என்று அறிவுறுத்துத் தலைவியை ஆற்றுவதாம். இங்ஙனம் கூறுக்கால் இது தோழி கூற்றுமாறில்லை. தலைவியின் கூற்றாயின் அதற்கியையப் பொருள் கூறிக்கொள்க.

இனி, இதனை "தோழீ! வண்டினம் நீத்துப்படர, மானினம் மருள, அந்தி பூப்ப, வானம் ஈன, ஆற்றுப்படுத்த மாலை ஆரஞர் உறுநர் நிறஞ் சுட்டி எஃகெறிஞரின் அலைத்தல் ஆனாது, ஆகவே அவர் மதுகை மாய்தல்வேண்டும் என் உயிர் துறக்கும் பொழுதும் இம்மாலையே போலும்" என்றியைபு காண்க.

## செய்யுள் எஉ

**திணை :** குறிஞ்சி.

**துறை :** (க) தலைமகன் இரவுக்குறிக்கண் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(உ) தோழி தலைமகட்குச் சொல்லியதூஉமாம்.

**(து - ம்.)** (க) அஃதாவது—தலைவன் பெரிதும் இன்னாமையுடைய இருள் நெறியிலேயும் தனக்கு அளிசெய்தற் பொருட்டு இரவுக்குறிக்கண் வந்து ஒருசார் நிற்றலை உணர்ந்த தலைவி அவன் கேட்டு வரைதற்கு முயலுமாறும் இங்ஙனம் இன்னா நெறிக்கண் வருதலைத் தான் விரும்பாமையை அவன் உணருமாறும் தோழிக்குக் கூறுவாளாய்க் கூறியது என்றவாறு.

(உ) தலைவன் இரவுக்குறிக்கண் வருதலை மறுத்து வரைவு கடாவுதற் பொருட்டுச் சிறைப்புறத்தே நின்ற தலைவன் கேட்டற் பொருட்டுத் தோழிக்குக் கூறுவாள் போன்று கூறியதெனினுமாம் என்றவாறு.

**(இ - ம்.)** (க) இதற்கு "மறைந்தவற் காண்டல்" என்னும் நூற்பாவின்கண் (தொல். களவி - உ0) "அவனளி சிறப்பினும்" எனவரும் விதி கொள்க. (நச்சினார்க்கினியரும் இதற்கிதனைக் காட்டினர்).

(உ) இதற்கு, "நாற்றமும் தோற்றமும்" எனவரும் நூற்பாவின்கண் (தொல். களவி - உரு) "களனும்......அனைநிலையால் வரைதல் வேண்டினும்" எனவரும் விதிகொள்க,

இருள்கிழிப் பதுபோல் மின்னி வானம்
துளிதலைக் கொண்ட நளிபெயல் நடுநாள்
மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்
பொன்னெறி பிதிரிற் சுடர வாங்கிக்
ரு குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை
இரும்புசெய் கொல்லெனத் தோன்றும் ஆங்கண்
ஆறே அருமர பினவே யாறே
சுட்டுநர்ப் பனிக்குஞ் சூருடை முதலைய
கழைமாய் நீத்தம் கல்பொரு திரங்க
க0 அஞ்சுவந் தமியம் என்னாது மஞ்சுசுமந்
தாடுகழை நரலும் அணங்குடைக் கவாஅன்
ஈருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய
இருங்களி றட்ட பெருஞ்சின உழுவை
நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த
கரு மேய்மணி விளக்கின் புலர ஈர்க்கும்
வாள்நடந் தன்ன வழக்கருங் கவலை
உள்ளுநர் உட்கும் கல்லடர்ச் சிறுநெறி
அருள்புரி நெஞ்சமோ டெஃகுதுணை யாக

வங்தோன் கொடியனும் அல்லன் தந்த
உ0 நீதவ றுடையையும் அல்லை நின்வயின்
ஆனு அரும்படர் செய்த
யானே தோழி தவறுடை யேனே.

—எருமை வெளியனார் மகனார் கடலனார்.

(மோகமானக் கடலார் என்றும் பாடம்.)

(உரை)

க - கூ0: இருள்.........என்னுது

(இ - ள்.) தோழி - தோழி கேள்; வானம் இருள் கிழிப்பது போல் மின்னி - முகில்கள் உலகைக் கவிழ்ந்து மூடியுள்ள இருள் என்னும் கரிய திரைச்சீலையைக் கிழிப்பது போன்று மின்னுதலைச் செய்து; துளிதலைக்கொண்ட நளிபெயல் நடுநாள் - துளிகளைத் தம்மிடத்தே கொண்டுள்ள செறிந்த மழையையுடைய நடுயாமத்தே; மின்மினி மொய்த்த முரவு வாய்ப் புற்றம் பொன் எறி பிதிரிற் சுடர வாங்கி - மின்மினிப் பூச்சிகள் மொய்த்துள்ள சிதைவுடைய வாயையுடைய புற்றினை அம்மின்மினிகள் காய்ச்சப் பட்ட இரும்பினைப் பட்டடையிலிட்டுச் சம்மட்டியாற் புடைக்கும் பொழுது சிதறுகின்ற தீப்பொறிகள் போன்று நாற்றிசையும் சிதறியோடும்படி கையால் அகழ்ந்து மண்ணைப் பறித்துப் பின்னர்; குரும்பி கெண்டும் - அதனகத்தேயுள்ள குரும்பியைத் தோண்டித் தின்னுகின்ற; பெருங்கை ஏற்றை - பெரிய கையையுடைய ஏற்றைக் கரடியானது; இரும்பு செய் கொல் எனத் தோன்றும்-இரும்பினுற் கருவிகள் செய்கின்ற கொல்லனைப் போல் தோன்றுதற்கிடனான அக்காட்டின் கண்ணே; என்க.

(வி - ம்.) கிழிப்பது என்பதனுல் இருளாகிய திரையை என்க. வானம்; ஆகுபெயர்: முகில். நளி - செறிவு; குளிருமாம். புற்றின் மேல் இரவில் மின்மினி மொய்த்து இரைதேர்தல் இயல்பு. முரவுவாய்- சிதைந்த வாய். மழை பொழிதலாலே புற்றின் வாய் முரவுவாயாயிற்று. புற்றம் என்புழி அம்: சாரியை. இசைநிறை எனினுமாம். கரடி கையாலகழ்ந்து மண்ணைப் புறத்தே தள்ளும்பொழுது அதன் வாயின் மொய்த்துள்ள மின்மினி நாற்புறமும் விரைந்து பறந்துபோதல் பொன் எறியுங்காற் றெறிக்கும் தீப்பொறிகள் போன்று தோன்றும் என்றவாறு. பொன் - இரும்பு. எறிதல் பட்டடையிலிட்டுச் சம்மட்டியாற் புடைத்தல். ஏற்றை - கரடி. ஏற்றை (ஆண்கரடி) இதற்குப் பொன்செய் கொல்லன் உவமை: இவ்வுவ்மையின் சிறப்புணர்ந்து மகிழ்க.

## எ - கரு : ஆறே.........ஈர்க்கும்

(இ - ள்.) ஆறு அருமரபின - இயங்குதற்குரிய வழிகள் தாமும் காண்டற்கரிய முறைமையினையுடையனவாம்; யாறு கழைமாய் நீத்தம் கல் பொருது இரங்க சுட்டுநர்ப் பனிக்கும் சூர் உடை முதலைய - இடைக்கிடந்த காட்டியாறுகள் தாமும் ஓடக்கோலை மூழ்குவிக்கும் வெள்ளப்பெருக்கெடுத்துக் கற்களிலே மோதிமறிந்து முழங்காநிற்ப நினைத்துப்பார்ப்பவரையும் நடுங்கச் செய்கின்றஅச்சத்தைத் தருதலுடைய முதலைகளையும் தம்மிடத்தே யுடையன; தமியம் அஞ்சுவம் என்றது - யாமும் தமியமாய் இருத்தலின் அஞ்சி அமையற்பாலம் என்று கருதி அமைந்திராமல்; மஞ்சு சுமந்து ஆடுகழை நரலும் அணங்கு உடைக் கவாஅன் - முகிலைச் சுமந்து அசைகின்ற மூங்கில்கள் ஒலிக்கின்ற தீண்டி வருத்தும் தெய்வங்களையுடைய பக்க மலையிலே; ஈர் உயிர் பிணவின் வயவுப்பசி களைஇய - சூலுடைய பெண் புலியினது துன்பமிக்க பசியைத் தீர்த்தற் பொருட்டு; இருங்களிறு அட்ட பெருஞ்சின உழுவை - பெரிய களிற்றியானையைக் கொன்ற பெரிய வெகுளியையுடைய ஏற்றைப் புலியானது; நாம நல் அராக் கதிர்பட உமிழ்ந்த மேய் மணி விளக்கில் புலர ஈர்க்கும் - அச்சந் தருகின்ற நல்லபாம்பு ஒளியுண்டாம்படி உமிழ்ந்திட்ட தான் மேய்தற்குக் கருவியான மணியாகிய விளக்கொளியிலே குருதி படிந்து வருமாறு அக்களிற்றியானையை இழுத்துச் செல்லுமிடமான; வாள் நடந்தன்ன வழக்கு அருங் கவலை - வாளினது வாயின் மேல் நடத்தல் போன்று நடத்தற்கு அருமை யுடைமையாலே; உள்ளுநர் உட்கும் கல் அடர்ச்சிறுநெறி - ஆறு செல்லநினைப்போர் பெரிதும் அஞ்சுகின்ற கூர்த்த பருக்கைக் கற்கள் செறிந்த சிறிய வழியின்மேல்; அருள்புரி நெஞ்சமோடு - நந்துயர் தீர்த்தருள வேண்டும் என்னும் நன்னர் நெஞ்சத்தோடு; எஃகு துணையாக - தனது வேற்படையொன்றே தனக்கு வழித்துணையாக அமைய; வந்தோன் - வந்த நங் காதலன்; கொடியனும் அல்லன் - கொடியவனும் ஆகின்றிலன்; தந்த நீ தவறு உடையையும் அல்லை - அவனை இக் கொடுநெறிக்கண் இரவுக் குறியிடத்தே வருவித்த நீதானும் தவறு செய்தாய் என்பதற்கும் வழியில்லை; நின்வயின் ஆறு அரும்படர் செய்த யானே தவறுடையேன் - நின்பால் ஒழிவின்றித் தீர்த்தற்கரிய துன்பத்தைச் செய்த யானே தவறு செய்தேன் ஆகின்றேன் காண்.

(வி - ம்.) இதனைத் தலைவி கூற்றாகக் கொள்வார் "யான் அவனது பிரிவாற்றாமையாலே பெரிதும் துன்புறுமாற்றாலே உனக்கு அரும்படர் செய்தமையாலே நீ அவனை இரவுக்குறிக்கண் வருவித்தாய், அவனும் அருள்புரி நெஞ்சமொடு அஞ்சுவம் தமியம் என்றது இங்ஙனம் உள்ளுநர்

உட்கும் கல்லடர்ச் சிறு நெறிக்கண் வந்தனன் ஆதலாலே யானே தவறுடையேன்'' எனத் தலைவி கூறினள் என்று கூறிக்கொள்க.

இனி, தோழி கூற்றாயின் யானே அவனுக்கு நின்னைக் குறை நயப்பித்தேன் அதனால் நீயும் அவனுக்கு அருள்தந்தனை. பின்னர் அவனும் வரைதற்கண் கருத்தின்றித் திரிவானை அருள்புரி நெஞ்சமொடு இருள் நெறிக்கண் வருமாறு செய்வித்தேனாகிய யானே தவறுடையேன் என்றுளாகக் கொள்க. இதுகேட்ட தலைவன் நம்பொருட்டு இந்நல்லாரிருவரும் மிகவும் துன்புறுகின்றனர், ஆதலின் இனி யான் வரைந்து கொள்வல் எனத் துணிதலே இதனாற் போந்த பயனும் என்க.

ஈருயிர்ப் பிணவு - சூலுடைய பெண்புலி. வயவுப்பசி -வேட்கை மிக்க பசி. நாம் - அச்சம். நல்லரா - நல்லபாம்பு. இது தன் மிடற்றிலுள்ள மணியை உமிழ்ந்திட்டு அதன் ஒளியிடத்தே இரைதேடும் என்பதோர் உலகுரை கருதிற்று.

**உள்ளுறை உவமம்:** புலி துணை புறந்தருதற்குப் பிறவற்றைத் தீங்கு செய்யும் பாம்பும் அதற்குத் துணையாயினாற்போல, நீயும் குடியோம்பற் செய்தி காரணமாக வரைவொடுவரிற் கடுஞ்சொற் சொல்லுகிற பேரும் இன்சொற் சொல்லி வரைவுடம்படுவர் என்பதாம்.'' இது பழைய வுரையிற் கண்டது.

இனி, இதனை—தோழி! வானம் துளிதலைக்கொண்ட நடுநாள் ஆறு அருமரபின, யாறு முதலைய; அணங்குடைக் கவாஅன் பிணவின் பசி களைஇய களிறட்ட உழுவை அராமணி விளக்கில் ஈர்க்கும் உட்கும் நெறி வந்தோன் கொடியனும் அல்லன். நீயும் தவறுடையை அல்லை, யானே தவறுடையேன் என இயைத்திடுக.

**(பா. வே.)** ௬. தோன்றி யாங்கண். கஅ. புலாலையிர்.

## செய்யுள் ௭௩

**திணை :** பாலை.

**துறை :** தலைமகன் பொருள்வயிற் பிரிகின்றான். குறித்த பருவவரவு கண்டு அழிந்த தலைமகட்குச் சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது—தலைவன் பொருளீட்டற்குத் தலைவியைப் பிரிந்து போகும்பொழுது நான் கார்ப்பருவத் தொடக்கத்தே மீள்வல் வருந்தற்க என்று சொல்லிப் பிரிந்தானாக, அவனது பிரிவாற்றாது தலைவி பெரிதும் வருந்தியிருப்ப, அவ்வப்போது ஆற்றுவித்த தோழி தலைவன் கூறிய கார்ப்பருவ வரவு கண்டு தலைவியை அழைத்து அப்பருவ வரவு காட்டி இனி வருந்தாதே கொள், நம்பெருமான் இன்னே வருவர் என்பது படச் சொல்லியது என்றவாறு.

**(இ - ம்.)** இதனை, "பெறற் கரும் பெரும் பொருள்'' எனவரும் நூற்பாவின்கண் (தொல். கற்பி - ௯) 'பிறவும் வகைபட வந்த கிளவி' என்பதனா லமைத்திடுக.

பின்னொடு முடித்த மண்ணா முச்சி
நெய்கனி வீழ்குழல் அகப்படத் தைஇ
வெருகிருள் நோக்கி அன்ன கதிர்விடு
பொருகாழ் முத்தம் இடைமுலை விளங்க
௫ அணங்குறு கற்பொடு மடங்கொளச் சாஅய்
நின்னோய்த் தலையையும் அல்லை தெறுவர
என்னா குவள்கொல் அளியள் தானென
என்னழி பிரங்கும் நின்னொடி யானும்
ஆறன் றென்னா வேறல் காட்சி
௧௦ இருவேம் நம்படர் தீர வருவது
காணிய வம்மோ காதலந் தோழி
கொடிபிணங் கரில இருள்கோள் நாகம்
மடிபதம் பார்க்கும் வயமான் துப்பின்
ஏனலஞ் சிறுதினைச் சேனோன் கையதைப்
௧௫ பிடிக்கை அமைந்த கனல்வாய்க் கொள்ளி
விடுபொறிச் சுடரின் மின்னிஅவர்
சென்ற தேஎத்து நின்றதால் மழையே.

—எருமை வெளியனார்.

(உரை)

௧ – ௧௧ : பின்னொடு..........தோழி

(இ - ள்.) பின்னொடு முடித்த - பின்னுதன்மாத்திரையாய் முடிக்கப்பட்ட ; மண்ணா முச்சி - கை செய்யப்படாத கொண்டையிலே ; நெய்கனி வீழ்குழல் அகப்பட - எண்ணெய் கனியத் தாங்குதற்கியன்ற குழலும் அகப்படும்படி ; தைஇ - கட்டி ; வெருகு இருள் நோக்கி அன்ன கதிர் விடுபு முத்தம் ஒரு காழ் முலை இடை விளங்க - (மங்கலங் கருதி அணியப்பட்ட) காட்டுப்பூனை இருளிடத்தே விழித்துப் பார்த்தாற்போலே ஒளி விடுகின்ற முத்துக்களாலியன்ற ஒற்றை வடம் முலைமேற் கிடந்து திகழா நிற்ப ; அணங்கு உறுகற்பொடு - தெய்வத்தன்மை யுடைய கற்புடைமையோடு ; மடம்கொள - காண்போர் இவள் இன்னள் என்று அறியாமை எய்துமாறு பெரிதும் மெலிந்து ; நின்னோய்த் தலையையும் அல்லை - நீ எய்துகின்ற பிணியிடத்தே மட்டும் வருந்தியிருப்பாயும் அல்லை ; தெறுவர - என்னிலை நோக்கி நினக்கு அச்சம் வருதலாலே; அளியள் தான் என்னாகுவள் கொல்-

நம்மால் அளிக்கத்தக்க இவள்தான் நம் பெருமானுடைய பிரிவாற்றாமையாலே என்னாகுவளோ? அறிகின்றிலேனே என்று; என் அழிபு இரங்கும் - என்னுடைய அழிவுக்குப் பெரிதும் இரங்குகின்ற; நின்னொடு - உன்னோடு; ஆறு அன்று என்ற - நீ இங்ஙனம் வருந்துதல் நன்னெறிப்பாற்பட்டதன்று என்று நின்னைத் தேற்றாமைக்குக் காரணமான, இல்லாத வேறு அல் காட்சியானும் - நின் காட்சிக்கு மாறல்லாத காட்சியையே காணும் யானும் ஆகிய; நம் இருவேம் படர் தீர - நம்மிருவருடைய துன்பமும் ஒருங்கே தீரும்படி; வருவது - நம் பெருமான் வருவதற்குரிய அறிகுறியை; காணிய வம் - இருவேம் காண்டற்கு என்னோடு வருதி! அதுதான் யாதெனின்; என்க.

(வி - ரை.) பின்னுதல் மாத்திரையோடு பிறிதியாதும் ஒப்பனை செய்யாமல் முடித்த முச்சி என்றவாறு. மண்ணாமுச்சி - நீராடுதல் இல்லாத உச்சி எனினுமாம். நெய்கனி வீழ் குழல் என்றது ஐம்பாலில் குழல் என்பதற்குரிய அடைமொழிகள். குழலாக விடவேண்டிய கூந்தலையும் கொண்டையோடு சேர்த்துக்கட்டி என்றவாறு. இதனாற் கூறியது ஐம்பால் என்னும் பாகுபாடின்றிக் குழலை முச்சியாகவும் பின்னலை முடியாகவும் வேண்டியவாறே கட்டி என்பதாம். வெருகு - காட்டுப்பூனை. இதன் கண்கள் இருளில் பெரிதும் ஒளியுடையனவாகவும் வட்டமாகவும் இருக்கும். ஆதலின் முத்திற்கும் ஒளிக்கும் உவமையாயிற்று. அணங்கு - அருந்ததி என்பாருமுளர். மடங்கொள சாஅய் - நென்னல் கண்ட திருமேனி இன்று பிறிதாய் நிலைதளர்தலின் இவளைக் கண்டோர் தலைவி என்றறியாதபடி மடமையைச் செய்யும்படி மெலிந்து என்றவாறு. நின் நோய்க்கு வருந்துவதோடன்றி என்னோய்க்கும் வருந்துகின்றாய். ஆதலின் நின் வருத்தம் இருமடங்காகின்றது என்பது கருத்து. ஆறன்று - தலைவன் பிரிவை ஆற்றியிருப்பதே மகளிர்க்கு நல்லாறு என்று கூற வேண்டிய யான் அங்ஙனம் கூறமாட்டாமல் நீ வருந்துமாறே யானும் வருந்துகின்றேன் என்றிரங்கியபடியாம். இதற்குக் காரணம் நின்னறிவு கண்டதையே என்னறிவும் காண்பதேயாம் என்றவாறு. எனவே, பிரிவாற்றாமை உனக்கு எத்துணையுளதோ அத்துணையும் எனக்கும் உளது என்றாளாயிற்று. இருவருடைய படரும் ஒன்றே. அப்படர் தீர்தற்கு மருந்து அவர் வரவு, அவர் வருவதனை: காணிய வம் - காண்டற்கு வருவாயாக! இனி அவர் இன்னே வருவர் என்றபடியாம். வருவது - வருவதற்குரிய அறிகுறி. அஃது இனிக் கூறப்படும்.

கஉ - கஎ: கோடி..........மழையே

(இ - ள்.) கொடி பிணங்கு அரில - பூங்கொடிகள் பின்னிப் படர்ந்துள்ள குறுங்காட்டின் கண்ணே; இருள்கொள் நாகம் மடி பதம் பார்க்கும் - இருண்ட நிறத்தையுடைய யானை சோர்வுற்றுக் கிடக்கும் செவ்வியை ஆராய்கின்ற அரியேற்றின் வலிமை போன்ற வலிமையையுடைய; ஏனலம் சிறுதினைச் சேணோன் - ஏனல் என்னும் அழகிய சிறிய தினைப்புனத்தைக் காக்கின்ற பரணிடத்தோனாகிய

கானவனது; கையதை கைப்பிடி அமைந்த கனல்வாய்க்கொள்ளி விடு பொறிச் சுடரின் மின்னி - கையின் கண்ணதாகிய கைப்பிடி அமைந்துள்ள தீயைத் தன்னிடத்தே கொண்டுள்ள கொள்ளிக் கட்டையானது வீசப்படும்பொழுது தெறிக்கின்ற தீப்பொறிகளைப் போன்று மின்னுதலைச் செய்து; அவர் சென்ற தேஎத்து மழை நின்றது - நம்பெருமான் சென்ற திசையிலே மழையானது இறங்கி நிலைபெற்றது ஆதலான் அவர் இப்பொழுதே வருவர் காண் என்பதாம்.

(வி - ம்.) கொடிகள் பிணங்கிய குறுங்காட்டினூடே யானைகள் தான் சோர்ந்திருக்கும் செவ்வியைப் பார்த்து மறைந்து நிற்றற்கிடனுை எனலுமாம். கைப்பிடி - பிடிக்கை என மாறிநின்றது. சேணோன் - பரணிடத்துள்ள கானவன். அவன் யானை முதலியவற்றின் வரவு காண்டற்குக் கைக்கொள்ளியை வீசி ஒளி பெருக்குங்கால் தெறிக்கும் சுடர் மின்னலுக்குவமை. தேஎம் - திசை; நாடுமாம். நம்பெருமான் 'கார் வருமுன் என் தேர்வந்து நம்முன்றிலில் நிற்கும்' என்று கூறிப்போந் தமையால் அங்கு மழைபெய்கின்றது. ஆதலால் இப்பொழுதே வருவர் அவர் வருவது காண்டற்கு வருதி என்றவாறு.

இனி இதனை, தோழி நீதானும் நின்னைய்த் தலையையும் அல்லை என்னழிபும் இரங்குதி அங்ஙனம் இரங்கும் நீயும் யானும் ஆகிய இருவேமும் படர்தீர அவர் வருவது காணிய வம்மோ எற்றாலறிதி யெனின் அவர் சென்ற தேஎத்து மழைநின்றது, ஆதலான் என இயைத்திடுக.

(பா. வே.) உ. நெடுவீழகப்பட. கூ. தெய்ய.

## செய்யுள் எச

**திணை:** முல்லை.

**துறை:** தலைமகன் பிரிவின்கண் அழிந்த கிழத்தி வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.

(து - ம்) அஃதாவது—தலைவன் தன் மன்னனுக்குப் பகைவர் போர் வந்துற்றுழி அவனுக்குத் துணையாகத் தலைவியைப் பிரிந்து சென்றானாக, அப்பிரிவாற்றாமையால் தலைவி பெரிதும் வருந்துவாளைத் தோழி நீ ஆற்றி யிருத்தலே பெருந்தகைமையாம் என வற்புறுத்தினள்; அதுகேட்ட தலைவி தான் ஆற்றுதற் கேலாமைக்குக் காரணம் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "அவனறிவு ஆற்ற அறியுமாகலின்" என வரும் நூற்பாவின்கண் "கிழவனை மகடூஉப் புலம்பு பெரிதாகலின், அலமரல் பெருகிய காமத்து மிகுதியும்" என்பதனாற் கொள்க.

**வினைவலம் படுத்த வென்றியொடு மகிழ்சிறந்து**
**போர்வல் இளையர் தாள்வலம் வாழ்த்தத்**

தண்பெயல் பொழிந்த பைதுறு காலைக்
குருதி உருவின் ஒண்செம் மூதாய்
௫ பெருவழி மருங்கில் சிறுபல வரிப்பப்
பைங்கொடி முல்லை மென்பதப் புதுவீ
வெண்களர் அரிமணல் நன்பல தாஅய்
வண்டுபோ தவிழ்க்கும் தண்கமழ் புறவில்
கருங்கோட் டிரலை காமர் மடப்பிணை
௧௦ மருண்டமான் நோக்கம் காண்டொறும் நின்னினைந்து
திண்டேர் வலவ கடலெனக் கடைஇ
இன்றே வருவர் ஆன்றிகம் பனியென
வன்புறை இன்சொல் நன்பல பயிற்றும்
நின்வலித் தமைகுவன் மன்னோ அல்கல்
௧௫ புன்கண் மாலையொடு பொருந்திக் கொடுங்கோல்
கல்லாக் கோவலர் ஊதும்
வல்வாய்ச் சிறுகுழல் வருத்தாக் காலே.

—மதுரைக் கவுணியன் பூதத்தனார்.

*(மதுரைக் கவுணியன் மூத்தனார் என்றும் பாடம்.)*

## (உரை)

### க - ௮ : வினைவலம்...........புறவின்

(இ - ள்.) *வினைவலம் படுத்த வென்றியொடு மகிழ்சிறந்து-தோழி ஈதொன்று கேள்; நீதானும் போர்மேற் சென்ற நம் பெருமான் தாம் மேற்கொண்ட போர் வினையை வெற்றி யுடைத்தாக முடித்து அவ் வெற்றி காரணமாகத் தம் நெஞ்சினுள்ளே பிறக்கும் மகிழ்ச்சியாலே சிறப்புற்று; போர்வல் இளையர் தாள் வலம் வாழ்த்த-போர்த் தொழிலின் வன்மை யுடைய தம் போர் மறவர் தாமே தமது முயற்சியாலுண்டான வெற்றியை விளம்பித் தம்மை வாழ்த்தா நிற்ப; தண் பெயல் பொழிந்த பைது உறுகாலை-தாம் குறித்துச் சென்ற கார்ப்பருவம் வந்துற்றுத் தண்ணிய மழையைப் பொழிதலாலே நந்தம் முல்லைப் பரப்பெல்லாம் பசுமை பெறுகின்ற இப்பொழுதே; குருதி உருவின் ஒள் செம்மூதாய் பெருவழி மருங்கில் சிறு பல வரிப்ப - குருதி நிறத்தை ஒத்த ஒளிய செந்நிறமுடைய இந்திர கோபங்கள் ஊர்ந்து அவ்ர் தம் தேர் வருகின்ற பெரிய வழியின்*

இருபக்கங்களினும் சிறிய பற்பல ஓவியங்களைத் தோற்றுவியா நிற்ப; பைங்கொடி முல்லை மெல் பத நல்பல புது வீ - பசிய கொடியையுடைய முல்லையினது மெல்லியல்புடைய அழகிய பலவாகிய புதிய மலர்கள் தாம்; வெள்களர் அரிமணல் தாஅய் - வெள்ளிய களரிடத்தே அறல்பட்ட மணலின் மேலே உதிர்ந்து பரவிக்கிடவா நிற்பவும்; வண்டு போது அவிழ்க்கும் - வண்டினங்கள் அவற்றில் தேனுண்ணுமல் கொடியின்கண் உள்ள நாளரும்புகளைக் கிண்டி மலர்விக்கும்; தண் கமழ் புறவில் - தண்ணிய மணங்கமழா நின்ற முல்லைப்பரப்பிலே என்க.

**(வி - ம்.)** நம் பெருமான் கார்ப்பருவத் தொடக்கத்தே மீண்டு வருவல் அதுகாறும் வருந்தற்க என்று நம்மைத் தேற்றிச் சென்றாரல்லரோ? அவர் உரை பொய்ப்ப இருப்பரோ? இரார். இன்னே வருவர் என்றறிவுறுத்தற்குக் கார்ப்பருவ வரவினை விதந்தோதினள். மேலும் அவர் சென்ற போர்தொறும் வென்றியே விளைக்கும் பேராற்றல் உடையராதலின் அவர் மேற்கொண்ட வினையையும் வலம்படுத்து அவ் வென்றியொடு மகிழ்சிறந்து இளையர் வாழ்த்த இன்னே வருவது தேற்றம் என்று ஆற்றுவிப்பாளாயினள். ஈண்டுக் கார்ப்பருவத்தாலே கவினுற்ற முல்லைப் பரப்பினைச் சொல்லோவியமாக இப்புலவர் பெருமான் தீட்டியிருத்தலுணர்ந்தின்புறற் பாற்று.

### கூ - கச: கருங்கோட்டு..........மன்னே

**(இ - ள்.)** கருங்கோட்டு இரலை காமர் மடப்பிணை மான் மருண்ட நோக்கம் காண் தொறும் நின் நினைந்து - கரிய கொம்பினையுடைய இரலை மானிற் கலைமான்களைத் தாம் விரும்புதற்குக் காரணமான இளைய பிணைமான்கள் நோக்கா நின்ற மயக்கமுடைய நோக்கத்தை நம்பெருமான் யாண்டும காண்பரல்லரோ? அங்ஙனம் காணும் பொழுதெல்லாம் அவர் நின்னை நினைந்து; திண்தேர் வலவ கடவு எனக் கடைஇ - திண்ணிய தேரைச் செலுத்துகின்ற பாகனே! நந்தேரினை விரைந்து செலுத்துதி எனக் கூறிச் செலுத்துவித்து; இன்றே வருவர் - இற்றைநாளே வந்து சேர்வர்காண்!; பனி ஆன்றிகம் என - அவர் வருமளவும் யாம் நமது துன்பத்தை மறந்து அமைவேம் என்று; வன்புறை இன்சொல் நல்பல பயிற்றும் - வற்புறுத்தலாகிய சொல்லினும் அன்புறுதகுந வாகிய இனிய சொற்கள் நல்லன பலவற்றைப் பலகாலும் கூறுகின்ற; நின் வலித்து - நின் சொல்லை உறுதியாகப்பற்றி; அமைகுவென்மன் - யான் ஆற்றியிருப்பேன் காண்!; ஆயினும் அங்ஙனம் இருக்கும் வலியிலேன்; என்க.

**(வி - ம்.)** இரலை - மான் வகையுள் ஒன்று. பின்னர்ப் பிணைமான் கூறுதலின் இரலையில் ஆண்மான் என்க. இரலை என்பதே கலைமானைக்

குறிக்கும் என்பாருமுளர். காமர் - விருப்பம். கலைமான், விரும்புதற்குரிய பிணைமான், அதனைக் காமுற்றுப் பார்க்கும் மருண்ட பார்வை எனவே ஒன்றை ஒன்று காமுற்று நோக்கும் என்பதாயிற்று. இவற்றை நோக்கவே நம் பெருமான் நின்னை நினைவது தேற்றம் என்றவாறு. இனி "வினைவலம் ... என்பது தொடங்கி ஆன்றிகம் பனி" என்னுந்துணையும் தோழி தன்னை ஆற்றுவிப்பாள் கூறியவற்றையே தலைவி கொண்டு கூறியபடியாம். ஆன்றிகம்: வினைத்திரிசொல். அமைவேம் என்றவாறு. பனி - துன்பம்; காரணத்தைக் காரியமாகக் கூறியபடியாம். இதன்கண், கருங்கோட்டிரலை காமர் மடப்பிணை மருண்டமாநோக்கம் காண்டொறும் நின்னை நினைவர் என்றது அன்புறு தகுந இறைச்சியிற் சுட்டி வற்புறுத்திய படியாம். இதனை,

> "அன்புறு தகுந இறைச்சியிற் சுட்டலும்
> வன்புறை யாகும் வருந்திய பொழுதே"

எனவரும் தொல்காப்பியத்தானு மறிக (பொருளியல்-கூஎ). மன்: ஒழியிசை.

### கச - கஎ: அல்கல்..........வருத்தாக்காலே

(இ - ள்.) அல்கல் புன்கண் மாலையொடு பொருந்தி-நாள்தோறும தனித்துறைவார்க்குக் கொலைக்களத்தேதிலர் போலத் துன்பத்தையே கொண்டு வருகின்ற இவ்வந்தி மாலைப் பொழுதோடு ஒருசேரப் பொருந்தி; கொடுங்கோல் கல்லாக் கோவலர் ஊதும்-வளைந்த கோலையும் கல்லாமையையும் உடைய ஆயர்கள் ஊதுகின்ற, வல்வாய்ச் சிறுகுழல் - வலிய வாயையும் சிறுமையையும் உடைய வேய்ங் குழலினது இசை வந்து என் செவித்தொளை வழியாகப் புகுந்து என் பேதை நெஞ்சத்தை வருத்தா தொழியுமேல் ஆற்றியிருத்தலும் கூடுங்காண்! என்பதாம்.

(வி - ம்.) காம நோய் மாலையில் மலர்ந்து வருத்து மியல்புடைத்தாகலின் அவ்வருத்தத்தை மாலைக் கேற்றினள். துன்பத்தின் மேலும் துன்பமாய்க் குழலிசை வருகின்றது என்பாள், புன்கண் மாலையொடு பொருந்தி வரும் என்றாள். அதன் இசை தன்னை வன்மையாக வருத்தும் என்பாள் வன்மையைக் குழலின் வாய்க்கு அடைபுணர்த்தாள். துன்புறுவார்க் கிரங்காமை சிறுமைக்குணம் என்பது போதரச் சிறுகுழல் என்றாள். இனி அதனை ஊதும் கோவலரும் கொடியர் என்பதுபடக் கொடுங்கோலர் என்றாள். இனி, மாடு மேய்க்கக் கற்றதன்றி அறநூல் கல்லாதார் என்பதுபடக் கல்லாக் கோவலர் என்றாள்; அறநூல் கற்றவராயின் தஞ்செயலால் பிறரை வருத்தா தொழிவர் என்பது கருத்து.

வருத்தாக்கால் ஆற்றியிருப்பன் எனவே ஆற்றியிருத்தலே என் கடமை என்பது யானும் அறிகுவன் என்றாளாயிற்று. இப்பொழுது அஃது என்வரைத்தன்று என்பது குறிப்பு.

*இனி, இதனை, தோழி! இன்றே வருவர் பனி ஆன்றிகம் எனப் பயிற்றும் நின் வலித்தமைகுவன். ஆனால் அல்கல் கோவலர் ஊதும் குழல் வருத்தாக்கால் அது வருத்துதலின் அமையகில்லேன் என இயைபு காண்க.*

## செய்யுள் எரு

**திணை:** *பாலை.*

**துறை:** *பொருள்வயிற் பிரிவரென வேறுபட்ட தலைமகட்குப் பிரியேனெனத் தலைமகன் சொல்லியது.*

**(து - ள்.)** *அஃதாவது—தலைவன் பொருள்வயிற் பிரிய நினைப் பதனைக் குறிப்பாலுணர்ந்த தலைவி கவலையுற்று மெய்வேறுபட்டுப் பிரிவாற்றுமையாலுண்டாந் துன்பத்தினை உலகின் மேலிட்டுக் குறிப்பால் தலைவன் கேட்பக் கூறினளாக, அதுகேட்ட தலைவன் இவள் இப்பொழுது யாம் பிரியின் ஆற்ருது இறந்துபடுவள் என்று கருதி யான் பிரியேன் என்று கூறிச் செலவழுங்கியது என்றவாறு.*

*(குறிப்பு - இதனைத் தோழி கூற்ருகக் கருதுவாருமுளர். அது பொருத்தமாகத் தோன்றவில்லை; தலைவன் கூற்ருகக் கோடலே நேரிதாம்.)*

**(இ - ள்.)** *இதற்கு "கரணத்தின் அமைந்து முடிந்த காலை" என வரும் நூற்பாவினகண் (தொல் - கற்பி - ரு) "வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானும்" எனவரும் விதி கொள்க.*

அருளன் ருக ஆள்வினை ஆடவர்
பொருளென வலித்த பொருளல் காட்சியின்
மைந்துமலி உள்ளமொடு துஞ்சல் செல்லாது
எரிசினந் தவழ்ந்த இருங்கடற் றடைமுதல்
ரு　கரிகுதிர் மரத்த கான வாழ்க்கை
அடுபுலி முன்பின் தொடுகழல் மறவர்
தொன்றியல் சிறுகுடி மன்றுநிழல் படுக்கும்
அண்ணல் நெடுவரை ஆமறப் புலர்ந்த
கல்நெறிப் படர்குவ ராயின் நன்னுதல்
க0　செயிர்தீர் கொள்கைச் சின்மொழித் துவர்வாய்
அவிர்தொடி முன்கை ஆயிழை மகளிர்
ஆரம் தாங்கிய அலர்முலை ஆகத்து
ஆராக் காதலொடு தாரிடைக் குழையாது
சென்றுபடு விறற்கவின் உள்ளி என்றும்
கரு　இரங்குநர் அல்லது பெயர்தந் தியாவரும்

தருநரும் உளரோஇவ் வுலகத் தானென
மாரி ஈங்கை மாத்தளிர் அன்ன
அம்மா மேனி ஐதமை நுசுப்பின்
பல்காசு நிரைத்த கோடேந் தல்குல்
உ0 மெல்லியற் குறுமகள் புலந்துபல கூறி
ஆனா நோயை ஆக யானே
பிரியச் சூழ்தலும் உண்டோ
அரிதுபெறு சிறப்பின் நின்வயி னானே.

—மதுரைப் போத்தனார்.

(உரை)

கஎ - உக: மாரி..........குறுமகள்

(இ - ள்.) *மாரி ஈங்கை மாத்தளிர் அன்ன அம்மா மேனி ஐது அமை நுசுப்பின்*-கார்ப்பருவத்தே தளிர்த்த இண்டையினது கரிய தளிரினது நிறம் போன்ற அழகிய கரிய நிறத்தையும் நுண்மையான இடையினையும்; *பல்காசு நிரைத்த கோடு ஏந்து அல்குல்* - பலவாகிய பொற்காசுகளை நிரலாகக் கோக்கப்பட்ட மேகலையையும் உடைய விளிம்புகள் உயர்ந்த அல்குலினையும், *மெல் இயல் குறுமகள்* - மெல்லிய சாயலையும் இளமையினையும் உடைய காதலியே கேள்! என்க.

(வி - ம்.) மாரி - கார்ப்பருவம். ஈங்கை - இண்டங்கொடி. இதன் தளிரின் நிறம் தலைவியி னிறத்திற்குவமை. மா - கருமை. மாமேனி - மாமை நிறம். ஐது - நுண்மையுடையது. காசு - பொற்காசு. குறுமகள் என்பது செலவழுங்குதற்கொரு குறிப்பேதுவுமாகும்.

க - கூ: அருளன்றாக..........படர்குவராயின்

(இ - ள்.) *ஆடவர்* - ஆண் மக்கள்; *அருள் அன்று ஆக*-அருளே உறுதிப் பொருளாகவும் அது பொருளன்று என்று ஆகிவிடும்படி; *ஆள்வினை பொருள் என வலித்த*-அவ்வருளைத் துறந்து ஆள்வினையை மேற்கோடலே உறுதிப் பொருளாகும் என்று துணிதற்குக் காரணமான; *பொருள் அல் காட்சியின்* - மருட்காட்சியுடைமையாலே; *மைந்து மலி உள்ளமொடு* - வலிமைமிக்க ஊக்கத்தோடு; *துஞ்சல் செல்லாது* - மடிந்திராமல்; *எரிசினம் தவழ்ந்த இருங்கடற்று* - தீயினது வெப்பம் தவழ்ந்த பெரிய பாலை நிலத்திலே; *அடைமுதல் கரிகு உதிர்மரத்த* - இலை

முதலியன கரிந்து உதிர்ந்த மரத்தையுடைய; கான வாழ்க்கை - காட்டின் கண்ணே வாழும் வாழ்க்கையினையுடைய; அடுபுலி முன்பின் கழல் தொடு மறவர் தொன்று இயல் சிறுகுடி மன்று - கொல்லுகின்ற புலியை ஒத்த வலிமையையுடைய வீரக் கழல் கட்டிய அடியினையுடைய எயின மறவருடைய பழையதாய் வருகின்ற சிறிய ஊரின்கண் அமைந்த மன்ற முழுதும்; நிழற் படுக்கும் அண்ணல் நெடுவரை - நிழலைப் பரப்புகின்ற பெருமையுடைய நெடிய மலை மிசைச் செல்லுகின்ற; ஆம் அறப் புலர்ந்த - நீர் அறும்படி காய்ந்தொழிந்த; கல்நெறிப் படர்குவராயின் - பரற்கற்களையுடைய வழியிலே செல்லுவாராயின் என்க.

(வி - ர்.) அருளே சிறந்த பொருளாகவும் அதனைப் பொருளாக மதியாமல் ஆள்வினையையே ஆடவர் பொருளாகக் கருதுகின்றனர். அங்ஙனம் கருதுவதற்குக் காரணம் அவர்தம் அறியாமை என்பாள், "அருளன்றாக........பொருளல் காட்சியின்" என்றாள். ஈண்டு,

"அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள"　　　　(குறள் - உ௪௧)

என்றற் றொடக்கத்துத் திருக்குறள்களையும் நோக்குக.

பொருளல் காட்சி - மருட்காட்சி. மைந்து - வலிமை. உள்ளம் - ஊக்கம். துஞ்சல் - மடிந்திருத்தல். கடறு - பாலைநிலம். அடை - இலை. கரிகுபு எனல் வேண்டிய எச்சம் ஈற்றுயிர் மெய் கெட்டது விகாரம். முன்பு-வலி. மறவர் - ஈண்டு எயினமறவர். சிறுகுடி - சிற்றூர். மன்றின்கண்ணே அயலதாகிய நெடிய மலை நிழலைப்பரப்பும் என்றவாறு. மலையின் நீழலன்றிமற்றொரு நீழலுமில்லாத கல் நெறி என்பது கருத்து.

கூ - ககூ: நன்னுதல்...........உலகத்தானேன

(இ - ள்.) நல் நுதல் செயிர்தீர் கொள்கைச் சில்மொழித் துவர் வாய் அவிர் தொடி முன்கை ஆய் இழை மகளிர் - அழகிய நெற்றியினையும் குற்றமற்ற கொள்கையினையும் சிலவாகிய மொழிகளையும் விளங்குகின்ற வளையலணிந்த முன் கையினையும் ஆராய்ந்தணிந்த அணிகலன்களையும் உடைய அவர்தம் காதன் மகளிருடைய; ஆரம தாங்கிய அலர் முலை ஆகத்து ஆராக் காதலொடு தார் இடைக் குழையாது - முத்துமாலை அணிந்த அடி பரந்த முலைகளையுடைய மார்பிடத்தே நுகர்ந்து நுகர்ந்தமையாத பெரிய காதலோடே முயங்குங்கால் கணவரின் மார்பிலணிந்த மலர்மாலை அம்முயக்கிடையே அகப்பட்டுக் குழையாமையாலே; சென்று படு விறல் கவின் உள்ளி - அம் மகளிர்பானின்று அகன்று போயழிகின்ற பேரழகினைப் பின்னர் நினைந்து நினைந்து; இரங்குநர் 'அல்லது - கழிபேரிரக்கம்

கொள்வாருளராதலல்லது; யாவரும் பெயர்ந்து தருநரும் இவ்வுலகத்தான் உளரோ என - யாரேனும் அவ்வழகினை மீட்டுக் கொணர்ந்து கொடுப்போர்தாம் இப்பேருலகத்தே உளராவரோ! என்று கூறி என்க.

(வி - ம்.) "அருளன்றாக என்பது தொடங்கி.........உலகத்தான்" என்னுமளவும் தலைவன் தலைவி கூற்றைக் கொண்டு கூறினான். தலைவி நீயிர் இப்பொழுது பிரிந்தீராயின் பின்னர் எப்பொழுதும் என்னைக் குறித்து இரங்குதல் தேற்றம் என்பாள், அக்கருத்தை உலகத்துமகளிர் மேலிட்டுக் கூறியபடியாம் என்றறிக. தாரிடைக் குழையாது என்றது இடக்கரடக்கு. குழையாது - குழையாமையால் என கவின் சென்று படுதற்கு ஏதுவாக்குக. விறல் - வெற்றி. மகளிர் வெற்றிக்குக் காரணம் கவினே ஆதலால் விறற் கவின் என்றாள். தான் இறந்துபடுதல் தேற்றம் என்பாள், அதனைக் கவினுக்கேற்றிக் கூறனள். இவ்வுலகத்தான் என்புழி மூன்றனுருபு ஏழாவதன்கண் மயங்கிற்று.

உக - உச: புலந்து.........நின்வயினானே

(இ - ள்.) புலந்துபல கூறி ஆனா நோயை ஆக-என்னோடு பிணங்கிப் பற்பலவற்றை முன்னிலைப் புறமொழியாகச் சொல்லி அமையாத துன்பமுடையை ஆக அதனைக் கண்டு வைத்தும்; அரிது பெறு சிறப்பின் நின்வயினான் - இவ்வுலகத்தே அரிதாகப் பெறுதற்கியன்ற பெண்மைச் சிறப்பினையுடைய நின்னிடத்தி னின்றும், பிரிய யான் சூழ்தலும் உண்டோ - பிரிந்து வினைவயிற் செல்ல நினைத்தலும் உளதாகுமோ? ஆகாதன்றே, நீ வருந்தாதே கொள் எனபதாம்.

(வி - ம்.) புலந்து-ஊடி. எனவே முற்கூறியவை எல்லாம் தலைவன் கேட்பவே முன்னிலைப் புறமொழியாகத் தலைவி கூறினமை பெற்றாம்.

இதன்கண் மறவர் சிறுகுடி மன்றத்தை ஆங்குள்ள அண்ணல் நெடுவரை நிழற்படுக்கும் என்றது; அந்த மலைபோன்று யான் பிரிவுத் துன்பத்தாலே இறந்துபடாவண்ணம் நீயும் எனக்கு நினதின்னருளைத் தந்து அளிப்பாயாக என்பது உள்ளுறை உவமமாதலும் உணர்க.

அரிது பெறு சிறப்பு என்றது உலகத்துப் பெண் பிறந்தோர் எல்லாம் பெறுதற்கரிதாக ஒருசிலரே பெறுதற்கியன்ற பெண்மைச் சிறப்புக்கள். அவற்றை—

"கற்புங் காமமும் நற்பா லொழுக்கமும்
மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்"

எனவரும் தொல்காப்பியத்தான் (கற்பி-கக.) உணர்க.

இனி, இதனை "குறுமகள் நீ ஆடவர் பொருளல் காட்சியின் உள்ள மொடு துஞ்சல் செல்லாது கன்னெறிப் படர்குவராயின் சென்றுபடு விறற் கவின் உள்ளி இரங்குநர் அல்லது இவ்வுலகத்துப் பெயர்தந்து தருநரும் உளரோ எனக் கூறி நோயை ஆக நின்வயிற் பிரிய யான் சூழ்தலும் உண்டோ என இயைத்திடுக.

(பா - வே.) துறை: பொருள்வயிற் பிரிவரென வேறுபட்ட தலை மகட்குப் பிரியாரெனத் தோழி சொல்லியது.

## செய்யுள் எசு

**திணை :** மருதம்.

**துறை :** தலைமகனை நயப்பித்துக் கொண்டாளென்று கழறக்கேட்ட பரத்தை தலைமகள் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

(நு - ம்.) அஃதாவது—தலைவன் பரத்தையர் சேரிக்கண் தன் காமக் கிழத்தியாகிய இளம்பரத்தை யொருத்தியின் நாடகம் காண நயந்து சென்றமை அறிந்த தலைவி அப்பரத்தையின் தோழிமார் கேட்ப அவள் ஆடலும் பாடலுங் காட்டி நின்னைப் பற்றிக்கொண்டாள் என்று கூறித் தலைவனோடு ஊடினள். அதனை அறிந்த அப்பரத்தை தலைவியின் தோழிமார் கேட்கும்படி இத்துணையோ செய்குவன் அவனை முழுதும் இனி என்வழிப் படுத்தவும் எண்ணியுளேன் எனச் சூண் மொழிவாள் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, (தொல் - கற்பி - க0) "புல்லுதல் மயக்கும் புலவிக் கண்ணும்" எனவரும் விதிகொள்க. (ஆசிரியர் நச்சினார்க்கினி யரும் இதற்கிதனையே காட்டினர்.)

மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்கத்
தண்டுறை ஊரனெம் சேரி வந்தென
இன்கடுங் கள்ளின் அஃதை களிற்றொடு
நன்கலன் ஈயும் நாண்மகிழ் இருக்கை
ரு அவைபுகு பொருநர் பறையின் ஆனாது
கழறுப என்பவவன் பெண்டிர் அந்தில்
கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்
வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியல்
சுரியலம் பொருநனைக் காண்டி ரோவென
க0 ஆதி மந்தி பேதுற் றினையச்
சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகும்
அந்தண் காவிரி போலக்
கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே.

—பரணர்.

## (உரை)

### க - கூ: மண்கனை.........அந்தில்

(இ - ள்.) மண் கனை முழவொடு மகிழ் மிகத் தூங்க - யாங்கள் ஓரிரவு மண் பூசப்பட்டு முழக்கும் முழக்கத்தையுடைய முழவு முதலிய இன்னிசைக் கருவிகளோடே காண்போர் மிகவும் மகிழ்தற்குக் காரணமான கூத்தாட்டத்தை இயற்றினேமாக; தண் துறை யூரன் எம்சேரி வந்தென - அவ்விசையும் கூத்தும் கேட்டும் கண்டும் களித்தற்கு விரும்பிக் குளிர்ந்த துறையையுடைய தலைவன் எமது சேரிக்கு யாபமையாமலே எழுந்தருளினனாக; அவன் பெண்டிர் - இதனை அறிந்து அவன் மனையுறை மகளிர் எம்பால் அழுக்காறு கொண்டு; இன் கடுங் கள்ளின் அஃதை - இனிமையையும் கடுப்பினையுமுடைய கள்ளினையுடைய அஃதை என்னும் வள்ளற்பெருமான்; களிற்றொடு நன்கலம் ஈயும் மகிழ்நாள் இருக்கை - தன்பால் வந்த பரிசிலர்க்கெல்லாம் களிற்றியானையோடே அழகிய அணிகலங்களையும் பரிசிலாக வழங்குகின்ற மகிழ்ச்சியையுடைய நாளோலக்க மண்டபத்தின் கண்ணே அரியணையில் வீற்றிருக்கின்ற பொழுது குழுமியுள்ள; அவை புகு பொருநர் பறையின் - நல்லவையிலே புகா நின்ற கூத்தரது தடாரிபடறை போன்று; ஆனாது கழறுப என்ப - இடையறாது என்னை இகழ்ந்து தலைவனை இடித்துரைப்பர் என்று எனக்குப் பாங்காயினார் கூறாநிற்பர் என்க.

(வி - ம்.) யாங்கள் எம்மியற்கைக் கிணங்கக் கூத்தும் பாட்டும் இயற்றினேம்; அக்கலைநலங் காமுற்றுத் தண்டுறையூரன தானே எம் சேரி வந்தானல்லது அவனை அவற்றாலே யாம் வசஞ்செய்திலேம் என்பாள், யாம் தூங்க ஊரன் வந்தான் என்றாள். அவன் பெண்டிர் கழறுப என்றது தலைவியைக் குறித்துக் கூறியவாறு. ஈண்டுச் செறலால் ஒருமை பன்மையாயிற்று. கழறுதல் - இடித்துரைத்தல். எனவே தலைவி தலைவனை நோக்கி நின்னைப் பரத்தை தன்னிசையாலும் கூத்தாலும் தன்வயப்படுத்திக் கொண்டனள்; நீ அவள் சேரிக்கே செல்லுக! ஈண்டெம்மில்லம் புகாதே கொள்! என்று கடிந்தனள் என்ற அவள் பாங்காயினார் கூறக்கேட்டனள் என்பது தோனறிற்று. அவள் இடையறாது இங்ஙனம் தன்னை யிகழ்ந்து தலைவனைக் கடிகின்றாள் என்றற்கு அஃதை அவைபுகும் பொருநர் பறையை உவமை எடுத்தோதினள்.

இனி இவ்வேனை உவமையே ஈண்டு உள்ளுறை உவமையாகவும் இப்பரத்தை கூறியது கூர்ந்துணரற் பாலது. என்னை? அஃதை பரிசிலர்க்கு இன்கள்ளும் களிறும் அணிகலமும் வழங்குதல் போன்று யாமும் எபபால் வருகின்ற ஊரனுக்குப் பெண்மை நலமும் கலைநலமும் அளிப்பேம் ஆதலால் அவன் அவளினுங் காட்டில் எம்மையே பெரிதும் விரும்புகின்றான் எனத் தலைவியை இகழ்ந்தாளும் ஆதலறிக.

அந்தில்: அசை.

எ - கரு: கச்சினன்.........யானே

(இ - ள்.) ஆதிமந்தி - பண்டொரு நாள் ஆதிமந்தி என்பவள் தன் கணவனைக் காணப்பெருமல்; கச்சினன் கழலினன் தேம் தார் மார்பினன் வகை அமைப் பொலிந்த தெரியல் சுரியல் அம் பொருநனை காண்டிரோ என - அந்தோ? கச்சணிந்தவனும் கழல் கட்டியவனும் பல்வேறு வகைத் தொழிற்றிறம் அமைந்து பொலிவுற்ற மாலையினையும் சுரிந்த தாடிமயிரினையும் உடைய அழகிய ஆடுகள மகனுகிய என் கணவனை நீயிர் கண்டிரோ? என்று எதிர் வருவோரையெல்லாம் வினவி விடை பெருமையாலே; பேதுஉறறு இனைய - பெரிதும் மயங்கி வருந்தும்படி; சிறை பறைந்து உரைஇச் செங்குணக்கு ஒழுகும் அந்தண் காவிரி போல - அணையை அழித்துக் கரைகளை உராஅய்ந்து மெலித்து நேர் கிழக்காகப் பாய்கின்ற அழகிய குளிர்ந்த காவிரிப் பேரியாறு அவள் கணவனுகிய ஆட்டனத்தியைக் கைக் கொண்டாற் போல; கைக் கொண்டு வலித்தல் சூழ்ந்திசின்-இப்பொழுது யான் ஊரனை முழுதும் கைப்பற்றிக்கொண்டு என்னுடையவனே அவன் என்பதை உறுதி செய்தற்குச் சூளுறவோடு துணிந்துள்ளேன். இதனை அவட்குப் பாஙகாயினுர் அவட்குக் கூறுவாராக! என்பதாம்.

(வி - ம்.) ஆதிமந்தியின் வரலாறு சிலப்பதிகாரத்திற் காணலாம். மேலும் இந்நூலினும் "ஆட்டனத்தி நலனயந்து உரைஇத் தாழிருங்கதுப்பின் காவிரி வவ்வலின் மாதிரந்துழைஇ மதிமருண்டலந்த ஆதிமந்தி" என இவ்வாசிரியரே (பரணர்) ஓதுவர் (அகம் - உஉஉ).

என் பெண்மை நலம் தலைவியின் பெண்மை நலத்தினும் சிறந்தமையாலே தலைவன் தானே என்னை விரும்பி என்மனைக்கு வருகின்ருன். அவனை யான் என் ஆடல்பாடலால் வசஞ்செய்து கொண்டேன் என்பாளாயின் இனி அவனை என்பாலே இருத்தி விடுவேன் அப்பொழுது அவள் என் செய்வள்? என மறம் பேசிய படியாம்.

இனி, இதனை யாம் மகிழ் தூங்க ஊரன் வந்தனன் அவன் பெண்டிர் கழறுப என்ப அங்ஙனமாயின் யான் இனி அவனைக் கொண்டு கைவலித்தல் சூழ்ந்திசின் என இயைத்திடுக.

இதனை அவட்குக் கூறுக என்பது குறிப்பு.

(பா - வே.) க - முழவமொடு. சு. காணீரோ. கக. சிறை பாய்ந்.

## செய்யுள் எஎ

திணை: பாலை.

துறை: தலைமகன் பிரியக் கருதிய நெஞ்சிற்குச் சொல்லி, செலவழுங்குவித்தது.

**(து - ம்.)** அஃதாவது—தலைவியை மணந்துகொண்டு அவளோடு இரண்டறக் கலந்தின்ப மெய்தித் தலைவன் இல்லறந் தலைநிற்குங்கால் அவன் நெஞ்சம் அவனொடு மாறுபட்டு அவனுக்குப் பொருளினது சிறப்பைப் பல்லாற்றானும் எடுத்துக் காட்டி யாமிப்பொழுது இவளைப் பிரிந்து போய்ப் பொருள் ஈட்டிவருதல் வேண்டும் என இடையறாது வற்புறுத்துவதாயிற்று. இதுகண்ட தலைவன் யாமிப்பொழுது இவளைப் பிரிந்து சென்றால் சென்றவிடத்தும் இவளையே நினைந்து வருந்துதலன்றி ஆள்வினை செய்யும் வலியிலேமாதல் ஒருதலை; ஆகவே இப்பொழுது, அக்கருத்தைக் கைவிடுக! என்றேனொன்றி இன்பமே திளைத்து மகிழ்க என்பதுபடத் தன்னெஞ்சிற்குக் கூறிச் செலவு தவிர்ந்தது என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு, "கரணத்தின் அமைந்து முடிந்த காலை" என வரும் நூற்பாவின் கண் (தொல் - கற்பி - ரு) 'வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானும்' எனவரும் விதிகொள்க.

நன்னுதல் பசப்பவும் ஆள்வினை தரீஇயர்
துன்னருங் கானந் துன்னுதல் நன்றெனப்
பின்னின்று சூழ்ந்தனை யாயினன் றின்னாச்
சூழ்ந்திசின் வாழிய நெஞ்சே வெய்துற
ரு இடியுமிழ் வானம் நீங்கி யாங்கணும்
குடிபதிப் பெயர்ந்த சுட்டுடை முதுபாழ்க்
கயிறுபிணிக் குழிசி ஓலை கொண்மார்
பொறிகண் டழிக்கும் ஆவண மாக்களின்
உயிர்திறம் பெயர நல்லமர்க் கடந்த
கo தறுக ணாளர் குடர்தரீஇத் தெறுவரச்
செஞ்செவி எருவை யஞ்சுவர இகுக்குங்
கல்லதர்க் கவலை போகின் சீறூர்ப்
புல்லரை யித்திப் புகர்படு நீழல்
எல்வளி யலைக்கும் இருள்கூர் மாலை
கரு வானவன் மறவன் வணங்குவிற் றடக்கை
ஆஅ நறவின் வண்மகிழ்ப் பிட்டன்
பொருந்தா மன்னர் அருஞ்சமத் துயர்த்த
திருந்திலை யெஃகம் போல
அருந்துயர் தருமிவள் பனிவார் கண்ணே.

—மருதனிளநாகனார்.

## (உரை)

### க - ச : நன்னுதல் ..........நேஞ்சே

(இ - ள்.) நெஞ்சே - அன்புமிக்க என் நன்னர் நெஞ்சமே!; நன்னுதல் பசப்பவும் ஆள்வினை தரீஇயர் துன் அருங் கானம் துன்னுதல் நன்று எனச் சூழ்ந்தனை - நீதானும் நம் காதலியாகிய அழகிய நுதலையுடைய இவள் நம்பிரிவாற்றாது பசலை பாயப்பட்டு வருந்துவாளாயினும் ஆகுக! நாமிப்பொழுது இவளைப் பிரிந்து நமது ஆண்மைக்குயிராகிய முயற்சியை மேற்கொண்டு நிரம்பப் பொருளீட்டிக் கொணர்தற்குச் செல்லுதற்கரிய காட்டினூடே செல்லுதல் நன்மையுடைத்தாகும் என்று ஆராய்ந்து துணிந்தாய் மன்; பின்னின்று ஆயின் நன்று இன்னாச் சூழ்ந்தனை - நீ துணிந்தாங்கே யாமிவளைப் பிரிந்து ஆள்வினை மேற்சென்ற பின்னர் யாம் அதனிடையே முறியும் பொழுது சிறிதுநின்று நீ ஆராய்வாயாயின் நீ பெரிதும் நமக்குக் கேடே சூழ்ந்தனை ஆகுதி காண்! அஃதெற்றாலெனின், என்க.

(வி - ம்.) நன்னுதல் பசப்பவும் என்றது, நாம் பிரியின் அவள் பிரிவாற்றாது பசப்பூர்ந்து நலிவள் என்பது அறிந்திருந்தும் என்பதுபட நின்றது. எனவே இதனால் அகற்சியது அருமை கூறி யாம் இப்பொழுது பிரிவது நன்றன்று என்றறிவுறுத்தானும்! நன்றெனச் சூழ்ந்தனை பின்னின்று ஆயின் நன்று இன்னாச் சூழ்ந்தனை என மாறிக் கூட்டுக. யாமும் பிரிவாற்றாமையால் ஆள்வினையினும் இடைக்கண்முறிகுவம் அப்பொழுது ஆராயின் நீ இனிதென்று சூழ்ந்த இதுவே இன்னாச் சூழ்ந்ததாதலை அறிகுவாய் என்பான் பின்னின்று ஆயின் நன்று இன்னாச் சூழ்ந்தனை என்றான். ஆகுதி என ஒருசொல் வருவித்து முடிக்க. தேராது தெளிந்தமை கருதி இரங்குவான் வாழி என வாழ்த்தினன்.

### ச - கஉ : வேய்துற..........போகின்

(இ - ள்.) இடி உமிழ் வானம் வெய்து உற நீங்கி - இடி வீழ்த்து முழங்கி மழை பொழியும் முகில்கள் நிலம் பெரிதும் வெப்பமுறுமாறு பெய்யாது போதலாலே; யாங்கணும் குடி பதிப் பெயர்ந்த சுட்டு உடை முதுபாழ் - எவ்வெவ்விடத்தும் வாழ்ந்து வந்த குடிமக்கள் தத்தம் இருப்பிடங்களைக் கைவிட்டு வேறிடங்கட்குச் சென்றுவிட்டமையைப் பிற நாட்டினரெல்லாம் சுட்டிக் கூறுதலையுடைய பழைய பாழ் நிலமாகிய பாலை நிலத்திலே; செயிர்திறம் பெயர தெறுவர நல் அமர்க் கடந்த தறுகணாளர் - தமமுயிர் மறவர் உயிர்புகும் மேனிலையுலகம் புகுதும் தன்மையுடையவாய்த் தம்முடலை விட்டுப் போகுமாறு, அடிப்பிறக்கிடாதே நின்று காண்போர்க்கு அச்சமுண்டாகும்படி

அறப்போர் ஆற்றிப் பகைவென்றுழி விழுப்புண்பட்டு வீழ்ந்த அஞ்சாமையையுடைய மறவர் உடம்பிடத்தே; கயிறு பிணிக்குழிசி ஓலை கொண்மார் - ஊர்மக்கள் தாம்தாம் விரும்பிய தலைவர் பெயர் பொறித்திடப்பட்ட குடவோலைகளைக் கொள்ளுமபொருட்டுக் கயிற்றாலே வரிந்துகட்டப்பட்ட குடங்களின் கண்ணே; பொறி கண்டு அழிக்கும் ஆவணமாக்களின் - நடுவராற் பொறிக்கப்பட்ட இலச்சினையை ஆராய்ந்து பார்த்து அழித்துக் குடங்களினூடிருந்து அவ்வோலைகளைக் கையிட்டு ஒவ்வொன்றாக வெளியில் எடுக்கின்ற ஆவணக்களரியாளர் போன்று; செஞ்செவி எருவை - சிவந்த செவியையுடைய கழுகுகள் கச்சு முதலியன கட்டப்பட்ட இடங்களிலே குடைதற் கியன்ற இடத்தை ஆராய்ந்து கண்டு தம் அலகால் குடைந்து; அஞ்சுவர - கண்டார்க்கு அச்சம் வருமாறு; குடர் தரீஇ இருக்கும் - அலகினாலே குடரை வெளிப்படுத்தி இழுத்தற்கிடனான; கல் கவலை அதர் போகின் - பரற்கற்களையுடைய கவர்த்த வழியிலே யாம் போம்பொழுது என்க.

(வி - ர.) இதன்கண் பண்டைக் காலத்தே இத்தமிழகத்தில் ஊராட்சியாளரைத் தேர்ந்தெடுத்தற்கு ஊர்மக்கள் தாம் தாம் விரும்பிய தலைவர் பெயரை ஓலையில் எழுதிச் சுருள் செய்து குடத்தினுள்ளிடுதலும் நடுவர் அக்குடங்களை மூடிப் பின்னர்க் கயிற்றால் வரிந்து கட்டி இலச்சினையிடுதலும்; பின்னர் ஆவணக்களரியாளர் அவ்விலச்சினையை ஆராய்ந்து பார்த்து அதனை அழித்துக் குடத்துள்ளிருந்து ஓலைச் சுருள்களை வெளியிலெடுத்துப் பிரித்து நோக்குதலும் உவமை கூறுமாற்றால் கூறப்பட்டிருத்தல் உணர்க. மறவருடம்பும் கச்சை கவசம் முதலியவற்றாற் கட்டப்பட்டிருத்தலால் கழுகுகளும் குடைந்து குடரை இழுத்தற்கு இடம் ஆராய்ந்து காண்டல் வேண்டிற்று. (௧௦) தெறுவர என்பதனை தெறுவர (௯) நல்லமர் கடந்த எனக் கூட்டுக.

௧௨ - ௧௩ : சீறூர்..........கண்ணே

(இ - ள்.) சீறூர் புல் அரை இத்திப் புகர்படு நீழல் எல் வளி அலைக்கும் இருள்கூர் மாலை - அவ்வழியிடத்தே குடியோடிப் போன சிறூரின்கண் புற்கென்ற அரையினையுடைய இத்திமரத்தின் புள்ளிகளை உடைய நீழலிடத்தே பெரிய கோடைக் காற்றுத் தாக்கித் துனபுறுத்துதலையுடைய இருள் மிகுகின்ற அந்திமாலைப் பொழுதில் யாம் இரவைக் கழித்தற்குத் தங்குதுமல்லமோ! அப்பொழுது; இவள பனிவார் கண் - நம்மாற் றுறக்கப்பட்ட இவளுடைய நீர் ஒழுகும் கண்கள் நம் அகக்கண் முன்பு கண்கூடாகத் தோன்றி; வானவன் மறவன் - சேரமன்னனுடைய படைத்தலைவனாகிய; வணங்கு வில் தடக்கை ஆஅய்

நறவின் வண்மகிழ் பிட்டன் - வளைந்த விற்படையையுடைய பெரிய கையையுடையவனும் இடையீடின்றிக் கள்ளினது வளவிய களிப்பை விரும்புபவனும் ஆகிய பிட்டன் என்பான்; பொருந்தா மன்னர் அருஞ் சமத்து உயர்த்த - பகைமன்னரோடு பொருது நின்ற வெல்லுதற்கரிய போரின்கண்ணே ஓக்கிய; திருந்திலை எஃகம் போல - திருந்திய இலையினையுடைய வேல் அப்பகை மன்னர்க்கு உய்தற்கரிய துயரம் விளைப்பது போன்று; அருந்துயர் தரும் - நமக்கும் உய்தற்கரிய துயரத்தைத் தருதல் தேற்றம். ஆதலால் இப்பொழுது அக் கருத்தினைக் கைவிடுவாயாக என்பதாம்.

(வி - ம்.) எல்வளி என்புழி எல் பெருமை மேற்று. வேறிடமின்மையால் சீறூரில் இத்திநீழலிலே தங்குவேம் என்றான். தங்கிய பொழுது நங்காதலி பிரிவாற்றாது துன்பக் கண்ணீர் பெருகித் துயருறும் நிலைமை நம் அகக்கண் முன்னர்த் தோன்றுதல ஒருதலை. அங்ஙனம் தோன்றியக்கால் யாம் மேற்கொண்டுள்ள ஆள்வினையின் கண் ஊக்கங் கோடலும் அவ்வழிச் சென்று பொருளீட்டலும் அரியவாம். ஆதலின் அக்கருத்தை விடுக என்பது குறிப்பு.

இனி இதனை, நெஞ்சே நீ ஆள்வினை மேற்கொண்டு பொருள் தரீஇயர் கானம் துன்னுதல் சூழ்ந்தனை பின்னின்று ஆயின் நீ நன்றும் நமக்கு இன்னாச் சூழ்ந்தனை ஆதல் அறிதி, எங்ஙனமெனின் யாம் கவலை போகின் சீறூர் இத்தி நீழல் இருள்கூர் மாலையில் இவள் பனிவார் கண் நமக்கு அருந்துயர் தரும்! என இயைபு காண்க.

(பா - வே.) க. விடுத்தனை, விடுத்தி. ௫. நீக்க நீங்கி கஉ. நல்லதர்.

## செய்யுள் எஎ

திணை : குறிஞ்சி.

துறை : களவுக் காலத்துப் பிரிந்து வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்தவன் சிறிது காலந்தாழ்த்து வந்தானாக அவனைத் தோழி எதிர் கொண்டு தலைவியின் பிரிவாற்றாமையை உள்ளுறை வகையாலுணர்த்தி இப் பிரிவுக் காலத்தே பெருமான் எம்மை உள்ளியுமறிதிரோ? என்று வினவியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு "நாற்றமும் தோற்றமும்" எனவரும் நூற்பாவின்கண் (தொல். கள - உ௩) 'வேண்டாப் பிரிவினும்' எனவரும் விதி கொள்க.

நனந்தலைக் கானத் தாளி யஞ்சி
இனந்தலைத் தரூஉ மெறுழ்கிளர் முன்பின்

வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்துப்
பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றொருத்தல்
இரும்பிணர்த் தடக்கையின் ஏமுறத் தழுவக்
கடுஞ்சூன் மடப்பிடி நடுங்குஞ் சாரல்
தேம்பிழி நறவின் குறவர் முன்றில்
முந்தூ ழாய்மலர் உதிரக் காந்தள்
நீடிதழ் நெடுந்துடுப் பொசியத் தண்ணென
கo வாடை தூக்கும் வருபனி யற்சிரம்
நம்மில் புலம்பிற் றம்மூர்த் தமியர்
என்னா குவர்கொல் அளியர் தாமென
எம்விட் டகன்ற சின்னாட் சிறிதும்
உள்ளியும் அறிதிரோ ஓங்குமலை நாட
கரு உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன் சூழச் சேய்நின்று
செழுஞ்செய் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி
யாண்டுபல கழிய வேண்டுவயிற் பிழையாது
உo தாளிடூஉக் கடந்து வாளமர் உழக்கி
ஏந்துகோட் டியானை வேந்தர் ஓட்டிய
கடும்பரிப் புரவிக் கைவண் பாரி
தீம்பெரும் பைஞ்சுனைப் பூத்த
தேங்கமழ் புதுமலர் நாறுமிவள் நுதலே.

—மதுரை நக்கீரனார்.

(உரை)

கச: ஓங்கு மலை நாட...........

(இ - ள்.) ஓங்கும் மலை நாட - உயர்ந்த மலைநாட்டினை யுடைய பெருமானே! என்க.

(வி - ம்.) அன்புடையாரைத் துன்பத்திலாழ்த்தி விடுதல் நும் போன்ற உயர்குடித் தோன்றினார்க்கு அடாது எனக் குறிப்பான் அறிவுறுப்பவள் அவன் குடியினுயர்வை அவன் மலைக் கேற்றி 'ஓங்கு மலை நாட' என்று விளித்தனள் என்க.

க - கூ : நனந்தலை.............சாரல்

(இ - ள்.) இனம் தலைத்தரும் கிளர் ஏறும் முன்பின் - தன்னினமாகிய யானைகளைப் பாதுகாத்தற் பொருட்டுத் தன்பாலே சூழ்வித்துக் கொள்ளுதலையுடைய நன்கு விளங்குதலையுடைய பேராற்றலையும்; வாய்புகு வரி ஞிமிறு ஆர்க்கும் கடாஅத்து - வாயினுள்ளே புகுகின்ற வரியினையுடைய அறுகாற் சிறு பறவைகள் ஆரவாரித்தற்குக் காரணமான மதநீரினையுமுடைய; பொறி நுதல் பொலிந்த வயக்களிற்று ஒருத்தல் - புள்ளிகளை யுடைய நுதலாலே பொலிவுற்றுத் திகழாநின்ற வன்மை மிக்க களிற்றியானைகளினும் தலைமைத் தன்மையுடைய களிற்று யானையே; இரும்பிணர்த் தடக்கையின் ஏம் உற தழுவ - தனது கரிய கரடுமுரடான பெரிய கையினாலே காவலமையுமபடி தழுவா நிற்பவேயும்; கடுஞ்சூல் மடப்பிடி - அதன் காதலியாகிய முதற் சூலையுடைய இளம்பிடியானையானது; நனந்தலைக் கானத்து ஆளி அஞ்சி நடுங்கும் சாரல் - அகன்ற இடத்தையுடைய காட்டின் கண்ணே வாழும் யாளிக்குப் பெரிது அஞ்சி நடுங்குதற்குக் காரணமான மலைச்சாரலிடத்தே என்க.

(வி - ம்.) இனந்தலைத்தருதல் - தன்னினத்தைத் தன்னைச் சூழ்வித்துக் கோடல். கிளர் ஏறும் முன்பு எனமாறுக. ஏறும் முன்பு: ஒரு பொருட் பன்மொழி. ஈண்டுப் பேராற்றல் என்பது பட நின்றன. ஞிமிறு - மிஞிறு என்பது எழுத்து நிலைமாறிய படியாம்; சிவிறி, விசிறி என்றாற் போல; வண்டு. களிற்று ஒருத்தல் - களிற்றினுள்ளும் தலைமைத் தன்மையுடைய ஒருத்தல் என்க. இது யானைக் குழுவின் தலைவனாகிய களிறு. இதனை யூதநாதன் என்றும் கூறுப.

இனி இதன்கண் களிற்றியானை கையாற்றழுவிப் பாதுகாப்பவும் கடுஞ்சூல் மடப்பிடி யாளிக்கு அஞ்சி நடுங்கினாற் போன்று எம்பெருமான் தலைவியைத் தலையளி செய்து போற்றுவீராக விருக்கவும் வரை விடை வைத்துப் பிரியும் இச் சிறு பிரிவிற்கும் ஆற்றாது நடுங்குகின்றாள் என உள்ளுறுத்துக் கூறினாள் தோழி; இது வரைவுடன் பட்டானைப் பின்னரும் முடுக்கியவாறும்.

எ - கச: தேம்பிழி.............அறிதிரோ

(இ - ள்.) தேம்பிழி நறவின் குறவர் முன்றில் முந்தூழ ஆய்மலர் உதிர - தேனிற் பிழிந்தெடுத்த கள்ளினையுடைய குறவருடைய முற்றத்திலே மூங்கிலினது அழகிய பூக்கள் உதிராநிற்பவும்; நீடு இதழ்க் காந்தள் நெடுந்துடுப்பு ஒசிய - நீண்ட இதழ்களையுடைய காந்தட் பூவினது நெடிய தண்டு முறியவும்; தண் என வாடை தூக்கும் வரு பனி அற்சிரம் - தண்ணென்று குளிரும்படி வாடைக்காற்று வீசுங்கால் உண்டாகின்ற பனியையுடைய

அற்சிரக் காலத்திலே; தம் ஊர்த்தமியர் அளியர்தாம் நம் இல் புலம்பில் என் ஆகுவர் என - தமதூரின்கண் தனித்துறைகின்ற இரக்கத்திற்குரிய மகளிர்தாம் யாம் அங்கில்லாமையாலே உண்டாகின்ற பிரிவுத் துயரத்தாலே எத்தகைய நிலையினர் ஆகுவரோ? என்று எம் விட்டு அகன்ற சின்னாள் சிறிதும் உள்ளியும் அறிதிரோ - எளியேமைக் கைவிட்டுப்போய்த் தங்கிய ஒரு சில நாள்களினூடே எப்பொழுதேனும் நினைத்துப் பார்த்தது தானும் உண்டோ? கூறுமின்! என்க.

(வி - ம்.) தேம் - இனிமையுமாம். முந்தூழ் - மூங்கில். பனியை யுடைய அற்சிரம் என்க. அற்சிரம் - பெரும் பொழுதுகளில் ஒன்று; முன்பனிக்காலம். புலம்பு - தனிமைத் துன்பம். நினைத்துளீராயின் இத்துணைக் காலந் தாழ்த்திருப்பீரல்லீர் என்பது கருத்து. வாடை மலர் உதிர, துடுப்பு ஒசியத் தூக்கும் என்க.

### கரு - உச: உலகுடன்............நுதலே

(இ - ள்.) உலகுடன் திரிதரும் பலர் புகழ் நல்இசை - உலகுள்ள துணையும் பரவுதலைச் செய்கின்ற சான்றோர் பலரானும் புகழ்தற்கியன்ற சிறந்த புகழினையுடையவனும்; வாய் மொழிக் கபிலன் சூழ - அஞ்சாது நின்று பகை மன்னர்பாலும் வாய்மையே கூறுகின்ற மொழியையுடைய கபிலன் என்னும் புலவர் பெருமான் சூழ்ந்தவாறே; சேய் நின்று செழுஞ் செய்ந் நெல்லின விளை கதிர் கொண்டு - கிளிகள் தூரியவிடத்தினின்றும் செழித்த கழனி களிற் றழைத்த நெற்பயிரின்கண் நன்கு விளைந்து முற்றிய கதிர் களைக் கொய்துதருதலாலே அவற்றைக் கைக்கொண்டு அரிசி யாக்கி; தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி - அப்பறம்புமலைச் சுனையிலுள்ள பெரிய தண்டுகளையுடைய ஆம்பற் பூவோடு கூட்டிச் சமைத்துண்டு; யாண்டு பல கழிய - இவ்வாறே பலயாண்டுகள் கழியா நிற்பவும் காலங் கருதியிருந்து; வேண்டு வயின் பிழையா - போராற்றுதற்கு வேண்டிய செவ்வி வந்துழித் தப்ப விடாமல்; தாள இடூஉ வாள அமர் உழக்கி - முயற்சியை மேற்கொண்டு தன் வாளாலேயே போர்செய்து கலக்கி முற்றுகையிட்டிருந்த; ஏந்து கோட்டு யானை வேந்தர் - நிமிர்ந்த மருப்புக்களையுடைய யானைப்படை முதலியவற்றையுடைய மூவேந்தரையும்; கடந்து ஓட்டிய - வென்று புறமிட்டோடச் செய்த; கடும்பரிப் புரவிக் கைவண் பாரி - கடிய செலவினையுடைய புரவியையும் கையால் வழங்கும் வள்ளன்மையையு முடையவனும் ஆகிய பாரி வள்ளலி னுடைய; தீம் பெரும் பைஞ் சுனைப் பூத்த தேம் கமழ் புதுமலர் நாறும் இவள் நுதல்உள்ளியும் அறிதிரோ - இனிய பெரிய பசிய சுனையிடத்தே மலர்ந்த தேன் மணங்கமழும் புதுமலர் போன்று

நறுமணம் கமழுகின்ற எம்பெருமாட்டியினது நுதலையேனும் நினைத்துப் பார்த்ததுண்டோ? கூறுமின்; என்பதாம்.

(வி - ம்.) தமியர் என்னுகுவர் என உள்ளியும் அறிதிரோ? எம்மை நினைந்திலீராயினும் ஒழிக. எம்பெருமாட்டியின் நுதலையேனும் உள்ளி யறிவீரோ? என உள்ளியும் அறிதிரோ என்பதனைப் பின்னும் கூட்டிப் பொருள் கூறுக.

இனி இதன்கண் மூவேந்தரும் பாரியின் பறம்பு மலையை முற்றி யிருந்த பொழுது கபிலர் கிளிகளைப் பழக்கிச் சேய்மையிற் சென்று நெற்கதிர் கொய்து கொணரச் செய்து அதனால் அரண்மனையகத்துள் ளாரை யெல்லாம் இனிதாக உண்பித்த வரலாறு குறிப்பிட்டிருத்தலும் உணர்க. இவ்வரலாற்றைப் புறநானூற்றினும் காணலாம். இந் நூலினும் ௩0௩ ஆம் செய்யுளில் ஔவையார் "உரைசால் வண் புகழ்ப் பாரி பறம்பின் நிரைபறைக் குரீஇயினங் காலைப் போகி - முடங்கு புறச் செந்நெற் றரீஇய ரோராங் கிரைதேர் கொட்பினவாகிப் பொழுது படப் படர்கொண் மாலைப் படர்தந் தாங்கு" எனக் குறிப்பிட்டுள்ளமை உணர்க.

இனி இதனை, நாட வாடை தூக்கும் அற்சிரம் நம்மில் புலம்பில் அளியர் எனனுகுவர் என உள்ளியும் அறிதிரோ? அன்றெனினும் பாரி சுனை பூத்த புதுமலர் நாறும் இவள் நுதலையேனும் உள்ளியும் அறிதிரோ? என இயைத்திடுக.

(பா - வே) க0. தூங்கி. கடு. நெடுந்தா. உ0. நாளிடூஉ.

## செய்யுள் எகூ

**திணை :** பாலை.

**துறை :** பொருள் வயிற் பிரிந்த தலைமகன் இடைச் சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - தலைவன் தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் செல்லும் பொழுது இடைநெறியிலே தன்னெஞ்சம் தலைவியை நினைந்து வருந்திற்றாகத் தலைவன் அந்நெஞ்சத்தைக் கடிந்து கூறியது என்றவாறு.

(இ - ம்) இதற்கு "கரணத்தின் அமைந்து முடிந்த காலை" எனவரும் நூற்பாவின்கண் (தொல். கற்பி - ரு.) 'மீட்டுவரவு ஆய்ந்த வகையின் கண்ணும்" எனவரும் விதிகொள்க.

தோட்பதன் அமைத்த கருங்கை ஆடவர்
கனைபொறி பிறப்ப நூறி வினைப்படர்ந்து
கல்லுறுத் தியற்றிய வல்லுவர்ப் படுவில்
பாருடை மருங்கின் ஊறல் மண்டிய
வன்புலம் துமியப் போகிக் கோங்கர்

படுமணி யாயம் நீர்க்குநிமிர்ந்து செல்லும்
சேதா எடுத்த செந்நிலக் குரூஉத்துகள்
அகலிரு விசும்பின் ஊன்றித் தோன்றும்
நனந்தலை அழுவம் நம்மோடு துணைப்ப
௧0 வல்லாங்கு வருது மென்னு தல்குவர
வருந்தினை வாழியென் நெஞ்சே இருஞ்சிறை
வளைவாய்ப் பருந்தின் வான்கட் பேடை
ஆடுதொறு கனையும் அவ்வாய்க் கடுந்துடிக்
கொடுவில் எயினர் கோட்சுரம் படர
௧௫ நெடுவிளி பயிற்றும் நிரம்பா நீளிடைக்
கல்பிறங் கத்தம் போகி
நில்லாப் பொருட்பிணிப் பிரிந்த நீயே.

—குடவாயிற் கீரத்தனார்.

(உரை)

௧௧ - ௧௭ : வாழி யேன்............பிரிந்த நீயே

(இ - ள்.) *என் நெஞ்சே வாழி - என் நெஞ்சமே நீ நீடு வாழ்வாயாக!; இருஞ் சிறை வளைவாய்ப் பருந்தின் வான்கண் பேடை - கரிய சிறகினையும் வளைந்த அலகினையும் உடைய பருந்தாகிய வெளிய கண்ணையுடைய பேடையானது; ஆடு தொறு கனையும் அவ்வாய்க் கடுந்துடி - அசைந்து நடக்குந்தோறும் ஒலிக்கின்ற அழகிய வாயினையுடைய கடிய ஓசையினையுடைய துடி என்னும் தோற்கருவியினையும்; கொடு வில் எயினர் - வளைந்த வில்லையும் உடைய எயின மறவர்; கோள் சுரம் படர - ஆறு செல்வோரை அலைத்து அவர்தம் கைப்பொருளைக் கொள்ளை கொள்ளுதற்குரிய பாலைவழியிலே போவதனைப் பார்த்து; நெடு விளி பயிற்றும் நிரமபா நீள் இடை - தன் காதற்றுணையாகிய சேவலை நெடிதாகக் குரலெடுத்துப் பலகாலும் கூப்பிடுதற்குக் காரணமான தொலைபாத நீண்ட இடத்தையுடைய; கல் பிறங்கு அத்தம் போகி - கற்கள ஒளிறுகின்ற இபபாலை வழியிலே சென்று; நில்லாப் பொருள் பிணி - யாவரிடத்தும் நிலையுதலில்லாத பொருட்பற்றுக் காரணமாக; பிரிந்த நீ-நஙகாதலியைப் பிரிந்துபோந்த நீதான என்க.*

(வி - ம்.) *இருஞ்சிறை - பெரிய சிறகுமாம்; வாய் - அலகு. நடக்குங்கால் அசையுந்தோறும் துடி கனைக்கும் என்றவாறு. கனையும் -*

ஒலிக்கும். பருந்தின் பெடை எயினர் வில்லொடும் ஆறு கோட்பறை யுடனும் செல்லக்கண்டு அங்குத் தமக்கு ஊன் இரை கிடைக்கும் என்று கருதித் தன்சேவற் பருந்தை அழைக்கும் எனறவாறு. இல்லாப் பொருட்பிணி என்றது பொருளினது இழிவு கூறியபடியாம். இழிந்த பொருளைக் கருதி உயர்ந்த அருளைத் துறந்தனை என்பது குறிப்பு,

க - கக: தோட்பதன்..............வருந்தினை

(இ - ள்.) தோள் பதன் அமைத்த கருங்கை ஆடவர் - தோளின்கட் கோத்த கட்டுச் சோற்றினையுடைய வலிய கைகளை யுடைய ஆடவர்; வினைப்படர்ந்து - தொழிலின்கட் சென்று; கனை பொறி பிறப்ப நூறிக் கல் உறுத்து இயற்றிய - கற்பாறை யைத் தீப்பொறி பறக்கும்படி நுறுக்கிக் கல்லியெடுத்துச் செய்த; வல் உவர்ப் படுவில் - மிக்க உவர்ப்பினையுடைய கிணற்றில்; பார் உடை மருங்கின் ஊறல் மண்டிய - மண்ணுள்ள பக்கத்தே ஊறிய நீரைப் பருகும் பொருட்டு; கொங்கர் படுமணி ஆயம் - கொங்கருடைய ஒலிக்கும் மணிகளையுடைய பசுத்திரள்களுள் வைத்து; நீர்க்கு வன்புலம் துமியப் போகிச் சேதா எடுத்த செங்நிலக் குரூஉத் துகள் - நீர்வேட்கையாலே தலைநிமிர்ந்து வன்னிலம் துகள்படும்படி மிதித்துச் சென்று சிவந்த ஆக்கள் குளம்பினாலே எழுப்பிய சிவந்த நிலத்தினது நிறமிக்க அத்துகள்; அகல் இரு விசும்பின் ஊன்றித் தோன்றும் - அகன்ற பெரிய செக்கர் வானம் போன்று மிக்குத் தோன்றுதற் கிடனான; நனந்தலை அழுவம் நம்மொடு துணைப்ப - அகன்ற இடமமைந்த காட்டின் கண்ணே நம்மாருயிர்க் காதலிதானும் நமமோடு நமக்குத் துணையாக வரும்படி; வல்லாங்கு வருதும் என்றது - வல்லபடி போவோம் என்று அங்கு நினையாமல் இத்துணைத் தொலைவும் வந்தபின்னர்; அல்குவர வருந்தினை - யாம் செலவழுங்குதல் உண்டாகும்படி வருந்தாநின்றனை! என்னே நின் பேதைமை இருந்தவாறு? எனபதாம்.

(வி - ம்.) தோட்பதம்-தோளிற்றூக்கிய கட்டுச் சோறு. கருங்கை - வலிய கை. பொறி - தீப்பொறி. கறபாறையை இடிக்கும் பொழுது தீப்பொறி பிறத்தல் இயல்பு. நூறி - நுறுக்கி. கல்லுறுத்தல் - கல்லி யெடுத்தல். வல்லுவர் என்புழி வன்மை மிகுதிப் பொருளபட நின்றது. படு - கிணறு. பார் - வன்மையுடைய மணணடுக்கு கன்னிலத்தை அகழ்ந்த வழி மண்ணடுக்குடைய இடத்தே நீர் ஊறுதலியல்பு. மண் டிய - மண்டுதற்கு. மண்டுதல் - குடித்தல். கயமணடெருமை என் புழியும் அஃதப் பொருட்டாதலறிக. கொங்கர் ஆனிரைகளுள் வைத்துச் சேதா நிரை நீர் வேட்கை காரணமாக நிமிர்ந்து வன்புலம் துணிபட விரைந்து செல்லும் என்றும், அங்ஙனம் செல்லுங்கால் எழுகின்ற செந்துகள், செக்கர் வானம் போல் தோன்றும் என்றும் கூறுக. ஊன்றித் தோன்றும் - மிக்குத் தோன்றும். துணைப்ப - துணை

யாக. காதலி என்னும் எழுவாய் பெய்துரைக்க. அழுவம் - காடு. அல்குவர - செலவழுங்குதல் உண்டாக.

இனி இதனை "நெஞ்சே நிரம்பா நீளிடை அத்தம் போகிப் பொருட்பிணிப் பிரிந்த நீயே! நனந்தலை அழுவம் நம்மொடு (காதலி) துணைப்ப வல்லாங்கு' வருதும் என்னுது அல்குவர வருந்தினை!" என இயைத்திடுக.

(பா - வே.) உ. பிறப்புற. ங. கல்லறுத்.

## செய்யுள் ௩௰

**திணை :** நெய்தல்.

**துறை :** இரவுக் குறிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - வரைந்து கோடலிற் கருத்தின்றிக் களவொழுக்கந் தலைநின்ற தலைவன் இரவுக்குறி வருவானை இரவுக்குறி மறுத்து இனிப் பகற்குறிக்கண் வருக! என்று தோழி கூறியது. இது வரைவு கடாஅதற் குறிப்புடைத்து.

(இ - ம்.) இதனை, "நாற்றமுந் தோற்றமும்" எனவரும் நூற்பாவின்கண் (தொல். களவி - உங) "களனும் பொழுதும் வரைநிலை விலக்கி......அன்ன நிலைவகையான் வரைதல் வேண்டினும்" என்பதன் கண் அமைத்திடுக.

கொடுந்தாள் முதலையோடு கோட்டுமீன் வழங்கும்
இருங்கழி யிட்டுச் சுரம்நீந்தி யிரவின்
வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப
நினக்கெவன் அரியமோ யாமே எந்தை
௫ புணர்திரைப் பரப்பகம் துழைஇத் தந்த
பன்மீன் உணங்கற் படுபுள் ஓப்புதும்
முண்டகம் கலித்த முதுநீர் அடைகரை
ஒண்பல் மலர கவட்டிலை அடும்பின்
செங்கேழ் மென்கொடி ஆழி அறுப்ப
௰ இனமணிப் புரவி நெடுந்தேர் கடைஇ
மின்னிலைப் பொலிந்த விளங்கிணர் அவிழ்பொன்
தண்ணறும் பைந்தா துறைக்கும்
புன்னையங் கானல் பகல்வந் தீமே.

—மருங்கூர் கிழார் பெருங்கண்ணனார்.

(நக்கீரர் என்றும் பாடம்.)

## (உரை)

### க - கூ: கொடுந்தாள்.........ஓப்புதும்

**(இ - ள்.)** தண் கடல் சேர்ப்ப - குளிர்ந்த கடலையுடைய நெய்தனிலத் தலைவனே! நீதான்; மன்ற - தேற்றமாக; கொடுந்தாள் முதலையொடு கோட்டுமீன் வழங்கும் இருங்கழி - வளைந்த காலையுடைய முதலைகளோடே கொம்புடைய சுறாமீனும் திரிதருகின்ற அச்சந்தருகின்ற கடற் கழியையும்; இட்டுச் சுரம் - இட்டிதாகிய கடத்தற்கரிய வழியையும் கடந்து; இரவின் வந்தோய் - யாங்கள கவல்வதற்குக் காரணமான இரவின் கண்ணே இவ்வாறு இங்கு வந்தனை; நினக்கு யாம எவன் அரியமோ - இவ்வாறு நீ இன்னுமை மிக்க இருள் நெறியிலே வருதற்குப் பெருந்தகையாகிய உனக்கு யாம் எவ்வாற்ருன் எய்துதற் கரியம் ஆவோம் என்பது எமக்கு விளங்கவில்லை. நீ இங்ஙனம் வருதலை எம்பெருமாட்டி பொருளகாண் ஆதலால் நீ இரவின்கண் வாராதே கொள்!; எந்தை புணர்திரைப் பரப்பகம் துழைஇத் தந்த பன்மீன் உணங்கல் படுபுள ஓப்புதும் - இனி நாளைப்பகலிலே யாங்கள் எம்முடைய தந்தை அலைகள் பொருந்திய கடற் பரப்பினூடே புக்கு நீரை வலைமுதலியவற்ருல் துழவி அகப்படுத்துக் கொணர்ந்த பல்வேறு மீன்வற்றலிலே வீழ்கின்ற பறவைகளை ஓட்டுந் தொழிலை மேற்கொள்வேம் ஆதலால் என்க.

**(இ - ரி.)** மன்ற என்றது தேற்றப் பொருட்டு. அதனை முதலையும் மீனும் வழங்குதற்கு அடையாக்குக. வந்தோய் என்புழி ஆ - ஓவாயிற்றுச் செய்யுளாகலின். இருங்கழியில் ஆளைக் கொல்லும் முதலையும் சுறாமீனும் வழங்குதல் தேற்றமாகலின் அதனை இரவில் நீந்திக் கடந்து வருதலை எம்பெருமாட்டி பொருஅள் என்பது வாரற்க என்றற்குக் குறிப்பேதுவாய் நின்றது.

நீ மனங்கொள்ளின் இப்பொழுதே எம்பெருமாட்டியை வரைவொடு வந்து வதுவை செய்து கொள்ளல் மிகவும் எளிதே. அங்ஙனமிருப்பவும் நீ இவ்வாறு வருவானென் என்பதுபட யாம் எவன் நினக்கு அரியமோ? என்று வினவினள். இவ்வாற்ருல் தோழி நுணுக்கமாக வரைவு கடாஅயினுளாதலறிக. இனி யாம் புள் ஓப்புதும் என்றது மேலே பகல்வந்தீமே என்றற்கு ஏதுக் கூறியவாறும்.

### எ - கரு: முண்டகம்..........பகல் வந்தீமே

**(இ - ள்.)** முண்டகம் கலித்த முதுநீர் அடை கரை - நீர் முள்ளிச் செடி தழைத்துள்ள கடலினது நீரடைகின்ற கரையின் கண்ணே படர்ந்துள்ள; ஒள்பல் மலர கவட்டு இலை அடும்பின் -

ஒள்ளிய பலவாகிய மலர்களையுடையவும் கவடுபட்ட இலைகளை யுடையவும் ஆகிய அடும்பினது; செங்கேழ் மெல்கொடி ஆழி அறுப்ப - சிவந்த நிறமுடைய மெல்லிய கொடிகளை நினது தேரின் உருள்கள் அறுக்கும்படி; இன மணிப்புரவி நெடுந்தேர் கடைஇ - உயர்ந்த இனத்தனவாகிய மணிபூட்டப்பட்ட குதிரைகளையுடைய நின்தேரினைச் செலுத்தி; மின் இலைப் பொலிந்த விளங்கு இணர் அவிழ் பொன் தண் நறும் தாது உறைக்கும் புன்னை அம் கானல் பகல் வந்தீம் - கதிரவன் ஒளியாலே மின்னுகின்ற இலைகளாலே பொலிவுற்ற விளங்குகின்ற பூங்கொத்துக்கள் கட்டவிழ்ந்து பொன்னிறமுடைய குளிர்ந்த நறிய பூந்துகள்களை உதிர்க்கின்ற புன்னைகளடர்ந்த அழகிய கடற்கரைச் சோலையிலே பகற் பொழுதிலேயே வந்தருள்வாயாக! என்பதாம்.

(வி - ம்.) பகற்குறியிடத்தே நீ எம்மை அளித்தற்கு வருவாயேனும் நின் தேருருள் மென்பூங்கொடியை அறுக்குமாறு போலே நின் வரவு பிறர் அறிதற்கு ஏதுவாகி மெல்லியலாராகிய எமதுள்ளத்தைப் புண்படுத்தாதிராது என்னும் கருத்தை உள்ளுறுத்து நின் ஆழி மென்கொடி அறுப்பவா என்றாள். இனி நீ நின் கடற்கரைச் சோலையிடத்தே புன்னைமலர் பொன்தாது சொரிந்து நறுமணங் கமழ்விக்குமாறு போலே நீதானும் முலைவிலைப் பொன்னொடு வரைவு வேண்டி வந்து வதுவை செய்து புகழ்பரப்புதலே எம் விருப்பம் என்பதை உள்ளுறுத்துப் புன்னை இணர் பொன்தாது உறைக்கும் கானல் என்றாள் என நுண்ணிதின் உள்ளுறைகண்டு மகிழ்க.

இனி இதனை - சேர்ப்ப நீதான் முதலையொடு கொடுமீன் வழங்கும் இட்டுச் சுரம் நீந்தி இரவின் வந்தாய்! இங்ஙனம் வருதலைத் தலைவி பொறாஅள் யாம் நினக்கு எவ்வாறு அரியம் ஆவேம் நாளைப் புள்ளோப்புதும் புன்னையங் கானல் பகல் வந்தீம் என இயைத்திடுக.

(பா - வே.) ௯. பாக்கந். ௬. ஒப்ப.

## செய்யுள் ௮௧

திணை : பாலை.

துறை : பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி தலைமகள் குறிப்பறிந்து வந்து சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—தலைவியைப் பிரிந்துபோய்ப் பொருளீட்டி வருதல் வேண்டும் என்னும் கருத்தினைத் தலைவன் தோழிக்குக் கூறினனாக; அதுகேட்ட தோழி தலைவன் கருத்தைத் தலைவிக்குக் கூற, அதுகேட்ட தலைவி அப்பொழுதே அழத்தொடங்கி விட்டனள். அது கண்ட தோழி தலைவன்பாற் சென்று நீவிர் இப்பொழுது பிரிவீராயின் தலைவியை ஆற்றுவித்தல் அரிது. அவள் இறந்து படுதலும் கூடும் என்பதுபடக் கூறித் தலைவனைச் செலவழுங்குவித்தது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "தலைவரும் விழுமம்" எனவரும் நூற்பாவின் கண் (தொல். அகத்திணை - ௩௧) தலைவரும் விழும நிலை யெடுத்துரைப் பினும்" என்பதனாலமைத்திடுக.

நாளுலா எழுந்த கோள்வல் உளியம்
ஓங்குசினை இருப்பைத் தீம்பழம் முனையின்
புல்லளைப் புற்றின் பல்கிளைச் சிதலை
ஒருங்குமுயன் றெடுத்த நனைவாய் நெடுங்கோ
௫ டிரும்பூது குருகின் இடந்திரை தேரும்
மண்பக வறந்த ஆங்கட் கண்பொரக்
கதிர்தெறக் கவிழ்ந்த உலறுதலை நோன்சினை
நெறியயல் மராஅம் ஏறிப் புலம்புகொள
எறிபருந் துயவும் என்றூழ் நீளிடை
௧௦ வெம்முனை அருஞ்சுரம் நீந்திச் சிறந்த
செம்மல் உள்ளம் துரத்தலின் கறுத்தோர்
ஒளிறுவேல் அழுவம் களிறுபடக் கடக்கும்
மாவண் கடலன் விளங்கில் அன்னஎம்
மையெழில் உண்கண் கலுழ
௧௫ ஐய சேறிரோ அகன்றுசெய் பொருட்கே.

—ஆலம்பேரி சாத்தனார்.

(உரை)

௧௫ : ஐய..........

(இ - ள்.) ஐய - எம்பெருமானே!

௧௧ - ௧௪ : கறுத்தோர்..........கலுழ

(இ - ள்.) கறுத்தோர் ஒளிறு வேல் அழுவம் களிறுபடக் கடக்கும் - தன்னொடு சினந்து போரெதிர்ந்த பகைவருடைய சுடர்வீசுகின்ற வேலேந்திய காலாட் படைப்பரப்பு முதல் யானைப் படை ஈறுக மாண்டொழியுமாறு நூழிலாட்டி வெல்லும் போராற்றலையும்; மாவண் கடலன் - பெரிய வள்ளன்மையையு முடைய கடலன் என்னும் மன்னனது; விளங்கில் அன்ன - விளங்கில் என்னும் மூதூர் போன்று இன்பமும் அழகும் நிரம்பிய; எம் மை எழில் உண்கண் - எம்முடைய அழகிய மையுண்ட கண்கள் தாம்; கலுழ - பிரிவாற்ருது அழுது புலம்பும்படி; என்க.

(வி - ரை.) கறுத்தோர் - சினந்தோர். அவராவார் - பகைவர். கடலன் என்பான் ஒரு குறுநிலமன்னன் என்றும் சிறந்த போராற்றல் உடையன் என்றும் வள்ளற் பண்புடையான் என்றும் அவன் மூதூர் விளங்கில் என்பது என்றும் இதனாற் பெற்றாம். விளங்கில் - தலைவியின் கண்ணுக்குவமை. ஈண்டுத் தோழி தன்னையும் உளப்படுத்தி எம்கண் என்கின்றாள்.

கம - கக : சிறந்த.........துரத்தலின்

(இ - ள்.) சிறந்த செம்மல் உள்ளம் துரத்தலின் - நின் இயல்பிற் கிணங்கச் சிறந்த தலைமைத் தன்மையுடைய நின் நெஞ்சம் நின்னைத் தூண்டுதலாலே என்க.

(வி - ரை.) "வினையே ஆடவர்க் குயிர்" என்பது பற்றிப் பொருளீட்டும் ஆள்வினைமருங்கிற் பிரியக் கருதும் கருத்தினைத் தானும் பாராட்டுவாள் "செம்மல் உள்ளம் துரத்தலின்" என்று விதந்தாள். துரத்தல் - செலுத்துதல்.

க - கம : நாளுலா.........நீந்தி

(இ - ள்.) நாள் உலா எழுந்த கோள் வல் உளியம் - விடியற் காலத்தே இரைதேரும் பொருட்டு உலாப் போதற்கு எழுந்த தனக்குரிய இரையைத் தேர்ந்து கொள்ளுதலில் வன்மையுடைய கரடியானது, ஓங்கு சினை இருப்பைத் தீம்பழம் முனையின - உயர்ந்த கிளைகளையுடைய இருப்பை மரத்தின் இனிய பழத்தினைத் தின்று வெறுப்பின, புல் அளை புற்றின் பல்கிளைச் சிதலை ஒருங்கு முயன்று எடுத்த நனைவாய் நெடுங்கோடு இரும்பு ஊது குருகின் இடந்து இரை தேரும் - புல்லிய வளைகளையுடைய புற்றினது பலவாகிய இனங்களாகிய சிதலைகள், ஒருங்கு கூடிப் பெரிதும் முயன்று கட்டிய நனைந்த வாயையுடைய நெடிய உச்சிகளை இரும்புருக்கும் கொல்லுலையின்கண் துருத்தி ஊதுமாறுபோல வளையினுள் ஊதி அகழ்ந்து தனக்கு இரையாகிய புற்றாஞ் சோற்றினை ஆராய்தற்கு இடனான; மண் பக வறந்த ஆங்கண் கண் பொரக் கதிர் தெறக் கவிழ்ந்த உலறு தலை நோன் சினை நெறி அயல் மராஅம் ஏறி - நிலம் வெடிக்கும்படி வறட்சியுற்ற பாலை நிலமாகிய அவ்விடத்தே கண் ஒளி மழுங்க ஞாயிறு காய்தலாலே வழியின் பக்கத்தில் உள்ள வெண்கடப்ப மரங்களின் தாழ்ந்துள்ள உலர்ந்த உச்சியையுடைய வலிய கிளைகளில் ஏறியிருந்து; எறி பருந்து புலம்புகொள உயவும் என்றூழ நீள் இடை வெம்முனை அருஞ் சுரம் நீந்தி - இரையினைப் பாய்ந்து பற்றுகின்ற பருந்தானது தனிமையுற்று வருந்துகின்ற

வெப்பம் மிகுந்த நீண்ட இடங்களாகிய வெவ்விய போர்க் களங்களையுடைய கடத்தற்கரிய சுரத்தினைக் கடந்தும்; என்க.

(வி - ம்.) நாள் - விடியற்காலம். உளியம் - கரடி. முனைதல் - வெறுத்தல். அளை - வளை. சிதலை - கறையான். கோடு - உச்சி. குருகு - கொல்லன் துருத்தி. கரடி புற்றை அகழும்பொழுது வளையினுள் மூக்கினால் உயிர்த்து அகழும் இயல்புடையதாகலின் இரும்பூது குருகின் இடந்திரை தேரும் என்றார். மராஅம் - வெண்கடப்ப மரம். புலம்பு - தனிமை. முனை - போர்க்களம்.

இனி, இதன்கண் கரடி இனிய தேன் பொதுளிய இருப்பைப் பூவை வெறுத்து இழிந்த புற்றுஞ் சோற்றினை அவாவி அகழுமாறு போல, நீதானும் நிரம்பிய செல்வத்தோடிருந்தும், தலைவியோடு கூடி இன்புற்றிருந்து அறஞ்செய்யும் நல்வாழ்க்கையை வெறுத்து இழிந்த பொருளை நாடிப் பிரியத் துணிகின்றனை என உள்ளுறை காண்க.

## கரு: சேறிரோ............பொருட்கே

(இ - ள்.) அகன்று செய்பொருட்கு - எம்பெருமாட்டியைத் துறந்து போய் முயன்று ஈட்டுகின்ற பொருள் நிமித்தமாக; சேறிரோ - செல்லுவீரோ; என்பதாம்.

(வி - ரை.) செல்லுவீரோ என்பது அத்துணை வன்கண்மை உடையீரோ என்பதுபட நின்றது.

இனி, இதனை - ஐய! செம்மல் உள்ளம் துரத்தலின் எம்கண் கலுழப் பொருட்குச் செல்லுவீரோ? என இயைபு காண்க.

இதனது பயன் - தலைவன் செலவழுங்குதல் என்க.

(பா - வே.) ௪. இருங்கோடு.

## செய்யுள் அஉ

**திணை:** குறிஞ்சி.

**துறை:** தோழிக்குத் தலைவி அறத்தொடு நின்றது.

(து - ம்.) களவொழுக்கத்தின் பொழுது தலைவன் வரவு முட்டுப்பாடுற்றமையால் பிரிவாற்றாது வருந்திய தலைவி தோழியை அறத்தொடு நிற்பித்தற்குச் சொல்லியது என்றவாறு.

(இ - ம்.) "இதற்கு வரைவிடை வைத்த" எனவரும் (தொல். களவி - உக.) நூற்பாவின்கண் 'வரையா நாளிடை வந்தோன் முட்டினும்' என வரும் விதி கொள்க.

ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்
கோடை யவ்வளி குழலிசை யாகப்

பாடின் அருவிப் பனிநீர் இன்னிசை
தோடமை முழவின் துதைகுர லாகக்
௫ கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்போடு
மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக
இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத் தியலியா டும்மயில்
௧௦ விழவுக்கள விறலியில் தோன்றும் நாடன்
உருவ வல்வில் பற்றி அம்புதெரிந்து
செருச்செய் யானை சென்னெறி வினாஅய்
புலர்குரல் ஏனற் புழையுடை ஒருசிறை
மலர்தார் மார்பன் நின்றோற் கண்டோர்
௧௫ பலர்தில் வாழி தோழி அவருள்
ஆரிருட் கங்குல் அணையொடு பொருந்தி
ஓரியா னாகுவ தெவன்கொல்
நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே.

— கபிலர்.

(உரை)

௧௫ : வாழி தோழி............

(இ - ள்.) *தோழி வாழி - தோழி நீ நீடுவாழ்வாயாக ஈதொன்றுகேள்.*

௧ - ௧௦ : ஆடமை............நாடன்

(இ - ள்.) *ஆடு அமை குயின்ற அவிர் துளை மருங்கில் கோடை அவளி குழல் இசையாக - ஆடுகின்ற மூங்கிலின்கண் வண்டுகளால் துளைக்கப்பட்ட விளங்குகின்ற துளையின பக்கத்தே மேல் காற்றினால் எழுகின்ற இசையே அழகிய வேய்ங்குழலின் இசையாகவும்; பாடு இன் அருவிப் பனிநீர் இன்னிசை தோடு அமை முழவின் துதை குரலாக - தோற்றுகின்ற அழகிய அருவியின் குளிர்ந்த நீர் வீழ்ச்சியினால் எழுகின்ற இனிய ஓசையே கூட்டமான மத்தளங்களின் செறிந்த முழக்கமாகவும்; கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு - கூட்டமாகிய கலைமான்கள் தாழ ஒலிக்கும் கடிய ஓசையே பெருவங்கியம் என்னும் துளைக்கருவியின் இசையாகவும்; மலை பூஞ்சாரல் வண்டு யாழ் ஆக - மலையினது*

அழகிய சாரலின்கண் முரலுகின்ற வண்டுகளின் இசையே யாழிசையாகவும்; இன் பல் இமிழ் இசை கேட்டுக் கலி சிறந்து மந்தி நல்அவை மருள்வன நோக்க - இவ்வாறு கேட்டற்கினிய வாகிய பல்வேறு இசைகளையும் கேட்டு ஆரவாரம் மிகுந்து குரங்கு களாகிய நல்ல அவையினர் வியப்புற்றுப் பார்க்கும்படி; கழை வளர் அடுக்கத்து இயலி ஆடும் மயில் - மூங்கில்கள் வளர்தற் கிடனுன பக்கமலைகளில் அங்குமிங்கும் உலாவிக் கூத்தாடுகின்ற மயில்கள்; விழவுக்கள விறலியின் தோன்றும் நாடன் - விழா நாளில் கூத்தாட்டரங்கத்தே புகுந்து ஆடுகின்ற கூத்தியர் போலத் தோன்றுதற்குக் காரணமான மலை நாட்டையுடைய நம் பெருமான்; என்க.

(வி - ம்.) அமை - மூங்கில். குயிலுதல் - செய்தல். கோடைவளி - மேல்காற்று: இன்னருவி - காட்சிக்கினிய அருவி என்க. தோடு - கூட்டம். தூம்பு - பெருவங்கியம். அவை - கூத்தாட்டரங்கு. விறலி - கூத்தி.

### கக - கரு: உருவ..........பலர்தில்

(இ - ள்.) உருவ வல் வில் பற்றி அம்பு தெரிந்து - அழகிய வலிய வில்லினைக் கையில் பற்றிக்கொண்டு சிறந்த கணையை ஆராய்ந்து மற்றொரு கையிற்கொண்டு; செரு செய் யானை செல் நெறி வினாஅய் - தன்னோடு போர்செய்ய வந்து தன்னால் கணை யெய்யப்பெற்றுப் புறமிட்ட யானை சென்ற வழியினை வினவி; புலர் குரல் ஏனல் புழையுடை ஒரு சிறை - முதிர்ந்த கதிர்களை யுடைய தினைக்கொல்லையின் வாயிலின் ஒரு பக்கத்தில்; மலர் தார் மார்பன் நின்றோன் கண்டோர் பலர் - மலர்ந்த மாலையையுடைய மார்பையுடையனாய் நின்றவனைப் பார்த்த மகளிர் பலராவார்; என்க.

(வி - ம்.) உருவம் - அழகு. தெரிதல் - ஆராய்தல். செரு - போர். புலர்தல் - முதிர்தல். புழை - வாயில். பலர் என்றது தோழியைக் குறித்துக் கூறியபடியாம்.

### கரு - கசு: அவருள்.........தோளேனே

(இ - ள்.) அவருள் ஆர் இருள் கங்குல் அணையொடு பொருந்தி - அம் மகளிருள் வைத்து நிறைந்த இருளையுடைய இரவின்கண் பாயலிலே கிடந்து; நீர் வார் கண்ணொடு நெகிழ் தோளேன் - நீர் ஒழுகுகின்ற கண்களோடு மெலிந்த தோள் களையும் உடையேன்; ஓர் யான் ஆகுவது எவன் கொல் - யான் ஒருத்தியே ஆவதற்கு உரிய காரணம் யாதோ அறிகின்றிலேன்; என்பதாம்.

(வி - ம்.) நாடனை மகளிர் பலர் கண்டாராக; அவரெல்லாம் அமைதியாக உறங்கா நிற்ப, யான் மட்டுமே உறக்கமின்றி வருந்துகின்றேன். மேலும் என் தோள்கள் மட்டுமே மெலிவுறுகின்றன; இதற்குக் காரணம் யாதோ என்றவாறு. எனவே என் நெஞ்சத்தை நாடன் கவர்ந்துகொண்டு போயினன் ஆதல்வேண்டும் என்பது குறிப்பாயிற்று இந்நிலை நீடிக்குமேல் யான் இறந்தொழிவேன் ஆதலால் நீ அறத்தொடு நிற்பாயாக என்பது இதன்கண் குறிப்பெச்சப் பொருள்.

இனி இதனை, தோழி வாழி நாடனுகிய மார்பன் நின்றோனைக் கண்டோர் பலர்; அவருள் அணையொடு பொருந்தி நீர் வார் கண்ணொடு நெகிழ் தோளேன் ஓர் யான் ஆதுவது எவன் கொல் என இயைத்திடுக.

(பா - வே.) ௧0. நனவுப்புகு.

## செய்யுள் ௮௩

**திணை:** பாலை.

**துறை:** தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - பொருளீட்டுதற்குத் தலைவியைப் பிரிந்து பாலைவழியில் செல்லுகின்ற தலைவன் நெஞ்சம் தலைவியின் குணநலங்களை நினைந்து வருந்தியபொழுது அவன் அந்நெஞ்சிற்குக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு "கரணத்தி னமைந்து முடிந்த காலை" எனவரும் (தொல். கற்பி. ரு) நூற்பாவின்கண் 'வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானும்' எனவரும் விதிகொள்க.

வலஞ்சுரி மராஅத்துச் சுரங்கமழ் புதுவீச்
சுரியா ருளைத்தலை பொலியச் சூடிக்
கறையடி மடப்பிடி கானத் தலறக்
களிற்றுக்கன் றொழித்த உவகையர் கலிசிறந்து
ரு கருங்கால் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து
பெரும்பொளி வெண்ணார் அழுந்துபடப் பூட்டி
நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்
நறவுநொடை நல்லில் புதவுமுதற் பிணிக்குங்
கல்லா இளையர் பெருமகன் புல்லி
௧0 வியன்றலை நன்னாட்டு வேங்கடங் கழியினும்
சேயர் என்னாது அன்புமிகக் கடைஇ
எய்தவந் தனவால் தாமே நெய்தல்
கூம்புவிடு நிகர்மலர் அன்ன
ஏந்தெழில் மழைக்கணெம் காதலி குணனே.

— கல்லாடனார்

## (உரை)

### க - கச : வலஞ்சுரி..........குணனே

**(இ - ள்.)** சுரம் மராஅத்துக் கமழ்வலம் சுரி புது வீ-பாலை நிலத்தின்கண்ணே வெண்கடம்பினது மணங்கமழ்கின்ற, வலப் பக்கமாகச் சுற்றிய புதிய மலரை; சுரி ஆர் உளைத்தலை பொலியச் சூடி - சுருள்கொண்ட தலையாட்டம் போன்று அசையும்படி தந் தலைமயிரின்மேல் அழகுறும்படி அணிந்து; கறை அடி மடப் பிடி கானத்து அலற - உரல்போன்ற அடியினையுடைய இளைய பெண்யானை காட்டகத்தே நின்று வருந்தி அலறும்படி; களிற்றுக் கன்று ஒழித்த உவகையர் - அதன் ஆணாகிய கன்றினைப் பற்றிக் கொண்ட மகிழ்ச்சியை யுடையராய்; கலி சிறந்து கருங்கால் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து - ஆரவாரம் மிக்கு வலிய அடிமரத்தினையுடைய வெண்கடம்பின் கொழுவிய கொம்பைப் பிளந்து; பெரும் பொளி வெள் நார் அழுந்துபடப் பூட்டி - பெரிதாக நைத்து உரித்தெடுத்த வெள்ளிய நாரால் இயன்ற கயிற்றினாலே காலில் வடுவுண்டாக இறுக்கிக்கட்டி; நெடுங்கொடி நுடங்கும் நியமம் மூதூர் நறவு நொடை நல்இல் புதவு முதல் பிணிக்கும் - நெடிய கொடிச்சீலைகள் அசையா நின்ற அங்காடி களையுடைய பழைமையான தமது ஊரின்கண் கள் விற்கின்ற நல்ல வீட்டினது முன்றிலிலே கொணர்ந்து கட்டுதற்கிடமான; கல்லா இளையர் பெருமகன் புல்லி வியன்தலை நல்நாட்டு வேங்கடம் கழியினும் - தந்தொழிலை யன்றிப் பிறிதொன்றும கற்றிலாத மறவர்களுக்குத் தலைவனாகிய புல்லி என்பவனுடைய பரந்த இடங்களையுடைய நல்ல நாட்டின்கண்ணதாகிய திருவேங்கடம் என்னும் மலையை யாம் கடந்து வந்தபின்பும்; நெய்தல் கூம்பு விடு நிகர் மலர் அன்ன ஏந்து எழில் மழைக்கண் எமகாதலி குணன் - நெய்தலினது குவிதல் நீங்கி மலர்ந்த ஒளியுடைய மலரை ஒத்த உயரிய அழகமைந்த குளிர்ந்த கண்களையுடைய நம் காதலியின் குணங்கள்தாம்; சேயர் என்னாது அன்புமிகக் கடைஇ எய்த வந்தன - அவர் சேய்மைக்கண் சென்றுவிட்டனர் என்று கருதாமல் அன்பு மிகவும் செலுத்துதலாலே இங்கும் நம்மை எய்துதற்கு வந்தனகாண்; என்பதாம்.

**(வி - ம்.)** வீ - பூ. சுரி - சுருள். உளை - தலையாட்டம் என்னும் ஒருவகைக் குதிரை யணி. கறை - உரல். களிற்றுக்கன்று என்றது, ஆண் கன்றினை. கலி-ஆரவாரம். பொளி - பொளிந்த - நைத்துரித்த. அழுந்துபட - தசையுள் ஆழும்படி எனினுமாம். நியமம் - அங்காடி. நொடை - விலை. புதவு முதல் - முன்றில். கள்விலைக்காகக் களிற்றுக் கன்றைக் கள்விற்போர் முன்றிலில் கொணர்ந்து கட்டும் மறவர் என்பது கருத்து. கல்லா இளையர் - நூல் கல்லாத இளையருமாம். வேங்கடம் -

திருவேங்கடம் (திருப்பதிமலை). ஆல், தாம், ஏ : அசைச் சொற்கள். நிகர் மலர் - ஒளியுடைய மலர். தலைவியின் கண்களுக்கு நெய்தலின் மலர்கள் உவமை.

இனி, இதனை யாம் புல்லி வேங்கடம் கழியினும் காதலிகுணன் சேயர் என்னுது (நம்மை) எய்த வந்தன என இயைக்க.

## செய்யுள் ௮௪

**திணை :** முல்லை.

**துறை :** தலைமகன் பாசறை இருந்து சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது—போர் மேற்சென்ற முடிவேந்தன் போர் முடிந்த பின்பும் சினந்தணியாது பாசறை இடத்து இருப்பானாக, அவனுக்குத் துணையாகச் சென்ற தலைவன் தலைவியை நினைந்து தன்னுள் வருந்திக் கூறியது என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு "ஒன்றுத் தமரினும்" எனவரும் (தொல். அகத்-௪௪) நூற்பாவின்கண் பாசறைப் புலம்பலும் எனவரும் விதிகொள்க.

மலைமிசைக் குலைஇய உருகெழு திருவில்
பணைமுழங் கெழிலி பௌவம் வாங்கித்
தாழ்பெயற் பெருநீர் வலனேர்பு வளைஇ
மாதிரம் புதைப்பப் பொழிதலின் காண்வர
௫ இருநிலங் கவினிய ஏமுறு காலை
நெருப்பின் அன்ன சிறுகட் பன்றி
அயிர்க்கண் படாஅர்த் துஞ்சுபுறம் புதைய
நறுவீ முல்லை நாண்மலர் உதிரும்
புறவடைந் திருந்த அருமுனை இயவில்
௧௦ சீறூ ரோளே ஒண்ணுதல் யாமே
எரிபுரை பன்மலர் பிறழ வாங்கி
அரிஞர் யாத்த அலங்குதலைப் பெருஞ்சூடு
கள்ளார் வினைஞர் களந்தோறும் மறுகும்
தண்ணடை தழீஇய கோடிநுடங் காரெயில்
௧௫ அருந்திறை கொடுப்பவுங் கொள்ளான் சினஞ்சிறந்து
வினைவயிற் பெயர்க்குந் தானைப்
புனைதார் வேந்தன் பாசறை யேமே.

—மதுரை எழுத்தாளன்.

## (உரை)

### க - கo: மலைமிசை..........ஒண்ணுதல்

**(இ - ள்.)** ஒள் நுதல் - ஒள்ளிய நெற்றியினையுடைய நங் காதலியானவள்; மலைமிசை குலைஇய உருகெழு திருவில் பணை முழங்கு எழிலி - மலையின் உச்சியில் வளைந்துள்ள நிறம் பொருந் திய இந்திரவில்லையும் முரசம் போன்ற முழக்கத்தையும் உடைய முகில்; பௌவம் வாங்கி தாழ்பெயல் பெருநீர் வலன் ஏர்பு வளைஇ - கடலின்கண் நீரைப் பருகித் தாழ்ந்து பெய்தற்குரிய மிக்க நீரோடு வானத்தின்கண் வலப்பக்கமாகச் சூழ்ந்து எழுச்சி யுற்று உலகத்தை வளைத்துக்கொண்டு; மாதிரம் புதைப்பப் பொழிதலின் - திசைகள் மறையும்படி மழையைச் சொரித லாலே; காண்வர இருநிலம் ஏம் உறு காலை - இனிய காட்சி யுண்டாகும்படி கவினிய பெரிய முல்லைநிலத்தில் வாழ்வோர் இன்பம் எய்துதற்குக் காரணமான கார்ப்பருவத்திலே; நெருப் பின் அன்ன சிறுகண் பன்றி அயிர்க்கண் படாஅர் துஞ்சுபுறம் புதைய நறுவீ முல்லை நாள்மலர் உதிரும் - நெருப்புப்போன்ற சிறிய கண்களையுடைய பன்றியானது நுண்ணிய மணலின்கண் ணுள்ள சிறிய தூற்றிலே உறங்குகின்றபொழுது அதன் முதுகு மறைந்து போகும்படி நறுமணங்கமழும் மலர்களையுடைய முல்லை யினது புதிய மலர்கள் உதிருகின்ற; புறவு அடைந்திருந்த அருமுனை இயவில் சீறூரோள் - காடு சார்ந்திருக்கும் அரிய முனை களையுடைய வழியிலுள்ள சிறிய ஊரினிடத்தே பிரிவாற்றாது பெரிதும் வருந்தி இருப்பாளாக; என்க.

**(வி - ம்.)** குலைஇய - வளைந்த. உரு - நிறம். திருவில் - வானவில்; (இந்திரவில்) பணை-முரசு.பணைபோல முழங்கும் எழிலி என்க. பெயல்- பெய்தல் தொழில். ஏர்பு - எழுச்சியுற்று. மாதிரம் - திசை. எழிலி வாங்கி ஏர்பு வளைஇப் புதைப்பப் பொழிதலின் என்க. காண் - காட்சி. ஏம்-ஏமம் என்பதன் விகாரம். அயிர் - நுண்மணல். படாஅர் - சிறு தூறு. துஞ்சுபுறம் புதைய - துஞ்சுங்கால் அதன் முதுகு மறைய என்க. புறவு - முல்லைப்பரப்பு. இயவு - வழி.

### கo - கஎ: யாமே..........பாசறையேமே

**(இ - ள்.)** யாமே - அவளைக் கைவிட்டு வந்த வன்கண் மையையுடைய யாம் இப்பொழுது; எரிபுரை பல் மலர் பிறழ வாங்கி அரிஞர் யாத்த அலங்கு தலைப்பெருஞ்சூடு - தீப்பிழம்பை யொத்த செந்தாமரை முதலிய பல்வேறு மலர்களும் தலைமாறும் படி அள்ளி நெல் அரிகின்ற உழவர் கட்டிய அசைகின்ற தலையை யுடைய பெரிய கதிர்க்கட்டுகளை; கள் ஆர் வினைஞர் களந்தொறும்

மறுகும் - கள்ளைக் குடித்த தொழிலாளர்கள் சுமந்துகொண்டு களந்தோறும் செல்லுதற்கிடனான; தண்ணடை தழீஇய கொடி நுடங்கு ஆர் எயில் அருந்திறை கொடுப்பவும் கொள்ளான் - மருதநிலம் சூழ்ந்த வெற்றிக்கொடி அசைகின்ற மதிலமைந்த இந்த ஊராகிய கொடுத்தற்கரிய திறைப்பொருளைப் பகை மன்னர்கள் வணங்கிக் கொடுப்பவும் ஏற்றுக்கொள்ளானாய்; சினம் சிறந்து வினைவயின் பெயர்க்கும் தானைபுனை தார் வேந்தன் - வெகுளிமிக்குப் பின்னரும் போர்த் தொழிலின்கண் செலுத்தப் படுகின்ற சேனைகளையும் அணிந்த வாகைமாலையினையும் உடைய நம்மரசனது; பாசறையேம் - பாசறை இடத்து அவளை நினைந்து வருந்தி இருக்கின்றேம், அவள் நிலை என்னையோ? என்பதாம்.

(வி - ம்.) புரை : உவமவுருபு. எரி புரை பன்மலர் என்றது செந் தாமரை செங்கழுநீர் முதலியவற்றை. மலர்களோடு அரிந்த நெல் அரிகளைத் தலைமாற வைத்துக் கட்டுதற்பொருட்டுப் பிறழ வாங்க வேண்டிற்று. அரிஞர் - கதிர் அரிந்த உழவர். சூடு - கதிர்க்கட்டு. வினைஞர் என்றது, கூலிக்கு வேலைசெய்பவரை. தண்ணடை - மருதநிலம். மருதநிலம் சூழ்ந்த தமது அரண்மனையையே பகைவர் திறையாகக் கொடுப்பவும் கொள்ளான் என்றது, அரசனது மிகையாய மறப்பண் பினைக் குறைகூறி, தன்னுள் நொந்துரைத்தவாறு. அவள் நிலை என்னையோ என்பது குறிப்பு.

இனி, ஒண்ணுதல், புறவு அடைந்திருந்த இயவில் சீறூரோள், யாமே, திறை கொடுப்பவும் கொள்ளான் வினைவயின் பெயர்க்கும் தானை வேந்தன் பாசறையேமே; என இயைத்துக் கொள்க.

(பா. வே.) ௩. தாழ் பெயற்கெதிரி. ௧0. நன்னுதல்.

## செய்யுள் ௮௫

திணை : பாலை.

துறை : தலைமகன் பிரிய வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

(து - ம்.) அஃதாவது—தலைவன் பொருள்வயின் பிரிபவன், யாம் கார்ப்பருவம் தொடங்குமுன்னே மீண்டு வருகுவம் என்று கூறிச்சென்ற வன், அப்பருவம் வந்துழியும் வந்திலனாக; பிரிவாற்றாமைபால் தலைவி அக்கார்ப்பருவ வரவு கண்டு பெரிதும் வருந்துவாளைத் தோழி, ஆற்றி இருந்திடுக என வற்புறுத்திக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு "பெறற்கரும் பெரும்பொருள்" எனவரும் நூற்பாவின்கண் (தொல். கற்பி - ௯) பிறவும் வகைபட வந்த கிளவி எனவரும் விதிகொள்க.

நன்னுதல் பசப்பவும் பெருந்தோள் நெகிழவும்
உண்ணா உயக்கமொ டுயிர்செலச் சாஅய்

இன்னம் ஆகவும் இங்குநத் துறந்தோர்
அறவர் அல்லர் அவரெனப் பலபுலந்து
ரு　ஆழல் வாழி தோழி சாரல்
ஈன்றுநாள் உலந்த மென்னடை மடப்பிடி
கன்றுபசி களைஇய பைங்கண் யானை
முற்றா மூங்கில் முளைதரு பூட்டும்
வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை
௧௦　நன்னாட் பூத்த நாகிள வேங்கை
நறுவீ யாடிய பொறிவரி மஞ்ஞை
நனைப்பசுங் குருந்தின் நாறுசினை யிருந்து
துணைப்பயிர்ந் தகவுந் துணைதரு தண்கார்
வருதும் யாமெனத் தேற்றிய
௧ரு　பருவங் காணது பாயின்றால் மழையே.

—காட்டூர் கிழார் மகனார் கண்ணனார்.

(உரை)

க - ரு : நன்னுதல்..........தோழி

(இ - ள்.) *வாழி தோழி - தோழி நீ வாழ்வாயாக; நல் நுதல் பசப்பவும் பெருந்தோள நெகிழவும் உண்ணா உயக்கமொடு உயிர் செல சாஅய் - நீதானும் அழகிய எமது நெற்றி பசலை பூப்பவும் பெரிய தோள்கள் மெலியவும் உணவு சிறிதும் உண்ணாமையால் உண்டான வருத்தத்தோடு உயிரே போகும்படி பெரிதும் மெலிந்து; இன்னம் ஆகவும் இங்கு நம் துறந்தோர் - யாம் பிரிவாற்றாமையால் இத்தன்மையேம் ஆகாநிற்பவும இவ்விடத்தே நம்மைக் கைவிட்டுச் சென்றனர்; அவர் அறவர் அல்லர் என பலபுலந்து - ஆதலால் நீ கூறுவதுபோல நம் தலைவர் அறவோர் அல்லர்; அத்தகையோர் வருதலும் அரிது என இன்னோரன்ன பற்பல சொல்லி வெறுத்து; ஆழல் - துன்பத்தில் மூழ்கிவிடாமல் ஆற்றுக; எனக.*

(வி - ம்.) *அவரால் அன்பு செய்யப்பட்ட நாம் பிரிவாற்றாமையால் இத்தகைய நிலையை எய்தும்படி துணிந்து துறந்துபோயினர். ஆதலால் அத்தகைய வன்கண்ணர் நம்மை நினைந்து வருதலும் அரிது என்பாள் இன்னம் ஆகவும் நத்துறந்தார் அவர் அறவர் அல்லர் என்று வன்புறை எதிரழிந்து கூறுகின்றாள். தோழி, நம்பெருமான் அறவோர் ஆகலான் இன்னே வருகுவர்! என்று வற்புறுத்தியதற்கு அவர் அறவர் அல்லர் என்று மறுத்தவாறு.*

ரு - கரு : சாரல்.........மழையே

**(இ - ள்.)** சாரல் ஈன்று நாள் உலந்த மெல்நடை மடப்பிடி கன்று பசிகளைஇய-மலைப்பக்கத்தே கனறு ஈன்று சின்னாள் கழிந்த மெல்லிய நடையையுடைய இளைய பெண்யானைக்கும் அதன் கன்றிற்கும் பசி தீர்த்தற்பொருட்டு; பைங்கண் யானை முற்றா மூங்கில் முளை தருபு ஊட்டும்-பசிய கண்ணையுடைய களிற்றியானை முதிராத மூங்கிலினது முளைகளைக் கொணர்ந்து அவற்றின் வாயில் ஊட்டுதற்கிடனான; வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை - வெற்றியையுடைய வேற்படையை யேந்திய திரையன் என்னும் அரசனுடைய திருவேங்கடம் என்னும் நெடிய மலையின்கண்; நல் நாள் பூத்த இளவேங்கை நறுவீ ஆடிய பொறி வரி மஞ்ஞை - அழகிய விடியற்காலத்தே மலர்ந்துள்ள பெரிதும் இளமையுடைய வேங்கை மரத்தினது நறுமணங்கமழும் பூக்களினூடே நுழைந்து அவற்றின் துகள்படியப்பெற்ற புள்ளியையும் கோடுகளையும் உடைய மயிற் சேவலானது; நனை பசு குருந்தின் நாறு சினை இருந்து துணை பயிர்ந்து அகவும் - அரும்பிய பசிய குருந்த மரத்தினது நறுமணங்கமழுகின்ற கிளையின்மேல் இருந்து தனது பெடையை அழைத்து அகவுதற்குக் காரணமான; துனை தருதண் கார் வருதும் யாம் எனத் தேற்றிய - விரைதலைச் செய்கின்ற குளிர்ந்த கார்ப்பருவத்துத் தொடக்கத்தே வருவேம் யாம் என்று சொல்லி நம்மை நம்பெருமான் தேற்றிய; பருவம் மழை பாயின்று அதுகாண் - பருவமாகிய கார்ப்பருவத்து மழையும் பரவுகின்றது அதனை இங்கு வந்து பார்! நம்பெருமான் இப்பொழுதே வருகுவர்; என்பதாம்.

(வி - ம்.) சாரல் - மலை சார்ந்த இடம்; ஈன்று நாள் உலந்த மடப்பிடி தானே இரைதேட மாட்டாமைக்கு, மென்னடை என்றது குறிப்பேதுவாய் நின்றது. பிடியானைக்கும் அதன் கன்றிற்கும் களிற்றியானை பிடிக்கு ஈன்ற வயிறும் கன்றிற்குக் குழவி வயிறும் உண்மையின் முற்றாத முளை கொணர்தல் வேண்டிற்று. நம்பெருமான் இக்காட்சியைக் காணுங்கால் நின்னை நினைவர் ஆதலின் காலம் நீட்டித்திரார் என இறைச்சிப் பொருள் தோன்றிற்று. மேலே மயில் பெடையை அழைக்கும் கார்ப்பருவம் என்றதும், இங்ஙனமே அன்புறு தகுந இறைச்சியில் சுட்டிய படியாம். நம்பெருமான் குறித்துச் சென்ற கார்ப்பருவமும் இதோ வந்து விட்டது என்பாள், மழை பாயின்று என்றாள். ஆதலால் நம்பெருமான் இன்னே வருகுவர் வருந்தாதே கொள் என்பது குறிப்பெச்சம். தலைவி துன்பத்தில் மூழ்கிப் பிறிதொன்றையும் காணாதிருத்தலின், அம்மழையை விரலாற் சுட்டி அதுகாண் என்றாள்.

இனி இதனை, தோழி வாழி நாம் இன்னம் ஆக, நம்மைத் துறந்தார். (அத்தகைய அவர்) அறவர் அல்லர் (வன்கண்ணர்)அவர் வருதலும்

அரிது, எனப்புலந்து ஆழல் : அவர் வருதும் எனத் தேற்றிய பருவமும் இது. இதோ மழை பாயின்று அதுகாண் ; என இயைத்திடுக.

(பா. வே.) கக. பொறி வரை. கங. பயிர்ந்திறைஞ்சு துனை தரு.

## செய்யுள் அசு

திணை : மருதம்.

துறை : வாயில் மறுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியது. தலைமகளைக் கூடி இன்புற்றிருந்த தலைமகன் பண்டு நிகழ்ந்தது சொற்று இன்புற்றிருந்ததூஉமாம்.

(து - ம்.) அஃதாவது—பரத்தையர் சேரியினின்றும் வந்து தோழியைத் தலைவன் வாயில் வேண்ட, தோழி அதனை மறுத்தபொழுது அவன் பண்டு நிகழ்ந்த தொன்றனை நினைவு கூர்ந்து அவட்குச் சொல்லியது. தலைவியோடு அளவளாவி இருந்த தலைவன் தலைவிக்குப் பண்டு நிகழ்ந்ததைச் சொல்லி அசதியாடியதுமாம் என்றவாறு.

(இ - ம்.) இதற்கு "கரணத்தின் அமைந்து முடிந்த" எனவரும், (தொல். கற்பி - ரு.) நூற்பாவின்கண் அன்னபிறவும் மடம்பட வந்த தோழிக்கண்ணும் எனவரும் விதி கொள்க.

உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
ரு கனையிருள் அகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் டிங்கள்
கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
கO முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
கரு நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து

பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
௨0 ஓரிற் கூடிய உடன்புணர் கங்குல்
கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்
தொடுங்கினள் கிடந்த ஓர்புறந் தழீஇ
முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
அஞ்சினள் உயிர்த்த காலை யாழநின்
௨௫ நெஞ்சம் படர்ந்த தெஞ்சா துரையென
இன்னகை இருக்கைப் பின்யான் வினவலின்
செஞ்சூட் டொண்குழை வண்காது துயல்வர
அகமலி உவகையள் ஆகி முகனிகுத்
தொய்யென இறைஞ்சி யோளே மாவின்
௩0 மடங்கொள் மதைஇய நோக்கின்
ஒடுங்கீர் ஓதி மாஅ யோளே.

—நல்லாவூர் கிழார்.

(உரை)

க – எ : உழுந்து..........வந்தென

(இ - ள்.) கனை இருள் அகன்ற கவின் பெறு காலை - மிக்க இருள் நீங்கிய அழகுடைய விடியற்காலத்தே; கோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள் கேடு இல் விழுப்புகழ் நாள் தலை வந்தென - தீய கோள்கள் தன்னைவிட்டு நீங்கப்பெற்ற வளைந்த வெள்ளிய திங்களானது தீமை இல்லாத சிறந்த புகழையுடைய உரோகணி நாளிடத்தே வந்தெய்தியதாக அப்பொழுது; உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை பெருஞ்சோற்று அமலை நிற்ப - நம்முடைய இல்லத்தின்கண் உழுத்தம பருப்புப் பெய்து சமைத்த கொழுவிய களியாகிய மிதவையோடு மிக்க சோற்றினையும், சுற்றத்தாரும் பிறரும் உண்ணுதலாலே உண்டாகும் ஆரவாரமும் இடையறாது நிற்பவும்; நிரை கால் தண் பெரும்பந்தர்த் தரு மணல் ஞெமிர - வரிசையாக நடப்பட்ட கால்களையுடைய குளிர்ந்த திருமணப்பந்தின் கீழெல்லாம் புதிதாகக் கொணர்ந்த மணலைப் பரப்பி; மனை விளக்கு உறுத்து மாலை தொடரி - இல்லத்தின்கண் திருவிளக்கேற்றி வைத்து மலர்மாலை சூட்டி; என்க.

(வி - ம்.) உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை என்பது ஒருவகைத் துணை உணவு; அஃதாவது உழுத்தம் பருப்புப் பொங்கல் என்றவாறு. பெருஞ்சோறு என்றது அறுசுவை உணவை. அமலை -

ஆரவாரம். ஈண்டுத் திருமணத்திற்கு வந்துள்ள மாந்தரனைவரும் உண்ணுதலாலே உண்டாகின்ற ஆரவாரம். திருமணக்காலத்தில் பந்தரிட்டுப் புதுமணல் பரப்புதலும் விளக்கேற்றி வைத்து அதற்கு மாலைசூட்டுதலும் இற்றைநாள் போலவே பண்டைநாளினும் வழக்கமாய் இருந்தமை உணரலாம். பண்டைநாள் தமிழ்ச் சான்றோர் திருமணத்திற்குத் திங்களும் உரோகணியும் சேர்ந்த நாளைச் சிறப்பாகக் கொண்டனர் என்பதும் இங்குணரப்படும்.

அ - கஎ: உச்சி..........தயங்க

(இ - ள்.) உச்சிக் குடத்தர் புதுஅகல் மண்டையர் - தலையில் குடத்தை உடையவரும் புதிய அகன்ற வாயையுடைய மட்பாண்டத்தை உடையவரும் ஆகிய; பொது செயகம்பலை முது செம் பெண்டிர் - பொதுபபணி செய்வதில் ஆர்வமும் ஆரவாரமும் உடைய முதுமையுடைய மங்கலநாண் உடைய பேரிளம் பெண்டிர்; முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தர - முன்னே கொடுப்பனவும் பின்னே கொடுப்பனவும் ஆகியவற்றை அறிந்து முறையே கொணர்ந்து கொடுக்குந்தொறும் கொடுக்குந்தொறும் வாங்கி; புதல்வர் பயந்த திதலை அவயிற்று வால் இழை மகளிர் நால்வர் கூடி - மக்களைப்பெற்ற தேமல் படர்ந்த அழகிய வயிற்றையும் சிறந்த அணிகலன்களையும் உடைய மங்கல மகளிர் ஒரு நால்வர் ஒருங்கு குழுமி நின்றுசெய்யுஞ் சடங்குகளை எல்லாம் செய்தபின்னர்; கற்பினின் வழாஅ நல்பல உதவி பெற்றோன் பெட்கும் பிணையை ஆகு என - கற்பொழுக்கத்தினின்றும் சிறிதும் வழுவாமல் நல்ல பலவாகிய உதவிகளையும் செய்து உன்னை மனைவியாகப்பெற்ற நின் கணவனை நீ பெரிதும் விரும்புகின்றவள் ஆகுக என்று சொல்லி வாழத்தி; நீரொடு சொரிந்த ஈர்இதழ் அலரி பல் இருங்கதுப்பின் நெல்லொடு தயங்க வதுவை நல்மணம் கழிந்த பின்றை - மங்கல நீரோடு விரவிச் சொரியப்பெற்ற நனைந்த இதழையுடைய மலர்கள் பலவாகிய கரிய கூந்தலின்மேல் நெற்களுடனே திகழாநிற்ப இவ்வாறு வதுவையாகிய நல்ல திருமணச் சடங்குகள் செய்து கழிந்த பின்னர் என்க.

(வி - ம்.) இப் பகுதியால் பண்டைக்காலத்தில் தமிழர் ஆரியப் பார்ப்பனரின் சடங்குகள் இன்றித் திருமணச் சடங்குகள் செய்தமுறை நன்குணரப்படும். இதன்கண் முதுசெம் பெண்டிர் என்புழிச் செம்மையும் வாலிழை மகளிர் என்புழி இழையும் மங்கலநாண் உடைய மகளிர் என்பதை உணர்த்தின. பெற்றோன் - கணவன். பெட்கும் - விரும்பும், பிணை - பெண்.

## கஅ - உச : கல்லென்..........உயிர்த்தகாலை

**(இ - ள்.)** தமர் கல் என் சும்மையர் ஞெரேர் எனப் புகுதந்து பேர் இல் கிழத்தி ஆகு எனத் தர - அவ்வழி இருமுது குரவரை உள்ளிட்ட சுற்றத்தார் கலீர் என்று ஒலிக்கின்ற ஆரவாரத்தையுடையராய்க் காலந்தாழாது வந்து புகுந்து தலைவியை நோக்கி நீ பெரிய மனைவாழ்க்கைக்கு உரியை ஆவாயாக என்று வாழ்த்தி என் கையில் ஓம்படை செய்யாநிற்ப; ஓர் இல் கூடிய உடன்புணர் கங்குல் - அற்றைநாள் அவளும் யானும் ஒரு படுக்கை யறையின்கண் சேர்ந்த புணர்ச்சிக்குரிய இரவின்கண்; கொடும்புறம வளைஇக் கோடிக் கலிங்கத்து ஒடுங்கினள் கிடந்த ஓர் புறம் தழீஇ முயங்கல் விருப்பொடு முகம புதை திறப்ப - நாணத்தாலே அவள் தன் முதுகினை வளைத்துக் கொண்டு தனது புதுபுடைவைக்குள் ஒடுங்ககிடந்த இடத்தினை எய்தி யான அவளைத் தழுவும் விருப்பத்தோடு அவள் முகத்தினை மூடி இருந்த புடைவையைச் சிறிது திறவாநிற்ப; அஞ்சினள் உயிர்த்த காலை - அவள் தன் பெண்மையாலே அஞ்சி நெடு மூச்செறிந்த பொழுது; என்க.

**(வி - ம்.)** தமர் - ஈண்டுத் தாய்தந்தை முதலியோர். கல்லென், ஞெரேரென என்பனவற்றுள் முன்னது ஒலியும் பின்னதுவிரைவும்பற்றி வந்த குறிப்பு மொழிகள். ஓர் இல் என்றது பள்ளியறையை. இதனைச் சதுர்த்தியறை என்பாருமுளர். முன்பே நாணத்தால் வளைந்த முதுகினைப் பின்னும் வளைத்து என்பான் கொடும்புறம் வளைஇ என்றான். கோடிக் கலிங்கம்-புதுப்புடைவை. ஒடுங்கினள்: முற்றெச்சம். புதை-மறைப்பு. அஞ்சினள்: முற்றெச்சம்.

## உச - ருக: யாழநின்...........மாஅயோளே

**(இ - ள்.)** மாவின் மடம் கொள் மதைஇய நோக்கின் ஒடுங்கு ஈர் ஓதி மாஅயோள்-மானினது மடப்பமுடைய மதர்த்த பார்வையினையும் ஒடுங்கிய நெய்ப்புடைய கூந்தலையும் மாமை நிறத்தினையும் உடைய நின் தலைவியை நோககி; இன் நகை இருக்கைப்பின் யான் யாழநின் நெஞ்சம் படர்ந்தது எஞ்சாது உரை என வினவலின் - இனிய மகிழ்ச்சியோடு யாங்கள் இருந்த இருக்கையின்மேல் இருந்ததன் பின்னர் யான் அன்புடையாய்! நின நெஞ்சம் நினைந்தவற்றை மறையாமல் எனக்குச் சொல்க என்று வினவாநிற்ப; செ சூடு ஒள்குழை வண் காது துயல் வர அகமலி உவகையள் ஆகி முகன் இகுத்து-அவள் சிவந்தஅணிகல ஞகிய ஒள்ளிய குழைகள் தனது வளவிய செவிகளில் அசைந் தாடும்படி உள்ளம் நிறைந்த மகிழ்ச்சியை உடையவளாய்

நாணம்மிக்கு விரைந்து முகங்கவிழ்ந்து குனிந்தனள்காண்; அதுதான் அவள் பண்பு என்பதாம்.

(வி - ம்.) எனவே அத்தகைய அன்பும் நாணமுமுடையாள் இவ்வாறு ஊடி இருத்தற்குக் காரணம் நீயே என்பது குறிப்புப் பொருளாயிற்று. இது தலைவன் தோழி வாயில் மறுத்தமைபற்றி அவளைக் கடிந்த படியாம். இதன் பயன் தோழி மீண்டும் வாயில் நேர்தலாம் என்றுணர்க. இன்னகை இருக்கைப்பின் என்றது இடக்கர் அடக்கு. புணர்ந்தபின் என்றபடி. செஞ்சூடு என்புழிச் சூடு அணிகலன். மா - மான். மதைஇய - மதர்த்த. ஓதி - கூந்தல்.

இனி இச்செய்யுளை, தலைவியை ஊடல் தீர்க்கும் தலைவன் அவள் முகங்கொடாமையின் முன்னிலைப் புறமொழியாகப் பண்டு அவளது அன்புநிலை கூறி அப்படி இருந்தவள் இங்ஙனம் ஆயினள் எனத்தன்நெஞ்சிற்குக் கூறியது என்பதே மிகவும் பொருத்தமாம்.

இனி இதனை வதுவை கழிந்த பின்றை, தமர்தர ஓரிற்கூடிய கங்குல் கலிங்கத்து ஒடுங்கினள் கிடந்த புறம் தழீஇ, முகம்புதை திறப்ப உயிர்த்த காலை நின்நெஞ்சம் படர்ந்தது எஞ்சாது உரையென யான் வினவலின் மாயோள் முகன் இகுத்து ஒய்யென இறைஞ்சியோள் என இயைத்துக் கொள்க.

(பா - வே.) ௧0. தரீஇய. ௧௧. பயந்த. ௧௲. நுமர்தர.

## செய்யுள் அஎ

**திணை :** பாலை.

**துறை :** வினைமுற்றி மீளுந் தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது தலைவியைப்பிரிந்துபோய் மீள்கின்ற தலைவன் இடைவழியில் அவளை நினைந்து விதுப்புறுகின்ற தன் நெஞ்சிற்குச் சொல்லியது என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு, 'கரணத்தின் அமைந்து முடிந்தகாலை' எனவரும் (தொல் கற்பி-டு) நூற்பாவின்கண் மீட்டு வரவு ஆய்ந்த வகையின் கண்ணும் எனவரும் விதி கொள்க.

**தீந்தயிர் கடைந்த திரள்கால் மத்தம்**
**கன்றுவாய் சுவைப்ப முன்றில் தூங்கும்**
**படலைப் பந்தர்ப் புல்வேய் குரம்பை**
**நல்கூர் சீறூர் எல்லித் தங்கிக்**
**௫ குடுமி நெற்றி நெடுமரச் சேவல்**
**தலைக்குரல் விடியல் போகி முனாஅது**

கடுங்கண் மறவர் கல்கெழு குறும்பின்
எழுந்த தண்ணுமை இடங்கட் பாணி
அருஞ்சுரம் செல்வோர் நெஞ்சம் துண்ணெனக்
க0 குன்றுசேர் கவலை இசைக்கும் அத்தம்
நனிநீ டுழந்தனை மன்னே அதனால்
உவவினி வாழிய நெஞ்சே மையற
வைகுசுடர் விளங்கும் வான்தோய் வியனகர்ச்
சுணங்கணி வனமுலை நலம்பா ராட்டித்
கரு தாழிரு கூந்தனங் காதலி
நீளமை வனப்பின் தோளுமா ரணந்தே.

--மதுரைப் பேராலவாயார்

(உரை)

கஉ: வாழிய நெஞ்சே

**(இ - ள்.)** *நெஞ்சே வாழிய - எனது நெஞ்சமே நீ வருந்தாதே கொள், நீடு வாழ்வாயாக.*

க - சு: தீந்தயிர்.........போகி

**(இ - ள்.)** *தீம்தயிர் கடைந்த திரள் கால் மத்தம் கன்று வாய் சுவைப்ப முன்றில் தூங்கும் படலைப் பந்தாப் புல்வேய் குரம்பை நல்கூர் சீறூர் - இனிய தயிரைக் கடைந்த பின்னர்த் திரண்ட காம்பினையுடைய மத்து, கன்றனது தன் நாவினாலே நக்கிச்சுவைக்கும்படி முற்றத்திலே தொங்கா நின்ற மர நிழலாகிய பந்தரையும், புல்லால் வேயப்பட்ட குடில்களையும் உடைய வறுமைமிக்க சிறிய ஊரின்கண்; எல்லித் தங்கிக் குடுமி நெற்றி நெடு மரச் சேவல் தலைக் குரல் விடியல் போகி - இரவின்கண் தங்கிச் சூட்டினையுடைய நீண்ட மரததின்கண் இருந்த சேவலினது முதல் கூக்குரல் உண்டான விடியற்காலத்திற்கு முன்னரே எழுந்து சென்று; என்க.*

**(வி - ர்.)** *கால் - காம்பு. வாய்: ஆகுபெயர்; நா என்க. படலை - தழை. மரத்தின் தழை நிழலாகிய பந்தர் என்க. எல்லி - இரவு. சேவல் - கோழிச் சேவல். இரவில் மரத்தில் அமர்ந்து துயிலும் சேவல் என்றவாறு. தலைக்குரல் என்றது சேவல் முதலில் கூவும் குரலை. விடியல் - கண்டுப் பொழுது விடிதற்குக் காரணமான வைகறைப் பொழுதினை.*

## கூ - கக: முரஅது..........மன்னே

(இ - ள்.) முரஅது கடுங்கண் மறவர் கல்கெழு குறும்பின் எழுந்த தண்ணுமை இடங்கண் பாணி - முற்படக் கிடந்த வழி இடத்தேயுள்ள அஞ்சாமையையுடைய மறவர்கள் வாழுகின்ற மலையிடத்தே பொருந்திய குறும்பின்கண் உண்டான தண்ணுமை என்னும் தோற்கருவியினது அகன்ற கண்ணினின்று எழுகின்ற ஓசை; அருஞ்சுரம் செல்வோர் நெஞ்சம் துண் எனக் குன்று சேர் கவலை இசைக்கும் அத்தம் - கடத்தற்கரிய பாலை வழியிலே செல்கின்ற வழிப்போக்கருடைய நெஞ்சம் நடுங்கும்படி ஒலித்தற் கிடனான மலைப்பக்கத்தில் அமைந்த கிளை வழிகளையுடைய இந்தக் காட்டினூடே; நனி நீடு உழந்தனை மன் - நீ மிகவும் நீள வருந்தி வந்தாய்; என்க.

(வி - ம்.) மறவர் எயின மறவர் - கல்கெழு குறும்பு, என்றதனால் இது குறிஞ்சி திரிந்த பாலை என்பது பெற்றாம். 'மேலை தீந்தயிர் கடைந்த ......தங்கி' என்றதனால் அது முல்லை திரிந்த பாலை என்க. தண்ணுமை - ஒருவகைத் தோற்கருவி. பாணி - ஓசை. தண்ணுமை ஆறலை கள்வர் பறை ஆதலின் ஆறு செல்வோர் நெஞ்சம் நடுங்கும் என்க. கவலை - கிளைத்த வழி. அத்தம் - பாலைநிலம். நீடு - நீள. மன்: அசைச்சொல். முல்லையும் குறிஞ்சியும் ஆகிய இருவகைப் பாலை நிலங்களையும் நெடிது வருந்திக் கடந்தாய் என்றிரங்குவான், நனி நீடு உழந்தனை மன் என்றான்.

## கக - கசு: அதனால்..........அணைந்தே

(இ - ள்.) அதனால் மை அற வைகு சுடர் விளங்கும் வான் தோய் வியன் நகர் - ஆதலால் இருள் தீரும்படி விடியுமளவும் எரிகின்ற விளக்குகள் திகழ்கின்ற வானத்தைத் தீண்டுகின்ற அகன்ற நம்முடைய இல்லத்தின்கண் சென்று அங்கு; தாழ்இருங் கூந்தல் நம்காதலி - நம்முடைய வருகையை எதிர்பார்த்திருக்கும் தாழ்ந்த கரிய கூந்தலையுடைய நம்மாருயிர்க் காதலியைக் கண்டும்; சுணங்கு அணி வனமுலை நலம் பாராட்டி - அவளுடைய தேமல் படர்ந்த அழகிய முலையினது அழகைப் பாராட்டியும்; நீள் அமை வனப்பின் தோளும ஆர் அணைந்து - நீண்ட மூங்கில் போன்ற அழகையுடைய அவளுடைய தோள்களைத் தழுவியும்; இனி உவ - இனிமேல் இவ்வருத்தமெலாம் தீரும்படி பெரிதும் மகிழ்வாயாக என்பதாம்.

(வி - ம்.) அதனால் - அவ்வாறு உழந்ததனால் இனி, உவ என்றான். அவ்வுழப்பின் பயனை இனி நீ எய்துவை என்பான் உழத்தலை ஏதுவாக்கினான். தாழ் இருங்கூந்தல் நிலந்தோய நீண்டு வளர்ந்த கூந்தல் என்க. இனி நமது பிரிவினால் கை செய்யாமல் வாளாது தூங்குகின்ற கூந்தல் எனினுமாம். ஆர்: அசைச்சொல்.

இனி இதனை, நெஞ்சே நீ சீறூர் எல்லித்தங்கி விடியற்போகி அத்தம் நீடு உழந்தனை மன்னே அதனால் வியனகர் நம் காதலி முலைநலம் பாராட்டி அணைந்து இனி உவ என இயைத்துக் கொள்க.

(பா - வே.) இடைச்சுரத்து மீளலுறும் நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

## செய்யுள் அஅ

**திணை :** குறிஞ்சி.

**துறை :** இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

(து - ம்.) தலைவன் களவொழுக்கமே காமுற்று மணஞ்செய்து கோடலிற் கருத்தின்றி நாள்தோறும் வந்து மீள்பவன் ஒருநாள் இரவின்கண் சிறைப்புறத்தே வந்து நிற்றலை அறிந்த தோழி அவனை வரைவு கடாவுவாள் அவன் கேட்பத் தலைவியை நோக்கிக் கூறுவாள் போலக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை "நாற்றமும் தோற்றமும்" எனவரும் (தொல். களவி - உ௩) நூற்பாவின்கண், "களனும் பொழுதும்......அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும்" எனவரும் விதியாலமைத்துக் கொள்க.

முதைச்சுவல் கலித்த மூரிச் செந்தினை
ஓங்குவணர்ப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்
பகுவாய்ப் பல்லிப் பாடோர்த்துக் குறுகும்
புருவைப் பன்றி வருதிறம் நோக்கிக்
௫ கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய
நெடுஞ்சுடர் விளக்கம் நோக்கி வந்துநம்
நடுங்குதுயர் களைந்த நன்ன ராளன்
சென்றனன் கொல்லோ தானே குன்றத்
திரும்புலி தொலைத்த பெருங்கை யானைக்
௧௦ கவுள்மலி பிழிதரும் காமர் கடாஅம்
இருஞ்சிறைத் தொழுதி யார்ப்ப யாழ்செத்
திருங்கல் விடரளை அசுணம் ஓர்க்கும்
காம்பமல் இறும்பில் பாம்புபடத் துவன்றிக்
கொடுவிரல் உளியம் கெண்டும்
௧௫ வடுவாழ் புற்றின வழக்கரு நெறியே.

—ஈழத்துப் பூதன் தேவனார்.

## (உரை)

### க - எ : முதை...........நன்னராளன்

**(இ - ள்.)** முதைச்சுவல் கலித்த மூரிச் செந்தினை ஓங்குவணர்ப் பெருங்குரல் உணீஇய-முதிய மேட்டுக் கொல்லையில் தழைத்துள்ள பெரிய சிவந்த தினைப்பயிரின்கண் உயர்ந்து வளைந்த பெரிய கதிர்களைத் தின்னுதற்காக; பாங்கர்ப் பகுவாய்ப் பல்லிப் பாடு ஓர்த்துக் குறுகும் - நல்ல திசையிலே பிளந்த வாயையுடைய பல்லி சொல்லுதலை ஆராய்ந்து அச்சொல் கேட்டவுடன் வருகிற இயல்பையுடைய; புருவைப்பன்றி வருதிறம் நோக்கி - இளம்பன்றி வருகின்ற செவ்வியைப்பார்த்து; கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய நெடுஞ்சுடர் விளக்கம் நோக்கி வந்து - வலிய கையையுடைய குறவன் தனது பரண்மிசைக் கொளுத்திவைத்த நீண்ட ஒளியினையுடைய விளக்கினை அடையாளமாக வைத்து நமது படப்பையின்கண் இரவுக் குறியிடத்தே வந்தருளி; நம்நடுங்கு துயர் களைந்த நன்னராளன் - நம்முடைய நடுங்குதற்குக் காரணமான வருத்தத்தைப் போக்கிய நன்மையுடையோன் ஆகிய நம்பெருமான்; என்க.

**(வி - ம்.)** முதை - முதுமை. கலித்தல் - தழைத்தல். மூரிச் செந்தினை என்பது தினை வகையினுள் ஒன்று. வணர் - வளைந்த குரல்-கதிர். உணீஇய உண்ண (தின்ன); பன்றி தினைக்கதிரைத் தின்ன வரும்போது பல்லி சொல்வதை ஆராய்ந்து பார்த்து நன்னிமித்தமாயின் வரும் என்றது. செய்யா மரபின செய்தனபோலக் கூறியதொரு வழுவமைதி என்க. இதன் பயன் தினை நுகர்தற்குப் பன்றி நிமித்தம் பார்த்து வருவதாகக் கானவன் அது வருதிறமறிந்து சுடர் கொளுத்தினாற்போலத் தாமும் நமக்கு நடுங்குதுயர் வருதிறம் அறிந்து வந்து அளிசெய்தாரேனும் அவ்வொளியில் பன்றியினது வரவு வெளிப்படுமாறு போல நம்பெருமான் வரவும் வெளிப்படும் என இறைச்சி வகையால் தலைவனை அறிவுறுத்துதல் என்க. புருவை - இளமை.

### அ - கரு : சென்றனன்..........நெறியே

**(இ - ள்.)** குன்றத்து இரும்புலி தொலைத்த பெருங்கை யானைக்கவுள் மலிபு இழிதரும் காமர்கடாஅம் - மலையின்கண் பெரிய புலியைக் கொன்ற பெரிய கையினையுடைய யானையினது கவுளின்கண் மிகுந்து ஒழுகுகின்ற அழகிய மதநீரை உண்ணுதற் பொருட்டு மொய்க்கின்ற; இருஞ்சிறைத் தொழுதி ஆர்ப்ப - கரிய சிறகுகளையுடைய வண்டின் கூட்டம் முரலாநிற்ப; இருங்கல் விடர் அளை அசுணம் யாழ் செத்து ஓர்க்கும் - பெரிய மலையினது பிளப்பினால் உண்டான* பொந்தின்கண் உறைகின்ற

அசுணப்பறவை அவ்விசையைக் கேட்டு இவ்விசை யாழினிசையோ என்று கருதிச் செவி கொடுத்துக் கேட்பதற்கு இடனான; காம்பு அமல இறும்பில் பாம்பு படத் துவன்றி உளியம் கொடுவிரல் கெண்டும் - மூங்கில் அடர்ந்த குறுங்காட்டில் பாம்புகள் இறந்தொழியுமபடி நெருங்கிக் கரடி தன் வளைந்த விரல்களாலே தோண்டும்; வடுவாழ் புற்றின வழக்கு அருநெறியே - சுவடு பதிந்துள்ள புற்றுக்களையுடைய மக்கள் செல்லுதற்கு அரிய வழியின்கண்; சென்றனன் கொல்லோ தானே - நம்பெருமான் மீண்டு போயினனோ; என்பதாம்.

(வி - ம்.) எனவே இத்தகைய இன்னாமை மிக்க வழியிலேதான் நம்பெருமான் நம் பொருட்டு நாள்தோறும் வந்து போகின்றார். அவர்க்கு ஏதேனும் ஏதம் நிகழுமாயின் யாம் உயிர் வாழவல்லமோ என்று இம்மகளிர் பெரிதும் அஞ்சுகின்றனர் என்று தலைவன் உணர வேண்டும் என்பது இத்தோழியின் கருத்தாகும் என்க. இதன் பயன் தலைவன் வரைதற்கண் முயல்வானாதல். வண்டின் ஓசையை அசுணம் யாழிசை என்று கருதி மகிழுதல் போல நம்பெருமானும் இக்களவின்பத்தையே சிறந்த இன்பம் என்று கருதுகின்றான்; இதனினும் சிறந்த அறத்தொடுபட்ட இன்ப வாழ்க்கையை நினைகின்றிலன் என இதன்கண் உள்ளுறை காண்க.

இனி, இதனைத் தோழி கானவன் கொளீஇய விளக்கம் நோக்கி வந்து நம் துயர் களைந்த நன்னராளன் புற்றின, (ஆகிய) வழக்கரு நெறி சென்றனன் கொல்லோ என இயைத்துக் கொள்க.

(பா - வே.) கரு. காம்புபயி.

## செய்யுள் அகூ

**திணை :** பாலை.

**துறை :** மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

(து - ம்.) தலைவன் தலைவியை அவள் தமர் அறியாமல் தன்னுடன் அழைத்துப் போய்விட அச்செய்தி அறிந்த செவிலித்தாய் தலைவியின் மென்மை கருதி வருந்திக் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இலவே" (தொல். அகத் - சஉ) என்பதனால் அமைத்துக் கொள்க.

**தெறுகதிர் ஞாயிறு நடுநின்று காய்தலின்**
**உறுபெயல் வறந்த ஓடுதேர் நனந்தலை**
**உருத்தெழு குரல குடிஞைச் சேவல்**
**புல்சாய் விடரகம் புலம்ப வரைய**

டு　கல்லேறி இசையின் இரட்டும் ஆங்கண்
சிள்வீடு கறங்கும் சிறியிலை வேலத்
தூழுறு விளைநெற் றுதிரக் காழியர்
கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப் பொழியக்
களரி பரந்த கல்நெடு மருங்கின்
கo　விளரூன் தின்ற வீங்குசிலை மறவர்
மைபடு திண்டோள் மலிர வாட்டிப்
பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய
திருந்துவாள் வயவர் அருந்தலை துமித்த
படுபுலாக் கமழும் ஞாட்பில் துடியிகுத்
கரு　தருங்கலந் தெறுத்த பெரும்புகல் வலத்தர்
வில்கெழு குறும்பிற் கோள்முறை பகுக்குங்
கொல்லை யிரும்புனம் நெடிய என்னாது
மெல்லென் சேவடி மெலிய ஏக
வல்லுநள் கொல்லோ தானே தேம்பெய்
உo　தளவுறு தீம்பால் அலைப்பவும் உண்ணாள்
இடுமணற் பந்தருள் இயலும்
நெடுமென் பணைத்தோள் மாஅ யோளே.

—மதுரைக் காஞ்சிப் புலவர்.

## (உரை)

### கக - உஉ: தேம்பெய்..........மாஅயோளே

(இ - ள்.) தேம்பெய்து அளவுறு தீம்பால் அலைப்பவும் உண்ணாள் - தேன்பெய்து அளாவிய இனிய பாலைக் கோல் கொண்டு அச்சுறுத்தவும் பருக மறுத்து; இடுமணல் பந்தருள் இயலும் - கொணர்ந்து பரப்பிய மணலையுடைய பந்தரின்கண் என் கைக்கு அகப்படாமல் அங்குமிங்குமாக ஓடுகின்ற; நெடுமென் பணைத்தோள் மாஅயோள் - நெடிய மெல்லிய மூங்கில் போன்ற தோளையும் மாமை நிறத்தினையும் உடையவளாகிய என் செல்வி என்க.

(வி - ம்.) தேம் - தேன். இடுமணல் - கொணர்ந்திட்ட மணல். பந்தர் - முன்றிலிலிட்ட பந்தர் என்க. முதுமையுடைய செவிலி கைக்கு அகப்படாமல் அங்குமிங்குமாக ஓடுவாள் என்றவாறு. இதனோடு 'முத்தரிப் பொற்சிலம்பொலிப்பத் தத்துற்று, அரிநரைக் கூந்தற் செம்

முது செவிலியர், பரிமெலிந் தொழியப் பந்தர் ஓடி, ஏவல் மறுக்கும் சிறு விளை யாட்டி" எனவரும் நற்றிணை (கக0) ஒப்புநோக்குக.

### க - ரு: தெறுகதிர்...........ஆங்கண்

(இ - ள்.) தெறுகதிர் ஞாயிறு நடுநின்று காய்தலின் - சுடுகின்ற கதிரவன் வானத்துச்சியில் நின்று எரித்தலான்; உறுபெயல் வறந்த ஓடுதேர் நனந்தலை - மிக்க மழைநீர் வற்றிபபோன பேய்த்தேரையுடைய அகன்ற பாலைப் பரப்பின் கண்; குடிஞைச் சேவல் புல்சாய் விடர் அகம் புலம்ப வரைய - கூகைச் சேவல் பசும் புற்களும் அழிந்துபட்ட தம் பொந்துகள் தனித் தொழியப் பறந்துபோய் மலையின்கண் இருந்து; கல்லெறி இசையின் உருத்து எழுகுரல் இரட்டும் ஆங்கண்-மலையினின்றும சரிகின்ற கற்கள் உண்டாக்குகின்ற ஓசைபோல வெப்பத்தோடு எழுகின்ற குரலையுடையவாய் மாறி மாறிக் குழறுகின்ற அவ்விடத்தே என்க.

(வி - ம்.) தெறுதல் - சுடுதல்; அழித்தலுமாம். ஓடு தேர் என்றது, பேய்த்தேரை. உருத்தெழு குரல என்புழி, உருத்தல் - வெப்பம் செய்தல். குடிஞை - கூகை; பேராந்தை என்பதுமது. இரட்டுதல் - ஒன்று ஒலித்த உடன் மற்றொன்று ஒலித்தல்.

### சு - கூ: சிள்வீடு..........மருங்கின்

(இ - ள்.) சிள்வீடு கறங்கும் சிறி இலை வேலத்து ஊழ் உறு விளைநெற்று உதிரக் காழியர் கவ்வைப் பரப்பின் வெவ் உவர்ப்பு ஒழியக்களரி பரந்த-சிள்வீடு என்னும் வண்டுகள் ஆரவாரிக்கின்ற சிறிய இலையினையுடைய வேலமரத்தின்கண் காய்த்து முற்றிய நெற்றுக்கள் உதிரா நிற்ப வண்ணார்கள் தொழிலுக்குதவும் வெவ்விய உவர்மண் ஒழியக் களர்மண் பரந்துள்ள; கல்நெடு மருஙகின் - மலைப்பக்கத்தே அமைந்த நீண்ட இடத்தினையும்.

(வி - ம்.) சிள்வீடு - இடையறாது ஒலித்துக்கொண்டிருக்கும் ஒரு வகை வண்டுகள். இவை வேலமரத்தில் மிகுதியாகக் காணப்படும். வேல் - கருவேல். அத்து : சாரியை. ஊழ் - ஊழ்த்தல். உறு - பகுதிப் பொருட்டு. கல் - பரற்கல்லுமாம்.

### க0 - கச: விளரூன்..........ஞாட்பின்

(இ - ள்.) விளர் ஊன் தின்ற வீங்கு சிலை மறவர் மை படு திண் தோள் மலிர - நிணமாகிய ஊனைத்தின்ற வீக்கிய வில்லையுடைய எயினர்; மை போன்று கறுத்த தம் தோள்கள்

பூரிக்கும்படி; பொறைமலி கழுதை நெடு நிரை தழீஇய திருந்து வாள் வயவர் வாட்டி - சுமைமிக்க கழுதைகளின் நீண்ட வரிசையைத் தொடர்ந்து வருகின்ற திருந்திய வாட்போரில் வன்மையுடைய மறவராகிய வணிகரைப் போரின்கண் வென்று; அருந்தலை துமித்த படுபுலாக் கமழும் ஞாட்பின் - துணித்தற்கு அரிய தலைகளைத் துணித்துப்போகட்டமையால் உண்டான புலால் நாறுகின்ற போர்க்களத்தின்கண் என்க.

**(வி - ம்)** விளர் - நிணம். வீக்குசிலை வீங்குசிலை என மெலிந்தது. வீக்குதல் - கட்டுதல். நாண் ஏற்றிய சிலை என்றவாறு. பொறை - பண்டச்சுமை. வயவர் என்றது வணிகரை. வணிகர் பண்டங்களைக் கழுதையில் ஏற்றிக்கொண்டு செல்லுவர். இவரை வாணிகச் சாத்து என்ப. அவருள்ளும் வீரர் உளர் ஆகலின் சாத்து என்னாது வயவர் என்றார். புலா - ஊன். ஞாட்பு - போர்க்களம்.

**கச - கக: துடியிகுத்து.........தானே**

**(இ - ள்.)** துடி இகுத்து அருங்கலம் தெறுத்த பெரும்புகல் வலத்தர் - தமது வெற்றிக்கு அறிகுறியாகத் துடியை மெல்ல முழக்கிப் பெறற்கரிய அணிகலன்களை அவ் வணிகர்பால் திறையாகப் பெற்றுக் குவித்த பெரிய போர் விருப்பமுடைய வெற்றியையுடைய அம்மறவர்கள்; வில் கெழு குறும்பின் கோள் முறை பகுக்கும் கொல்லை இரும்புனம் நெடிய என்னாது - விற்கள் பொருந்திய தம்மூராகிய குறும்பின்கண் ஒவ்வொருவரும் கொள்ளும் முறைபபடி பகுத்துக் கொள்ளுதற்கிடனான வறிய கொல்லைகளையும் பெரிய தினைப்புனங்களையும் உடைய வழி நீண்டன என்று கருதாமல்; மெல் என் சேவடி மெலிய ஏக வல்லுநள் கொல்லோ தானே - தனது மெல்லிய சிவந்த அடிகள் மெலியுமாறு அவனோடு நடந்து செல்ல மாட்டுவளோ என்பதாம்.

**(வி - ம்.)** குறும்பு - எயினர் ஊர். கோள்முறை - இன்னார்க்கு இத்துணை எனத் தொன்றுதொட்டுப் பகுத்துக் கொடுக்கும் முறை. கொல்லைகளையும் புனத்தையும் உடைய வழி என்க. கொல் : ஐயம். ஓ தான், ஏ : அசைச் சொற்கள்.

இதனை, பால் அலைப்பவும் உண்ணாளாய் இயலும் மாஅயோள் கொல்லை இரும்புனம் நெடிய என்னாது சேவடி மெலிய ஏக வல்லுநள் கொல்லோ என இயைத்துக் கொள்க.

**(பா - வே.)** ௬. குடுமிச் சேவல். ௧௧. திணிதோள். ௨௧. பந்தரியலு.

## செய்யுள் ௯௦

**திணை :** நெய்தல்.

**துறை :** பகற்குறி வந்து கண்ணுற்று நீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு நின்று இற்செறிப்பு அறிவுறீஇயது.

(து - ள்) அஃதாவது வரைதற்கண் கருத்தின்றிக் களவொழுக்கமே காமுற்று நாள்தோறும் பகற்குறியிடத்தே வந்து மீளுகின்ற தலைவனை ஒருநாள், தோழி தமியளாய்ச் சென்று எதிர்ப்பட்டு, தலைவியைத் தமர் இற்செறித்தமை கூறிக் குறிப்பாக வரைவு கடாஅயது, என்றவாறு.

(இ - ள்) இதற்கு "நாற்றமும் தோற்றமும்" எனவரும் (தொல். களவி - ௨௩) நூற்பாவின்கண் அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும் எனவரும் விதி கொள்க.

முத்தோ ரன்ன வெண்டலைப் புணரி
இளையோ ராடும் வரிமனை சிதைக்கும்
தளையவிழ் தாழைக் கானலம் பெருந்துறைச்
சில்செவித் தாகிய புணர்ச்சி அலரெழ
௫ இல்வயின் செறித்தமை அறியாய் பன்னாள்
வருமுலை வருத்தா அம்பகட்டு மார்பில்
தெருமரல் உள்ளமோடு வருந்தும் நின்வயின்
நீங்கு கென்றியான் யாங்ஙனம் மொழிகோ
அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணாஅது
௧௦ பெருங்கடல் முழக்கிற் றாகி யாணர்
இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கடுங்கண் கோசர் நியமம் ஆயினும்
உறுமெனக் கோள்ளுநர் அல்லர்
நறுநுதல் அரிவை பாசிழை விலையே.

—மதுரை மருதனிள நாகனார்.

### (உரை)

### க - ௫: முத்தோர்..........அறியாய்

(இ - ள்.) *முத்தோர் அன்னவெள் தலைப்புணரி இளையோர் ஆடும் வரிமனை சிதைக்கும் - நரைத்த தலையையுடைய முதியவர் போல வெள்ளிய தலையையுடைய கடலானது பேதை மகளிர்*

விளையாடுகின்ற மணல் வீட்டினை அழித்தற்கிடனுன, தளை அவிழ தாழைக் கானல் அம்பெருந்துறை - மடல் விரிந்து மலர்கின்ற தாழையையுடைய கடற்கரைச் சோலையையுடைய பெரிய துறை யிடத்தே நிகழ்ந்த; சில் செவித்து ஆகிய புணர்ச்சி அலர் எழ - ஒரு சில மகளிர் செவிகளில் மட்டுமே பட்டிருந்த நுங்கள் இயற்கைப் புணர்ச்சி, பின்னர் யாண்டும் அலராக எழா நிற்றலால்; இல்வயின் செறித்தமை அறியாய் - எங்கள் சுற்றத் தார் தலைவியை இற்செறித்தமை நீ அறிந்திலை. என்க.

(வி - ம்.) இதன்கண் மூத்தோர் இளையோரை வருத்தார் அன்றே! மூத்தோர் போன்ற கடல் அவ்வறத்தைக் கடைப்பிடிக்காமல் பேதை மகளிர் மனையைச் சிதைத்தாற் போன்று பேரறிவுடைய நீர் சிறியே மாகிய எங்களை நுமது களவொழுக்கத்தாலே பெரிதும் வருத்துகின்றீர் என உள்ளுறை காண்க. கடலின்கண் அலைகள் வெள்ளிய துளிகளோ டும் நுரையோடும் புரளுங்கால் வெண்மையாகத் தோன்றுமாதலின் வெண்டலைப் புணரி என்ருள். வரிமனை மணலால் வரி வரியாகக் கோலும் சிற்றில். தளை - கட்டு. செவித்து - செவியின் கண்ணது. புணர்ச்சி - கூட்டம். முன்னர் அம்பலாய்ச் சிலர் மட்டும் அறிந்த நும் புணர்ச்சி இப்பொழுது அலராய்ப் பலரானும் அறியப்பட்டது. ஆதலால் எமர் தலைவியை இச்செறித்தனர் நீ அதனை அறியாது வருகின்றனை என்றவாறு.

### ரு - அ: பன்ருள்..........மொழிகோ

(இ - ள்.) பல் நாள் அம் பகட்டு மார்பின் வருமுலை வருத்தா தெருமரல் உள்ளமொடு - பல நாளாக நீ வளரும் முலையினையுடைய எம் பெருமாட்டியை நின் அழகிய பெருமை யுடைய நினது மார்பினாலே வருத்திச் சுழலுகின்ற நெஞ்சத்தோடு வருந்துகின்ற, நின்வயின நீங்குக என்று யான் யாங்ஙனம் மொழிகு - நின்னிடத்தே நீ இவ்வாறு வாராதே கொள் என்று யான் எவ்வாறு துணிந்து சொல்லுவேன்; என்க.

(வி - ம்.) வருமுலை : அன்மொழித்தொகை. மார்பினாலே வருத்தி என்க. வருத்தா - வருத்தி. தெருமரல் - சுழற்சி. கண்ணேட்டமின்றி நின்னிடத்தில் யான் சொல்லமாட்டுவனே என்றவாறு. எங்கள் வருத் தம் அறிந்து வரைந்துகொள்ள நினையாத உமக்கு நீங்குமென்று அறிய யான் சொன்னாலும் அறியீர் என்னும் கருத்தான் யாங்ஙனம் மொழிகோ என்றனள்; என்பர் பழையவுரையாசிரியர்.

### கூ - கச: அருந்திறல்.........விலையே

(இ - ள்.) பெருங்கடல் முழக்கிற்று ஆகி யாணர் அருந்திறல் கடவுள் செல்லூர் - பெரிய கடல்போல முழக்கத்தையுடைய தாகிப் புதிய வருவாயினையும் உடைய அரிய திறலையுடைய

தெய்வங்கள் பலி கொள்ளுகின்ற செல்லூரின்: குறைஅது இரும்பு இடம் படுத்த வடுஉடை முகத்தர் கடுங்கண் கோசர் நியமம் ஆயினும் - கிழக்கின் கண்ணதாகிய இரும்பாலியன்ற படைக் கலங்கள தமமிடம் உண்டாக்கிய வடுக்களை உடைய முகத்தை உடையராகிய அஞ்சாமையையுடைய கோசருடைய ஊரினைக் கொடுத்தாலும்; நறுநுதல் அரிவை பாசிழை விலை உறும் எனக் கொள்குநர் அல்லர் - எம் சுற்றத்தார் எம் பெருமாட்டிக்குப் புதிய அணிகலன்களுக்கு விலையாக அமையும் என்று மனத்தில் அமைதி கொள்ளுவார் அல்லர் காண்; என்பதாம்.

(வி - ம்.) இரும்பு - பகைவருடைய வேல் அம்பு முதலிய படைக் கலம்; அப் படைக்கலங்களால் விழுப்புண்பட்டு உண்டாகிய தழும்பு களையுடைய முகத்தையுடைய கோசர் வாழுகின்ற ஊராகிய நியமம் என்றவாறு. எனவே நீ உன்னுடைய சான்றோரைக் கொண்டு மகட் பேசி எமரையும் அமைதி செய்துகொண்டு வரைந்து கோடல் வேண்டும் என்பது கருத்தாயிற்று.

இனி இதனைப் பெருமானே நீ அலரெழ எம்பெருமாட்டியை இற் செறித்தமை அறியாமல் வருந்துகின்றாய் நின்வயின் யான் நீங்குக என்று யாங்ஙனம் மொழிகு. எமர் நியமம் கொடுப்பினும் இழைவிலை உறும் எனக் கொள்குநர் அல்லர் என இயைத்துக் கொள்க.

(பா. வே.) கஉ. கருங்கட்.

## செய்யுள் கூக

**திணை :** பாலை.

**துறை :** பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

**(து - ம்.)** அஃதாவது—தலைவன் பொருள் ஈட்டுதற்குத் தலைவி யைப் பிரிந்து போனவன் குறித்த பருவத்தே வாராமையின் தலைவி பிரிவாற்றாது வருந்துவாளை ஆற்றியிருந்திடுக என வற்புறுத்துகின்ற தோழி சொல்லியது என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு, "பெறற்கரும் பெரும்பொருள்" எனவரும் (தொல். கற்பி - கூ) நூற்பாவின்கண், பிறவும் வகைபட வந்த கிளவி, என்னும் விதிகொள்க.

விளங்குபகல் உதவிய பல்கதிர் ஞாயிறு
வளங்கெழு மாமலை பயங்கெடத் தெறுதலின்
அருவி யான்ற பெருவரை மருங்கில்
சூர்ச்சுனை துழைஇ நீர்ப்பயங் காணது

௫ பாசி தின்ற பைங்கண் யானை
ஓய்பசிப் பிடியோ டொருதிறன் ஒடுங்க
வேய்கண் ணுடைந்த வெயிலவிர் நனந்தலை
அரும்பொருள் வேட்கையின் அகன்றன ராயினும்
பெரும்பே ரன்பினர் தோழி இருங்கேழ்
௧0 இரலை சேக்கும் பரலுயர் பதுக்கைக்
கடுங்கண் மழவர் களவுழ வெழுந்த
நெடுங்கால் ஆசினி ஒடுங்காட் டும்பர்
விசிபிணி முழவின் குட்டுவன் காப்பப்
பசியெனை வறியாப் பணைபயில் இருக்கைத்
௧௫ தடமருப் பெருமை தாமரை முனையின்
முடமுதிர் பலவின் கொழுநிழல் வதியும்
குடநாடு பெறினும் தவிரலர்
மடமான் நோக்கிநின் மாணலம் மறந்தே.

—மாமூலனார்.

## (உரை)

### க – கூ: விளங்கு.........தோழி

(இ - ள்.) விளங்கு பகல் உதவிய பல் கதிர் ஞாயிறு வளம் கெழு மாமலை பயம கெடத் தெறுதலின் - உலகின்கண் உயிர் களுக்கு எல்லாப் பொருளும் விளங்குதற்குக் காரணமான பகற் பொழுதை வழங்கிய பலவாகிய கதிர்களையுடைய ஞாயிற்று மண்டிலம் வளம் பொருந்திய பெரிய மலைகள் தம் பயன்கள் கெடும்படி காய்தலாலே; அருவி ஆன்ற பெருவரை மருங்கில் சூர்ச்சுனை துழைஇ நீர்ப்பயம் காணது பாசி தின்ற பைங்கண் யானை - அருவிகள் இல்லையான பெரிய மலைச்சாரலிலே தீண்டி வருத்தும் தெய்வங்கள உறைகின்ற சுனைகளிடத்தே இறங்கிக் கையினல் துழவிப் பார்த்தும் நீராகிய பயனைக் காணமல் அவ்விடத்தே உலர்ந்து கிடக்கும் பாசியைத் தின்ற பசிய கண்ணை யுடைய யானையானது; ஓய் பசிப் பிடியொடு ஒரு திறன் ஒடுங்க வேய் கண் உடைந்த வெயில் அவிர் நனந்தலை - இயக்கம் ஓய்ந்து போதற்குக் காரணமான பசியோடே தனது பிடியானையோடு ஒரு பக்கத்தே ஒடுங்கிக் கிடப்ப மூங்கில்களின் கணுக்கள் உடையும்படி காய்கின்ற வெயில் விளங்குகின்ற அகன்ற பாலைப்

பரப்பிலே; அரும்பொருள் வேட்கையின் அகன்றனர் ஆயினும் பெரும்பேர் அன்பினர் - நம்பெருமான் ஈட்டுதற்கரிய பொருளின் கண் அவாவினாலே நம்மைக் கைவிட்டுப் போயினர் ஆயினும், அவர் தாம் மிகப் பெரிய அன்புடையர் அல்லரோ! ஆதலால்; எனக.

(வி - ம்.) இதன்கண் நம்பெருமான் செல்லும் வழியின்கண் களிற்றியானை நீரும் உணவும் பெறாது ஓய்ந்துழியும் தன் பிடியோடு ஒருபக்கத்தே கிடத்தலைக் காண்பர்; அங்ஙனம் காணும்பொழுது அவர் உன்னை நினையாதிரார் என, அன்புறு தகுந இறைச்சியில் சுட்டியவாறு காண்க.

பயம் - பயன். சூர் - தீண்டிவருத்துந் தெய்வம். பாசி - உலர்ந்த பாசி என்க. வேய்கண் - மூங்கிலினது கணு.

### 10 - 15: இருங்கேழ்.........மறந்தே

(இ - ள்.) இருங்கேழ் இரலை சேக்கும் பரல் உயர் பதுக்கை - கரிய நிறமுடைய இரலை மான்கள் உறங்கும் பரற் கற்களால் உயர்ந்த கற்குவியலின் கண்ணே; கடுங்கண் மழவர் களவு உழவு எழுந்த நெடுங்கால் ஆசினி ஒடுங்காட்டு உம்பர் - அஞ்சாமையையுடைய மழநாட்டினர் ஆக்களைக் களவு செய்யும் களவேர் உழவருக்கு உதவியாக வளர்ந்த நெடிய காலையுடைய ஆசினிப்பலாவையுடைய ஒடுங்காடு என்னும் ஊருக்கு அப்பாலுள்ள; விசிபிணி முழவின் குட்டுவன் காப்ப பசியென அறியாப பணைபயில் இருக்கை - இறுக்கிக் கட்டிய முழவினை யுடைய குட்டுவன் காத்தலால் குடிகள் பசி என்று சொல்லி அறியாத மருத நிலமிக்க ஊர்களையுடைய; தடமருப்பு எருமை தாமரை முனையின் முடம் முதிர்பலவின் கொழுநிழல் வதியும் - வளைந்த கொம்பினையுடைய எருமை தான் மேய்ந்த தாமரையை வெறுக்குமானால் முடத்தன்மை மிகுந்த பலாவினது கொழுவிய நிழலிலே தங்குதற்கிடனான; குடநாடு பெறினும் - குட நாட்டையே பெறுவதானாலும்; மடமான் நோக்கி நின் மாண் நலம் மறந்து தவிரலர் - மடப்பம் பொருந்திய பார்வையினை யுடையோய் நினது மாட்சிமைப்பட்ட அழகினை மறந்து தங்குவாரல்லர் எனபதாம்.

(வி - ம்.) எனவே அவர் இப்பொழுதே வருகுவர் நீ வருந்தாதே கொள் என்பது குறிப்பெச்சம் ஆயிற்று. நம்பெருமான் பெரும்பேரன் பினர் ஆதலால் அவர் குடநாடு பெறினும் நின்நலம் மறந்து தங்குவா ரல்லர் என்றாளாயிற்று. இரலை - ஒருவகை மான். களவுஉழ என்றது களவு செய்ய என்றவாறு. களவு செய்வார்க்கு ஒடுங்காடு உதவியாய் இருக்கும் என்பது கருத்து. குட்டுவன் - சேரன். பணைபயில் இருக்கை

என்றது மருதநிலத்தூர்களை. பலாமரம் பெரும்பாலும் மூடம்பட்டிருத்தல் இயல்பு ஆதலின் முடமுதிர் பல என்றார்.

இனி இசனை, தோழி! மான் நோக்கி! பேரன்பினர் கனந்தலை அரும்பொருள் வேட்கையின் அகன்றனராயினும் குடநாடு பெறினும் நின்நலம் மறந்து தவிரலர் என இயைத்துக் கொள்க.

(பா. வே.) உ. வயங்கெழு. ௩. பெருவள மருங்கிற்.

## செய்யுள் கூஉ

**திணை :** குறிஞ்சி

**துறை :** இரவுக்குறிச் சென்று தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலைமகனைப் பகற்குறி நேர்ந்தவாய்பாட்டால் தோழி வரைவு கடாயது.

(து - ம்.) அஃதாவது—மணஞ்செய்து கோடலில் கருத்தின்றி நாள்தொறும் இரவுக்குறியின்கண் வந்து போகின்ற தலைவனை வரைவு முடுக்குதற் பொருட்டுத் தோழி ஒருநாள் தலைவன் இரவில் வந்து மீள்பவன் எதிர்சென்று நீ இனி இரவில் வாராதே கொள்! யாம், நாளைத் தினை காவலுக்கு வருவேம் என நீ பகலில் வருக என்பதுபடச் சொல்லியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு "நாற்றமும் தோற்றமும்" எனவரும் (தொல். களவி - உ௩) நூற்பாவின்கண் களனும் பொழுதும்.........அனைவகையான் வரைதல் வேண்டினும் எனவரும் விதிகொள்க.

நெடுமலை யடுக்கம் கண்கெட மின்னிப்
படுமழை பொழிந்த பானாட் கங்குல்
குஞ்சரம் நடுங்கத் தாக்கிக் கொடுவரிச்
செங்கண் இரும்புலி குழுமுஞ் சாரல்
௫ வாரல் வாழியர் ஐய நேரிறை
நெடுமென் பணைத்தோள் இவளும் யானும்
காவல் கண்ணினம் தினையே நாளை
மந்தியும் அறியா மரம்பயில் இறும்பின்
ஒண்செங் காந்தள் அவிழ்ந்த ஆங்கண்
௧௦ தண்பல் அருவித் தாழ்நீர் ஒருசிறை
உருமுச்சிவந் தெறிந்த உரனழி பாம்பின்
திருமணி விளக்கிற் பெறுகுவை
இருண்மென் கூந்தல் ஏமுறு துயிலே.

—மதுரைப் பாலாசிரியர் நற்றமனார்.

## (உரை)

### க - ரு : நெடுமலை..........ஐய

**(இ - ள்.)** ஐய வாழிய நெடுமலை அடுக்கம் கண் கெட மின்னிப் படு மழை பொழிந்த பால் நாள் கங்குல் - பெருமானே ! நீ வாழ்வாயாக ! நெடிய மலைச்சாரலிலே கண்ணின் ஒளி மழுங்கும்படி மின்னி மிகவும் மழை பொழிந்த நள்ளிரவின் இருளிலே ; குஞ்சரம் நடுங்கத் தாக்கிக் கொடுவரிச் செங்கண் இரும்புலி குழூஉம் சாரல் - யானை நடுங்கும்படி தாக்கி வளைந்த வரிகளையும் சிறந்த கண்ணையுமுடைய பெரிய புலியானது முழங்கா நின்ற மலையின் பக்கத்தே ; வாரல் - இனி நீ வாராதே கொள் ; என்க.

**(வி - ம்.)** இதன்கண் புலி யானையைத் தாக்கி முழங்கும் சாரல் என்பது ஆற்றது தீமை கூறி இரவில் வாரற்க என்றதற்கு ஏதுக் காட்டிய படியாம்.

படுமழை - மிக்க மழை. குஞ்சரம் - யானை. குழூஉதல் - முழங்குதல். வாரல் : அல்லீற்று எதிர்மறை வியங்கோள்.

### ரு - எ : நேர் இறை..........நானை

**(இ - ள்.)** நானை நேர் இறை நெடுமெல் பணைத்தோள் இவளும் யானும் - நாளைப் பகற்பொழுதிலே அழகிய முன் கையையும் நெடிய மெல்லிய பருத்த தோளையும் உடைய எம் பெருமாட்டியும் யானும் ; தினை காவல் கண்ணினம் - தினைப் புனத்தைக் காவல் செய்தற்குக் கருதியுள்ளேம் ; என்க.

**(வி - ம்.)** நேர் - அழகு. இறை - முன்கை : ஆகுபெயர். தலைவி இருவர்க்கும் நெஞ்சத்தினள் ஆதலால் இவள் என அண்மைச் சுட்டால் சுட்டினள்.

### அ - கரு : மந்தியும்..........துயிலே

**(இ - ள்.)** மந்தியும் அறியா மரம் பயில் இறும்பின் ஒள் செங்காந்தள் அவிழ்ந்த ஆங்கண் - குரங்குகளும் ஏறி அறிய வொண்ணாதபடி வளர்ந்த மரங்கள் மிகுந்த சிறிய காட்டிலே ஒள்ளிய செங்காந்தள் மலர்ந்துள்ள அவ்விடத்திலே ; தண்பல் அருவித் தாழ்நீர் ஒருசிறை - குளிர்ந்த பல அருவிகளின் நீர் விழுகின்ற ஓரிடத்தே ; உருமு சிவந்து எறிந்த உரன் அழி பாம்பின் திருமணி விளக்கின் - இடிஏறு சினந்து முழங்குதலாலே வலியழிந்த பாம்பு உமிழ்ந்த சிறந்த மணியாகிய

விளக்கொளியிலே; இருள்மெல் கூந்தல் ஏம் உறு துயில் பெறுகுவை - இருண்ட மெல்லிய இவளுடைய கூந்தலாகிய பாயலிலே இன்பம் எய்துதற்குக் காரணமான துயிலை எய்துவாய் என்பதாம்.

(வி - ர்.) பயில் - மிகுந்துள்ள. இறும்பு - காடு. உரும் - இடி. சிவப்பு - இங்குச் சினம். உரன் - வலிமை. பாம்பு - இடியால் உர னழிந்து மணியை உமிழும் ஆதலின் அது விளக்கு ஆயிற்று. ஏம் - இன்பம். ஏமுறு துயில்: இடக்கர் அடக்கு. மரம் பயில் காடு ஆதலின் மணி விளக்கு வேண்டிற்று என்க.

இனி அருவி பாய்ந்து காந்தள் முதலிய மலர்கள் மலர்தலின் அங்கு மலர் பறிக்க வருவாரும் உளர். ஆதலின் பகற்குறியும் இன்னல் உடைத்து என இறைச்சிப் பொருளில் குறித்தவாறும் உணர்க.

இனி இதனை, ஐய! வாழிய! பாளுட்கங்குல் குஞ்சரந் தாக்கிப் புலி குழுமும் சாரல் வாரல், இவளும் யானும் நாளைத் தினை காவல் கண்ணி னம், (நாளை) இறும்பில் காந்தள் அவிழ்ந்த ஆங்கண் ஒருசிறை விளக் கில் கூந்தல் ஏம் உறு துயில் பெறுகுவை! என இயைக்க.

## செய்யுள் ௬௩

திணை: பாலை.

துறை: வினைமுற்றி மீளலுறுந் தலைமகன் இடைச்சுரத்துத் தன் னெஞ்சிற்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது — பொருள் தேடுதற்குத் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் தான் நினைந்தாங்கு நிரம்பப் பொருளீட்டி முடிந்தவுடன் மீண்டு வருபவன், தலைவியை நினைந்து விதுப்புறுகின்ற தன்னெஞ்சிற்குச் சொல்லியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "கரணத்தின் அமைந்து முடிந்த காலை" என வரும் (தொல். கற்பி - ௫) நூற்பாவின்கண் மீட்டுவரவு ஆய்ந்த சிறப் பின்கண்ணும் எனவரும் விதிகொள்க.

கேள்கே டூன்றவும் கிளைஞர் ஆரவும்
கேளல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்
ஆள்வினைக் கெதிரிய ஊக்கமொடு புகல்சிறந்
தாரங் கண்ணி அடுபோர்ச் சோழர்
௫ அறங்கெழு நல்லவை உறந்தை அன்ன
பெறலரு நன்கலன் எய்திய நாடும்
செயலருஞ் செய்வினை முற்றின மாயின்
அரண்பல கடந்த முரண்கொள் தானை

வாடா வேம்பின் வழுதி கூடல்
௧௦ நாளங் காடி நாறும் நறுநுதல்
நீளிருங் கூந்தல் மாஅ யோளொடு
வரைகுயின் றன்ன வான்தோய் நெடுநகர்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து
௧௫ நலங்கேழ் ஆகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகஞ் சென்மோ நெஞ்சே வரிநுதல்
வயந்திகழ் பிமிழ்தரும் வாய்புகு கடாத்து
மீளி மொய்ம்பொடு நிலனெறியாக் குறுகி
ஆள்கோட் பிழையா அஞ்சுவரு தடக்கைக்
௨௦ கடும்பகட் டியானை நெடுந்தேர்க் கோதை
திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்
தெண்ணீர் உயர்கரைக் குவைஇய
தண்ணான் பொருநை மணலினும் பலவே.

— கணக்காயனார் மகனார் நக்கீரனார்.

## (உரை)

### ௧௬..........நெஞ்சே

(இ - ள்.) நெஞ்சே - ஆள்வினை முடித்த அரும்பெறல் நெஞ்சமே கேள் ; என்க.

(து - ங்.) வினைமுற்றி மீள்தலால் தலைவன் தன் நெஞ்சைப் பாராட்டி விளித்தலின் நெஞ்சே என்பது ஆள்வினை......நெஞ்சே என்பது படுகின்றது.

### ௧ - ௭ : கேள்.........ஆயின்

(இ - ள்.) கேள் கேடு ஊன்றவும் கிளைஞர் ஆரவும் கேள் அல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும் - நம் உறவினர்களைத் துன்பம் போக்கித் தாங்கவும் மேலும் சுற்றத்தார்கள் பெருகவும் சுற்றத்தார் அல்லாதார் சுற்றத்தார் போல நம்மொடு பொருந்தி நடக்கவும் காரணமான ; ஆளவினைக்கு எதிரிய ஊக்கமொடு புகல் சிறந்து - தாளாண்மைக்குப் பொருந்திய ஊக்கத்தோடும்

கூடிய விருப்பத்தால் சிறப்புற்று; ஆரம்கண்ணி அடுபோர் சோழர் அறம்கெழு நல் அவை உறந்தை அன்ன - ஆத்திமாலை சூடிய பகைவரைக் கொல்லுகின்ற போர் வன்மை மிக்க சோழருடைய நல்லறம் நிலைபெற்ற அவையையுடைய உறையூர் போன்ற; பெறல் அரும் நல்கலம் எய்திய நாடும் செயலரும் செய்வினை முற்றினம் ஆயின் - பெறுதற்கரிய நல்ல அணிகலன்களை அடையும் பொருட்டு நாடுகின்ற செய்தற்கரிய பொருளீட்டுந் தொழிலைச் செய்து முடித்தேம் ஆதலாலே; என்க.

(வி - ம்.) கேள் - அணுகிய சுற்றத்தார். கிளைஞர் சேயராகிய சுற்றத்தார் என்க. கேளல் கேளிர் என்றது, நொதுமலரை. நொதுமலரும் கேளிராகி ஒழுகவும் என்றவாறு. ஆள்வினை - ஆண்மைக்கியன்ற தொழில். எதிரிய செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம் இவற்றிற்கெல்லாம் கருவி, பொருளாகலின் பொருளீட்டுதலை ஆள்வினை என்றான். புகல் - விருப்பம்.

### அ - கக: அரண்..........மாஅயோளொடு

(இ - ள்.) அரண்பல கடந்த முரண் கொள் தானை வாடா வேம்பின் வழுதி - பகை அரண்கள் பலவற்றையுங் கடந்த வலிமையையுடைய படைகளையுடைய பொன்னாலியன்ற வேப்பம்பூ மாலையை அணிந்த பாண்டியனுடைய; நாள் அங்காடி நாறும் நறு நுதல் நீள் இருங் கூந்தல் மாஅயோளொடு - மதுரையினிடத்துள்ள நாளங்காடிபோல நறுமணங் கமழுகின்ற நறிய நுதலையும் நீண்ட கூந்தலையும் மாமை நிறத்தினையுமுடைய நம் ஆருயிர்க் காதலியோடு என்க.

(வி - ம்.) அரண்-பகைவர் அரண். முரண் - வலிமை; இகலுமாம். வாடாவேம்பு என்றமையின் பொன்னாற் செய்த வேப்பம் பூமாலை என்பது பெற்றும். வழுதி - பாண்டியன். கூடல் - மதுரை. அல்லங்காடியும் உண்டாதலின், நாளங்காடி என்றார்.

### கஉ - கரு: வரை..........போழ்ப்ப

(இ - ள்.) வரை குயின்று அன்ன வான்தோய் நெடுநகர் - மலையைக் குடைந்து வைத்தாற் போன்ற வானத்தைத் தீண்டுகின்ற நெடிய நமது இல்லத்தின்கண்; நுரை முகந்து அன்ன மெல் பூஞ் சேக்கை நிவந்த பள்ளி - எண்ணெயினது நுரையை முகந்து வைத்தாற் போன்ற மென்மையுடைய மலர்ப் பாயலையுடைய உயர்ந்த கட்டிலிடத்தே; நெடுஞ்சுடர் விளக்கத்து - நெடிய சுடரையுடைய விளக்கொளியின்கண்;

நலங்கேழ் ஆகம் பூண் வடுப் பொறிப்ப - நம்முடைய அழகு பொருந்திய மார்பின்கண் அவனுடைய பூண்கள் வடுப்படுத்தும் படி என்க.

(வி - ம்.) நகர் - இல்லம். நுரை - எண்ணெயின் நுரை என்க. இது பூம்படுக்கைக் குவமை பள்ளி - பள்ளிக்கட்டில். ஆகம் - மார்பு. பூண் தலைவியினது பூண் என்க.

கசு - உரு: வரிநுதல்..........பலவே

(இ - ள்.) வரிநுதல் வாய்புகு கடாத்து வயம் திகழ்பு இமிழ்தரும் மீளி மொய்ம்பொடு - வரி பொருந்திய நெற்றியினையும் வாயிடத்துப் புகும் மத நீரையும் வலிமை விளங்க முழங்கும் மறத்தன்மைமிக்க ஆற்றலோடு; குறுகி ஆள் நிலன் எறியா கோள் பிழையா அஞ்சுவரு தடக்கை கடும் பகட்டு யானை - பகைப் படையை அணுகி ஆளைப் பிடித்து நிலத்தில் அறைந்து கொல்லும் தொழிலில் தப்பாத அச்சம் வருதற்குக் காரணமான கடிய களிற்றுயானையையும்; நெடுந்தேர்க் கோதை திருமா வியன் நகர்க் கருவூர் - நெடிய தேரினையும் உடைய சேரனது செல்வம் மிகுந்த பெரிய அகன்ற தலை நகரமாகிய கருவூரின்கண்; தெள்நீர் தண் ஆன் பொருநை முன்துறை உயர் கரைக் குவை இய மணலினும் பல முயங்குகம் சென்மோ - தெளிந்த நீரையுடைய தண்ணிய ஆன்பொருநை யாற்றின் இறங்குதுறை யின்மருங்கே உயர்ந்த கரையின்கண் குவிந்துள்ள மணலினும் காட்டில் பலமுறை தழுவிக் கொள்வோம்; ஆதலால் விதுப்புறுதே அமைந்து என்னோடு வருவாயாக; என்பதாம்.

(வி - ம்.) பொருநை மணலினும் பல முயங்குகம் சென்மோ எனக் கூட்டுக. மீளி போரின்கண் வென்று மீளுதற்குக் காரணமான மறப் பண்புடைமை என்க. செவியினின்றும் ஒழுகும் கடாம் வாய்புகும் யானை என்க. மொய்ம்பு - ஆற்றல். பகைவரைக் குறுகி என்க. ஆள் நிலன் எறியக் கோள் பிழையா யானை என்க. ஆளைப் பிடித்து நிலத்தில் அறைந்து கொல்லுதலில் தப்பாத யானை என்றவாறு. அஞ்சு - அச்சம். பகட்டியானை - களிற்றியானை. கோதை - சேரன். தலை நகர் ஆதல் தோன்ற, திருமா வியனகர்க் கருவூர் என விதந்தார். பொருநை முன்றுறை என ஒட்டுக.

இனி இதனை—நெஞ்சே ஊன்றவும் ஆரவும் ஒழுகவும் எதிரிய ஊக்கமொடு சிறந்து செய்வினை முற்றினம் ஆயின் இனி, மாஅயோளொடு நெடுநகர், சேக்கைப் பள்ளி விளக்கத்துப் பொறிப்பப் பொருநை மணலினும் பல முயங்குகம் சென்மோ என இயைத்துக் கொள்க.

(பா - வே.) கஎ. அயந்திகழ்.

## செய்யுள் கூசு

**திணை :** முல்லை.

**துறை :** வினைமுற்றி மீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது; தலைமகன் பாங்கற்குச் சொற்றதூஉமாம்.

**(து - ம்.)** அஃதாவது, தலைவன் தலைவியைப் பிரிந்துபோய்ப் பொருளீட்டியவன் அவ்வினை முற்றியபின் தலைவியை நினைந்து அவளைக் காணும் அவாமிகுதியாலே தன் தேரினை விரைந்து செலுத்தும் பொருட்டுப் பாகனுக்குச் சொல்லியது; இனி, தலைவன் தன்தோழனுக்குச் சொல்லியது என்று கோடலுமாம் என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு, "கரணத்தின் அமைந்து முடிந்த காலை" (தொல் - கற்பி ரு.) எனவரும் நூற்பாவின்கண் பேரிசை யூர்திப் பாகர் பாங்கினும் எனவரும் விதி கொள்க.

தேம்படு சிமயப் பாங்கர்ப் பம்பிய
குவையிலை முசுண்டை வெண்பூக் குழைய
வானெனப் பூத்த பானாட் கங்குல்
மறத்துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்
ரு தண்கமழ் முல்லை தோன்றியோடு விரைஇ
வண்டுபடத் தொடுத்த நீர்வார் கண்ணியன்
ஐதுபடு கொள்ளி அங்கை காயக்
குறுநரி யுளம்புங் கூரிருள் நெடுவிளி
சிறுகட் பன்றிப் பெருநிரை கடிய
க0 முதைப்புனங் காவலர் நினைத்திருந் தூதும்
கருங்கோட் டோசையொ டொருங்குவந் திசைக்கும்
வன்புலக் காட்டுநாட் டதுவே அன்புகலந்
தார்வஞ் சிறந்த சாயல்
இரும்பல் கூந்தல் திருந்திழை யூரே.

—நன்பலூர்ச் சிறுமேதாவியார்.

### (உரை)

கஉ - கச: அன்புகலந்து..........ஊரே

**(இ - ள்.)** அன்பு கலந்த ஆர்வம் சிறந்த சாயல் - அன்பு விரவிய ஆர்வத்தினாலே சிறப்புற்ற ஐம்பொறிக்கும் இன்பம் நல்கும் சாயலையும்; இரும்பல் கூந்தல் திருந்து இழையூர் -

கரிய பலவாகிய கூந்தலையும் திருந்திய அணிகலன்களையும் உடைய எமமுடைய காதலியானவள் எம்மைப் பிரிந்துறையும் ஊரானது எனக.

(வி - ம்.) ஆர்வம் - பற்றுள்ளம். சாயல் - ஐம்பொறியால் நுகரும் மென்மை. திருந்திழை : அன்மொழித் தொகை.

க - சு : தேம்படு.........கண்ணியன்

(இ - ள்.) தேம்படு சிமயப் பாங்கர்ப் பம்பிய குவை இலை முசுண்டை வெள்பூ வான் என குழையப் பூத்த பால் நாள் கங்குல் - தேனடைகள் உண்டாகின்ற மலையுச்சியின் பக்கங்களிலே பரவிய குவிந்த இலையையுடைய முசுண்டையின் வெள்ளிய மலர்கள் வானத்தில் மீன் பூத்தாற் போலக் குழைந்து பூத்துள்ள நள்ளிரவின் இருளிலே ; மறித்துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன் - ஆட்டுக் குட்டிகளை ஒருங்கே தொகுத்த ஓலைப்பாயை முதுகிலே உடைய இடையனானவன் ; தண்கமழ் முல்லை தோன்றியொடு விரைஇ வண்டுபடத் தொடுத்த நீர்வார் கண்ணியன் - குளிர்ந்த நறுமணங் கமழுகின்ற முல்லைப் பூக்களைத் தோன்றிப் பூவோடு விரவி வண்டுகள் மொய்க்கும்படி தொடுக்கப்பட்ட நீர் துளிக்கின்ற மாலையைத் தலையில் அணிந்தவனாய் என்க.

(வி - ம்) மறித்துரூஉ - ஆட்டிக்குட்டி. தொகுத்த இடையன், பறிப்புற இடையன் எனத் தனித்தனி கூட்டுக. தோன்றி - மரு தோன்றி. முல்லையும் தோன்றியும், மலர்க்கு ஆகுபெயர்கள். விரைஇ - விரவி.

எ - கஉ : ஐதுபடு..........நாட்டதுவே

(இ - ள்.) ஐதுபடு கொள்ளி அகம் கை காய - மெலிதாய்த் தேய்ந்த கொள்ளிக்கட்டையானது அகங் கையிடத்தே பிடிக்கப்பட்டு எரியா நிற்ப ; குறுநரி உளம்பும் கூர் இருள் நெடுவிளி - குறுநரிகளை ஓட்டுதற்கு மிக்க இருளினூடே செய்கின்ற நெடிய விளிக் குரலானது ; முதைப்புனம் காவலர் சிறு கண் பன்றி பெரு நிரைகடிய நினைத்து இருந்து ஊதும் கருங்கோட்டு ஓசையொடு ஒருங்கு வந்து இசைக்கும் - முதிர்ந்த தினைப் புனத்துக் காவலராகிய குறவர்கள் சிறிய கண்ணையுடைய பன்றிகளின் பெரிய கூட்டமானது தினைக்கதிரைத் தின்னுமல் ஓட்டுவதற்கு நினைத்துத் தம்மிடத்திலிருந்தே ஊதா நின்ற பெரிய கொம்பினது ஓசையோடு ஒன்று கலந்து வந்து ஒலித்தற் கிடனான ; வன்புலக்காட்டு நாட்டதுவே - வன்புலமான காட்டு

நாட்டின்கண் உளது; ஆதலால் பாகனே! நமது தேரினை விரைந்து செலுத்துவாயாக! என்பதாம்.

(வி - ம்.) ஐது - மெல்லிது. இடையன் கையின்கண் கொள்ளி கொண்டு குறுநரியை ஓட்டுகின்ற விளியொலியானது புனங்காவலர் பன்றி கடிய நினைத்துப் புனத்தில் இருந்து ஊதுகின்ற கொம் பொலியோடு கூடிவந்து ஒலிக்கும் என்றவாறு. வன்புலக்காட்டு நாடு முல்லைப் பரப்பிலுள்ள ஊர் - எனவே நம்மூர் சேய்மைக் கண்ணது ஆதலால் தேரை விரைந்து செலுத்துக எனப் பாகனுக்குக் கூறினன் என்க.

இனி, பாங்கனுக்குத் தலைவன் கூறியது எனின் இதனைக் களவொழுக்கமாகக் கொள்க. இயற்கைப் புணர்ச்சி எய்திப் பிரிந்த தலைவன் மெலிவினைக் கண்டு வினவிய பாங்கனுக்குத் தலைவன் தலைவி யைத் தான் கண்ட இடம் வன்புலக்காட்டு நாட்டது என்றானாகக் கொள்க.

இனி, இதனை—திருந்திழை ஊர் இடையன்விளி புனங்காவலர் கோட்டோசையோடு ஒருங்கு வந்து இசைக்கும் காட்டு நாட்டது என இயைத்துக் கொள்க.

(பா - வே.) ௩. வான்பூத்தன்ன. ௬. கூடிய. கடியு.

## செய்யுள் சுடு

திணை : பாலை.

துறை : போக்குடன் பட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—களவொழுக்கத்தின்கண் இற்செறித்தலும் பிரிவாற்றாமையும் அலர் மிகுதலும் அன்னை கடிதலும் ஆகிய இன்னல் பல வந்தெய்துதலால் தமர் அறியாமல் தலைவனுடன் போக உடன்பட்ட தலைவி, தனது உடன்பாட்டிற்குக் காரணம் தோழிக்குச் சொல்லியது. என்றவாறு.

(இ - ம்.) இதனை 'எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே' எனவரும் (தொல். அகத். ௪௨) நூற்பாவினுல் அமைத்துக் கொள்க.

பையயப் பசந்தன்று நுதலுஞ் சாஅய்
ஐதா கின்றென் தளிர்புரை மேனியும்
பலரும் அறியத் திகழ்தரும் அவலமும்
உயிர்கோடு சழியின் அல்லதை நினையின்
௫ எவனோ வாழி தோழி பொரிகால்
பொகுட்டரை யிருப்பைக் குவிகுலைக் கழன்ற
ஆலி யோப்பின் தூம்புடைத் திரள்வீ

ஆறுசெல் வம்பலர் நீளிடை யழுங்க
ஈனல் எண்கின் இருங்கிளை கவரும்
௧௦ சுரம்பல கடந்தோர்க் கிரங்குப என்னார்
கௌவை மேவல ராகி இவ்வூர்
நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ
புரைய அல்லஎன் மகட்கெனப் பரைஇ
நம்முணர்ந் தாறிய கொள்கை
௧௫ அன்னை முன்னர்யாம் என்னிதற் படலே.

—ஒரோடோகத்துக் கந்தரத்தனார்.

(உரை)

க - ரு : பைபய...........தோழி

(இ - ள்.) *தோழி வாழி பைபயப் பசந்தன்று நுதலும் தளிர்புரை என்மேனியும் ஐது ஆகின்று பலரும் அறியத் திகழ்தரும் அவலமும் உயிர்கொடு கழியின் அல்லதை நினையின் எவனோ - தோழி நீ வாழ்வாயாக மெல்ல மெல்ல என் நுதலும் பசந்தொழிந்தது. நாளுக்கு நாள் என்னுடைய மாந்தளிரை யொத்த திருமேனியும் மெலிந்து தேய்வதாயிற்று ஊரிலுள்ளோர் பலரும் அறியும்படி விளங்குகின்ற எனது துன்பந்தானும் என்னுடைய உயிரைக் கைக்கொண்டு போவதல்லது ஆராயுங்கால் வேறு என் செய்யும் என்க.*

(வி - ம்.) *இதன்கண் தனது நிலைமையைத் தோழிக்குத் தலைவி கூறுகின்றாள் - யான் நாளுக்கு நாள் மெலிந்து வருகின்றேன் என்மெலிவு கண்டு ஊர்ப்பெண்டிரும் அலர் தூற்றாநிரார் துன்பமும் மிக்குவருதலால் யானும் இறந்து படுவேன்; என்றவாறு. வேறு வழியும் காண்கிலேன் என்பாள் நினையின் எவனோ? என்றாள்.*

ரு - ௧௦ : பொரிகால்..........என்னார்

(இ - ள்.) *பொரிகால் பொகுட்டு அரை இருப்பைக் குவி குலைக் கழன்ற ஆலி ஒப்பின் - பொரிந்த அடியையும் முருடுகளை யுடைய அரையினையுமுடைய இருப்பையினது கூம்பிய குலையினின்றும் உதிர்ந்த ஆலங்கட்டிகளை ஒத்த; தூம்பு உடைத் திரள் வீ - துளையையுடைய திரண்ட மலர்களை; ஆறுசெல் வமபலர் நீள இடை அழுங்க - வழியில் செல்லுகின்ற வழிப்போக்கர் நெடிய வழியின்கண் தடைப்பட்டுத் தங்கும்படி; ஈனல் எண்கின் இருங்கிளை கவரும் சுரம்பல கடந்தோர்க்கு*

இரங்குப என்னுர் - குட்டிகளை ஈன்ற கரடிகளின் பெரிய கூட்டம் கவருகின்ற கொடு நெறிகள் பலவற்றையும் கடந்து சென்ற தந் தலைவருக்கு மகளிர் இரங்குவாராத லியல்பென்று கருதாராய் என்க.

(வி - ம்.) பொகுட்டு - முருடு. இருப்பையினது அடிப்பகுதி முருடு பல உடைத்தாதல் கண்டறிக. ஆலி - ஆலங்கட்டி தூம்பு - உட்டுளை. வீ. மலர். வம்பலர் - புதியராகிய வழிப்போக்கர். வழியில் கரடிகள் கூடிநிற்றலின் வழிப்போக்கர் செலவழுங்குதல் வேண்டிற்று. ஈனல் - குட்டியீனுதல். இரங்குதல் இயல் பென்னுர் என்றவாறு.

கக - கரு : கௌவை..........படலே

(இ - ள்.) இவ்வூர் நிரையப் பெண்டிர் கௌவை மேவலர் ஆகி - இந்தப் பொல்லாத ஊரிலுள்ள நிரையம் புகுவதற்கே யுரிய கொடிய பெண்டிர் பழி தூற்றுதலையே விரும்புவாராய்; என் மகட்கு இன்னு கூறுவ புரைய அல்ல என - என் மகளுக்குக் கேட்டார்க்குத் துன்ப முண்டாகும்படி கூறுகின்ற சொற்கள் சிறப்புடையன ஆகமாட்டா என்று கருதி; பரைஇ நம் உணர்ந்து ஆறிய கொள்கை அன்னை முன்னர் - தெய்வத்தைப் பரவி நமது நிலையையும் உணர்ந்துகொண்டு யாதும் சொல்லாமல் அடங்கிய கோட்பாட்டினையுமுடைய நம் அன்னையின் முன்னிலையிலே; யாம் இதன் படல் என் - யாம் இந்நிலையிலே அவள் முன் காணப்படின் அவள் நிலை என்னும்? என்பதாம்.

(வி - ம்.) எனவே யான் நம் அன்னையால் காணப்படுதலை நாணியே போக்குடன் படுகின்றேன் என்பது குறிப்பெச்சப் பொருளாயிற்று. கௌவை - அலர். மேவலர் - விருப்பமுடையோர். நிரையம் - நரகம். நரகம் புகுவதற்கே உரிய கொடிய பெண்டிர் என்க. கூறுவ - கூறப் படுவன. புரைய - பொருந்துவன எனினுமாம்.

இனி, ஆறு செல்வோர் வழியில் நிற்கும் கரடிக் கூட்டத்திற்கு அஞ்சிச் செலவழுங்கினுற்போல யானும் நமது ஒழுக்கத்திற்கு இடையூருக அலர் தூற்றும் நிரையப் பெண்டிர்க்கு அஞ்சி, அன்னைமுன் செல்ல நாணுகின்றேன் என உள்ளூறுத்துக்கொண்டு ஆதலால் போக்குடன் பட்டேன் என்ருளும் ஆயிற்று என்க.

இனி இதனை, தோழி அவலமும் உயிர்கொடு கழியின் அல்லதை எவனே? இவ்வூர்ப் பெண்டிர் கூறுவ என்மகட்கு புரைய அல்ல எனப் பரைஇ உணர்ந்து ஆறிய அன்னை முன்னர்யாம் இதன் படல் என் என இயைத்துக்கொள்க.

(பா. வே.) க. பசந்தது. எ. தூம்பிடைத் கo. கழிந்தோர். கச. தாற்றிய.

## செய்யுள் சூசு

**திணை :** மருதம்.

**துறை :** தோழி வாயின் மறுத்தது.

(து - ம்.) அஃதாவது—தலைவன் தலைவியைப் பிரிந்துபோய்ப் பரத்தையர் சேரிக்கண் ஓர் இளம் பரத்தையை மணந்துகொண்டான் எனக் கேள்வியுற்ற தலைவி ஊடியிருப்ப, தலைவன் மீண்டும் வந்து தோழியை வாயில் வேண்டினனாக அவள் தாமறிந்த செய்தியைக் கூறி வாயின் மறுத்தது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, பெறற் கரும் பெரும் பொருள் எனவரும் (தொல். கற்பி. க.) நூற்பாவின்கண் புறம்படு விளையாட்டுப் புல்லிய புகற்சியும் எனவரும் விதிகொள்க.

கறவுண் மண்டை நுடக்கலின் இறவுக்கலித்துப்
பூட்டறு வில்லில் கூட்டுமுதல் தெறிக்கும்
பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்
அரவாய் அன்ன அம்முள் நெடுங்கொடி
௫ அருவி ஆம்பல் அகலடை துடக்கி
அசைவரல் வாடை தூக்கலின் ஊதுலை
விசைவாங்கு தோலின் வீங்குபு ஞெகிழுங்
கழனியம் படப்பைக் காஞ்சி யூர
ஒண்தொடி யாயத் துள்ளுநீ நயந்து
௧௦ கொண்டனை யென்பவோர் குறுமகள் அதுவே
செம்பொற் சிலம்பின் செறிந்த குறங்கின்
அங்கலுழ் மாமை யஃதை தந்தை
அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்
வெண்ணெல் வைப்பிற் பருவூர்ப் பறந்தலை
௧௫ இருபெரு வேந்தரும் பொருதுகளத் தொழிய
ஒளிறுவாள் கல்லமர்க் கடந்த ஞான்றைக்
களிறுகவர் கம்பலை போல
அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே.

—மருதம் பாடிய இளங்கடுங்கோ.

## (உரை)

### க - அ: நறவுண்.........காஞ்சி யூர

**(இ - ள்.)** *நறவு உண் மண்டை நுடக்கலின் இறவுக் கலித்துப் பூட்டு அறுவில்லின் கூட்டு முதல் தெறிக்கும்* - கள்ளை உண்ட மட்பாண்டத்தினுள் நுடக்கிவைத்தலாலே அக்கள் வெறி கொண்ட இருமீன் செருக்குற்று நாணினது பூட்டு விட்டுப்போன வில்லைப்போன்று துள்ளிக்குதித்து நெற் கூடுகளினிடத்தே விழும்; *பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின் அரவாய் அன்ன அம்முள் நெடுங்கொடி* - பொதுநிலங்களையுடைய நீர் நிலையினது நீரடை கரையின்கண் படர்ந்துள்ள பிரம்பினது அரத்தின் வாய் போன்ற அழகிய முட்களையுடைய நீண்ட கொடியானது; *அருவி ஆம்பல் அகல் அடை துடக்கி* - அருவியாய் வந்து விழுகின்ற நீரின்மேல் படர்ந்த ஆம்பலினது அகன்ற இலையைத் தனது முள்ளால் கோத்துக் கிடந்து; *அசைவரல் வாடை தூக்கலின் ஊதுஉலை விசைவாங்கு தோலின் வீங்குபு ஞெகிழும்* - தங்கித் தங்கி வருதலையுடைய வாடைக் காற்று இடையிடையே தூக்குதலாலே கொல்லுலைக்கண் ஊதுகின்ற விசைக்கயிற்றால் இழுக்கபடும் துருத்திபோல அவ்விலையினோடு உயர்ந்துயர்ந்து தாழுதற்கிடனான; *கழனி அம் படப்பைக் காஞ்சி ஊர* - கழனிகள் சார்ந்த காஞ்சி மரங்கள் மிகுந்த தோட்டங்களை உடைய ஊரனே என்க.

**(வி - ம்.)** இதன்கண் இழிந்த கள்ளுண்ட மண்டையில் நுடக்கிய இருமீனது கள்வெறி எய்தித் துள்ளிப்போய் உயர்ந்த நெற்கூட்டில் விழுந்தாற்போல நீ இழிந்த பரத்தையைப் புணர்ந்து செருக்குற்று உயர்ந்த குடிப்பிறந்த தலைவி உறைகின்ற இல்லத்திற்கு வந்தாய் எனத் தோழி உள்ளுறுத்தி வைத்தமை யுணர்க. மண்டை - மண்ணாலாகிய ஒருவகைப் பாண்டம். இதனை இக்காலத்தார் மொந்தை என்பர்.

இனி, அடை கரையில் படர்ந்த பிரப்பங்கொடி ஆம்பலிலையைப் பிணித்துக் காற்று உயர்த்த அவ்விலை உயர்ந்தும் காற்று வாராதொழி யின் தாழ்ந்தும் கிடப்பதுபோல நீயும் நின் பாணன் அழைக்கும்போது பரத்தையர் சேரிக்குப் போவதும் அழையாவிடின் இல்லிற்கு வருவது மாக உழல்கின்றாய் என இதனால் பாணனை இகழ்ந்தவாறும் உள்ளுறை யாகக் காண்க.

### கூ - கо: ஒண்டொடி..........குறுமகள்

**(இ - ள்.)** *நீ ஒள் தொடி ஆயத்துள்ளும் ஓர் குறுமகள் நயந்து கொண்டனை என்ப* - நீ தானும் ஒள்ளிய வளையலணிந்த பரத்தை மகளிருள் வைத்துப் பெரிதும் இளமையுடையாள்

ஒரு பரத்தையை விரும்பி மணந்து கொண்டனை என்று அறிந்தோர் கூறுவர் என்க.

(வி - ம்.) ஆயம் - மகளிர் கூட்டம். கொண்டனை என்பது மணந்து கொண்டனை என்பதுபட நின்றது. குறுமகள் - இளமை யுடையவள்.

## கo - கஅ: அதுவே..........வாய்ப் பட்டே

(இ - ள்.) அது - அச் செய்தி தானும்; செம்பொன் சிலம்பின் செறிந்த குறங்கின் அம்கலுழ் மாமை அஃதை தந்தை - சிவந்த பொன்னாற் செய்த சிலம்பையும் செறிந்த துடையினையும் அழகு ஒழுகுகின்ற மாமை நிறத்தினையுமுடைய அஃதை என்பவளுக்குத் தந்தையராகிய; அண்ணல் யானை அடுபோர்ச் சோழர் வெள் நெல் வைப்பின் - தலைமைத் தன்மை யுடைய யானையையும் பகைவரைக் கொல்லும் போர்த் தொழிலையும் உடைய சோழமன்னருடைய வெண்ணிற நெல் விளையும் மருதப் பரப்பினையுடைய; பருவூர் பறந்தலை இரு பெரு வேந்தரும் பொருது களத்து ஒழிய - பருவூரின் கண்ணதாகிய போர்க்களத்தின்கண் சேரனும் பாண்டியனும் ஆகிய இரண்டு பெரிய மன்னர்களும் போர் செய்து அக் களத்திலே இறந்தொழியும்படி அச்சோழர்; ஒளிறுவாள் நல் அமர்க் கடந்த ஞான்றைக் களிறு கவர் கம்பலை போல - விளங்கு கின்ற வாளால் அறப்போர் செய்து வென்ற அந்த நாளிலே அம்மன்னருடைய களிற்றியானைகளைக் கைக் கொண்ட பொழுது எழுந்த ஆரவாரம் போல; பலர் வாய்ப்பட்டு அலர் ஆகின்றது - இவ்வூரில் பலர் வாயிடத்தும்பட்டு எங்கும் அலர் எழுகின்றது; ஆதலால் தலைவியை ஊடல் தீர்த்தல் எனக்கு இயலாது காண் என்பதாம்.

(வி - ம்.) ஆதலால் தலைவியின் ஊடல் தீர்த்தல் எனக்கு இயலாது காண் என்பது குறிப்புப் பொருள். அது என்றது - நீ நயந்து கொண்ட அச்செய்தி என்றவாறு. அது களிறு கவர் கம்பலைபோல அலர் ஆகின் றது என்று இயையும்.

குறங்கு - துடை. அஃதை - சோழர் குடியிற் பிறந்த பெண் ஒருத்தி. சோழர் குடியில் பிறத்தலின் சோழர் எல்லாம் அவட்குத் தந்தையர் என்றனர். இருபெரு வேந்தரும் என்றமையால் எஞ்சிய சேரபாண்டிய மன்னர் இருவரும் என்பது பெற்றாம். இதன்கண் பண்டைக் காலத்தே சோழநாட்டின்கண் பருவூர் என்னுமிடத்து மூவேந்தரும் போர் செய்தமையும், அவருள் சோழர் வென்றமையும் ஏனைய இருவரும் இறந்தமையும் ஆகிய வரலாறும் பெற்றாம்.

இனி, இதனை—ஊர நீ ஓர் குறுமகள் நயந்துகொண்டனை என்பஅது சோழர் களிறு கவர் கம்பலைபோல அலராகின்றது என இயைத்துக் கொள்க.

(பா - வே.) க. துடக்கலின். ௪. அரவாளன்ன. கஉ. அருதை. கடு. வேந்தரு மொருகளத்.

## செய்யுள் கூஎ

**திணை :** பாலை.

**துறை :** வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது, தலைவன்-பொருள் தேடுதற்குத் தலைவியைப் பிரிந்து செல்கின்றவன், யான் கார்ப்பருவத்துத் தொடக்கத்தே மீண்டு வருகுவென், அதுகாறும் நீ ஆற்றி இருந்திடுக! என்று கூறிப் போனவன் குறித்த பருவத்து வாராமையின், தலைவி பிரிவாற்றுமையான் பெரிதும் வருந்தினளாக; அதுகண்ட தோழி நீ ஆற்றி இருத்தலே நின் கடமை என வற்புறுத்திய வழி, தலைவி தன் ஆற்றுமைக்குக் காரணம் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "பெறற்கரும் பெரும்பொருள்" எனவரும் (தொல் கற்பி-கூ.) நூற்பாவின்கண் பிறவும் வகைபட வந்த கிளவி எனவரும் விதிகொள்க.

கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை
வறனுறல் அங்கோ டுதிர வலங்கடந்து
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
இரவுக்குறும் பலற நூறி நிரைபகுத்
ரு இருங்கல் முடுக்கர்த் திற்றி கெண்டும்
கொலைவில் ஆடவர் போலப் பலவுடன்
பெருந்தலை யெருவையொடு பருந்துவந் திருக்கும்
அருஞ்சுரம் இறந்த கோடியோர்க் கல்கலும்
இருங்கழை இறும்பின் ஆய்ந்துகொண் டறுத்த
க0 நுணங்குகண் சிறுகோல் வணங்கிறை மகளிரோ
டகவுநர்ப் புரந்த அன்பின் கழல்தொடி
நறவுமகிழ் இருக்கை நன்னன் வேண்மான்
வயலை வேலி வியலூர் அன்னநின்
அலர்முலை யாகம் புலம்பப் பலநினைந்
கரு தாழேல் என்றி தோழி யாழவென்
கண்பனி நிறுத்தல் எளிதோ குரவுமலர்ந்
தற்சிர நீங்கிய அரும்பத வேனில்

அறலவிர் வார்மணல் அகலியாற் றடைகரைத்
துறையணி மருது தொகல்கொள வோங்கிக்
௨0 கலிழ்தளிர் அணிந்த இருஞ்சினை மாஅத்
திணர்ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப்
புகைபுரை அம்மஞ் சூர
நுகர்குயில் அகவும் குரல்கேட் போர்க்கே.

—மாமூலனார்.

கரு : தோழி..........யாழ

(இ - ள்.) தோழி யாழ - ஆற்றி இருத்தலே நின் கடமை என்று கூறி வற்புறுத்தும் தோழியே கேள்! என்க.

(வி - ம்.) யாழ : முன்னிலையசை.

க - அ : கள்ளி..........கோடியோர்க்கு

(இ - ள்.) கள்ளி அம்காட்ட புள்ளி அம்பொறிக்கலை வறன் உறல் அம்கோடு உதிர வலங் கடந்து - கள்ளிக் காட்டினுள்ளே நிற்கின்ற புளளியாகிய பொறி பொருந்திய கலைமானுடைய வறட்சியுற்ற அழகிய கொம்புகள் தெறித்து விழும்படி ஓடுகின்ற அதன் வெற்றியையும் கடந்து பற்றிக்கொண்ட; புலவுப் புலி துறந்த கலவுக் கழி கடுமுடை - புலால் உண்ணுதலில் விருப்ப முடைய புலியானது அதனைக் கொன்று தின்று போகட்டுப்போன மூட்டுவாய் கழிந்த மிக்க முடை நாற்றத்தையுடைய தசையை; இரவுக் குறும்பு அலற நூறி நிரை பகுத்து இருங்கல் முடுக்கர் திற்றி கெண்டும் கொலைவில் ஆடவர் போல - இரவிலே சென்று குறும்பின்கண் உள்ள கரந்தையார் அலறும்படி நூழிலாட்டி அவருடைய ஆநிரையைக் கவர்ந்து கொணர்ந்து அவற்றைப் பகுத்துப் பெரிய கற்பாறையின் முடுக்கிலே அவ்வாக்களின் தசையை அறுத்துத் தின்னும் கொலைத் தொழிலையுடைய வில் மறவரான வெட்சியார் போல; பெருந்தலை எருவையொடு பருந்து பலவுடன் வந்திருக்கும் - பெரிய தலையையுடைய கழுகுகளோடு பருந்துகளும் பற்பல ஒருங்குகூடி வந்திருத்தற் கிடனான; அருஞ்சுரம் இறந்த கொடியோர்க்கு - கடத்தற்கரிய பாலை நிலத்து வழியிலே நமமைக் கைவிட்டுப் போன வன்கண்ணராகிய நம்பெருமான் பொருட்டு; என்க.

(வி - ம்.) கள்ளியங்காடு என்புழி அம் : சாரியை. புள்ளியாகிய பொறி என்க. கலை - ஆண்மான். அதன் கொம்பு - ஊற்றுணர்ச்சிக்கு வற்கென்றிருத்தலின் வறனுறல் அங்கோடு என்றார். உதிரப் பாயும்

வலம் என்க. மானுக்கு ஓடுதலே வெற்றியாகலின் அதனை வலம் என்றார். கலவு - மூட்டுவாய். குறும்பு - அரண். இது கரந்தையா ருடையது. நூறுதல் - கொன்று குவித்தல். நிரை - ஆநிரை. திற்றி - இறைச்சி. கெண்டும் - தின்னும். ஆடவர் - வெட்சி மறவர்; இவர் கழுகுகளுக்கும் பருந்துகளுக்கும் உவமை. கலவுக் கழிகடுமுடைக்கண் எருவையும் பருந்தும் வந்திருக்கும் சுரம் என்க. தோழி தலைவனை இயற் பழிப்பாள் கொடியோர் எனருள்.

## அ - கரு: அல்கலும்...........என்றி

(இ - ள்.) அல்கலும் - நாள்தோறும்; இருங்கழை இறும் பின் ஆய்ந்துகொண்டு அறுத்த நுணங்குகண் சிறுகோல் வணங்கு இறை மகளிரொடு - பெரிய மூங்கிற் புதரினூடே ஆராய்ந்து பார்த்து அறுத்தெடுத்துக்கொண்ட நுணுகிய கணுக்களையுடைய மூங்கிலாலியன்ற தலைக்கோலைப் பிடித்த வளைந்த முனகையை யுடைய கூத்தியரோடே; அகவுநர்ப் புரந்த அன்பின் கழல் தொடி நறவு மகிழ இருக்கை நன்னன் வேண்மான் - பாணர் களையும் புலவர்களையும் பாதுகாத்த அன்பினையுடைய உழலுகின்ற தொடியினையும் கள்ளுண்டு களித்திருக்கும் அத்தாணி மண்டபத்தையுமுடைய நன்னன் வேண்மான் என்னும் அரசனுடைய; வயலை வேலி வியலூர் அன்ன நின் - வயலைக் கொடி படர்ந்த வேலியையுடைய வியலூரைப் போன்ற உன்னுடைய; அலர்முலை ஆகம் புலம்ப பல நினைந்து ஆழேல் என்றி - அடி பரந்த முலையினையுடைய மார்பகம தனிமைத் துயரம் எய்துதலாலே பலவாகிய நினைவுகளை நினைந்து துன்பத்தில் மூழ்காதேகொள்! என்று வற்புறுத்துகின்றனை; என்க.

(வி - ம்.) நாள்தோறும் பல நினைந்து ஆழேல் என்று இயையும். அல்கல் - நாள். கழை - மூங்கில். இறும்பு - புதர். ஆய்ந்து கொண்டு அறுத்த, நுணங்கு கண் சிறுகோல் என்றது தலைக்கோலை. இதன் வரலாறும் இயல்பும் சிலப் - அரங்கேற்று காதைக்கண் விளங்கக் காண லாம். அகவுநர் - பாணரும் புலவரும். வன்பின் கழல் எனக் கொண்டு மறப்பண்பிறகு அறிகுறியாகக் காலிற் கட்டும் வீரக் கழல் எனினுமாம். நறவு மகிழ் இருக்கை என்றது, நாளோலக்கத்தை என்க. நன்னன் - வேளிர் குலத்தவன் ஆதலின வேண்மான் எனப்பட்டான். இவன் ஒரு வள்ளல். மலைபடு கடாஅம் என்னும் பாட்டிற்குத் தலைவனும் இவனே. வயலை - ஒருவகைக் கொடி; இக் காலத்தார் இதனைப் பசலைக் கொடி என்பர். என்றி: முன்னிலை ஒருமை.

## கரு - உரு: என்...........கேட்போர்க்கே

(இ - ள்.) என் - இஃது என் கொலோ; குரவு மலர்ந்து அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில் அறல் அவிர் வார்மணல்

அகல்யாற்று அடைகரை - குரவ மரங்கள் மலரப் பெற்று முன் பனிக்காலமும் நீங்கிய பெறற்கரிய செவ்வியையுடைய இவ்விள வேனிற் காலத்தே அற்றற்று ஒழுகுகின்ற நீரினூடே விளங்கு கின்ற நெடிய மணலையுடைய அகன்ற யாற்றினது நீரடை கரையிலேயுள்ள ; துறை அணி மருது தொகல் கொள ஓங்கிக் கலிழ் தளிர் அணிந்த இருஞ்சினை மாஅத்து - நீராடுதுறையை அழகு செய்யும் மருத மரங்கள் உயர்ந்து நிற்ப, நீண்டு தொங்குகின்ற தளிரால் அழகு செய்யப்பெற்ற பெரிய கிளைகளை யுடைய மாமரங்களினது ; இணர்ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப் புகைபுரை அம்மஞ்சு ஊர - பூங்கொத்துகள் செறிந்த புதிய மலர்கள் நெருங்கிய சிறிய கொம்புகளிலே புகைபோன்ற அழகிய வெண்முகில்கள் தவழா நிற்ப ; நுகர் குயில் அகவும் குரல் கேட்போர்க்கு - அம் மாஞ்சோலையின்கண் அவற்றின் தளிரைத் தின்னு நின்ற குயில்கள் கூவுகின்ற இனிய குரலைக் கேட்கும் துணைப்பிரிந்த மகளிருக்கு ; கண்பனி நிறுத்தல் எளிதோ - பிரிவாற்றுமையால் துளிக்கின்ற கண்ணீர்த் துளிகளை நிறுத்திவிடுதல் அத்துணை எளிய செயலோ காண்! அத் துன்பத்தின் தன்மையை நீ உணர்வாய் அல்லை போலும் ; என்பதாம்.

(வி - ம்.) என் - என்னையோ. இவ்வாறு கூறுதற்குக் காரணம் நின் அறியாமையே என்பாள் என்னையோ என்று வினவினள்.

இனி, இதன்கண் இளவேனிற் பருவம் இப்புலவர் பெருமானல் சொல்லோவியமாகத் தீட்டப்பட்டிருத்தல் கண்டு மகிழ்க. அற்சிரம் - முன்பனிக் காலம். காதலருக்கு இத்தகைய செவ்வி கிடைத்தற்கரிது என்பாள், அரும்பதவேனில் என்ருள். கலிழ்தல் - ஒழுகுதல். பொங்கர் - கொம்பு. புகைபுரை அம்மஞ்சு என்றது, வெண்மேகத்தை. மாவி னது இளந்தளிரைத் தின்ற பின்னர்க் குயிலினது இன்குரல் பின்னரும் இன்ப மிகுவதாகும் என்ப, ஆதலின் பொங்கரில் தளிரை நுகர்குயில் என்ருள். கேட்போர் என்றது துணைப்பிரிந்திருந்து கேட்கும் மகளிர் என்பதுபட நின்றது.

இனி, இதனை - தோழி! அருஞ்சுரம் இறந்த கொடியோர்க்கு நின் ஆகம் புலம்ப நினைந்து ஆழேல் என்றி இஃதென்னை? மலர்ந்து நீங்கிய வேனில் மருது ஓங்கத் தளிர் அணிந்த மாஅத்துப் புதுப்பூப் பொங்கர் மஞ்சூர குயிலகவும் குரல் கேட்போர்க்குக் கண்பனி நிறுத்தல் எளிதோ என இயைத்துக் கொள்க.

(பா - வே.) ௬. கோள்வலாட. ௯. கொண்டிறுத். ௧௧. பண்டிற். ௧௪. னகமலியாகம். ௧௫. பலபுலந். ௧௭. அரும்பவிழ். ௧௯. மருத மொடிகல் கொள. ௨0. மாந்தினிணர்தந்தை.

## செய்யுள் கூஅ

**திணை:** குறிஞ்சி.

**துறை:** தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. தோழிக்குத் தலைமகள் சொல்லிய தூஉமாம்.

**(து - ம்.)** அஃதாவது - வரைதற்கண் கருத்தின்றிக் களவொழுக்கமே காமுற்று இருவகைக் குறியிடத்தும் வந்து மீள்கின்ற தலைவனுக்கு வெறியாட்டு அறிவுறுத்தி வரைவு கடாவுவான தோழி தலைவன் சிறைப்புறத்தே நிற்றல் கண்டு அவன் கேட்பத் தலைவிக்குக் கூறுவாளாய்க் கூறியது; இனி, தலைவி தோழிக்குக் கூறியது எனினுமாம் என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு,-தோழி கூற்றாயின்-"நாற்றமும் தோற்றமும்" என வரும் (தொல் - களவி - உங.) நூற்பாவின்கண் அனை நிலைவகையான் வரைதல் வேண்டினும் என வரும் விதி கொள்க.

இனி "மறைந்தவற் காண்டல்" எனவரும் நூற்பாவின்கண் வெறியாட்டிடத்து வெருவின்கண்ணும் எனவரும் விதிக்கு எடுத்துக்காட்டி (நச்சி.) இதனைத் தலைவி கூற்றாகக் கொள்வர்.

பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅன்
துனியில் கொள்கையொ டவர்நமக் குவந்த
இனிய உள்ளம் இன்னா வாக
முனிதக நிறுத்த நல்கல் எவ்வம்
ரு சூருறை வெற்பன் மார்புறத் தணிதல்
அறிந்தனள் அல்லள் அன்னை வார்கோல்
செறிந்திலங் கெல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ
க0 முருகன் ஆரணங் கென்றலின் அதுசெத்
தோவத் தன்ன வினைபுனை நல்லில்
பாவை அன்ன பலராய் மாண்கவின்
பண்டையிற் சிறக்கவென் மகட்கெனப் பரைஇக்
கூடுகொள் இன்னியம் கறங்கக் களனிழைத்
கரு தாடணி அயர்ந்த அகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர்
ஐதமை பாணி இரீஇக்கை பெயராச்

செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்
வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்
உ0 பொறியமை பாவையின் தூங்கல் வேண்டின்
என்னுங் கொல்லோ தோழி மயங்கிய
மையற் பெண்டிர்க்கு நோவ லாக
ஆடிய பின்னும் வாடிய மேனி
பண்டையிற் சிறவா தாயின் இம்மறை
உரு அலரா காமையோ அரிதே யஃதான்
றறிவர் உறுவிய அல்லல் கண் டருளி
வெறிகமழ் நெடுவேள் நல்குவன் எனினே
செறிதொடி யுற்ற செல்லலும் பிறிதெனக்
கான்கெழு நாடன் கேட்பின்
ஙு0 யானுயிர் வாழ்தல் அதனினும் அரிதே.

—வெறிபாடிய காமக்கண்ணியார்.

(உரை)

உக: தோழி..........

(இ - ள்.) *தோழி - ஈதொன்று கேள் என்க.*

க - சு: பனிவரை..........அன்னை

(இ - ள்.) *பனிவரை நிவந்த பயம் கெழு கவான் துனி இல் கொள்கையொடு - குளிர்ந்த மலையினது உயர்ந்த வளம் பொருந்திய சாரலின்கண் வெறுப்பில்லாத கொள்கையோடு; அவர் நமக்கு வந்த இனிய உள்ளம் இன்னா ஆகமுனிதக நிறுத்த அல்கல் எவ்வம் - நம்பெருமான் நம் பொருட்டு வந்தமையாலே இனிமை உடையதாகிய நமது நெஞ்சம் பின்னர் வாராமையாலே துன்பமுடையதாகும்படி நாம் வாழ்க்கையை வெறுக்கத்தக்கதாக நம்பால் அவரால் நிறுத்தப்பட்ட அவர் தந்த வருத்தமானது; சூர் உறை வெற்பன மார்பு உறத்தணிதல் அன்னை அறிந்தனள் அல்லள் - தீண்டி வருத்தும் தெய்வம் உறைகின்ற மலையை யுடைய நம்பெருமானுடைய மார்பினை மீண்டும் யாம் பொருந்துதலாலே தணியும் என்னும் உண்மையை நம் தாய் இன்னும் அறிந்திலள் என்க.*

(வி - ம்.) பனிவரை நிவந்த பயங்கெழு கவான்என்றது இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த இடத்தினைச் சுட்டியபடியாம். துனி - வெறுப்பு.

அவர் வாய்மையாகவே நம்மை விரும்பும் கோட்பாடுடையர் என்பான் துனியில் கொள்கையொடு என்றாள். அவர் என்றது தலைவனை. நமக்கு ஊழ்வினை கூட்ட வந்தமையாலே என்க. இனி நமக்கு உவந்த எனக் கண்ணழித்து நம்மை உவந்தமையால் இனியதாகிய நம்முள்ளம் எனலுமாம். இனிய உள்ளம் இன்னா ஆக என்றது, பல்வேறு இடையூறுகளால் அவனைப் பெறமாட்டாமையால் இன்னாவாயிற்று என்றபடியாம். முனிதக - வாழ்க்கையை வெறுக்கத்தக்கதாக. எவ்வம் - துன்பம். அதற்குக் காரணம் அவன் தனக்கு அளி செய்தமையே ஆதலின் நல்கல் எவ்வம் என்றாள். (நல்கலால் வந்த துன்பம்) சூர் - தீண்டி வருத்துந் தெய்வம். அவன் வெற்பின்கண் உறையும் தெய்வம்போல அவன் மார்பம் தீண்டி என்னை வருத்தா நின்றது எனக் கருப்பொருட்புறத்தே இறைச்சி தோன்றிற்று. அன்னை - ஈண்டுச் செவிலி.

## கூ - கம: வார்கோல்..........அது செத்து

(இ - ள்.) வார்கோல் செறிந்து இலங்கு எல்வளை நெகிழ்ந்தமை நோக்கி கை அறு நெஞ்சினள் வினவலின் - நீண்ட கோற்றொழில் அமைந்த செறிந்து விளங்குகின்ற ஒளியையுடைய எனது வளையல் கழன்று வீழும்படி என் உடல் மெலிந்தமையைப் பார்த்துச் செயலற்ற நெஞ்சினையுடையளாய்க் கட்டுவிச்சியரை வினவுதலாலே; பொய் வல் முதுவாய் பெண்டிர் - பொய் கூறுதலில் கூர்த்த அறிவு வாய்க்கப் பெற்ற அம்மகளிர் தாமும்; பிரப்பு உளர்பு இரீஇ - பிரப்பரிசியைப் பரப்பி வைத்துக் குறி பார்த்து; முருகன் ஆர் அணங்கு என்றலின் அது செத்து - இந்நோய் முருகனால் உண்டானது பிறரால் தீர்த்தற்கரிய நோய் என அறிவித்தலாலே அவர் கூற்றினை உண்மை என்று கருதி என்க.

(வி - ம்.) வார் - நீண்ட. எல் - ஒளி. கையறுதல் - யாதொன்றும் செய்யத் தோன்றாமல் திகைத்தல். பிரப்பு - அரிசி முதலியவற்றை அள்ளி முறத்தின்கண் பல்வேறிடங்களில் வைத்து அவற்றை எண்ணிக் குறி சொல்லுதல். இங்ஙனம் குறி சொல்லுவோர் கட்டுவிச்சியர். இவர் குறி கேட்போரின் மெய்ப்பாடு அறிந்து கூறுவர் ஆதலின் முதுவாய் பெண்டிர் என்றாள் இவர் பெரும்பாலும் பொய்யே கூறுதல் வழக்கமாதலின் பொய்வல் பெண்டிர் என்றாள். செத்து - கருதி.

## கக - கரு: ஓவத்தன்ன..........பந்தர்

(இ - ள்.) ஓவத்து அன்ன வினைபுனை நல்இல் - ஓவியம் போன்று தொழிலால் அழகு செய்யப்பட்ட அழகிய வீட்டின்கண்; பாவை அன்ன பலர் ஆய் மாண் கவின் என் மகட்கு பண்டையில் சிறக்க எனப் பரைஇ - பாவை போன்ற பிற மகளிர் பலரும் ஆராய்ந்து கண்டு மகிழத் தகுந்த மாட்சிமை

யுடைய அழகானது என் மகளுக்கு முன்பு போலவே சிறக்கச் செய்தருளுக என அம் முருகப் பெருமானை வேண்டுதல் செய்து பின்னர்; கூடுகொள் இன் இயம் கறங்கக் களன் இழைத்து ஆடு அணி அயர்ந்த அகல் பெரும் பந்தர் - தம்முள் இசை முதலிய வற்றால் இயைகின்ற கேட்டற்கினிய இசைக் கருவிகள் பலவும் முழங்கா நிற்ப வெறியாடுதற்குரிய களத்தை இழைத்து அதற்கேற்ற அழகுகளும் செய்யப்பட்ட அகன்ற பெரிய பந்தலில் என்க.

(வி - ம்.) இதன்கண் அன்னையின் செயல் கூறப்படுகின்றது. ஓவம்-ஓவியம். இல்லத்தின்கண் இருந்தே செவிலி இவ்வாறு தெய்வம் பராவினாள் என்பாள், "பாவை............மகட்கு" எனச் செவிலி கூற்றைக் கொண்டு கூறியபடியாம். என் மகள் என்றது தலைவியை. பரைஇ - பராவி. இயம் - இசைக் கருவிகள்.

### கசு - உக: வெண்போழ்.........கோல்லோ

(இ - ள்.) வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர் ஐது அமை பாணி இரீஇ - வெளிய பனந்தோட்டினைக் கடப்ப மலரோடு அணிந்து கேட்டற்கினிய பாட்டினை மெலிதாக அமைந்த தாளத்தோடே கூட்டி; செல்வன் பெரும் பெயர் ஏத்தி வேலன் வெறி அயர் வியன் களம் பொற்ப - முருகக் கடவுளின் பெரிய புகழைக் கூறிப் புகழ்ந்து வேல்மகன் வெறியாடுகின்ற அகன்ற அக்களம் பொலிவுறும்படி; வல்லோன் பொறி அமை பாவையின் கை பெயராத் தூங்கல் வேண்டின் என ஆம் - பொறி அமைத்தலில் வல்லவனாலே ஆட்டப்படுகின்ற பாவை போலக் கையெடுத்தோச்சி வெறியாடு தலை விரும்பினால் அப்பொழுது நம்நிலை என்னாகுமோ அறிகிலேன் என்க.

(வி - ம்.) வெண்போழ் - பனந்தோடு; ஆகுபெயர். கடம்பு - மலர்; ஆகுபெயர். சீர் பாட்டிற்கு ஆகுபெயர். பாணி - தாளம். செல்வன் - மகன். ஈண்டுச் சிவபெருமான் மகன் என்றவாறு; முருகன் என்க. பெயர் - புகழ். வேலன் - பூசாரி, தூங்கல் - ஆடுதலை. அன்னை பராவி வேலன் வெறியாடுதலை விரும்பினால் என்னும் என இயையும்.

### உக - உரு: மயங்கிய.........அரிதே

(இ - ள்.) மயங்கிய மையல் பெண்டிர்க்கு நொவ்வல் ஆக ஆடிய பின்னும் - அறிவு மயங்கிய செவிலி முதலிய மகளிர்க்குப் பின்னும் துன்பமேயுண்டாகும்படி வேலன் வெறியாடிய பின்னரும்; வாடிய மேனி பண்டையின் சிறவாது ஆயின் - நம்மேனி அவர் பராவியாங்கு முன்பு போலச் சிறப்புறு

தொழியின்; இம்மறை அலர் ஆகாமை அரிது - இந்தக் களவொழுக்கம் பலரும் அறிய வெளிப்பட்டு யாண்டும் அலராகாதொழிதல் மிகவும் அரிதே யாகும் என்க.

(வி - ம்.) மயங்கிய மையற்பெண்டிர், என்றது செவிலி, கட்டுவிச்சி முதலியோரை நோவல் முதல் குறுகி விரிக்கும் வழி விரிக்கப்பெற்று நொவ்வல் என்றாயிற்று. செவிலிக்கு, மகள் மேனி சிறவாமையாலும், கட்டுவிச்சிக்குக் குறி பொய்த்தலாலும் நோவுண்டாம் என்றவாறு.

உரு - ௩௦: அஃதான்று.........அரிதே

(இ - ள்.) அஃது ஆன்று அறிவர் உறுவிய அல்லல் கண்டு அருளி வெறிகமழ் நெடுவேள் நல்குவனே எனின - அவ்வாறன்றித் தன்னைப் புகலாக அறிந்துள்ள செவிலி முதலியோர் துனபத்தைக் கண்டு இரங்கி வெறிமணம் கமழுகின்ற நெடியோனாகிய முருகவேள் அவர் வேண்டியவாறு யாம் முன்புபோலச் சிறக்கும்படி திருவருள் புரிவனாயினலோ; செறிதொடி உற்ற செல்லலும் பிறிது எனக் கான்கெழு நாடன் கேட்பின் - செறிந்த வளையலணிந்த நம் காதலி எய்திய துன்பந்தானும் நம் பிரிவாற்றாமையால் அன்று வேறொன்றனாற் போலும் என்று காடு பொருந்திய நாட்டையுடைய நம்பெருமான் கேட்டறிதலுறின்; யான் உயிர் வாழதல் அதனினும் அரிதே - பின்னர் யான் உயிர் வாழ்ந்திருத்தல் அதனினுங் காட்டில் அரிதேயாம் என்பதாம்.

(வி - ம்.) முருகனால் என் மெலிவு தீர்தல் இல்லையாம். அங்ஙனம் தீராதவிடத்து ஊர்ப் பெண்டிர் இவள் நோய் காம நோயே காண் என அலர் தூற்றுதல் ஒருதலை என்பாள் வாடிய மேனி சிறவாதாயின் இம் மறை அலராகாமை அரிது என்றாள்; ஓரோ வழி இறைவன் எல்லாம் வல்லன் ஆதலின் என் மேனி சிறக்கச் செய்தலுங் கூடும். அங்ஙனம் நிகழின் நம் பெருமான் இவள் நோய்க்குக் காரணம் பிறிதொன்றே, நம்பால் வைத்த காதலன்று என எனது காதலையே அயிர்ப்பவன் ஆவன்; அவ்வாறு அயிர்த்தவழி யான் ஒருதலையாக இறந்து படுவேன் என்பாள் நெடுவேள் நல்குவனே எனின்......அரிதே என்றாள்.

அஃது அன்றி எனற்பாலது "அன்று வரு காலை ஆவாகுதலும்" என்னும் விதி பற்றியும் (தொல் - எழுத்து உ௧அ.) "இன்றி என்னும் வினை எஞ்சிறுதி நின்ற இகரம் உகரம் ஆதல் தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே" (தொல் - எழுத்து - உ௩௭.) என்னும் விதிபற்றியும் அஃதான்று என்றாயிற்று.

இனி இதனைத் தோழி அன்னை அவர் நல்கல் எவ்வம் அறிந்தனள் அல்லள் வினவலின் பெண்டிர் அணங்கு என்றலின் அது செத்து, கவின் என் மகட்குச் சிறக்க எனப் பரைஇ கறங்க இழைத்து அயர்ந்த பந்தரில்

வேலன் கை பெயராத் தூங்கல் வேண்டின் என்னும்? ஆடிய பின்னும் மேனி சிறவாதாயில் மறை அலராகாமை அரிது; அஃதான்று நெடுவேள் நல்குவன் எனின் செல்லலும் பிறிதெனா நாடன் கேட்பின் யான் உயிர் வாழ்தல் அதனினும் அரிது என இயைத்திடுக.

இனி, இதனைத் தோழி கூற்றாகக் கொள்ளின் அவள் தலைவியையே யான் என்கின்றாளாகக் கொள்க. இதற்கு தொல் - பொருள் உஉக ஆம் நூற்பாவால் அமைதி காண்க.

இனி இச் செய்யுள் தலைவி கூற்றெனக் கோடலே நேரிதாம்" அல்லது தோழி சொல்லெடுப்பத் தலைவி முடித்தவாறுமாம். இங்ஙனங் கொள்ளின் க - கூ. பனிவரை.........அன்னை - என்னும் வரையில் தோழி கூற்றாகவும் எஞ்சியவை, தலைவி கூற்றாகவும் கொள்ளல் வேண்டும்.

(பா - வே.) ௩. மின்னுவாக்கி. ச. முனிவுதக வந்த. எ. நெகிழ்த ளேக்கி. உஎ. நல்குவனெனினே.

## செய்யுள் ௬௯

**திணை :** பாலை.

**துறை :** உடன் போகிய தலைமகளைத் தலைமகன் மருட்டிச் சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது—களவொழுக்கத்திற்குப்பெரிதும் இடையூறு நிகழ்ந்தமையால் தலைவியை அவள் சுற்றத்தார் அறியாதபடி அழைத்துக்கொண்டு பாலை நிலப் பரப்பிலே செல்லுகின்ற தலைவன், தலைவிக்கு வழிநடை வருத்தம் தோன்றாதிருக்கும் பொருட்டு, வழியில் பல்வேறு காட்சிகளையும் அவட்குக் காட்டிச் செல்பவன் சொல்லியது என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு, "ஒன்றாத் தமரினும்" (தொல் - அகத் சக.) எனவரும் நூற்பாவினகண் அப்பாற்பட்ட ஒரு திறத்தானும் எனவரும் விதி கொள்க.

வாள்வரி வயமான் கோளுகிர் அன்ன
செம்முகை யவிழ்ந்த முண்முதிர் முருக்கின்
சிதரார் செம்மல் தாஅய் மதரெழில்
மாணிழை மகளிர் பூணுடை முலையின்
௫ முகைபிணி அவிழ்ந்த கோங்கமொ டசைஇநனை
அதிரல் பரந்த அந்தண் பாதிரி
உதிர்வீ அஞ்சினை தாஅய் எதிர்வீ
மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்
அணங்குடை நகரின் மணந்த பூவின்

க0 நன்றே கானம் நயவரும் அம்ம
கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை
அடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பின்
பிடிமிடை களிற்றில் தோன்றும்
குறுநெடுந் துணைய குன்றமும் உடைத்தே.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

க0 - கக: அம்ம..............குறுமகள்

(இ - ள்.) *அம்ம குறுமகள் வாழியோ* - *அன்புடைய இளையோய் இதுகேள் நீ வாழ்வாயாக என்க.*

(வி - ம்.) *அம்ம - கேட்பித்தற் கண் வந்தது.*

க - கக: வாள்வரி..............கண்டிசின்

(இ - ள்.) வாள்வரி வயமான் கோள் உகிர் அன்ன *செம்முகை அவிழ்ந்த முள்முதிர் முருக்கின் சிதர் ஆர் செம்மல் தாஅய் - வாள் போலும் கோடுகளையுடைய புலியினது மான் முதலியவற்றைக் கொன்று அளைந்த நகம் போன்று சிவந்த அரும்புகள் மலரப்பெற்ற முட்கள் முதிர்ந்த முருக்கினது* வண்டு *பொருந்திய பழம் பூ பரக்கப்பட்டும்; மதர் எழில் மாண் இழை மகளிர் பூண் உடை முலையின் முகைபிணி அவிழ்ந்த கோங்க மொடு அசைஇ - மதர்த்த அழகையும் சிறந்த அணிகலன்களையும்* உடைய *இளமகளிரின் பூண் அணிந்த முலையையொத்த அரும்புகள் கட்டவிழ்ந்து கோங்க மலரோடு தங்கி; நனை அதிரல் பரந்த - அரும்பிய புனலிப் பூக்கள் பரவப்பெற்று; அம் தண்பாதிரி அம்சினை உதிர்வீ தாஅய் - அழகிய குளிர்ச்சியுடைய பாதிரியினது அழகிய கிளையினின்றும் உதிர்ந்த மலர்களும் பரவப் பெற்று; வீஎதிர் மராஅம் மலரொடு விராஅய - பூக்கும் பருவத்தை எதிர்ந்த வெண் கடப்ப மலரொடு கலந்து; பராஅம் அணங்கு உடை நகரின் - வழிபாடு செய்தற்குரிய தெய்வம் உறைகின்ற திருக்கோயில் போல; மணந்த பூவின கானம் நன்று நயவரும் கண்டிசின் - மணங்கமழுகின்ற பல்வேறு மலர்களுடைமையால் நாம் செல்லும் இக்காடு பெரிதும் விரும்பத் தக்கதாய் இருத்தலைக் கண்டு மகிழ்வாயாக என்க.*

(வி - ம்.) *வாள் போலும் வரிகள் என்க. வயமான் - புலி. கோள் உகிர்: தனக்கிரையான மான் முதலியவற்றை அறைந்து குருதி தோய்ந்த நகம் என்க. இது முருக்கினது செம்முகைக்கு உவமை. அசைஇ-தங்கி.*

அதிரல் - புனலிப் பூ. வீ எதிர் மராஅம் என்க. பராஅம் - பராவும். அணங்கு - தெய்வம். நகர் - கோயில். இசின் : முன்னிலையசை.

## கக - கச: நுந்தை............உடைத்தே

(இ - ள்.) நுந்தை அடுகளம் பாய்ந்த தொடி சிதை மருப்பின் பிடிமிடை களிற்றின் - உன் தந்தை பகைவரைக் கொல்லுகின்ற போர்க்களத்தின்கண் பகைவருடைய மதிற் கதவினைப் பாய்ந்ததனால் பூண் சிதைந்த மருப்பினையுடைய பிடியானைகளும் களிற்றியானைகளும் போலத் தோன்றுகின்ற; குறு நெடுந்துணைய குன்றமும் உடைத்து - குறியனவும் நெடியனவும் ஆகிய அளவில் அமைந்த மலைகளையும் உடையதாய்க் காட்சிக்கு இனியதாதலையும் காண்பாயாக.

(வி - ம்.) அடுகளத்தில் மதிற் கதவைப் பாய்ந்த என்க. பெண் யானையும் களிற்றியானையும் விரவிய காட்சி போலக் குறியவும் நெடியவு மாகிய குன்றங்கள் தோன்றும் என்க.

இனி, இதனை அம்ம குறுமகள் வாழி முருக்கின் செம்மல் தாஅய்க் கோங்கமொடு அசைஇ, அதிரல் பாதிரி உதிர் வீயோடு தாஅய் வீ எதிர் மராஅம் விராய் அணங்குடை நகரின் மணந்த பூவின் கானம் நன்றும் நயவரும்; மற்றும் பிடிமிடை களிற்றின் தோன்றும் குன்றமும் உடைத்து என இயைத்துக் கொள்க.

(பா - வே) ௩. சிதறற். எ. முதிர் வீ. க. யணங்கு. க௨. தொடி செறி. க௩. பிடியிடை.

## செய்யுள் ௧௦௦

திணை : நெய்தல்.

துறை : தோழி வரைவு கடாயது

(து - ம்.) அஃதாவது—திருமணம் செய்தலில் கருத்தின்றிக் களவொழுக்கமே காமுற்று நாள்தோறும் வந்து மீளுகின்ற தலைவனுக்குத் தோழி அலர் மிகுதி கூறி வரைவு கடாவுவாள் சொல்லியது என்றவாறு.

(வி - ம்.) இதற்கு, "நாற்றமும் தோற்றமும்" எனவரும் (தொல்-களவி. உக.) நூற்பாவின்கண் களனும் பொழுதும்.........அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும் எனவரும் விதி கொள்க.

அரையுற் றமைந்த ஆரம் நீவிப்
புரையப் பூண்ட கோதை மார்பினை
நல்லகம் வடுக்கொள முயங்கி நீவந்

தெல்லினிற் பெயர்தல் எனக்குமா ரினிதே
௫ பெருந்திரை முழக்கமொ டியக்கவிந் திருந்த
கொண்டல் இரவின் இருங்கடல் மடுத்த
கொழுமீன் கொள்பவர் இருள்நீங் கொண்சுடர்
ஓடாப் பூட்கை வேந்தன் பாசறை
ஆடியல் யானை அணிமுகத் தசைத்த
௧௦ ஓடை ஒண்சுடர் ஒப்பத் தோன்றும்
பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்
பரியுடை நற்றேர்ப் பெரியன் விரியிணர்ப்
புன்னையங் கானற் புறந்தை முன்றுறை
வம்ப நாரை யின்னொலித் தன்ன
௧௫ அம்பல் வாய்த்த தெய்ய தண்புலர்
வைகுறு விடியல் போகிய எருமை
நெய்தலம் புதுமலர் மாந்தும்
கைதையம் படப்பைஎம் மழுங்க லூரே.

—உலோச்சனார்.

(உரை)

க - ௪: அரையுற்று.........இனிதே

(இ - ள்.) *அரை உற்று அமைந்த ஆரம் நீவிப் புரையப் பூண்ட கோதை மார்பினை - பிற மணப் பொருளோடு விரவி அரைக்கப்பட்டு இனிதின் அமைந்த சந்தனத்தைத் திமிர்ந்து பின்னும் நறுமணம் சிறப்புறும்படி அணிந்த மலர் மாலையினையும் உடைய மார்பினையுடையையாய் நாள்தோறும்; நீ எல்லினின் வந்து நல் அகம் வடுக்கொள முயங்கி - நீ இரவிலே வந்து மார்பு வடுக்கொள்ளும்படி தழுவிவிட்டு; பெயர்தல் எனக்கும் ஆர் இனிதே - மீண்டு போதல் எனக்கும் மிகவும் இனிதேயாம் என்க.*

(வி - ம்.) *நீ மிகவும் மணங்கமழும் சந்தனம் பூசி வந்து முயங்குதலாலே அந்த மணம் நீ வருங்கால் சேய்மையில் உள்ளாரும் நின் வரவினை அறிதற்கும் அந்நறுமணம் தலைவியின்பாலும் கமழப் பெறுமாதலால் எம்மில்லத்தார் தலைவியினை ஐயுறுதற்கும் ஏதுவாம். ஆதலால் நீ இரவில் வருதலும் எமக்குத் தீதே எனக் கருப்பொருட் புறத்தே இறைச்சி தோற்றுவித்தமையும் நுண்ணிதின் உணர்க. நல்லகம் வடுக்கொள முயங்கி என்புழி நின் முயக்கம் பிறர் அறியுமிடத்தே எமது குடிக்குப் பழியும் பிறக்கும் எனவும் மற்றோர் இறைச்சிப் பொருளும்*

தோன்றுதலறிக. எனக்கும் என்றது தோழி தலைவியைத் தானாகக் கருதிக் கூறியபடியாம். ஆர் : இசை நிறை.

### ௭ - ௰ : பெருந்திரை.......... தோன்றும்

(இ - ள்.) பெருந்திரை முழக்கமொடு இயக்கு அவிந்து இருந்த கொண்டல் இரவின் கொழுமீன் கொள்பவர் இருங்கடல் மடுத்த இருள் நீங்கு ஒள் சுடர் - பெரிய அலைகளின் முழக்கத்தோடே இயக்கமில்லாதிருந்த கடலையும் முகிலையும் உடைய இரவின்கண் கொழுமீன் என்னும் ஒருவகை மீனைப் பிடிப்பவராகிய பரதவர் பெரிய அக் கடலில் தம்து தோணியில் கொளுத்திவைத்த இருள் நீங்குதற்குக் காரணமான ஒளிமிக்க விளக்குகள் ; ஓடாப் பூட்கை வேந்தன் பாசறை ஆடு இயல் யானை அணிமுகத்து அசைத்த ஓடை ஒள்சுடர் ஒப்பத்தோன்றும்- போரின்கண் புறமிடாத மேற்கோளையுடைய அரசனது பாசறையின்கண் ஆடும் இயல்புடைய யானைகளின் முகத்திலே கட்டிய பொன்னாலியன்ற முகபடாங்களின் ஒள்ளிய சுடர்களைப் போன்று தோன்றுதற்கிடனான ; என்க.

(வி - ம்.) பெருந்திரை முழக்கமொடு இயக்கவிந்திருந்த இருங் கடல் எனவும் கொண்டல் இரவின் இரும்கடல் எனவும் தனித் தனி கூட்டுக. விளக்கொளியைக் கண்டு கொழுமீன் தமது தோணியை நோக்கி வருதற் பொருட்டு அம்மீன் பிடிப்பவர் தோணியில் விளக் கிடுவர் என்பது கருத்து. மீன் கொள்பவர் தோணியில் விளக்கேற்றினாற் போலப் பெருமானே தலைவியை மணந்துகொள்ள விரும்புகின்ற நீ நின் மனையில் திருமணம் செய்து கொள்ளுதற்கு ஆவன செய்க என்பது இதன்கண் உள்ளுறை என்க. இவ்வுள்ளுறை உவமமே ஏனை உவம மாகவும் நின்றது. பூட்கை - மேறகோள். ஓடை - முகபடாம்.

### ௧௧ - ௧௮ : பாடுநர்..........அழுங்கலூரே

(இ - ள்.) பாடுநர் தொடுத்த கைவண் கோமான் பரி உடை நல்தேர் பெரியன் விரி இணர்ப்புன்னை அம்கானல் புறந்தை-பாணர் களையும் புலவர்களையும் தன்னொடு தொடர்பு செய்து கொண்ட கைவண்மையையுடைய அரசனை குதிரை பூண்ட தேரினை யுடைய பெரியன் என்பவனுக்குரிய விரிந்த பூங்கொத்துக்களை யுடைய புன்னை மரங்களால் அழகுற்ற கடற்கரைச் சோலையினை யுடைய புறையாறு என்னும் பட்டினத்தின் ; முன்துறை வம்ப நாரை இனன் ஒலித்து அன்ன-துறைமுகத்தின்கண் புதியனவாக வந்த நாரைக்கூட்டம் ஆரவாரித்தாற் போன்று ; தண்புலர் வைகுறு விடியல் போகிய எருமை நெய்தல் அம் புதுமலர் மாந்தும் - குளிர்ந்த இருள் புலர் தலையுடைய இராக் காலத்தின்

வைகறைப் பொழுதின் பின்னதாகிய விடியற் காலத்தே மேய்தற்குச் சென்ற கற்றெருமைகள் நெய்தலினது அழகிய புதிய மலர்களை மேய்தற்கிடனுன; கைதை அம் படப்பை எம் அழுங்கல் ஊர் - தாழை வேலியையுடைய அழகிய தோட்டங்களமைந்த எம்முடைய ஆரவாரமுடைய ஊரின்கண்; அம்பல் வாய்த்த - அலர் எழுந்து ஆரவாரித்தன ஆதலால்; இனி நீ இரவின்கண் வாராதேகொள் என்பதாம்.

(வி - ம்.) பாணரும் புலவரும் அடங்கப் பாடுநர் எனப் பொதுச் சொல்லால் ஓதினர். தொடுத்தல் தொடர்புபடுத்துதல். பாடுநரைத் தன்னோடு தொடர்புபடுத்துதற்குக் காரணமான கைவண்மை என்க. புறந்தை - புறையாறு என்பதன் மரூஉ. அஃது இக்காலத்தே பொறையாறு என வழங்கப்படுகின்றது. துறைமுன் என்னும் தொடர் முன்றுறை எனச் சொன்னிலை மாறி நின்றது. நாரை முதலிய பறவைகள் வெவ்வேறு நாடுகளிலிருந்து வரும் இயல்புடையன ஆதலின் வம்ப நாரை என்றார். இனன்: போலி. தெய்ய: அசைச் சொல். வைகுறு - வைகறை. நாட்காலையில் கற்றெருமைகளை மேயவிடுதல் வழக்கம். இதனை "கீழ் வானம் வெள் ளென்று எருமை சிறு வீடு மேய்வான் பரந்தன காண்" என்பதனுலும் (திருப்பாவை - ௮.) உணர்க படப்பை - தோட்டம். அழுங்கல் - ஆரவாரம். அம்பல்-ஈண்டு அலர் என்க.

இனி இதனை—பெருமானே! நீ! இரவில் வந்து முயங்கிப் பெயர்தல் எனக்கும் இனிது (ஆயினும்) பெரியன் முன்றுறை வம்பநாரை ஒலித்தன்ன எம் அழுங்கலூர் அம்பல் வாய்த்த (ஆதலால் இரவின்கண் வாராதேகொள்) என இயைத்துக் கொள்க.

இது நெய்தலிற் குறிஞ்சி.

(பா. வே.) ௧. அறையற்றமை. ௧௮. நெய்தற் புதுமலர்.

## செய்யுள் ௩௦௧

**திணை :** பாலை.

**துறை :** பிரிவிடை வேறுபட்ட கிழத்தி, தோழிக்குச் சொல்லியது; தோழி கிழத்திக்குச் சொல்லியதூஉமாம்.

**(து - ற்.)** (௧) அஃதாவது, தலைவி வரைவிடை வைத்துத் தலைவன் பிரிந்தது பொறாஅது தோழிக்குச் சொல்லியது.

(௨) வரைவுடன் பட்ட தலைவன் வரை பொருள் நிமித்தம் அதற்கு இடையீடாகத் தலைவியைப் பிரிந்த பொழுது, தலைவி அவன் பிரிவாற்றாது பெரிதும் வருந்தினளாக, அதுகண்ட தோழி, "நாம் நம் பெருமானுக்கு நலமே செய்தனம் ஆதலால் நமக்குத் துன்பம் உண்டாதற்குக் காரணமில்லை; ஆதலால் நம் பெருமான் விரைந்து வருகுவர்; நலம் உண்டாதலும் தேற்றம்; ஆதலால் நீ வருந்தாதே கொள்!" என்று தலைவிக்குச் சொல்லியது எனினுமாம் என்றவாறு.

**(இ - ம்.)** (௧) இதற்கு "வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்" எனவரும் (தொல் - களவி. ௨௧.) விதிகொள்க.

(௨) இதற்கு, "நாற்றமும் தோற்றமும்" எனவரும் (தொல்—களவி. ௨௩) நூற்பாவின்கண் ஆங்கதன் தன்மையின் வன்புறை எனவரும் விதி கொள்க.

அம்ம வாழி தோழி யிம்மை
நன்றுசெய் மருங்கில் தீதில் என்னும்
தோன்றுபடு பழமொழி யின்றுபோய்த் தன்றுகோல்
தகர்மருப் பேய்ப்பச் சுற்றுபு சுரிந்த
௫ சுவன்மாய் பித்தைச் செங்கண் மழவர்
வாய்ப்பகை கடியும் மண்ணொடு கடுந்திறல்
தீப்படு சிறுகோல் வில்லொடு பற்றி
நுரைதெரி மத்தங் கொளீஇ நிரைப்புறத்
தடிபுதை தொடுதோல் பறைய வேகிக்
௧௦ கடிபுலங் கவர்ந்த கன்றுடைக் கொள்ளையர்
இனந்தலை பெயர்க்கும் நனந்தலைப் பெருங்காட்
டகலிரு விசும்பிற் கோடம் போலப்
பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிற்
றுருப்பவிர் பூரிய சுழன்றுவரு கோடைப்

கரு புன்கால் முருங்கை ஊழ்கழி பன்மலர்
தண்கார் ஆலியில் தாவன உதிரும்
பனிபடு பன்மலை இறந்தோர்க்கு
முனிதகு பண்பியாஞ் செய்தன்றோ விலமே.

—மாமூலனார்.

(உரை)

க - ரு: அம்ம.........கோல்

(இ - ள்.) தோழி அம்ம வாழி இம்மை நன்று செய் மருங்கில் தீது இல் என்னும் தொன்றுபடு பழமொழி — தோழி நீ வாழ்வாயாக ஈதொன்று கேள்! இப்பிறப்பிலே ஒருவர் ஏதேனும் ஒரு நன்மை செய்தவிடத்தே அச்செயல் காரணமாக அவருக்கு நன்மையே விளையுமல்லது தீங்கு விளைவதில்லை என்னும் பொருள் படுகின்ற தொன்றுதொட்டு வழங்கிவருகின்ற வாய்மை யுடைய பழமொழியானது. இன்று பொய்த்தன்று கொல் - இக் காலத்தே பொய்த்தது போலும்; அஃது எற்றால அறிந்தனை எனின்; என்க.

(வி - ம்.) அம்ம, கேட்பித்தற்கண் வந்தது. இம்மை - இப்பிறப்பு. "நன்று செய் மருங்கில் தீதுஇல்," என்பது பழமொழி; பொய்த்தன்று— பொய்த்தது.

ச - கக: தகர்...........பெருங்காட்டு

(இ - ள்.) தகர் மருப்பு ஏய்ப்பச் சுற்றுபு சுரிந்த சுவல்மாய் பித்தைச் செங்கண் மழவர் - செம்மறிக்கிடாயின் கொம்புபோல முறுக்குண்டு சுருண்ட (அணலினையும்) பிடரியை மறைக்கின்ற தலைமயிரினையும் சிவந்த கண்ணையுமுடைய வெட்சி மறவர்; கடிபுலம் நிரைப்புறத்து அடிபுதை தொடுதோல் பறைய ஏகி - பகைவர் நிலத்தின்கண் உள்ள ஆனிரை நிற்குமிடத்திற்குத் தமது அடியை மறைக்கின்ற தொடுதோல் தேயும்படி விரைந்து சென்று; வாய்ப்பகை கடியும் மண்ணொடு கடுந்திறல் தீப்படு சிறு கோல் வில்லொடு பற்றி நுரைதெரி மத்தம் கொளீஇ - நிரை காக்கும் ஆயர்களுடைய இருமல்நோய் தீர்க்கும் மருந்தாகிய மண்ணையும் கடிய திறலையுடைய தீயினால் துளையிடப்பட்ட சிறிய மூங்கிற் கோலாகிய குழலையும் வில்யாழோடு கைப்பற்றிக் கொண்டு தயிரினது நுரை காணப்படுகின்ற அவர்தம் மத்துக் களையும் கைக்கொண்டு; கவர்ந்த கன்றுடை இனம் கொள்ளையர்-

அவர்பால் கவர்ந்துகொண்ட கன்றுகளையுடைய ஆனிரையைக் கொள்ளையிட்டுக் கொணர்ந்தவராய்; தலை பெயர்க்கும் நனந் தலைப் பெருங்காட்டு - அவற்றைப் பாதீடு செய்து நிறுத்தும் அகன்ற இடத்தையுடைய பெருங்காட்டின்கண்; என்க.

(வி - ம்.) தகர் மருப்பேய்ப்பச் சுற்றுபு சுரிந்த பித்தை சுவன்மாய் பித்தை எனக்கூட்டி முன்னது மீசை எனவும் பின்னது தலைமயிர் எனவும் கொள்க. பித்தை - ஆண் மயிர். மழவர் என்றது, வெட்சி மறவரை. வாய்ப்பகை கடியும் மண் என்றது இருமலைத் தீர்க்கும் மருந்தாகிய மண்ணை என்க. கடியும் மருந்தொடு என்பதும் பாடம் என நினைத்தற்குப் பழைய உரைக்குறிப்பு இடந்தருகின்றது. தீப்படு சிறுகோல் என்றது, தீக்கடைகோல் எனினுமாம். மத்தம் - தயிர் கடை கருவி. கடிபுலம் என்றது கரந்தையாரிடத்தை. மறவர் கடிபுலம் நிரைப்புறத்துத் தொடுதோல் பறைய ஏகிக் கவர்ந்த கொள்ளையராய் வந்து இனந்தலைப் பெயர்க்கும் பெருங்காடு என இயையும். தொடு தோல் - செருப்பு. இனம் - ஆனினம். காடு - வெட்சியார் காடு.

௧௨ - ௧௯ : அகலிரு..........செய்தன்றோ விலமே

(இ - ள்.) அகல்இரு விசும்பிற்கு ஓடம்போலப் பகல் இடை நின்ற பல்கதிர் ஞாயிற்று - அகன்ற பெரிய வானமாகிய கடலியங்கும் தோணிபோலப் பகற்பொழுதிலே நின்ற பல கதிர்களையுடைய கதிரவனது; உருப்பு அவிர்பு ஊரிய சுழன்று வருகோடை - வெப்பம் விளங்கிப் பரக்கச் சுழன்றுவரும் மேல் காற்றினால்; புன் கால் முருங்கை ஊழ் கழி பல்மலர் தண்கார் ஆலியில் தாவன உதிரும் - புல்லிய அடிப்பகுதியையுடைய முருங்கை மரத்தின்கண் ஊழ்த்துக் கழிகின்ற பலவாகிய பூக்கள் குளிர்ந்த முகிலினின்றும் உதிருகின்ற ஆலங்கட்டிகளைப் போலப் பரவி உதிருகின்ற; பனிபடு பன்மலை இறந்தோர்க்கு - நடுக்க முண்டாகும் பல மலைகளையும் தாண்டிச் சென்ற நம் தலைவர்க்கு; யாம் முனிதகு பண்பு செய்தன்று இலம் - யாம் நன்றே செய்த தன்றி வெறுக்கத்தக்க செயல் செய்திலேம் ஆகவும் நமக்குத் துன்பம் வருதலான்; என்பதாம்.

(வி - ம்.) விசும்பாகிய கடலுக்கு ஓடம்போல என்க. அவிர்பு ஊரிய எனக் கண்ணழித்துக் கொள்க. புன்கால் - உறுதியற்ற கால்; கால் - அடிமரம். ஊழ்த்துக் கழி மலர் என்க. ஆலி - ஆலங்கட்டி, இவை நிறம் பற்றி வந்த வுவமை. முனிதகு பண்பு - வெறுக்கத்தக்க செயல்; பண்பு, ஆகுபெயர். செய்தன்று - செய்தது. யாம் முனிதகு செயல் செய்திலமாகவும் என்றது யாம் நன்மையே செய்தேமாகவும் என அதன் உடன்பாட்டுப் பொருளை வற்புறுத்தி நின்றது. இங்ஙனம் கூறவே யாம் நன்மையே செய்திருப்பவும் நமக்கு அவர் பிரிவு ஆற்றாமையால் துன்பமே உளதாயிற்று. ஆதலால் "நன்றுசெய் மருங்கில்

தீதில் என்னும் தொன்றுபடு பழமொழி யின்று பொய்த்தது'' என்ற வாறு.

இனி, இதனை - தோழி நன்றுசெய் மருங்கில் தீதில் என்னும் பழமொழி இன்று பொய்த்தது எற்றாலெனின் மலை இறந்தோர்க்கு முனிதகு பண்பு யாம் செய்தன்று இலம் ஆகவும் நமக்குத் துன்பம் வந்தமையான், என இயைத்துக் கொள்க.

## செய்யுள் ௧0௨

**திணை :** குறிஞ்சி.

**துறை :** இரவுக் குறிக்கண் சிறைப்புறமாகத் தோழிக்குச் சொல்லு வாளாய்த் தலைமகள் சொல்லியது.

**(து - ம்.)** அஃதாவது— தலைவன் களவொழுக்கமே காமுற்று நாள்தோறும் வந்து வந்து மீள்கின்றவனை வரைவு கடாதற்பொருட்டு, அவன் ஒரு நாளிரவு சிறைப்புறத்தே வந்து நிற்றலறிந்த தலைவி அவன் வருகை அறியாதாள் போன்று தோழிக்குச் சொல்லுவாள்போலத் தலைவன் கேட்பச் சொல்லியது என்றவாறு.

**(இ - ம்.)** இதனை, ''மறைந்தவற் காண்டல்'' எனவரும் (தொல் - களவி - ௨0.) நூற்பாவின்கண் அன்னவும் உளவே என்பதனால் அமைத்துக்கொள்க.

உளைமான் துப்பின் ஓங்குதினைப் பெரும்புனத்துக்
கழுதிற் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென
உரைத்த சந்தின் ஊரல் இருங்கதுப்
பைதுவரல் அசைவளி யாற்றக் கைபெயரா
௫ ஒலியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்
குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது
படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென
மறம்புகல் மழகளி றுறங்கும் நாடன்
௧0 ஆர மார்பின் அரிஞிமி றார்ப்பத்
தாரன் கண்ணியன் எஃகுடை வலத்தன்
காவலர் அறிதல் ஓம்பிப் பையென
வீழாக் கதவம் அசையினன் புகுதந்
துயங்குபடர் அகல முயங்கித் தோள்மணந்
௧௫ தின்சொல் லளைஇப் பெயர்ந்தனன் தோழி

இன்றேவன் கோல்லோ கண்டிகு மற்றவன்
நல்கா மையின் அம்ப லாகி
ஒருங்குவந் துவக்கும் பண்பின்
இருஞ்சூழ் ஓதி ஒண்ணுதல் பசப்பே.

—மதுரை இளம்பாலாசிரியன் சேந்தங்கூத்தன்.

(உரை)

க - கூ : உளேமான்.........நாடன்

(இ - ள்.) (கரு) தோழி – தோழியே கேள் !; உளேமான் துப்பின் தினைப் பெரும்புனத்து ஓங்கு கழுதில் கானவன் பிழி மகிழ்ந்து வதிந்தென – பிடரிமயிரினையுடைய சிங்கம்போன்ற வலிமையோடு தனது தினையினையுடைய பெரிய புனத்திலே உயர்ந்த பரணிடத்தே குறவன் கள்ளை யுண்டு களித்துத் தங்கினு ஞக ; உரைத்த சந்தின் ஊரல் இரும்கதுப்பு ஐதுவரல் அசைவளி ஆற்ற - பூசிய மயிர்ச் சந்தனத்தையுடைய பரந்த கரிய தனது கூந்தலை மெல்ல இயங்குகின்ற காற்ருனது புகுந்து ஆற்ரு நிற்ப ; கொடிச்சி ஒலியல் வார்மயிர் கை பெயரா உளரினள் - குறப் பெண் தழைத்து நீண்ட அம்மயிரினை மேலும் கையோயாது கோதுபவளாய் இருந்து ; பெருவரை மருங்கின் குறிஞ்சி பாட - பெரிய மலைச்சாரலிலே குறிஞ்சியென்னும் பண்ணைப் பாடுத லாலே ; மறம் புகல் மழகளிறு - மறத்தன்மையையே பெரிதும் விரும்புகின்ற இளங் களிற்றியானையானது தினையைத் தின்னத் தினைப்புனத்தினுள் புகுந்து அப்பண்ணைக் கேட்டு மயங்கி ; குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது - தான் கைக்கொண்ட தினைக் கதிரைத் தின்ஞமலும் தான் நிற்குமிடத்தினின்றும் போகாமலும் ; படாஅப் பைங்கண் பாடுபெற்று - துயிலாத தனது பசிய கண்களும் துயில்தலைப் பெற்று, ஒய்யென உறங்கும் நாடன் - விரைந்து துயில்தற்குக் காரணமான மலைநாட்டை யுடைய நம்பெருமான் ; என்க.

(வி - ம்.) உளேமான் - சிங்கம். கழுது - பரண். பிழி - கள். சந்து - சந்தனம்.

கானவன் - கள்ளுண்டு மயங்கித் தினைகாவல் கைவிட்டமையால் கொடிச்சி பாடிய குறிஞ்சிப்பண்ணைக் கேட்டுத் தினைப்புனத்தில் புகுந்த யானை இசையால் மயங்கிக் குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது துயின்றது எனவரும் இதனோடு,

" அமைவிளை தேறல் மாந்திய கானவன்
கவண்விடு புடையூஉக் காவல் கைவிட

வீங்கு புனம் உணீஇய வேண்டி வந்த
ஓங்கியல் யானை தூங்குதுயி லெய்த''

எனவரும் (சிலப் - நீர்ப்படை: உகஎ - உ0) இளங்கோவடிகளார் செய்யுட் பகுதியையும் ஒப்பு நோக்குக. இது, கொடிச்சி கானவனுக்குப் பாடிய பண் தினைதின்ன வந்த யானையை அதனைத் தின்னாமலும் அவ்விடத்தினின்றும் போகாமலும் நின்றவாறே துயில்வித்ததுபோல உன்னால் குறை நயப்பிக்கப்பட்ட தலைவன் உன்னால் கூட்டப்படுகின்ற இக்களவின்பத்தில் மயங்கி என்னை வரைந்துகொண்டு தன் மனை புகாமலும் இக்களவொழுக்கத்தின்கண் ஈடுபட்டு அதனையும் கைவிடாதவனாய்த் தன் குலப் பெருமையை மறந்தொழிந்தான் என உள்ளுறுத்தித் தலைவன் கேட்பத் தலைவி தோழியை நோகின்றாளாகக் கூறியபடியாம்.

க0 - கரு: ஆரமார்பின்..........பெயர்ந்தனன்

(இ - ள்.) ஆரம் மார்பில் அரி ஞிமிறு ஆர்ப்ப தாரன் கண்ணியன் எஃகு உடை வலத்தன்—சந்தனம் பூசிய தன் மார்பிலே அழகிய வண்டுகள் ஆரவாரித்தற்கு, இடனாகிய மாலையையும் கண்ணியையும் உடையனாய்த் தன் வலக்கையில் வேற்படையை உடையவனாகவும் ஒருநாள் இரவின்கண் வந்து; காவலர் அறிதல் ஓம்பி வீழாக்கதவம் அசைஇனன் பையென புகுதந்து—ஊர்காவலர் தன்னை அறியாமல் மறைந்து வந்து தாள் வீழ்க்கப்படாத புழைக்கடைக் கதவின் பக்கத்திருந்து மெல்ல வீட்டினுள் புகுந்து; உயங்கு படர் அகல முயங்கி தோள் மணந்து இன்சொல் அளைஇப் பெயர்ந்தனன்— யான் வருந்துதற்குக் காரணமான எனது துன்பம் தீரும்படி தழுவி எனது மார்பின் மேல் பொருந்தி இனிய சொற்களை விரவிக் கூறி என்னை மகிழ்வித்துப் போயினன்; என்க.

(வி - ம்.) ஆரம் - சந்தனம்; முத்துமாலையுமாம். அரி - வரியுமாம். ஞிமிறு - வண்டு - தார், கண்ணி. என்பன மாலைவகை. எஃகு - வேல். காவலர் - ஊர் காவலர். பை என: குறிப்பு மொழி. தாள் வீழாக் கதவம் என்க. படர் - நினைவால் உண்டாகும் துயர். தோள் மணந்து என்றது, இடக்கரடக்கு. தலைவன் இடையே இடையூறு காரணமாக வாராதொழிந்தமை தோன்ற நெருநல் இங்ஙனம் வந்து மணந்து போனான் என்றாள் என்க. நெருநல் என வருவித்துக் கொள்க.

கசு - ககூ: இன்றேவன்..........பசப்பே

(இ - ள்.) இன்று அவன் நல்காமையின் ஒருங்கு வந்து அம் பலாகி உவக்கும் பண்பின் இருஞ்சூழ் ஓதி ஒள் நுதல்—இன்று ஒருநாள் அவன் நம்பால் வந்து நமக்கு அளி செய்யாமையால் ஒருசேர வந்து ஊர்முழுதும் அலர் தூற்றி

ஏதிலார் மகிழ்தற்குக் காரணமாகக் கரியவாய்ச் சூழ்ந்த கூந்தல் புரளும் நமது ஒள்ளிய நெற்றியின் கண்; பசப்பு எவன் கொல்லோ கண்டிகும் – யாம் ஏனோ இந்தப் பசலையைக் காண்கின்றோமோ இந்நிலை நீடிக்கும் எனின் யாம் எவ்வாறு உய்வேம்; என்பதாம்.

(வி - ம்.) தலைவன் இரவுக்குறியின்கண் வந்து மீளினும் அவனைக் காணும் பொழுதினும் காணாப் பொழுதே நீளிதாதலின் அப்பிரிவு ஆற்றாமல் யான் மெலிகின்றேன் என்பது தலைவனுக்குத் தோன்றும்படி தலைவி இவ்வாறு கூறுகின்றாள் என்க. ஒருங்கு வந்து உவக்கும் பண்பின் என்றது அலர் தூற்றும் பெண்டிர் ஒருங்கே கூடி வந்து உவப்பதற்குக் காரணமான பசப்பு என்க. இப்பொழுதே இம்மறை பலர் அறிந்தனர் என்பாள் அம்பலாகி என்றாள். கண்டிகும் - காண் கின்றேம். கொல், ஓ: அசைச்சொற்கள் இதனால் போந்த பயன் தலைவன் தலைவி நிலைமையறிந்து வரைவொடு வருவானாதல் என்க.

இனி இதனை, தோழி நெருநல் நாடன் ஆர்ப்ப ஓம்பிப் பையென அசைவினன் புகுந்து முயங்கி மணந்து அளைஇப் பெயர்ந்தனன் இன்று எவன்கொல் நுதல் பசப்புக் கண்டிகும் என இயைத்துக் கொள்க.

இந்நிலை நீடிக்குமாயின் எவ்வாறு உய்வேம் என்பது குறிப்பு.

## செய்யுள் கoஙு

திணை: பாலை

துறை: தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொற்றது.

(து - ம்.) அஃதாவது—தலைவன் பொருள் ஈட்டுதற்குச் சென்றவன் காலம் நீட்டித்தலின் அவனது பிரிவினை ஆற்றாத தலைவி, பெரிதும் வருந்தித் தோழிக்குச் சொல்லியது என்றவாறு.

(இ - ம்.) இதனை "அவனறி வாற்ற வறியு மாகலின்" எனவரும் (தொல் - கற்பி - க.) நூற்பாவின்கண் ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும் எனவரும் விதியால் அமைத்துக் கொள்க.

நிழலறு நனந்தலை யெழாலேறு குறித்த
கதிர்த்த சென்னி நுணங்குசெந் நாவின்
விதிர்த்த போலும் அந்நுண் பல்பொறிக்
காமர் சேவல் ஏமஞ் சேப்ப
ரு முளியரில் புலம்பப் போகி முளைஅது
முரம்படைந் திருந்த மூரி மன்றத்

நதர்பார்த் தல்கும் ஆகெழு சிறுகுடி
உறையுநர் போகிய வோங்குநிலை வியன்நகர்
இறைநிழல் ஒருசிறைப் புலம்பயா உயிர்க்கும்
௧0 வெம்முனை யருஞ்சுரம் நீந்தித் தம்வயின்
ஈண்டுவினை மருங்கின் மீண்டோர் மன்னென
நள்ளென் யாமத் துயவுத்துணை யாக
நம்மோடு பசலை நோன்று தம்மோடு
தானே சென்ற நலனும்
௧௫ நல்கார் கொல்லோ நாம் நயந்திசி னோரே.

—காவிரிப் பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்.

(உரை)

௧ - ௫: நிழல் அற...........போகி

(இ - ள்.) *நிழல் அறு நனந்தலை எழால் ஏறு குறித்த கதிர்த்த சென்னி நுணங்கு செந்நாவின்* - நிழல் இல்லையான அகன்ற பாலை நிலப்பரப்பின்கண் வல்லூறு என்னும் வன்பறவையினாலே எறிதற்குக் குறிவைக்கப்பட்ட விளக்கமுடைய தலையினையும் நுணுகிய சிவந்த நாவினையும்; *விதிர்த்த போலும் அம் நுண் பல் பொறி காமர் சேவல் ஏமம் சேப்ப* - அள்ளித்தெளித்தாற்போலும் அழகிய நுண்ணிய பலவாகிய புள்ளிகளையும் கண்டாரால் விரும்பப்படும் தன்மையினையுமுடைய குறும்பூழ்ச் சேவலானது அதற்குத் தப்பிப் பாதுகாவலான இடத்தை அடைதற்கு; *முளி அரில் புலம்பப் போகி* - தான் மறைந்திருந்த உலர்ந்த புதர் தனித்துக்கிடக்கும்படி பறந்து போய்; என்க.

(வி - ம்.) எழாஅல் - வல்லூறு என்னும் வன்பறவை. இது பறவைகளை வேட்டையாடித் தின்னும். ஏறு - எறிதல். விதிர்த்தல் - கையால் தெளித்தல். கதிர்த்த முதலிய அடைமொழிகளால் சேவல் குறும்பூழ்ச்சேவல் என்பது பெற்றும். அரில் - புதர்.

௫ - ௧0: முளஅது.........நீந்தி

(இ - ள்.) *முளஅது முரம்பு அடைந்திருந்த மூரி மன்றத்து* - தன் முன்பக்கத்தே வன்னிலத்தைச் சார்ந்திருந்த

பழையதான பெரிய அம்பலத்திலே; அதர் பார்த்து அல்கும் ஆகெழு சிறுகுடி உறையுநர் போகிய ஓங்குநிலை வியன் மனை - வழிப்போக்கரை எதிர்பார்த்து ஆறலை கள்வர் தங்குதற்கிடமான பசுக்களையுடைய சிறுகுடியாகிய அவ்வூரினின்றும் குடியோடிப்போன உயர்ந்த நிலையினையுடைய அகன்ற பாழ்மனையினது; இறை நிழல் ஒரு சிறை புலம்பு அயா உயிர்க்கும் வெம்முனை அருஞ்சுரம் நீந்தி – இறப்பினது நிழலையுடைய ஒரு பக்கத்தே புகுந்து தனது தனிமையினாலே நெட்டுயிர்ப்புக் கொள்ளுதற்கிடனான வெவ்விய போர் முனையாகிய கடத்தற்கரிய நெறியைக் கடந்து; என்க.

(வி - ம்.) முதுஅது மூரி மன்றம் என்பதற்கு - தன்கண் முன்னதாகிய மூரி மன்றம் என்க. அதர் - வழி. குறிஞ்சி திரிந்த பாலை என்பது தோன்ற, சிறுகுடி என்றார். உறையுநர் - குடியிருப்போர். இறை - வீட்டின் இறப்பு.

கo - க௫: தம்வயின்.........நயந்திசி னோரே

(இ - ள்.) நாம் நயந்திசினோரே தம் வயின் ஈண்டு வினை மருங்கின் மீண்டோர் மன்என – நம்மால் விரும்பப்பட்ட நம் பெருமான் தம்மிடத்தே கடமையாக வந்து பொருந்திய ஆள்வினையாகிய பொருள் ஈட்டுதற்கு மீண்டனர் என்பது தலைக்கீடாக; நள் என் யாமத்து உயவுத்துணை ஆக நம்மொடு பசலை நோன்று – நள் என்னும் ஓசையையுடைய இரவின்கண் நமக்கு இதுகாறும் உசாத்துணையாக நம்முடனே இப்பசலை நோயையும் பொறுத்திருந்து; தம்மொடு தானே சென்ற நலனும் - அவரோடு தானே போய்விட்ட நமது பெண்மை நலத்தை; நல்கார் கொல் - இனி நமக்கு அருள மாட்டாரோ, அங்ஙனமாகின் யான் உயிர் வாழேன்; என்பதாம்.

(வி - ம்.) ஆடவர்க்குப் பொருளீட்டுதல் கடமையாகலின் அதனைத் தம் வயின் ஈண்டு வினை என்றாள். மீண்டோர் என்றது, பண்டும் அவர் பொருள் வயின் பிரிந்துபோய் ஈட்டி வந்தவர் மீண்டும் போயினர் என்பதுபட நின்றது. மன்: ஒழியிசை; இனி நான் உயிர் வாழேன் என்னும் பொருள் குறித்து நின்றது. பண்டு யாமத்துத் துணையாக இருந்து இப்பொழுது அவரோடு தானே சென்ற நலன் என்க. கொல்: ஐயப் பொருட்டு. அவர் நம்மை நயந்திலர் என்பது தோன்ற நாம் நயந்திசினோர் என்றாள்.

இனி, இதனை—தோழி நாம் நயந்திசினோர் அருஞ்சுரம் நீந்தி வினை மருங்கின் மீண்டார் எனப் பண்டு யாமத்துத் துணையாக நம்மொடு

இருந்து இப்போது தம்மொடு தானே சென்ற நலனும் நல்கார்கொல் மன், என, இயைத்துக் கொள்க.

(பா. வே.) கஉ. ஆகிய. கச. தாமே.

## செய்யுள் க0௪

திணை : முல்லை.

துறை : வினைமுற்றி மீளுந் தலைமகற்குத் தோழி சொல்லியது.

(து - ம்.) அஃதாவது, முடி மன்னனுக்குப் படைத்துணையாகத் தலைவியைப் பிரிந்து செல்லும் தலைவன் யான் கார்ப்பருவத்தில் ஒருதலையாக மீண்டு வருவேன் அதுகாறும் வருந்தாதே கொள், எனத் தேற்றுரை வழங்கிச் சென்றவன் தான் சென்ற வினை முடிந்தமையின் குறித்த பருவம் தப்பாமல் மீண்டு வந்தமை கண்டு மகிழ்ந்த தோழி அவனைப் பாராட்டிச் சொல்லியது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "பெறற்கரும் பெரும்பொருள்" எனவரும் (தொல் - கற்பி க) நூற்பாவின்கண் பிறவும் வகைபட வந்த கிளவி என்பதன்கண் அமைத்துக் கொள்க.

வேந்துவினை முடித்த காலைத் தேம்பாய்ந்
தினவண் டார்க்குந் தண்ணறும் புறவின்
வென்வேல் இளையர் இன்புற வலவன்
வள்புவலித் தூரின் அல்லது முள்ளுறின்
ரு முந்நீர் மண்டிலம் ஆதி ஆற்றா
நன்னால்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர்
வாங்குசினை பொலிய ஏறிப் புதல
பூங்கொடி அவரைப் பொய்யதள் அன்ன
உள்ளில் வயிற்ற வெள்ளை வெண்மறி
க0 மாழ்கி யன்ன தாழ்பெருஞ் செவிய
புன்தலைச் சிறுரோ டேளி மன்றுழைக்
கவையிலை ஆரின் அங்குழை கறிக்கும்
சீறூர் பலபிறக் கொழிய மாலை
இனிதுசெய் தனையால் எந்தை வாழிய
கரு பனிவார் கண்ணள் பலபுலந் துறையும்
ஆய்தொடி யரிவை கூந்தல்
போதுகூரல் அணிய வேய்தந் தோயே.

—மதுரை மருதனிளநாகனார்.

## (உரை)

### ௧௪: எந்தை வாழிய.........

(இ - ள்.) எந்தை வாழிய - எம் பெருமானே நீ நீடூழி வாழ்க, என்க.

(வி - ம்.) எந்தை என்பது, இங்கு முறைப்பெயரன்று; இது தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினும் தோன்றா மரபிற் றுய்ப் புலனெறி வழக்கில், தோழி தலைவனை விளிக்கும் ஒருசொல் என்றுணர்க. (தொல். பொருளியல், ௩௨)

### ௧ - ௭: வேந்துவினை.........ஏறி

(இ - ள்.) வேந்துவினை முடித்தகாலை இன வண்டு தேம் பாய்ந்து ஆர்க்கும் தண் நறும் புறவின் - மன்னவன் தான் மேற்கொண்ட போர்த்தொழிலின்கண் வாகை சூடிய பொழுதே காலந்தாழ்த்தலின்றி வண்டுகள் நாற்றிசையினும் சென்று ஆரவாரிக்கின்ற குளிர்ந்த நறிய முல்லைப்பரப்பிலே; வென்வேல் இளையர் இன்புற - நின்னுடைய வெற்றிவேல் ஏந்திய ஏவலிளையர் மகிழும்படி; வலவன் வள்பு வலித்து ஊரின் அல்லது முள் உறின் முந்நீர் மண்டிலம் ஆதிஆற்றா - நின்னுடைய தேர்ப்பாகன் கடிவாள வாரை இழுத்துப் பிடித்து ஊர்ந்தாலல்லது அவன் கைக்கொண்டுள்ள தாற்றுக் கோலின்முள் தம்மேற் பட்ட விடத்தே கடல் சூழ்ந்த இந் நிலவுலகம் தம்மூடைய ஒருபொழுதை நேரோட்டத்திற்கு இடம் போதாதாகும்படி விரைகின்ற; நல் நால்கு கடும்பரி பூண்ட நெடுந்தேர் - அழகிய நான்கு குதிரைகள் பூண்ட கடிய செலவினையுடைய நினது நெடிய தேரினது; வாங்கு சினை பொலிய ஏறி - வளைந்த கொடிஞ்சி என்னும் இருக்கை பொலிவுறும்படி ஏறி இருந்து, என்க.

(வி - ம்.) வேந்து - துணைக்கழைத்த வேந்தன். வினை - போர்த் தொழில். தேம் - திசை. வலவன் - தேர்ப்பாகன். வள்பு - கடிவாள வார். வலித்து ஊர்தலாவது - வாரைப் பிடித்து வலிந்து இழுத்த வண்ணமே செலுத்துதல். முள் - தாற்றுக்கோலின் முள். ஆதி - குதிரைகள் நேராக ஓடும் ஓட்டம். நால்கு - நான்கு. குதிரைகளுக்கு எண்ணால் வருபெயர். சினை - கொடிஞ்சி; அஃதாவது, தாமரை மலர் வடிவமாகச் செய்யப்பட்ட இருக்கை என்க.

எ – கரு: புதல.........ஒழிய

(இ – ள்.) புதல பூ கொடி அவரைப் பொய் அதள் அன்ன உள்இல் வயிற்ற மாழ்கி அன்ன தாழ்பெருஞ் செவிய வெள்ளை வெள்மறி - புதலின்கண் படர்ந்துள்ள மலர்களையுடைய கொடியிடத்தே காய்த்த அவரைப்பிஞ்சினது உள்ளே வறிதான பொய்த்தோல் போன்ற உள்ளீடில்லாத வயிற்றையுடையனவும் மயங்கி விழுந்தாற் போன்று தாழ்ந்து தூங்குகின்ற பெரிய செவியையுடைனவுமாகிய வெள்ளாட்டின் வெண்ணிறமான குட்டிகள்; புல்தலை சிறுரோடு உகளி – புற்கென்ற தலையையுடைய சிறுவர்களோடு துள்ளிக்குதித்து விளையாடிப் பின்னர்; மன்று உழை கவை இலை ஆரின் அம்குழை கறிக்கும் சீறூர் - மன்றத்தின் பக்கத்திலுள்ள கவடுபட்ட இலைகளையுடைய ஆத்திமரத்தினது அழகிய தளிரைத் தின்னற்கிடமான சிறிய ஆயர்பாடிகள்; பல பிறக்கு ஒழிய – பலவும் பிற்பட்டுக் கிடக்கும்படி, என்க.

(வி - ம்.) அவரைப் பொய்யதள் - அவரையினது பிஞ்சுகளின் உள்ளே விதை தோன்றாமல் இருக்கும்பொழுது அவற்றின் தோல்கள் வறுங் கூடாயிருப்பதுபோல மாலைப்பொழுதில் தமக்குணவாகிய பால் உண்ணப்பெறாது வறிதேகிடக்கும் ஆட்டுக் குட்டிகளின் வயிற்றிற்கு உவமை எடுத்தோதியது, சங்கப் புலவர்கள் பொருள்களுக்கு உவமை கூறுங்கால் பெரிதும் கூர்ந்துணர்ந்தே கூறுதற்கு எடுத்துக்காட்டு எனலாம், வெள்ளை, நிறங்குறித்ததன்று யாட்டின் வகை குறித்து நின்றது. மாழ்குதல் - மயங்குதல். ஆர் - ஆத்தி. அதனிலை கவைத் திருத்தலைக் கண்டுணர்க. கறித்தல் (கடித்தல்) - தின்னல். சீறூர் என்றது, பாடிகளை.

கரு – கஎ: மாலை..........தந்தோயே

(இ – ள்.) பனிவார் கண்ணள் பல புலந்து உறையும் மாலை - பிரிவாற்றாமையாலே கண்ணீர் ஒழுகுகின்ற கண்களை யுடையவளாய்ப் பற்பல சொல்லி நின்னை வெறுத்து இல்லத்திலே உறைதற்குக் காரணமான காமநோய் மலருகின்ற இந்தக் கொடிய மாலைப்பொழுதிலே விரைந்து வந்து; ஆய்தொடி அரிவை குரல் கூந்தல் அணிய போது வேய்தந்தோய் - அங்ஙனமாகிய அழகிய வளையலையுடைய எம்பெருமாட்டியினது கொத்தாகிய கூந்தல் அழகெய்தும்படி மலர்களைக் கொணர்ந்து நீயே நின் கையால் சூட்டா நின்றனை; இனிது செய்தனையால் - இவ்வாற்றால் நீ எமக்கு மிகவும் இனியதொரு செயலைச் செய்தாயாகின்றனை; என்பதாம்.

(வி - ம்.) பல புலந்து உறையும் மாலை எனக் கூட்டுக. இனி, மாலை இனிது செய்தனை எனச் சொற்கிடந்தவாறே கொண்டு இம்மாலைப் பொழுதை மிகவும் இனியதாகச் செய்தனை எனக் கோடலுமாம். குரல் கூந்தல் எனவும் அணியப்போது வேய்தந்தோய் எனவும் மாறிக் கூட்டுக. வேய்தந்தோய்: ஒருசொல்.

இனி, இதனை—எந்தை நீ வினைமுடித்த காலை நெடுந்தேர் ஏறிச் சீறூர் பிறக்கொழியக் கண்ணள் புலந்துறையும் மாலை அவ்வாய் தொடி அரிவை கூந்தல் அணியப்போது வேய்தந்தோய் இனிது செய்தனை என இயைத்துக் கொள்க.

(பா. வே.) க. வேந்துவினை முடித்தனன். ௬. ரன்புற. ௯ நன்ஞன்கு. கஉ. கொறிக்கும்.

## செய்யுள் கoரு

திணை : பாலை.

துறை : மகட் போக்கிய தாய் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—களவொழுக்கத்தின்கண் பல்வேறு இடையூறுகள் நிகழ்ந்தமையால் தலைவன் தலைவியை அவள் சுற்றத்தார் அறியாதபடி இரவின்கண் அழைத்துக்கொண்டு போயினனாக, அச் செய்தியறிந்த நற்றாய் தலைவியின் பொருட்டுப் பரிந்து சொல்லியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு "எஞ்சி யோர்க்கும் எஞ்சுத லிலவே" எனவரும் (தொல் - அகத். ௬உ.) விதி கொள்க.

அகலறை மலர்ந்த அரும்புமுதிர் வேங்கை
ஒள்ளிலைத் தொடலை தைஇ மெல்லென
நல்வரை நாடன் தற்பா ராட்ட
யாங்குவல் லுநள்கொல் தானே தேம்பெய்து
௫ மணிசெய் மண்டைத் தீம்பால் ஏந்தி
ஈனுத் தாயர் மடுப்பவும் உண்ணாள்
நிழற்கயத் தன்ன நீள்நகர் வரைப்பின்
எம்முடைச் செல்வமும் உள்ளாள் பொய்ம்மருண்டு
பந்துபுடைப் பன்ன பாணிப் பல்லடிச்
கo சில்பரிக் குதிரைப் பல்வேல் எழினி
கெடலருந் துப்பின் விடுதொழின் முடிமார்
கனையெரி நடந்த கல்காய் கானத்து

விளைவல் அம்பின் விழுத்தொடை மறவர்
தேம்பிழி நறுங்கள் மகிழின் முனைகடந்து
கரு வீங்குமென் சுவைய வேற்றினந் தரூஉம்
முகைதலை திறந்த வேனில்
பகைதலை மணந்த பல்லதர்ச் சேலவே.

—தாயங்கண்ணனார்.

(உரை)

க - அ: தேம்பெய்து..........பொய்ம்மருண்டு

(இ - ள்.) மணிசெய் மண்டை தேம்பெய்து தீம்பால் ஏந்தி ஈனுத்தாயர் மடுப்பவும் உண்ணாள் - மணிகள் இழைத்த பொற்கலத்தின்கண் தேன்கலந்த இனிய ஆவின்பாலினைக் கையில் ஏந்திச் செவிலிமாருள் ஊட்டுவாள் உண்ணென்று ஊட்டா நிற்பவும் உண்ண மறுப்பவளாகிய என்மகள்; நிழல் கயத்து அன்ன நீள் நகர் வரைப்பின் எம்முடைச் செல்வமும் உள்ளாள் - தருநிழலின்கண் அமைந்த தண்சுனை போன்று குளிர்ந்திருக்கின்ற மாடங்களால் உயர்ந்த எமது இல்லத்தின் கண் அமைந்த பெரிய செல்வங்களையும் பொருளாகச் சிறிதும் கருதியாளாய்; பொய்ம்மருண்டு - ஏதிலாளாகிய யாரோ ஒருத்தியின் மகன் தனக்குச் சொல்லிய பொய்மொழியால் மயங்கி, என்க.

(வி - ம்.) மண்டை என்பது ஈண்டு மண்ணால் செய்த கலம் என்னும் தன் பொருள் குறியாது, மணிசெய் மண்டை என்றமையால் பொற் கலம் என்னும் பொருள் குறித்து நின்றது. தேம்பெய்து தீம்பால் ஏந்தி என்றது நற்றாய் தனது வளமும் தன்மகள் வளர்ந்தவாறும் கருதிக் கூறியபடியாம். ஈனுத்தாயர் - செவிலித் தாய்மார். இவரைப் படர்க் கையில் கூறினமையில் இவள் நற்றாய் என்பது பெற்றாம். கயம் - சுனை. அதன் தண்மையை விதந்தோதுவாள் நிழற்கயம் என்றாள். நீள் நகர் என்றமையால் மாடவீடு என்பது பெற்றாம். இவ்வாற்றானும் தனது செல்வப் பெருக்கினைக் குறித்து இத்தகைய பெருஞ்செல்வத்தையும் நினையாது போயினள் என்றவாறு. இங்ஙனம் போதற்கு அவன் எத்துணைப் பொய் கூறினனோ என்பதுபடப் பொய்ம்மருண்டு என்றாள்.

க - ௯: அகலறை.........பாராட்ட

(இ - ள்.) நல்வரை நாடன் அகல் அறை அரும்பு முதிர் வேங்கை மலர்ந்த ஒள் இலைத் தொடலை

தைஇ - அழகிய மலை நாடனாகிய தன் காதலன் அகன்ற மலைப் பக்கத்திலே அரும்புகள் முதிர்ந்த வேங்கை மலர்ந்த மலரோடு ஒள்ளிய பச்சிலையையும் விரவித்தொடுத்த மாலையைச் சூட்டிவிட்டு; மெல்லெனத் தன் பாராட்ட - மெல்ல மெல்லத் தன் நலங்களைப் பாராட்டா நிற்ப, என்க.

(வி - ம்.) மருகன் என்னும் அன்பின் தூண்டுதலாலே அவளை நல்வரை நாடன் எனப் பாராட்டினள். அறை - கற்றரை. வேங்கை மலரோடு இலை விரவித்தொடுத்த மாலை என்க. தைஇ - அணிந்து என்றவாறு.

௧௦ - ௧௭ : பந்து..........செலவே

(இ - ள்.) பந்து புடைப்பு அன்ன பாணிப் பல் அடி சில்பரிக் குதிரைப் பல் வேல் எழினி - பந்தடிக்கும் ஒலி போன்ற தாளத்திற்கியைந்த பலவகையான அடியிடுதலையுடையனவும் சிலவாகிய செலவுகளை உடையனவும் ஆகிய குதிரைகளையும் பல வேற்படையினையும் உடையவனாகிய எழினி என்னும் மன்னனுடைய; கெடல் அரும் துப்பின் விடு தொழில்முடிமார் - ஒருகாலத்தும் கெடுதலில்லாத தமது வலிமை காரணமாகத் தமக்குப் பணித்த தொழிலைச் செய்து முடிக்கும் பொருட்டு; கனை எரி நடந்த கல்காய் கானத்து வினைவல் அம்பின் விழுத்தொடைமறவர் - மிகுந்த தீப்பரவிக் கற்கள் சுடுகின்ற காட்டின்கண் தமது தொழிலின்கண் வன்மையுடைமையால் அம்புகளைக் குறி தவறுமல் தொடுக்கும் சிறந்த தொடையையுடைய மறவர்கள்; தேம்பிழி நறுங்கள் மகிழின் - தேனாற்சமைத்த நறிய கள்ளைப் பருகியதனாலே உண்டான செருக்கினோடு பகைவர்களைப் போர்க்களத்தே வீழ்த்தி வென்று; ஏறு வீங்கு மெல் சுரைய இனம் தரூஉம் - காளைகளோடு கூடிய பால்சுரந்து பருத்த மடியையும் மெல்லிய முலைக்காம்புகளையும் உடைய ஆனினங்களைப் பற்றிக் கொணரும் இடமான; வேனில் முகை தலை திறந்த பகைதலை மணந்த பல் அதர் - வேனிற் பருவத்து வெயிலின் வெப்பம் மலைகளிடத்தே முழைஞ்சுகளைத் திறந்துள்ள, பகைவரொடு கூடிய பலவாகிய பாலை நிலத்துவழியின் கண்; செல (சு) யாங்கு வல்லுநள் கொல்தான்ஏ - நடந்து செல்லுதற்கு எங்ஙனம் வல்லமை உடையள் ஆயினளோ அறிகின்றிலேன், என்க.

(வி - ம்.) குதிரை அடிஇடும் ஒலிக்குப் பந்து அடிக்கும் ஒலி உவமை. போர்க் குதிரைகள் பலவும் ஒருசேர அடிபெயர்த்திடுதலால்

அவ்வடியீட்டிற்குப் பாணி உவமை. பாணி - தாளம், பரி - செலவு. சில் பரிக்குதிரை பல் வேல் எழினி என்புழி முரணணி தோன்றிச் செய்யுளின்பம் தோன்றுதலுணர்க. எழினி என்பவன் பெருஞ்சித்திரனார் முதலிய புலவர் பெருமக்களால் பாடப்பெற்ற ஒரு வள்ளலாவான். துப்பு - வலிமை. எழினியால் ஏவி விடப்பட்ட தொழில் என்க. விழுத்தொடை - குறி தவறுமல் அம்பு தொடுக்கும் தொடை; அங்ஙனம் தொடுக்கும் மறவர் என்க. மகிழ் - செருக்கு. முனை - போர்க்களம். முகை - முழைஞ்சு. அதர் - வழி. செலவு - ச. யாங்குவல்லுநள் என இயையும். கொல், தான், ஏ: அசைச் சொற்கள்.

இனி, இதனை —தேம்பெய்து பால் ஏந்தி மடுப்பவும் உண்ணுதவள் எம் செல்வமும் உள்ளாளாய் மருண்டு நாடன் தைஇ பாராட்ட வேனில் அதர்ச் செலவு யாங்கு வல்லுநள் என இயைத்துக் கொள்க.

(பா. வே.) க. அகவரை. க0. வல்வேலெ. கடு. விலங்குமென்.

## செய்யுள் ௩௦௬

திணை : மருதம்.

துறை : தலைமகள் தன்னைப் புறங்கூறினுளாகக் கேட்ட பரத்தை அவட்குப் பாங்காயினுர் கேட்பச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—தலைவன் பரத்தையர் கேண்மைகொண்டு ஒழுகுவானாக, தலைவி அச்செய்தி அறிந்துழிப் பரத்தையை வைதாள்; அச்செய்தியைப் பரத்தையின் தோழி பரத்தைக்குக் கூற அது கேட்டுப் பொருத பரத்தை தலைவியின் தோழிமார் சிலர் கேட்கும்படி தலைவியை இகழ்ந்து சொல்லியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "புல்லுதல் மயக்கும்" எனவரும் (தொல் - கற்பி. க0) நூற்பாவின்கண் இல்லோர் செய்வினை இகழ்ச்சிக்கண்ணும் எனவரும் விதி கொள்க.

எரியகைந் தன்ன தாமரைப் பழனத்துப்
பொரியகைந் தன்ன பொங்குபல சிறுமீன்
வெறிகொள் பாசடை யுணீஇயர் பைப்பயப்
பறைதபு முதுசிரல் அசைபுவந் திருக்குந்
௫ துறைகே ழூரன் பெண்டுதன் கொழுநனை
நம்மொடு புலக்கும் என்ப நாமது
செய்யா மாயினும் உய்யா மையின்
செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதவண்
உலமந்து வருகம் சென்மோ தோழி
க0 யொளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்

வெளிறில் கற்பின் மண்டமர் அடுதோறும்
களிறுபெறு வல்சிப் பாணன் எறியும்
தண்ணுமைக் கண்ணின் அலேஇயர்தன் வயிறே.

—ஆலங்குடி வங்கனர்.

(உரை)

கூ-தோழி.........

(இ - ள்.) தோழி - தோழி! இன்று யாம் ஒருதலையாக ஒருகாரியம் செய்தே தீரவேண்டும்! அஃதென் என்பாயாயின் என்க.

(வி - ம்.) இதன்கண் இன்று........ஆயின் என்பன இசையெச்சத்தால் கொண்ட பொருள்.

க - கூ: எரியகைந்தன்ன.........என்ப

(இ - ள்.) எரி அகைந்தன்ன தாமரைப் பழனத்து - தீ கொழுந்து விட்டாற்போல இதழ் திறந்து மலருகின்ற தாமரை மலர்களையுடைய கழனிகளில்; பொரி அகைந்து அன்ன பொங்குபல சிறுமீன் உணீஇயர் - நெல்லைப் பொரிக்குங்கால் பொரிகள் துள்ளி வீழ்வது போலத் துள்ளி விழுகின்ற பலவாகிய சிறிய மீன்களைப் பற்றித் தின்பதற்கு அவாவி; பறைதபு முதுசிரல் பைப்பய வெறி கொள் பாசடை வந்து அசைபு இருக்கும் - சிறகு கெட்ட முதுமையுடைய சிரற்பறவை மணமுடைய பசிய இலையின்மேல் மெல்ல மெல்ல வந்து மடிந்து இருத்தற்கு இடனுன; துறைகேழ் ஊரன் பெண்டு - நீர்த்துறை பொருந்திய மருதநிலத்து ஊர்த் தலைவனுகிய நம்பெருமானுடைய மனைவி; தன் கொழுநனை நம்மொடு புலக்கும் என்ப - தன்னுடைய கணவனை நம்முடனே ஒருசேர வெறுக்கின்றுள் என்று அறிந்தோர் கூறுகின்றனர்; என்க.

(வி - ம்.) பொரி - நெற்பொரி. நீரின்கண் சின்னஞ்சிறிய கெண்டைகள் துள்ளிக் குதிப்பதற்கு இப்புலவர் பொரிக்குங்கால் நெற்பொரிகள் துள்ளி விழுவதை உவமை கூறுதல் நினைந்து மகிழத்தகும். இனி வெறிகொள் பாசடை நறுமணமிக்க தன் மனையாகவும், துள்ளிக் குதிக்கும் சிறுமீன் தன் மனைக்கண் வந்து தன்னோடு ஆடுகின்ற தலைவனுக

வும் அத்தலைவனைக் கவர்ந்து கொள்ளக் கருதி மெல்ல மெல்லத் தன்னைப் பற்றிப் பேசுகின்ற தலைவி முதிர்ந்த சிரலாகவும் உள்ளுறுத்து வைத்து இப்பரத்தை தலைவி முதுமையையும், அவள் கருத்துக் கைகூடாமையை யும் இகழ்ந்து பேசுதல் உணர்க. முதுசிரல் என்றது தலைவி முதுமை யைக் கருதிக் கூறியபடியாம். அவள் கொழுநனை அவள் புலத்தல் அமையும். ஆயினும் நம்மொடு புலத்தல் அமையாது என்பது கருத்து.

கூ - கரு : நாமது............வயிறே

(இ - ள்.) நாம் அது செய்யாம் ஆயினும் - யாம் அவள் செய்தது போல அவள் கொழுநனையும் அவளையும் வெறுப்பது செய்யமாட்டேம் ஆனாலும்; உய்யாமையின் - அவள் செய்தற்கு ஈடாக யாமும் ஒன்று செய்யாவிடின் யாம் உயிர் வாழமுடியாது போல இருந்தது ஆதலால்; சிறிது அவண் செறிதொடி தெளிர்ப்ப வீசி உலமந்து வருகம் சென்மோ — யாம் சிறிது பொழுது அவள் இருக்கு மிடம் சென்று அவள் கண்காணும்படி நமது கையில் செறித்த வளையல்கள் குலுங்கி ஒலிக்கும்படி நம் கைகளை வீறுபட வீசிநடந்து சுற்றி மீண்டு வருவோம் அதற்கு என்னோடு வருதி, அஃது எற்றுக்கெனின்; ஒளிறுவாள் தானை கொற்றச்செழியன் வெளிறு இல் கற்பின் மண்டு அமர் அடுதொறும் களிறு பெறு வல்சிப்பாணன் எறியும் தண்ணுமைக் கண்ணின் - விளங்குகின்ற வாளேந்திய படை களையும் வெற்றியையும் உடைய பாண்டியன் தனது குற்ற மில்லாத போர்க்கல்வி வன்மையால் தான் மேற் கொண்டு சென்ற போர்க்களங்களிலே பகைவரைக் கொன்று வாகை சூடும் பொழுதெல்லாம் களிற்றியானையைப் பரிசிலாகப் பெறு வதனால் உண்டு வாழ்கின்ற அம்மன்னனுடைய பாணன் அடிக்கின்ற தண்ணுமையினது கண்ணைப்போல; தன் வயிறு அலைஇயர் - அவளும் தன் வயிற்றிலே அடித்துக்கொள்ளுதல் பொருட்டேயாம்; என்பதாம்.

(வி - ம்.) அது என்றது புலத்தலை. அவள் இகழ்ச்சியைப் பொறுத்து யான் உயிர் வாழேன் என்பாள் உய்யாமையின் என்றாள். உய்யாமை - உயிர் வாழாமை. அவண் என்றது அவளுறையும் இல்லின்கண் அவள் காணும்படி என்பதுபட நின்றது. நமது வீறுதோன்ற அவள் கண்முன் தொடி தெளிர்ப்ப நாம் கைவீசிப் பன்முறையும் நடப்பேம் என்பாள், உலமந்து வருகம் என்றாள். உலமருதல் - சுழன்று திரிதல். அப்படி வந்தால் அவள் தன் வயிற்றில் அடித்துக்கொண்டு வருந்துவள் என்ற வாறு. தலைவி வயிற்றில் அடித்துக் கொள்வதற்குப் பாணன் தண் ணுமைக்கண்ணின் அடித்தல் உவமை. களிறு பெறு வல்சி - களிற்றைப் பரிசிலாகப் பெற்று அதனால் உண்ணும் உணவு. இனி, அம்மன்னன்

களிறு பெறுகின்ற உணவில் எஞ்சியவற்றை உண்ணும் உணவு எனினுமாம்.

இனி, இதனைத் தோழி ஊரன்பெண்டு தன் கொழுநனை நம்மொடு புலக்கும் என்ப. நாம் அது செய்யாம் ஆயினும் உய்யாமையின் சிறிது அவண் தொடி தெளிர்ப்ப வீசி உலமந்து வருகம் சென்மோ (எற்றுக்கெனின்) தன் வயிறு அலைஇயர் என இயைத்துக் கொள்க.

(பா. வே.) எ. உய்யாமா. அ. சிறிதிவன். (கூறினுளென)

## செய்யுள் கoள

திணை : பாலை.

துறை : தோழி தலைமகள் குறிப்பறிந்து வந்து தலைமகற்குச் சொல்லியது.

(து - ரை.) அஃதாவது, களவொழுக்கத்தின்கண் இடையூறுமிக்கமையால் தலைவியை அவள் சுற்றத்தார் அறியாவண்ணம் தன்னுடன் அழைத்துப் போகக் கருதிய தலைவன் அதனைத் தோழிக்குக் கூற, தோழி தலைவிக்குக் கூறி அவளுடைய உடன்பாட்டைக் குறிப்பினுலறிந்து வந்து தலைவனுக்குச் சொல்லியது என்றவாறு.

(இ - ரை.) இதற்கு, "தலைவரும் விழுமநிலை எடுத்துரைப்பினும்" எனவரும் (தொல். அகத். ரு௧.) நூற்பாவின்கண் போக்கற் கண்ணும் எனவரும் விதி கொள்க.

நீசெல வயரக் கேட்டொறும் பலநினைந்
தன்பின் நெஞ்சத் தயாஅப்போறை மெலிந்த
என்னகத் திடும்பை களைமார் நின்னொடு
கதுங்கல் வியலறைக் கிடப்பி வயிறுதின்
ரு　றிரும்புலி துறந்த ஏற்றுமான் உணங்கல்
நெறிசெல் வம்பலர் உவந்தனர் ஆங்கண்
ஒலிகழை நெல்லின் அரிசியோ டோராங்
கானிலைப் பள்ளி அளைபெய் தட்ட
வானிணம் உருக்கிய வாஅல் வெண்சோறு
கo　புகரரைத் தேக்கின் அகலிலை மாந்தும்
கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்
வல்லாண் அருமுனை நீந்தி அல்லாந்து
உகுமணு றஞ்சும் ஒருகாற் பட்டத்
தின்னு ஏற்றத் திழுக்கி றுடங்கூர்ந்

கரு தொருதனித் தொழிந்த உரனுடை நோன்பக
டங்குழை இருப்பை அறைவாய் வான்புழல்
புல்லுளைச் சிறுஅர் வில்லின் நீக்கி
மரைகடிந் தூட்டும் வரையகச் சீறூர்
மாலை இன்றுணை யாகிக் காலைப்
உ0 பசுநனை நறுவீப் பரூஉப்பர லுறைப்ப
மணமனை கமழும் கானம்
துணையீ ரோதியென் தோழியும் வருமே.

—காவரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.

(உரை)

க – ௩: நீ செல..........களைமார்

(இ - ள்.) *நீ செலவு அயர கேள்தொறும் பலநினைந்து*-பெருமானே! நீ என் தோழியை நின்னுடன் அழைத்துக் கொண்டு போதலைக் கருதாநிற்ப அச்செய்தியை யான் குறிப்பாக அவள் உணர்ந்து கொள்ளும் பொருட்டுப் பல்லாற்றானும் கூறுந் தோறும் கூறுந்தோறும் அவள்தானும் அவற்றைக் கேட்கும் பொழுதெல்லாம் தன்நெஞ்சினுள் பல்வேறு நினைவுகளை நினைந்து; *அன்பின் நெஞ்சத்து அயா பொறை மெலிந்த என் அகத்து இடும்பை களைமார்* - அன்புடைய தனது நெஞ்சத்தினுள்ளே அந்நினைவுகளை ஆராய்ந்து பார்த்துப் பின்னர்த் துன்பச்சுமையால் மெலிந்துள்ள அடிச்சியேனது நெஞ்சத்தின் துன்பத்தை நீக்குதற்பொருட்டு; என்க.

(வி - ம்.) நீ கொண்ட கருத்தினை யான் குறிப்பாக அவள் உணரும் பொருட்டுப் பல்லாற்றானும் கூறினேன் என்பது தோன்றக் கேட்டொறும் என்றாள். அவளும் நின்னுடன் வந்தால் உண்டாகும் விளைவு களைப் பல படியாகவும் நினைந்தாள் என்பாள் பல நினைந்து என்றாள். பொறை - துன்பச்சுமை. அவள் பொருட்டு உடன்பட்டாளில்லை; என் துன்பத்தை நீக்கும் பொருட்டே அவள் உடன்பட்டனள் என்பது தோன்ற என் அகத்திடும்பை களைமார் என்றாள். களைமார் - களைதற் பொருட்டு.

ச - க0: கருங்கல்..........மாந்தும்

(இ - ள்.) *இரும்புலி கருங்கல் வியல் அறைக்கிடப்பி வயிறு தின்று துறந்த ஏற்றுமான் உணங்கல்* - பெரிய

புலியானது கரிய கல்லாகிய அகன்ற மலைப்பக்கத்திலே கொன்று போகட்டுத் தன் வயிறு நிறையத் தின்று எஞ்சிய வற்றை விட்டுப்போன கலைமானினது தசைவற்றலைக் கண்டு; நெறிசெல் வம்பலர் உவந்தனர் - வழியைப் போகின்ற புதியவர் பெரிதும் மகிழ்ந்தவராய்; ஆங்கண் ஒலிகழை நெல்லின் அரிசியோடு ஓராங்கு ஆன்நிலைப்பள்ளி அளை பெய்து அட்ட - தம்முள் ஒன்றனோடொன்று உராய்தலால் ஒலிக்கின்ற மூங்கிலினது நெல்லினது அரிசியோடு ஒன்றாக ஆயர் தம் பசுக்கிடையிடத்தே பெற்ற தயிரையும் பெய்து சமைக்கப்பெற்ற; வால் நிணம் உருக்கிய வாஅல் வெள் சோறு புகர் அரைத்தேக்கின் அகல் இலைமாந்தும் - வெள்ளிய நிணத்தை உருக்கிக்கூட்டிய மிகவும் வெண்மையான சோற்றினைப் புள்ளிகளையுடைய அரையினையுடைய தேக்கினது அகன்ற இலையின்கண் இட்டு உண்ணுதற்கு இடனாய், என்க.

(வி - ம்.) கிடப்பி - கொன்று போகட்டு என்க. மானின் வயிற்றுப் பகுதியைத் தின்றுபோன எனினுமாம். ஏற்றுமான் - ஆண்மான். நெறிசெல் வம்பலர் - புதியரான வழிப்போக்கர். ஒலித்தல் - தழைத்தல் என்பாருமுளர். ஈண்டைக்கு அவ்வுரை பொருந்தாது என்க. ஆனிலைப்பள்ளி - பசுக்கிடை இரவிற் கிடக்குமிடம் என்க அவ்விடத்து ஆயர்பால் பெற்ற அளை என்றவாறு. அளை - தயிர். புகர் - புள்ளி.

கக - கஔ: கல்லா.........சீறூர்

(இ - ள்.) கல்லா நீள்மொழி கதநாய் வடுகர் வல்லாண் அருமுனை நீந்தி - போர்த் தொழிலையன்றிப் பிறிதொன்றும் கல்லாத நெடுமொழியையும் சினமிக்க நாயையுமுடைய வடுகமறவரின் வலிய ஆண்மை விளங்குகின்ற கடத்தற்கரிய போர்க்களங்களையும் கடந்து; உகுமண் ஊறு அஞ்சும் ஒரு கால் பட்டத்து இன்னா ஏற்றத்து இழுக்கி - சரிந்து வீழும் மண்ணுக்கு அஞ்சுதற்குக் காரணமான ஒற்றையடிப் பாதையில் இன்னாமையையுடைய ஏற்றத்தின்கண் வழுக்கி வீழ்ந்து; முடங்கூர்ந்து அல்லாந்து ஒரு தனித்து ஒழிந்த உரன் உடை நோன்பகடு - கால் முடம் மிக்குத் துன்புற்றுத் தான் மட்டும் பெரிதும் தனித்துக் கிடந்த வலிமையுடைய பொதி சுமக்கும் எருதினை; புல் உளைச்சிறார் வில்லின் இருப்பை அம்குழை அறைவாய் வான்புழல் நீக்கி மரைகடிந்து ஊட்டும் வரை அகச்சீறூர் - புற்கென்ற தலைமயிரையுடைய எயினச் சிறுவர் தமது வில்லினால் இருப்பை மரத்தினது அழகிய தளிரையும் துணித்தாற் போன்ற வாயையும் வெள்ளிய உட்டு

ளையையும் உடைய பூவையும் அடித்து வீழ்த்தி அவற்றைத் தின்னவருகின்ற மரைமானையும் துரத்தி ஊட்டுதற்கு இடனாகிய மலையிடத்தமைந்த சிறிய ஊர்களின்கண், என்க.

(வி - ரை.) நீள்மொழி - நெடுமொழி. அஃதாவது ஒரு மறவன் தன் மேம்பாட்டினைத் தானே பகைவர்க்கு எடுத்துக் கூறுதல். இது வஞ்சித்திணையில் ஒரு துறை (புறப்பொருள் வெண் - வஞ்சிப் - கஉ.) கதம் - சினம். வல்லாண் - மறக்குடி ஊர் மறப்பண்பு முதலியவற்றின் சிறப்பு. இது வாகைத்திணையில் ஒருதுறை (புறப்பொருள் வெண் - வாகைப் - உக.) உகுமண் ஊறு - மண் சரிவினால் உண்டாகும் துன்பம்; அதற்கு அஞ்சுதற்கிடனான ஒரு காற்பட்டம். ஒரு காற்பட்டம் - ஒற்றையடிப்பாதை. பாட்டம் இக்காலத்துப் பாட்டை என வழங்கப் படும். இன்னா ஏற்றம் - ஏறுதற்கு இயலாத ஏற்றம். நோன்பகடு - பொதி எருது. உளை : உவம வாகுபெயர். உளைபோன்ற மயிர் என்க. மரை - ஒரு வகை மான், ஒரு காற்பட்டத்து இன்னா ஏற்றத்து இழுக்கி முடங் கூர்ந்த பகட்டிற்குச் சிறார் இருப்பையின் தளிரையையும் பூவையும் மரத்திலிருந்து அடித்து வீழ்த்தி அதைத் தின்னவரும் மரை மானையும் கடிந்து ஊட்டுவித்தாற்போல வரைவொடு வருதற்கும் இழுக்கி, வேறு வழியுங் காணாத பெருமகனாகிய உனக்கு யான் எனது சூழ்ச்சியால் தலைவியைச் சுற்றத்தாரினின்றும் விலக்கி எம் பெருமாட்டியை மணக்க வரும் பிறரையும் கடிந்து ஓம்படை செய்கின்றேன் என இதன்கண் உள்ளுறை காண்க.

இனி, புலி விட்டுப்போன மானிறைச்சியை வழியிற்கண்டு அங் குள்ள மூங்கில் அரிசியோடும் அளையோடும் சமைத்த சோற்றினைத் தேக்கின் இலையிலிட்டு இனிதாக உண்ணுமாறு போலே நீயும் நின்வழியில் நின் ஆகூழ் விட்டுப்போன தலைவியை நின்முயற்சி இன்றியே பெற்று மகிழ்ந்தனை. இவளை நின்னொடு அழைத்துப்போய் நின்சுற்றத்தாரோடு சேர்த்து நின் இல்லத்தில் இன்புற்று இனிது வாழ்க! என உள்ளுறுத் தமையும் உணர்க.

க - ௲: நின்னொடு.........

(இ - ள்.) நின்னொடு - இனி எம்பெருமாட்டியும் நின் கருத்திற்கிணங்கி உன்னோடுகூடி, என்க.

(வி - ரை.) எனவே, தலைவியும் உடன் போக்கிற்கு இணங்கிவிட்டாள் என்றானுமாயிற்று.

கக - உஉ: மாலை.........வருமே

(இ - ள்.) மாலைஇன் துணையாகிய - மாலைப்பொழுதிலே நீ இன்புறுதற்கியன்ற துணையாகி; காலை பசுநனை நறுவீப் பரூஉப்பரல் உறைப்ப ; மணமனை கமழும் கானம் - விடியற்

காலையில் பசிய கொத்தினின்றும் நறிய மலர்கள் பருத்த பரற்கற்களின்மேல் உதிரா நிற்றலால் திருமண மனைபோல நறுமணங் கமழுகின்ற காட்டின்கண்; துணைஈர் ஓதி என் தோழியும் வரும் - நின் வாழ்க்கைத் துணைவியாகிய குளிர்ந்த கூந்தலையுடைய என்தோழியும் வருவாள், என்பதாம்.

(வி - ம்.) வரையகச் சீறூரின்கண் மாலைப்பொழுதில் உனக்குத் துணையாக என்தோழி வரும் என்றாள்; பின்னரும் இனி, நின் வாழ்க்கைக்கும் துணை என்பாள், துணையீரோதி என்றாள்.

இனி, இதனை - பெருமானே! நீ செலவயரக்கேட்டொறும் நினைந்து நெஞ்சத்து அயா, என் இடும்பை களைமார் வரையகச் சீறூர் துணையாகி மணமனை கமழும் கானம் என்தோழியும் நின்னொடு வரும் என இயைத்துக் கொள்க.

(பா - வே.) ௪ - இருங்கல். ௧௩ - பன்னூறஞ்சு.

## செய்யுள் ௧௦௮

திணை: குறிஞ்சி.

துறை: தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.

(து - ம்.) அஃதாவது - திருமணம் செய்து கொள்ளுதலில் கருத்தின்றி நாள்தோறும் தலைவன், இரவுக் குறிக்கண் வந்து வந்து மீள்பவனாயிருந்தான்; இன்னாமையுடைய இருள் வழியில் அவன் வருவதற்குத் தலைவி பெரிதும் அஞ்சினள்; ஒரு நாள் தலைவன் இரவில் வந்து சிறைப்புறத்தே நிற்றல் கண்ட தோழி, அவனை வரைவுகடாதற் பொருட்டு அவன் வருகை அறியாதாள் போன்று, அவன் கேட்பத் தலைவிக்குக் கூறுவாளாய்க் கூறியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "நாற்றமும் தோற்றமும்" எனவரும் (தொல்-களவி - ௨௩.) நூற்பாவின்கண் ஆற்றதுதீமை அறிவுறுகலக்கமும் என வரும் விதி கொள்க.

புணர்ந்தோர் புன்கண் அருளலும் உணர்ந்தோர்க்
கோத்தன்று மன்னால் எவன்கொல் முத்தம்
வரைமுதல் சிதறி யவைபோல் யானைப்
புகர்முகம் பொருத புதுநீர் ஆலி
௫　பளிங்குசொரி வதுபோல் பாறை வரிப்பக்
கார்கதம் பட்ட கண்ணகன் விசும்பின்

விடுபொறி ஞெகிழியில் கொடிபட மின்னிப்
படுமழை பொழிந்த பானாட் கங்குல்
ஆருயிர்த் துப்பில் கோண்மா வழங்கும்
கல இருளிடைத் தமியன் வருதல் யாவதும்
அருளான் வாழி தோழி அல்கல்
விரவுப்பொறி மஞ்ஞை வெரீஇ யரவின்
அணங்குடை யருந்தலை பைவிரிப் பவைபோல்
காயா மென்சினை தோய நீடிப்
கரு பஃறுடுப் பெடுத்த அலங்குகுலைக் காந்தள்
அணிமலர் நறுந்தா தூதுந் தும்பி
கையாடு வட்டின் தோன்றும்
மையாடு சென்னிய மலைகிழ வோனே.

—தங்காற் பொற்கொல்லனார்.

(உரை)

கக வாழிதோழி.........

(இ - ள்.) *தோழிவாழி - எம் பெருமாட்டியே நீ நீடுவாழ் வாயாக! ஈதொன்று கேள், என்க.*

கஉ - கஅ: விரவுப்பொறி.........மலைகிழவோனே -

(இ - ள்.) *விரவுப்பொறி மஞ்ஞை வெரீஇ அரவின் அணங்கு உடை அருந்தலை பைவிரிப்பவைபோல் காயாமெல் சினைதோய நீடி எடுத்த - விரவிய புள்ளிகளையுடைய மயிலுக்கு அஞ்சி நல்ல பாம்புகளின் துன்பம் செய்தலையுடைய நோக்கற் கரிய தலைகள்பல, ஒருங்கே படம் விரித்தாற்போலக் காயாவினது மெல்லிய கொம்புகளைத் தீண்டும்படி நீண்டு அரும்பிய; பல் துடுப்பு அலங்கு குலைக்காந்தள் - பலவாகிய மலர்களோடே அசைகின்ற கொத்தாகிய காந்தளினது; அணிமலர் நறுந்தாது ஊதும் தும்பி - அழகிய மலர்களிலே தாவித்தாவி நறிய தாதினை நுகருகின்ற வண்டுகள்; கை ஆடு வட்டின் தோன்றும் - மகளிர் கையால் ஆடுகின்ற வட்டுக்களைப் போலத் தோன்றுதற்கிடனான; மை ஆடு சென்னிய மலைகிழவோன் — முகில்கள் தவழுகின்ற உச்சிகளையுடைய மலைநாட்டுத் தலைவனாகிய நம்பெருமான், என்க.*

(வி - ம்.) காந்தளின் மலர்கள் தம்மைக் கண்டார்க்குத் தமது அழகால் இன்பம் தருதலொழித்துப் பாம்பின் படம்போல் தோன்றி அச்சந்தருமாறு போலே நம் பெருமானும் நம்மை மணந்து கொண்டு நமக்கு இனியானுகத் தோன்ருமல் இரவுக் குறிக்கண் வருதலாலே நமக்குப் பெரிதும் துன்பம் தருகின்ருன் என இதன்கண் உள்ளுறை காண்க. மஞ்ஞை - மயில். வெரீஇ - வெருவி; அணங்கு - துன்பம். பை - பாம்பின் படம். பஃறுடுப்பு என்புழி, நிலைமொழி ஈற்று லகர மெய் - ஆய்தமாகத் திரிந்தது. வட்டு - சூதாடுகாய். தும்பிக்குவமை. மை - முகில்.

க - கக: புணர்ந்தோர்...... ..அல்கல்

(இ - ள்.) அல்கல் (ஆர் இருளிடை வருதல்) எவன் - இரவிலே வருதற்கரிய இருளினூடே துணையின்றித் தனியனுக நமக்கு அருள் செய்யக் கருதி வருகின்ருனேனும் அதனுல் பின்னும் நமது வருத்தம் மிகுவதேயன்றிக் குறைதலின்மையின் என்ன பயன்; புணர்ந்தோர் புன்கண் அருளலும் உணர்ந்தோர்க்கு ஒத்தன்று மன் - அன்பினுல் கேண்மை கொண்டவர்களுடைய துன்பத்தை நீக்கி அவரைப் பாதுகாத்தருளுதலும் முழுதுமுணர்ந்த சான்ருேர்களுக்குப் பெரிதும் பொருந்திய செயலாம், நம்பெருமான் அது செய்திலன்; முத்தம் வரை முதல் சிதறியவை போல் புகர்யானை முகம் பொருத புதுநீர் ஆலி - முத்துக்கள் மலையின் உச்சியிலே சிதறிப் போகட்டவை போன்ற புள்ளிகளையுடைய யானையின் முகத்திலே மோதிய புதிய ஆலங்கட்டி; பளிங்கு சொரிவது போல் பாறை வரிப்ப - பளிங்குகளைச் சொரிவது போலப் பாறைக் கல்லிலே யுதிர்ந்து அழகுசெய்யா நிற்ப; கார் கதம்பட்டகண் அகல் விசும்பில் - முகில்கள் சினங்கொண்ட இடத்தையுடைய அகன்ற வானத்தின்கண்; விடுபொறி ஞெகிழியின் கொடிபட மின்னிப் படுமழை பொழிந்த பால் நாள் கங்குல் - விடுகின்ற பொறிகளையுடைய கொள்ளிக்கட்டைகளைப்போல நிரலாக மின்னுதலைச் செய்து பெரிய மழை பொழிந்த நள்ளிரவின் இருளினூடே; ஆர் உயிர்த்துப்பின் கோண்மா வழங்கும் இருளிடைத்தமியன் வருதல் - அரிய உயிரினங்களையே உணவாகவுடைய கோண்மா என்னும் வல்விலங்கு திரிகின்ற அவ்விருளினூடே அவன் தனியனுக வருவது; எவன் - என்கொலோ?; யாவதும் அருளான் - அவ்வரவினுல் அவன் நம்மைத் துன்புறுத்தலேயன்றி ஒரு சிறிதும் அருள் செய்தவன் ஆகான்.

(வி - ம்.) புணர்ந்தோர் - கேண்மை கொண்டோர். புன்கண் - துன்பம். துன்பத்தை நீக்கி அருளலும் என்க. ஒத்தன்று - ஒத்தது;

பொருந்தியது. மன் - அவன், அது செய்திலன் என ஒழிந்த பொருள் குறித்து நிற்றலின் ஒழியிசை. எவன் - என்ன காரணமோ. கொல்: அசை. ஆலி - ஆலங்கட்டி. இதற்கு முத்து உவமை. வரிப்ப - அழகு செய்ய. முகில் மின்னி முழங்கி இடித்து நிற்றற்கு இடமாதலின் அதனைக் கார்கதம்பட்ட விசும்பு என்றார். கதம் - சினம். இங்குக் கார்ப்பருவம் தன்பகையாகிய முதுவேனிலின்மேல் கதம்பட்டது என்க. ஞெகிழி - கொள்ளிக்கட்டை. படுமழை - பெரிய மழை. துப்பு - உணவு. கோண்மா - சிங்கம் போன்றதொரு வல்விலங்கு; சிங்கமுமாம். வருதலால் யாவதும் அருளானாகவும் வருதல் எவன் என வருதலை இரண்டிடத்துங் கொள்க.

இனி, இதனை தோழி மலைகிழவோன் வருதலால் யாவதும் அருளான் ஆகவும் யாம் துன்புறும்படி கங்குலில் கோண்மா வழங்கும் இருளிடை வருதல் எவன் கொல் உணர்ந்தோர்க்குப் புணர்ந்தோர் புன்கண் அருளலும் ஒத்தன்று; அவன் அது செய்திலன்! என இயைக்க.

(பா - வே.) ௯. வரை மிசைச்சிதை. ௫ - சொரிப்பவைபோற். தங்கால் பூட்கோவனார்.

## செய்யுள் ௩௦௯

**திணை:** பாலை.

**துறை:** இடைச்சுரத்துத் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(நு - ம்.) அஃதாவது—இல்லற வாழ்க்கைக்கு இன்றியமையாமை கருதி பெண்மை நலம் சிறந்த தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டுதற்குப் பாலைக் கொடு நெறியில் மிகத் தொலைவு கடந்த பின்னரும் தலைவியின் குணத்தைக் கருதி வருந்துமாற்றால் தன் போக்கிற்கு இடையூறு செய்யும் தன்நெஞ்சை நோக்கித் தலைவன் இத்துணைத் தொலைவு கடந்து வந்த யாம் வறிதே மீண்டுபோதல் பேதைமை என்பதுபடச் சொல்லியது; என்றவாறு.

(இ - ம்.) இதற்கு, "கரணத்தின் அமைந்து முடிந்த காலை" என வரும் (தொல் - கற்பி - ௫.) நூற்பாவின்கண் மீட்டு வரவு ஆய்ந்த வகையின் கண்ணும் எனவரும் விதி கொள்க.

பல்லிதழ் மென்மலர் உண்கண் நல்யாழ்
நரம்பிசைத் தன்ன இன்றீங் கிளவி
நலநல் கொருத்தி இருந்த ஊரே
கோடுழு களிற்றின் தொழுதி ஈண்டிக்
௫ காடுகால் யாத்த நீடுமரச் சோலை
விழைவெளில் ஆடுங் கழைவளர் நனந்தலை

வெண்ணுணே யம்பின் விசையிட வீழ்ந்தோர்
எண்ணுவரம் பறியா உவலிடு பதுக்கைச்
சுரங்கெழு கவலை கோட்பாற் பட்டென
௧௦ வழங்குநர் மடிந்த அத்தம் இறந்தோர்
கைப்பொருள் இல்லை யாயினும் மெய்க்கொண்
டின்னுயிர் செகாஅர் விட்டகல் தப்பற்குப்
பெருங்களிற்று மருப்பொடு வரியதள் இறுக்கும்
அறனில் வேந்தன் ஆளும்
௧௫ வறனுறு குன்றம் பலவிலங் கினவே.

—கடுந்தொடைக் காவினர்

(உரை)

௧ - ௩: பல்லிதழ்........ஊரே

(இ - ள்.) *பல்இதழ் மெல்மலர் உண்கண் நல்யாழ் நரம்பு இசைத்து அன்ன இன்தீம் கிளவி நலம் நல்கு ஒருத்தி - பேதை நெஞ்சமே நீ இப்பொழுது பலவாகிய இதழ் களையுடைய மெல்லிய மலர்போன்ற அழகினால் நம்முடைய நெஞ்சத்தையே பருகுகின்ற கண்களையும் நல்லயாழினது நரம்பு இசைத்தாற்பேன்ற இனிய தீவிய மொழியினையும் உடைய பெண்மைக்கியன்ற இன்பம் முழுவதையும் வழங்குவாள் ஒருத்தி என நீ இத்துணைத் தொலைவு வந்த பின்னரும் நினைதல் பேதைமையாம்; இருந்த ஊர் - மற்று அப்பெண்ணின் நல்லாள் இருந்த ஊர்க்கு, என்க.*

(வி - ம்) *பல்லிதழ்......ஒருத்தி என்னுமளவும் தன் நெஞ்சம் தலைவியைத் தன்னுள் நினைந்தவை; அவற்றைத் தலைவன் கொண்டு கூறி இங்ஙனம் நினைத்தல் பேதைமை என்பதுபடச் சொல்லிய படியாம் அவள் இருந்த ஊர் என்க.*

௪ — ௧௦: கோடு..........அத்தம்

(இ — ள்.) கோடு உழு களிற்றின் தொழுதி யீண்டிக் *காடு கால் யாத்த நீடுமரச்சோலை - பகைவரது மார்பினைத் தமது* கோடுகளாகிய கலப்பையால் உழுது வெற்றி விளக்கின்ற *களிற்றியானையின் கூட்டம் செறியப் பெற்று எங்கும் காடு*

மண்டிக்கிடந்த நீண்ட மரங்களையுடைய சோலைகளையும் அவற்றின் பின்; விழைவெளில் ஆடும் கழை வளர் நனந்தலை - ஆணும் பெண்ணுமாய்த் தம்முள் ஒன்றனையொன்று காதலிக்கின்ற அணில்கள் ஆடுதற்கிடனான மூங்கில்கள் வளரும் அகன்ற இடமுடைய பாலைப்பரப்பினையும் அப்பாலையிலே; வெண்நுனை அம்பின் விசையிட வீழ்ந்தோர் எண்ணு வரம்பு அறியா உவல் இடு பதுக்கை - தீட்டியதாலே வெண்மையான நுனியையுடைய அம்புகள் விசையோடு வந்து பாய்ந்தமையாலே இறந்தொழிந்த மறவர்களின் உடலைப் புதைத்த எண்ணால் எல்லை காணுதற்கரிய தழையால் மறைத்த பதுக்கைகளையுடைய; சுரம்கெழு கவலை கோள்பால் பட்டென - சுரத்தில் பொருந்திய கவர்த்த வழிகள் ஆறலைத்துச் சூறை கொள்கின்ற கள்வர் பகுதியிலே அகப்பட்டது என்றறிந்து; வழங்குநர் மடிந்த அத்தம் — ஆறு செல்வோர் இல்லையான அக்கொடு நெறியின்கண், என்க.

(வி - ம்.) தொழுதி - கூட்டம். கால் யாத்தல் - பற்றிக் கொள்ளுதல். யானைக் கூட்டம் செறிந்து காடுமண்டி நீடுமரச்சோலை என்றது தலைவியிருக்கின்ற முல்லைப் பரப்பின் இப்பாற்பட்ட குறிஞ்சி நிலத்தை என்க. மேலே பாலைப் பரப்புக் கூறுகின்றான். விழை வெளில் - கண்டோர் விரும்பிப் பார்க்கும் அழகுடைய அணிலுமாம். கழைவளர் என்றது பாலைக் கருப்பொருள் குறித்தபடியாம். வெந்நுனை என்னும் பாடத்திற்கு வெவ்விய நுனி என்க. உவல் - தழை; சருகுமாம். பதுக்கை - பிணங்களை மறைத்தற்கு அவற்றின் மேற்குவித்த கற்குவியல்- கவலை - கவர்த்த வழிகள். கோள் - சூறை கொள்ளுதல். வழங்குநர் - வழிப் போக்கர். அத்தம் - அருநெறி; பாலைநிலமுமாம்.

கo - கரு: இறந்தோர்...........விலங்கினவே

(இ — ள்.) இறந்தோர் கைப்பொருள் இல்லையாயினும் மெய்க்கொண்டு இன் உயிர் செகாஅர் விட்டு அகல்தப்பற்கு - சென்ற வழிப்போக்கரிடம் கைப்பொருள் சிறிதும் இல்லாவிட்டாலும் அவருடம்பைப் பற்றிக்கொண்டு அவர்தம் உயிரைப் போக்காமல் உயிருடன் விட்டுப்போன தவற்றிற்காக; பெருங்களிற்று மருப்பொடு வரி அதள் இறுக்கும் அறன் இல் வேந்தன் ஆளும் — பெரிய களிற்றியானையின் கொம்புகளையும் புலித்தோலையும் தண்டமாக இறுப்பிக்கின்ற அறப்பண்பு சிறிதுமில்லாத எயினர் வேந்தன் ஆளுகின்ற; வறன் உறு குன்றம் பல விலங்கின - மாரிவறங் கூர்ந்து பாழ்பட்டுக்கிடக்கும் மலைகள் பற்பல இடையிட்டுக் கிடந்தனகாண்.

(வி - ம்.) இறந்தோர் - சென்றோர். அப்பாலை வழியில் செல்லும் வழிப்போக்கரிடத்தில் உள்ள பொருளைக் கொள்ளை கொள்ள வேண்டும்

அவர்பால் பொருள் இல்லையானாலும் கொன்றுவிட வேண்டும். பொருளில்லாமை கண்டு இரங்கி உயிரோடு விட்டவர் அக்குற்றத்திற்கு யானைக்கோடும் புலித்தோலும் தண்டமாகச் செலுத்த வேண்டும். அத்தகைய அறனில் வேந்தன் என்றவாறு. மறக்குடி அறம் செய்யக் கெடும் என்பது அவர் கோட்பாடு. இதன்கண் நம் காதலியாகிய அவள் இருக்கும் ஊர்க்கு நீடுமரச்சோலையாகிய குறிஞ்சியும் கழைவளர் நனந்தலையும் அத்தமும் அறனில் வேந்தன் ஆளும் குன்றம் பலவும் இடையே கிடந்தன. ஆள்வினை மேற்கொண்டு வந்த யாம் அவளை இத்துணைத் தொலைவு கடந்த பின்னரும் நினைத்தல் பேதைமை; ஆதலால், அந்நினைவை விடுக! என்பது இதனாற் போந்த பயன்.

இனி, இதனை (நெஞ்சே) ஒருத்தி இருந்த ஊர்க்குச் சோலையும் அத்தமும் அறனில் வேந்தன் ஆளும் குன்றம் பலவும் விலங்கின ஆதலால் நினையாதே கொள் என இயைத்துக் கொள்க.

(பா - வே.) ௬ - கழைவிரி. எ - வெந்நுனை. கக - மெய்க்கட்.

## செய்யுள் கக0

**திணை :** நெய்தல்.

**துறை :** தோழி செவிலித் தாய்க்கு அறத்தொடு நின்றது.

**(து - ம்.)** அஃதாவது, களவொழுக்கத்தின்கண் கூடி இருக்குங் காலத்தினும் பிரிந்துறையும் காலமே நீளிதாதலின் தலைவி பிரிவாற்றாமையால் மெய்வேறுபட்டுத் தோன்ற அதுகண்ட செவிலி, இவள் எதனால் இவ்வாறுயினள் என்று வினவத் தலைவியின் குறிப்பறிந்த தோழி அவள் கற்புக் கடம் பூண்டமையைச் செவிலிக்குக் குறிப்பாக வுணரும்படி மறை வெளிப்படுத்துக் கூறியது என்றவாறு.

**(இ - ம்.)** இதற்கு, "நாற்றமும் தோற்றமும்" எனவரும் (தொல்-களவி - உக) நூற்பாவின்கண் முன்னிலை அறன் எனப்படுதல் என்றிரு வகைப் புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும் எனவரும் விதிகொள்க.

அன்னை அறியினும் அறிக அலர்வாய்
அம்மென் சேரி கேட்பினுங் கேட்க
பிறிதொன் றின்மை அறியக் கூறிக்
கொடுஞ்சுழிப் புகார்அத் தெய்வம் நோக்கிக்
௫ கடுஞ்சூள் தருகுவல் நினக்கே கானல்
தொடலை யாயமொடு கடலுடன் ஆடியுஞ்
சிற்றில் இழைத்தும் சிறுசோறு குவைஇயும்
வருந்திய வருத்தம் தீர யாஞ்சிறி
திருந்தன மாக எய்த வந்து

க0 தடமென் பணைத்தோள் மடநல் லீரே
எல்லும் எல்லின் றசைவுமிக உடையேன்
மெல்லிலைப் பரப்பின் விருந்துண் டியானுமிக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ
எனமொழிந் தனனே ஒருவன் அவற்கண்
கரு டிறைஞ்சிய முகத்தெம் புறஞ்சேர்பு பொருந்தி
இவைநமக் குரிய வல்ல இழிந்த
கொழுமீன் வல்சி என்றனம் இழுமென
நெடுங்கொடி நுடங்கும் நாவாய் தோன்றுவ
காணு மோவெனக் காலிற் சிதையா
உ0 நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும்
என்னே குறித்த நோக்கமொடு நன்னுதால்
ஒழிகோ யானென அழிதகக் கூறி
யான்பெயர் கென்ன நோக்கித் தான்தன்
நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி
உரு நின்றோன் போலும் இன்றுமென் மகட்கே.

—போந்தைப் பசலையார்.

(உரை)

ரு - கூ: கானல்...........ஆக

(இ - ள்.) யாம் தொடலை ஆயமொடு கடல் உடன் ஆடியும் கானல் சிற்றில் இழைத்தும் சிறுசோறு குவைஇயும் வருந்திய வருத்தம் தீர சிறிது இருந்தனம்ஆக – அன்னையே இவள் இங்ஙனம் ஆயதற்குக் காரணம் யான் நன்கு அறிந்திலேன் ஆயினும் யானும் தலைவியும் ஒருநாள் எம்மை மாலைபோலத் தொடர்ந்து வரும் தோழிமார் குழுவினோடு சென்று கடலிலே ஒருங்கே நீராடியும் கடற்கரைச் சோலையிலே மணல் வீடு கட்டியும் சிறுசோறு சமைத்தும் விளையாடி வருந்தி அவ்வருத்தம் தீரும்படி சிறிது பொழுது இளைப்பாறி அச்சோலைக்கண் இருந்தேம் அப்பொழுதே; என்க.

(வி - ம்.) யாம் என்றது யானும் தலைவியும் என்றவாறு. கானல் - கடற்கரைச் சோலை. சிறு சோறு - மணற்சோறு. மணலைக் குவித்து வைத்து இது சோறு என்பர் ஆதலின் சோறு குவைஇயும் என்றான். சிறிது - சிறிது பொழுது.

### கூ - கச : எய்த வந்து.........ஒருவன்

(இ - ள்.) ஒருவன் எய்த வந்து தட மெல் பணைத்தோள் மட நல்லீரே - யாரோ ஓர் ஆடவன் எம்மிடம் அணுகி வந்து பெரிய மெல்லிய மூங்கில்போலும் தோளையும் மடப்பத்தையும் உடைய நல்லீரே என்று எம்மை இனிதாக விளித்து; எல்லும் எல்லின்று மிக அசைவும் உடையேன் - பகற் பொழுதும் ஒளி குன்றிற்று; யானும் மிகவும் இளைப்புடை யேனாய் இருக்கின்றேன் ஆதலின்; மெல் இலை பரப்பின் விருந்து உண்டு யானும் இக் கல் என் சிறுகுடித் தங்கின் (மற்று) எவனோ என மொழிந்தனனே - இந்த மெல்லிய இலைப்பரப்பிலே நீவிர் ஆக்கிய இச்சிறு சோற்றை விருந்தினனாக இருந்துண்டு யானும் இந்த ஆரவாரமுடைய சிறிய குடியில் உங்களோடு தங்கினால் உங்களுக்கு இடையூறு ஏதேனும் உண்டோ கூறுமின் என்று வினவினனாக; என்க.

(வி - ம்.) தட - பெருமை. பணை - மூங்கில். எல்லின்று - ஒளி இல்லையாயிற்று. அசைவு - இளைப்பு. மெல்லிலை என்றது அம்மகளிர் பறித்துவைத்திருந்த இலைகளை. விருந்து - விருந்தினன். கல்லென் - இசைக் குறிப்புமொழி. எவனோ - என்னையோ. இவ்வினா யான் அவ் வாறு தங்க விரும்புகின்றேன் என்பதுபட நின்றது. ஒருவன் என்றது, யாமறிந்திலாத புதிய ஆடவனொருவன் என்பதுபட நின்றது.

### கரு - கஎ : அவன் கண்டு.........இழுமென

(இ - ள்.) அவன் கண்டு இறைஞ்சிய முகத்து எம் புறம் சேர்பு பொருந்தி - யாங்கள் அப் புதியவனைக் கண்டமையால் குனிந்த முகத்தோடு எம்முள் ஒருவர் பின் ஒருவராய் மறைந்து நின்று; இழுமென இவை இழிந்த கொழுமீன் வல்சி - இழும் என்னும் மெல்லிய மொழியால் அதற்கு விடையாக இவ்வுணவு இழிந்ததான கொழுமீனால் ஆக்கிய உணவாதலின்; நுமக்கு உரிய அல்ல என்றனம் - உயர்குடித் தோன்றலாகிய நீவிர் உண்ணுதற்குரியன அல்ல என்று கூறினேமாக; என்க.

(வி - ம்.) அவன் என்றது, அப்புதியவன் என்பதுபட நின்றது. நாணத்தால் இறைஞ்சிய என்க. முகத்தெம் எனத் தன்மைப் பன்மை யாகக் கோடலுமாம். ஒருவர் புறத்தில் ஒருவர் சேர்ந்து மறைந்து நின்று என்க. அவன் தோற்றத்தால் உயர்குடித் தோன்றல் போன் றிருந்தான் ஆதலின் இவை நுமக்கு உரிய அல்ல என்னும் இதனால் தோழி அத்தலைவன் உயர்குடித் தோன்றல் என அறிவுறுத்திய நுணுக்கமு முணர்க. கொழுமீன் - ஒருவகை மீன். வல்சி - உணவு. இழுமென : ஒலிக் குறிப்பு.

கஅ - உஉ: நெடுங்கோடி..........கூறி

(இ - ள்.) நுடங்கும் நெடுங்கொடி தோன்றுவ நாவாய் காணுமோ என - தோழியீர் அதோ கடலின்கண் அசைகின்ற நீண்ட கொடிகளையுடையனவாய் மரக்கலங்கள் தோன்றுகின்றன அவற்றைச் சென்று காண்போம் அல்லமோ என்று கூறிக் கொண்டு; காலின் சிதையா நில்லாது பெயர்ந்த பல்லோர் உள்ளும்-தமது சிற்றில் முதலியவற்றைக் காலால் சிதைத்து விட்டு அவன் முன் நில்லாது சென்ற மகளிர் பலருள் வைத்து அவன் ருனும்; என்னே குறித்த நோக்கமொடு நல் நுதால் யான் ஒழிகோ என அழிதகக் கூறி - என்னையே குறிக்கொண்டு நோக்கிய நோக்கத்தோடு நின்று அழகிய நுதலையுடையோய் யான் போகவோ என்று தனது நெஞ்சு அழியுமாறு விடை இரப்ப; என்க.

(வி - ம்.) இவை நுமக்குரிய அல்ல என்று கூறிய துணையானே, நாவாய் காண்டலைத் தலைக்கீடாகச் சொல்லி யாங்கள் அவ்விடத்தில் நில்லாது சென்றேமாக, எம்முள் என்னைத் தனித்து நோக்கி 'யான் ஒழிகோ' என்று நெஞ்சழிந்து கூறினன் என்றது, தலைவிக்கு யான் உயிர்த்தோழி என்பதுணர்ந்து கொண்டு என்னை மதியுடம்படுத்தற் பொருட்டு அங்ஙனம் கூறினன் என்றறிவித்தற் பொருட்டு. அழிதகக் கூறி என்றது அவன் தலைவியைக் காமுற்று நெஞ்சழிந்து கூறினன் என்றறிவித்தற் பொருட்டாம்.

உங - உரு: யான்...........மகட்கே

(இ - ள்.) யான் பெயர்க என்ன - அதுகேட்ட யான் நீவிர் போவீராக என்று கூறவும்; தான்தன் நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி நின்றோன் - அவ்விடத்தினின்றும் அகலாதவனாய், அவன் தனது நெடிய தேரினது கொடிஞ்சியைப் பற்றிக்கொண்டு, தலைவியைக் கூர்ந்து நோக்கிய வண்ணம் நெடும்பொழுது நின்றனன்; என்மகட்கு போலும் இன்று - அங்ஙனம் நின்றவனே என்மகளின் மெய்வேறு பாட்டிற்குக் காரணம் போலும் என்று, என்க.

(வி - ம்.) பெயர் கென்னவும் பெயரானாய் எனவும், தலைவியை நோக்கி எனவும், மகள் மெய் வேறுபாட்டிற்கு எனவும், காரணம் போலும் எனவும், ஏற்ற பெற்றி சில சொற்கள் வருவித்துக் கொள்க. இச்சொற்களை அறத்தொடு நிற்கும் தோழி அன்னைமுன் சொல்ல நாணி விடுத்தனள். நின்றோன் என்புழி, ஆகாரம் ஓகாரம் ஆயிற்றுச் செய்யுள் ஆதலின். போலும், ஒப்பில்போலி. என்று அன்னை அறியினும் அறிக என இயையும் இச்செய்யுள் விற்பூட்டுப் பொருள் கோள்.

க - ரு : அன்னை...........நினக்கே

(இ - ள்.) அன்னை அறியினும் அறிக - இந்நிகழ்ச்சியை நற்றாய் அறிந்து கொள்ளினும் கொள்க; அம் என் அலர்வாய் சேரி கேட்பினுங் கேட்க - அன்றியும் அம் என்னும் ஒலியுடனே அலர் தூற்றும் வாயையுடைய இச்சேரியில் வாழ்கின்ற பொல் லாத மகளிர் கேட்டு அலர் தூற்றினும் தூற்றுக; நினக்கு - அன்னையே யான் உனக்கு; பிறிது ஒன்று இன்மை அறிய - தலைவியின் மெய்வேறுபாட்டிற்கு இதனை அல்லாமல் யான் அறிந்த காரணம் வேறொன்றும் இல்லாமையை நீ ஐயமின்றித் தெரிந்து கொள்ளும் பொருட்டு; கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கிக் கூறி - வளைந்த சுழியையுடைய நீரையுடைய இப்புகாஅர் இடத்து உறைகின்ற தெய்வத்தை நோக்கிச் சொல்லி; கடுஞ்சூள் தருகுவன் – பொய்க்க வொண்ணாத சூள் செய்து தருவேன் காண்! என்பதாம்.

(வி - ம்) அன்னை என்றது நற்றாயை. சேரி: ஆகுபெயர். கேட் பினுங் கேட்க என்றது கேட்டு அலர் தூற்றினும் தூற்றுக! என்பது பட நின்றது. ஒன்று - ஒரு காரணம். சூள் பொய்ப்பின் தெய்வம் ஒறுக்கும் ஆதலின் கடுஞ் சூள் என்றாள். புகார்த் தெய்வம் என்றது வருணனை.

இனி, தோழி அறத்தொடு நிற்குங்கால் எளித்தல் முதலிய ஏழு வகையால் நிற்றல் வேண்டும் என்பர் தொல்காப்பியர். அவற்றுள் இதன்கண் "மெல்லிலைப் பரப்பின் விருந்துண்டி யானுமிக் கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ" என்பது எளித்தல் எனவும் "பிறி தொன்றின்மை அறியக்கூறிக் கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கிக் கடுஞ்சூள் தருகுவன் நினக்கே" என்பது தலைப்பாடு எனவும் நச்சினார்க்கினியர் ஓதுவர்.

இனி, நினக்கென எனவும் காவிற் சிதையா எனவும் இன்று மென் மகட்கே எனவும் பாடவேற்றுமையுண்டு.

இனி, இதனைக் கானல் தொடலை ஆயமொடு வருந்திய வருத்தம் தீர யாம் சிறிது இருந்தனம்; ஒருவன், அசைவு மிக உடையேன், விருந் துண்டு இச்சிறுகுடித் தங்கின் எவனோ என மொழிந்தனன்; இழிந்த கொழுமீன் வல்சி என்றனம்; நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும் என்னே குறித்த நோக்கமொடு ஒழிகோ யானென அழிதகக் கூறி யான் பெயர்க என்ன, கொடிஞ்சி பற்றி நின்றோன் போலும் இன்றும் என் மகட்கே; அன்னை அறியினும் அறிக; சேரி கேட்பினும் கேட்க; பிறிதொன்றின்மை அறியக் கூறிப் புகார்த் தெய்வம் நோக்கி நினக்குக் கடுஞ் சூள் தருகுவன் என்று இயைத்துக் கொள்க.

## செய்யுள் ககக

திணை : பாலை

துறை : தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகளை யாற்றுவித்தது.

(து - ம்.) அஃதாவது—தலைவன் தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் சென்றானாக, தலைவி பெரிதும் வருந்துதல் கண்ட தோழி அவளுக்குத் தலைவன் கருத்துணர்த்தி ஆற்றுவித்தது.

(இ - ம்.) இதனை—"பெறற் கரும் பெரும் பொருள்" எனவரும் (தொல் - கற்பி - க) நூற்பாவின்கண் பிறவும் வகைபட வந்த கிளவி என்பதனால் அமைத்துக்கொள்க.

உள்ளாங் குவத்தல் செல்லார் கறுத்தோர்
எள்ளல் நெஞ்சத் தேஎச்சொல் நாணி
வருவர் வாழி தோழி யரச
யானை கொண்ட துகிற்கொடி போல
ரு அலந்தலை ஞெமையத்து வலந்த சிலம்பி
ஓடைக் குன்றத்துக் கோடையோடு துயல்வர
மழையென மருண்ட மம்மர் பலவுடன்
ஓய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை
தொகுசொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும்
க0 அத்தக் கேழல் அட்ட நற்கோள்
செந்நாய் ஏற்றை கம்மென ஈர்ப்பக்
குருதி யாரும் எருவைச் செஞ்செவி
மண்டமர் ரழுவத் தெல்லிக் கொண்ட
புண்தேர் விளக்கின் தோன்றும்
கரு விண்தோய் பிறங்கல் மலையிறந் தோரே.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

### (உரை)

ந-வாழி தோழி

(இ - ள்.) தோழி நீ நீடூழி வாழ்க! இவ்வாறு வருந்தாதே கொள், என்க.

ஙட - கரு : அரச..........மலையிறந்தோரே

(இ - ள்.) அரச யானை கொண்ட துகில் கொடிபோல - பட்டத்தியானை தனது கையிற் கொண்டுயர்த்திய வெண் பட்டால் செய்த கொடிச்சீலைபோல; ஓடைக்குன்றத்து அலர் தலை ஞெமையத்து வலந்த சிலம்பி கோடையொடு துயல்வர - ஓடைக்குன்றம் என்னும் மலையின் உச்சியில் சுழலுகின்ற ஞெமை மரத்தினது உலர்ந்த கிளையில் கட்டப்பெற்ற சிலம்பியின் நூல் கோடைக்காற்றினால் அசையாநிற்ப ; மழை என மருண்ட மம்மர் ஒய்களிறு பலவுடன் எடுத்த நோய் உடை நெடுங்கை தொகுசொல் கோடியர் தூம்பின் உயிர்க்கும் - அதனை முகில் என்று மயங்கிய மயக்கத்தையுடைய நீருக்கு அலைந்து ஓய்ந்து போன களிற்றியானைகள் பலவும் ஒருங்குகூடி உயர்த்திய நீர் வேட்கையாகிய துன்பத்தையுடைய நெடிய கைகள் புரவலருடைய புகழைத் தொகுத்துப்பாடும் சொல்லையுடைய கூத்தரின் தூம்பு என்னும் இசைக்கருவிக்குழாம் போல ஒலித்தற்கிடனாகிய; அத்தக் கேழல் அட்ட நல்கோள் செந்நாய் ஏற்றை கம்மென ஈர்ப்ப - வழியின்கண் பதுங்கிக் கிடந்து பன்றியைக் கொன்றமையால் நல்ல இரையைக் கொண்ட செந்நாய்ச் சாதியில் ஆண்நாய் விரைந்து அதனை இழுத்துச் செல்ல; குருதி ஆரும் எருவைச் செஞ்செவி - அப்பன்றியின் குருதியைப் பருகுகின்ற கழுகுகளின் சிவந்த காதுகள் ; மண்டு அமர் அழுவத்து - மறவர்கள் மண்டிச் சென்று போரிடுகின்ற போர்க்களத்தின்கண் ; எல்லிக் கொண்ட புண்தேர் விளக்கின் தோன்றும் - இரவின்கண் மறவர்கள் தம்கையிற் கொண்ட விழுப்புண்பட்டு விழுந்த மறவருடைய புண்ணை ஆராய்தற்குரிய விளக்குகளைப் போலக் காணப்படுகின்ற ; விண்தோய் பிறங்கல் மலை இறந்தோர் - வானத்தைத் தீண்டுகின்ற விளக்கத்தையுடைய மலையைக் கடந்து சென்ற நம்பெருமான் என்க.

(வி - ம்.) அலந்தலை என்னும் பாடத்திற்குக் காற்றால் சுழலுகின்ற என்க ; ஞெமை - ஒருவகை மரம். சிலம்பியின் வலை கோடையொடு சுழலுகின்ற ஞெமை மரத்தின்கண் துயல்வர என்க. கோடை - மேல் காற்று, துயல் வருதல் அசைதல். ஓடைக்குன்றம்: பெயர் ; மழை - முகில். கோடியர் - கூத்தர். தூம்பு - ஓரிசைக் கருவி. கேழல் - பன்றி. கம்மென - விரைய. எருவை - கழுகு. கழுகின் செவிக்கு விளக்கு உவமை. பிறங்கல் - விளங்குகின்ற.

க - ஙட: உள்ளாங்கு..........வருவர்

(இ - ள்.) கறுத்தோர் எள்ளல் நெஞ்சத்து ஏளச்சொல் நாணி - பிரிந்து போயது நல்குரவினால் அன்று தம்பகைவர்

தம்மை இகழ்கின்ற நெஞ்சத்தோடு தம்மைக் குறித்துக் கூறு கின்ற ஆள்வினை இல்லான் என்னும் அம்புபோன்ற பழிச் சொல்லிற்கு நாணமடைந்து; உள்ளாங்கு உவத்தல் செல்லார்-தம் தாயத்தார் வைத்துப் போன தமக்குள்ள பெரும் பொருள் அளவிலே மகிழ்ந்து அமையமாட்டாராய்ப் பொருள் ஈட்டச் சென்றனர், ஆதலால் தாம் மேற்கொண்ட வினை முற்றிய பொழுதே; வருவர் - நின்னை நினைந்து மீண்டு வருவர், ஆதலால் அவர் வருமளவும் நீ ஆற்றி இருப்பாயாக என்பதாம்.

(வி - ம்.) ஈண்டு, "இனிப், பொருட்பிணி என்பது பொருளிலனுய்ப் பிரியும் என்பதன்று; தன் முதுகுரவரால் படைக்கப்பட்ட பல்வேறு வகைப்பட்ட பொரு ளெல்லாம் கிடந்ததுமன், அது கொடு துய்ப்பது ஆண்மைத்தன்மை யன்றெனத் தனது தாளாற்றலாற் படைத்த பொருள் கொண்டு வழங்கி வாழ்தற்குப் பிரியும் என்பது" எனவரும் இறையனார்களவியலுரை கருதற்பாலதாம். உள்ளாங்கு உவத்தல் - தமக்கு உள்ள பொருளே போதுமென்று அமைதியுடன் இருந்து வாழ்தல். "போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து" எனவரும் பழமொழியும் ஈண்டு நினையற்பாலது. கறுத்தோர் - பகைவர். ஏளச்சொல் - அம்பு போலப் பாய்ந்து துன் புறுத்துஞ் சொல். அஃதாவது ஆள்வினை அறியான் என்னும் சொல்.

இனி "இல்லாரை எல்லாரும் எள்ளுவர்" என்பவாகலின் கறுத்தோர் எள்ளுதல் ஒருதலை என்று கருதியுஞ் "செறுநர் - செருக்கறுக்கும் எஃகு அதனின் கூரியதில்" (குறள் எ௫உ, எ௫க.) என்பது பற்றியுமே பொரு ளீட்டச் சென்றனர், ஆதலின் வினைமுற்றியவுடன் விரைந்து வருவர், அவர் வருந்துணையும் ஆற்றியிருத்தலே நின்கடமை என வற்புறுத்தினுள் என்க.

இனி, இதனை—தோழி மலை இறந்தோர் உள்ளாங்குவத்தல் செல்லார் கறுத்தோர் ஏளச் சொல்லுக்கு நாணிப் பிரிந்தனர் ஆதலின் வருவர் ஆற்றுக என இயைத்துக் கொள்க.

## செய்யுள் ககஉ

திணை : குறிஞ்சி.

துறை : இரவுக்குறி வந்த தலைமகனை யெதிர்ப்பட்டு நின்று தோழி சொல்லி வரைவு கடாயது.

(து - ம்.) அஃதாவது—இன்னல் நிறைந்த இருளினூடே இரவுக் குறிக்கண் நாள்தோறும் வந்து மீள்கின்ற தலைவன் வருகைக்கு அஞ்சியும், அவன் வராதொழியின் தலைவியின் பிரிவாற்றுமைக்கு அஞ்சியும் தோழி, ஒரு நாள் இரவுக்குறி வந்த தலைவனைத் தமியளாய் எதிர்ப்பட்டு நின்று வரைவு முடுக்கியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு—"நாற்றமும் தோற்றமும்" எனவரும் (தொல்-களவி-உக) நூற்பாவின்கண் ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும் எனவரும் விதி கொள்க.

கூனல் எண்கின் குறுநடைத் தொழுதி
சிதலை செய்த செந்நிலைப் புற்றின்
மண்புனை நெடுங்கோ டுடைய வாங்கி
இரைநசைஇப் பரிக்கும் அரைநாட் கங்குல்
௫ ஈன்றணி வயவுப்பிணப் பசித்தென மறப்புலி
ஒளிறேந்து மருப்பின் களிறட்டுக் குழூஉம்
பனியிருஞ் சோலை யெமியம் என்னாய்
தீங்குசெய் தனையே யீங்குவந் தோயே
நாளிடைப் படினென் றோழி வாழாள்
௧௦ தோளிடை முயக்கம் நீயும் வெய்யை
கழியக் காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்
வரையின் எவனோ வான்தோய் வெற்ப
கணக்கலை இருக்கும் கறியிவர் சிலம்பின்
௧௫ மணப்பருங் காமம் புணர்ந்தமை அறியார்
தோன்றியல் மரபின் மன்றல் அயரப்
பெண்கோள் ஒழுக்கம் கண்கொள நோக்கி
நொதுமல் விருந்தினம் போலவிவள்
புதுநாண் ஒடுக்கமும் காண்குவம் யாமே.

—நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர்கிழார்.

(உரை)

௧௩. வான் தோய் வெற்ப

(இ - ள்.) வானத்தைத் தீண்டுகின்ற மலைநாட்டின் பெருமானே என்க.

(வி - ம்.) உயர்குடித் தோன்றலாகிய உனக்கு இவ்வொழுக்கம் இழுக்குத் தரும் என்பது கருப்பொருட் புறத்தே தோன்றிற்று - இஃது இறைச்சி.

க - ௪ : கூனல்...........வந்தோயே

(இ - ள்.) கூனல் குறுநடை எண்கின் தொழுதி சிதலை செய்த மண்புனை நெடுகோடு உடைய வாங்கி - கூனிய முதுகினையும் குறிய நடையினையும் உடைய கரடிக் கூட்டம் கறையான் இயற்றிய செங்குத்தாய் நிற்கும் நிலையினையுடைய புற்றினது மண்ணாற் புனைந்த நெடிய குவடுகள் உடைந்து போகும்படி அகழ்ந்தெடுத்து; இரை நசைஇப் பரிக்கும் அரைநாள் கங்குல் - தமக்கிரையான புற்றாஞ் சோற்றினை விரும்பித் தின்னற்குச் செல்லுதற்குரிய இந்த நள்ளிரவின் இருளினூடே; ஈன்று அணி வயவுப் பிணப் பசித்து என மறப்புலி ஒளிறு ஏந்து மருப்பின் களிறு அட்டுக் குழுமும் - குட்டி ஈன்ற அணிமைக் காலம் காரணமாக வயா வருத்தத்தோடிருக்கின்ற பெண்புலி பசியுடன் இருப்பதறிந்து தறுகண்மையுடைய ஆண்புலியானது அதற்குணவாக விளங்குகின்ற உயர்ந்த கொம்புகளையுடைய களிற்றியானையைக் கொன்று வீழ்த்தி முழங்கா நின்ற; பனி இருஞ்சோலை எமியம் என்னாய் ஈங்கு வந்தோய் - குளிர்ந்த பெரிய சோலையினூடே புகுந்து யாம் தமியம் என்று எண்ணாமல் இங்கு வந்தனை; தீங்கு செய்தனை - இங்ஙனம் வந்த நீ எமக்கு அளிசெய்யவே வந்தாயேனும் அது செய்திலை ! அதற்குமாறாக எமக்குத் துன்பமே செய்தனை காண், என்க.

(வி - ம்.) எண்கு - கரடி. தொழுதி - கூட்டம். நசைஇ - தின்னற்குப் பரிக்கும் என ஒரு சொற்பெய்க. ஈன்று அணிமை காரணமாக வயாவருத்தத்தோடிருக்கும் பிணா என்க. பிணா - பெண்புலி. அஃதீற்றுயிர் குறுகி, பிண என நின்றது. புலி களிறட்டுக் குழுமும் சோலை என்றது ஆற்றது தீமை அறிவுறு கலக்கம். வந்தோய் - ஆ ஓவாயிற்று. வந்தது அளி செய்தற்கேயாயினும் அது செய்திலை துன்பமே செய்தனை என்றவாறு. துன்பம் வரும் வழியில் நேரும் தீங்கு கருதும் அச்சம். எனவே வருதலினும் வாராமையே நன்றென இரவுக்குறி மறுத்தாளுமாயிற்று.

௯ - ௧௫ : நாளிடை..........எவனோ

(இ - ள்.) நாள் இடைப்படின் என்தோழி வாழாள் - இனி நீ வாராமல் ஒரோ ஒரு நாள் இடைப்பட்டாலும் எம் பெருமாட்டி உயிர் வாழாள் போலுகின்றாள்; தோள் இடை முயக்கம் நீயும் வெய்யை - மேலும் அவள் தோள் மேல் கிடந்து தழுவும் தழுவுதலை நீதானும் பெரிதும் விரும்புகின்றனை அல்லையோ ; சான்றோர் கழியக் காதலர் ஆயினும் பழியொடு வருஉம் இன்பம் வெஃகார் - சான்றாண்மையுடையோர் மாபெருங் காதலர் ஆகியவிடத்தும் பழியோடு வருவதாயின் அக்காதலால்

வரும் இன்பத்தை விரும்புவதிலர், இங்ஙனமிருத்தலின் ; வரையின் எவனோ - நீ எம்பெருமாட்டியை எஞ்சுற்றத்தாரிடத்து மகட் பேசித் திருமணஞ் செய்துகொண்டால் உனக்கு வரும் துன்பம் என்னையோ ? என்க.

(வி - ம்.) இரவில் வருதல் எமக்குத் துன்பந்தரும் ஆதலால் வாராதே கொள் ! என்றவள், மீண்டும் நீ ஒரு நாள் ஒழியினும் எம் பெருமாட்டி உயிர் வாழாள் எனத் தலைவியின் ஆற்றாமை கூறினள். நீயும் அத்தகையை என்பாள் நீயும் வெய்யை என்றாள். இக்கள வொழுக்கம் பழி பிறத்தற்கு ஏதுவாம். இரவிடை கொடுநெறிக்கண் வருகின்ற உனக்கு ஏதேனும் ஏதம் நிகழுமாயின் தலைவியும் உயிர் நீப்பள்; அவ்வழிப் பிறக்கும் பழி சாலப் பெரிதாம் ஆதலின் இவ் வொழுக்கத்தைத் தவிர்க என்பாள், அதனை உலகின் மேலிட்டுச் சான்றோர் பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார், என்றாள். அன்றியும் வரைந்து கோடலும் உனக்கு எளியதும் கடமையும் ஆகும் என்பாள் வரையின் எவனோ ? எனவும் வினவினாள்.

கச - கரு : கணக்கலை... ........யாமே

(இ - ள்.) கணக்கலை இருக்கும் கறியிவர் சிலம்பின் மணப் பரும் காமம் புணர்ந்தமை அறியார் தொன்று இயல் மரபின் மன்றல் அயர - கூட்டமான கலைமான்கள் தாழ ஒலித்தற் கிடனான மிளகுக் கொடி படர்ந்த இம்மலைச் சாரலில் நீங்கள் கூடுதற்கரிய இயற்கைப் புணர்ச்சியால் காமக்கூட்டம் கூடிய செய்தியை எம் சுற்றத்தார் இதுகாறும் அறிந்திலர் ஆதலால் நீ வரைவொடு வரின் அவர் தாம் தொன்றுதொட்டு நடந்து வரு கின்ற முறைமைப்படி மகட் கொடை நேர்ந்து மணவிழாவும் செய்யா நிற்பர்; யாம் நொதுமல் விருந்தினம் போல-அப்பொழுது யாமும் அயலாராய் அவ்விழாவிற்கு வந்துள்ள புதியேம் போல ; பெண்கோள் ஒழுக்கம் கண்கொள நோக்கி - நீதானும் எம் பெருமாட்டியைத் திருமணப் பந்தலிலே வாழ்க்கைத் துணைவி யாகக் கைப்பற்றிக் கொள்ளுகின்ற பொழுது செய்கின்ற சடங்குகளையும் நுங்கள் திருமணக் கோலங்களையும் எம் கண்கள் பெறுதற்குரிய பயனைக் கொள்ளும்படி மகிழ்ந்து நோக்கி மேலும்; இவள் புதுநாண் ஒடுக்கமும் காண்குவம் - எம்பெருமாட்டி தானும், நின்னைப் பண்டறியாத புதியவள்போல நாணி நின் பக்கலிலே ஒடுங்கியிருக்கும் ஒடுக்கத்தையும் கண்டு எம்முள்ளே நகுவேம் ! அல்லமோ; என்பதாம்.

(வி - ம்.) கணம் - கூட்டம். கறி - மிளகுக்கொடி. உயர்குடிப் பிறப் புடைய ஒருவனும் ஒருத்தியும் தமியராய்த் தம்முள் தலைப்பெய்து கூடுகின்ற இயற்கைப் புணர்ச்சி ஊழாற் கூட்டப்படுதலன்றி நிகழ்தல்

மிகவும் அரிதாகலின் அதனை மணப்பரும் காமம் புணர்ந்தமை என்றாள். தொன்றியல் மரபு என்றது, தொன்றுதொட்டு "கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக் கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வது" ஆகிய முன்றமையை என்க. பெண்கோள் ஒழுக்கம் - வதுவைச் சடங்கு செய்து பெண்ணைக் கைப்பிடித்தல். நொதுமல் விருந்தினம் - அய லாராய்த் திருமணங் காணவந்த புதியேம். காண்குவம் என்றது கண்டு மகிழ்ந்து உள்ளுள்ளே நகுவேம் என்பது படநின்றது.

இனி, இதன்கண் கரடிகள் கறையான் பெரிதும் முயன்று செய்த புற்றை ஒரு பொழுதை உணவின் பொருட்டு உடைத்து அழித்தல் போல நீ இக்களவின்பத்தின் பொருட்டு எளியேமாகிய தலைவியும் யானும் அரிதின் முயன்று வளர்த்துள்ள எமது காதலுள்ளத்தை நினது இவ்வொழுக்கத்தானும் வரையாமையானும் சிதைத் தொழிகின்றாய்" என உள்ளுறை கொள்க.

இனி, இதனை — அரை நாட் கங்குல் புலி களிறு அட்டுக் குழூஉம் சோலையில் ஈங்கு வந்தோய்! தீங்கு செய்தனை ; நாள் இடைப்படின் என் தோழி வாழாள் ; தோளிடை முயக்கம் நீயும் வெய்யை ; சான்றோர் பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார் ; வரையின் எவன்? மன்றல் அயர அப்பெண் கோளொழுக்கத்தை நோக்கி யாம் நொதுமல் விருந் தினம் போல இவள் புது நாண் ஒடுக்கம் காண்குவம் என இயைத்துக் கொள்க.

(பா - வே.) ௪. கானலெண்கின். கூருகிரெண்கின். ௧௦. முயங்கமதி. ௧௫. மணப் பெருங்.

## செய்யுள் - ௧௧௩

திணை : பாலை

துறை : தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது — தலைவன் தலைவியைப்பிரிந்து ஆள்வினை மருங் கின் சென்றானாக, அப்பிரிவாற்றாது தலைவி வருந்தி அழுதாள் ; அதுகண்ட தோழி, "நீ ஆற்றி இருத்தலே முறை ; இங்ஙனம் அழுவதோ?" என்று தகைந்தாளாக; அதுகேட்ட தலைவி "ஏடி! காதலரைப் பிரிந்து ஆற்றுவா ராற்றுக, எம்மால் அஃதியல்வதன்று. ஆற்றாமையால் எம்முயிர் போம்! அதன் பின்னர் யாம் அழவும் மாட்டேம்!" என்று கூறி வன்புறை எதிரழிந்தது என்றவாறு.

(இ - ம்.) இதனை — அவனறிவு ஆற்ற அறியுமாதலின் எனவரும் (தொல் - கற்பி - ௬) நூற்பாவின்கண் ஆவயின் வரூஉம் பல்வேறு நிலை யினும் என்பதனால் அமைத்துக் கொள்க.

நன்றல் காலையும் நட்பிற் கோடார்
சென்று வழிப்படூஉந் திரிபில் சூழ்ச்சியில்
புன்றலை மடப்பிடி அகவுநர் பெருமகன்
அமர்வீசு வண்மகிழ் அஃதைப் போற்றிக்

ரு　காப்புக்கை நிறுத்த பல்வேற் கோசர்
இளங்கள் கமழும் நெய்தலம் செறுவின்
வளங்கெழு நன்னா டன்னவென் தோள்மணந்
தழுங்கல் மூதூர் அலரெடுத் தரற்ற
நல்காது துறந்த காதலர் என்றும்
க0　கல்போ லூஉ மெலியாப் பாடினோன் அடியன்
அல்கு வன்சுரைப் பெய்த வல்சியன்
இகந்தன வாயினும் இடம்பார்த்துப் பகைவர்
ஓம்பினர் உறையும் கூழ்கெழு குறும்பில்
குவையிமில் விடைய வேற்ற ஒய்யும்
கரு　கனையிருஞ் சுருணைக் கனிகாழ் நெடுவேல்
விழவயர்ந் தன்ன கொழும்பல் திற்றி
எழாஅப் பாணன் நன்னாட் டும்பர்
நெறிசெல் வம்பலர் கொன்ற தெவ்வர்
எறிபடை கழீஇய சேயரிச் சின்னீர்
உ0　அறுதுறை யயிர்மணல் படுகரைப் போகிச்
சேயர் என்றலிஸ் சிறுமை யுற்றவென்
கையறு நெஞ்சத் தெவ்வம் நீங்க
அழாஅம் உறைதலும் உரியம் பராரை
அலங்கல் அஞ்சினைக் குடம்பை புல்லெனப்
உரு　புலம்பெயர் மருங்கில் புள்ளெழுந் தாங்கு
மெய்யிவ ணொழியப் போகிஅவர்
செய்வினை மருங்கில் செலீஇயரென் உயிரே.

—கல்லாடனார்.

(உரை)

க - கூ : நன்றல்............காதலர்

(இ - ள்.) நன்று அல் காலையும் நட்பில் கோடார் சென்று வழிப்படூஉம் திரிபு இல் சூழ்ச்சியின் புல்தலை மடப்பிடி அகவுநர் பெருமகன் - *நன்மையில்லாத துன்பம் வந்தகாலத்தும் தமது நட்புப்பண்பில் மாறுபடாமல் துன்பமுற்ற அந் நண்பரிடத்தே சென்று அவர் வழிப்பட்டு அவர்க்கு நன்மையே செய்யும் பிறழாத தமது கோட்பாடு காரணமாகப் புல்லிய தலையையுடைய இளைய*

பிடி யானைகளைத் தன்னைப் பாடி வருகின்ற பாணர் தலைவனுக்கு ; அமர்வீசு வண்மகிழ் அஃதைப்போற்றி காப்புக் கை நிறுத்த பல் வேல் கோசர் - போர்க்களத்திலே பரிசிலாக வழங்குகின்ற தனது வள்ளன்மையாலே இன்புறுகின்ற அஃதை என்பவனுக்குத் துன்பம் வந்துற்ற பொழுது அதனை ஒழித்துக் காப்பாற்றிப் பின்னரும் துன்பம் வராதபடி அவனை அரணிடத்தே வைத்து அவன் உயிரை நிலைநிறுத்தி வைத்த பலவாகிய வேற்படையையுடைய கோசர் புரக்கின்ற ; இளங்கள் கமழும் நெய்தலம் செருவின் வளம் கெழு நல் நாடு அன்ன என்தோள் மணந்து - புதிய கள் மணங்கமழுகின்ற நெய்தலம் செரு என்னும் தலைநகரத்தையுடைய வளம் பொருந்திய அழகிய நாட்டையொத்த என்னுடைய தோளை மணந்து ; அழுங்கல் மூதூர் அலர் எடுத்து அரற்ற நல்காது துறந்த காதலர்- பின்னர் ஆரவார முடைய இப்பழைய ஊரில் வாழ்கின்ற பெண்டிர் எனது பழியை எடுத்துக் கொடுபோய் நாற்றிசையினும் தூற்றும்படி நமக்கு அருள் செய்யாது கைவிட்டுப்போன நம்பெருமான் ; என்க.

(வி - ம்.) நன்றல் காலை - அல்லற் காலம். சூழ்ச்சி - ஆராய்ந்து துணிந்த கொள்கை. அகவுநர் - பாணர். அமர் வீசுவண்மை - போர்க்களத்தில் வழங்கும் வண்மை. அஃதை - ஒரு மன்னன்; இவனுடன் கேண்மை கொண்டிருந்த கோசர் என்னும் வீரர் அம்மன்னனுக்குப் பகைவரால் துன்பம் வந்துற்றபொழுது அத்துன்பத்தைத் தவிர்த்துத் தமது அரணிடத்தே வைத்துக் காப்பாற்றினர் என்பது இதனாற் பெறும். நெய்தலஞ் செரு - ஓர் ஊர். இது கோசருடையது. தலைவி இவ்வூரினைத் தன் தோளுக் குவமையாகக் எடுத்தோதுகின்றாள் என்க. இக்கோசரைப் பற்றி இந்நூலில் கரு, கூ0, ககூசு, உ0ரு, உகசு, உருக, உசுஉ முதலிய பல செய்யுள்களினும் கூறப்படுகின்றது. இவர் நாடு துளுநாடு எனவும் காணப்படுகின்றது. அழுங்கல் - ஆரவாரம்.

## கூ - கஎ : என்றும்...........உம்பர்

(இ - ள்.) என்றும் கல் பொரூஉ மெலியாப் பாடு இன் நோன் அடியன் - எஞ்ஞான்றும் கல்லைப் பொருது மெலிவுறாத ஓசை இனிய வலிய அடியினை யுடையவனும் ; அல்கு வன் சுரை பெய்த வல்சியன் - மிக்க வலிய மூங்கிற் குழாயிற் பெய்த உணவினையுடையவனும்; இகந்தனவாயினும் - தன்நாட்டெல்லையைக் கடந்து சேய்மைக் கண்ண வாயினும் ; இடம் பார்த்து - கவரும் செவ்விபார்த்து ; பகைவர் ஓம்பினர் உறையும் கூழ்கெழு குறும்பில் — பகைவர் ஆவினைப் பாதுகாத்து உறையும் உணவுமிக்க அரண்களிற் சென்று; குவை இமில் விடைய வேற்று ஆ ஒய்யும் — திரண்ட இமிலையுடைய விடைகளுடன் கூடிய பகைப் புலத்து ஆக்களைக் கவர்ந்து செலுத்தும் ; கனைஇரும் சுருணை கனி காழ்

நெடுவேல் - செறிந்த கரிய பூணையும் நெய்கனிந்த தண்டையு முடைய நீண்ட வேலினையும்; விழவு அயர்ந்தன்ன கொழும் பல் திற்றி - விழாச் செய்தாலொத்த கொழுமையாகிய பல உண வையுமுடைய; எழாஅப் பாணன் நன்னாட்டு உம்பர் - பகைவர்க் குப் புறங்கொடாத பாணன் என்பானது நல்ல நாட்டிற்கு அப் பாற்பட்ட; என்க.

(வி - ம்.) கல் - உலக்கல். பாடு - ஓசை. சுரை - மூங்கிற்குழாய். இகந்தன - சேய்மைக்கண் உள்ளன. இடம் - செவ்வி. கூழ் - உணவு. சுருணை - பூண். காழ் - தண்டு. திற்றி - உணவு.

கரு - உரு : நெறிசெல்..........உரியம்

(இ - ள்.) நெறிசெல் வம்பலர்க் கொன்ற தெவ்வர் எறி படை கழீஇய சேய் - வழிப்போக்கராகிய புதியவரைக் கொன்ற ஆறலைகள்வர் அவரைக்கொன்ற படைக்கலங்களைக் கழுவியதனால் சிவந்து; அரிசில் நீர் அறு துறை அயிர் மணல் படுகரை போகி சேயர் என்றலின் - அரித் தோடுகின்ற சிலவாகிய நீர் தானும் அற்றுப் போன இறங்குதுறைக் கண்ணேயுள்ள நுண்ணிய மணலை யுடைய பெரிய கரையையும் கடந்து அப்பாற் சென்று மிகத் தொலைவின்கண் உள்ளார் என்று அறிந்தோர் கூறுதலாலே; சிறுமை உற்ற என் கை அறு நெஞ்சத்து எவ்வம் நீங்க அழாஅம் உறைதலும் உரியம் - அதுகேட்டுச் சிறுமையடைந்து செய லொழிந்து கிடக்கும் எமது நெஞ்சின்கண் உள்ள துன்பம் முழு வதும் ஒழியும்படி நீ வற்புறுத்திக் கூறுமாறு போலே, யாம் அழாமல் வாளாது உறைதற்கும் உரியேம், அங்ஙனம் உறைதற்கும் உரியேமாவேம்; அங்ஙனமிருத்தற்கு என்க,

(வி - ம்.) பாணன் - ஒரு மன்னன். வம்பலர் - புதியவர். கழீஇய - கழுவிய. அரிச்சின்னீர்-அரித்துச் சில கால்களாக ஓடும் நீர். நீரும் எனல் வேண்டிய சிறப்பும்மை தொக்கது. காதலர் பாணன் நாட்டு உம்பர் மணற் படுகரையையும் கடந்து போகிச் சேயர் ஆயினர் என இயையும். சிறுமை-துன்பம். அழாஅம் - அழாமலிருப்பேம.

தோழி காதலர் வருந்துணையும் நீ அழாமல் உறைதற்குரியள் என்றலின் அதற்குடன்பட்டு யாம் அங்ஙனம் உறைவதற்கும் உரியமே என்றவாறு.

உரு - உஎ : பராரை..............உயிரே

(இ - ள்.) பராரை அலங்கல் அம்சினை குடம்பை புல் எனப் புலம் பெயர் மருங்கின் புள் எழுந்தாங்கு - பருத்த அடிமரத்திலே கவைத்துள்ள அழகிய கிளைகளின் இடையே அமைக்கப்பட்ட

தனது கூடு பொலிவின்றிப் பாழாய்க் கிடக்கும்படி தன் மனஞ் சென்ற இடத்திற்கு அதன்கண் உறைந்த பறவை அதனைத் துறந்து பறந்து போனாற் போல; மெய் இவண் ஒழிய என் உயிர் போகி அவர் வினைசெய் மருங்கின் செலீஇயர் - எமது உடம்பு இவ் விடத்தே தனித்துக் கிடப்ப எம் உயிரானது அதனைத் துறந்து எமது காதலர் வினைசெய்யும் இடத்திற்குப் போவதாக; அங்ஙனம் போன பின்னர் யாம் ஈண்டு அழாது உறைதலும் உரியேங்காண்; என்பதாம்.

(வி - ம்.) யாம் - எம்முயிர். போனபின்னர் நீ வற்புறுத்துவது போல ஒருதலையாக அழாதுறைவேம் என்றவாறு. பராரை - பருஅரை; பராரை எனப் புணர்ந்தது. அரை - அடிமரம். குடம்பை - கூடு. புலம் - மனம். ஈண்டு. "சேக்கை மரன் ஒழியச் சேணீங்கு புட்போல யாக்கை தமர்க் கொழிய நீத்து" எனவரும் நாலடியும் (௩0) "குடம்பை தனித் தொழியப் புட்பறந் தற்றே - யுடம்போ டுயிரிடை நட்பு" (குறள் - ௩௩௮.) எனவரும் திருக்குறளும் ஒப்புநோக்குக.

இனி, இதனை—நாடன்ன என் தோள் மணந்து அலர் எடுத்தரற்ற நல்காது துறந்த காதலர் சேயர் என்றலின் என் எவ்வம் நீங்க அழாஅம் உறைதலும் உரியம் எப்பொழுதெனில் என் உயிர் மெய் இவண் ஒழியப் போகி அவர் வினைசெய் மருங்கின் செலீஇயர் அப்பொழுது; என இயைத்துக் கொள்க.

(பா - வே.) உ - திருவில் சூழ்ச்சி. ௩ - ௪. மகன், மாவிசு. பொற்றி- ௧0. ௧௬ - றித்தி.

## செய்யுள் ௧௧௪

திணை : முல்லை.

துறை : வினை முற்றி மீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

(து - ம்.) அஃதாவது—ஆள்வினை மருங்கிற் றலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் தான் மேற்கொண்ட வினை முற்றியவுடன் தலைவியைக் காண விதுப்புறுகின்ற நெஞ்சத்தை யுடையவனாய்த் தேர்ப்பாகனை நோக்கித் தேரினை விரைந்து செலுத்தும்படி கூறியது என்றவாறு.

(இ - ம்) இதற்கு—"கரணத்தின் அமைந்து முடிந்த காலை" எனவரும் (தொல். கற்பி. ரு) நூற்பாவின்கண் "பேரிசை யூர்திப் பாகர் பாங்கினும்" எனவரும் விதி கொள்க.

> கேளாய் எல்ல தோழி வேலன்
> வெறியயர் களத்துச் சிறுபல தாஅய
> விரவுவீ உறைத்த ஈர்நறும் புறவின்

உரவுக்கதிர் மழுங்கிய கல்சேர் ஞாயிறு
ரு அரவுநுங்கு மதியின் ஐயென மறையும்
சிறுபுன் மாலையும் உள்ளார் அவரென
நப்புலந் துறையும் எவ்வம் நீங்க
நூலறி வலவ கடவுமதி உவக்காண்
நெடுங்கொடி நுடங்கும் வானதோய் புரிசை
கo யாமங் கொள்பவர் நாட்டிய நளிசுடர்
வானக மீனின் விளங்கித் தோன்றும்
அருங்கடிக் காப்பின் அஞ்சுவரு மூதூர்த்
திருநகர் அடங்கிய மாசில் கற்பின்
அரிமதர் மழைக்கண் அமைபுரை பணைத்தோள்
கரு அணங்குசால் அரிவையைக் காண்குவம்
பொலம்படைக் கலிமாப் பூண்ட தேரே.

—.........

(குறிப்பு :—இதன் ஆசிரியர் பெயர் காணப்படவில்லை.)

## (உரை)

அ : நூலறி வலவ

(இ - ள்.) பாகுநூல் கற்றுத் துறைபோகிய தேர்ப் பாகனே ! என்க.

(வி - ம்.) நூல் - பாகுநூல்.

க - எ : கேளாய்...........நீங்க

(இ - ள்.) எல்ல தோழி கேளாய் - (இப்பொழுது எங் காதலி பிரிவாற்றுமையாலே தன் தோழியை நோக்கி); ஏடி தோழி ஈதொன்று கேட்பாயாக!; வேலன் வெறி அயர் களத்துத் தாய பலவிரவு வீ உறைத்த ஈர் நறும்புறவின் - வேன்மகன் முருகனுக்கு வெறியாடுகின்ற களத்தின்கண்ணே பரவிய பல்வேறுவகை மலர்களும் கலந்து கிடக்குமாறு போலே கார்ப் பருவத்தாலே வளம்பெற்ற மரமும் செடியும் கொடியுமாகிய பலவற்றினின்றும் உதிர்ந்த பல்வேறு மலர்களும் பரந்துகிடக் கின்ற குளிர்ந்த நறுமணமுடைய இம்முல்லைப் பரப்பிலே ; உரவு

கதிர் மழுங்கிய கல்சேர் ஞாயிறு அரவு நுங்குமதியின் ஐ என மறையும் - வலிய தனது ஒளி மழுங்கப்பெற்ற மறைமலையினை (அத்தகிரி) எய்துகின்ற ஞாயிற்று மண்டிலமானது பாம்பினாலே விழுங்கப்படுகின்ற திங்கள் மண்டிலம் போன்று காணப்பட்டு மெல்லென மறையாநின்ற; சிறு புல் மாலையும் — சிறுமையுடைய புல்லிய இம்மாலைப் பொழுதிலேயும்; அவர் உள்ளார் என — நம்மைப் பிரிந்து சென்ற வன்கண்ணர் நம்நிலை என்னும் என நினைந்தும் பாரார் போலும் என்று சொல்லி; நம் புலந்து உறையும் எவ்வம் நீங்க — நம்மை வெறுத்துறைதற்குக் காரண மான அவளது தனிமைத் துன்பம் நீங்கும்படி; என்க.

(வி - ம்.) தலைவன் வினைமுற்றுந்துணையும் காரியத்திலே கண்ணாய்த் தலைவியை நினையானாய் வினைமுற்றிய பின்னர்த் தலைவி இங்ஙனமிருப்பாள் எனத் தன் மனக்கண் முன்னர் அவளைக் கண்டு கூறியபடியாம்.

கார்ப்பருவத்து மாலைப்பொழுது தனித் துறைவார்க்குப் பெரிதும் துன்பஞ் செய்யுமியல்பிற்றாதலின் அந்தப் பொழுதினையே நினைக் கின்றனன்.

இது கார்ப்பருவம் என்பது முல்லைநிலத்து மரம் முதலியன பெரிதும் மலர்ந்து யாண்டும் மலர்களை உதிர்ப்பதனால் அறியப்படும். முல்லைப் பரப்பின்கண் யாண்டும் பல்வேறு மலர்கள் உதிர்ந்து கிடப்ப தற்கு மலர் சிதறப்பட்ட வெறியாடுங் களம் உவமை. உரவுக்கதிர் என்றான் - வெயிற் கதிர் ஆகலின். கதிர் மழுங்கிய ஞாயிற்று மண்டிலத் திற்குத் திங்கள் மண்டிலம் உவமை. அது மெல்ல மெல்ல மலையில் மறைவதற்கு அரவு விழுங்குதல் உவமை. ஐயென - மெல்லென. கண்டோர் வியக்கும்படி எனினுமாம்.

அ - கரு: நெடுங்கொடி.........தேரே

(இ - ள்.) நெடுங் கொடி நுடங்கும் வான்தோய் புரிசை யாமம் கொள்பவர் நாட்டிய நளி சுடர் - நெடிய கொடித் துகில்கள் அசையா நின்ற வானத்தைத் தீண்ட உயர்ந்த மதி லிடத்தே யாமந்தோறும் மாறி மாறி நின்று விழிப்புடன் காவல் செய்யுந் தொழிலை மேற்கொண்ட மறவர் அம் மதிலுச்சியிலே ஏற்றி வைத்த ஒளிநெருங்கிய விளக்குகள்; வானக மீனின் விளங்கித் தோன்றும் - விண்ணிடத்தே விளக்கமுறுகின்ற மீன் களைப் போன்று விளங்கித் தோன்றுதற்கிடனான; அருங் கடிக் காப்பின் அஞ்சுவரும் மூதூர் - கிட்டுதற்கரிய சிறப்பான காவ லமைந்த பகைவர்க்கு அச்சம் வருதற்குக் காரணமான பழைய நமதூரின்கண்ணே; திரு நகர் அடங்கிய மாசு இல் கற்பின் - அழகிய நந்தமில்லத்தினூடே நாம் பணித்தபடியே அடங்கி

யிருக்கின்ற குற்றமற்ற கற்பினையும்; அரி மதர் மழைக்கண் அமை புரை பணைத்தோள் அணங்குசால் அரிவையைக் காண்குவம் — செவ்வரியோடிய மதர்த்த குளிர்ந்த கண்ணையும் மூங்கில்போன்ற தோளையும் பிரிவாற்றுமையாகிய துன்பத்தையும் உடைய எங் காதலியை இற்றை மாலைப்பொழுதிலேயே யாம் சென்று காண்பேம்; என்க.

(வி - ம்.) யாமந்தோறும் காவல் கொள்பவர் என்க. சுடர் - விளக்கு. மதிலின்மேலிட்ட விளக்கு விண்மீன் போன்று விளங்கித் தோன்றும் என்க. திருநகர் - அழகிய வீடு. அவள் கண் முதலிய உறுப்புக்களை அகக்கண் முன்னர்க் கண்டு அவற்றை விதந்து கூறியவாறு.

அ: உவக்காண்..........உங்கே

(வி - ம்.) உவக்காண், இவக்காண் என்பன ஒட்டிநின்ற இடைச் சொல் என்பர் பரிமேழலகர் (குறள் - ககஅரு.) உங்கே எனவே பொருள் கூறினர். ஈண்டுத் தலைவன் தேர் செல்லவேண்டிய வழியைச் சுட்டிக் கூறியபடியாம்.

கசு: பொலம்..........தேரே

(இ - ள்.) பொலம் படைக் கலிமா பூண்ட — பொன்னு லியன்ற பல்லணம் பூண்ட சிறந்த குதிரைகள் பூட்டப்பட்ட; தேர் - நமது தேரினை (அ) கடவுமதி - இப்பொழுதே விரைந்து செலுத்துவாயாக! என்பதாம்.

(வி - ம்.) பொலம்படை - பொன்னாலியன்றதொரு குதிரை யணி கலன். மதி: முன்னிலையசை.

இனி, இதனை, வலவ எங்காதலி என் தோழியை நோக்கித் தோழி நம்பெருமான் சிறுபுன்மாலையும் உள்ளார் என நப்புலந்துறையும் எவ்வம் நீங்க மூதூரில் நகர் அடங்கிய அவ்வரிவையைக் காண்குவம் தேர் கடவு என இயைத்துக் கொள்க.

(பா. வே.) உ. களந்தோ றுறுபல. கக. வானமீனின் (வருகின்ற).

## செய்யுள் ககரு

திணை: பாலை.

துறை: பிரிவிடை வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல் லியது.

**துறை :** அஃதாவது—தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் சென்ற தலைவன் குறித்த பருவத்து வாராமற் கால நீட்டித்தவழிப் பிரிவாற்றுது பெரிதும் வருந்துந் தலைவியைத் தோழி அவர் வருமளவும் ஆற்றியிருத்தலே நின்கடனும் என வற்புறுத்திய பொழுது தலைவி அவட்கு மாறு கூறி வருந்துவாள் சொல்லியது என்றவாறு.

(இ - ம்.) இதனை, "அவனறிவாற்ற அறியுமாகலின்" எனவரும் நூற்பாவின்கண் (தொல். கற்பி. சூ.) 'ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்' என்பதனுலமைத்திடுக.

அழியா விழவின் அஞ்சுவரு மூதூர்ப்
பழியிலர் ஆயினும் பலர்புறங் கூறும்
அம்பல் ஒழுக்கமும் ஆகிய வெஞ்சொற்
சேரியம் பெண்டிர் எள்ளினும் எள்ளுக
ரு நுண்பூண் எருமை குடநாட் டன்னஎன்
ஆய்நலம் தொலையினும் தொலைக என்றும்
நோயில ராகநம் காதலர் வாய்வாள்
எவ்வி வீழ்ந்த செருவிற் பாணர்
கைதொழு மரபின்முன் பரித்திடூஉப் பழிச்சிய
க0 வள்ளுயிர் வணர்மருப் பன்ன ஒள்ளிணர்ச்
சுடர்ப்பூங் கொன்றை ஊழுறு விளைநெற்று
அறைமிசைத் தாஅம் அத்தம் நீளிடைப்
பிறைமருள் வான்கோட் டண்ணல் யானைச்
சினமிகு முன்பின் [1]வாமான் அஞ்சி
கரு இனங்கொண் டொளிக்கும் அஞ்சுவரு கவலை
நன்னர் ஆய்கவின் தொலையச் சேய்நாட்டு
நந்நீத் துறையும் பொருட்பிணிக்
கூடா மையின் நீடி யோரே.

—மாமூலனார்.

(உரை)

க - சூ: அழியா.........தொலைக

(இ - ள்.) அழியா விழவின் அஞ்சுவரும் மூதூர் பழி இலர் ஆயினும் பலர் புறம் கூறும் அம்பல் ஒழுக்கமும் ஆகிய வெம் சொல் சேரிப் பெண்டிர் - ஒழிவில்லாத திருவிழாவினையுடைய

நல்லோர் வாழ்தற்கு அச்சம் உண்டாதற் கிடனுனதுமாகிய இந்தப் பழைய ஊரிடத்தே குற்றம் சிறிதுமில்லாதவராயினும் அவரிடத்தும் குற்றமேற்றிப் பலரிடமும் சென்று புறங்கூறித் திரியும் கரந்த வொழுக்கத்தையும் அதன் வழித்தாகப் பிறக்கின்ற இன்னுச் சொல்லையும் இயல்பாக உடையவராகிய இத் தெருவில் உள்ள கொடிதறி மகளிர்; எள்ளினும் எள்ளுக - என்னை இகழினும் இகழ்ந்திடுக; நுண்பூண் எருமை குடநாட்டன்ன என் ஆய் நலம் தொலையினும் தொலைக - நுட்பமான தொழிற்றிறன் அமைந்த அணிகலன்களை அணிந்த எருமை என்பவனது குடநாட்டினை யொத்த எனது அழகின் நன்மை ஒழியினும் ஒழிக; என்க.

(வி - ம்.) அழியா - ஒழிவில்லாத. நல்லோர் வாழ்தற்கு அஞ்சுகின்ற மூதூர் என்க. அம்பல் ஒழுக்கம் - கரந்த ஒழுக்கம். வெஞ்சொல் - இன்னுமையுடைய புறங்கூறும் சொல். எருமை: குடநாட்டை யாளும் ஒரு மன்னன். அந்நாட்டின் அழகு தலைவியின் அழகுக்குவமை.

எ – கரு: வாய்வாள்..... ...கவலை

(இ - ள்.) வாள்வாய் எவ்வி வீழ்ந்த செருவின் - வாட்போரில் பொய்த்தலின்றிப் பகைவரைக் கொன்று அப் போரின்கண் தானும் விழுப்புண்பட்டு வீழ்ந்த எவ்வி என்னும் வள்ளலை அப்போர்க் களத்திலே; முன் பாணர் பரிந்து இடுஉக் கைதொழுமரபின் பழிச்சிய வள் உயிர் வணர் மருப்பு அன்ன - இச்செய்தி கேட்கும் முன்பு ஒடித்து நிலத்தில் எறிந்து தமது கையால் தொழுகின்ற முறைமையினோடு வாழ்த்திய வளவிய இசையினையுடைய வளைந்த யாழினது கோடுகளைப்போல; ஒள் இணர் சுடர்ப்பூங் கொன்றை ஊழ் உறு விளை நெற்று அறை மிசைத் தாஅம் அத்தம் நீள்இடை - ஒள்ளிய கொத்துக்களையுடைய விளக்குப் போன்ற மலரையுடைய கொன்றையின்கண் ஊழ்த்து முற்றிய நெற்றுக்கள் கற்பாறைமீது பரவலாக உதிரும் சுரத்தின் நீண்ட நெறியிலுள்ள; பிறைமருள் வால்கோட்டு அண்ணல் யானை சினமிகு முன்பின் வாமான்அஞ்சி - இளம் பிறை போன்ற வெள்ளிய கொம்புகளையும் தலைமைத் தன்மையையும் உடைய யானைப் படைகளையும் வெகுளி மிகுதற்குக் காரணமான ஆற்றலையுடைய குதிரைப் படைகளையுமுடைய அதிகமா னெடுமானஞ்சி என்னும் பேரரசன்; இனங்கொண்டு ஒளிக்கும் அஞ்சுவரு கவலை - தன் பகைவருடைய ஆனிரையைக் கைக் கொண்டு மறைத்து வைத்தற்கிடனுன அச்சம் உண்டாகின்ற கவர்த்த வழியிலே, என்க.

(வி - ம்.) வாள்வாய் வீழ்ந்த எவ்வி என மாறுக. வாள்வாய் வீழ்தல் ஒரு போர்த்துறை. இதை வாள்வாய்த்துக் கவிழ்தல் என்பர் ஆசிரியர் தொல்காப்பியனார் (புறத் - கூ.) "அஃதாவது வாட்டொழிலில் பொய்த்தலின்றி மாற்றோரைக் கொன்று தானும் வீழ்தல்," எனப் பொருள் கூறி

"ஆடும் பொழுதி னறுகயிற்றுப் பாவைபோல்
வீடுஞ் சிறுவன்றாய் மெய்ம்மகிழ்ந்தாள்—வீடுவோன்
வாள்வாயின் வீழ்ந்த மறவர்தந் தாயரே
கேளா வழுதாா கிடந்து"

எனவரும் வெண்பாவையும் காட்டுவர் (நச்சி )

வள்ளுயிர் - யாழ். யாழின்கண் மாதங்கி என்னும் இசைத் தெய்வம் உறையும் என்பது பறறி, அது கை தொழும் மரபினை உடைத்தாயிற்று. பரித்திடுதல்-ஒடித் தெறிதல். எவ்வி என்னும் வள்ளல் இறந்துபட்டான் எனக் கேட்டவுடன் பாணர்கள் ஒருங்கு கூடித் தத்தம் யாழின் கோடுகளை ஒடித்தெறிந்தனர் என்க அக்கோடுகள் கொன்றை நெற்று உதிர்ந்து கிடத்தற்கு உவமை வாமான் - குதிரை. அஞ்சி - அதிகமானெடுமானஞ்சி. இனம் - ஆனிரை.

கசு - கரு : நன்னர்..........நீடியோரே

(இ - ள்.) நன்னர் ஆய்கவின் தொலைய சேய்நாட்டு நம் நீத்து உறையும் - நன்மை பொருந்திய கண்டோர் ஆராய்ந்து காணத்தகுந்த நமது பேரழகு அழிந்து போம்படி தொலைவிலுள்ள வேற்று நாட்டின்கண் சென்று நம்மைக் கைவிட்டு வதிகின்றவரும்; பொருள்பிணிகூடாமையின் நீடியோர் - தாம் விரும்பிய பொருளீட்டம் கை கூடாமையாலே தாம் குறித்த பருவம் கடந்தும் காலந்தாழ்த்திருப்பவரும் ஆகிய, என்க.

(வி - ம்.) ஆகிய (எ) நம்காதலர் என இயையும்

கூ - எ : என்றும்.........காதலர்

(இ - ள்) என்றும் நம் காதலர் — எஞ்ஞான்றும் நம்மால் காதலிக்கப்பட்ட நம்பெருமான்; நோய் இலர் ஆக - துன்பம் சிறிது மிலராய் நீடூழி வாழ்வாராக என்பதாம்.

(வி - ம்.) யாம் இன்றே இறந்தொழியினும் ஒழிக என்பது படக் காதலர் என்றும் நோயிலராக என்று வாழ்த்தினள் "இது நம்மை அறனன்றித் துறத்தலின் தீங்கு வருமென்றஞ்சி வாழ்த்தியது; நம் பொருட்டுத் தீங்கு வருமென்று நினைத்தலின் வழுவாயமைந்தது," என்பர் நச்சினார்க்கினியர் (தொல். பொருள் உசசு.) அவர் நம்மைக் காதலித்திலர் என்பது பட நம் காதலர் என்றாள்.

இது யான் இறந்து படுவேன் எனத் தலைவி வன்புறை எதிரழிந்தவாறு என்க.

இனி இதனை - தோழி எம்மை, பெண்டிர் எள்ளினும் எள்ளுக நலம் தொலையினும் தொலைக அஞ்சுவருகவலை கவின் தொலையச் சேய்நாட்டு நீடியோர் நம் காதலர் என்றும் நோயிலராக என இயைத்துக் கொள்க.

பா - வே.) கசு. வயமானஞ்சி' கச - கரு - யானை, சினமிகு முன் பின் வயமான் அஞ்சி என்பது பாடமாயின் யானை சிங்கத்திற்கு அஞ்சித் தனது இனத்தை அழைத்துக்கொண்டு ஓடி மறைக்கும் எனப் பொருள் கூறுக.

## செய்யுள் ககசுசு

திணை : மருதம்.

துறை : தோழி தலைமகனை வாயில் மறுத்தது.

(து - ம்.) அஃதாவது - தலைவன் பரத்தை யொருத்தியொடு நீராடியவன் இல்லத்திற்கு வந்த பொழுது தலைவி ஊடியிருப்ப, அவன் தலைவியை ஊடல் தீர்த்துத் தன்னொடு கூட்டும்படி தோழியை வாயில் வேண்டினனாக, அவள் அச்செய்தியைத் தாம் அறிந்தமை கூறி அவன் வேண்டுகோளை மறுத்துச் சொல்லியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு — 'பெறற்கரும் பெரும் பொருள்'' எனவரும் நூற்பாவின்கண் (தொல்-கற்பி. கூ.) புறம்படு விளையாட்டுப் புல்லிய புகற்சியும் எனவரும் விதிகொள்க.

எரியகைந் தன்ன தாமரை யிடையிடை
அரிந்துகால் குவித்த செங்நெல் வினைஞர்
கட்கொண்டு மறுகுஞ் சாகா டளற்றுறின்
ஆய்கரும் படுக்கும் பாய்புனல் ஊர
ரு　பெரிய நாணிலை மன்ற பொரியெனப்
புன்கவிழ் அகன்றுறைப் பொலிய ஒண்ணுதல்
நறுமலர்க் காண்வருங் குறும்பல் கூந்தல்
மாழை நோக்கிற் காழியல் வனமுலை
எஃகுடை எழில்நலத் தொருத்தியொடு நெருநை
கo　வைகுபுனல் அயர்ந்தனை யென்ப அதுவே
பொய்புறம் பொதிந்தியாம் கரப்பவும் கையிகந்து
அலரா கின்றால் தானே மலர்தார்
மையணி யானை மறப்போர்ச் செழியன்
பொய்யா விழவின் கூடற் பறந்தலை

கரு உடனியைந் தெழுந்த இருபெரு வேந்தர்
கடல்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி
இரங்கிசை முரசம் ஒழியப் பரந்தவர்
ஓடுபுறம் கண்ட ஞான்றை
ஆடுகோள் வியன்களத் தார்ப்பினும் பெரிதே.

—பரணர்.

## (உரை)

க - ச: எரியகை.........ஊர

(இ - ள்.) எரி அகைந்து அன்ன தாமரை இடை இடை செந்நெல் அரிந்து கால் குவித்த வினைஞர் - தீயானது கொழுந்து விட்டாற் போன்ற தாமரை மலர்களுக்கு இடையே இடையே விளைந்த சிவந்த நெற்கதிரை அரிந்து ஓர் இடத்தே குவித்த உழவர்; கள்கொண்டு மறுகுஞ் சாகாடு அளறு உறின்-தமக்குக் கள்ளேற்றிக் கொணருகின்ற சகடம் சேற்றின்கண் வந்துற்றால்; ஆய் கரும்பு அடுக்கும் பாய் புனல் ஊர - அதன் உருள்கள் சேற்றில் அழுந்தாத படி அழகிய கருப்பங்கோல்களை முறித்து அடைகொடுத்தற் கிடனான நன்கு நீர் பாய்கின்ற ஊரையுடைய தலைவனே, என்க.

(வி - ம்.) இதன்கண்—''சகடு சேற்றில் அழுந்தும் பொழுது அதன் உருளைகளைத் தாங்கும் வலிமை யில்லாத கரும்புகளை அடைகொடுப்பது போல் நின்னிடம் ஊடல் கொண்டு பெரிதும் துன்பத்தில் அழுந்துகின்ற தலைவியை ஊடல் தீர்க்கும்படி அவள் சினத்திற்கு அஞ்சுகின்ற அடிச்சியை வாயில் வேண்டுகின்றனை! அச்செயல் என்னால் இயலாத தொன்று காண்'' என நுண்ணிதின் தோழி உள்ளுறுத்தமை உணர்க.

ரு - கo: பெரிய.........என்ப

(இ - ள்.) பெரிய நாண் மன்ற இலை - நீதானும் மாந்தர் சிறப்புக்களுள் பெரிய சிறப்புப் பண்பாகிய நாணம் என்னும் அப்பண்பினைத் தேற்றமாக உடையை அல்லைகாண்! எற்றாலெனின்; பொரியெனப் புன்கு அவிழ் அகல் துறை பொலிய - நெல்லினது பொரியைப் போல் புன்க மரம் மலர்கின்ற யாற்றினது அகன்ற நீராடுதுறை பொலிவுறும்படி; நெருநை ஒள்நுதல் நறுமலர் காண்வரும் குறும் பல் கூந்தல் மாழை நோக்கின் காழ் இயல் வனமுலை எஃகுடை எழில் நலத்து ஒருத்தியொடு - நேற்று ஒளி யுடைய நெற்றியையும் நறிய மலரணிந்த பலரும் காணுதற்கு

அவாவும் குறிய பலவாகிய கூந்தலையும் மடப்ப முடைய நோக்கத்தினையும் முத்துவடம் அசைகின்ற அழகிய முலையினையும் கூர்மையுடைய எழுச்சியாகிய இளமையழகினையும் உடையாளாகிய ஒரு பரத்தை மகளோடு; வைகுபுனல் அயர்ந்தனை யென்ப - குளிர்ச்சிதங்கிய நீரின்கண் விளையாடினை என்று அறிந்தோர் எம்பால் வந்து கூறுநிற்பர், என்க.

(வி - ம்.) மக்கள் பண்புகளுள் நாணுடைமை மிகவும் சிறப்புடையதாகலின் அதனைப் பெரியநாண் என்றாள். இதனை :- ''ஊணுடையெச்சமுயிர்க்கெல்லாம் வேறல்ல நாணுடைமை மாந்தர் சிறப்பு'' (க0கஉ.) எனவரும் திருக்குறளானும் உணாக. மன்ற, தேற்றத்தின்கண் வந்தது. பொறி - தெற்பொறி; இது புன்கம் பூவிற்குவமை. இங்ஙனம் பலரும் அறியும்படி பரத்தை மகளோடு விளையாடுதல் நின் சான்றாண்மைக்குப் பொருந்தாத செயல் ஆகவும் அது செய்தனை யாகலின் நீ மன்ற நாணிலை என்றவாறு. காண்வரும் - காணுதற்கு அவா வரும். மாழை-பேதைமை. ஈண்டு மடம் என்க. இனி, அழகு எனினுமாம். காழ் முத்துவடம். எஃகு - கூர்மை. எழில் - எழுச்சி. இதனை ஆசிரியர் நச்சினார்க்கினியர் ''வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்துமாறியதன்றி இன்னும் வளருமென்பது போன்று காட்டுதல்'' என்பர். ஒருத்தி என்பது ஒரு பரத்தை மகள் என்பதுபட நின்றது. நெருநை - நேற்று.

கஉ - கக: மலர்தார்............பேரிதே

(இ - ள்.) மலர்தார் மை அணி யானை மறப்போர்ச் செழியன் பொய்யா விழவின் கூடல் பறந்தலை - மலர்ந்த பூமாலையையும் மை கொண்டு அழகு செய்த யானையையும் மறத்தன்மை மிகுந்த போர்த் தொழிலையுமுடைய பாண்டியனுடைய ஒரு நாளும் ஒழிதலில்லாத திருவிழாக்களையுடைய மதுரை நகரத்தின் பக்கத்திலுள்ள போர்க்களத்திலே; உடன் இயைந்து எழுந்த இரு பெருவேந்தர் கடல் மருள் பெரும் படை கலங்கத் தாக்கி — தம்முள் ஒருங்கு கூடித் தன்மேல் போரிடுதற்கு எழுந்து வந்த சேரனும் சோழனுமாகிய இரண்டு முடி மன்னர்களும் அவருடைய கடல்போன்ற பெரிய படைகளும் கலக்க மெய்தும்படி அவரோடு போர்செய்து; இரங்கு இசை முரசம் ஒழியப் பரந்து அவர் ஓடும் புறங்கண்ட ஞான்றை - முழங்குகின்ற தம்முடைய போர்முரசங்களைக் கைவிட்டு நாற்றிசையினும் பரவி அம்மன்னர் தம் படைகளோடு ஒடுங்கால் அவர் தம்மைப் புறங்கண்ட பொழுது; ஆடு கொள் வியன் களத்து ஆர்ப்பினும் பெரிது - அப்பாண்டிய மன்னன் வெற்றிகொண்ட அகன்ற அப்போர்க்களத்தின்கண் எழுந்த ஆரவாரத்தினும் காட்டில் மிகவும் பெரிதாக என்க.

(வி - ம்.) செழியன் - பாண்டியன். கூடல் - மதுரை. இருபெருவேந்தர்- சேர சோழர்கள். அவர் - அம்மன்னரிருவரும். ஆடு - வெற்றி.

ஆர்ப்பு - வென்ற மறவரின் ஆரவாரம். ஆர்ப்பினும் பெரிது. (கக) அலரா கின்று என இயையும்

### கo - கஉ: அதுவே..........தானே

(இ – ள்.) அதுவே பொய் புறம் பொதிந்து யாம் கரப்பவும் - அங்ஙனம் எம்மிடத்தே கூறிய அந்தப் பழியை யாங்கள் பொய்யென்று மறுத்து எமது சொல்லாகிய போர்வையால் புறத்தே மூடி யாங்கள் எம்மால் இயலு மளவும் மறையாநிற்பவும்; கை இகந்து தானே அலர் ஆகின்று - எம்முயற்சியையும் கடந்து அதுதானே யாண்டும் அலராகப் பரவுகின்றது காண்! ஆதலால் நினது வேண்டுகோளின்படி யான் நினக்கு வாயில் நேருமாறில்லை என்பதாம்.

(வி - ம்.) அது - அப்பழிச்சொல். பொய் என்று கூறிப் புறம் பொதிந்து என்க. கை இகத்தல் - முயற்சியைக் கடந்து போதல். ஆதலால் யான் நினக்கு வாயில் நேருமாறில்லை என்பது குறிப்புப் பொருள்.

இனி இதனை - ஊர நீ மன்ற நாணிலை எற்றுலெனின் நீ நெருநை ஒருத்தியொடு புனலயர்ந்தனை யென்ப, செழியன் ஆடுகொள் களத்து ஆர்ப்பினும் பெரிது; அதுபொய் என யாம் கரப்பவும் தானே அலரா கின்று என இயைத்துக்கொள்க.

(பா - வே.) உ. விளைஞர். எ - கூழை. அ - காழின். கூ - நெருதல். கக - யான்கரப்பவுங்கைகடந்.

## செய்யுள் கககா

திணை : பாலை

துறை : மகட் போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

(து - ர்.) அஃதாவது — களவொழுக்கத்தின்கண் இடையூறுகள் பற் பல தோன்றினமையால் தலைவன் தோழியை வாயிலாகக் கொண்டு தலைவியின் சுற்றத்தார் அறியாதபடி தன்னுடன் அழைத்துக் கொண்டு போயினன்; இச்செய்தியை அறிந்த செவிலித்தாய் தலைவியை நினைந்து வருந்திச்சொல்லியது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு—''எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இலவே'' எனவரும் (தொல் - அகத் - சஉ.) விதிகொள்க.

மௌவலோடு மலர்ந்த மாக்குரல் நொச்சியும்
அவ்வரி அல்குல் ஆயமும் உள்ளாள்
ஏதிலன் பொய்ம்மொழி நம்பி ஏர்வி(னை)
வளங்கெழு திருநகர் புலம்பப் போகி
௫ வெருவரு கவலை ஆங்கண் அருள்வரக்
கருங்கால் ஓமை யேறி வெண்டலைப்
பருந்துபெடை பயிரும் பாழ்நாட் டாங்கண்
பொலங்தொடி தெளிர்ப்ப வீசிச் சேவடிச்
சிலம்புநக இயலிச் சென்றஎன் மகட்கே
க௦ சாந்துளர் வணர்குரல் வாரி வகைவகுத்து
யான்போது துணைப்பத் தகரம் மண்ணாள்
தன்னோ ரன்ன தகைவெங் காதலன்
வெறிகமழ் பன்மலர் புனையப் பின்னுவிடச்
சிறுபுறம் புதைய நெறிபுதாழ்ந் தனகோல்
க௫ நெடுங்கால் மாஅத் தூழுறு வெண்பழம்
கொடுந்தாள் யாமை பார்ப்போடு கவரும்
பொய்கை சூழ்ந்த பொய்யா யாணர்
வாணன் சிறுகுடி வடாஅது
தீநீர்க் கான்யாற்று அவிரறல் போன்றே.

*குறிப்பு:— (ஆசிரியர் பெயர் காணப் படவில்லை)*

## (உரை)

க - கூ: மௌவலோடு........மகட்கே

(இ - ள்.) மௌவலொடு மலர்ந்த மாக்குரல் நொச்சியும் அ வரி அல்குல் ஆயமும் உள்ளாள் - அந்தோ தான் வளர்த்த முல்லைப் பூவினோடு தான் விளையாடுகின்ற கரிய பூங்கொத்தினை யுடைய நொச்சியினது நிழலையும் அந்த நீழலின்கண் அழகிய வரிகளையுடைய அல்குலையுடைய தன் தோழிமாரையும் நினையாதவளாய்; ஏதிலன் பொய்ம்மொழி நம்பி - பிறன் மகன் ஒருவன் கூறிய பொய்யாய மொழிகளை உண்மை மொழியென்று நம்பி; ஏர் வினை வளம் கெழு திருநகர் புலம்பப்போகி - அழகிய சிற்பத் தொழிலமைந்த வளம் பொருந்திய அழகிய எம்மில்லம் தனித்துக் கிடப்ப அவன் பின்னர்ச்சென்று; வெருவரு கவலை ஆங்கண்,

வெள்தலை பருந்து கருங்கால் ஓமை ஏறி அருள்வரப் பெடை பயிரும் பாழ் நாட்டு ஆங்கண் – அச்சம் வருதற்குக் காரணமான கவர்த்த வழியையுடைய அப்பாலை நிலத்தே வெள்ளிய தலையை யுடைய பருந்து கரிய அடியினையுடைய ஓமை மரத்தின் மேல் ஏறி இருந்து தன் பெடைப் பருந்திற்கு இரக்கமுண்டாகும்படி அதனை விளிக்கின்ற பாழ்பட்டுக் கிடந்த நாடாகிய அவ்விடத்தே; பொலம் தொடி தெளிர்ப்ப வீசி சே அடி சிலம்பு நக இயலிச் சென்ற என் மகட்கு - தன் கைகளைப் பொன்னாலியன்ற வளையல் கள் ஒலிக்கும்படி வீசித் தன் சிவந்த அடிகளில் அணிந்த சிலம்புகள் வெயிலொளியால் சிரிப்பன போல விளங்கும்படி நடந்து சென்ற என்னுடைய மகளுக்கு, என்க.

(வி - ம்.) மௌவல் - முல்லை. இது தலைவி நட்டு வளர்த்த முல்லை. மாக்குரல் - கரிய பூங்கொத்து. நொச்சியின் நீழலில் அவள் விரும்பி ஆடு வாள் என்பது பற்றி அதனையும் நினையாமை கூறினள். ஆயம் தோழியர் குழு. தலைவனை இன்னன் என அறியாமை பற்றி ஏதிலன் என்றாள். ஏர் வினை - சிற்பம் முதலிய கலைத்தொழில். அவள் போயபின் வீடு வெச் சென்று கிடத்தலின் திருநகர் புலம்ப என்றாள்.

கருங்காலோமை ஏறி வெண்டலைப்பருந்து என்புழிச் செய்யுளின்பம் உணர்க. பயிர்தல் - அழைத்தல். முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து பாலை என்பதோர் படிவம் கொள்ளலின் அதனையும் பாழ் நாடு என்றாள் நின் மகள் ஏதிலானோடு கைவீசிக் களிப்புடன் சென்றாள், எனக் கண்டோர் கூறக்கேட்டமை தோன்றப் பொலந்தொடி தெளிர்ப்ப வீசிச் சேவடிச் சிலம்புநக இயலிச்சென்ற மகள் என்றாள். சிலம்பு நகலாவது வெயிலொளி பட்டுச் சிரிப்பது போல விளங்குதல்.

## ௧௦ - ௧௧: சாந்துளர்.........போன்றே

(இ – ள்.) சாந்து உளர் வணர்குரல் வாரி வகை வகுத்து யான் போது துணைப்ப – நறுமணச்சாந்தை விரலில் தோய்த்துக் கோதப்பெற்ற வளைந்த கொத்தாகிய கூந்தலை வாரி விட்டு அவற்றைக் கால்காலாக வகுத்து யான் மலர்களை அவற்றிடையே சேர்ப்பதற்கு; தகரம் மண்ணாள் - மயிர்ச் சந்தனத்தைப் பூசிக்கொள்ளவும் மறுக்கின்றவள்; தன் ஓரன்ன தகை வெம்காதலன் - தன்னோடு ஒருபடித்தான அழகையும் விருப் பத்தையுமுடைய தன் காதலனாகிய அந்த ஏதிலான் தாம் செல் லும் வழியிற் கிடைத்த; வெறிகமழ் பல் மலர் புனையப்பின்னு விட - குரவும் மராஅமும் பாதிரியும் ஆகிய நறுமணங்கமழும் பாலைநிலத்துப் பல்வேறு மலர்களையும் சூட்டுதற் பொருட்டுத் தன் கூந்தலைக் கை செய்து பின்னலாகப் பின்னி விடா நிற்ப; நெடுங் கால் மாஅத்து ஊழ் உறு ஒள் பழம் கொடுந்தாழ் யாமை பார்ப்

பொடு கவரும் பொய்கை சூழ்ந்த - நீண்ட அடியையுடைய மாமரத்தின் கண் கனிந்து காம்புவிட்ட ஒள்ளிய பழத்தை வளைந்த கால்களையுடைய யாமையும் அதன் பார்ப்பும் கவர்ந்து தின்னுதற்கிடனான நீர்நிலைகளால் சூழப்பட்ட; பொய்யா யாணர் வாணன் சிறுகுடி வடாஅது தீம்நீர் கான்யாற்று அவிர் அறல் போன்று — ஒருநாளும் பொய்யாத புதுவருவாயையுடைய வாணன் என்னும் வள்ளலுடைய சிறு குடி என்னும் ஊருக்கு வடபால் உள்ள இனிய நீரையுடைய காட்டாற்றின்கண் விளங்குகின்ற கருமணல் போன்று; சிறுபுறம் புதைய நெறிபு தாழ்ந்தன கொல் - அவளுடைய சிறிய பிடர் மறையும்படி அறல்பட்டு அப்பின்னல்கள் தாழ்ந்து தொங்கினவோ அறிகின்றிலேன்; என்பதாம்.

(வி - ம்.) சாந்து - கலவைச் சாந்து. உளர்தல் - விரலால் கோதுதல். யான் போது துணைப்பத் தகரம் மண்ணுதற்கும் மறுப்பவள், இப்பொழுது தன்காதலன் பின்னி விடுந்துணையும் பொறுத்திருப்பள் போலும்; அவன் பின்னிய பின்னல்கள் அவளுடைய சிறுபுறம் புதையத் தாழ்ந்து கிடக்குங் கொல் என்றவாறு. இது செவிலி தன்மகள் காதலனுடன் செல்வதனையும் அவன் அவளுக்குக் கூந்தல் பின்னுவதையும் செல்லும் நெறியிலுள்ள பாலை நிலத்துப் பல்வேறு மலர்களையும் அவள் கூந்தலில் சூட்டுதலையும் தன் அகக்கண்முன்னர்க் கண்டு கூறிய படியாம்.

இனி, இதன்கண் கரையின்கண் உயர்ந்து நிற்கின்ற தேமாவின் இனிய பழத்தைத் தொடர்பில்லாத பொய்கையில் வாழும் யாமையும் அதன் பார்ப்பும் கவர்ந்து தின்றாற் போல எம்மொடு தொடர்பில்லாத ஏதிலான் ஒருவன் உயர்குடிப்பிறப்பினளாகிய என்மகளைக் கவர்ந்து கொடுபோய்த் தன் சுற்றத்தாரோடு அவள் நற்குணங்களை நுகரா நிற்பன்; யாம் அக்கனி வீழப்பெற்ற மரம் போல வறிதே நிற்பேமாயினேம் என உள்ளுறை காண்க.

வெண் பழம் என்றும் பாடம். அது சிறப்பில்லாப் பாடம்.

இனி, இதனை நொச்சியினையும் ஆயத்தினையும் நினையாளாய். ஏதிலன் பொய்மொழி நம்பி, நகர் புலம்பப்போகி பாழ் நாட்டாங்கண் வீசியும், இயலியுஞ் சென்ற என் மகட்கு யான் போது துணைப்பத் தகரமும் மண்ணுள் தன் காதலன் பின்னுவிட, அவள் கூந்தல் வாணன் சிறுகுடி வடாஅது கான் யாற்று அறல் போன்று சிறுபுறம் புதைய நெறிபு தாழ்ந்தன கொல் என இயைத்துக் கொள்க.

(பா. வே.) ௧௦ - வன்குரல். ௧௮ - பண்ணன்.

## செய்யுள் ௧௧௮

**திணை :** குறிஞ்சி.

**துறை :** செறிப்பறிவுறீஇ இரவும் பகலும் வாரலென்று வரைவு கடாஅயது.

(து - ம்.) அஃதாவது—தலைவன் நாள்தோறும் பகற்குறியிடத்தே வந்து வந்து மீள்பவனாக, வரைந்து கோடலில் அவனுக்குக் கருத்தின்மை யறிந்த தோழி அவனை வரைவு முடுக்குதற் பொருட்டு ஒருநாள் பகற்குறி யிடத்தே தமியளாய் வந்து எதிர்ப்பட்டு தலைவி தினை காவல் ஒழிந்தமையும் சுற்றத்தார் அவளை இற்செறித்தமையும் கூறிப் பகற்குறி மறுத்து ஆற்றது தீமை அறிவுறுத்து இரவுக்குறியு மறுத்துத் தலைவி நின்னை இன்றி உயிர் வாழாள் என அவளது பிரிவாற்றாமையும் கூறிப் பல்லாற்றானும் வரைவு கடாயது என்றவாறு.

(இ - ம்.) இதற்கு—"நாற்றமும் தோற்றமும்" எனவரும் (தொல் - களவி - உக.) நூற்பாவின்கண் களனும் பொழுதும் வரைநிலை விலக்கி.........அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும் என வரும் விதி கொள்க.

கறங்குவெள் அருவி பிறங்குமலைக் கவாஅன்
தேங்கமழ் இணர வேங்கை சூடித்
தொண்டகப் பறைச்சீர் பெண்டிரோடு விரைஇ
மறுகிற் றூங்கும் சிறுகுடிப் பாக்கத்து
ரு இயன்முரு கொப்பினை வயநாய் பிற்படப்
பகல்வரிற் கவ்வை அஞ்சுதும் இகல்கொள
இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்
பெருங்கை யானைக் கோள்பிழைத் திரீஇய
அடுபுலி வழங்கும் ஆரிருள் நடுநாள்
க0 தனியை வருதல் அதனினும் அஞ்சுதும்
என்னா குவள்கொல் தானே பன்னாள்
புணர்குறி செய்த புலர்குரல் ஏனல்
கிளிகடி பாடலும் ஒழிந்தனள்
அளியள் தானின் அளியல திலளே.

—கபிலர்.

(உரை)

க - ரு: கறங்கு..........அஞ்சுதும்

(இ - ள்.) கறங்கு வெள் அருவி பிறங்கும் மலைக்கவாஅன் - பெருமானே! நீதான் ஆரவாரிக்கின்ற வெள்ளிய அருவியையுடைய விளக்கமான எமது மலைச்சாரலிலே; தேம் கமழ் இணர வேங்கை சூடி - தேன் மணங்கமழுகின்ற பூங்கொத்துக்களிலே மலர்ந்துள்ள வேங்கையினது மலரை அணிந்து கொண்டு; பெண்டிரொடு

விரைஇ - மகளிரோடு கலந்து ; தொண்டகப் பறைச்சீர் மறுகின் தூங்கும் சிறுகுடிப்பாக்கத்து - தொண்டகப்பறையினது தாளத்திற் கொப்ப ஆடவர் தெருவின்கண் குரவைக் கூத்தாடுகின்ற சிறுகுடியாகிய எமது ஊரின் கண்ணே ; இயல் முருகு ஒப்பினை - எமது கண் காண வடிவங்கொண்டு வருகின்ற முருகவேளை நிகர்த்த அழகுடையையாய் ; வயநாய் பின்பட பகல்வரின் கவ்வை அஞ்சுதும் - வலிய நின் வேட்டை நாய்கள் நின்னைப் பின் தொடர்ந்து வாராநிற்பப் பகற்பொழுதிலே இவ்வாறு வந்தால் அதனால் இவ்வூரில் எழுகின்ற அலருக்கு யாங்கள் பெரிதும் அஞ்சுகின்றேம், என்க.

(வி - ம்.) நீ முருகனைப் போலவே அழகுடையை ; கானவர் குரவைக் கூத்தாடும் பொழுது வருவதனால் நின்னை எம்மவர் முருகன் நமக்கிரங்கி எழுந்தருளுகின்றான் என்று எண்ணி மகிழ்வாரல்லர், எற்றாலெனின் உனக்கு அறுமுகமில்லை அணிமயிலில்லை நின்னை வயநாய்கள் மட்டுமே தொடர்கின்றன ஆதலால் காண் என்றவாறு. எனவே, உன்னை இந்தக் குறிஞ்சித்தலைவன் என்றுட் கொண்டு இவ்வூர்ப் பெண்டிர் பழிதூற்றுவர் அதற்கு யாம் அஞ்சுகின்றோம். ஆதலின் நீ இனி இவ்வாறு பகலில் வாராதே கொள் ! எனப் பகற்குறி மறுத்தாளாயிற்று.

கூ - கo: இகல்கோள........ அஞ்சுதும்

(இ - ள்.) அடு புலி வழங்கும் ஆர் இருள் - கொல்லும் புலிகள் இரைதேடித் திரிகின்ற நிறைந்த இருளின்கண் ; இகல் கொள- அவற்றோடு பகை கொள்ளுதற்கு அஞ்சி ; இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப் பெருங்கை யானை - கரிய பிடியானையோடும் கன்றினோடும் கூடிய பெரிய வாயையும் பெரிய கையையுமுடைய களிற்றியானையானது ; கோள் பிழைத்து இரீஇய - தம்மை அப்புலி இரையாகக் கொள்ளுதலினின்றுந் தப்பிப் பிடி முதலியவற்றை மறைத்து வைத்தற்குக் காரணமான ; நடுநாள் தனியை வருதல் அதனினும் அஞ்சுதும் - நள்ளிரவிலே நீ தனித்து வருவதனை அதனினும் காட்டில் அஞ்சுகின்றேம், என்க.

(வி - ம்.) இகல் கொள அஞ்சி என ஒரு சொற்பெய்க. பிடியொடும் கன்றொடும் இருத்தலால் பெருங்கையானை அவற்றை மறைத்து வைக்கும் என்க. அடுபுலி வழங்குதலும் தனிவருதலும் அஞ்சுதற்கு ஏது வாயின ; எனவே இரவினும் வாராதே கொள் ! என இரவுக்குறியும் மறுத்தவாறாயிற்று.

கக - கச : என்னாகுவள்..........இலளே

(இ - ள்.) பல் நாள் புணர்குறி செய்த புலர்குரல் ஏனல் கிளிகடி பாடலும் ஒழிந்தனள்-இனி, பெருமானே! நீ பல நாளும்

வந்து தலைவியைக் கூடுதற்குக் குறியிடமாக எம்மால் காட்டப் பட்ட இடமாகிய தினைப்புனத்தினும் தினை முதிர்ந்து கதிரும் கொய்யப்பட்டமையால் அத்தினைப்புனத்தின்கண் தலைவி வந்து கிளியை ஓட்டும் பாடலையும் கைவிடும்படி அவள் இற்செறிக்கப் பட்டனள், இவ்வாற்றால் இனி எம்பெருமாட்டி நின்னைக்காணும் பேறிலள்; அளியள் நின்அளி அலது இலள் என் ஆகுவள் கொல் - நம்மால் இரங்கப்படுதற்குரியளான எம்பெருமாட்டி இனித் தனக்கு நின்னுடைய அருளையன்றிப் பிறிதொரு துணை இலள் ஆயினள்; அவள் தான் இனி என்ன நிலைமையை உடையளோ அறிகின்றிலேன், என்பதாம்,

(வி - ம்.) ஏனல் - தினைப்புனம் ஆகுபெயர். யாம் உனக்குப் பகற் குறியிடமாகச் செய்த தினைப்புனத்திற்கும் அவள் இனி வருவாள் அல்லள் என்றவாறு, வாராமைக்குப் புலர் குரல் ஏனல் என்றது (தினைக்கதிர் முற்றி அரியப்பட்டமையின் என நின்று) ஏதுவாயிற்று, தான் தமியளாய் வந்தமையையே தலைவி இற்செறிக்கப்பட்டமையை அறிவிக்கும் ஏது வாக்கினள். என்னாகுவள் கொல் என்பது, ஒரோ வழி அவள் இறந்து படுதலும் கூடும் என்பதுபட நின்றது, இவ்வாற்றால் இது இத்தோழி செறிப்பறிவுறீஇ இரவும் பகலும் வாரலென்று வரைவு கடாஅயது ஆதல் உணர்க.

கபிலருடைய இச்செய்யுள் அவர் புகழ் போலச் சாலவும் சிறந்து விளங்குதலு முணர்க.

இனி, இதனை (பெரும) பாக்கத்து முருகொப்பினை பகல்வரின் கவ்வை அஞ்சுதும்; புலி வழங்கும் ஆரிருள் நடுநாள் தனியை வருதல் அதனினும் அஞ்சுதும். அளியள் பாடலும் ஒழிந்தனள், நின் அளி அலது இலள், என்னாகுவள் கொல் என இயைத்துக் கொள்க.

## செய்யுள் ககக

திணை: பாலை.

துறை: செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொற்றது. தோழி தலைமகட்குச் சொற்றதூஉமாம்.

(து - ம்.) அஃதாவது—களவொழுக்கத்தின் பொழுது தலைவன் வேந்தற்குற்றுழித் தலைவியைப் பிரிந்து போக நேர்ந்ததனை அறிந்த தோழிக்குத் தலைவி சொல்லியது.

இனி, தோழி தலைவிக்குத் தலைவன் கருத்துணர்ந்து சொல்லியது எனினுமாம் என்றவாறு.

(இ - ம்.) இது—தலைவி கூற்றாயின் "வரைவிடைவைத்த காலத்து வருந்தினும்" எனவரும் (தொல் - களவி - உக) விதிகொள்க.

இனி, தோழி கூற்றாயின், "நாற்றமும் தோற்றமும்" எனவரும் (தொல் - களவி - உங.) நூற்பாவின் கண் வகையும் என்பதனால் அமைக்க.

நுதலுந் தோளுந் திதலே யல்குலும்
வண்ணமும் வனப்பும் வரியும் வாட
வருந்துவள் இவளெனத் திருந்துபு நோக்கி
வரைவுநன் றென்னு தகலினும் அவர்வறிது
ரு ஆறுசெல் மாக்கள் அறுத்த பிரண்டை
ஏறுபெறு பாம்பின் பைந்துணி கடுப்ப
நெறியயல் திரங்கும் அத்தம் வெறிகொள
உமண்சாத் திறந்த ஒழிகல் அடுப்பின்
நோன்சிலை மழவர் ஊன்புழுக் கயரும்
க0 சுரன்வழக் கற்ற தென்னு துரஞ்சிறந்து
நெய்தல் உருவின் ஐதிலங் ககலிலைத்
தொடையமை பீலிப் பொலிந்த கடிகை
மடையமை திண்சுரை மாக்காழ் வேலொடு
தணியமர் அழுவம் தம்மொடு துணைப்பத்
கரு துணிகுவர் கொல்லோ தாமே துணிகொள
மறப்புலி உழந்த வசிபடு சென்னி
உறுநோய் வருத்தமொ டுணீஇய மண்டிப்
படிமுழம் ஊன்றிய நெடுநல் யானை
கைதோய்த் துயிர்க்கும் வறுஞ்சுனை
உ0 மைதோய் சிமைய மலைமுத லாறே.

— குடவாயிற் கீரத்தனார்.

## (உரை)

க - ச: நுதலும்...........அகலினும்

(இ — ள்.) இவள் நுதலும் தோளும் திதலை அல்குலும் வண்ணமும் வனப்பும் வரியும் வாட - (ஏடி தோழி ! நம்பெருமான் நம்மைப் பிரிந்து செல்லுவர் போலும் என்கின்றாய்) அவர்தாம் என்னை நோக்கி இவளுடைய நெற்றியும் தோளும் தேமல் படர்ந்த அல்குலும் நிறமும் அழகும் கண்களின் செவ்வரியும் பெரிதும் வாடும்படி ; வருந்துவள் என திருந்துபு நோக்கி — மிக வும் வருந்துவாள் என்று நம்மியல்பினைத் திருத்தமாகக் கண்டு

வைத்தும்; வரைவு நன்று என்னுது அகலினும் - இவளை இப்பொழுது வரைந்து கொள்ளுதலே நன்மையாம், இன்றெனின் தீதாம் என்று நினையாமல் தமது காரியத்தையே நோக்கிச் சென்றாலும், என்க.

(வி - ம்.) இது தலைவர் நம்மைப் பிரிந்து போவார் போலே காணப் படுகின்றனர் என்றதோழிக்குத் தலைவி அவர் என் நிலையை இப்பொழுது கூர்ந்துணர்வாராயின் இவளை இப்பொழுது வரைந்து கொள்ளுதலே நன்றெனத்துணிவர்; அவர் வேந்தற் குற்றுழிப் பிரிதலால் வரைதற்கு இது செவ்வியில்லை எனப் பிரிந்துபோதலும் நேரிதேயாம், எனப் பிரிவுடன் பட்டு அவர் செல்லினும் செல்க! என்கின்றாள். இதனால் பண்டைக்காலத்தே தலைவிமார் தலைவரை இன்றியமையாக் காரியங் களில் பிரிந்து போதற்கு உடன்பட்டுப் பிரிவாற்றியிருக்கும் இயல்பினர் என்பது பெற்றாம்.

கரு - உ௦: துணிகோள..........மலைமுதலாறே

(இ - ள்.) மறப்புலி உழந்த துணிகொள வசிபடு சென்னி உறுநோய் வருத்தமொடு உணீஇய மண்டி - தறுகண்மையுடைய புலியானது தாக்கி நகத்தை ஊன்றி இருதுண்டாகும்படி பிளந் தமையால் பிளவுபட்ட தனது தலையின்கண் உண்டான புண்கார ணமாக மிக்க நோயாகிய துன்பத்தோடு நீருண்ண விரைந்து சென்று; முழம்படி ஊன்றிய யானை - முழங்காலை நிலத்தில் ஊன்றிய யானையானது; நெடுநல்கை தோய்த்து உயிர்க்கும் வறும் சுனை மை தோய் சிமைய மலைமுதல் ஆறு - தனது நெடிய நல்ல கையை உள்ளே செலுத்தி நாற்றிசையினும் அக்கை தோயத் துழாவிப்பார்த்தும் நீர் இன்மையால் பெரிதும் வருந்தி நெட்டு யிர்ப்புக்கொள்ளுதற்கிடனான வறிய சுனையையும் முகில்படியுமாறு நீண்ட குவடுகளையுமுடைய மலையிடத்து, என்க.

(வி - ம்.) துணிகொள, என்னும் பாடத்திற்கு வெறுப்புற எனப் பொருள் கொண்டு உயிர்க்கும் என்பதற்கு அடையாக்குக. வசிபடு-பிளவு பட்ட. உறு, மிகுதிப் பொருட்டு. உணீஇய - உண்ண. முழம் - முழந் தாள். நெடுநல் கை எனக்கூட்டுக. மை - முகில். சிமையம் - குவடு.

சு - க௦: அவர்வறிது.........என்னுது

(இ - ள்.) அவர் - நம்பெருமான்; ஆறுசெல்மாக்கள் அறுத்த பிரண்டை ஏறு பெறு பாம்பின் பைதுணி கடுப்ப நெறி அயல் வறிது திரங்கும் அத்தம் - வழிப்போக்கர் அறுத்துப் போகட்ட பிரண்டைக்கொடியானது இடிஏறுண்ட பாம்பினது பசிய உடலினது துண்டுகள்போல வழி மருங்கில் வீணாக வற்றிக்

கிடக்கின்ற அருநெறியின்கண்; உமண் சாத்து இறந்த ஒழிகல் அடுப்பின் நோன்சிலை மழவர் வெறிகொள புழுக்கு ஊன் அயரும்- உப்பு வாணிகரின் கூட்டம் சமைத்துண்டு கைவிட்டுப்போன கல்லாற் கோலிய அடுப்பின்கண் வலிய வில்லையுடைய மறவர்கள் ஊனை மணமுண்டாகும்படி புழுக்கிய உணவை உண்ணற்கிடனுன; சுரன் வழக்கு அற்றது என்னுது - அப்பாலை நிலமானது மக்கள் வழக்கற்ற பாழ்நிலம் என்று கூறி நம்மை அழைத்துப் போதற் குடம்படாமல்; என்க.

(வி - ம்.) வழிப்போக்கர் யாதானும் ஒரூரின்கண் தாமிருந்து புறப் பட்டுப் போம்பொழுது அவ்வூரின்கண் உள்ள வெப்பும் குருவும் ஆகிய தொற்றுநோய்கள் தம்மைத் தொடர்ந்து வந்து பற்றிக் கொள்ளாமைக் குப் பிரண்டைக்கொடியை அறுத்துப் போகட்டு அதனைத் தாண்டிப் போவர் ; அதற்சப்பால் அந் நோய்கள் தம்மைப் பின் தொடரமாட்டா என்பது அவர் நம்பிககை. அவ்வழக்கம் இக்காலத்திலும் உளது. அப் பிரண்டைக்கொடிக்கு இடிஏறுண்டு இறந்து கிடக்கும் பாம்பினது உடல் துண்டுகள் உவமை. திரங்குதல் - வற்றுதல் உமண் சாத்து - உப்பு வாணிகர் கூட்டம். ஒழிகல் அடுப்பு - கைவிட்டுப் போன கல்லடுப்பு. ஊன் வெறிகொளப் புழுக்கும் உணவு அயரும் எனக் கூட்டுக. மகளிரை மக்கள் வழக்கற்ற வழியில் அழைத்துப்போதல் இன்னுது என்று நம்பெரு மான் நம்மை அழைத்துப்போக மறுத்தலுங் கூடும், அங்ஙனம் மறுஅமல் என்றவாறு.

### ௬௦ - கரு : உரஞ்சிறந்து..........தாமே

(இ - ள்.) உரம் சிறந்து - தமது வலிமையினுல் சிறப்புற்று; நெய்தல் உருவின் ஐது இலங்கு அகல் இலை தொடை அமை பீலிப் பொலிந்த கடிகை - நெய்தற் பூப்போலும் உருவினையுடைய அழகியதாக விளங்கும் அகன்ற இலையினையும் தொடுத்தல் அமைந்த மயிற்றோகையால் விளக்கமுற்ற காம்பினையும்; மடை அமை திண்சுரை மாகாழ் வேலொடு-மூட்டுவாயையும் திண்ணிய செருகு துளையினையும் பெரிய காழ்ப்பினையும் உடைய தமக்குத் துணையாகிய வேற்படையோடு; தாம் தணிஅமர் அழுவம் தம்மொடு துணைப்பத் துணிகுவர் கொல்லோ-நம்பெருமான் தாம் மேற்கொண்டு செல்லுகின்ற பகைதணி வினைக்குப் பகைவருடைய போர்க்களத்திற்குச் செல்லுகின்ற தம்மோடு யாமும் துணையாக நம்மையும் அழைத்துச்செல்ல உடன் படுவரோ? படாரோ? அவர் கருத்தினை அறிந்து வருதி, என்பதாம்.

(வி - ம்.) மகளிரையும் உடன் அழைத்துப் போகும் துணிவு பிறத் தற்கு ஏதுவாதலின், தமது வலிமையினுல் தம்மையே நம்பு மொரு சிறப்புடையராய் என்பாள், உரஞ்சிறந்து என்ருள், உரத்தால் சிறப் புற்று என்க. அவர் இப்பொழுது தமக்குத் துணையாக வேலொடு

போகின்றூர்; அதனோடு யாமும் துணையாக நம்மையும் அழைத்துப்போகத் துணிகுவரோ என்றவாறு.

இனி இதன்கண் தணிஅமர் அழுவம் என்றதனால் இத்தலைவன் வேந்தற் குற்றுழிச் சந்து செய்து பகைதணிக்கும் வினைமேல் செல்கின்றான் என்பதும்; வேலொடு என்றதனால் இவன்றானும் அரசன் என்பதும் பெற்றும். பகைதணி வினைமேல் செல்லும் அரசன் தம்முள் பகைத்துப் பொருதும் அரசர் இருவருக்கும் மேம்பட்ட பேரரசன் ஆதல் வேண்டும். எனவே அத்தகைய பேராற்றல் படைத்த அரசன் மகளிரொடும் அவ் வினைமேல் செல்லுதலும் பண்டைய வழக்கம் என்னும் செய்தி இதனால் உணரப்படும்.

இனி வழிப்போக்கர் தம்மை நோய்தொடராமைப்பொருட்டுப் பிரண்டையை அறுத்து வழியிற்போகட்டு அதனைத் திரங்கவிட்டுச்செல்லு தல் போன்று நம்பெருமானும் தமக்கின்னுவாம் என்பது கருதி நம்மைக் கைவிட்டு, அன்புத்தளையறிந்து அலர் தூற்றுவோர் வழி இடத்தே நாங் கிடந்து வாடிவதங்கும்படி நம்மைக் கைவிட்டுத் தாம் தமியராய்ச் செல்லத் துணிவர் போலும் என இதன்கண் உள்ளுறை காண்க.

இனி, புலியால் தாக்குண்டு சென்னி பிளவுபட்டு வருந்தும் வருத்தத் தோடு நீர் வேட்கைகொண்டு அது தணிதற்கு வறிய சுனையில் கைவிட்டுத் துழாவிப்பார்த்தும் நீர் பெருமல் நெட்டுயிர்ப்புக்கொள்ளும் யானை போன்று யாமும் அம்பற் பெண்டிரால் அலர் தூற்றப்பெற்ற வருத்தத் தோடு, நம்பெருமான்பால் காதல் வேட்கையும் உடையேமாய் நமது அறிவாலாந்துணையும் அவர்பால் வரைவுகடாவிப் பார்த்தும், அவர்பா லருள் காணப்படாமையின் இனி யாம் ஈண்டுத் தனியே வருந்தி உயிர்த்துக்கிடப்பேம், இதனையும் அவர்பால் கூறுதி என இதன்கண்ணும் நுண்ணிதின் உள்ளுறை கண்டு மகிழ்க.

இன்னும் உமண் சாத்துக் கைவிட்டுப் போன அடுப்பில் மழவர் மணங்கமழும்படி ஊன்புழுக்கயர்ந்து மகிழ்ந்தாற்போல இனி அவரால் துறக்கப்பட்ட நம்மைப் பொருளாகக்கொண்டு இவ்வூர் அம்பற் பெண்டிர் ஊரெல்லாம் அலர்தூற்றி மகிழ்வர் எனவும் உள்ளுறை காண்க.

இனி—இதனை, (தோழி) அவர் நுதல் முதலியன வாட இவள் வருந் துவள் என நம்மை நோக்கி வரைந்து கொள்ளாமல் அகலினும் அகல்க. அவர் அகலும் மலைவழியில் அத்தம் வெறிகொள மழவர் புழுக்கயரும் சுரன் வழக்கற்றது என்று மறுஅமல் உரஞ்சிறந்து தாம் செல்லும் அழுவம் தம்மொடு துணைப்ப நம்மையும் அழைத்துச்செல்லத் துணிகுவர் கொல்லோ என இயைத்துக்கொள்க.

இனி இது தோழி கூற்றுயின், தலைவன் சிறைப்புறத்தானாக அவன் கேட்டுச் செலவழுங்கி வரைதற்பொருட்டுத் தலைவிக்குக் கூறுவாளாக, இங்ஙனம் கூறினள் என்க.

(பா - வே.) ௬. வேறுபெறு. ௭. நெறியவற் ௮. உமண்சாக் கோண்ட. ௧௧. நெய்யகலுரு. ௧௨ துணிகொள்பு. ௧௩. வசிபடு.

## செய்யுள் - கஉ0

**திணை :** நெய்தல்

**துறை :** தோழி பகற்குறிக்கண் தலைமகனை இடத்துய்த்து வந்து தலைமகனை எதிர்ப்பட்டு நின்று சொல்லியது.

(து - ம்.) அஃதாவது. களவொழுக்கத்தின்கண் தலைவன் பகற்குறியின்கண் வந்து வந்து மீள்வானாக, தலைவி இரவெல்லாம் அவனது பிரிவாற்றாமல் வருந்துவாளாயினள்; ஆகவே, தோழி அவள் ஆற்றாமை தீர்க்கும் பொருட்டுத் தலைவனை இரவின்கண்ணும் தம் விருந்தினனாகத் தம்மொடு தங்கும்படி அவனைத் தனியிடத்தே கண்டு வேண்டிக் கொண்டது. என்றவாறு,

(இ - ம்.) இதற்கு—''நாற்றமும் தோற்றமும்'' எனவரும் (தொல்-களவி - உ௩.) நூற்பாவின்கண் வேளாண் பெருநெறி வேண்டிய விடத்தும் எனவரும் விதிகொள்க.

நெடுவேள் மார்பின் ஆரம் போலச்
செவ்வாய் வானந் தீண்டிமீன் அருந்தும்
பைங்காற் கொக்கின நிரைபறை யுகப்ப
எல்லை பைப்பயக் கழிப்பிக் குடவயின்
௫　கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு
மதரெழில் மழைக்கண் கலுழ இவளே
பெருநாண் அணிந்த சிறுமென் சாயல்
மாணலம் சிதைய ஏங்கி யானாது
அழல்தொடங் கினளே பெரும அதனால்
௧0　கழிச்சுறா எறிந்த புட்டாள் அத்திரி
நெடுநீர் இருங்கழிப் பரிமெலிந் தசைஇ
வல்வில் இளையரோ டெல்லிச் செல்லாது
சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டோ
பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பை
௧௫　அன்றில் அகவும் ஆங்கண்
சிறுகுரல் நெய்தலெம் பெருங்கழி நாட்டே.

—நக்கீரனார்.

க - கூ : நெடுவேள்.........பெரும

(இ - ள்.) பெரும - பெருமானே; நெடுவேள் மார்பின் ஆரம் போல செவ்வாய் வானம் தீண்டி மீன் அருந்தும் பைங்கால்

கொக்கு இனம் நிரை பறை உகப்ப - நீண்ட புகழையுடைய முருகவேளின் மார்பின்கண் அணியப்பட்ட முத்து வடம் போலச் சிவந்த நிறம் வாய்த்த அந்தி வானத்தைத் தொட்டு மீனைத் தின்னு கின்ற பசிய காலையுடைய வெள்ளைக் கொக்கின் கூட்டம் நிரலாகப் பறந்தேகு நிற்ப; எல்லை பையயக் கழிப்பி பல் கதிர் ஞாயிறு குடவயின் கல் சேர்ந்தன்று - பகற்பொழுதினை மெல்ல மெல்லக் கழித்துப் பலவாகிய கதிர்களையுடைய ஞாயிற்று மண்டிலம் மேலைத்திசைக்கண் மலையை எய்திற்று; இவளே - பகற் குறியிடத்து நின்னோடு கூடியிருந்த எம்பெருமாட்டிதானும் நீ பிரிந்தவிப்பொழுதே; பெரு நாண் அணிந்த சிறுமெல் சாயல் மாண் நலம் சிதைய ஏங்கி ஆனது - தன்னுடைய பெரிய நாணுடைமையாலே அழகு செய்யப் பெற்ற சிறிய மெல்லிய சாயலும் மாட்சிமையுடைய தனது பெண்மை நலமும் சிதைந்து போம்படி நின் பிரிவாற்றாமையாலே பெரிதும் ஏக்கமுற்று; மதர் எழில் மழைக்கண் கலுழ - தனது மதர்க்கும் அழகிய கண்கள் நீர் வார; ஆனது அழல் தொடங்கினள் - ஒழியாமல் அழத் தொடங்கிவிட்டனள் காண்!; என்க.

(வி - ம்.) நெடுவேள் - முருகன். செக்கர்வானத்தை யணுகி நிரலா கப் பறந்து போகின்ற வெள்ளைக்கொக்கு நிரலுக்கு - சிவந்த திருமேனியையுடைய முருகவேள் மார்பில் கிடக்கின்ற முத்துமாலை உவமை.

குடவயின் கல் - மேற்றிசையில் மலை (அத்தகிரி). சேர்ந்தன்று - சேர்ந்தது. நீ கூடியிருந்து இப்பொழுதுதான் அவளைப் பிரிந்து போகின் றனை. அவள் தானும் நீ பிரிந்தபொழுதே தனது சாயல் முதலியன சிதையும்படி அழத் தொடங்கிவிட்டாள். இனி நாளைப் பகற்குறி யிடத்தே நின்னைக் காணும் அளவும் அவள் எவ்வாறு ஆற்றுவள்? ஆற்றாதே இறத்தலும் கூடும் என்று, பின்னர் இற்றை இரவு ஈண்டே நீ தங்குதி எனற்குக் குறிப்பேதுவாக இங்ஙனம் கூறினள் என்றுணர்க.

கூ — கரு : அதனால்..........நாட்டே

(இ - ள்.) அதனால் - ஆதலால்; கழிச்சுறா எறிந்த புண் தாள் அத்திரி நெடுநீர் இருங்கழிப் பரிமெலிந்து-உப்பங்கழியிடத் துள்ள சுறாமீன் தன்கோட்டால் எறிந்தமையாலே புண்பட்ட காலையுடைய நினது ஊர்தியாகிய கோவேறுகழுதையும் மீண்டும் நெடிய நீர் வழியாகிய அக்கழியினிடத்தே செல்லுதற்கு மெலிந்த மையால்; வல்வில் இளையரொடு எல்லிச் செல்லாது-வலிய வில்லை யுடைய நின் ஏவலராகிய இவ்விளைஞரோடு நீ இவ்விரவிலே நின்னூர்க்குப் போகாமல்; பெண்ணை ஓங்கிய வெள்மணல் படப்பை அன்றில் அகவும் ஆங்கண் - பனைகள் உயர்ந்துள்ள

வெள்ளிய மணலையுடைய கடற்கரைச்சோலையிலே இரவின்கண் அன்றிற் பறவை தன் பெடையை அழைக்கின்ற அவ்விடத்தே; சிறுகுரல் நெய்தல் எம் பெருங்கழி நாட்டுச் சேர்ந்தனை அசைஇ செலின் சிதைகுவது உண்டோ - சிறிய கொத்துக்களான நெய்தற் பூக்களையுடைய எம்முடைய பெரிய கழிசூழ்ந்த ஊரின்கண் இளைப் பாறி இருந்து நாளைச்சென்றால் நினக்குக் கெடுவது யாதேனும் உண்டோ இல்லையன்றே, என்பதாம்.

(வி - ம்.) தலைவன் வரும்பொழுது கழியில் இறங்கி வந்ததனால் அக்கழியிடத்துள்ள சுறாமீன் அவன் ஊர்தியை காலில் எறிந்து புண்படுத் தினமை இவள் கூற்றாற்பெற்றாம். இதனை, தலைவன் இரவின்கண் தங்கு தற்கு ஓர் ஏதுவாகக் கொண்டு இத்தோழி கூறுகின்றாள். என்க.

அத்திரி - கோவேறு கழுதை. பரி - செலவு. மெலிந்து - மெலிந்த மையால் என்க. அசைஇ - இளைப்பாறி. எல்லி - இரவு. பெண்ணை - பனை. படப்பை - ஈண்டுச் சோலை, அச்சோலையில் அன்றில் அகவும் என்றது அக் குரல் கேட்பின் தலைவி பொருள் என்றுணர்த்துதற்கு. நாடு ஈண்டு ஊர் என்பதுபட நின்றது, சிதைகுவதுண்டோ என்றது உனக்குச் சிதைவது ஒன்றுமில்லை என்பதுபட நின்றது. நீ தங்கின் உனக்குச் சிதைவதில்லை என்றது தலைவிக்கோ நீ அங்ஙனம் தங்காது செல்லின் உயிரே போம் என்பதுபட நின்றது.

இனி, இச்செய்யுளை ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'வைகுறுவிடியல்' என்னும் (தொல் - அகத் - அ) சூத்திரத்திற்கு எடுத்துக்காட்டி நெய்தற்கு எற்பாடு வந்ததென்றும், "பொழுதும் ஆறும் (தொல். பொருளியல் கக.) என்னும் சூத்திரத்திற்கு எடுத்துக்காட்டி இஃது இரவினும் பகலி னும் நீ வாவெனத் தோழி கூறியது என்றும், இங்ஙனம் வரின் மறை வெளிப்படும் என்று அஞ்சாது தோழி கூறுதல் வழுவாயினும் தலைவியின் வருத்தம் பற்றிக் கூறலின் அமைத்தார் என்றும் "தேரும் யானையும்" (தொல் - பொருளியல் கஅ.) எனவரும் நூற்பாவின்கண் பிற என்ப தற்கு இதன்கண் அத்திரி என்பதனையும் எடுத்துக்காட்டினர்.

இனி, இதனை - நெய்தலிற் களவு எனக் கொள்க.

இனி. இதனைப் பெரும! பல் கதிர் ஞாயிறு கல் சேர்ந்தன்று; இவள் அழல் தொடங்கினள்; அதனாலும், அத்திரி பரி மெலிந்தமையாலும் இளையரோடு எல்லிச் செல்லாது பெருங்கழி நாட்டுச் சேர்ந்தனை செலினே சிதைகுவதுண்டோ என வியைத்துக்கொள்க.

அகநானூற்றின்கண் முதலாவதாகிய களிற்றியானைநிரைக்குப்
, பெருமழைப்புலவர். பொ. வே. சோமசுந்தரனார் வகுத்த
சொற்பொருளுரையும் விளக்கமும் முற்றும்.

# ஆசிரியர் பெயர் அகரவரிசை

[எண் : செய்யுளெண்]

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்க எண்]

